ஸ்ரீ

கவிச்சக்கரவர்த்தி

கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்த

# ஸ்ரீமத் கம்பராமாயணம்

# உயுத்தகாண்டம்

உத்தரகாண்டம்.

இரண்டாவதுபுத்தகம்

இஃது

க. இராமரத்நம் ஐயரவர்களைக்கொண்டு

நன்கு பரிசோதித்துத் திருத்தி



பி. நா. சிதம்பரமுதலியார்

பிரதர்ஸ் அவர்களது

சென்னை:

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1926.

இதன் விலை] [ரூபா—1½

ஸ்ரீ

# உயுத்த காண்டம்.

| பாட்டு எண். | முதற்குறிப்பு அகராதி. | பக்கம். | பாட்டு எண். | முதற்குறிப்பு அகராதி. | பக்கம். |
|---|---|---|---|---|---|
| 201 | கண்ணினுங்கர | 28 | 2112 | கதிரின்மைந்த | 278 |
| 3858 | கண்ணினுண் | 529 | 1819 | கதிரொப்பன | 240 |
| 468 | கண்ணினையப்பு | 63 | 3220 | கந்தமாதன | 442 |
| 3990 | கண்ணினையுதி | 547 | 3182 | கந்தர்ப்பரிய | 437 |
| 1820 | கண்ணினறலை | 240 | 573 | கமையறுகருங் | 77 |
| 3761 | கண்ணுதலொரு | 514 | 3142 | கம்பமதத்து | 430 |
| 2062 | கண்ணுதறீமை | 182 | 2788 | கயல்வருகால | 383 |
| 3661 | கண்ணுமனமு | 501 | 3753 | கயில்விரிவுற | 513 |
| 3477 | கண்ணுதன்மூ | 476 | 3382 | கயிறுசேர்க | 464 |
| 1065 | கண்ணுறுகடு | 141 | 2294 | கரகமுந்தின | 318 |
| 1783 | கண்டகர்நெடு | 236 | 2503 | கரக்குமாயமு | 345 |
| 2471 | கண்டகார்முகி | 341 | 448 | கரங்கண்மீச் | 60 |
| 3695 | கண்டசங்கர | 505 | 1439 | கரங்குடைந்த | 191 |
| 3775 | கண்டதாமரை | 516 | 4026 | கரணமொனறுள | 552 |
| 3480 | கண்டத்துங்கழு | 476 | 4113 | கரதலமதனி | 564 |
| 2825 | கண்டவளே | 388 | 2387 | கரதினிறறிரி | 330 |
| 2020 | கண்டவானர | 266 | 472 | கரதொடும்பா | 63 |
| 1508 | கண்டனஞயக | 200 | 537 | கரந்துநின்ற | 72 |
| 2679 | கண்டனதன | 364 | 4203 | கரனொடுதிரிசி | 576 |
| 1496 | கண்டனன்வத | 199 | 2393 | கரன்மகனபட்ட | 331 |
| 2943 | கண்டனனறி | 405 | 29 | கரன்முதல் | 5 |
| 2727 | கண்டனெனிரா | 375 | 1862 | கரிபடக்காலாள் | 246 |
| 3793 | கண்டாகுல | 520 | 3927 | கரியகுனறுக | 539 |
| 2614 | கண்டார்விண | 359 | 845 | கரியகொண்ட | 113 |
| 2627 | கண்டானகண் | 361 | 1467 | கரியின்கைகளு | 195 |
| 1667 | கண்டாள்கரு | 221 | 2928 | கரியுண்டகள | 401 |
| 1702 | கண்டானவி | 225 | 3107 | கருசும்வாரகுழ | 563 |
| 1955 | கண்டானிறையா | 258 | 1833 | கருங்கார்புரை | 242 |
| 1847 | கண்டானெதிர | 244 | 3188 | கருங்குழற | 437 |
| 3178 | கண்டிலன்ற | 436 | 842 | கருதிமறெருன் | 112 |
| 3303 | கண்டிலீர்கொ | 446 | 1374 | கருதகிலாவிறை | 183 |
| 2220 | கண்டிலைமுன் | 308 | 79 | கருத்திலான | 12 |
| 3502 | கண்டிறந்தன | 479 | 415 | கருத்துறநோக் | 56 |
| 3498 | கண்டுகைகளோ | 479 | 1054 | கருப்பைப்போற் | 140 |
| 2666 | கண்டுதன்கண் | 367 | 886 | கருமணிகண்ட | 118 |
| 1025 | கண்டுநின்ற | 136 | 3691 | கருமமுங்கடை | 505 |
| 3507 | கண்டுநின்றி | 481 | 194 | கருமமுங்கரு | 27 |
| 742 | கண்மையிங | 99 | 585 | கரும்புறக்கட | 78 |
| 783 | கதமிகுந்திரை | 104 | 624 | கருவரைகாதங் | 83 |
| 3336 | கதம்புலர்ந்த | 456 | 1103 | கலக்கியவர | 146 |
| 2501 | கதிரயிறபடை | 345 | 914 | கலங்கியகங் | 122 |
| 4239 | கதிரவனுதய | 581 | 3975 | கலதினிறபி | 574 |
| 1251 | கதிரவன்கா | 283 | 1299 | கல்லலாமுல | 146 |

| பாட்டு எண். | முதற்குறிப்பு அகராதி. | பக்கம். | பாட்டு எண். | முதற்குறிப்பு அகராதி. | பக்கம். |
|---|---|---|---|---|---|
| 3393 | நெய்கொள் | 465 | 221 | பசையிற்றங்க | 30 |
| 2373 | நெய்பழல்வே | 315 | 24[illegible]3 | பச்சிமத்திறு | 340 |
| 2643 | நெய்யார்பெரு | 363 | 3110 | பச்சைவெம்பு | 426 |
| 4434 | நெருக்கியல | 594 | 3197 | பஞ்செரியுற்று | 439 |
| 3212 | நெருக்குடை | 441 | 434 | பஞ்செனச்சிவ | 58 |
| 2037 | நெறறிமேலு | 268 | 2467 | படங்கொள்பாம் | 341 |
| 2076 | நெற்றிமேலொ | 273 | 3151 | படம்பிறங்கி | 432 |
| 697 | நெறறியிலரக்க | 93 | 1446 | படர்நெடுந்தடம் | 192 |
| 4092 | நெற்றியினழ | 560 | 1538 | படர்ந்தகும்ப | 204 |
| 1507 | நெற்றியினின் | 200 | 3118 | படித்தலஞ்சும | 427 |
| 6 | நெனனற்கண் | 2 | 863 | படிந்தனமரப் | 115 |
| | நே | | 2736 | படியினதாத | 376 |
| 614 | நேடினுறெ | 82 | 3279 | படியைப்பார் | 449 |
| 2907 | நேமிப்பெய | 398 | 2521 | படுகளப்பரப்பு | 347 |
| 3125 | நேமியுங்குலி | 428 | 2991 | படுகினறதன் | 411 |
| 2107 | நேர்செலா | 277 | 3473 | படுமதகரி | 475 |
| | நொ | | 2925 | படுமாரிநெடுங் | 401 |
| 530 | நொதுமற்றிண் | 71 | 3822 | படைதுறந்து | 527 |
| | நோ | | 3087 | படைக்கலவிஞ் | 423 |
| 1663 | நோக்கறவு | 220 | 2491 | படைக்கலங்க | 344 |
| 1937 | நோக்கியவில் | 255 | 737 | படைத்தமால் | 98 |
| 1016 | நோககிவஞ்ச | 135 | 3408 | படைத்தலைவரு | 467 |
| 4128 | நோககிற்றெ | 566 | 3236 | படைப்பெருங்கு | 444 |
| 2722 | நோக்கினன | 374 | 2980 | படைப்பெருந் | 409 |
| 730 | நோக்கினிர் | 97 | 2408 | படைப்பெருந்தலை | 332 |
| 285 | நோக்கினா | 39 | 3029 | படையகத்து | 416 |
| 2657 | நோககினனக | 365 | 3752 | படையுகவிமை | 513 |
| 2583 | நோக்கினான்பெ | 355 | 2170 | படையுறபிண | 285 |
| 1594 | நோயிடைநுகர | 211 | 2100 | படையொடுமே | 319 |
| 2379 | நோற்றுடைத் | 329 | 3595 | பட்டதுமுண்டே | 492 |
| | ப | | 576 | பட்டனபட | 77 |
| 353 | பகலவன்வழி | 48 | 1477 | பட்டனன்பட்ட | 196 |
| 199 | பகுதியினுட்பய | 27 | 3367 | பட்டாருடல் | 461 |
| 4020 | பகுதியெனறுள | 551 | 474 | பணிபழுததமை | 63 |
| 3618 | பகுத்தபல்வள | 495 | 1585 | பண்களாற்கிள | 210 |
| 412 | பகைப்புலத்தோர் | 55 | 3652 | பண்டரிதனுந்தி | 500 |
| 1737 | பகையாடியவர | 230 | 2400 | பண்டருங்கிளவி | 331 |
| 387 | பகைவரைத்துணை | 52 | 20 | பண்டிதர்பழை | 4 |
| 219 | பக்கநின்றவை | 30 | 3773 | பண்டுநான்முக | 516 |
| 3996 | பங்கயத்தொரு | 548 | 4040 | பண்டொன்றுழு | 554 |
| 4398 | பங்கயத்தொருவ | 589 | 3423 | பண்டுலகுய் | 470 |
| 1764 | பசும்படுகுருதி | 233 | 140 | பண்டுவான | 20 |
| 3773 | பசும்புனற்பெரும் | 516 | 1179 | பண்டைநாடரு | 156 |

ஸ்ரீ

# உத்தரகாண்டம்.

| பாட்டு எண். | முதற்குறிப்பு அகராதி. | பக்கம். | பாட்டு எண். | முதற்குறிப்பு அகராதி. | பக்கம். |
|---|---|---|---|---|---|
| 753 | கடுந்துயர்மேற் | 104 | 703 | கனமிடைவான | 97 |
| 269 | கட்டியிட்ட | 38 | 134 | கனற்றுறைநற் | 19 |
| 170 | கட்டோய்கமழ் | 24 | 1124 | கனிதருபவள | 157 |
| 2 | கண்கால்கரு | 2 | 767 | கனிமனத்துக் | 106 |
| 517 | கண்டடிவணங்கி | 71 | 1383 | கனைகடலுலகெலா | 193 |
| 1145 | கண்டமாமறை | 160 | 1496 | கனைகதிர்மைந்த | 208 |
| 1144 | கண்டவீரனு | 159 | 781 | கன்னியசிந்தை | 108 |
| 1167 | கண்டுசீதைதகவ | 163 | 429 | கன்னியர்கடாய் | 60 |
| 490 | கண்டுமனங்கவிழ் | 68 | 765 | கன்னெஞ்சரா | 106 |
| 786 | கண்ணறக்காகுத் | 109 | 926 | கன்னெஞ்சராயு | 129 |
| 1 | கண்ணுருலகிற | 2 | | கா | |
| 467 | கண்ணுர்நுதலா | 65 | 88 | காசில்பன்னக | 13 |
| 465 | கண்ணுவிலை | 64 | 443 | காசுக்கும்பொன் | 61 |
| 928 | கண்ணிலான்பெற் | 129 | 1182 | காட்டொருவான | 165 |
| 1291 | கதலிசூழ்பொழி | 180 | 433 | காதலாகியென் | 60 |
| 1358 | கந்தமிகுநறு | 189 | 1264 | காதலிகறபு | 176 |
| 99 | கந்தரச்சிலை | 4 | 192 | காதற்குருசொல் | 27 |
| 1050 | கம்புவைத்த | 146 | 36 | காதனமேவு | 6 |
| 1065 | கயனெடுங்கண் | 148 | 1074 | காதுவைவேற் | 150 |
| 1302 | கரத்தணிசிகர | 181 | 1337 | காந்தவர்சேனை | 186 |
| 1164 | கரனுந்தூடன | 162 | 653 | காமபோகத்தை | 91 |
| 1356 | கராமலியக்கய | 189 | 1142 | காமன்மாறு | 159 |
| 1035 | கரிக்கொடுதிரட் | 144 | 1079 | காயங்குறிய | 150 |
| 1327 | கரித்தெழுசின | 185 | 325 | காயவரையா | 45 |
| 1341 | கரியற்றன | 187 | 10 | காயுந்தீவினை | 3 |
| 1431 | கருங்கயற்கேகய | 193 | 1105 | காயும்வெவ்வினை | 154 |
| 1368 | கருதிசீடிய | 191 | 1355 | காரிருண்டதெனு | 189 |
| 1483 | கருத்துவந்தெழு | 206 | 1073 | காரைநெருங்கு | 149 |
| 1410 | கருமைக்கோட்டு | 196 | 404 | கார்முகம்வளைய | 56 |
| 177 | கருவிற்கிடை | 25 | 376 | காலத்தினைஞால | 52 |
| 741 | கலக்குவனுல | 102 | 531 | காலவெந்தண்ட | 73 |
| 1022 | கலன்கலனெனு | 142 | 409 | காவினிவ்வகை | 57 |
| 1509 | கலைமறைமுனி | 210 | 144 | காவிடையணிந்த | 21 |
| 971 | கல்விற்செறிதிண் | 135 | 1256 | காலையகடன் | 175 |
| 742 | கல்விசேர்முனிவர் | 103 | 1006 | காலையுதித்த | 140 |
| 1420 | கவப்புறுகொ | 198 | 167 | கால்களற்ற | 24 |
| 180 | கழிந்தார்சில | 26 | 2 | கால்காட்டவேகு | 2 |
| 713 | கழிந்துவீழ்பழு | 99 | 546 | காறணிந்தகைது | 75 |
| 684 | களமொழிந்திட | 65 | 663 | காற்றின்சிறு | 92 |
| 1062 | கள்ளமாமன | 148 | 1126 | கானவரம்பை | 157 |
| 1224 | கறுத்திராவணி | 171 | 1378 | கானகுலாவிய | 192 |
| 390 | கற்றவரைச்சா | 54 | | கி | |
| 1067 | கனக்கருகிறத் | 149 | 1233 | கிளைத்தனசிரமு | 172 |

# உயுத்தகாண்டம்.

---

## படலங்களின் அட்டவணை.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

    

ஹரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

## ஆறாவது,

# உயுத்தகாண்டம்.

## முதலாவது: கடல்காண்படலம்.

## தனியன்கள்.

மகிழ்மாறனை வழுத்துவாரென்றனக்கு
நெகிழ்மாறனை நினைக்குநேயம் - முகிழ்மா
முலைக்கமலையேற்றமொழிகாவியத்தால்
நிலைக்கமலைவேகவருணீ.

கம்பர்வீட்டிலொருசிறுபுன்கட்டுத்தறியுங்கவிசெயுமென்
றிம்பர்நாட்டுமன்பதைகூறிருஞ்சொல்லுலவீர்கேட்டுவந்தாம்
சம்புநீட்டுசடைத்தலைக்குந்தகுவர்தலைக்குநதிருப்பாத
அம்புநாட்டுமால்சரிதமன்னோர்பாடலதுவியப்பே.

காப்பு.

ஒன்றேயென்னினொன்றேயாம்பலவென்றுரைக்கிற்பலவேயாம்
அன்றேயென்னினன்றேயாமாமேயென்னினாமேயாம்
இன்றேயென்னினின்றேயாமிலதென்றுரைக்கினிலதேயாம்
நன்றேநம்பிகுடிவாழ்க்கைநமக்கிங்கென்னோபிழைப்பம்மா. (க)

நூல்.

ஊழிதிரியுங்காலத்துமுலையாநிலையவுயர்கிரியும்
வாழிவற்றாமறிகடலுமண்ணும்வடபால்வான்றோயப்
பாழித்தெற்குள்ளனகிரியுநிலனுந்தாழப்பரந்தெழுந்த
ஏழுபத்தின்பெருவெள்ளமகரவெள்ளத்திறுத்ததால். (உ)

---

2. ஊழிதிரியுங்காலத்தும் - உலகமாறுபடுஞ்சமயத்தும்.

பொங்கிப்பரந்தபெருஞ்சேனைபுறத்துமகத்தும்புடைசுற்றச்
சங்கிற்பொலிந்தகையாளைப்பிரிந்தபின்புதமக்கினமாம்
கொங்கிற்பொலிந்ததாமரையின்குழுவுந்துயில்வுற்றிதழ்குவிக்கும்
கங்குற்பொழுதுந்துயிலாதகண்ணன்கடலைக்கண்ணுற்றான். (௩)

சேயகாலம்பிரிந்தகலத்திரிந்தான்மீண்டுஞ்சேக்கையின்பால்
மாயன்வந்தானினிவளர்வானென்றுகருதிவருந்தென்றல்
தூயமலர்போனுரைத்தொகையுமுத்துஞ்சிந்திப்புடைசுருட்டிப்
பாயலுதறிப்படுப்பதேயொத்ததிரையின்பரப்பம்மா. (௪)

வழிக்குங்கண்ணீரழுவத்துவஞ்சியழுங்கவந்தடுத்த
பழிக்குங்காமன்பூங்கணைக்கும்பற்றாநின்றான்பொற்றோளைச்
சுழிக்குங்கொல்லனுலையிற்றுள்ளும்பொறியிற்சுடுமென்றே
கொழிக்குங்கடலினெடுந்திரைவாய்த்தென்றறாற்றுங்குறுந்திவலை

நென்னற்கண்டதிருமேனியின்றுபிறிதாய்நிலைதளர்வான்
தன்னைக்கண்டுமிரங்காதுதனியேகதறுந்தடங்கடல்வாய்ப்
பின்னற்றிரைமேற்றவழ்கின்றபிள்ளைத்தென்றல்கள்ளுயிர்க்கும்
புன்னைக்குறும்பூநறுஞ்சுண்ணம்பூசாதொருகாற்போகாதே. (௬)

சிலைமேற்கொண்டதிருநெடுந்தோட்குவமைமலையுஞ்சிறிதேய்ப்ப, நிலைமேற்கொண்டுமெலிகின்றநெடியோன்றன்முன்படியேழும், தலைமேற்கொண்டகற்பினாண் மணிவாயென்னத்தனித்தோன்றிக், கொலைமேற்கொண்டாருயிர்குடிக்குங்கூற்றங்கொல்லோகொடிப்பவளம். (௭)

தூரமில்லைமயிலிருந்தசூழலென்றுமனஞ்செல்ல
வீரவில்லிநெடுமோனம்வெல்லநாளுமெலிவானுக்
கீரமில்லாநிருதரோடென்னவுறவுண்டுனக்கேழை
மூரன்முறுவற்குறிகாட்டிமுத்தேயுலகைமுடிப்பாயோ. (௮)

இந்துவன்னநுதற்பேதையிருந்தாணீங்காவிடர்கொடியேன்
தந்தபாவைதவப்பாவைதனிமைதகவோவெனத்தளர்ந்து
சிந்துகின்றநறுந்தரளக்கண்ணீர்ததும்பித்திரைத்தெழுந்து
வந்துவள்ளன்மலர்த்தாளின்வீழ்வதேய்க்குமறிகடலே. (௯)

பள்ளியரவிற்பேருலகம்பசுங்கல்லாகப்பனிக்கற்றை
துள்ளுநறுமென்புனறெளிப்பத்தூநீர்க்குழவிமுறைசுற்றி

---

4. சேயகாலம் - வெகுகாலம்.
8. சூழலென்று - இடமென்று.

வெள்ளிவண்ண நுரைக்கலவைவெதும்புமண்ண திருமேனிக்
கள்ளியப்பத்திரைக்கரத்தாலரைப்பதேய்க்குமணியாழி. (௧௦)

கொங்கைக்குயிலைத்துயர்நீக்கியிமையோர்க்குற்றகுறைமுற்ற
வெங்கைச்சிலையன்றாணியினன்விடாதுமுனிவின்மேற்செல்லும்
கங்கைத்திருநாடுடையானைக்கண்டுநெஞ்சங்களிகூர
அங்கைத்திரள்கவொடுத்தோடிப்பார்த்தநெதாத்ததணியாழி. (௧௧)

இன்னதாயகருங்கடலையெய்திதனுக்கெழுமடங்கு
தன்னதாயநெடுமானந்துயரங்காதலிவைதழைப்ப
என்னதாகுமேல்விளைவென்றிருந்தானிராமனிகலிலங்கைப்
பின்னதாயகாரியமுநிகழ்ந்தபொருளும்பேசுவாம். (௧௨)

ஆகத் திருவிருத்தம் - ௧௨.

## உ-வது, மந்திரப்படலம்.

பூவருமயனொடும்புகுந்துபொன்னகர்
மூவகையுலகினுமழகுமுற்றுற
ஏவனவியற்றினன்கணத்தினென்பரால்
தேவருமருள்கொளத்தெய்வத்தச்சனே. (௧)

பொன்னினுமணியினுமமைந்தபொற்புடை
நன்னகர்நோக்கினனகநோக்கினான்
முன்னையினழகுடைத்தென்றுபோய்கழல்
மன்னனுமுவந்துதன்முனிவுமாறினான். (௨)

முழுப்பெருநதனிமுதலுலகின்முந்தையோன்
எழிற்குறிகாட்டினின்றியற்றியீந்தனன்
பழிப்பருமுலகங்களைவையும்பன்முறை
அழித்தழித்தியற்றுவாற்கரிதுண்டாகுமோ. (௩)

திருநகர்முழுவதுநதிருந்தநோக்கிய
பொருகழலிராவணனயற்குப்பூசனை
வரன்முறையியற்றிநீவழிக்கொள்வாயென்றான்
அரியனதச்சற்குமுதவியாணையான். (௪)

அவ்வழியாயிரமாயிரம்மவிர்
செவ்வழிச்செம்மணித்தூணஞ்சேர்த்திய

எவ்வழிமண்டபத்தரிகளேந்திய
வெவ்வழியாசனத்தினிதுமேவினான். (௫)

வரம்பறுசுற்றமுமந்திரத்தொழில்
நிரம்பியமுதிஞருஞ்சேனைநீள்கடற்
றரம்பெருதலைவருந்தழுவத்தோன்றினான்
அரம்பையர்கவரியோடாடுந்தாரினான். (௬)

முனைவருந்தேவருமற்றுமுற்றுளோர்
எனைவருந்தவிர்கெனவேயவாணையான்
புனைகுழன்மகளிரோடிளைஞர்ப்போக்கினான்
நினைவுறுகாரியநிகழ்த்துநெஞ்சினான். (௭)

பண்டிதர்பழையவர்கிழவர்பண்பினர்
தண்டலின்மந்திரத்தலைவர்சார்கெனக்
கொண்டுடனிருந்தனன்கொற்றவாணையான்
வண்டொடுகாலையும்வரவைமாற்றினான். (௮)

ஆன்றமைகேள்வியரெனினுமாண்டொழிற்
கேன்றவர்நண்பினரெனினும்யாரையும்
வான்றுணைச்சுற்றத்துமக்கடம்பியர்
போன்றவரல்லரைப்புறத்துப்போக்கினான். (௯)

திசைதொறுநிறுவினருலகுசேரினும்
பிசைதொழின்மறவரைப்பிறிதென்பேசுவ
விசையுறுபறவையும்விலங்கும்வேற்றவும்
அசைதொழிலஞ்சினசித்திரத்தினே. (௧௦)

தாட்சியிங்கிதனின்மேற்றருவதென்னினி
மாட்சியோர்குரங்கினாலழிந்தமாநகர்
ஆட்சியுமமைவுமென்னரசுநன்றெனாச்
சூட்சியின்கிழவரைநோக்கிச்சொல்லினான். (௧௧)

சுட்டதுகுரங்கெரிசூறையாடிடக்
கெட்டதுகொடிநகர்கிளையுநண்பரும்
பட்டனர்பரிபவம்பரந்ததெங்கணும்
இட்டதிவ்வரியணையிருந்ததென்னுடல். (௧௨)

---

8. பண்டிதர் பழையவர் - கிழவர். பண்பினர் - பண்டிதரும் பழையவரும் கிழவரும் பண்பினருமாகிய என்க.

ஊறுகின்றனகிணறுதிரமொண்ணகர்
ஆறுகின்றிலதனலகிலுநாவியும்
கூறுமங்கையர்நறுங்கூந்தலின்சுறு
நாறுகின்றதுநுகர்நதிருந்தநாமெலாம். (௧௩)

மற்றிலதாயினுமலைந்தவானரம்
இற்றிலதாகியதென்னும்வார்த்தையும்
பெற்றிலம்பிறந்திலமென்னும்பேறலால்
முற்றுவதென்னினிப்பழியின்மூழ்கினும். (௧௪)

என்றவனியம்பலுமெழுநதிறைஞ்சினுன்
கன்றியகருங்கழற்சேனைகாவலன்
ஒன்றுளதுணர்த்துவதொருங்குகேளென
நின்றனனிகழ்த்தினன்புணர்ப்பினெஞ்சினன். (௧௫)

வஞ்சனைமணிசரையியற்றிவாணுதற்
பஞ்சனமெல்லடிமயிலைப்பற்றுதல்
அஞ்சினர்தொழிலெனவறிவித்தேதற்கது
தஞ்செனவுணர்ந்திலையுணருந்தன்மையோய். (௧௬)

கரன்முதல்வீரரைக்கொன்றகள்வரை
விரிகுழலுங்கைமூக்கரிந்தவீரரைப்
பரிபவஞ்செய்ஞ்ஞரைப்படுக்கலாதுநீ
அரசியலழிந்ததென்றயர்திபோலுமால். (௧௭)

தண்டமென்றொருபொருட்குரியதக்கரைக்
கண்டவர்பொருப்பரோவுலகங்காவலர்
வண்டமரலங்கலாய்வணங்கிவாழ்வரோ
விண்டவருறுவலியடக்கும்வெம்மையோர். (௧௮)

செற்றனரெதிரெழுந்தேவர்தானவர்
கொற்றமும்வீரமுமவலியுங்கூட்டற
முற்றிமூன்றுலகுநீமுதல்வனுயது
வெற்றியோபொறைகொலோவிளம்பல்வேண்டுமால். (௧௯)

விலங்கினருயிர்கெடவிலக்கிமீள்கலா
திலங்கையினினிதிருந்தின்பந்துய்த்துமேல்

---

16. மணிசரை - மணிதரை.
17. பரிபவம் - துன்பம்.

குலங்கெழுகாவலகுரங்கிற்றங்குமோ
உலங்குநம்மேல்வரவொழிக்கற்பாலதோ. (உ௦)

தேவருமடங்கினரியக்கர்சிந்தினர்
தாவருந்தானவர்தருக்குத்தாழ்ந்தனர்
யாவருமிறைவரென்றிறைஞ்சுமேன்மையர்
மூவருமொதுங்கினருனக்குமொய்ம்பினோய். (உக)

போயினகுரங்கினைத்தொடர்ந்தபோயவண்
ஏயினருயிர்குடித்தெவ்வந்தீர்கலம்
வாயினுமனத்தினும்வெறுத்துவாழ்துமேல்
ஓயுநம்வலியெனவுணரக்கூறினான். (உஉ)

மற்றவன்பின்னுறமகோதரப்பெயர்க்
கற்றடந்தோளினனெரியுங்கண்ணினன்
முற்றுறநோக்கினன்முடிவுமன்னதால்
கொற்றவகேளெனவினையகூறினான். (உ௩)

ஏற்றமென்பிறிதினியெவர்க்குமின்னுயிர்
மாற்றருமுறைமைசால்வலிமையின்மாண்பமை
கூற்றுவன்றன்னுயிர்கொள்ளுங்கூற்றெனத்
தோற்றுநின்னேவறன்றலையிற்சூடுமால். (உச)

வெள்ளியங்கிரியினைவிடையின்பாகனோ
டள்ளிவிண்டொடவெடுத்தார்த்தவாற்றலாய்
சுள்ளியினிருந்துறைகுரங்கின்றோள்வலிக்
கெள்ளுதிபோலுநின்புயத்தையெம்மொடும். (உரு)

மண்ணினும்வானினுமற்றுமுற்றுநின்
கண்ணினுநீங்கினர்யாவர்கண்டவர்
நண்ணரும்வலத்தினர்யாவர்நாயக
எண்ணிலரிறந்தவரெண்ணிலாவரோ. (உசு)

இடுக்கிவணியம்புவதில்லையீண்டெனை
விடுக்குவையாமெனிற்குரங்கைவேரறுத்
தொடுக்கருமணிதரையுயிருண்டுன்பகை
முடிக்குவென்யானெனமுடியக்கூறினான். (உஎ)

---

25. சுள்ளி - உலர்ந்த சிறுவிறகு.
27. இடுக்கு - உத்தரவளிப்பாயாக.

இச்சிரத்தவனுரைத்திறுக்குமெல்லையின்
வச்சிரத்தெயிற்றவன்வல்லைகூறினான்
அச்சிரத்தைக்கொருபொருளின்றாயினும்
பச்சிரத்தம்பொழிபரிதிக்கண்ணினான். (உஅ)

போயினமனிசரைக்குரங்கைப்பூமியில்
தேயுமின்கைகளாற்றின்மினென்றமை
ஏயினையிருக்குவதன்றியென்னினி
ஆயுமதெம்வயினயிர்ப்புண்டாங்கொலோ. (உகூ)

எவ்வுலகத்துநின்னேவல்கேட்கிலாத்
தெவ்வினையறுத்துனக்கடிமைசெய்தயான்
தவ்வினபணியுளதாகத்தான்கொலோ
இவ்வினையென்வயினீகலாதென்றான். (௩0)

நின்மினென்றவன்றனைவிலக்கிநீயிவை
என்றானுமெளியர்போலிறுத்திபோவெனா
மன்முகநோக்கினன்வணங்கிவன்மையால்
துன்முகனென்பவனினையசொல்லினான். (௩க)

திக்கயம்வலியிலதேவர்மெல்லியர்
முக்கணான்கயிலையுமுரணின்றாயது
மக்களுங்குரங்குமேவலியவாமெனின்
அக்கடவிராவணற்கமைநதவாற்றலே. (௩உ)

பொலிவதுபொதுவுறவெண்ணும்புன்றொழில்
மெலியவர்கடனமக்கிறுதிவேண்டுவார்
வலியினரெனினவர்க்கொதுங்கிவாழ்துமோ
ஒலிகழலொருவநம்முயிருக்கன்பினால். (௩௩)

கண்ணியமந்திரக்கருமங்காவல
மண்ணியன்மனிசருங்குரங்குமற்றவும்
உண்ணியவமைந்தனவுணவுக்குட்குமேல்
திண்ணியவரக்கிரற்றீரர்யாவரே. (௩ச)

எரியுறமடுப்பதுமெதிர்ந்துளோர்படப்
பொருதொழில்யாவையும்புரிந்துபோவதும்
வருவதுங்குரங்குநம்வாழ்க்கையூர்கடந்
தரிதுகொலிராக்கதர்க்காழிநீந்துதல். (௩௫)

28. அச்சிரத்தைக்கு - அம்மந்திராலோசனையின் தன்மைக்கேற்ற.
32. திக்கயம் - எண்திசை யானை.

வந்துன திருக்கையுமரணும்வன்மையும்
வெந்தொழிற்றுணையின்விரிவும்வீரமும்
சிந்தையினுணர்பவர்யாவரேசிலர்
உய்ந்துதம்முயிர்கொடிவ்வுலகத்துள்ளுளார். (௩௬)

ஒல்வதுநினையினுமுறுதியோரினும்
வெல்வதுவிரும்பினும்வினையம்வேண்டினும்
செல்வதங்கவருழைச்சென்றுதீர்ந்தறக்
கொல்வதுகருமமென்றுணரக்கூறினான். (௩௭)

காவலன்கண்ணெதிரவனைக்கைகவித்
தியாவதுண்டினிநமக்கென்னச்சொல்லினான்
கோபமும்வன்மையுங்குரங்குக்கேயெனா
மாபெரும்பக்கனென்றொருவன்வன்மையான். (௩௮)

முந்தினர்முரணிலர்சிலர்மொய்யமர்
நந்தினர்தம்மொடுநனிநயந்ததோ
வந்தொருகுரங்கிடுதீயின்வன்மையால்
வெந்ததோவிலங்கையோடரக்கர்வெம்மையும். (௩௯)

மானுடரேவுவார்குரங்குவந்திவ்வூர்
தானெரிமடுப்பதுநிருதர்தானையே
ஆனவராதுகுறித்தழுங்குவாரெனின்
மேனிகழ்வதற்கினிவிளம்பல்வேண்டுமோ. (௪௦)

நின்றுநின்றிவைசிலவிளம்பனேர்கிலென்
நன்றெனினரரொடுகுரங்கைநாமறக்
கொன்றுதின்றல்லதோரெண்ணுங்கூடுமோ
என்றனனிகல்குறித்தெரியுங்கண்ணினான். (௪௧)

திசாதிசைபோதுநாமரசன்செய்வினை
உசாவினனுட்கினனொழிதும்வாழ்வென்றான்
பிசாசனென்றொருபெயர்பெற்றபெய்கழல்
நிசாசரனுருப்புணர்நெருப்புநீர்மையான். (௪௨)

ஆரியன்றன்மையீதாயினாய்வுறு
காரியமீதெனிற்கண்டவாற்றினால்
சீரியர்மனித்தரேசிறியம்யாமெனாச்
சூரியன்பகைஞனென்றொருவன்சொல்லினான். (௪௩)

---

41. நாமற - பெயர.  42. நிசாசரன் - அரசன்.

ஆள்வினைநிலைமையுமரக்கராற்றலும்
தாழ்வினியிதனின்மேற்பகரத்தக்கதோ
சூழ்வினைமனிசராற்றோன்றிற்றுமென
வேள்வியின்பகைஞனுமுரைத்துவெள்கினான். (சச)

தொகைநிறைக்குரங்குடைமனிதர்ச்சொல்லினென்
சிகைநிறச்சூலிதன்றிறத்திற்செல்லினும்
தகைநிறத்தண்ணறன்சமைதனன்றெனாப்
புகைநிறக்கண்ணனும்புகன்றுபொங்கினான். (சரு)

மற்றவன்பின்னுறமற்றையோர்களும்
இற்றிதுவேநலமெண்ணமற்றிலென்
றுற்றனவுற்றனசொல்லியோங்கினார்
புற்றுறையரவெனப்புழுங்குநெஞ்சினார். (சகூ)

வேறு.

வெம்பிகலரக்கரைவிலக்கிவினைதேரா
நம்பியரிருக்கவெனநாயகனைமுன்னா
எம்பியெனகிற்கிலுரைசெய்வலிதமென்னாக்
கும்பகருணப்பெயரினானிவைகுறித்தான். (சஎ)

நீயயன்முதற்குலமுதற்கொருவனின்றாய்
ஆயிரமறைப்பொருளுணர்ந்தறிவமைந்தாய்
தீவினையப்புறுதல்செய்தனைதெரிந்தால்
ஏயினவுறத்தகையயித்துணையவேயோ. (சஅ)

ஓவியமைந்தநகர்தீயுணவுளைந்தாய்
கோவியலழிந்ததெனவேறொருகுலத்தோன்
தேவியைநயந்துசிறைவைத்தசெயனன்றோ
பாவியருறும்பழியிதிற்பழியுமுண்டோ. (சகூ)

நன்னகரழிந்ததெனநாணினைநயத்தால்
உன்னுயிரெனத்தகையதேவியர்களுன்மேல்
மன்னகைதரத்தரவொருத்தன்மனையுற்றாள்
பொன்னடித்தொழத்தொழமறுத்தல்புகழ்போலாம். (ருo)

---

44. வேள்வியின்பகைஞன் - எக்ஞவிரோதன்.
49. உளைந்தாய் - வருந்தினை.
50. புகழ்போலாம் - அன்றென்பது குறிப்பு.

என்றொருவனில்லுறை தவத்தியையிரங்காய்
வன்றொழிலினும்மறைதுறந்துசிறைவைத்தாய்
அன்றொழிவதாயினுமரக்கர்புகழைய
புன்றொழிலினுவிசைபொறுத்தல்புலமைத்தோ. (௫௧)

ஆசில்பரதாரமவையஞ்சிறையடைப்பேம்
மாசில்புகழ்காதலுறுவேம்வளமைகூரப்
பேசுவதுமானமிடைபேணுவதுகாமம்
கூசுவதுமானுடரைநன்றுநமகொற்றம். (௫௨)

சிட்டர்செயல்செய்திலேகுலச்சிறுமைசெய்தாய்
மட்டவிழ்மலர்க்குழலினளையினிமன்னு
விட்டிடுதுமேலினியமாதுமவர்வெல்லப்
பட்டிடுதுமேலதுவுநன்றுபழியன்றால். (௫௩)

மரன்படர்வனத்தொருவனேசிலேவலத்தால்
கரன்படைபடுத்தவனேவென்றுகளேகட்டால்
நிரம்பிடுவதன்றதுவுநின்றதினிநம்பால்
உரம்படுவதேதயிதனின்மேலுறுதியுண்டோ. (௫௪)

வென்றிடுவர்மானுடவரேனுமவர்தம்மேல்
நின்றிடைவிடாதுநெறிசென்றுறநெருக்கித்
தின்றிடுதல்செய்கிலமெனிற்செறுநரோடும்
ஒன்றிடுவர்தேவருலகேழுமுடனென்றும். (௫௫)

ஊறுபடையூறுவதன்முன்னமொருநாளே
ஏறுகடலேறிநரர்வானரரையெல்லாம்
வேறுபெயராதவகைவேரொடுமடங்க
நூறுவதுவேகருமமென்பதுநுவன்றான். (௫௬)

நன்றுரைசெய்தாய்குமரநானிதுநினைந்தேன்
ஒன்றுமினியாய்தல்பழுதொன்னலரையெல்லாம்
கொன்றுபெயர்வாநமகொடிப்படைகளெல்லாம்
இன்றெழுதனன்றெனவிராவணனிசைத்தான். (௫௭)

என்றவனியம்பியிறுமெல்லேயினில்வல்லே
சென்றுபடையோடுசிறுமானுடர்சினப்போர்
வென்றுபெயர்வாயரசநீகொலெனவீரம்
நன்றுபெரிதென்றுமகனக்கிவைநவின்றான். (௫௮)

ஈசனருள்செய்தனவுமேடவிழ்மலர்ப்பே
ராசனமுவந்தவனளித்தனவுமாயப்
பாசமுதல்வெம்படைசுமந்துபலர்நின்ருர்
ஏசவுழல்வேனொருவன்யானுமுளனென்ருன். (ருகூ)

முற்றுமுதலாயுலகமூன்றுமெதிர்தோன்றிச்
செற்றமுதலோடொடுசெறுத்ததொர்திறத்தும்
வெற்றியுனதாகவிளையாதொழியினென்னைப்
பெற்றுமிலையானெறிபிறந்துமிலெனென்ருன். (கூ0)

குரங்குபடமேதினிகுறைததலைபடப்போர்
அரங்குபடமானுடரலந்தலைபடப்பே
ரிரங்குபடர்சீதைபடவின்றிருவர்நின்ருர்
சிரங்குவடெனக்கொணர்தல்காணுதிசினத்தோய். (கூக)

சொல்லிடைகழிக்கிலைசுருங்கியகுரங்கென்
கல்லிடைகழித்தவுருமிற்கடுமைகாணும்
வில்லிடைகழித்தமிடல்வாளிவெருவித்தம்
பல்லிடைகிழித்திரிவகண்டுபயன்ருய்ப்பாய். (கூ௨)

யானையிலர்தேர்புரவியாதுமிலரேவும்
தானையிலர்நின்றதவமொன்றுமிலர்தாமோர்
கூனன்முதுகின்சிறுகுரங்குகொடுவெல்வார்
ஆனவருமானுடர்நம்மாண்மையினிதன்ருே. (கூங)

நீருநிலனுநெடியகாலுமுமிர்வானும்
பேருமுலகியாவுமொருநாள்புடைபெயர்ந்தே
யாருமொழியாமைநரர்வானரர்களென்பார்
வேருமொழியாதவகைகொன்றலதுமீளேன். (கூச)

என்றடியிறைஞ்சினனெழுந்துவிடையீமோ
வன்ருெழிலினுயெனவும்வாளெயிறுவாயில்
தின்றனன்முனிந்துநனிதீவினையையெல்லாம்
வென்றவரினன்றுணரும்வீடணன்விளம்பும். (கூரு)

---

59. ஏடவிழ்மலர்ப்பேராசனமு வந்தவன் - இதழ்விரிந்த பெரிய கமலாசனத்தினையுடைய பிரமதேவன். 65. ஈமோ - அருளுதீர்.

60. நெறிபிறந்துமிலன் - முறையாக உனக்கே பிறந்தவனு மல்லேன்.

61. இரங்குபடர் - அமுதற்றுன்பம்.

## வேறு.

நூலினானுணங்கியவறிவுநோக்கினை
போலுமாலுறுபொருளுணரும்பூட்சியோய்
காலமேல்வினைபொருளுணருங்கற்பிலாப்
பாலனீயினையனபகரற்பாலையோ. (௬௬)

கருத்திலான்கண்ணிலானொருவன்கைக்கொடு
திருத்துவான்சித்திரமனையசெப்புவாய்
விருத்தமேதகையவர்வினையமந்திரத்
திருத்தியோவிளமையான்முறைமையெண்ணிலாய். (௬௭)

தூயவர்முறைமையேதொடங்குந்தொன்மையோர்
ஆயவர்நிற்கமற்றவுணராதியாம்
தீயவரறத்தினாற்றேவராயது
மாயமோவஞ்சமோவன்மையேகொலோ. (௬௮)

அறந்துறந்தமரரைவென்றவாண்டொழில்
திறந்தெரிந்திடினதுதானுஞ்செய்தவம்
நிறந்திறம்பாவகையியற்றுநீர்மையால்
மறந்துறந்தவர்தரும்வரத்தின்வண்மையால். (௬௯)

மூவரைவென்றுமூன்றுலகுமுற்றுறக்
காவலினின்றுதங்களிப்புக்கைம்மிக
வீவதுமுடிவெனவீந்ததல்லது
தேவரைவென்றவர்யாவர்தீமையோர். (௭௦)

வினைகளைவென்றுமேல்வீடுகண்டவர்
எனைவரென்றியம்புகேனெவ்வந்தீர்க்கையால்
முனைவருமமரருமுன்னும்பின்னரும்
அனையவர்திறத்துளர்யாவராற்றினார். (௭௧)

பிள்ளைமைவிளம்பினைபேதைநீயென
ஒள்ளியபுதல்வனையுரப்பியென்னுரை
எள்ளலையாமெனினியம்பலாற்றுவென்
தெள்ளியபொருளெனவரசற்செப்பினான். (௭௨)

எந்தைநீயாயுநீயெம்முனீதவம்
வந்தனைத்தெய்வநீமற்றுமுற்றுநீ

---

66. நூலினானுணங்கிய - சாத்திரவராய்ச்சியால் நுட்பமடைந்த.
72. அரசற்செப்பினான் - இராவணனுக்குரைத்தான்.

இந்திரப்பெரும்பதமிழக்கின்றுயென
நொந்தனெனுகலினுவல்வதாயினேன். (எங)

கற்றுறுமாட்சியென்கண்ணின்றுயினும்
உற்றுறுபொருடெரிந்துணர்தலோயினும்
சொற்றுறுசூழ்ச்சியின்றுணிவுசோரினும்
முற்றுறக்கேட்டபின்முனிதிமொய்ம்பினேய். (எச)

கோனகர்முழுவதுநினதுகொற்றமும
சானகியெனும்பெயருலகின்றம்மனை
ஆனவள்கற்பினுல்வெந்ததல்லதோர்
வானரஞ்சுட்டதென்றுணர்தன்மாட்சியோ. (எரு)

எண்பொருட்டொன்றநின்றெவருமெண்ணினுல்
விண்பொருட்டொன்றியவுயர்வுமீட்சியும்
பெண்பொருட்டன்றியும்பிறிதுண்டாமெனின்
மண்பொருட்டன்றியும்வரவும்வல்லதோ. (எசு)

மீனுடைநெடுங்கடலிலங்கைவேந்தன்முன்
தானுடைநெடுந்தவந்தளர்ந்துசாய்வதோர்
மானுடமங்கையாலென்னுவாய்மொழி
தேனுடையலங்கலாயின்றுதீர்ந்ததோ. (எஎ)

ஏறியநெடுந்தவமிழைத்தவெல்லைநாள்
ஆறியபெருங்குணத்தறிவனுணையால்
கூறியமனிசர்பாற்கொற்றங்கொள்ளலை
வேறினியவர்வயின்வென்றியாவதோ. (எஅ)

ஏயதுபிறிதுணர்ந்தியம்பவேண்டுமோ
நீயொருதனியுலகேழுநீந்துவாய்
ஆயிரந்தோளவற்காற்றறேற்றலை
மேயினையாமெனின்விளம்பவேண்டுமோ. (எகூ)

மேலுயர்கயிலையைவென்றமேலைநாள்
நாலுதோணந்திதானவின்றசாபத்தால்
கூலவான்குரங்கினுற்குறுகுங்கோளது
வாலிபாற்கண்டனம்வரம்பிலாற்றலாய். (அ௦)

---

74. சொற்றுறுசூழ்ச்சியின் துணிவுசோரினும் - மந்திராலோசனைச் சொற்களின் தீர்மானத்துக்குமாறு பட்டாலும்.

தீயிடைக்குளித்தவத்தெய்வக்கற்பினாள்
வாயிடைமொழிந்தசொன்மறுக்கவல்லமோ
நோயுனக்கியானென நுவன்றுளாளவள்
ஆயவள்சீதைபண்டமுதிற்றோன்றினாள். (அக)

வேறு.

சம்பரப்பெயருடைத்தானவர்க்கிறைவனைத்தனுவலத்தால்
அம்பரத்தும்பர்புக்கமரிடைத்தலைதுமித்தமராய்ய
உம்பருக்கிறைவனுக்கரசளித்துதவினானொருவனேமி
இம்பரிற்பணிசெயத்தயரதப்பெயரினானிசைவளர்த்தான். (அஉ)

மிடல்படைத்தொருவனாயமரர்கோன்விடையதாய்வெரிநின்மேலாய்
உடல்பதைத்தவுணராயினவெலாமடியவாளுருவினானும்
அடல்படைத்தவனியைப்பெருவளந்தருகவென்றருளினானும்
கடல்படைத்தவர்நெடுங்கங்கைதந்தவன்வழிக்கடவுண்மன்னன். ()

பொய்யுரைத்துலகினிற்சினவினார்குலமறப்பொருதுதன்வேல்
நெய்யுரைத்துறையினிட்டறம் வளர்த்தொருவனநெறியினின்றான்
மையுரைத்துலவுகண்மனைவிபால்வரமளித்தவைமறாதே
மெய்யுரைத்துயிர்கொடுத்தமராரும்பெறுகிலாவீடுபெற்றான். (அச)

அனையவன்சிறுவரெம்பெருமவுன்பகைஞானவரையம்மா
இனையரென்றுணர்தியேலிருவருமொருவரும்மெதிர்கிலாதார்
முனைவரும்மமராரும்முழுதுணர்ந்தவர்களும்முற்றுமற்றும்
நினைவருந்தகையர்நம்வினையினன்மனிசராயெளிதினின்றார். (அரு)

கோசிகப்பெயருடைக்குலமுனித்தலைவனக்குளிர்மலர்ப்பே
ராசனத்தவனொடெவ்வுலகமுந்தருவெனன்றமைக்கலுற்றான்
ஈசனிற்பெறுபடைக்கலமிமைப்பளவினெவ்வுலகும்யாவும்
நாசமுற்றிடநடப்பனகொடுத்தவைபிடித்துடையர்நம்பர். (அசு)

எறுழ்வலிப்பொருவிறோளவுணரோடமரர்பண்டிகல்செய்காலத்
துறுதிறற்கலுழன்மீதொருவனின்றமர்செய்தானுடையவில்லும்
தெறுசினத்தவர்கண்முப்புரநெருப்புறவுருத்தெய்தவம்பும்
குறுமுனிப்பெயரினானிறைதவர்க்கிறைதரக்கொண்டுநின்றான். ()

நாவினாலுலகைநக்கிடுவதிக்களவிடற்குரியநாளும்
மேவுதீவிடமுயிர்ப்பனவெயிற்பொழியெயிற்றனவவீரர்

---

83. வாளுருவினான - காருத்தன்.

83. அவனியைப்பெருவளர்தருகவென்றருளினேன். பிருதுச்சக்ரவர்த்தி. கடல்படைத்தவன் - சகரன் கங்கைதந்தவன் - பகீரதன்.

86. கோசிகன் - விசுவாமித்திரன்.

ஆவமாமரியபுற்றுறைவமுற்றறிவருக்கழிவுசெய்யும்
பாவகாரியருயிர்ப்பதமலாதிரைபெருப்பகழிநாகம். (அஅ)

பேருமோவொருவராலவர்களாலல்லதெப்பெரியவேனும்
நாருமூரியுமறுநம்முடைச்சிலைகள்போனலியலாமோ
தாருவோவேணுவோதாணுவாயுலகினைத்தழுவிநிற்கும்
மேருவோமால்வரைக்குலமதோவல்லவோவில்லுமன்றே. (அகூ)

உரமொருங்கியதுநீர்கடையும்வாலியதுமார்புலகைமூடும்
மரமொருங்கியகராதியர்விராதனதுமால்வரைகண்மானும்
சிரமொருங்கினவினிச்செருவொருங்குளதெனிற்றெவ்வரென்பார்
பரமொருங்குவதலாற்பிறிதொருங்காததோர்பகையுமுண்டோ. ()

சொல்வரம்பெரியமாமுனிவரென்பவர்கடந்துணையிலாதார்
ஒல்வரம்பெரியதோளிருவருமமரரோடுலகம்யாவும்
வெல்வரென்பதுதெரிந்தெண்ணினார்நிருதர்வேர்முதலும்வீயக்
கொல்வரென்றுணர்தலாலவரைவநதமைவதோரியைபுகொண்டார்.

துஞ்சுகின்றிலர்களாலிரவுநன்பகலுநிற்சொல்லவொல்கி
நெஞ்சுநின்றபருமிந்நிருதர்பேர்சனகியாநெடியதாய
நஞ்சுதின்றவர்கடாநண்ணுவார்நரகமென்றெண்ணிநம்மை
அஞ்சுகின்றிலர்கணின்னருளலாற்சரணிலாவமரரையா. (கூஉ)

புகன்மதித்துணர்கிலாமையினமக்கெளிமைசால்பொறுமைகூர
நகன்மதிக்கிலமறுப்பொலியவாளொளியிழந்துதயநண்ணும்
பகன்மதிக்குவமையாம்விபுதராமிரவுகால்பருவநாளின்
அகன்மதிக்குவமையாயினதபோதனருளார்வதனமம்மா. (கூங)

சிந்துமுந்துலகினுக்கிறுதிபுக்குருவொளித்துழறல்செய்யார்
இந்துவின்றிருமுகத்திறைவிநம்முறையுளாளென்றலோடும்
அந்தகன்முதலினோரமரரும்முனிவரும்பிறருமஞ்சார்
வந்துதம்முலகமும்வானமுங்கண்டுவெந்தகல்வர்மன்றே. (கூச)

சொலத்தகாத்துன்னிமித்தங்களெங்கணும்வரத்தொடர்வவொன்
வெலத்தகாவமரரும்மவுணருஞ்செருவில்விட்டனவிடாத [னார்
குலத்தகால்வயநெடுங்குதிரையுங்குஞ்சரக்குன்றுமென்றும்
வலத்தகான்முந்துரத்தந்துநம்மனையிடைப்புகுதுமன்றே. (கூரு)

வாயினும்பல்லினும்புனல்வறந்துலறினார்நிருதர்வைகும்
பேயினும்பெரியபேய்நரிகளும்புரிதரும்பிறவுமெண்ணின்

கோயிலுந்நகரமும்மடநலார்குழலுநங்குஞ்சியோடும்
தீயின்வெந்திடுமெலாவொருநிமித்தம்பெறுந்திறனுமுண்டோ. (௯௫)

சிந்தமானகரைச்சிரமுருக்கியகரன்றிரிசிரத்தோன்
முந்தமானயினன்வாலியேமுதலினோர்முடிவுகண்டால்
அந்தமானிடபனோடாழிமாவலவனும்பிறருமையா
இந்தமானிடவராயிருவரோடெண்ணலாமொருவர்யாரே. (௯௭)

இன்னமொன்றுரைசெய்வேனினிதுகேளெம்பிரானிருவராய
அன்னவன்றன்னொடும்வானரத்தலைவராயனுகினின்றார்
மன்னுநம்பகைஞராம்வானுளோரவரொடும்மாறுகோடல்
கன்னமன்றிதுநமக்குறுதியென்றுணர்தலுங்கருமமன்றால். (௯௮)

வேறு.

இசையுஞ்செய்கையுமுயர்குலத்தியற்கையுமெஞ்ச
வசையுங்கீழ்மையுமீக்கொளக்கிளையொடுமடியா
தசைவில்கற்பினவ்வணங்கைவிட்டருளுதியிதன்மேல்
விசயமில்லெனச்சொல்லினனறிஞரின்மிக்கோன். (௯௯)

கேட்டவாண்டகைகரத்தொடுகரதலங்கிடைப்பப்
பூட்டிவாய்தொறும்பிறைக்குலம்வெண்ணிலாப்பொழிய
வாட்டடந்தவழாரமும்வயங்கொளிமார்பும்
தோட்டடங்களுங்குலுங்கநக்கிவையிவைசொன்னான். (௧௦௦)

இச்சைநல்லனவுறுதிகளிசைக்குவெனென்றாய்
பிச்சர்சொல்லுவசொல்லினையென்பெருவிறலைக்
கொச்சைமானுடர்வெல்குவரென்பதுகுறித்த
தச்சமோவவர்க்கன்பினோயாவதோவையா. (௧௦௧)

ஈங்குமானுடப்பசுக்களுக்கிலைவரமென்றாய்
தீங்குசொல்லினைதிசைகளையுலகொடுஞ்செருக்கால்
தாங்குமானையைத்தள்ளியத்தழனிறத்தவனை
ஓங்கறன்னொடுமெடுக்கவும்வரங்கொண்டதுளதோ. (௧௦௨)

மனக்கொடன்றியும்வறியனவழங்கினைவானோர்
சினக்கொடும்படைசெருக்களத்தென்னையென்செய்த
எனக்குநிற்கமற்றென்னொடிங்கொருவயிற்றுதித்த
உனக்குமானுடர்வலியராந்தகைமையுமுளதோ. (௧௦௩.)

---

98. கன்னம் - முறை. 99. எஞ்ச - குறைய.

சொல்லுமாற்றங்கடெரிந்திலைபன் முறைதோற்றும்
வெல்லுமாற்றலுமொருமுறைபொறுத்தனன்விண்ணைக்
கல்லுமாற்றலென்கிளையையுமென்னையுங்களத்தில்
கொல்லுமாற்றலருளரெனக்கோடலுங்கொண்டாய். (௧௦௪)

தேவரிற்பெற்றவரத்தினிற்பெருஞ்செருக்கென்னின்
மூவரிற்பெற்றமுடையவன்றன்னொடுமுழுதும்
காவலிற்பெற்றதிகிரியோன்றன்னையுங்கடந்த
தேவரிற்பெற்றவரத்தினாலியம்புதியிளையோய். (௧௦௫)

நந்திசாபத்தினமையடுங்குரங்கெனினம்பால்
வந்தசாபங்களெனைப்பலவவைசெய்தவலியென்
இந்தியாதிகளவித்தவர்தேவர்நம்மிறுதி
சிந்தியாதவர்யாரவைநம்மையென்செய்த. (௧௦௬)

அரங்கினாடுவாற்கன்புபூண்டுடைவரமறியேன்
இரங்கியானிற்பவென்வலியவன்வயினெய்த
வரங்கொள்வாலிபாற்றோற்றனென்மற்றும்வேறுள்ள
குரங்கெலாமெனைவெல்லுமென்றெங்ஙனங்கோடி. (௧௦௭)

நீலகண்டனுநேமியுநேர்நின்றுநேரின்
ஏலுமன்னவருடைவலியவன்வயினெய்தும்
சாலுநல்வரநினைந்தவனெதிர்செலத்தவிர்ந்து
வாலிதன்னையுமனிதனுமறைந்துநின்றெய்தான். (௧௦௮)

ஊனவில்லிறுத்தோட்டைமாமரத்துளம்போட்டிக்
கூனிசூழ்ச்சியாலரசழிந்துயர்வனங்குறுகி
யானிழைத்திடவில்லிழந்தின்னுயிர்சுமக்கும்
மானுடன்வலிநீயலாதாருளர்மதிப்பார். (௧௦௯)

என்றுதன்னுரையிழித்துநீயுணர்விலியென்று
நன்றுபோதுநாமெழுகெனுமரக்கனைநணுகா
ஒன்றுகேளினமுறுதியென்றன்பினனொழியான்
துன்றுதாரவன்பின்னருமினையனசொல்வான். (௧௧௦)

தன்னின்முன்னியபொருளிலாவொருதனித்தலைவன்
அன்னமானுடனாகிவந்தவதரித்தமைந்தான்
சொன்னநம்பொருட்டும்பர்தஞ்சூழ்ச்சியின்றுணிவால்
இன்னமேகுதிபோலுமென்றடிதொழுதிரந்தான். (௧௧௧)

---

107. அரங்கில்-நடனசாலையில். !108. நேமியும்-சக்கரத்தினையுடையவனும்.

அச்சொற்கேட்டவனுழியானென்றனையாயின்
கொச்சைத்துன்மதியெத்தனைப்போரிடைக்குறைந்தான்
இச்சைக்கேற்றனயான்செய்தவித்தனைகாலம்
முச்சற்றுன்கொலம்முழுமுதலோனெனமுனிந்தான். (ககஉ)

இந்திரன்றனையிருஞ்சிறையிட்டநாளிமையாத்
தந்திகோடிறத்தார்ந்தநாடன்னையான்முன்னம்
வந்தபோர்தொறுந்துரந்தநாள்வானவருலகைச்
சிந்தவென்றநாள்சிறியன்கொனீசொன்னதேவன். (ககங)

சிவனுநான்முகத்தொருவனுந்திருநெடுமாலாம்
அவனுமற்றுளவமரருமுடனுறைந்தடங்காப்
புவனமூன்றும்யானுண்டுளதாண்டவப்பொருவில்
உவனிலாமையிலோவலியொதுங்கியோவுரையாய். (ககச)

ஆயிரம்பெருந்தோள்களுமத்துணைத்தலையும்
மாயிரும்புவியுள்ளடியடக்குறும்வடிவும்
தீயசாலவுஞ்சிறிதெனநினைந்துநாந்தினும்
ஓயுமானுடவுருவுகொண்டனன்கொலாமொருவன். (ககரு)

பித்தனாகியவீசனுமாலுமென்பெயர்கேட்
டெய்த்தசிந்தையரேகுழியெல்லாம்
கைத்தவேற்றினுங்கடவியபுள்ளினுமுதுகில்
தைத்தவாளிகணின்றுளகுன்றின்வீழ்தடித்தின். (ககசு)

வெஞ்சினந்தருபோரிலென்னுடனெழவேண்டா
இஞ்சிமாநகரிடமுடைத்தீண்டினிதிருத்தி
அஞ்சலஞ்சலென்றயலிருந்தவர்முகநோக்கி
நஞ்சின்வெய்யவன்கையெரிந்துருமெனநக்கான். (ககஎ)

பின்னும்வீடணனையநின்றரமலபெரியோர்
முன்னைநாளவன்முனிந்திடக்கிளையொடுமுடிந்தார்
இன்னமுண்டியானியம்புவதிரணியனென்பான்
தன்னையுள்ளவாகேட்டியென்றுரைசெயச்சமைந்தான். (ககஅ)

ஆக திருவிருத்தம் - கங௦.

---

112. துன்மதி - துர்புத்தியையுடையாய்.

116. பித்தனாகிய - உன்மத்தமுடையவனாகிய. ஈசன் - ஒருஅபரஉருத்திரன்.

# ௩-வது, இரணியன்வதைப்படலம்.

வேதங்கண்ணியபொருளெலாம்விரிஞ்சனையீந்தான்
போதங்கண்ணியவரமவன்றரக்கொடுபோந்தான்
காதுங்கண்ணுதல்மாலயன்கடைமுறைகாணாப்
பூதங்கண்ணியவலியெலாமொருதனிபொறுத்தான். (௧)

எற்றைநாளினுமுளனெனுமிறைவனுமயனும்
கற்றையஞ்சடைக்கடவுளுங்காத்தளித்தழிக்கும்
ஒற்றையண்டத்தினளவிலேவிதன்புறத்துளவா
மற்றையண்டமுந்தன்பெயரேசொல்வாழ்ந்தான். (௨)

பாழிவன்றடந்திசைசுமந்தோங்கியபணைக்கைப்
பூழிவன்கரியிரண்டிருகைகொடுபொருத்தும்
ஆழங்காணுதற்கரியவாயகன்றவோராழி
ஏழுந்தன்னிருதாளளவெனக்கடந்தேறும். (௩)

வண்டற்றெண்டிரையாற்றுநீர்சிலவென்றுமருவான்
கொண்டற்கொண்டநீர்குளிர்ப்பிலவென்றவைகுடையான்
பண்டைத்தெண்டிரைப்பரவைநீருவரென்றுபடியான்
அண்டத்தைப்பொதுத்தப்புறத்தப்பினாலாடும். (௪)

சார்விமானத்திற்சந்திரன்றனிப்பதஞ்சரிக்கும்
தேரின்மேனின்றுமிரவிதன்பெரும்பதஞ்செலுத்தும்
பேர்விலெண்டிசைக்காவலர்கருமமும்பிடிக்கும்
மேருமால்வரையுச்சிமேலரசுவீற்றிருக்கும். (௫)

நிலனுநீரும்வெங்கனலொடுகாலுமாய்நிமிர்ந்த
தலனுணீடியவவற்றினத்தலைவரைமாற்றி
உலவுங்காற்றொடுகடவுளர்பிறருமாயுலகின்
வலியுஞ்செய்கையும்வருணன்றன்கருமமுமாற்றும். (௬)

தாமரைத்தடங்கண்ணினான்பேரவைதவிர
நாமந்தன்னதேயுலகங்கள்யாவையுநவிலத்
தூமவெங்கனலந்தணர்முதலினர்சொரிந்த
ஓமவேள்வியினிறையவர்பேறெலாமுண்ணும். (௭)

காவல்காட்டுதறுடைத்தலென்றித்தொழில்கடவ
மூவருமவைமுடிக்கிலர்பிடிக்கிலர்முறையின்

---

7. தாமரைத்தடங்கண்ணினான் - புண்டரீகாட்சனான திருமான்.
1. போதம் - ஞானம்.

ஏவர்மற்றவர்யோகிகளுறுபதமிழந்தார்
தேவரும்மவன்றாளலாதருச்சனைசெய்யார். (அ)

மரபின்மாபெரும்புறக்கடன்மஞ்சனமருவி
அரவிஞட்டிடைமகளிரோடின்னமுதருந்திப்
பரவுமிந்திரன்பதியிடைப்பகற்பொழுதகற்றி
இரவினோலக்கநான்முகனுலகத்துளிருக்கும். (கூ)

பண்டுவானவர்தானவர்யாவரும்பற்றித்
தெண்டிரைக்கடல்கடைதரவலியதுதேடிக்
கொண்டமத்தினைக்கொற்றத்தன்குவவுத்தோட்கமைந்த
தண்டெனக்கொளலுற்றதுநொய்தெனத்தவிர்ந்தான். (க௦)

மண்டலந்தருகதிரவன்வந்துபோய்மறையும்
எண்டலந்தொடற்கரியனதடவரையிரண்டும்
கண்டலம்பசும்பொன்னவன்முன்னவன்காதின்
குண்டலங்கண்மற்றென்னினிப்பெருவிறல்கூறின். (கக)

மருக்கொடாமரைநான்முகனைம்முகன்முதலோர்
குருக்களோடுகற்றோதுவதவன்பெருங்கொற்ற
சுருக்கநான்மறைதொன்றுதொட்டுரைதொறுந்தோன்றா
திருக்குந்தெய்வமுமிரணியனேநமவென்னும். (கஉ)

மயருமன்னெடுஞ்சேவடிமண்ணிடைவைப்பின்
அயரும்வாளெயிற்றாயிரம்பணந்தலையநந்தன்
உயருமேலண்டமுகடுதன்முடியுறவுயரும்
பெயருமேனெடும்பூதங்களைந்தொடும்பெயரும். (கங)

பெண்ணிற்பேரெழிலாணினிலலியினிற்பிறிதும்
உண்ணிற்கும்முயிருள்ளதினில்லதினுலவான்
கண்ணிற்காண்பனகருதுவயாவினுங்கழியான்
மண்ணிற்சாகிலன்வானினுஞ்சாகிலன்வரத்தால். (கச)

தேவராயினரேவருந்திரிதருமியக்கர்
யாவராயினுமெண்ணவுநினைக்கவுமியன்ற
கோவைமாலயன்மானுடன்யாவருங்கொல்ல
ஆவிதீர்கிலனற்றலுந்தீர்கிலனனையான். (கரு)

---

14. அலியினில் - பேட்டினில், பேடு - நபுஞ்சகம்; ஆண்டன்மையற்றது. உலவான் - நீங்காதிருப்பன்.

நீரிற்சாகிலனெருப்பினுஞ்சாகிலனிமிர்ந்த
மாருதத்தினுமண்ணின்மற்றெவற்றினுமாளான்
ஓருந்தேவருமுனிவரும்பிறர்களுமுரைப்பச்
சாருஞ்சாபமுமன்னவன்றனைச்சென்றுசாரா. (கசு)

உள்ளிற்சாகிலன்புறத்தினுமுலக்கிலனுலவாக்
கொள்ளைத்தெய்வவன்படைக்கலம்யாவையுங்கொல்லா
நள்ளிற்சாகிலன்பகலிடைச்சாகிலனமனார்
கொள்ளச்சாகிலனாரினியவனுயிர்கொள்வார். (கஎ)

பூதமைந்தொடும்பொருந்தியவுணர்வினிற்புணரும்
வேதநான்கினும்விளம்பியபொருள்களால்விளியான்
தாதைதன்னைத்தான்றனிக்கொலைசூழினுஞ்சாகான்
ஈதவன்னிலையெவ்வுலகங்கட்குமிறைவன். (கஅ)

ஆயவன்றனக்கருமகனறிஞரினறிஞன்
தூயரென்பவர்யாரினுமறையினுந்தூயன்
நாயகன்றனிஞானிநல்லறத்துக்குநாதன்
தாயின்மன்னுயிர்க்கன்பினனுளனொருதக்கோன். (ககூ)

வாழியானவன்றனைக்கண்டுமனமுவந்துருகி
ஆழியையணியறிதியான்மறையெனவறைந்தான்
ஊழியுங்கடந்துயர்கின்றவாயுளானுலகம்
ஏழுமேழும்வந்தடிதொழவரசுவீற்றிருந்தான். (உ0)

என்றொரந்தணனெல்லையிலறிஞனையேவி
நன்றுநீயிவற்குதவுதிமறையெனநவின்றான்
சென்றுமற்றவன்றன்னொடுமொருசிறைசேர்ந்தான்
அன்றுநான்மறைமுதலியவோதுவானமைந்தான். (உக)

ஓதப்புக்கவனுந்தைபேருரையெனவோடும்
போதத்தன்செவித்தொளையிருகைகளாற்பொத்தி
மூதக்கோயிதுநற்றவமன்றெனமொழியா
வேதத்துச்சியின்மெய்ப்பொருட்பெயரினைவிரித்தான். (உஉ)

ஓநமோநாராயணாவென்றுரைத்துளமுருகித்
தானமைந்திருதடக்கையுந்தலையின்மேற்றாங்கிப்

---

17. உலக்கிலன் - குறையான். நள்ளில் - உச்சிப்பொழுதில்.

20. ஊழி - விதி.

22. வேதத்துச்சியின் மெய்ப்பொருள்பெயர் - ஹரியென்பது.

பூதிறக்கண்கள்புனலுகமயிர்புறம்பொடிப்ப
ஞானநாயகனிருந்தனனந்தணனடுங்கி. (௨௩)

கெடுத்தொழிந்தனையென்னையுமுன்னையுங்கெடுவாய்
படுத்தொழிந்தனைபாவியத்தேவரும்பகர்தற்
கடுத்ததன்றியேயபலொன்றுபகரநின்னறிவின்
எடுத்ததென்னிதுவென்செய்தவண்ணநீயென்றான். (௨௪)

என்னையுய்வித்தேனெந்தையையுய்வித்தேனினைய
உன்னையுய்வித்திவ்வுலகையுமுய்விப்பானமைந்து
முன்னைவேதத்தின்முதற்பெயர்மொழிவதுமொழிந்தேன்
என்னைகுற்றநானியம்பியதியம்புதியென்றான். (௨௫)

முந்தைவானவர்யாவர்க்குமுதல்வற்குமுதலோன்
உந்தைமற்றவன்றிருப்பெயருரைசெயற்குரிய
அந்தணாளனையென்னினுமறிதியோவையா
இந்தவிப்பெயருரைத்தெனைக்கெடுத்திடலென்றான். (௨௬)

வேதபாரகனவ்வுரைசெய்தலும்விமலன்
ஆதிநாயகன்பெயரன்றியான்பிறிதறியேன்
ஓதவேண்டுவதில்லையென்றுணர்வினுக்கொன்றும்
போதியாததுமில்லையென்றிவையிவைபுகலும். (௨௭)

தொல்லைநான்மறையாவையுந்துணிபொருட்கெல்லாம்
எல்லைகொண்டவனகம்புகுந்திடங்கொண்டதென்னுள்
இல்லைவேறினிப்பெரும்பதம்யானறியாத
வல்லையேலினியோதுவிநீதியின்வழாத. (௨௮)

ஆரைச்சொல்லுவதந்தணாருமறையறிந்தோர்
ஓரச்சொல்லுவதெப்பொருளுபநிடதங்கள்
தீரச்சொல்லுவதேவருமுனிவருஞ்செப்பும்
பேரைச்சொல்லுவதலலதுபிறிதுமொன்றுளதோ. (௨௯)

வேதத்தானுநல்வேள்வியினானுமெய்யுணர்ந்த
போதத்தானுமப்புறத்துளவெப்பொருளானும்
சாதிப்பார்பெறும்பெரும்பதந்தலைக்கொண்டுசமைந்தேன்
ஓதிக்கேட்பனபரம்பொருளின்னுமொன்றுளதோ. (௩௦)

காடுபற்றியுங்கனவரைபற்றியுங்கலைத்தோல்
மூடுபற்றியுமுண்டித்துநீட்டியுமுறையால்

---

28. எல்லைகொண்டவன் - முடிபொருளாகநின்றுள்ளவன்.

வீடுபெற்றவர்பெற்றதின்விழுமிதென்றுரைக்கும்
மாடுபெற்றனென்மற்றினியென்பெறவருந்தி. (௩௧)

செவிகளாற்பலகேட்கிலராயினுந்தேவர்க்
கவிகொணான்மறையகப்பொருள்புறப்பொருளறிவார்
கவிகளாகுவார்காண்குவார்மெய்ப்பொருள்காலால்
புவிகொணாயகற்கடியவர்க்கடிமையிற்புக்கார். (௩௨)

எனக்குநான்முகத்தொருவற்கும்யாரினுமுயர்ந்த
தனக்கும்வேறுளசராசரமனைத்திற்குந்தலைவன்
மனக்குவந்தனன்வந்தனயாவையுமறையோய்
உனக்குமின்னதினல்லதொன்றில்லெனவுரைத்தான். (௩௩)

மாற்றம்யாதொன்றுமுரைத்திலன்மறையவன்மறுகி
ஏற்றமென்னெனக்கிறுதிவந்தெய்தியதென்னா
ஊற்றமில்லவனோடினன்கனகனையுற்றான்
தோற்றவந்ததோர்கனவுகண்டானெனச்சொன்னான். (௩௪)

எந்தைகேளெனக்கிம்மைக்குமறுமைக்குமியம்பச்
சிந்தையாலிறைநினைத்தற்குமடாதனசெப்பி
முந்தையேநினைந்தென்பொருண்முற்றுமென்றுரைத்தான்
மைந்தனோதிலன்வேதமென்றுரைத்தனன்வணங்கி. (௩௫)

அன்னகேட்டவனந்தணவந்தணர்க்கடாத
முன்னர்யாவருமொழிதருமுறைமையிற்படாத
தன்னதுள்ளுடையுணர்ச்சியாற்புதுவதுதந்த
தென்னசொல்லவணியம்பியதியம்புதியென்றான். (௩௬)

அரசனன்னவையுரைசெயமறையவனஞ்சிச்
சிரதலங்கரஞ்சேர்த்திடச்செவித்தொளைசேர்ந்த
உரகமன்னசொல்யானுனக்குரைசெயினுரவோய்
நரகமெய்துவெனாவும்வெந்துகுமெனநவின்றான். (௩௭)

கொணர்கென்மைந்தனைவல்விரைந்தென்றனன்கொடியோன்
உணர்வினெஞ்சினனேவலாற்கடிதினினோடிக்
கணனினெய்தினர்பணியெனத்தாதையைக்கண்டான்
துணையிலான்றனைத்துணையெனவுடையவன்றொழுதான். (௩௮)

---

33. இன்னதின் - இந்நமோநாராயணா என்பதின்.
35. இறை - ஒருசிறிதும்.
38. துணையிலான் - ஒப்பற்ற நாராயணன்.

தொழுதமைந்தனைச்சுடர்மணிமார்பிடைச்சுண்ணம்
எழுதவன்பிறோடிறுகுறத்தழுவிமாடிருத்தி
முழுதுநோக்கிநீவேதியன்கேட்கலன்முனியப்
பழுதுசொன்னசொலென்னதுபகருதியென்றான். (௩௯)

சுருதியாதியிற்றொடங்குறுமெல்லையிற்சொன்ன
ஒருவன்யாவர்க்குநாயகன்றிருப்பெயருணரக்
கருதக்கேட்டிடக்கட்டுரைத்திடர்க்கடல்கடக்க
உரியமற்றிதினல்லதொன்றில்லெனவுரைத்தான். (௪0)

தேவர்செய்கையனங்கனமுறைசெயத்தீயோன்
தாவில்வேதியன்றக்கதேயுரையெனத்தகுவன்
ஆவ்தாகுகவன்றெனினறிகுவமென்றே
ஏவதவ்வுரையம்புதியியபுதியென்றான். (௪௧)

காமம்யாவையுந்தருவதும்பதங்கடந்தாற்
சேமவீடுறச்செய்வதுஞ்செந்தழன்முகந்த
ஓமவேள்வியினுறுபதமுப்பதுமொருவன்
நாமமன்னதுகேணமோநாராயணாய. (௪௨)

மண்ணினின்றுமேன்மலரயனுலகுறவாழும்
எண்ணில்பூதங்கணிற்பனதிரிவனவிவற்றின்
உண்ணிறைந்துறைகாரணத்தினூங்குளவுணர்வின்
எண்ணுகின்றதிவ்வெட்டெழுத்தேபிறிதில்லை. (௪௩)

முக்கட்டேவனுநான்முகத்தொருவனுமுதலாம்
மக்கட்காறுமிம்மந்திரமறந்தவர்மறந்தார்
புக்குக்காட்டுவதரிதிதுபொதுவுறக்காண்பார்
ஒக்கநோக்கினரல்லவரதனிலைபுணரார். (௪௪)

தோற்றமென்னுமத்தொல்வினைத்தொடுகடற்சுழிநின்
றேற்றுநன்கலனருங்கலன்யாவர்க்குமினிய
மாற்றமங்கலமாதவவேதத்தின்வரம்பின்
தேற்றமெய்ப்பொருடெரிந்தமற்றிதனிலைசிறந்த. (௪௫)

உன்னுயிர்க்குமென்னுயிர்க்குமிவ்வுலகத்தினுள்ள
மன்னுயிர்க்குமீதுறுதியென்றுணர்வுறமதித்துச்

---

42. காமம் - சேதனரின் இச்சை.

சொன்னவிப்பெயரென்றனனறிஞரிற்றூயான்
மின்னுயிர்க்கும்வேலிரணியன்றழலெழவிழித்தான். (௪௬)

அற்றைநாண்முதல்யானுளநாள்வரையப்பேர்
சொற்றவாயையுங்கருதியமனத்தையுஞ்சுடுமென்
ஒற்றையாணைமற்றியாருனக்கிப்பெயருரைத்தார்
கற்றதாரொடுசொல்லுதிவிரைந்தெனக்கனன்றான். (௪௭)

முனிவர்வானவர்முதலினர்மூன்றுலகத்தும்
இனையருள்ளவர்யாவருமென்னிருகழலே
நினைவதேதத்துவமெதன்பெயர்நினக்கிதுநேர
அனையரஞ்சுவர்மைந்தநீயாரிடையறிந்தாய். (௪௮)

மறங்கொள்வெஞ்செருமலைகுவான்பன்முறைவந்தான்
கறங்குவெஞ்சிறைக்கலுழன்றன்கடுமையிற்கரந்தான்
பிறங்குதெண்டிரைப்பெருங்கடல்புக்கினம்பெயரா
துறங்குவான்பெயருறுதியென்றாருனக்குரைத்தார். (௪௯)

பரவைநுண்மணலெண்ணினுமெண்ணரும்பரப்பின்
குரவர்நங்குலத்துள்ளவரவன்கொலக்குறைந்தார்
அரவினாமத்தையெலியிருந்தோதினாலதற்கு
விரவுநன்மையென்றுன்மதிவிளம்பெனவெகுண்டான். (௫௦)

வயிற்றினுள்ளுலகேழினோடேழையும்வைக்கும்
அயிர்ப்பிலாற்றலென்னாசனையேனமொன்றாகி
எயிற்றினாலெறிந்தின்னுயிருண்டவஅமரம்
பயிற்றவோநினைப்பயந்ததுநானெனப்பகர்ந்தான். (௫௧)

ஒருவன்யாவர்க்குமெவற்றிற்குமுலகிற்குமுதல்வன்
தருதல்காத்தவைதவிர்த்தலென்றிவைசெயத்தக்கோன்
கருமத்தாலன்றிக்காரணத்தாலுள்ளகாட்சி
திருவிலீமற்றிதெம்மறைப்பொருளெனத்தெரிந்தாய். (௫௨)

ஆதியந்தங்களிதனின்மற்றில்லைபேருலகின்
வேதமெங்ஙனமங்ஙனமவைசொன்னவிதியால்
கோதினல்வினைசெய்தவருயர்குவர்குறித்துத்
தீதுசெய்தவர்தாழ்குவரிதுமெய்ம்மைதெரியின். (௫௩)

செய்தமாதவமுடைமையினரியயன்சிவனென்
றெய்தினார்பதமிழந்தனர்யான்றவமியற்றிப்

---

50. துன்மதி - துன்மதியே.

பொய்யிறைபகம்பூண்டவினினியிதுபுரிதல்
நொய்யதாகுமென்றுருமென்காவலினுழைவார். (ருச)

வேள்வியாகியபுண்ணியர்தவத்தொடும்விலக்கிக்
கேள்வியாவையுந்தவிர்த்தனெனிவைகிளர்பகைபைத்
தாழ்வியாதனசெய்யுமென்றனையவர்தம்பால்
வாழ்வியாதயவெவ்வழிப்புறங்கொண்டுவாழ்வார். (ருரு)

பேதைப்பிள்ளைநீபிழைத்ததுபொறுத்தனென்பெயர்த்தும்
ஏதில்வார்த்தைகளினையனவிளம்பலைமுனிவன்
யாதுசொல்லினனவையவையிதமெனவெண்ணி
ஓதிபோதியென்றுரைத்தனனுலகெலாமுயர்ந்தோன். (ருசு)

வேறு.

உரையுளதுணர்த்துவதுணர்ந்துகோடியேல்
விரையுளவலங்கலாய்வேதவேள்வியின்
கரையுளதியாவருங்கற்குங்கல்வியின்
பிரையுளதென்பதுமைந்தன்பேசினான். (ருஎ)

வித்தின்றிவிளைவதொன்றில்லைவேந்தநின்
பித்தின்றியுணர்தியேலளவைப்பெய்தனன்
உய்த்தொன்றுமொழிவின்றியுணர்தற்பாற்றெனக்
கைத்தொன்றுநெல்லியின்கனியிற்காண்டியால். (ருஅ)

தன்னுளேயுலகங்களெவையுந்தந்தவை
தன்னுளேநின்றுதானவற்றுட்டங்குவான்
பின்னிலன்முன்னிலனொருவன்பேர்கிலன்
தொன்னிலையொருவராற்றுணியற்பாலனோ. (ருகூ)

சித்தெனவருமறைச்சிரத்திற்றேறிய
தத்துவமவனதுதம்மைத்தாமுணர்
வித்தகரறிகுவர்வேறுவேறுணர்
பித்தருமுளர்சிலர்வீடுபெற்றிலார். (கூ0)

அளவையானளப்பரிதறிவினப்புறத்
துளவையாயுபநிடதங்களோதுவ
கிளவியாற்பொருள்களாற்கிளக்குறுதவன்
களவையாரறிகுவார்மெய்ம்மைகண்டிலார். (கூக)

---

56. ஓதி - ஓதுதி. போதி மோவாயாக.
58. கய்த்து - கையினிடத்து.
61. அளவையான் - காண்டல்கருதலர்திய காட்சி அளவைகளால்.

மூவகையுலகுமாய்க்குணங்கண்மூன்றுமாய்
யாவையுமெவையுமாயெண்ணில்வேறுபட்
டோவலிலொருநிலையொருவன்செய்வினை
தேவருமுனிவருமுணரத்தேயுமோ. (கஉ)

சாங்கியம்யோகமென்றிரண்டுதன்மைய
வீங்கியபொருளெலாம்வேறுகாண்பன
ஆங்கவையுணர்ந்தவர்க்கன்றியன்னவன்
ஓங்கியமேனிலையுணரற்பாலதோ. (கங)

கருமமுங்கருமத்தின்பயனுங்கண்ணிய
தருமுதற்றலைவனுந்தானுந்தானவன்
அருமையும்பெருமையுமறிவரேலவர்
இருமையென்றுரைசெயுங்கடலின்றேறுவார். (கச)

மந்திரமாதவமென்னுமாலைய
தந்துறுபயனிவைமுறையிற்சாற்றிய
நந்தலில்தெய்வமாய்நல்குநான்மறை
அந்தமில்வேள்விமாட்டவிசுமாமவன். (கரு)

முற்பயப்பயன்றருமுன்னினின்றவர்
பிற்பயப்பயன்றரும்பின்புபோலவன்
தற்பயன்றன்னெறிதருமில்லையஃ
தற்புதமாயையாலறிகிலார்பலர். (கசு)

ஒருவினையொருபயனன்றியுய்க்குமோ
இருவினையென்பவையியற்றியிட்டவை
கருதினகருதினகாட்டுகின்றன
தருபரனருளினிற்சான்றுவேண்டுமோ. (கஎ)

ஓராவுதிகடைமுறைவேள்வியோம்புவோர்
அராவணையமலனுக்களிப்பராலது
சராசரமனைத்தினுஞ்சாருமென்பது
பராவருமறைப்பொருள்பயனுமன்னதால். (கஅ)

பகுதியினுட்பயன்பயந்ததன்னதின்
மிகுதியின்மிகுதிகளெவையுமேலவர்

---

62. தேயுமோ - குறைவுறுமோ.
63. சாங்கியம் - கபிலமதம், யோகம் - பதஞ்சலிமதம்.

வருதியின்வசத்தனவரவுபோக்கது
புகுதியில்லாதவர்புலத்திற்றுகுமோ. (கூகூ)

எழுத்தியனுளத்தினெண்ணலாவகை
முழுத்தனிநான்முகன்முதலமற்றுயிர்
வழித்தரும்பொருட்டதோர்புரையின்வைகுமால்
விழுத்தனிப்பல்லிதழ்விரையிலாமுகிழ். (எ0)

கண்ணினுங்கரந்துளன்கண்டுகாட்டுவான்
உண்ணிறைந்திடுமுணர்வாகியுண்மையால்
மண்ணினும்வானினுமற்றைமூன்றினும்
எண்ணினுநெடியவனொருவனெண்ணிலான். (எக)

சிந்தையிற்செய்கையிற்சொல்லிற்சேர்ந்துளன்
இந்தியந்தொறுமுளனுற்றதெண்ணினன்
முந்தையோரெழுத்தெனவந்துமும்முறைச்
சந்தியும்பதமுமாய்த்தழைத்ததன்மையான். (எஉ)

காமமும்வெகுளியுமுதலகண்ணிய
தீமையும்வன்மையுந்தீர்க்குஞ்செய்கையான்
நாமமுமவன்பிறநவிகொடாநெடுஞ்
சேமமும்பிறர்களாற்செப்பற்பாலவோ. (எந)

காலமுங்கருவியுமிடனுமாய்க்கடைப்
பாலமைபயனுமாய்ப்பயன்றுய்ப்பானுமாய்ச்
சீலமுமவைதருந்திருவுமாயுளன்
ஆலமும்வித்துமொத்தடங்குமான்மையான். (எச)

உள்ளுறவுணர்வினிதுணர்ந்தவோசையோர்
தெள்விளியாழிடைத்தெரியுஞ்செய்கையான்
உள்ளுளன்புறத்துளனென்றுநண்ணலான்
தள்ளருமறைகளுமருளுந்தன்மையான். (எரு)

ஓமெனுமோரெழுத்ததனினுள்ளுயிர்
ஆமவனறிவினுக்கறிவுமாயினன்
தாமமூவுலகமுந்தழுவிச்சார்தலால்
தூமமுங்கனலும்போற்றொடர்ந்ததோற்றத்தான். (எசு)

---

75. மருளுந்தன்மையான் - தன்னிலையுணராது மயங்கத்தக்கதகுதியினை யுடையான்.

76. தூமம் - புகை.

காலையினறுமலரோன்றக்கட்டிய
மாலையின்மலர்புரைசமயவாதியர்
சூலையின்றிருக்கலாறசொல்லுவோர்க்கெலாம்
வேலையுந்திரையும்போல்வேறுபாடிலான். (௭௭)

இன்னதோர்தன்மையனிகழ்வுற்றெய்திய
நன்னெடுஞ்செல்வமுநாளுநாமற
மன்னுயிரிழத்தியென்றிறைஞ்சிவாழ்த்தினேன்
சொன்னவனாமமென்றுணரச்சொல்லினான். (௭௮)

வேறு.

எதிரினின்றவனிவைபுரைத்திடுதலுமெவ்வுலகமும்மஞ்ச
முதிரும்வெங்கதமொழிகொடுமூண்டதுமுதுகடற்கடுவேய்ப்பக்
கதிரும்வானமுஞ்சுழன்றனநெடுநிலங்கம்பித்தகனகன்கண்
உதிரங்கான்றனதோன்றினபுகைக்கொடியுமிழ்ந்ததுகொடுந்தீயே.()

வேறுமென்னொடுதரும்பகைபிறிதினிவேண்டலென்வினையத்தால்
ஊறியென்னுளேயுதித்ததுகுறிப்பினியுணர்குவதுளதன்றால்
ஈறிலென்பெரும்பகைஞனுக்கன்புசாலடியென்யானென்கின்றான்
கோறிரென்றனனென்றலும்பற்றினர்கூற்றினுங்கொலைவல்லார். ()

குன்றுபோன்மணிவாயிலின்பெரும்புறத்துய்த்தனர்மழுக்கூர்வாள்
ஒன்றுபோல்வனவாயிரமீதெடுத்தோச்சினருயிரோடும்
தின்றுதீர்குதுமென்குநருருமெனத்தெழித்தனர்சினவேழக்
கன்றுபுல்லியகோளரிக்குழுவெனக்கனல்கின்றதறுகண்ணார். (௮௧)

தாயின்மன்னுயிர்க்கன்பினன்றன்னையத்தவமெனுந்தகவில்லோர்
ஏயெனுந்துணைமாத்திரத்தெய்தனவெறிந்தனவெறிதோறும்
தூயவன்றனைத்துணையெனவுடையவவ்வொருவனைத்துன்னாதார்
வாயின்வைதனவொத்தனவத்துணைமழுவொடுகொலைவாளும். ()

எறிந்தவெய்தனவெற்றினகுத்தினவீர்த்தனபடையாவும்
முறிந்தநுண்பொடியாயினமுடிந்தனமுனிவிலான்முழுமேனி
சொறிந்ததன்மையுஞ்செய்திலவாயினதூயவன்றுணிவொன்று
அறிந்தநாயகன்சேவடிமறந்திலனயர்த்திலனவனாமம். (௮௩)

உள்ளவான்பெரும்படைக்கலம்யாவையுமுக்கனவுரவோய்நின் [னக்
பிள்ளைமேனிக்கோராணிவந்திலதினிச்செயலென்கொல்பிறிதென்

80. கோறிர் - கொல்லுதிர்.
82. அத்துணை - அவ்வளவு.

கள்ளவுள்ளத் தன்கட்டினன் கருவிகள்கதுமெனக்கனல்பொத்தித்
தள்ளுமின்னெனவுரைத்தனன்வயவருமத்தொழிற்றலைநின்ருர். ()

குழியிலிந்தனமடுக்கினர்குன்றெனக்குடங்தொறுங்கொணர்ந்தெண்ணெய்
இழுதுநெய்சொரிந்திட்டனர்நெருப்பெழுந்திட்டதுவிசும்பெட்ட
அழுதுநின்றவரயர்வுறவையனைப்பெய்தனரரீயென்று
தொழுதுநின்றனனயகன்றுளிணைகுளிர்ந்தது சுடுதீயே. (அரு)

காலவெங்கனல்கதுவியகாலையிற்கற்புடையவள்சொற்ற
சீலநல்லுரைசீதமிக்கடுத்தலிற்கிழியொடுநெய்தீற்றி
ஆலமன்னவர்கரங்களால்வயங்கெரிமடுத்தலிலனுமன்றன்
கூலமாமெனவென்புறக்குளிர்ந்ததக்குருமணித்திருமேனி. (அசு)

சுட்டதில்லைநின்றேன்றலைச்சுடர்க்கனல்சுழிபடரழுவத்துள்
இட்டபோதினுமென்னினிச்செயத்தக்கதென்றனரிகல்வெய்யோர்
கட்டித்தீயையுங்கடுஞ்சிறையிடுமினக்கள்வனைக்கவர்ந்துண்ண
எட்டுப்பாம்பையும்விடுமின்களென்றனனெரியெழுதறுகண்ணன். ()

அனந்தனேமுதலாகியநாகங்களாறுமொன்கொலெனவன்னன்
நினைந்தமாத்திரத்தெய்தினநொய்தினிநெருப்புகுபகுவாயால்
வனைந்ததாமன்னமேனியினன்றன்மேல்வாளெயிறுறவூன்றிச்
சினந்தமீக்கொளக்கடித்தனதுடித்திலன்றிருப்பெயர்மறவாதான்.

பக்கநின்றவைபயத்தினிற்புயற்கறைப்பசும்புனல்பகுவாயில்
கக்கவெஞ்சிறைக்கலுழனுநடுக்குறக்கவ்வியகாலத்துள்
செக்கர்மேகத்துச்சிறுபிறைநுழைந்தனசெய்கையவலிசிந்தி
உக்கபற்குலமொழுகினவெயிற்றிரும்புரைதொறுமமிழ்தூறி. ()

வேறு.

சூழப்பற்றினசுற்றுமெயிற்றின்
போழக்கிற்றிலவென்றுபுகன்றார்
வாழத்திக்கின்மயக்கின்மதந்தாழ்
வேழத்துக்கிடுமின்னெனவிட்டான். (கூ௦)

பழையிற்றங்கலில்சிந்தையர்பல்லோர்
திசையிற்சென்றனர்செப்பினனென்னும்
இசையிற்றந்தனனிந்திரனென்பான்
விசையிற்றிண்பணைவெஞ்சினவேழம். (கூக)

86. கூலம் - வால்.
89. புரைதொறும் - துவாரந்தோறும்.
91. பசையில்தங்கலில் - இரக்கமற்ற.

கையிற்கால்களின்மார்புகழுத்தில்
தெய்வப்பாசமுறப்பிணிசெய்தார்
மையற்காய்கரிமுன்னுறவைத்தார்
பொய்யற்றானுமிதொன்றுபுகன்றான். (௯௨)

எந்தாய்பண்டொரிடங்கர்விழுங்க
முந்தாய்நின்றமுதற்பொருளேயென்
றந்தாய்தந்தையினத்தவனோத
வந்தானென்றன்மனத்தினனென்றான். (௯௩)

என்னுமுன்னமிருங்களிறுந்தன்
பொன்னுரோடைபொருந்தநிலத்தின்
அன்னனைத்தொழுதஞ்சியகன்ற
தொன்னாரத்திறமெய்தியுரைத்தார். (௯௪)

வல்வீரைத்துயில்வானைமதித்தென்
நல்வீரத்தையழித்ததுநண்ணுற்
றால்வீரொற்றையுரக்கரிதன்னைக்
கொல்வீரென்றனநெஞ்சுகொதிப்பான். (௯௫)

தன்னைக்கொல்லுநர்சாருதலோடும்
பொன்னைக்கொல்லுமொளிப்புகழ்பொய்யா
மன்னைக்கொல்லியவநததுவாரா
மின்னைக்கொல்லும்வெயிற்றிணையிற்றால். (௯௬)

வீரத்திண்டிறன்மார்பினில்வெண்கோ
டாரக்குத்தியழுத்திடநாகம்
வாரத்தண்குலைவாழைமடற்சூழ்
ஈரத்தண்டெனவிற்றனவெல்லாம். (௯௭)

வெண்கோடிற்றனமெய்யிலர்செய்யும்
கண்கோடற்பொறியிற்கடிதேகி
எண்கோடற்கரிதென்னவெகுண்டான்
திண்கோடைக்கதிரிற்றெறுகண்ணான். (௯௮)

தள்ளத்தக்கில்பெருஞ்சயிலத்தோ
டெள்ளக்கட்டியெடுத்துவிசித்துக்
கள்ளத்திங்கிவனைக்கரைகாணு
வெள்ளத்துய்த்திடுவீரெனவிட்டான். (௯௯)

---

95. வலவீரை - பெரியசமுத்திரம்.

ஓட்டிக்கொல்லவுணர்ந்துவெகுண்டான்
விட்டிட்டானலனென்றுவிரைந்தார்
கட்டிக்கல்லொடுகால்விசையிற்போய்
இட்டிட்டார்கடலின்னடுவெந்தாய். (௧00)

நடுவொக்குந்தனிநாயகனும்மம்
விடுகிற்கின்றிலனுகலின்வேலை
மடுவொத்தங்கதின்வங்கமுமன்றாய்க்
குடுபத்தன்மையதாயதுகுன்றம். (௧0௧)

மோதுற்றார்திரைவேலையின்மூழ்கான்
மீதுற்றார்சிலைமீதுகிடந்தான்
ஆதிப்பண்ணவனுயிரநாமம்
ஓதுற்றான்மறையொல்லையுணர்ந்தான். (௧0௨)

தலையிற்கொண்டதடக்கையினன்றன்
நிலையிற்றீர்வின்மனத்தினினைந்தான்
சிலையிற்றிண்புனலிற்சினையாலின்
இலையிற்பிள்ளையெனப்பொலிகின்றான். (௧0௩)

வேறு.

அடியாரடியேனெனுமார்வமலால்
ஒடியாவலியானுடையேனுளனோ
கொடியாய்குறியாய்குணமேதுமிலாய்
நெடியாயடியேனிலைநேர்குதியோ. (௧0௪)

கள்ளந்திரிவாரவர்கைதவநீ
உள்ளந்தெரியாதவுனக்குளவோ
துள்ளும்பொறியின்னிலைசோதனைதான்
வெள்ளந்தருமின்னமுதேவிதியோ. (௧0௫)

வருநான்முகனைம்முகன்வானவர்கோன்
திருநான்மறையின்னெறியேதிரிவார்
பெருநாடெரிகின்றலர்பேதைமையேன்
ஒருநாளுனையெங்ஙனமுள்ளுவனே. (௧0௬)

செய்யாதனவோவிலைதீவினைதான்
பொய்யாதனவந்துபுணர்ந்திடுமால்
மெய்யேயுயிர்தீர்வதொர்மேல்வினைநீ
ஐயாவொருநாளுமயர்த்தனையோ. (௧0௭)

---

101. உடுபத்தன்மையதாயது - ஓடத்தின்றன்மையால் மிதந்துநின்றது.

ஆயப்பெறு நன்னெறி தம்மறிவென்
றேயப்பெருமீசர்களெண்ணிலரால்
நீயப்புறநிற்கநினைக்கிலர்நின்
மாயப்பொறிபுக்குமயங்குவரால். (௧௦௮)

தாமேதனிநாயகராயெவையும்
போமேபொருளென்றபுராதனர்தாம்
யாமேபரமென்றனரென்றவவர்க்
காமேபிறர்நின்னலதாருளரே. (௧௦௯)

ஆதிப்பரமாமெனிலன்றெனலாம்
ஓதப்பெருநூல்களுலப்பிலவால்
பேதிப்பனநீயவைபேர்கிலையால்
வேதப்பொருளேவிளையாடுதியோ. (௧௧௦)

அம்போருகனாரனுரறியார்
எம்போலியரெண்ணிடினென்பலவாங்
கொம்போடடைபூக்கனிகாயெனினும்
வம்போமரமொன்றெனும்வாசகமே. (௧௧௧)

நின்னிற்பிறிதாய்நிலையிற்றிரியா
தன்னிற்பிறிவாயினதானறமும்
உன்னிற்பிறிதாயினவோவுலகம்
பொன்னிற்பிறிதாகியபொற்கலனே. (௧௧௨)

தாய்தந்தையெனுந்தகைவந்தனைதான்
நீதந்தனைநீயுறுநெஞ்சினனுன்
நோய்தந்தவனேநுவறீர்வுமெனு
வாய்தந்தனசொல்லிவணங்கினனால். (௧௧௩)

அத்தன்மையறிந்தவருந்திறலோன்
உய்த்துய்ம்மினெனன்முன்னெனவுய்த்தனரால்
பித்துண்டதுபேர்வுறுமாபெறுதும்
கைத்துங்கடுநஞ்சினெனக்கனலா. (௧௧௪)

இட்டார்கடுவல்விடமெண்ணுடையான
தொட்டானுகரத்தொகைவன்கசையிற்

109. ஆம் - ஆகுமா.
112. ஆகிய - வினை.

கட்டார்கடுமத்திகைகண்கொடியோன்
விட்டானவன்மேலவர்வீசினரால். (கக௫)

வெய்யார்முடிவில்லவர்வீசியபோ
துய்யானெனும்வேலையினுள்ளுறைவோன்
கையாயிரமல்லகணக்கிலவென்
றெய்யாவுலகியாவையுமெண்ணினயால். (கக௬)

ஊனோடுயிர்வேறுபடாவுபயம்
தானேயுடையன்றனிமாயையினால்
யானேயுயிருண்பலெனக்கணலா
வானேமுநடுங்கிடவந்தனனால். (கக௭)

வந்தானைவணங்கியென்மன்னுயிர்தான்
எந்தாய்கொளவெண்ணினையேலிது தான்
உந்தாரியதன்றுலகியாவுமுடன்
தந்தார்கொளநின்றது தானெனலும். (ககஅ)

## வேறு.

ஏவரேயுலகந்தந்தாரென்பெயரேத்திவாழும்
மூவரேயல்லராகின்முனிவரேமுழுதுந்தோற்ற
தேவரேபிறரேயாரேசெப்புதிதெரியவென்றான்
கோவமூண்டெழுந்துங்கொல்லான்காட்டுமேற்காட்சிகொள்வான். ()

உலகுதந்தானும்பல்வேறுயிர்கடந்தானுமுள்ளுற்
றலைவிலாவுயிர்கடோறுமங்கங்கேயுறைகின்றானும்
மலரினில்வெறியுமெள்ளிலெண்ணெயுமற்றுங்கேளாய்
அலகிறால்புகழும்பற்றிமுற்றியவரிகாணத்தா. (கஉ0)

எண்கணானோக்கிக்காண்டற்கெங்கணுமுளன்காணெந்தை
உன்கணானன்பிற்சோறலுறுகோளென்றுணரகில்லாய்
நின்கணானோக்கிக்காண்டற்கெளியனோநினக்குப்பின்னோன்
பொன்கணானவியுண்டபுண்டரீகக்கணம்மான். (கஉக)

மூன்றவன்குணங்கள்செய்கைமூன்றவனுருவமூன்று
மூன்றுகண்சுடர்கள்சோதிமூன்றுதன்னுலகமூன்று
தோன்றலுமிடையுமீறுந்தொடங்கியபொருள்கட்கெல்லாம்
சான்றவனிதுவேவேதமுடிவதுசரதமென்றான். (கஉஉ)

---

118. உந்தாரியதன்று - நம்வழிப்பட்டதனறு.

121. காண் - முன்னிலையசை.

என்றலுமவுணர்வேந்தனெயிற்றரும்பிலங்கநக்கான்
ஒன்றலில்பொருட்கட்கெல்லாமொருவன்புக்குறைவனென்றாய்
நன்றதுகண்டுபின்னர்நல்லவாபுரிதுந்தூணில்
நின்றுளனென்னிற்கள்வனிரப்புதிநிலைமையென்றான். (௧௨௩)

சாணினுமுளனோர்தன்மையணுவினைச்சதகூறிட்ட
கோணினுமுளன்மாமேருக்குன்றினுமுளனிந்நின்ற
தூணினுமுளன்முன்சொன்னசொல்லினுமுளனித்தன்மை
காணுதிவிரைவினென்றானன்றெனக்கனகன்சொன்னான். (௧௨௪)

உம்பர்க்குமுனக்குமொத்திவ்வுலகெங்கும்பரந்துளானைக்
கம்பத்தின்வழியேகாணக்காட்டுதிகாட்டிடாயேல்
கும்பத்தின்கரியைக்கோண்மாக்கொன்றெனநின்னைக்கொன்றுன்
செம்பொத்தகுருதிதேக்கியுடலையுந்தின்பெனென்றான். (௧௨௫)

என்னுயிர்நின்னாற்கோறற்கெளியதொன்றன்றியான்முன்
சொன்னவன்றொட்டதொட்டவிடந்தொறுந்தோன்றானாயின்
என்னுயிர்யானேமாய்ப்பல்பின்னும்வாழ்வுகப்பலென்னின்
அன்னவற்கடியேனல்லேனென்றனனறிவின்மிக்கான். (௧௨௬)

நசைபிறந்திலங்கப்பொங்கிநன்றுநன்றென்னநக்கு
விசைபிறந்துருமுவீழ்ந்ததென்னவோர்தூணின்வென்றி
இசைதிறந்தமர்ந்தகையாலெற்றினனெற்றலோடும்
திசைதிறந்தண்டங்கீறிச்சிரித்ததுசெங்கட்சீயம். (௧௨௭)

நாடிநான்றருவெனென்றநல்லறிவாளனாளும்
தேடிநான்முகனுங்காணாச்சேயவன்சிரித்தலோடும்
ஆடினானழுதான்பாடியாற்றினான்சிரத்திற்செங்கை
சூடினான்றொழுதானோடியுலகெலாந்துகைத்தான்றுள்ளி. (௧௨௮)

ஆரடாசிரித்தாய்சொன்னவரிகொலோவஞ்சிப்புக்க
நீரடாபோதாதென்றுநெடுநதறிநேடினாயோ
போரடாபொருதியாயிற்புறப்படுபுறப்படென்றான்
பேரடாநின்றதாளோடுலகெலாம்பெயரப்போவான். (௧௨௯)

பிளந்ததுதூணுமாங்கேபிறந்ததுசீயம்பின்னை
வளர்ந்ததுதிசைகளெட்டும்பகிரண்டமுதலமற்றும்
அளந்ததப்புறத்துச்செய்கையாரறிந்தறையகிற்பார்
கிளர்ந்ததுககனமுட்டைகிழிந்ததுகீழுமேலும். (௧௩௦)

---

125. கோண்மா - சிங்கம்.
128. துகைத்தான் - மிதித்தான். 130. ககனமுட்டை - அண்டமுகடு.

மன்றலந்துளபமாலைமானுடமடங்கல்வானில்
சென்றதுதெரிதறேற்றுஞ்சேவடிபடியிற்றீண்டி
நின்றதோர்பொழுதினண்டநெடுமுகட்டிருந்தமுன்னோன்
அன்றவனுந்திவந்தானுமெனத்தோன்றினானால். (௧௩௧)

எத்துணைபோதுங்கையென்றியம்பினாலெண்ணற்கேற்ற
வித்தகருளரேயந்தத்தானவர்விரிந்தசேனை
பத்துநூறமைந்தகோடிவெள்ளத்தாற்பகுதிசெய்த
அத்தனைகடலுமாளத்தனித்தனியள்ளிக்கொண்ட. (௧௩௨)

ஆயிரங்கோடிவெள்ளத்தயிலெயிற்றவுணர்க்கங்கண்
கேயினவொருவர்க்கோரோர்திருமுகமிரட்டிப்பொற்றோள்
தீயெனக்கனலுஞ்செங்கண்சிரந்தொறுமூன்றுந்தெய்வ
வாயினிற்கடல்களேழுமலைகளுமற்றுமுற்றும். (௧௩௩)

முடங்குவாருளையவண்டமுழுவதுமுடிவினுண்ணும்
கடங்கொள்வெங்காலச்செந்தீயதனைவந்தழிக்குங்கால
மடங்கலினுயிர்ப்புமற்றக்காற்றினைமாற்றுமானால்
அடங்கலும்பகுவாயாக்கையப்புறத்தகத்ததம்மா. (௧௩௪)

குயிற்றியவண்டங்குஞ்சையிட்டிலாமுட்டைமுட்டப்
பயிற்றியபருவமொத்தகாலத்துளமுதுபல்கும்
எயிற்றுவன்பகுவாயுள்புக்கிருக்குநரிருக்கையெய்தி
வயிற்றின்வந்தந்நாளிந்நாள்வாழுமன்னுயிர்கண்மன்றே. (௧௩௫)

நன்மையிற்றொடர்ந்தார்க்குண்டோகேடுநான்முகத்தோனாதி
தொன்மையிற்றொடர்ந்தவாய்மையறத்தொடுந்தொடர்ந்திலோரை
அன்வயித்தோருந்தீயவவுணரல்லாரையந்நாள்
தன்வயிற்றகத்துவைத்துத்தந்ததச்சியந்தாயின். (௧௩௬)

பேருடையவுணர்தம்மைப்பிறையெயிற்றடக்கும்போராப்
பாரிடைத்தேய்க்குமீளப்பகிரண்டத்தடிக்கும்பற்றி
மேருவிற்புடைக்குமாளவிரல்களிற்பிசையும்வேலை
நீரிடைக்குமிழியூட்டுநெருப்பிடைச்சுரிக்கநீட்டும். (௧௩௭)

வகிர்ப்படுத்துரக்கும்பற்றிவாய்களைப்பிளக்கும்வன்றோல்
துகிற்படுத்துரிக்குஞ்செந்தீக்கண்களைச்சூலுஞ்சுற்றிப்

---

135. குயிற்றிய - தான்செய்த. அண்டம் - அண்டமாகிய. குஞ்சையிட்டிலா முட்டை - குஞ்சுபொரிக்காதமுட்டை.

136. நான்முகத்தோனாதி - பிரமன்முதலாக. தொன்மையிற்றொடர்ந்து வந்த - புராதனமாக ஒட்டிவந்த.

பகிர்ப்படக்குடரைக்கொய்யும்பசையறப்பிசையும்பல்கால்
உகிர்ப்புரைபுக்கோர்தம்மையுகிர்களாலுறக்குமூன்றி. (௧௩௮)

யானையுந்தேருமாவும்யாவையுமுயிரிராமை
ஊனொடுந்தின்னும்பின்னையொலிதிரைப்பரவையேழும்
மீனொடுங்குடிக்குமேகத்துருமொடும்விழுங்கும்விண்ணில்
தானொடுங்காதென்றஞ்சித்தருமமுஞ்சலித்ததம்மா. (௧௩௯)

ஆழிமால்வரையோடெற்றுஞ்சிலவரையண்டகோளச்
சூழிருஞ்சுவரிற்றேய்க்குஞ்சிலவரைத்துளக்கில்குன்றம்
ஏழினோடெற்றிக்கொல்லுஞ்சிலவரையெட்டுத்திக்கும்
தாழிருட்பிழம்பிற்றேய்க்குஞ்சிலவரைத்தடக்கைதாக்கி. (௧௪௦)

மலைகளிற்புரண்டுவீழவள்ளுகிர்நுதியால்வாங்கித்
தலைகளைக்கிள்ளுமள்ளித்தழலெழப்பிசையுந்தக்க
கொலைகளிற்கொல்லும்வாங்கியுயிர்களைக்குடிக்கும்வான
நிலைகளிற்பரக்கவேலைநீர்களைநிரம்பத்தூர்க்கும். (௧௪௧)

முப்புறத்துலகத்துள்ளுமொழிவறமுற்றும்பற்றித்
தப்புதலின்றிக்கொன்றுதையலார்கருவுந்தள்ளி
இப்புறத்தண்டத்தியாருமவுணரில்லாமையெற்றி
அப்புறத்தண்டந்தோறுந்தடவினசிலகையம்மா. (௧௪௨)

கனகனுமவனில்வந்தவானவர்களைகளுன
அனகனுமொழியப்பல்வேறவுணரானவரையெல்லாம்
நினைவதன்முன்னங்கொன்றுநின்றதந்நெடுங்கட்சீயம்
வனைகழல்லவனுமற்றமடங்கலின்வரவுநோக்கி. (௧௪௩)

வயிரவாளுறையின்வாங்கிவானகமறைக்கும்வட்டச்
செயிரறுகிடுகும்பற்றிவானவருள்ளந்தீய
அயிர்படர்வேலையேழுமலைகளுமஞ்சவார்த்தங்
குயிருடைமேருவென்னவாய்மடித்துருத்துநின்றான். (௧௪௪)

நின்றவன்றன்னைநோக்கிநிலையிதுகண்டுநீயும்
ஒன்றுமுன்னுள்ளத்தியாதுமுணர்ந்திலைபோலுமன்றே
வன்றொழிலாழிவேந்தவணங்குதிவணங்கவேயுன்
புன்றொழில்பொறுக்குமென்றானுலகெலாம்புகழநின்றான். (௧௪௫)

---

141. வாங்கி - எடுத்து.
143. அவனில்வந்த - அவனிடத்துமகனாகவந்த.
145. புகழ நின்றான் - பிரகலாதாழ்வான்.

கேளிதுநீயுங்காணக்கிளர்ந்தகோளரியின்கேழில்
தோளொடுதாளுநீக்கிநின்னையுந்துணித்துப்பின்னென்
வாளினைத்தொழுவதல்லால்வணங்குதன்மகளீருடல்
நாளினுமுளதோவென்றுவண்டடங்கணடுங்கநக்கான். (கசகூ)

நகைசெயாவாயுங்கையும்வாளொடுநடந்ததாளும்
புகைசெயாநெடுந்தீப்பொங்கவுருத்தெதிர்பொருந்தப்புக்கான்
தொகைசெய்வார்க் கரியதோளாற்றுள்களாற்சுற்றிச்சூழ்ந்தான்
மிகைசெய்வார்வினைகட்கெல்லாமேற்செயும்வினையம்வல்லான். ()

இருவரும்பொருந்தப்பற்றியெவ்வுலகுக்குமேலாய்
ஒருவருங்காணவண்ணமுயர்ந்ததற்குவமைவேண்டின்
வெருவருதோற்றத்தஞ்சாவெஞ்சினவவுணன்மேரு
அருவரையொத்தானண்ணலல்லவையெல்லாமொத்தான். (கசஅ)

ஆர்ப்பொலிமுழக்கின்வெவ்வாய்வள்ளுகிர்ப்பாரமான்ற
ஏற்றருங்கரத்திற்பல்வேறெறிதிரைப்பரப்பினுற்ற
பாற்கடல்பரந்துபொங்கிப்பங்கயத்தொருவனாட்டின்
மேற்சென்றதொத்தான்மாயன்கனகனுமேருவொத்தான். (கசகூ)

வாளொடுதோளுங்கையுமகுடமுமலரோன்வைத்த
நீளிருங்ககனமுட்டைநெடுஞ்சுவர்தேய்ப்பநேமி
கோளொடுந்திரிவதென்னக்குருமணிக்கொடும்பூண்மின்னத்
தாளிணையிரண்டும்பற்றிச்சுழற்றினன்றடக்கையொன்றால். (கருo)

சுழற்றியகாலத்திற்றதூங்குகுண்டலங்கணீங்கிக்
கிழக்கொடுமேற்கிலொன்றி... [illegible] தனகிடந்தவின்றும்
அழற்றருகதிரோன்றோன்றுமுதயத்தோடத்தமான
நிழற்றருங்காலைமாலைநெடுமணிச்சுடரினீத்தம். (கருக)

போன்றனவினையதன்மைபொருவியதினையதென்று
தானறனியொருவன்றன்னையுரைசெயுந்தரத்திறன்றோ
வான்றருவள்ளல்வெள்ளைவள்ளுகிர்வயிரமார்பின்
ஊன்றலுமுதிரவெள்ளம்பரந்துளதுலகமெங்கும். (கருஉ)

ஆயவன்றன்னைமாயனந்தியினவன்பொற்கோயில்
வாயிலின்மணிக்கவான்மேல்வயிரவாளுகிரின்வாயில்

150. நேமி - சக்கரவாளகிரி.

153. கவான்மேல் - தொடைமீது.

மீயெழுகுருதிபொங்கவெயில்விரிவயிரமார்பு
தீயெழப்பிளந்துநீக்கித்தேவர்களிடுக்கண்டீர்த்தான். (௧௫௩)

முக்கணானெண்கணானுமுளரியாயிரக்கணானும்
திக்கணுந்தேவரோடுமுனிவரும்பிறருந்தேடிப்
புக்கநாடறிகுறாமற்றிரிகின்றார்புகுந்துமொய்த்தார்
எக்கணாற்காண்டுமெந்தையுருவமென்றிரங்கிநின்றார். (௧௫௪)

நோக்கினார்நோக்கினார்முன்னோக்குறுமுகமுங்கையும்
யாக்கையுந்தாளுமாகியெங்கணுந்தானேயாகி
வாக்கினான்மனத்தினான்மற்றறிவினாலளக்கவாரா
மேக்குபர்சியந்தன்னைக்கண்டனர்வெருவுகின்றார். (௧௫௫)

பல்லொடுபல்லுக்கெல்லையாயிரக்காதபத்தி
சொல்லியவதனங்கோடிகோடிமேல்விளங்கித்தோன்ற
எல்லையிலுருவிற்றாகியிருந்ததைதெதிரநோக்கி
அல்லியங்கமலத்தண்ணலவன்புகழ்விரிப்பதானான். (௧௫௬)

## வேறு.

தன்னைப்படைத்ததுவுந்தானேயெனுந்தன்மை
பின்னைப்படைத்ததுவேகாட்டும்பெரும்பெருமை
உன்னைப்படைத்தாய்நீயென்றாலுயிர்படைப்பான்
என்னைப்படைத்தாய்நீயெனுமிதுவுமெற்றோமோ. (௧௫௭)

பல்லாயிரகோடியண்டம்பணிக்கடலுள்
நில்லாதமொக்குளெனத்தோன்றுமாணின்னுழையே
எல்லாவுருவமுமாய்நின்றக்காலிவ்வுருவம்
வல்லேபடைத்தால்வரம்பின்மைவாராதோ. (௧௫௮)

பேரையொருபொருட்கேபல்வகையாற்பேர்த்தெண்ணும்
தாரைநிலையைதமியைபிறரில்லை
யாரைப்படைக்கின்றதியாரையளிக்கின்ற
தியாரைத்துடைக்கின்றதையாமறியேமால். (௧௫௯)

நின்னுளேயென்னைநிருமித்தாய்நீயல்லா
தென்னுளேயெப்பொருளும்யாவரையும்யானீன்றேன்
பின்னிலேன்முன்னிலேனெந்தைபெருமானே
பொன்னுளேதோன்றியதோர்பொற்கலனேபோல்கின்றேன். (௧௬௦)

---

160. நீயல்லாது - உன்னையன்றி.

என்றுங்கியம்பியிமையாதவெண்கணனும்
வன்றண்மழுவேவானும்யாரும்வணங்கினரால்
நின்றரிருமருங்குநேமிப்பெருமானும்
ஒன்றுதசீற்றத்தையுள்ளேயொடுக்கினன். (௧௬௧)

எஞ்சுமுலகனைத்துமிப்பொழுதேயென்றென்று
நெஞ்சுநடுங்குநெடுந்தேவரைநோக்கி
அஞ்சன்மினென்னவருள்சுரந்தநோக்கினல்
கஞ்சமலர்பழிக்குங்கையபயங்காட்டினன். (௧௬௨)

பூவிற்றிருவையழகின்புனைகலத்தை
யாவர்க்குஞ்செல்வத்தைவீடென்னுமின்பத்தை
ஆவித்துணையையமுதிற்பிறந்தாளைத்
தேவர்க்குந்தம்மோயையேவினர்பாற்செல்ல. (௧௬௩)

செந்தாமரைப்பொகுட்டிற்செம்மாந்துவீற்றிருக்கும்
நந்தாவிளக்கைநறுந்தாளிளங்கொழுந்தை
முந்தாவுலகுமுயிருமுறைமுறையே
தந்தாளைநோக்கினன்றன்னெப்பொன்றில்லாதான். (௧௬௪)

தீதிலாவாகவுலகின்றடெய்வத்தைக்
காதலானேக்கினன்கண்டமுனிக்கணங்கள்
ஓதினர்சீர்த்திபுபர்ந்தபரஞ்சுடரும்
நோதலாகில்லாதவன்பனையேநோக்கினன். (௧௬௫)

உந்தையையுன்முன்கொன்றுடலைப்பிளந்தளையச்
சிந்தைதளராதறம்பிழையாச்செய்கையாய்
அந்தமிலாவன்பென்மேல்வைத்தாயளியத்தாய்
எந்தையினியிதற்குக்கைம்மாறியாதென்றான். (௧௬௬)

அயிராவிமைப்பினையோராயிரங்கூறிட்ட
செயிரிலொருபொழுதினுந்தையையாஞ்சீறி
உயிர்நேடுவான்போலுடலைபக்கண்டும்
செயிர்சேராவுள்ளத்தாய்க்கென்னினியாஞ்செய்கேம். (௧௬௭)

கொல்லேமினியுன்குலத்தோரைக்குற்றங்கள்
எல்லையிலாதனசெய்தாரேயென்றாலும்

162. எஞ்சும் - அழியும்.
163. மோய் - அன்னை.
167. அயிரா - ஐயந்துநில்லாத.

நல்லேமுனக்கெம்மைநாணுமனுன்செய்வ
தொல்லையுளதேலியம்புதியாலென்றுரைத்தான். (கசுஅ)

முன்புபெறப்பெற்றபேறேமுடிவில்லை
பின்புபெறும்பேறுமுண்டோபெறுகுவெனேல்
என்புபெறுதவிழிபிறவியெய்திடினும்
அன்புபெறுகையரும்பேறெனக்கென்றான். (கசுகூ)

அன்னானைநோக்கியருள்சுரந்தநெஞ்சினனாய்
என்னானைவல்லேனெனமகிழ்ந்தபேரீசன்
முன்னானபூதங்கள்யாவையுமுற்றிடினும்
எந்நாளுமுலவாய்நீஎன்போலுளையென்றான். (கஎ0)

மின்னைத்தொழுவளைத்ததன்னமிளிரொளியாய்
முன்னைத்தொழும்புனக்கேயாமன்றேமூவுலகும்
என்னைத்தொழுதேத்தியெய்தும்பயனெய்தி
உன்னைத்தொழுதேத்தியுய்க்கவுலகெல்லாம். (கஎக)

ஏனவர்க்குவேண்டினெளிதன்றேவெறகன்பர்
ஆனவர்க்கமெல்லாநினக்கன்பராயினார்
தானவர்க்குவேந்தனீயென்னுந்தரத்தாயோ
வானவர்க்குநீயேயிறைதொன்மறைவல்லோய். (கஎஉ)

நல்லறமுமெய்ம்மையுநான்மறையுநல்லருளும்
எல்லையின்ஞானமுமீறிலாவெப்பொருளும்
தொல்லைசாலெண்குணனுநின்சொற்றொழில்செய்ய
வல்லவுருவொளியாய்நாளுவளர்கநீ. (கஎங)

என்றுவரமருளியெவ்வுலகுங்கைகூப்ப
முன்றின்முரசமுழங்கமுடிசூட்டி
நின்றவமரரைவீருநேர்ந்திவனுக்
கொன்றுபெருமையுரிமைபுரிகென்றான். (கஎச)

தேமனுரிமைபுரியத்திசைமுகத்தோன்
ஓமமியற்றவுடையான்முடிசூட்டக்
கோமன்னவனாகிமூவுலகுங்கைக்கொண்டான்
நாமமறையோதாதோதிநனியுயர்ந்தான். (கஎரு)

---

170. என்போலுளை என்றது–தனது நித்தியத்துவத்தைவிளக்கிநின்றது.
175. தேமன் - இந்திரன்.

ஈதாகுமுன்னிகழ்ந்ததெம்பெருமானென்மாற்றம்
யாதாகுமாகநினையாதிகழ்தியேல்
தீதாய்விளைதனனிதிண்ணமெனச்செப்பினான்
மேதாவிகட்கெல்லாமேலாயமேன்மையான் (கஎசு)

ஆ திருவிருத்தம் - ௩௦அ.

## ச-வது, விபீடணனடைக்கலப்படலம்.

கேட்டனனிருந்துமக்கேள்விதேர்கலாக்
கோட்டியசிந்தையனுறுதிகொண்டிலன்
மூட்டியதீயெனமுடுகிப்பொங்கினான்
ஊட்டரக்கூட்டியவனையவொண்கணான். (க)

இரணியனென்பவனெம்மனோரினும்
முரணியனவன்றனைமுருக்கிமுற்றினான்
அரணியனென்றவற்கன்புபூண்டனை
மரணமென்றொருபொருண்மாற்றும்வன்மையோய். (உ)

ஆயவன்வளர்த்ததன்றாதையாகத்தை
மாயவன்கல்லியமகிழ்ந்தமைந்தனும்
ஏயுநம்பகைஞனுக்கினியநண்புசெய்
நீயுமேநிகர்பிறர்நிகர்க்கநேர்வரோ. (௩)

பாழிசாலிரணியன்புதல்வன்பண்பெனச்
சூழ்வினைமுற்றியானவற்குத்தோற்றபின்
ஏழைநீயென்பெருஞ்செல்வமெய்திப்பின்
வாழ்வோகருத்ததுவரவற்றாகுமோ. (ச)

முன்புறவனையர்பானண்புமுற்றினை
வன்பகைமனிசரின்வைத்தவன்பினை
என்புறவுருகுதியழுதியேத்துதி
உன்புகலவர்பிறிதுரைக்கவேண்டுமோ. (ரு)

நண்ணினமனிசரைநண்புபூண்டனை
எண்ணினைசெய்வினையென்னைவெல்லுமா
றுன்னினையரசின்மேலாசையூன்றினை
திண்ணிதுன்செயல்பிறர்செறுநர்வேண்டுமோ. (சு)

4. பாழிசால் - வன்மைமிக்க.
5. வன்பகை - கொடியபகையினையுடைய,

### வேறு.

அன்றுவானரமவந்துநஞ்சோலையையழிப்பக்
கொன்றுதின்றிடுமின்னெனத்தூதரைக்கோறல்
வென்றியன்றெனவிலக்கினைமேல்விளைவெண்ணித்
துன்றுதாரவற்றுணையெனக்கோடலேதுணிந்தாய். (௭)

### வேறு.

அஞ்சினையாதலினமர்க்குமாளலை
தஞ்செனமணிசர்பால்வைத்தசார்பினை
வஞ்சனைமனத்தினைபிறப்புமாற்றினை
நஞ்சினையுடன்கொடுவாழ்தனன்றரோ. (௮)

பழியினையுணர்ந்தியான்படுக்கிலேனுனை
ஒழிசிலபுகலுதலொல்லைநீங்குதி
விழியெதிர்நிற்றியேல்விளிதியென்றனன்
அழிவினையெய்துவானறிவுநீங்கினான். (௯)

என்றலுமிளவலுமெழுந்துவானிடைச்
சென்றனன்றுணைவருந்தானுஞ்சிந்தியா
நின்றனன்பின்னருநீதிசான்றன
ஒன்றலபலபலவுறுதியோதினான். (௧௦)

வாழியாய்கேட்டியால்வாழ்வுகைம்மிக
ஊழிகாண்குறுநினதுயிரையோர்கிலாய்
கீழ்மையோர்சொற்கொடுகெடுதனேர்தியோ
வாழ்மைதானறம்பிழைத்தவர்க்குமாகுமோ. (௧௧)

புத்திரர்குருக்கணின்பொருவில்கேண்மையர்
மித்திரரடைந்துளோர்மெலியர்வன்மையோர்
இத்துணைபேரையுமிராமன்வெஞ்சரஞ்
சித்திரவதஞ்செயக்கண்டுதீர்தியோ. (௧௨)

எத்துணைவகையினுமுறுதியெய்தின
ஒத்தனவுணர்த்தினேனுணரகிற்றிலை
அத்தவென்பிழைபொறுத்தருடியாலென
உத்தமனந்நகரொழியப்போயினான். (௧௩)

---

8. பிறப்புமாற்றினை - அரக்கர்குலவியற்கையையொழித்தனை.
9. எய்துவான் - எய்துதற்கு.

அனலனுமனிலனுமரன்சம்பாதியும்
வினையவர்நால்வரும்விரைவின்வந்தனர்
கனைகழற்காலினர்கருமச்சூட்சியர்
இனைவரும்வீடணனோடுமேயினார். (கச)

அரக்கனுமாங்கணோரமைச்சர்நால்வரும்
குரக்கினத்தவரொடுமனிசர்கொள்ளைநீர்க்
கரைக்கண்வந்திருத்தனரென்றகாலையில்
பொருக்கெனவெழுதுமென்றெண்ணிப்போயினார். (கரு)

அளக்கரைக்கடந்துமேலறிந்தநம்பியும்
விளக்கொளிபரத்தலிற்பாலின்வெண்கடல்
வளத்தடந்தாமரைமலர்ந்ததாமெனக்
களப்பெருந்தானையைக்கண்ணினோக்கினான். (கசு)

ஊனுடையுடம்பினவுயிர்கள்யாவையும்
ஏனையவொருதலைநிறுத்தியெண்ணினால்
வானரம்பெரிதெனமறுவில்சிந்தையான்
தூநிறச்சுடுபடைத்துணைவர்ச்சொல்லினான். (கஎ)

அறந்தலைநின்றவர்க்கன்புபூண்டனேன்
மறந்துநன்புகழலால்வாழ்வுவேண்டலேன்
பிறந்தவென்னுறுதிநீபிடிக்கலாயெனாத்
துறந்தனனினிச்செயல்சொல்லுவீரென்றான். (கஅ)

மாட்சியினமைந்ததுவேறுமற்றிலை
தாட்சியில்பொருடருந்தருமமூர்த்தியைக்
காட்சியேயினிக்கடனென்றுகல்விசால்
சூட்சியின்கிழவருந்துணிந்துசொல்லினார். (ககூ)

நல்லதுசொல்லினீர்நாமும்வேறினி
அல்லதுசெய்துமேலரக்கராதுமால்
எல்லையில்பெருங்குணத்திராமன்றாளிணை
புல்லுதும்புல்லியிப்பிறவிபோக்குதும். (உ0)

முன்புறக்கண்டிலேன்கேள்விமுன்பிலேன்
அன்புறக்காரணமறியகிற்றிலேன்

---

16. மேலறிந்தநம்பியும் - வருங்காரியமுணர்ந்த விபீஷணனும்.

17. துணைவர் - மந்திரியர்.

19. காட்சியே - காணுதலே.

என்புறக்குளிருநெஞ்சுருகுமேலவன்
புன்புலப்பிறவியின்பகைஞன்போலுமால். (உக)

ஆதியம்பரமனுக்கன்புநல்லற
நீதியின்வழாமையுமுயிர்க்குநேயமும்
வேதியரருளுநான்விரும்பிப்பெற்றனென்
போதுறுகிழவனைத்தவமுன்பூண்டநாள். (உஉ)

ஆயதுபயப்பதோரமைதியாயது
தூயதுநினைந்ததுதொல்லைபாவர்க்கும்
நாயகன்மலர்க்கழனணுகிநம்மனத்
தேயதுமுடித்துமென்றினிதுமேயினான். (உங)

இருளுறவெய்துவதியல்பன்றுமெனப்
பொருளுறவுணர்ந்தவப்புலன்கொள்புந்தியார்
மருளுறுசூழலின்மறைந்துவைகினார்
உருளுறுதேரவனுதயமெய்தினான். (உச)

அப்புறத்திராமனவ்வலங்குவேலையைக்
குப்புறக்கருதுவான்குவளைநோக்கிதன்
துப்புறச்சிவந்தவாய்நினைந்துசோர்குவான்
இப்புறத்திருங்கரைமருகினெய்தினான். (உரு)

கானலுங்கழிகளுமணலுங்கண்டலும்
பானலுங்குவளையும்பரந்தபுன்னையும்
மேனிறையன்னமும்பெடையும்வேட்கைகூர்
பூநிறைசோலையும்புரிந்துநோக்கினான். (உசு)

தரளமும்பவளமும்தரங்கமீட்டிய
திரள்மணிக்குப்பையுங்கனகதிரமும்
மருளுமென்பொதும்பருமணலின்குன்றமும்
புரள்நெடுந்திரைகளும்பொருந்தநோக்கினான். (உஎ)

மின்னகுமணிவிரற்றேயவீழ்கணீர்
துன்னரும்பெருஞ்சுழியழிப்பச்சோர்விடே
டின்னகைநுளைச்சியரிழைக்குமாழிசால்
புன்னையம்பொதும்பரும்புக்குநோக்கினான். (உஅ)

---

26. பெடையும் என்பது பிறவும் எனப் பாடமோதப்படுகின்றது.
27. தரளம் - முத்து.

கூதிர்நுண்குறும்பனித்திவலைக்கோவைகால்
மோதிவெண்டிரைவரமுடவெண்டாழைமேல்
பாதியஞ்சிறையிடைப்பெடையைப்பாடணைத்
தோதிமந்துயில்வகண்டுயிர்ப்புவீங்கினான். (௨௯)

அருந்துதற்கினியமீன்கொணரவன்பினால்
பெருந்தடங்கொம்பிடைப்பிரிந்தசேவலை
வருந்திசைநோக்கியோர்மழலைவெண்குரு
கிருந்ததுகண்டுநின்றிரங்கலெய்தினான். (௩௦)

ஒருதனிப்பேடைமேலுள்ளமோடலால்
பெருவலிவயக்குருகிரண்டும்போர்கில
திருகுவெஞ்சினத்தனதருகட்டியன
பொருவனகண்டுதன்புருவங்கோட்டினான். (௩௧)

உண்ணிறையூடலிற்றேற்றவோதிமம்
கண்ணுறுகலவியால்வெல்லக்கண்டவன்
தண்ணிறப்பவளவாயிதழைத்தற்பொதி
வெண்ணிறமுத்தினைதுக்கிவிம்மினான். (௩௨)

இத்திறமெய்தியகாலையெய்துறும்
வித்தகர்சொற்களான்மெலிவுநீங்கினான்
ஒத்தனனிராமனுமுணர்வுதோன்றிய
பித்தரினொருவகைபெயர்ந்துபோயினான். (௩௩)

உறைவிடமெய்தினனொருங்குகேள்வியின்
துறையறிதுணைவரோடிருந்தசூழலின்
முறைபடுதானையின்மருங்குமுற்றினான்
அறைகழல்வீடணனயிர்ப்பில்சிந்தையான். (௩௪)

மற்றொருநாளதென்னின்மாறிலாக்
கொற்றவசரணெனக்கூயதோருரை
உற்றதுசெவித்தலத்தையனெல்லென
நற்றுணைவரைமுகநயந்துநோக்குறா. (௩௫)

எந்தையேயிராகவசரணமென்றசொல்
தந்தவரெனைவரோசாற்றுமின்னென

---

31. குருகு - ஒருசாதிப்பறவை.
34. முற்றினான் - அடைந்தான். 36. எனைவரோ - யாவரோ.

மந்தணமுற்றுழிவயவெஞ்சேனையின்
முந்தினர்க்குற்றதைமொழிகுவாமரோ. (௩௬)

முற்றியகுரிசிலைமுழங்குதானையின்
உற்றனர்நிருதர்வந்தென்னவொன்றினார்
எற்றுதிர்பற்றுதிரெறிதிரென்றிடை
சுற்றினருருமெனத்தெழிக்குஞ்சொல்லினார். (௩௭)

தந்ததுதருமமேகொணர்ந்துதாணிவன்
வெந்தொழிற்றீவினைபயந்தமேன்மையான்
வந்தனனிலங்கையர்மன்னனுக்குநம்
சிந்தனைமுடிந்தனவென்னுஞ்செய்கையார். (௩௮)

இருபதுகரந்தலையீரைந்தென்னுமத்
திருவிலிக்கன்னவைசிதைந்தவோவென்பார்
பொருதொழிலெம்மொடும்பொருதிபோரென்பார்
ஒருவரினொருவர்சென்றுறுக்கியூன்றுவார். (௩௯)

பற்றினஞ்சிறையிடைவைத்துப்பாருடைக்
கொற்றவற்குணர்த்துதுமென்றுகூறுவார்
எற்றுவதன்றியேயிவனைக்கண்டிறை
நிற்றலென்பிறிதெனநெருக்கிநேர்குவார். (௪௦)

இமைப்பதன்முன்விசும்பெழுந்துபோயபின்
அமைப்பதென்பிறிதிவரரக்கரல்லரோ
சமைப்பதுகொலையலாற்றக்கதியாவதோ
குமைப்பதுநலனெனமுடுகிக்கூறினார். (௪௧)

இயைந்தனவியைந்தனவினையகூறலும்
மயிந்தனுந்துமிந்தனுமென்னுமாண்பினார்
அயிந்திரநிறைந்தவனாணையேவலால்
நயந்தெரிகாவலரிருவர்நண்ணினார். (௪௨)

விலக்கினர்படைஞரைவேதநீதிநூல்
இலக்கணநோக்கியவியல்பரெய்தினார்
சலக்குறியிலரெனவருகுசார்ந்தனர்
புலக்குறியறிநெறிபொருந்தநோக்கினார். (௪௩)

---

40. இறை - சிறிது.
41. சமைப்பது - செய்வது.

யாரிவனைய்தியகருமம்யாவது
போரதுபுரிதிரோபுறத்தொரெண்ணமோ
சார்புரநின்றநீர்சமைந்தவாறெலாஞ்
சோர்விலிர்மெய்ம்முறைசொல்லுவீரென்றான். (சச)

பகலவன்வழிமுதற்பாரிறையகன்
புகலவன்கழலடைந்துய்யப்போந்தனன்
தகவுறுசிந்தையன்றருமநீதியன்
மகன்மகன்மைந்தனூன்முதற்குவாய்மையான். (சரு)

அறநிலைவழாமையுமாதிமூர்த்திபால்
நிறைவருநேயமுநின்றவாய்மையும்
மறையவர்க்கன்புமென்றினையமாமலர்
இறையவன்றரநெடுந்தவத்தினேயினான். (சசு)

சுடுதியைத்துகிலிடைப்பொதிந்ததுன்மதி
இடுதியேசிறையிடையிறைவன்றேவியை
விடுதியேலுய்குதிவிடாதுவேட்டியேல்
படுதியென்றுறுதிகள்பலவும்பன்னினான். (சஎ)

மறந்தருசிந்தையன்மதியினீங்கினான்
பிறந்தனைபின்பதிற்பிழைத்திபோகுதி
இறந்தனைநிற்றியேலென்னவின்னவன்
துறந்தனனெனவிரித்தனலன்சொல்லினான். (சஅ)

மயிந்தனுமவ்வுரைமனத்துவைத்துநீ
இயைந்ததுநாயகற்கியம்புவேனெனப்
பெயர்ந்தனன்றம்பியும்பெயர்வில்சேனையும்
அயர்ந்திலிர்காமினென்றமைவதாக்கியே. (சகூ)

தருமமுஞானமுந்தவமும்வேலியாய்
மருவரும்பெருமையும்பொறையும்வாயிலாய்க்
கருணையங்கோயிலுளிருந்தகண்ணனை
அருநெறியெய்திச்சென்றடிவணங்கினான். (ருய)

உண்டுரையுணர்த்துவதூழியாயெனப்
புண்டரீகத்தடம்புரையும்பூட்சியான்
மண்டிலச்சடைமுடிதுளக்கிவாய்மையாய்
கண்டதுங்கேட்டதுங்கழறுவாயென்றான். (ருக)

---

51. பூட்சியான் - உடலினேன்.

விளைவினையறிந்திலம்வீடணப்பெயர்
நளிர்மலர்க்கையினானல்வரோடுடன்
களவியல்வஞ்சனையிலங்கைகாவலற்
கிளவனஞ்சேனையினடுவணெய்தினான். (௫௨)

கொல்லுமின்பற்றுமினென்னுங்கொள்கையால்
பல்பெருந்தானைசென்றடர்க்கப்பார்த்தியாம்
நில்லுமினென்றுநீயாரைநின்னிலை
சொல்லுதியென்னவோர்துணைவன்சொல்லினான். (௫௩)

முரண்புகுதீவினைமுடித்தமுன்னவன்
கரண்புகுசூழலைசூழக்காண்பதோர்
அரண்பிறிதில்லெனவருளின்வேலையைச்
சரண்புகுந்தனனெனமுன்னஞ்சாற்றினான். (௫௪)

ஆயவன்றருமமுமாதிமூர்த்திபால்
மேயதோர்சிந்தையுமெய்யும்வேதியர்
நாயகன்றரநெடுந்தவத்துநண்ணினன்
தூயவனென்பதோர்பொருளுஞ்சொல்லினான். (௫௫)

கற்புடைத்தேவியைவிடாதுகாத்தியேல்
எற்புடைக்குன்றமாமிலங்கையேழைநின்
பொற்புடைமுடித்தலைபுரளுமென்றொரு
நற்பொருளுணர்த்தினனென்றுநாட்டினான். (௫௬)

ஏந்தெழிலிராவணனிளையசொன்னநீ
சாந்தொழிற்குரியையென்சார்புநிற்றியேல்
ஆந்திணைப்பொழுதினிலகறியாமெனப்
போந்தனனென்றனன்புகுந்ததீதென்றான். (௫௭)

அப்பொழுதிராமனுமருகினன்பரை
இப்பொருள்கேட்டநீரியம்புவீரிவன்
கைப்புகற்பாலனோகழியற்பாலனோ
ஒப்புறநோக்கிநும்முணர்வினாலென்றான். (௫௮)

தடமலர்க்கண்ணனைத்தடக்கைகூப்பிநின்
றிடணிதுகாலமீதென்னவெண்ணுவான்

54. கரண்புகுசூழலைசூழ - மனஞ்சென்றவழியிற்செல்ல.
55. வேதியர்நாயகன் - பிரமன்.

கடனறிகாவலன்கழறினனரோ
சுடர்நெடுமணிமுடிச்சுக்கிரீவனே. (௫௯)

நனிமுதல்வேதங்களுணுநாமநூல்
மனுமுதல்யாவையும்வரம்புகண்டநீ
இனையனகேட்கவோவெம்மனோர்களை
வினவியகாரணம்விதிக்குமேலுளாய். (௬௰)

ஆயினும்விளம்புவெனருளினாழியாய்
ஏயினையாகவினறிவிற்கேற்றன
தூயவென்றெண்ணினுந்துணிவன்றென்னினும்
மேயதுகேட்டியால்விளைவுநோக்குவாய். (௬௧)

வெம்முனைவிளைதலினன்றுவேறொரு
சும்மையாலுயிர்கொளத்துணிதலாலன்று
தம்முனைத்துறந்ததுதருமநீதியோ
செம்மையிலரக்கரில்யாவர்சீரியோர். (௬௨)

தகையுறுதம்முனைத்தாயைத்தந்தையை
மிகையுறுகுரவரையுலகின்வேந்தனைப்
பகையுறவருதலுந்துறந்தபண்பிது
நகையுறலன்றியுநயக்கற்பாலதோ. (௬௩)

வேண்டுழியினியனவிளம்பிவெம்முனை
பூண்டுழியஞ்சிவெஞ்செருவிற்புக்குடன்
மாண்டுழியன்றிநம்மருங்குவந்தவன்
ஆண்டொழிலுலகினுக்காணியாமன்றே. (௬௪)

மிகைப்புலந்தருமமேவேட்டபோதவர்
தகைப்புலந்துறந்துபோய்ச்சார்தலன்றியே
நகைப்புலம்பொதுவுறநடந்தநாயகன்
பகைப்புலஞ்சார்தலும்பழியினீங்குமோ. (௬௫)

வார்க்குறுவனைகழற்றம்முன்வாழ்ந்தநாள்
சேர்க்குறவாயிடைச்செறுநர்சீறிய
போர்க்குறவன்றியேபுகுந்தபோதிவன்
ஆர்க்குறவாகுவனருளினாழியாய். (௬௬)

---

62. செம்மையில் - ஒழுக்கமற்ற.

67. வேட்குமோ - விரும்புவேமோ.

ஓட்டியகனகமானுருவமாகிய
சிட்டனுமருமகனிழைத்ததீவினை
கிட்டியபோதினிற்றவமுங்கேள்வியும்
விட்டதுகண்டுநாம்விடாதுவேட்குமோ. (௬௭)

கூற்றுவன்றன்னொடிவ்வுலகங்கூடிவந்
தேற்றனவென்னினும்வெல்லவேற்றுள
மாற்றவன்றம்பிநம்மருங்குவந்திவண்
தோற்றுமோவன்னவன்றுணைவனாகுமோ. (௬௮)

அரக்கரையாசறக்கொன்றுநல்லறம்
புரக்கவந்தனமெனும்பெருமைபூண்டநாம்
இரக்கமிலவரையேதுணைக்கொடேறலால்
சுருக்கமுண்டுநம்வலிக்கென்றுதோன்றுமால். (௬௯)

விண்டுழியொருநிலைநிற்பர்மெய்ம்முகம்
கண்டுழியொருநிலைநிற்பர்கைப்பொருள்
கொண்டுழியொருநிலைநிற்பர்கூழுடன்
உண்டுழியொருநிலைநிற்பருற்றவர். (௭௦)

வஞ்சனையியற்றிடவந்தவாறலால்
தஞ்செனநம்வயிற்சார்ந்துளானலன்
நஞ்செனக்கொடியனைநயந்துகோடியோ
அஞ்சனவண்ணவென்றறியக்கூறினான். (௭௧)

அன்னவன்பின்னுறவலகில்கேள்வியால்
தன்னிகர்பிறிதிலாத்தகையசாம்பனை
என்னையுன்கருத்தெனவிறைவினாயினான்
சொன்முறைநெறிதெரிந்தவனுஞ்சொல்லுவான். (௭௨)

அறிஞரேயாயினுமரியதெவ்வரைச்
செறிஞரேயாவரேற்கெடுதறிண்ணமாம்
நெறிதனைநோக்கினுநிருதர்நிற்பதோர்
குறிநனியுளதெனவுலகங்கொள்ளுமோ. (௭௩)

வெற்றியுந்தருகுவர்வினையம்வேண்டுவர்
முற்றுவருறுகுறைமுடிப்பர்முன்பினால்
உற்றுறுநெடும்பகையுடையரல்லரேற்
சிற்றினத்தவரொடுஞ்செறிதல்சீரிதோ. (௭௪)

---

72. இறை - இராமன்.

வேதமும்வேள்வியுமயக்கிவேதியர்க்
கேதமுமிமையவர்க்கிடருமீட்டிய
பாதகர்நம்வயிற்படர்வராமெனின்
தீதிலராய்நமக்கன்புசெய்வரோ. (எரு)

கைப்புகுந்துறுசரணருளிக்காத்துமேல்
பொய்க்கொடுவஞ்சனைபுணர்த்தபோதினும்
மெய்க்கொளவிளியினும்விடுதுமென்னினும்
திக்குறுநெடும்பழிபறமுஞ்சிறுமால். (எசு)

மேனனிவிளைவதுவிளம்பல்வேண்டுமோ
கானகத்திறைவியோடுறையுங்காலையில்
மானெனவந்தவன்வரவைமானுமிவ்
வேனையன்வரவுமென்றினையகூறினான். (எஎ)

பால்வருபனுவலின்றுணிவுபற்றிய
சால்பெருங்கேள்வியன்றனைநாயகன்
நீலனைநின்கருத்தியம்புநீயென
மேலவன்விளம்பலும்விளம்பன்மேயினான். (எஅ)

பகைவரைத்துணையெனப்பற்றற்பாலவாம்
வகையுளவன்னவைவரம்பில்கேள்வியாய்
தொகையுறக்கூறுவென்குரங்கின்சொல்லென
நகையுறத்தக்கனநயந்துகோடியால். (எகூ)

தங்குலக்கிளைஞரைத்தருக்கும்போரிடைப்
பொங்குநர்க்கொன்றவர்க்கெளியர்போந்தவர்
மங்கையர்திறத்தினின்வயிர்த்தசிந்தையர்
சிங்கலில்பெரும்பொருளிழந்துசீறினோர். (அ௦)

பேரபிமானங்களுற்றபெற்றியோர்
போரிடைப்புறங்கொடுத்தஞ்சிப்போந்தவர்
நேர்வருதாயத்துநிரப்பினோர்பிறர்
சீரியர்கிளைஞரைமடியச்செற்றுளோர். (அக)

அடுத்தநாட்டரசியல்புடையவாணையாற்
படுத்தவர்பட்டவர்பகைஞரோடொரு

---

77. மானும் - ஒக்கும்.

78. மேலவன் - இராமன். 81. நிரப்பினோர் - என்றும் பாடம்.

மடக்கொடிபயந்தவர்மைந்தராயினும்
உடம்கொளத்தகையர்நம்முழைவந்தொன்றினல். (அ௨)

தாமவர்க்கெளிவருந்தகைமையாரலர்
நாமுறவல்லவர்நம்மைநண்ணினர்
தோமுறநீங்குதறுணிவராதலின்
யாமிவன்வரவிவற்றென்னென்றுன்னுவாம். (அ௩)

காலமேநோக்கினுங்கற்றநூல்களின்
மூலமேநோக்கினுமுனிந்துபோந்தவன்
சீலமேநோக்கியாந்தெளிந்துதேறுதற்
கேலுமேயென்றெடுத்தினையகூறினான். (அ௪)

மற்றுளமந்திரக்கிழவர்வாய்மையால்
குற்றமில்கேள்வியரன்புகூர்ந்தவர்
பற்றுதல்பழுதெனப்பழுதுறுவொரு
பெற்றியினுணர்வினர்முடியப்பேசினர். (அ௫)

உறுபொருள்யாவருமொன்றக்கூறினர்
செறிபெருங்கேள்வியாய்கருத்தென்செப்பென
நெறிதருமாருதியென்னுநேரிலா
அறிவனைநோக்கினனறிவின்மேலுளான். (அ௬)

இணங்கினரறிவிலரெனினுமெண்ணுங்கால்
கணங்கொள்கைநம்மனோர்கடன்மைகாணென
வணங்கியசென்னியன்மறைத்தவாயினன்
நுணங்கியகேள்வியானுவல்வதாயினன். (அ௭)

எத்தனையுளர்தெரிந்தெண்ணவேய்ந்தவர்
அத்தனைவருமொருபொருளையன்றென
உத்தமரதுதெரிந்துணரவோதினர்
வித்தகவினிச்சிலவிளம்பவேண்டுமோ. (அஅ)

தூயவர்துணிதிறனன்றுதூயதே
ஆயினுமொருபொருளுரைப்பெனுழியாய்
தீயனென்றிவனையானயிர்த்தல்செய்கிலேன்
மேயினசிலபொருள்விளம்பவேண்டுமால். (அ௯)

வண்டுளரலங்கலாய்வஞ்சர்வாண்முகம்
கண்டதோர்பொழுதினிற்றெரியுங்கைதவம்

87. இணங்கினர் - சினேகித்தவர்கள்.

உண்டெனினஃதவர்க்கொளிக்கவொண்ணுமோ
விண்டவர்பலபகன்மறுவிவீழ்வரோ. (௯0)

உள்ளத்தினுள்ளதையுரையின்முந்துற
மெள்ளத்தம்முகங்களேவிளம்புமாகலால்
கள்ளத்தின்விளைவெலாங்கருத்திலாமிருட்
பள்ளத்தினன்றியேவெளியிற்பல்குமோ. (௯௧)

வாலிவிண்பெறவரசிளையவன்பெறக்
கோலியவரிசிலைவலியுங்கொற்றமும்
சீலமுமுணர்ந்துநிற்சேர்ந்துதெள்ளிதின்
மேலரசெய்துவான்விரும்பிமேயினான். (௯௨)

செறிகழலரக்கர்தமரசுசீரியோர்
நெறியலதாகலினிலைக்கலாமையும்
எறிகடலுலகெலாமிளவற்கீந்ததோர்
பிறிவருங்கருணையுமெய்யும்பேணினான். (௯௩)

காலமன்றிவன்வருகாலமென்பரேல்
வாலிதன்றுயுபகைவலியதேறிய
தாலினியங்கிவற்கிறுதியாவதால்
மூலமென்றுணைவரைப்பிறிவுமுற்றினான். (௯௪)

தீத்தொழிலரக்கர்தமாயச்செய்வினை
வாய்துளரன்னவையுணருமாண்பினால்
காய்த்தவரவர்களைகையுற்றார்நமக்
கேற்றதோருறுதியுமெளிதினெய்துமால். (௯௫)

தெளிவுறலரிதிவர்மனத்திற்றீமையாம்
விளிவதுசெய்குவரென்னவேண்டுதல்
ஒளியுறவுயர்ந்தவரொப்பவெண்ணலார்
எளியவர்திறத்திவையெண்ணலேயுமோ. (௯௬)

கொல்லுமினிவனையென்றரக்கன்கூறிய
எல்லையிற்றூதரையெறிதலென்பது
புல்லிதுபழியொடும்புணரும்போர்த்தொழில்
வெல்லலம்பின்னையென்றிடைவிலக்கினான். (௯௭)

மாதரைக்கோறலுமறத்துநீங்கிய
ஆதரைக்கோறலுமழிவுசெய்யினும்

90. கைதவம் - வஞ்சனை.

தூதரைக்கோறலுந்தூய்தன்றுமென்
றேதுவிற்சிறந்தனவெடுத்துக்காட்டினான். (௯௮)

எல்லியில்யானிவனிரணமாளிகை
செல்லியபோதினுந்திரிந்தபோதினும்
நல்லனநிமித்தங்கணிநயந்துள
அல்லதுமுண்டுநானறிந்ததாழியாய். (௯௯)

நிந்தனைநறவமுநெறியிலூன்களும்
தந்தனகண்டிலென்றருமதானமும்
வந்தனைநீதியும்பிறவுமாண்பமைந்
தந்தணரில்லெனப்பொலிந்ததாமரோ. (௧௦௦)

அன்னவன்றனிமகளலரின்மேலயன்
சொன்னதோர்சாபமுண்டுன்னைத்துன்மதி
நன்னுதநீண்டுமேனனுருகுங்கூற்றென
என்னுடையிறைவிக்குமினிதுகூறினாள். (௧௦௧)

வேறு.

பெற்றுடையபெருவரமும்பிறந்துடையவஞ்சனையும்பிறவுமுன்கை
விற்றொடையின்விடுகணையால்வெந்தொழியுமெனக்கருதிமேற்சொல்லோடும்
உற்றுடையபெருவரமுமுகந்துடையதண்ணளியுமுணர்வுநோக்கின்
மற்றுடையர்தாமுளரோவாளரக்கனன்றியேதவத்தின்வாய்த்தார்.

தேவர்க்குந்தானவர்க்குந்திசைமுகனேமுதலாயதேவதேவர்
மூவர்க்குமுடிப்பரியகாரியத்தைமுற்றுவிப்பான்மூண்டுநின்றே
ஆவத்தின்வந்தபயமென்றனையயிர்த்தகலவிடுதியாயின்
கூவத்தின்சிறுபுனலைக்கடலயிர்த்ததொவ்வாதோகொற்றவேந்தே.

பகைப்புலத்தோர்துணையல்லரென்றிவனைப்பற்றேமேலறிஞர் பார்க்கின், நகைப்புலத்ததாமன்றேநற்றாயமுளதாயபற்றான்மிக்க, தகைப்புலத்தோர் தந்தைபர்கடம்பியர்கடமையரிவர் தாமேயன்றோ, மிகைப்புலத்துவிளைகின்ற தொருபொருளைக்காதலிக்கின்விளிஞராவர். (௧௦௪)

---

99. இரணமாளிகை - முரசொலியினையுடைய மாளிகை.

100. இக்கவியாலந்தணர்கள் ஊனுங்கள்ளுமுண்ணாதாரென்பது நன்கு விளங்குதல்காண்க.

101. அன்னவன் - அவ்விபீடணன்.

103. கூவம் - கிணறு.

ஆதலாலிவன்வரவு நல்வரவேயெனவுணர்ந்தேனடியனேனான், வேதநூலெனத்தகைய திருவுளத்தின் குறிப்பறியே னென்றுவிட்டான், காதனான்முகனாலுங் கணிப்பரியகலையனைத்துங் கதிரோன் முன்சென், றேதினாமேறாதநீர்கடந்துபகைகடிந்துலகையுய்யக்கொண்டான். (௧௦௫)

மாருதிவினையவார்த்தைசெவிமடுத்தமிழ்தின்மாந்திப்
பேரறிவாளநன்றுநன்றெனப்பிறரைநோக்கிச்
சீரிதுமேலிம்மாற்றந்தெளிவுறத்தேர்மினென்று
ஆரியனுரைப்பதானானனைவருமதனைக்கேட்டார். (௧௦௬)

கருத்துறநோக்கிப்போந்தகாலமுநன்றுகாதல்
அருத்தியுமாசின்மேற்றேயறிவினுக்கவதியில்லை
பெருத்துயர்தவத்தினாலும்பிழைப்பிலனென்னும்பெற்றி
திருத்தியதாகுமன்றேநம்வயிற்சேர்ந்தசெய்கை. (௧௦௭)

மற்றினியுரைப்பதில்லைமாருதிவடித்துச்சொன்ன
பெற்றியேபெற்றியன்னதன்றெனிற்பிறிதொன்றானும்
வெற்றியேபெருகதோற்கவீகவீயாதுவாழ்க
பற்றுதலன்றியுண்டோபுகலெமைப்பகர்கின்றானை. (௧௦௮)

இன்றுவந்தானென்றுண்டோவெந்தையையாயைமுன்னைக்
கொன்றுவந்தானென்றுண்டோபுகலதுகூறுகின்றான்
தொன்றுவந்தன்புபேணுந்துணைவனுமவனேபின்னைப்
பின்றுமென்றாலுநம்பாற்புகழன்றிப்பிறிதுண்டாமோ. (௧௦௯)

பிறந்தநாட்டொடங்கியாருந்துலைபுக்கபெரியோன்பெற்றி
மறந்தநாளுண்டேயென்னைச்சரணென்றுவாழ்கின்றானைத்
துறந்தநாட்கின்றுவந்துதுன்னினான்சூட்சியாலே
இறந்தநாளன்றோவென்றுமிருந்தநாளாவதென்றான். (௧௧௦)

இடைந்தவர்க்கபயம்யாமென்றிரந்தவர்க்கெறிநீர்வேலை
கடைந்தவர்க்காகியாலமுண்டவற்கண்டிலீரோ
உடைந்தவர்க்குதவானாயினுள்ளதொன்றீயானாயின்
அடைந்தவர்க்கருளானாயினறமென்னாமாண்மையென்னாம். (௧௧௧)

பேடையைப்பிடித்துத்தன்னைப்பிடிக்கவந்தடைந்தபேதை
வேடனுக்குதவிசெய்துவிறகிடைவெந்தீமூட்டிப்
பாடுறுபசியைநோக்கித்தன்னுடல்கொடுத்தபைம்புள்
வீடுபெற்றுயர்ந்தவார்த்தைவேதத்தின்விழுமமன்றோ. (௧௧௨)

112. பைம்புள் - புறா.

போதகமொன்றுகன்றியிடங்கர்மாப்பொருதபோரின்
ஆதியம்பரமேயானுன்னபயமென்றழைத்தவந்நாள்
வேதமுமுடிவுகாணுமெய்ப்பொருள்வெளிவந்தெய்தி
மாதுயர்துடைத்தவார்த்தைமறப்பரோமறப்பிலாதார். (கக௩)

மன்னுயிரெல்லாந்தானேவருவித்துவளர்க்குமாயன்
தன்னனவுலகமெல்லாந்தருமமுமெவையுந்தானே
என்னினுமடைந்தோர்தம்மையேமுறவினிதினோம்பிப்
பின்னும்வீடளிக்குமென்றாற்பிறிதொருசான்றுமுண்டோ. (ககச)

நஞ்சினைமிடற்றுவைத்தநகைமழுவாளனாளும்
தஞ்செனமுன்னந்தானேதாதைபாற்கொடுத்துச்சாதல்
அஞ்சினேனபயமென்றவந்தணற்காகியந்நாள்
வெஞ்சினக்கூற்றைமாற்றுமேன்மையின்மேன்மையுண்டோ. (ககரு)

சரணெனக்கியார்கொலென்றுசானகியழுதுசாம்ப
அரணுனக்காவென்வஞ்சியஞ்சலென்றருளினெய்தி
முரணுடைக்கொடியோன்கொல்லமொய்யமர்முடித்துத்தெய்வ
மரணமென்றுதைபெற்றதென்வயின்வழக்கன்றோமோ. (ககசு)

உய்யநிற்கபயமென்றானுயிரைத்தன்னுயிரினோம்பாக்
கையனுமொருவன்செய்தவுதவியிற்கருத்திலோனும்
மையறநெறியினோக்கிமாமறைநெறியினின்ற
மெய்யினைப்பொய்யென்றானுநீள்கிலாநரகின்வீழ்வார். (ககஎ)

சீதையைக்குறித்ததேயோதேவரைத்தீமைசெய்த
பேதையைக்கொல்வனென்றுபேணியவிரதப்பெற்றி
வேதியரபயமென்றார்க்கன்றுநான்விரித்துச்சொன்ன
காதையைக்குறித்துநின்றவவ்வுரைகடக்கலாமோ. (ககஅ)

காரியமாகவன்றேயாருகககருணையோர்க்குச்
சீரியதன்மைநோக்கினிதனின்மேற்சிறந்ததுண்டோ
பூரியரேயுந்தம்மைப்புகல்புகுந்தோர்க்குப்பொன்று
ஆருயிர்கொடுத்துக்காத்தற்கெண்ணிலாவரசர்க்கென்னும். (ககசு)

ஆதலானபயமென்றபொழுதத்தேயபயதானம்
ஈதலேகடப்பாடென்பதியம்பினீரென்பால்வைத்த

113. போதகம் - யானை.
115. நகைமழு - ஒளிவிடுகின்றபரசு.
117. ஓம்பா - இரட்சிக்காத.
119. கருணையோர்க்கு - அருளுடையோர்க்கு.

காதலானினிவேறெண்ணக்கடவதென்கதிரோன்மைந்த
கோதிலாதவனீயேயென்வயிற்கொணர்தியென்றான். (கஉ0)

ஐயுறவெல்லாந்தீருமளவையாயமைந்ததன்றே
தெய்வநாயகனதுள்ளந்தேறியவடைவேதேறிக்
கைபுகற்கமைவதானான்கடிதினிற்கொணர்வலென்னா
மெய்யினுக்குறையுளானவொருவன்பால்விரைவிற்சென்றான். ()

வருகின்றகவியின்வேந்தமயிந்தனுக்கிளையவள்ளல்
தருகென்றானண்ணனின்னையெதிர்கொளற்கருக்கன்றந்த
இருகுன்றமனையதோளானெய்தினனென்னலோடும்
திரிகின்றவுள்ளத்தானுமகமலர்ந்தவன்முன்சென்றான். (கஉஉ)

தொல்லருங்காலமெல்லாம்பழகினுந்தூயரல்லார்
புல்லலருள்ளந்தூயார்பொருந்துவரெதிர்ந்தஞான்றே
ஒல்லைவந்துணர்வுமொன்றவிருவருமொருநாளுற்ற
எல்லியும்பகலும்போலத்தழுவினரெழுவிற்றோளார். (கஉ௩)

தழுவினர்நின்றகாலைத்தாமரைக்கண்ணன்றங்கள்
முழுமுதற்குலத்திற்கேற்றமுறைமையாலுலகையாள
*வழுவிலபயமுன்பால்வழங்கினனவன்பொற்பாதம்
தொழுதியால்விரைவினென்னாக்கதிரவன்சிறுவன்சொன்னான். ()

சிங்கவேறனையான்சொன்னவாசகஞ்செவிபுகாமுன்
கங்குலினிறத்தினன்றன்கண்மழைத்தாரைகான்ற
அங்கமுமனமதென்னக்குளிர்ந்ததவ்வகத்தைமிக்குப்
பொங்கியவுவகையென்னப்பொடித்தனவுரோமப்புள்ளி. (கஉரு)

பஞ்செனச்சிவக்குமென்காற்றேவியைப்பிரித்தபாவி
வஞ்சனுக்கிளையவென்னைவருகவென்றருள்செய்தானோ
தஞ்செனக்கருதினானோதாழ்சடைக்கடவுளுண்ட
நஞ்செனச்சிறந்தேனன்றோநாயகனருளினாயேன். (கஉசு)

மறுளுறுமனத்தினானென்வாய்மொழிமறுத்தான்வானத்
துருளுறுதேரினாலுமிலங்கைமீதோடுமன்றே
தெருளுறுசிந்தைவந்ததேற்றமீதாகிற்செய்யும்
அருளினாவாயிற்கெட்டேன்பிழைப்பரோவரக்கராயோர். (கஉஎ)

தீர்வருமின்னறம்மைச்செய்யினுஞ்செய்யசிந்தைப்
பேரருளாளர்தத்தஞ்செய்கையிற்பிழைப்பதுண்டோ

---

125. மனமதென்ன - மனதையொப்ப.

கார்வரைநிறுவித்தன்னைக்கனலெழக்கலக்கக்கண்டும்
ஆர்கலியமரருய்யவமிழ்துபண்டளித்ததன்றே. (கஉஅ)

துறவியினுறவுபூண்டதூயவர்துணைவனென்னை
உறவுவந்தருளிமீளாவடைக்கலமுதவினானே
மறவினைநீக்கலில்லாமாயமுமாயவாழ்க்கைப்
பிறவியும்பெயர்த்தேதன்பின்னுநரகினிற்பிழைப்பதானேன். (கஉகூ)

திருத்தியவுணர்வுமிக்கசெங்கதிர்ச்செல்வன்செம்மல்
ஒருத்தரைநலனுநதீங்குநதேரினுமுயிரிதேனும்பும்
கருத்தினனன்றேதன்னைக்கழலடைந்தோரைக்காணும்
அருத்தியனமலன்றூழாதேகுதியறிஞவென்றான். (கநூ)

மொய்தவழ்கிரிகண்மற்றும்பலவுடன்முடுகிச்செல்ல
மைதவழ்கிரியுமேருக்குன்றமும்வருவதென்னச்
செய்தவம்பயநதவீரர்திரண்மராமேழுந்திய
எய்தவனிருந்தசூழலிருவருமெய்தச்சென்றார். (கநக)

மாற்கடஞ்சூழ்ந்தவைப்பினங்கதன்மருங்குகாப்ப
நாற்கடலுடுத்தபாரினாயகன்புதல்வனமைப்
பாற்கடல்சுறறவிற்கைவடவரைபாங்குநிற்பக்
கார்க்கடல்கமலம்பூத்ததெனப்பொலிவானைக்கண்டான். (கநஉ)

அள்ளிமீதுலகைவீசுமரிக்குலச்சேனைநாப்பண்
தெள்ளுதண்டிரையிற்றாகிப்பிறிதொருதிறனுஞ்சாரா
வெள்ளியகடலின்மேனாள்விண்ணவர்தொழுதுவேண்டப்
பள்ளிதீர்ந்திருந்தானென்னப்பொலிதநம்பண்பினானை. (கநந)

கோணுதற்கமைந்தகோலப்புருவம்போற்றிரையுங்கூடப்
பூணுதற்கினியமுத்தின்பொலிமணல்பரந்தவைப்பிற்
காணுதற்கினியநீளவெண்மையிற்கருமைகாட்டி
வாணுதற்சீதைகண்ணின்மணியெனவயங்குவானை. (கநச)

படர்மழைசுமந்தகாலைப்பகர்வருமமரர்கோமான்
அடர்சிலைதுறந்ததென்னவாரந்தீர்மார்பினானைக்
கடர்கடைமத்திற்பாம்புகழற்றியதென்னக்காசின்
சுடரொளிவலயந்தீர்ந்தசுந்தரத்தோளினானை. (கநரு)

கற்றைவெண்ணிலவுநீக்கிக்கருணையாலமிழ்தங்காலும்
முற்றுறுகலையிற்றாயமுழுமதிமுகத்தினானைப்

131. மொய்தவழ் - யானைகளுலாவுகின்ற.

பெற்றவனளித்தமோலியிளையவன்பெறத்தான்பெற்ற
சிற்றவைபணித்தமோலிபொலிகின்றசென்னியானை. (க௩௬)

வீரனைநோக்கியங்கமென்மயிர்ச்சிலிர்ப்பக்கண்ணீர்
வாரநெஞ்சுருகிச்செங்கணஞ்சனமலையன்றாகில்
கார்முகில்கமலம்பூத்ததன்றிவன்கண்ணன்கொல்லாம்
ஆரருள்சுரக்குநீதியறநிறங்கரிதோவென்றான். (க௩௭)

மின்மினியொளியின்மாயும்பிறவியைவேரின்வாங்கச்
செம்மணிமகுடநீக்கித்திருவடிபுனைந்தசெல்வன்
தன்முனோர்கமலத்தண்ணறாதையார்சரணந்தாழ
என்முனோரெனக்குச்செய்தவுதவியென்றேறப்பலுற்றான். (க௩௮)

பெருந்தவமியற்றினோர்க்கும்பேர்வரும்பிறவிநோய்க்கு
மருந்தனநின்றான்றனைவடிக்கணைதொடுத்துக்கொல்வான்
இருந்தனனின்றதென்னுமியம்புவதெல்லைதீர்ந்த
அருந்தவமுடையரம்மாவரக்கரென்றகத்துட்கொண்டான். (க௩௯)

கரங்கண்மீச்சுமந்துசெல்லுங்கதிர்மணிமுடியன்கல்லும்
மரங்களுமுருகநோக்குங்காதலான்கருணைவள்ளல்
இரங்கினனோக்குந்தோறுமிருநிலத்திறைஞ்சுகின்றான்
வரங்களின்வாரியன்னதாளிணைவந்துவீழ்ந்தான். (க௪0)

அழிந்ததுபிறவியென்னுமகத்தியன்முகத்திற்காட்ட
வழிந்தகண்ணீரின்மண்ணின்மார்புறவணங்கினானைப்
பொழிந்ததோர்கருணைதன்னாற்புல்லினனென்றுதோன்ற
எழுந்தினிதிருத்தியென்னாமலர்க்கையாலிருக்கையீந்தான். (க௪க)

ஆழியானவனைநோக்கியருள்சுரந்துவகைதூண்ட
ஏழினோடேழாய்நின்றவுலகுமென்பெயருமெந்நாள்
வாழுநாளன்றுகாறும்வாளெயிற்றரக்கர்வைகும்
தாழ்கடலிலங்கைச்செல்வநின்னதேதந்தேனென்றான். (க௪௨)

தீர்த்தனதருளைநோக்கிச்செய்ததோசிறப்புப்பெற்றான்
கூர்த்தநல்லறத்தைநோக்கிக்குறித்ததோயாதுகொல்லோ
வார்த்தையஃதுரைத்தலோடுந்தனித்தனிவாழ்ந்தேமென்ன
ஆர்த்தனவுலகினுள்ளசராசரமனைத்துமம்மா. (க௪௩)

உஞ்சனேனடியனேனென்றாழ்முறைவணங்கிநின்ற
அஞ்சனமேனியானையழகனுமருளினோக்கித்

141. அகத்தியல் - உள்ளத்தின்தன்மை.

தஞ்சநற்றுணைவனான தவறிலாப்புகழான்றன்னைத்
துஞ்சலியனத்தைதயசூட்டுதிமகுடமென்றான். (கசச)

விளைவினையறியும்வென்றிவீடணனென்றுவீயா
அளவறுபெருமைச்செல்வமளித்தனையாயினைய
களவியலரக்கன்பின்னேதோன்றியகடன்மைதீர
இளையவற்கவித்தமோலியென்னையுங்கவித்தியென்றான். (கசரு)

குகனொடுமைவரானோமுன்புபின்குன்றுசூழ்வான்
மகனொடுமறுவரானோமெம்முழையன்பின்வந்த
அகனமர்காதலையநின்னொடுமெழுவரானோம்
புகலருங்கானந்தந்துபுதல்வராற்பொலிந்தானுந்தை. (கசசா)

நடுவினிப்பகர்வதென்னேநாயகநாயினேனை
உடனுதித்தவர்களோடுமொருவனென்றுரையாநின்றாய்
அடிமையிற்சிறந்தேனென்னுவயிர்ப்பொடுமச்சநீங்கித்
தொடுகழற்செம்பொன்மௌலிசென்னியிற்சூட்டிக்கொண்டான். )

திருவடிமுடியிற்சூட்டிச்செங்கதிருச்சிசேர்ந்த
அருவரையென்னநின்றவரக்கர்தம்மரசைநோக்கி
இருவருமின்பமுற்றாரியாவருமின்பமுற்றார்
பொருவருமமரர்வாழ்த்திப்பூமழைபொழிவதானார். (கசஅ)

ஆர்த்தனபரவையேழுமார்த்தனமேகமார்த்த
வார்த்தொழிற்புணருந்தெய்வமங்கலமுரசுஞ்சங்கும்
தூர்த்தனகனகமாரிசொரிந்தனநறுமென்சுண்ணம்
போர்த்ததுவானத்தன்றங்கெழுந்ததுதுழனிப்பொம்மல். (கசகூ)

மொழிந்தசொல்லமிழ்தமன்னுடிறத்தினின்முறைமைநீங்கி
இழிந்தவென்மரபுமின்றேயுயர்ந்ததென்றிடரிற்றீர்ந்தான்
செழுந்தனிமலரோன்பின்னையிராவணன்றீமைச்செல்வம்
அழிந்ததென்றறனுந்தன்வாயாவலங்கொட்டிற்றன்றே. (கருo)

இன்னதோர்செவ்வித்தாகவிராமனுமிலங்கைவேந்தன்
தன்னெடுஞ்செல்வந்தானேபெற்றமைபலருங்கேட்பப்
பன்னெடுந்தானைசூழப்பகலவன்சேயுநீயும்
மன்னெடுங்குமரபாடிவீட்டினைவலஞ்செய்கென்றான். (கருக)

---

145. இளையவற்கவித்தமோலி - பரதனுக்களித்த பாதுகைமகுடம்.
146. குன்றுசூழ்வான்மகன் - சுக்கிரீவன்.
150. ஆவலங்கொட்டல் - வாயாலொலித்தல்.

அந்தமில்குணத்தினானையடியிணைமுடியினோடும்
சந்தனவிமானமேற்றிவானரத்தலைவர்தாங்க
இந்திரற்குரியசெல்வமெய்தினானிவனென்றேத்தி
மந்தரத்தடந்தோள்வீரர்வலஞ்செய்தார்தானைவைப்பை. (௧௫௨)

தேடுவார்தேடநின்றசேவடிதானுந்தேடி
ஓடுவானன்றுகண்டநான்முகன்கழீஇயநன்னீர்
ஆடுவார்பாவமஞ்சுநீங்கிமேலமரராவார்
சூடுவாரெய்துந்தன்மைசொல்லுவார்யாவர்சொல்லீர். (௧௫௩)

இற்றைநாளளவும்யாருமிருடிகளிமையோர்ஞான
முற்றினான்புபூண்டார்வேள்விகண்முடித்துநின்றார்
மற்றுமாதவருமெல்லாம்வாளெயிற்றிலங்கைவேந்தன்
பெற்றதார்பெற்றாரென்றுவியந்தனர்பெரியோரெல்லாம். (௧௫௪)

ஆ திருவிருத்தம் - ௪௯௨.

## ௫-வது, இலங்கைகேள்விப்படலம்.

வந்தடிவணங்கியநிருதர்மன்னவற்
கந்தமிலாததோருறையுளவ்வழித
தந்தனன்விடுத்தபினிரவிதன்கதிர்
சிந்தினவெய்யவென்றெண்ணித்தீர்ந்தனன். (௧)

சந்திவந்தனைத்தொழின்முடித்துத்தன்னெடும்
புந்திநொந்திராமனுமுயிர்ப்பப்பூங்கணை
சிந்திவந்திறுத்தனன்மதனன்றீநிறத்
தந்திவந்திறுத்ததுகறுத்ததண்டமே. (௨)

மாத்தடந்திசைதொறுமறைந்தவல்லிருள்
கோத்ததுகருங்கடல்கொள்ளைகொண்டென
நீத்தநீர்ப்பொய்கையினிறைந்தநாண்மலர்
பூத்தனமீன்குலம்பொலிந்ததண்டமே. (௩)

சில்லியல்கோதையைநினைந்துதேம்பிய
வில்லியைத்திருமனம்வெதுப்பும்வேட்கையால்
எல்லியைக்காண்டலுமலர்ந்தவீட்டினால்
மல்லிகைக்கானமும்வானமொத்ததே. (௪)

4. எல்லியை - இரவை.

ஒன்றுமுட்கறுப்பினோடொளியின்வாளுரீஇத்
தன்றனிமுகத்தினாலென்னைத்தாழ்ந்தற
வென்றவடுணைவனையின்றுவெல்குவேன்
என்றதுபோலவந்தெழுந்ததிந்துவே. (ரு)

கண்ணினையப்புறங்கரந்துபோகினும்
பெண்ணிறமுண்டெனிற்பிடிப்பலீண்டெனா
உண்ணிறைநெடுங்கடலுலகமெங்கணும்
வெண்ணிறநிலவெனும்வலையைவீசினான். (சு)

புடைக்கைவன்றிரையெடுத்தார்க்கும்போர்க்கடல்
உடைக்கருந்தன்னிறமொளித்துக்கொண்டவன்
அடைக்கவந்தானெனையரியின்றனையால்
கிடைக்கவந்தானெனக்கிளர்ந்ததொத்ததே. (எ)

மேலுகத்தொகுதியான்முதிர்ந்தமெய்யெலாம்
தோலுகுத்தாலெனவரவத்தோல்கடல்
வாலுகத்தாலிடைப்பரந்தவைப்பெலாம்
பாலுகுத்தாலெனநிலவுபாய்ந்ததால். (அ)

மன்றல்வாய்மல்லிகையெயிற்றுவண்டினம்
கன்றியவிடத்ததுநறவின்கண்ணது
குன்றின்வாய்முழையினிற்குலாயகொட்பது
தென்றலென்றொருபுலியுயிர்த்துச்சென்றதால். (கூ)

கரத்தொடும்பாழிமாக்கடல்கடைந்துளான்
உரத்தொடுங்காணிடையுருவவோங்கிய
மரத்தொடுந்தொளைத்தவன்மார்பின்மன்மதன்
சரத்தொடும்பாய்ந்தனநிலவின்றாரைவாள். (கo)

உடலினைநோக்குமின்னுயிரைநோக்குமால்
இடரினைநோக்குமற்றியாதுநோக்கலன்
கடலினைநோக்குமக்கள்வன்வைகுறும்
திடரினைநோக்குந்தன்சிலையைநோக்குமால். (கக)

பணிபழுத்தமைந்தபூணல்குற்பண்பினால்
பிணிபழுத்தமைந்ததோர்பித்தினுள்ளத்தான்

---

5. தாழ்ந்தற - கெடுமாறு.

9. மன்றல்வாய்மல்லிகை யெயிறுவண்டுணக், கன்றியநீர்த்தது நிலவின் கண்ணது என்றும் பாடம்.

அணிபழுத்தனைமந்தமுத்தரும்புசெந்துகிர்
மணிபழுத்தமைந்தவாய்மறக்கவல்லரோ. (கஉ)

ஆயதோரளவையினருக்கன்மைந்தனீ
தேய்வதென்காரியநிரப்புஞ்சிந்தையை
மேயவன்றன்னொடுமெண்ணிமேலினித்
தூயதுநினைக்கிலையென்னச்சொல்லினான். (கங)

அவ்வழியுணர்வுவந்தயர்வுநீங்கினன்
செவ்வழியறிஞனைக்கொணர்திசென்றென
இவ்வழிவருதியென்றியம்பவெய்தினான்
வெவ்வழிவிலக்கிநன்னெறியைமேவினான். (கச)

மருக்கிளர்தாமரைவாசநாண்மலர்
நெருக்கிடுதடமெனவிருந்தநீதியான்
திருக்கிளர்தாமரைபணிந்தசெம்மலை
இருக்கவீண்டெழுந்தெனவிருந்தகாலையில். (கரு)

ஆர்கலியிலங்கையினானுமவ்வழி
வார்கெழுகனைகழலரக்கன்வன்மையும்
தார்கெழுதானையினளவுந்தன்மையும்
நீர்கெழுதன்மையாய்நிகழ்த்துவாயென்றான். (கசு)

எழுதலுமிருத்தியென்றிராமனேயினான்
முழுதுணர்புலவனைமுளரிக்கண்ணினான்
பழுதறவினவியபொருளைப்பண்பினால்
தொழுதுயர்கையினான்றெரியச்சொல்லினான். (கஎ)

நிலையுடைவடவரைகுலையநேர்ந்ததன்
தலையெனவிளங்கியதமனியப்பெரு
மலையினைமும்முடிவாங்கியோங்குநீர்
அலைகடலிட்டனனனுமன்றாதையே. (கஅ)

எழுநூறியோசனையகலமிட்டகீழ்
ஆழநூறியோசனையாழிமால்வரை
வாழியாயுலகினைவளைந்தவண்ணமே
சூழுமாமதிலதுசுடர்க்குமேலதால். (ககூ)

மருங்குடைவினையமும்பொறியின்மாட்சியும்
இருங்கடியரணமும்பிறவுமெண்ணினாள்

18. தமனியப் பெருமலை - மாமேருமலை.

சுருங்கிடுமெனைப்பலசொல்லிச்சுற்றிய
கருங்கடலகழதுநீருங்கண்டிரால். (௨௦)

வடதிசைவயங்கொளிவாயில்வைகுவோர்
இடையிலரெண்ணிருகோடியென்பரால்
கடையுகமுடிவினிற்காலனென்பதென்
விடைவருபாகனைப்பொருவுமேன்மையோர். (௨௧)

மேற்றிசைவாயிலின்வைகும்வெய்யவர்க்
கேற்றமுமுளவவர்க்கிரண்டுகோடிமேல்
கூற்றையுங்கட்பொறிகுறுகக்காண்பரேல்
ஊற்றுறுகுருதியோடயிருமுண்பரால். (௨௨)

தென்றிசைவாயிலின்வைகுந்தீயவர்
என்றவரெண்ணிருகோடியென்பரால்
குன்றுறழ்நெடியவர்கொடுமைகூறியென்
வன்றிறல்யமனையுமரசுமாற்றுவார். (௨௩)

கீட்டிசைவாயிலின்வைகுங்கீழவர்
ஈட்டமுமெண்ணிருகோடியென்பநாற்
கோட்டிருந்திசைநிலைக்கும்பக்குன்றையும்
தாட்டுணைபிடித்தகன்றரையினெற்றுவார். (௨௪)

விண்ணிடைவிழித்தனர்நிற்கும்வெய்யவர்
எண்ணிருகோடியினிரட்டியென்பரால்
மண்ணிடைவானவர்வருவரென்றவர்
கண்ணிலர்கரையிலர்கரந்துபோயினார். (௨௫)

பிறங்கியநெடுமதிற்பின்னுமுன்னரும்
உறங்கலருண்பதமுலவையாதலால்
கறங்கெனத்திரிபவர்கணக்குவேண்டுமேல்
அறைந்துளதையிருநூறுகோடியால். (௨௬)

இப்படிமதிலொருமூன்றுவேறினி
ஒப்பரும்பெருமையுமுரைக்கவேண்டுமோ
மெய்ப்பெருந்திருநகர்காக்கும்வெய்யவர்
முப்பதுகோடியின்மும்மைமுற்றினார். (௨௭)

---

24. கும்பக்குன்றையும் - மத்தகத்தினையுடையயானையையும்.
26. உண்பதமுலவையாயென என்றும்பாடம்.

சிறப்பவன்செய்திடச்செல்வமெய்தினார்
அறப்பெரும்பகைஞர்களளவிலாற்றலர்
உறப்பெரும்பகைவரினுதவுமுண்மையர்
இறப்பிலரெண்ணிருநூறுகோடியே. (உஅ)

விடமலவிழியெனும்வெகுளிக்கண்ணினர்
கடனலவிமைத்தலுமென்னுங்காவலர்
வடவரைபுரைவனகோயில்வாயிலின்
இடம்வலம்வருபவரெண்ணெண்கோடியால். (உகூ)

பேயனேனென்பலபிதற்றிப்பேர்த்தவன்
மாயிருஞாலத்துவைத்தமாப்படை
தேயினுநாளெலாந்தேய்க்கவேண்டுவ
தாயிரவெள்ளமென்றறிந்ததாழியாய். (௩0)

அன்றியுமவனகன்கோயில்வாய்மனை
முன்றிலின்வைகுவார்முறைமைகூறிடின்
ஒன்றியவுலகையுமெடுக்குமூற்றத்தார்
குன்றினும்வலியவர்கோடிகோடியால். (௩க)

தேர்பதினாயிரம்பதுமஞ்செம்முகக்
கார்வரையவற்றினுக்கிரட்டிகால்வயத்
தூர்பரியவற்றினுக்கிரட்டியொட்டகம்
தார்வருபுரவியினிரட்டிசாலுமே. (௩உ)

இலங்கையினரணிதுபடையினெண்ணிது
வலங்கையில்வாள்சிவன்கொடுக்கவாங்கிய
அலங்கலந்தோளவன்றுணைவரந்தமில்
வலங்களும்வரங்களுந்தவத்தின்வாய்த்தவர். (௩௩)

வேறு.

தும்பியீட்டமுமிரதமும்புரவியுந்தொடர்ந்த
அம்பொன்மாப்படையையிருகோடிகொண்டமைந்தான்
செம்பொனாட்டுளசித்தரைச்சிறையிடைவைத்தான்
கும்பனென்றுளனூழிவெங்கதிரினுங்கொடியான். (௩௪)

உகம்பல்காலமுந்தவஞ்செய்துபெருவரமுடையான்
சுகம்பல்போரலால்வேறிலன்பொருபடைத்தொகையான்

31. அன்றுமவன்மகன் எனவும்பாடம் உண்டு. மாறினர் - முறையின் வைகுவாரும் பிரதியர்தாம்.

நகம்பலென்றிவையில்லதேர்நரசிங்கமனையான்
அகம்பனென்றுளனலைகடல்பருகவுமமைவான். (௩௫)

பொருப்பைபமீதிடும்புரவியும்பூட்கையுநதேரும்
உருப்பவிற்படையொன்பதுகோடியுமுடையான்
செருப்பைவானிடைச்சினக்கடாய்கடாய்வந்துசெறுத்த
நெருப்பைவென்றவனிகும்பனென்றுளனொருநெடியோன். (௩௬)

பேயையாளியையானையைக்கழுதையைப்பிணித்த
ஆயதேர்ப்படையையிருகோடிகொண்டமைந்தான்
தாயையாயினுஞ்சலித்திடுவஞ்சனைதவிரா
மாயையானுளன்மகோதரனென்றொருமறவோன். (௩௭)

குன்றில்வாழ்பவர்கோடிநாலைந்தினுக்கிறைவன்
இன்றுளார்பின்னைநாளையிலாரெனவெயிற்றல்
தின்றுளானெடும்பன்முறைதேவரைச்செருவின்
வென்றுளானுளன்வேள்வியின்பகைஞரோர்வெய்யோன். (௩௮)

மண்ணுளாரையும்வானிலுள்ளாரையும்வகுத்தால்
உண்ணுநாளொருநாளினென்றுளிர்படைத்தானை
எண்ணினவிருகோடியனெரியஞ்சவிழிக்கும்
கண்ணுளானுளன்சூரியன்பகையென்றோர்கழலான். (௩௯)

தேவருந்தக்கமுனிவருந்திசைமுகன்முதலா
மூவரும்பக்கநோக்கியேமொழிதரமுனிவான்
தாவரும்பக்கமெண்ணிருகோடியின்றலைவன்
மாவரும்பக்கனென்றுளன்குன்றினுமவலியான். (௪0)

உச்சிரத்தெரிகதிரெனவுருத்தெரிமுகத்தன்
நச்சிரப்படைநாலிருகோடிக்குநாதன்
முச்சிரத்தயிற்றலைவற்கும்விலக்கருமொய்ம்பன்
வச்சிரத்தெயிற்றவனுளன்கூற்றுவன்மாற்றான். (௪௧)

அசஞ்சலப்படையையிருகோடியனமரின்
வசஞ்செயாதவன்றனன்றிப்பிறரிலாவலியான்
இசைந்தவெஞ்சமத்தியக்கரைவேரொடுமுன்னாள்
பிசைந்துபோந்தவன்பிசாசனென்றுளனொருபித்தன். (௪௨)

சில்லிமாப்பெருந்தேரொடுங்கரிபரிசிறந்த
வில்லின்மாப்படையேழிருகோடிக்குவேந்தன்

கல்லின்மாப்படிகலக்குவன்கடலெனக்காந்திச்
சொல்லுமாற்றலன்றுன்முகனென்றறந்துறந்தான். (௪௩)

இலங்கைநாட்டன்னவெறிகடற்றீவிடையுறையும்
அலங்கல்வேற்படையையிருகோடிக்குமரசன்
வலங்கொள்வாட்டொழில்விஞ்சையர்பெரும்புகழ்மறைத்தான்
விலங்குநாட்டவனென்றுளன்வெயிலுகவிழிப்பான். (௪௪)

நாமநாட்டியசவமெனினுளென்றுமொருவர்
ஈமநாட்டிடையிடாமற்றன்னெயிற்றிடையிடுவான்
தாமநாட்டியகொடிப்படைப்பதுமத்தின்றலைவன்
தூமநாட்டவனென்றுளன்றேவரைத்துரந்தான். (௪௫)

போரின்மத்தனும்பொருவருமத்தனுமுலவா
நீரின்மத்தனும்பெருமையார்நெடுங்கடற்படையார்
ஆருமத்தனைவலியுடையாரிலையவரால்
பேருமத்தனையெத்தனையுலகமுப்பெரியோய். (௪௬)

இன்னதன்மையரெத்தனையாயிரரென்கேன்
அன்னவன்பெருந்துணைவராயமர்த்தொழிற்கமைந்தார்
சொன்னசொன்னவர்படைத்துணையிரட்டியின்றொகையான்
பின்னையெண்ணுவான்பிரகத்தனென்றொருபித்தன். (௪௭)

சேனைகாவலனிந்திரன்சிந்துரச்சென்னி
யானைகால்குலைந்தாழியோரேழும்விட்டகல
ஏனைவானவரிருக்கைவிட்டிரியலுற்றலையச்
சோனைமாரியிற்சுடுகணைபலமுறைதுரந்தான். (௪௮)

தம்பிமுப்பகற்சந்திரர்நால்வரிற்றயங்கும்
கும்பமாக்கரிக்கோடிருகைகளால்வாங்கிச்
செம்பொன்மால்வரைமதம்பட்டதாமெனத்திரித்தான்
கும்பகன்னனென்றுளன்பண்டுதேவரைக்குமைத்தான். (௪௯)

கோளிரண்டையுங்கொடுஞ்சிறைவைத்தவக்குமரன்
மூளும்வெஞ்சினத்திந்திரசித்தெனமொழிவான்
ஆளுமிந்திரற்கன்னவன்பிணித்ததற்பின்னைத்
தாளுமார்பினுந்தோளினுமுளவினுந்தழும்பு. (௫௦)

---

44. அலங்கல் - மாலை.

தன்னையுந்தெறுந்தருமமென்றிறைமனந்தாழான்
முன்னவன்றரப்பெற்றதோர்முழுவலிச்சிலையன்
அன்னவன்றனக்கிளையவனப்பெயரொழித்தான்.
பின்னொரிந்திரனிலாமையிற்பேரதிகாயன். (௫௧)

தேவராந்தகனராந்தகன்றிரிசிராவென்னும்
மூவராந்தகைமுதல்வராந்தலைவருமுனையில்
போவராந்தகையழிவராமெனத்தனிப்பொருவார்
ஆவராந்தகையிராவணற்கரும்பெறற்புதல்வர். (௫௨)

இனையதன்மையர்வலியிஃதிராவணனென்னும்
அனையவன்றிறம்யானறியளவெலாமறைவென்
தனையனான்முகன்றன்மகன்சிறுவற்குத்தவத்தால்
முனைவர்கோன்வரமுக்கணான்வரததொடுமுயர்ந்தான். (௫௩)

எள்ளிலைம்பெரும்பூதமும்யாவையுஞ்சூழப்
புள்ளிமானுரியாடையனுமையொடும்புணர்ந்த
வெள்ளியம்பெருந்தடங்கிரிவேரொடும்வாங்கி
அள்ளிவிண்டொடவெடுத்தனனுலகெலாமனுங்க. (௫௪)

என்றவெண்டிசையுலகெலாஞ்சுமக்கின்றயானை
ஊன்றுகோடிறத்திரள்புயத்தழுத்தியவொண்மை
தோன்றுமென்னவேதுணுக்கமுற்றிரிவரத்தொகுதி
மூன்றுகோடியின்மேலொருமுப்பத்துமூவர். (௫௫)

குலங்களோடுந்தங்குலமணிமுடியொடுங்குறைய
அலங்கல்வாள்கொடுகாலகேயரைக்கொன்றதற்பின்
இலங்கைவேந்தனென்றுரைத்தலுமிடியுண்டவரவின்
கலங்குமாலினுந்தானவர்தேவியர்கருப்பம். (௫௬)

குரண்டமாடுநீரளகையினொளித்துறைகுபேரன்
திரண்டமாடுந்தன்றிருவொடுநிதியமுமிழந்து
புரண்டுமான்றிரள்புலிகண்டதாமெனப்போனான்
இரண்டுமானமுமிலங்கைமாநகரமுமிழந்து. (௫௭)

புண்ணுஞ்செய்ததுமுதுகெனப்புறங்கொடுத்தோடி
உண்ணுஞ்செய்கையிற்றசமுகக்கூற்றந்தன்னுயிர்மேல்

---

51. இறை - சிறிதும். முன்னவன் - ஆதியந்தமிலாத முதல்வன்.
53. முக்கண் - மூனறுகண் அது சோமன் சூரியன் அக்கினி என்பன.
57. இரண்டுமாடுமென்றும்பாடம்.

நண்ணுஞ்செய்கையமெதனக்கொடுநாடொறுந்தன்னுள்
எண்ணுஞ்செய்கையனநதகன்றன்பதமிழந்தான். (௫௮)

இருணன்காசறவெழுகதிரவனிற்கவென்றும்
அருணன்கண்களுங்கண்டிலாவிலங்கைபண்டமரில்
பருணன்றன்பெரும்பாசமும்பறிப்புண்டுபயத்தால்
வருணனுய்ந்தனன்மகரநீர்வெள்ளத்துமறைநது. (௫௯)

என்றுலப்புறச்சொல்லுகேனிராவணனென்னும்
குன்றுலப்பினுமுலப்பிலாத்தோளினன்கொற்றம்
இன்றுலப்பினுநாளையேயுலப்பினுஞ்சிலநாள்
சென்றுலப்பினுநினக்கன்றிப்பிறர்க்கென்றுந்தீரான். (௬௦)

ஈடுபட்டவரெண்ணிலர்தோரணத்தெழுவால்
பாடுபட்டவர்படுகடன்மணலினும்பலரால்
கூடுபட்டதுகொடிநகரடுபுலிதுரந்த
ஆடுபட்டதேபட்டனரனுமனாலரக்கர். (௬௧)

காய்த்தவக்கணத்தரக்கர்தமுடலுகுகறைத்தோல்
நீத்தவெக்கரினிறைந்துளகருங்கடனெருப்பின்
வாய்த்தவக்கணைவரிசிலைமலையொடும்வாங்கித்
தேய்த்தவக்குழம்புலர்ந்திலவிலங்கையிற்றெருவில். (௬௨)

சேனைக்காவலரோரைவருளர்பண்டுதேவர்
வானைக்காவலுமானமுமாற்றியமறவர்
தானைக்கார்வருங்கடலொடுநதமரொடுந்தாமும்
யானைக்காற்பட்டசெல்லெனவொல்லையினவிந்தார். (௬௩)

எங்குலத்தவரெண்பதினாயிரரிறைவர்
கிங்கரப்பெயர்கிரியனதோற்றத்தர்கிளர்ந்தார்
வெங்கரத்தினுங்காலினும்வாலினும்வீக்கிச்
சங்கரற்கழிமுப்புரத்தவரெனச்சமைந்தார் (௬௪)

வெம்புமாகடற்சேனைகொண்டெதிர்பொரவெகுண்டான்
அம்புமாயிரத்தாயிரமிவன்புயத்தழுத்தி
உம்பர்வானகத்தொருதனிநமனைச்சென்றுற்றான்
சம்புமாலியும்வில்லினாற்சுருக்குண்டுதலைவ. (௬௫)

---

60. தீரான் - அழியான்.
65. சுருக்குண்டு - உயிர்குறைந்து.

சொன்னமாமதிலிலங்கையின்பரப்பிதுதுகைத்துச்
சின்னமானவர்கணக்கிலர்நீர்களேதெரிதிர்
இன்னமாருளர்வீரர்மற்றிவன்சுடவெரிந்த
அன்னமாநகரவிந்ததக்குருதியாலகன்று. (௬௬)

விலங்கல்வெந்தவாவேறினிவிளம்புவதெவனே
அலங்கன்மாலையுஞ்சார்ந்தமுமன்று தானணிந்த
கலன்களோடுமச்சாத்தியதுகிலொடுங்கதிர்வாள்
இலங்கைவேந்தனுமேழுநாள்விசும்பிடையிருந்தான். (௬௭)

ஈதுமற்றிண்டிறலரக்கனதிலங்கையைநுவன்றேன்
அதுமற்றவ்வழியரணமும்பெருமையுமறைந்தேன்
இதுமற்றவ்வழியெய்தியதிராவணனேவப்
பதுமத்தண்ணலேபண்டுபோலந்நகர்படைத்தான். (௬௮)

காந்துமானையிற்கரன்முதல்வீரருங்கவியின்
வேந்துமென்றிவர்விளிந்தவாகேட்டன்றுவிலங்கல்
தீந்தவாகண்டுமரக்கரைச்செருவிடைமுருக்கிப்
போந்தவாகண்டுநானிங்குப்புகுந்ததுபுகழோய். (௬௯)

கேள்கொண்மேலையான்கிளத்தியபொருளெலாங்கேட்டான்
வாள்கொணோக்கியைப்பாக்கியப்பழுத்தனமயிலை
நாள்கள்சாலவுநீங்கலினலங்கடமெலிந்த
தோள்கள்வீங்கித்தன்றாதனைப்பார்த்திவைசொன்னான். (௭௦)

கூட்டினார்படைபாகத்தின்மேற்படக்கொன்றாய்
ஊட்டினாயெரியூர்முற்றுமினியங்கொன்றுண்டோ
கேட்டவாற்றினாற்கிளிமொழிச்சீதையைக்கிடைத்தும்
மீட்டிலாததென்விற்றொழில்காட்டக்கொல்வீர. (௭௧)

நின்செய்தோள்வலிநிரம்பியவிலங்கையைநேர்ந்தோம்
பின்செய்தோஞ்சிலவவையினிப்பீடொன்றுபெறுமோ
பொன்செய்தோளினாய்போர்ப்பெரும்படையொடும்புக்கோம்
என்செய்தோமென்றுபெரும்புகழெய்துவானிருந்தோம். (௭௨)

என்னதாக்கியவலியொடவ்விராவணன்வலியும்
உன்னதாக்கினைபாக்கியமுருக்கொண்டதொப்பாய்
முன்னதாக்கியமூவுலகாக்கியமுதலோன்
பின்னதாக்கியபதநினக்காக்கினென்பெற்றாய். (௭௩)

என்றுகூறலுமெழுந்திருந்திலனுறவிறைஞ்சி
யொன்றும்பேசலனுணினன்வணங்கியவுரவோன்
நின்றவானரத்தலைவருமரசுமங்நெடியோன்
வென்றிகேட்டலும்வீடுபெற்றாரெனவியந்தார். (எச)

ஆக திருவிருத்தம் - ருகரு.

## சு-வது, வருணனைவழிவேண்டுபடலம்.

தொடக்குமென்னினிவ்வுலகொருமூன்றையுந்தோளால்
அடக்கும்வண்ணமுமழித்தலுமொருபொருளன்றால்
கிடக்கும்வண்ணவெங்கடலினைக்கிளர்பெருஞ்சேனை
கடக்கும்வண்ணமுமெண்ணுதியெண்ணுநூல்கற்றாய். (க)

கரந்துநின்றநின்றன்மையையதுசெலக்கருதும்
பரந்ததுன்றிருக்குலமுதற்றலைவராற்பரிவாய்
வரந்தரும்மிந்தமாக்கடல்படைசெலவழிவே
றிரந்துவேண்டுதியெறிதிரைப்பரவையையென்றான். (உ)

நன்றிலங்கையர்நாயகன்மொழியெனநயந்தான்
ஒன்றுதன்பெருந்துணைவரும்புடைசெலவுரவோன்
சென்றுவேலையைச்சேர்தலும்விசும்பிடைச்சிவந்த
குன்றின்மேனின்றுகுதித்தனபகலவன்குதிரை. (ங)

கொழுங்கதிர்ப்பகைக்கோளிருணீங்கியகொள்கை
செழுஞ்சுடர்ப்பனிக்கலையெலாநிரம்பியதிங்கள்
புழுங்குவெஞ்சினத்தஞ்சனப்பொறிவரியரவம்
விழுங்குநீங்கியதொத்ததுவேலைசூழ்ஞாலம். (ச)

தருணமங்கையைமீட்பதோர்நெறிதருகென்னும்
பொருணயந்துநன்னூனெறியடுக்கியபுல்லில்
கருணையங்கடறுயின்றனன்கருங்கடனோக்கி
வருணமந்திரமெண்ணினன்விதிமுறைவணங்கி. (ரு)

ஊழிசென்றுதன்றிருவுருப்பொருந்தவும்பொறைதீர்
வாழிவெங்கதிர்மணிமுகம்வருடவும்வளர்ந்தான்
ஊழிசென்றனவொப்பனவொருபகலவையோர்
ஏழுசென்றனவந்திலனெறிகடற்கிறைவன். (சு)

74. நெடியோன் எனறது ஈண்டு அனுமனை.

ஊற்றமீக்கொண்டவேலையானுண்டிலையென்னும்
மாற்றமீக்கவும்பெற்றிலம்யாமெனுமனத்தால்
ஏற்றமீக்கொண்டபுனலிடையெரிமுளைத்தென்னச்
சீற்றமீக்கொண்டுசிவந்தனதாமரைச்செங்கண். (எ)

மாண்டவில்விழுந்தயருநான்வழிதனைவணங்கி
வேண்டவில்லையென்றெளித்ததாமெனமனம்வெதும்பி
நீண்டவில்லுடைநெடுங்கனலுயிர்ப்பொடுநெடுநாண்
பூண்டவில்லெனக்குனித்தனகொழுங்கடைப்புருவம். (அ)

ஒன்றுவேண்டலராயினுமொருவர்பாலொருவர்
சென்றுவேண்டுவரேலவர்சிறுமையிற்றீரார்
இன்றுவேண்டியதெறிகடனெறிதனைமறுத்தல்
நன்றுநன்றெனநகையொடும்புகையுகநக்கான். (கூ)

பாரநீங்கியசிலையினனிராவணன்பறிப்பத்
தாரநீங்கியதன்மையனுதலிற்றகைசால்
வீரநீங்கியமனிசனென்றிகழ்ச்சிமேல்விளைய
ஈரநீங்கியதெறிகடலாமெனவிசைத்தான். (கo)

புரந்துகோடலும்புகழொடுகோடலும்பொருது
துரந்துகோடலுமென்றிவைதொன்மையிற்றொடர்ந்த
இரந்துகோடலுளியற்கையுந்தருமமுமெஞ்சக்
கரந்துகோடலேநன்றினிநின்றதென்கழறி. (கக)

கானிடைப்புகுநதிருங்கனிகாயொடுநுகர்ந்த
ஊனுடைப்பொறையுடம்பினனெனன்றுகொண்டுணர்ந்த
மீனுடைக்கடற்பெருமையும்வில்லொடுநின்ற
மானுடச்சிறுதன்மையுங்காண்பரால்வானோர். (கஉ)

ஏதமஞ்சிநானிரந்ததேதெளிதெனவிகழ்ந்த
ஓதமஞ்சிநேடிரண்டும்வெந்தொருபொடியாகப்
பூதமஞ்சும்வந்தஞ்சலித்துயிர்கொண்டுபொருமப்
பாதமஞ்சலர்செஞ்செவேபடர்வரென்புடைஞர். (கரு)

மறுமைகண்டமெய்ஞ்ஞானியர்ஞாலத்துவரினும்
வெறுமைகண்டபின்யாவரும்யாரெனவிரும்பார்

---

8. மாண்ட - மாட்சிமைகொண்ட.

12. கடற்பெருமையும் - கடற்காசனன வருணன் பெருமிதமும்.

குறுமைகண்டவர்கொழுங்கனலென்னினுங்கூசார்
சிறுமைகண்டவர்பெருமைகண்டல்லதுதேருர். (௧௪)

திருதியென்பதொன்றிழிதரவூழியிற்சினவும்
பருதிமண்டிலமெனப்பொலிமுகத்தினன்பலகால்
தருதிவில்லெனுமளவையிற்றம்பியும்வெம்பிக்
குருதிவெங்கனலுமிழ்கின்றகண்ணினன்கொடுத்தான். (௧௫)

வாங்கிவெஞ்சிலைவாளியின்மற்றொருவேலை
வீங்குதோள்வலம்வீக்கினன்கோதையைவிரலால்
தாங்கிநாணியினைத்தாக்கினன்ருக்கியதமரம்
ஓங்குமுக்கணான்றேவியைத்தீர்த்துளதூடல். (௧௬)

மாரியின்பெருந்துளியினும்வரம்பிலவடித்த
சீரிதென்றவையெவற்றினுஞ்சீரியதெரிந்து
பாரியங்கிரும்புனலெலாமுடிவினிற்பருகும்
சூரியன்கதிரனையனசுடுசரந்துரந்தான். (௧௭)

பெரியமால்வரையேழினும்பெருவலிபெற்று
வரிகொள்வெஞ்சிலைவளர்பிறையாமெனவாங்கித்
திரிவநிற்பனயாவையுமுடிவினிற்றீக்கும்
எரியின்மும்மடிகொடியனசுடுசரமெய்தான். (௧௮)

மீனுநாகமும்விண்டொடுமலைகளும்விறகாய்
ஏனைநிற்பனயாவையுமேலெரியெய்தப்
பேனநீர்நெடுநெய்யெனப்பெய்கணைநெருப்பால்
கூனையங்கியின்குண்டமொத்ததுகடற்குட்டம். (௧௯)

பாழிவன்னெடுங்கொடுஞ்சிலைவழங்கியபகழி
ஏழுவேலையுமெரியொடுபுகைமடுத்தேகி
ஊழிவெங்கனற்கொழுந்துகளுருத்தெழுநதோடி
ஆழிமால்வரைக்கப்புறத்திருளையுமவித்த. (௨௦)

மருமதாரையினெரியுண்டமகரங்கண்மயங்கிச்
செருமவானிடைக்கற்பகமரங்களுந்தீய
நிருமியாவிட்டநெடுங்கணைபாய்தலினெருப்போ
டுருமுவீழ்ந்தெனச்சென்றனகடற்றுளியும்பர். (௨௧)

கூடும்வெம்பொறிக்கொடுங்கனறொடர்ந்தனகொளுந்த
ஓடுமேகங்கள்பொரிந்திடையுதிர்ந்தனவும்பர்

19. பேனம் - நுரை.

ஆடுமங்கையர்கருங்குழல்விளர்த்தனவளக்கர்
கோடுதீர்ந்தெழக்கொழும்புகைப்பிழம்புமீக்கொள்ள. (௨௨)

நிமிர்ந்தசெஞ்சரநிறந்தொறும்படுதலுநெய்த்தோர்
உமிழ்ந்துலர்ந்தனமகரங்களுலப்பிலவுருவத்
துமிந்ததுண்டமும்பலபடத்துரந்தனதொடர்ந்து
திமிங்கிலங்களுந்திமிங்கிலகிலங்களுஞ்சிதறி. (௨௩)

நீறுமீச்செலநெருப்பெழப்பொருப்பெலாமெரிய
தூறுமாயிரகோடியுங்கடுங்கணை நுழைய
ஆறுகீழ்ப்படவளறுபட்டமுந்தியவளக்கர்
சேறுதீர்ந்தெழக்காந்தினசேடன்றன்சிரங்கள். (௨௪)

மொய்த்தமீன்குலமுதலறமுருங்கினமொழியில்
பொய்த்தசான்றவன்குலமெனப்பொருகணையெரிய
உய்த்தகூம்புடைநெடுங்கலமோடுவகடுப்பத்
தைத்தவம்பொடுந்திரிந்தனதைதாலமீன்சாலம். (௨௫)

சிந்தியோடியகுருதிவெங்கனல்களேசெறிய
அந்திவானகங்கடுத்ததவ்வளப்பருமளக்கர்
பந்திபந்திகளாய்நெடுங்கணையடர
வெந்துதீர்ந்தனகரிந்தனபொரிந்தனசிலமீன். (௨௬)

வையநாயகன்வடிக்கணைக்குடித்திடவற்றி
ஐயநீருடைத்தாய்மருங்கருங்கனன்மண்டக்
கைகலந்தெரிகருங்கடல்காரகல்கடுப்ப
வெய்யநெய்யிடைவேவனவொததனசிலமீன். (௨௭)

குணிப்பருங்கொடும்பகழிகள்குருதிவாய்மடுப்பக்
கணிப்பரும்புனல்கடையுறக்குடித்தலிற்காந்து
மணிப்பருந்தடங்குப்பைகண்மறிகடல்வெந்து
தணிப்பருந்தழல்சொரிந்தனபோன்றனதயங்கி. (௨௮)

எங்கும்வெள்ளிடைமடுத்தலினிழுதுடையினமீன்
சங்கமுங்கறிகிழங்கெனவிடையிடைத்தழுவி
அங்கம்வெந்துபேரளற்றிடையடுக்கியகிடந்த
பொங்குநன்னெடும்புனலறப்பொரித்தனபோன்ற. (௨௯)

அதிரும்வெங்கணையொன்றையொன்றடர்ந்தெரியுய்ப்ப
வெதிரின்வன்னெடுங்கானெனவெந்தனமீனம்

பொதுவின்மன்னுயிர்க்குலங்களுந்துணிந்தனபொழிந்த
உதிரமுங்கடற்றிரைகளுமபொருவனவொருபால். (௩௦)

அண்ணல்வெங்கணையறுத்திடத்தெறித்தெழுந்தளக்கர்
பண்ணைவெம்புனல்படப்படநெருப்பொடும்பற்றி
மண்ணில்வேருறப்பற்றியநெடுமாமுற்றும்
எண்ணெய்தோய்ந்தனவெரிந்தனகிரிக்குலமெல்லாம். (௩௧)

தெய்வநாயகன்றெரிகணைதிசைமுகத்தொருவன்
வைவிதாமெனப்பிழைப்பிலமனத்தினுங்கடுக
வெய்யவன்னெருப்பிடையிடைபொறித்தெழவெறிநீர்ப்
பொய்கைதாமரைபூத்தெனப்பொலிந்தனபுணரி. (௩௨)

செப்பின்மேலவர்சீறினுமதுசிறப்பாதல்
தப்புமேயதுகண்டனமுவரியிற்றணியா
உப்புவேலையென்றுலகுறுபெரும்பழிநீங்கி
அப்புவேலையாய்நிறைந்ததுகுறைந்ததோவளக்கர். (௩௩)

தாரையுண்டபேரண்டங்களடங்கலுந்தானே
வாரியுண்டருள்செய்தவற்கிதுவொருவலியோ
பாரையுண்பதுபடர்புனலப்பெரும்பரவை
நீரையுண்பதுநெருப்பெனுமப்பொருணிறுத்தான். (௩௪)

## வேறு.

மங்கலம்பொருந்தியதவத்துமாதவர்
கங்குலும்பகலுமக்கடலுள்வைகுவார்
அங்கம்வெந்திலரவனடிகளெண்ணலால்
பொங்குவெங்கனலெனும்புனலிற்போயினர். (௩௫)

தென்றிசைகுடதிசைமுதலதிக்கெலாம்
துன்றியபெரும்புகைப்படலஞ்சுற்றலால்
கன்றியநிறத்தனகதிரவன்பரி
நின்றனசென்றிலநெறியினீங்கின. (௩௬)

பிறிந்தவர்க்குறுபொருளுணரும்பெற்றியோர்
அறிந்திருந்தறிந்திலரனையராமெனச்
செறிந்ததம்பெடைகளைத்தேடித்தீக்கொள
மறிந்தனகரிந்தனவானப்புள்ளெலாம். (௩௭)

33. அப்புவேலை - அம்புக்கடல்.

கமைபறுகருங்கடல்கனலிகைபரந
தமைவனமொத்தபோதறையவேண்டுமோ
சுமையுறுபெருமபுகைப்படலஞ்சுற்றலால்
இமையவரிமைத்தனர்வியர்ப்புமெய்தினர். (௩அ)

பூச்செலாதவணடைபோல்கிலாமையால்
ஏச்செலாமெய்தியவன்னம்யாவையுந்
தீச்செலாநெறிபிறிதின்மையாற்றிசை
மீச்செலாபுனலவன்புகழின்வீந்ததால். (௩௯)

பம்புறுநெடுங்கடற்பறவையாவையும்
உம்பரிற்செல்லலுற்றுருகிவீழ்ந்தன
அம்பரமம்பரத்தேகலாற்றல
இம்பரினுதிர்ந்தனவெரியுமெய்யன. (௪௦)

பட்டனபடப்படப்படாதபுட்குலம்
சுட்டுவந்தெரிக்குலப்படலஞ்சுற்றலால்
இட்டுழியறிகிலவிரியல்போவன
முட்டையென்றெடுத்தனகடுத்தமுத்தெலாம். (௪௧)

வள்ளலைப்பாவிகாண்மணிசனென்றுகொண்
டெள்ளலுற்றறைந்தனமெண்ணிலாமென
வெள்ளிவெண்பற்களைக்கிழித்துவிண்ணுறத்
துள்ளலுற்றிரிந்தனகுரங்குசூழ்ந்தில. (௪௨)

தாநெடுந்தீமைகளுடையதன்மையார்
மாநெடுங்கடலிடைமறைந்துவைகுவார்
தூநெடுங்குருதிவேலவுணர்துஞ்சினர்
மீநெடுங்கிரியெனமிதந்துவீங்கினர். (௪௩)

தசும்பிடைவிரிந்தனவென்னுந்தாரைய
பசும்பொனின்விமானங்களுருகிப்பாய்ந்தன
அசும்பறவறந்தனவானவாறெலாம்
விசும்பிடைவிளங்கியமீனும்வெந்தவால். (௪௪)

செறிவுறுசெம்மையதீயையோம்புவ
நெறியுறுசெலவினதவத்தினீண்டன

---

38. இமையவர் - தேவர் இமையாத நாட்டத்தவர்.

41. கடுத்த - முட்டையையொத்த.

44. அசும்பற - ஊற்றில்லாதாக.

உறுசினமுறப்பலவுருவுகொண்டன
குறுமுனியெனக்கடல்குடிக்தகூர்ங்கணே. (௪௫)

மோதலங்கனேகடன்முழங்கத்தீயினால்
பூதலங்காவொடுமெரிந்தபொன்மதில்
வேதலுமிலங்கையுமீளப்போயின
தூதன்வந்தானெனத்துணுக்கங்கொண்டதால். (௪௬)

அருக்கனிலொளிவிடுமாடகக்கிரி
உருக்கெனவுருகினவுதிரந்தோய்ந்தன
முருக்கெனச்சிவந்தனமுரியவெந்தன
கரிக்குவைநிகர்த்தனபவளக்காடெலாம். (௪௭)

பேருடைக்கிரியெனப்பெருத்தமீன்களும்
ஓரிடத்துயிர்தரித்தொதுங்ககிற்றல
நீரிடைப்புகுஞ்சிலநெருப்புநன்றெனப்
பாரிடைக்குதித்தனபதைக்குமெய்யன. (௪௮)

சுருள்கடற்றிரைகளைத்தொலையவுண்டனல்
பருகிடப்புனலிலபகழிபாரிடம்
மருள்கொளப்படர்வனநாகர்வைப்பையும்
இருள்கெடச்சென்றுளவிரவிபோல்வன. (௪௯)

கரும்புறக்கடலகளோடுலகங்காய்ச்சிய
இரும்புறச்செல்வனவிழிவகீழுற
அரும்புறத்தண்டத்தையுருவியப்புறம்
பெரும்புறக்கடலையுந்தொடர்ந்துபின்செல்வ. (௫௦)

திடறிறந்துகுமணித்திரள்கள்சேணிலம்
உடறிறந்துதிரம்வந்துகுவபோன்றன
கடறிறந்தெங்கணும்வற்றவக்கடல்
குடறிறந்தனவெனக்கிடந்தகோளரா. (௫௧)

ஆழியிற்புனலறமணிகளட்டிய
பேழையிற்பொலிந்தனபரவைபேறுறப்
பூழையிற்பொருகணையுருவப்புக்கன
மூழையிற்பொலிந்தனமுரலும்வெள்வளை. (௫௨)

---

51. குடறிறந்தனவென - குடல்வெளிப்பட்டாங்கு.
52. முரலும் - ஒலிக்கின்ற.

நின்றுநூறுயிரம்பகழிநீட்டலால்
குன்றுநூறுயிரங்கோடியாயின
சென்றுதேய்வுறுவரோபுலவர்சீறினும்
ஒன்றுநூறுயினவுவரிமுத்தெல்லாம். (ருங)

சூடுபெற்றையனேதொலக்குமன்னுயிர்
வீடுபெற்றனவிடைமிடைந்தவேனுவின்
காடுபற்றியபெருங்கனலிகைபரந்
தோடியுற்றதுநெருப்புவரிநீரெலாம். (ருச)

காலவான்கடுங்கணைசுற்றுங்கல்வலால்
நீலவான்றுகிலினைநீக்கிப்பூநிறக்
கோலவான்களிநெடுங்கூறைசுற்றினாள்
போலமாநிலமகள்பொலிந்துதோன்றினாள். (ருரு)

கற்றவர்கற்றவருணர்வுகாண்கிலாக்
கொற்றவன்படைக்கலங்குடித்தவேலைவிட்
டுற்றுயிர்ப்படைத்தெழுந்தோடலுற்றதால்
மற்றொருகடல்புகவடவைத்தீயரோ (ருசு)

வாழியருலகினைவளைத்துவானுறச்
சூழிரும்பெருஞ்சுடர்ப்பிழம்புதோன்றலால்
ஊழியினுலகெலாமுண்ணவோங்கிய
ஆழியிற்பொலிந்ததவ்வாழியன்னநாள். (ருஎ)

ஏனையரெண்ணவேறுலகினீண்டினார்
ஆனவர்செய்தனவறையவேண்டுமோ
மேனிமிர்ந்தெழுகனல்வெதுப்பமீதுபோய்
வானவர்மலரயனுலகின்வைகினார். (ருஅ)

இடுக்கினியியம்புவதென்னையிவ்வழி
முடுக்குவென்வருணனையென்னமூண்டெழு
தடுக்கரும்வெகுளியான்சதுமுகன்படை
தொடுத்தனனமருந்துணுக்கமெய்தினார். (ருகூ)

மழைக்குலங்கதறினவருணன்வாயுலர்ந்
தழைத்தனனுலகமுமடைத்தவாறெலாம்
இழைத்தனநெடுந்திசையாதும்யாரினிப்
பிழைப்பிலரென்பதோர்பெரும்பயத்தினால். (சு0)

---

59. இடுக்கு - வருத்தம்.

வேறு.

அண்டமூலத்துக்கப்பாலாழியுங்கொதித்ததேழு
தெண்டிரைக்கடலின்செய்கைசெப்பியென்றேவன்சென்னி
பண்டைநாளிருந்தகங்கைநங்கையும்பதைத்தாள்பார்ப்பான்
குண்டிகையிருந்தநீருங்குளுகுளுகொதித்ததன்றே. (௬௧)

இரக்கம்வந்தெதிர்ந்தகாலத்துலகெலாமீன்றுமீளக்
கரக்குநாயகனைத்தானுமுணர்ந்திலன்சீற்றங்கண்டும்
வரக்கருதாது தாழ்த்தவருணனின்மாறுகொண்டான்
அரக்கரேயல்லரென்னவறிஞருமலக்கணுற்றார். (௬௨)

உற்றொருதனியேதானேதன்கணேயுலகமெல்லாம்
பெற்றவன்முனியப்புக்கானடுவினிப்பிழைப்பதெங்ஙன்
குற்றமொன்றிலாதேதார்மேலுங்கோள்வரக்குறுகுமென்ன
மற்றையபூதமெல்லாம்வருணனைவைதமாதோ. (௬௩)

எழுசுடர்ப்படலையோடுமிரும்புகையெழும்பியெங்கும்
வழிதெரிவறிவிலாதநோக்கினன்வருணனென்பான்
அழுதழிகண்ணனன்பாலுருகியநெஞ்சனஞ்சித்
தொழுதெழுகையனாய்த்திற்றோன்றினன்வழுத்துஞ்சொல்லான். ()

நீயெனைநினைந்ததன்மைநெடுங்கடன்முடிவினின்றேன்
ஆயினேனறிநதிலேனென்றண்ணலுக்கயிர்ப்புநீங்கக்
காயெரிப்படலைசூழ்ந்தகருங்கடற்றரங்கத்தூடே
தீயிடைநடப்பான்போலச்செறிபுனற்கிறைவன்சென்றான். (௬௫)

வந்தனனென்பமன்னோமறிகடற்கிறைவன்வாயில்
சிந்தியமொழியன்றீர்ந்தசென்னியன்றிகைத்தநெஞ்சன்
வெந்தழிந்துருகுமெய்யன்விழுப்புகைப்படலம்விம்ம
அந்தரினலமந்தஞ்சித்துயருழந்தலக்கணுற்றான். (௬௬)

நவையறுமுலகிற்கெல்லாநாயகநீயேசீறின்
கவையநின்சரணமல்லாற்பிறிதொன்றுகண்டதுண்டோ
இவையுனக்கரியவோதானெனக்கெனவலிவேறுண்டோ
அவையநின்னவயமென்னவடுத்தடுத்தாற்றுகின்றான். (௬௭)

ஆழிநீயனலுநீயேயல்லவையெல்லாநீயே
ஊழிநீயுலகுநீயேயவற்றுறையுயிருநீயே

61. கொளகொள - என்றும் பாடம்.

வாழியாயடியேனுன்னைமறப்பனோவயங்குசெந்தீச்
சூழுறவுலைந்துபோனேன்காத்தருள்சுருதிமூர்த்தி. (கூஅ)

காட்டுவாயுலகங்காட்டிகாத்தவைகடையிற்செந்தீ
ஊட்டுவாய்யுண்பாய்நீயேயுனக்குமொண்ணாததுண்டோ
நீட்டுவான்பகழியொன்றாலுலகங்களைவைபுந்தீய
வீட்டுவாய்நினையினாயேற்கித்தனைவேண்டுமோதான். (கூகூ)

சண்டவான்கிரணவாளாற்றயங்கிருட்காடுசாய்க்கும்
மண்டிலத்துறையுஞ்சோதிவள்ளலேமறையின்வாழ்வே
பண்டைநான்முகனேயாதிச்சராசரத்துள்ளபள்ளப்
புண்டரீகத்துவைகும்புராதனாபோற்றிபோற்றி. (எ௦)

கள்ளமாயுலகங்கொள்ளுங்கருணையான்மறையிற்கூறும்
எள்ளலாகாதமூலத்தியாதுக்குமுதலாயுள்ள
வள்ளலேகாத்தியென்றமாகரிவருத்தந்தீரப்
புள்ளின்மேல்வந்துதோன்றும்புராதனாபோற்றிபோற்றி. (எக)

அன்னைநீயத்தனீயேயல்லவையெல்லாநீயே
பின்னுநீமுன்னுநீயேபேறுநீயிகழ்வுநீயே
என்னைநீயிகழ்ந்தவென்றதெங்ஙனேயீசனாய
உன்னைநீயுணராய்நாயேனெங்ஙனமுணர்வேனுன்னை. (எஉ)

பாயிருள்சீக்குந்தெய்வப்பரிதியைப்பழிக்குமாலை
மாயிருங்கரத்தான்மண்மேலடியுறையாகவைத்துத்
தீயனசிறியோர்செய்தாற்பொறுப்பதுபெரியோர்மேற்றே
ஆயிரநாமத்தையாசரணமென்றடியில்வீழ்ந்தான். (எங)

பருப்பதம்வேவதென்னப்படரொளிபடராநின்ற
உருப்பெறக்காட்டிநின்றுயானுனக்கபயமென்ன
அருப்பறப்பிறந்தகோபமாறினனுருவாற்றல்
நெருப்புறப்பொங்கும்வெம்பாணீருற்றதன்னநீரான். (எச)

ஆறினமஞ்சலுன்பாலளித்தனமபயமன்பால்
ஈறிலாவணக்கஞ்செய்தியாமிரந்திடவெய்யாதே
சீறுமாகண்டுவந்ததிறத்தினைத்தெரிவதாகக்
கூறுநீயறியவென்றான்வருணனுந்தொழுதுகூறும். (எரு)

---

71. கரி - யானை.
74. வெம்பால் - இனிமையானபால்.

பார்த்தனிற்பொறையின்மிக்கபத்தினிக்குற்றபண்பு
வார்த்தையினறிந்ததல்லாற்றேவர்பால்வந்திலேனால்
தீர்த்தநின்னாணையேழாஞ்செறிதிரைக்கடலின்மீனின்
போர்த்தொழில்விலக்கப்போனேனறிந்திலேன்புகுந்ததொன்றும்.

என்றலுமிறங்கியையணித்திறநிற்கவிந்தப்
பொன்றலில்பகழிக்கப்பாலிலக்கமென்புகறியென்ன
நன்றெனவருணன்யானுமுலகமுநலிவுதீர்ந்தாம்
குன்றெனவுயர்ந்ததோளாய்கூறுவலென்றுகூறும். (௭௭)

மன்னவமருகாந்தாரமென்பதோர்தீவின்வாழ்வார்
அன்னவர்சதகோடிக்குமேலுளாரவுணராயோர்
தின்னவேயுலகமெல்லாந்தீந்தனவெனக்குந்தீயார்
மின்னுமிழ்கணையைவெய்யோர்மேற்செலவிடுதியென்றான். (௭௮)

நேடிநூறெறிந்துளோர்க்குமுணர்விற்குநிமிரநின்றோன்
கோடிநூறாயதீயவவுணரைக்குலங்களோடும்
ஓடிநூறென்றுவிட்டானோரிமையொடுங்காமுன்னம்
பாடிநூறாகநூறிமீண்டதப்பகழித்தெய்வம். (௭௯)

ஆய்வினையுடையராகியறம்பிழையாதார்க்கெல்லாம்
ஏய்வனநலனேயன்றியிறுதிவந்தடைவதுண்டோ
மாய்வினையியற்றிமுற்றும்வருணன்மேல்வந்தசீற்றம்
தீய்வினையுடையார்மாட்டேதீங்கினைச்செய்ததன்றே. (௮௦)

பாபமேயியற்றினாரைப்பன்னெடுங்காதமோடித்
தூபமேபெருகும்வண்ணமெரியெழச்சுட்டதன்றே
தீபமேயனையஞானத்திருமறைமுனிவன்செப்பும்
சாபமேயொத்ததம்புதருமமேவலியதம்மா. (௮௧)

மொழியுனக்கபயமென்றாயாதலான்முனிவுதீர்ந்தேன்
பழியெனக்காகுமென்றுபாதகர்பரவையென்னும்
குழியினைக்கருதிச்செய்தகுமண்டையைக்குறித்துநீங்க
வழியினைத்தருதியென்றான்வருணனைநோக்கிவள்ளல். (௮௨)

ஆழமுமகலந்தானுமளப்பரிதெனக்குமைய
ஏழவையடுக்கிநின்றவுலகுக்குமெல்லையில்லை
வாழியாய்வற்றிநீங்கில்வரம்பிலகாலமெல்லாம்
தாழுநின்சேனையுள்ளந்தளர்வுறுந்தவத்தின்மிக்காய். (௮௩)

---

81. தூபம் - புகை. 82. குமண்டையை - குற்றத்தினை.

கல்லெனவலித்துநிற்பிற்கணக்கிலவுயிர்களெல்லாம்
ஒல்லையினுலந்துவீயுமிட்டதொன்றெழுகாவண்ணம்
எல்லையில்காலமெல்லாமேந்துவெனினிதினெந்தாய்
செல்லுதிசேதுவென்றென்றியற்றியென்சிரத்தின்மேலாய். (௮௪)

நன்றிதுபுரிதுமன்றேநளிகடற்பெருமைநம்பால்
இன்றிதுதீருமென்னிலெளிவரும்பூதமெல்லாம்
குன்றுகொண்டடுக்கிச்சேதுகுயிற்றுதிரென்றுகூறிச்
சென்றனனிருக்கைநோக்கிவருணனுமருளிற்சென்றான். (௮௫)

ஆ_' திருவிருத்தம் - ௬௧௬.

---

## ௭-வது, சேதுபந்தனப்படலம்.

அளவறுமறிஞரோடரக்கர்கோமகற்
கிளவலுமினிதுடனிருக்கவெண்ணினான்
விளைவனசெய்வனமுடிக்கவேண்டுவான்
நளன்வருகென்றனன்கவிக்குநாயகன். (௧)

வந்தனன்வானரத்தச்சன்மன்னநின்
சிந்தனையென்னெனசசெறிதிரைக்கடல்
பந்தனைசெய்குதல்பணிநமக்கென
நிந்தனையிலாதவன்செய்யநேர்ந்தனன். (௨)

காரியங்கடலினையடைத்துக்கட்டலே
சூரியன்காதலேசொல்லியென்பல
மேருவுமணுவுமோர்வேறுருவகை
ஏருறவியற்றுவென்கொணர்தியென்றனன். (௩)

இளவலுமிறைவனுமிலங்கைவேந்தனும்
அளவறுநங்குலத்தரசுமல்லவர்
வளைதருங்கருங்கடலடைக்கவம்மெனத்
தளமலிசேனையைசசாம்பன்சாற்றினான். (௪)

கருவரைகாதங்கள்கணக்கிலாதன
இருகையிற்றோள்களிற்சென்னியேந்தின

---

1. எண்ணினான் - ஆலோசனைசெய்தான்.

4. தளமலி - கூட்டத்தின்மிகுந்த.

ஒருகடலடைக்கமற்றொழிந்தவேலைகள்
வருவனவாமெனவந்தவானரம். (௫)

பேர்த்தனமலைசிலபேர்க்கபேர்க்கநின்
றீர்த்தனசிலசிலசென்னியேந்தின
தூர்த்தனசிலசிலதூர்க்கத்தூர்க்கநின்
றார்த்தனசிலசிலவாடிப்பாடின. (௬)

காலிடையொருமலையுருட்டிக்கைகளின்
மேலுடைமலையினைவாங்கிவிண்டொடும்
சூலுடைமழைமுகில்சூழ்ந்துசுற்றிய
வாலிடையொருமலையீர்த்துவந்தவால். (௭)

முடுக்கினன்றருகெனமூன்றுகோடியர்
எடுக்கினுமம்மலையொருகையேந்தியிட்
டடுக்கினன்றன்வலிகாட்டியாழியை
நடுக்கினனளனெனுநவையினீங்கினான். (௮)

மஞ்சினிற்றிகழ்தருமலையைமாக்குரங்
கெஞ்சுறக்கடிதெடுத்தெறியவேநளன்
விஞ்சையிற்றாங்கினன்சடையன்வெண்ணெயில்
தஞ்சமென்றோர்களைத்தாங்குந்தன்மைபோல். (௯)

சயக்கவிப்பெரும்படைத்தலைவர்தாள்களால்
முயற்கறைமதிதவழ்முன்றிற்குன்றுகள்
அயக்கலின்முகிற்குலமலறியோடின
இயக்கருமகளிருமிரியல்போயினார். (௧௦)

வேருடைநெடுங்கிரிதலைவர்வீசின
ஓரிடத்தொன்றின்மேலொன்றுசென்றுக
நீரிடைநிமிர்பொறிபிறக்கநீண்டவி
தாருடைநெருப்பெனவருணனஞ்சினான். (௧௧)

ஆனிறக்கண்ணனென்றொருவனங்கையால்
கானிறமலைகொணர்ந்தெறியக்கார்க்கடல்
தூநிறமுத்தினந்துவலையோடும்போய்
வானிறைமீனொடுமாறுகொண்டவே. (௧௨)

---

9. விஞ்சை - தான்கற்றசிற்பவித்தை.

சிந்துரத்தடவரையெறியச்சேணிடை
முந்துறத்தெறித்தெழுமுத்தந்தொத்தலால்
அந்தரத்தெழுமுகிலாடையாவகன்
பந்தரொத்ததுநெடும்பரிதிவானமே. (கஙு)

வேணுவினெடுவரைவீசமீமிசை
சேணுறுதிவலையானனைந்தசெந்துகில்
பூணுறுமல்குலிற்பொருந்திப்போதலால்
நாணினர்வானவர்நாட்டுநங்கைமார். (கச)

தேனிவர்தடவரைதிரைக்கருங்கடல்
தாணிமிர்தரவிடைகுவியத்தள்ளுநீர்
மேனிமிர்திவலைமீச்சென்றுமீடலால்
வானவர்நாட்டினுமழைபொழிந்தவால். (கரு)

வேறு.

மையுறுமலைகளோடுமறிகடல்வந்துவீழ்ந்த
வெய்யவாய்மகரம்பற்றவெருவினவிளைப்பமேனாள்
பொய்கையினிடங்கர்வப்புராதனைபோற்றியென்று
கைபெடுத்தழைத்தயானைபோன்றனகளிநல்யானை. (கசு)

அசும்புபாய்தேனும்பூவுமாரமுமகிலுமற்றும்
விசும்பெலாமுலவுந்தெய்வவேரியின்மிடைந்துவிம்மத்
தசும்பெலாம்வாசமூட்டிச்சார்த்தியதண்ணீரென்னப்
பசும்புலாறுறும்வேலைபரிமளங்கமழ்ந்ததன்றே. (கஎ)

தேமுதற்கனியுங்காயுந்தேனிறேனுந்தெய்வப்
பூமுதலாயவெல்லாமீன்கொளப்பொலிந்தவன்றே
மாமுதற்றருவோடொக்கும்வானுயர்மானக்குன்றம்
தாமுதலோடுங்கெட்டாலொழிவரோவண்மைதக்கோர். (கஅ)

மண்ணுறச்சேற்றுட்புக்குச்சுரிகின்றமாலைக்குன்றம்
கண்ணிறைபோதுங்காயுங்கனிகளும்பிறவுங்கவ்வி
வெண்ணிறமீன்களெல்லாம்வறியவரென்னமேன்மேல்
உண்ணிறைசெல்வநல்காதொளிக்கின்றவுலோபரொத்த. (கசு)

கறங்கெனத்திரியும்வேகக்கவிக்குலங்கதுவவாங்கிப்
பிறங்கிருங்கடலிற்பெய்தபோழ்தத்தும்பெரியபாந்தள்

13. தோற்றலால் - என்றும்பாடம்.

மறங்கிளர்மானயானைவயிற்றினவாகவாய்சோர்ந்
துறங்கினகேடுற்றாலுமுணர்வரோவுணர்விலாதார். (௨௦)

இழையெனத்தகையமின்னினெயிற்றினமுழக்கமெய்தப்
புழையுடைத்தடக்கையொன்றோடொன்றிடைபொருந்தச்சுற்றிக்
கழையுடைக்குன்றின்முன்றிலுருமொடுகலந்தகால
மழையெனப்பொருதவேலைமகரமுமத்தமாவும். (௨௧)

பொன்றினசிறியவாயபுண்ணியம்புரிந்தோர்போலக்
குன்றுகள்குரக்குவீரர்குவித்தனர்நெருப்புக்கோப்ப
ஒன்றின்மேலொன்றுவீழவுகைத்தெழுந்தும்பர்நாடு
சென்றுமேலிடம்பெறாதுதிரிந்தனசிகரச்சில்லி. (௨௨)

கூறுடையெயிற்றுக்கோண்மாச்சுறவினமெறிந்துகொல்லப்
போருடையரியும்வெய்யபுலிகளும்யாளிப்போத்தும்
நீரிடைத்தோற்றவன்றேதந்நிலைநீங்கிற்றென்றால்
ஆரிடைத்தோலார்மேலோரறிவிடைநோக்கினம்மா. (௨௩)

ஒள்ளியவுணர்வுகூடவுதவலரெனினுமொன்றோ
வள்ளியராயோர்செல்வமன்னுயிர்க்குதவுமன்றே
துள்ளினகுதித்தமானத்தும்பர்தங்குவட்டிற்றாங்கும்
கள்ளினைநிறையமாந்திக்கவியெனக்களித்தமீன்கள். (௨௪)

மூசெறிபிறக்கமீக்கொண்டிறக்கியமுடுக்கந்தன்னால்
கோசொரிநறவமென்னத்தண்புனலுகுக்குங்குன்றின்
வேசொரிமுத்துக்கம்மாயிருந்துசெய்திருந்தவீண்ட
வாய்சொரியிப்பியோடும்வலம்புரியுமிழ்ந்தமுத்தம். (௨௫)

வேறு.

விண்டலநதொடுமால்வரைவேரொடும்
கொண்டலங்கொளவீரர்குவித்தலால்
திண்டலங்கடலானதுநீர்செல
மண்டலங்கடலாகிமலிந்ததே. (௨௬)

ஐயன்வேண்டினதுவிதுவாமன்றே
வெய்யசீயமும்யாளியும்வேங்கையும்
மொய்கொள்குன்றின்முதலினமொய்த்தலால்
நெய்தல்வேலிகுறிஞ்சிநிகர்த்ததால். (௨௭)

---

21. புழை - துவாரம்.
25. வலம்புரி - மாசுழிகொண்டசங்கு.

யானுற்றனவிங்கிவையென்னவே
தீனுற்றனவென்னிதுசெய்யுமே
மானுற்றதிரைக்கடல்வாழ்தரு
மீனுற்றனவில்லையிலங்கரோ. (௨௮)

வவ்விலங்குவளர்த்தவர்மாட்டருள்
செவ்விலங்கவில்சிந்தையர்தீர்வரோ
இவ்விலங்கல்விடேமினியென்பபோல்
எவ்விலங்கும்வந்தெய்தினவேலையே. (௨௯)

கனிதருந்நெடுங்காய்தருநாடொறும்
இனிதருந்தவநோய்தினியற்றலால்
பனிதருங்கிரிதம்மனப்பற்றறு
முனிவரும்முனியார்முடிவுன்னுவார். (௩௦)

புலையின்வாழ்க்கையரக்கர்பொருப்புளார்
தலையின்மேல்வைத்தகையினர்சாற்றுவார்
மலையிலேமற்றுமாறினிவாழ்வதோர்
நிலையிலேமென்றிலங்கைநெருக்குவார். (௩௧)

முழுக்கநீரிற்புகாமுழுகிச்செலாக்
குழுக்களோடணைகோளரியாளிகள்
இழுக்கில்பேரணையின்னிருபக்கமும்
ஒழுக்கின்மாலைவகுத்தனவொத்தவால். (௩௨)

பளிக்குமால்வரைமுந்துபடுத்தன
ஒளிக்குமாழிகிடந்தனவோர்கிலர்
வெளிக்குமால்வரைவேண்டுமெனக்கொணர்ந்
தளிக்கும்வானரவீரரநேகரால். (௩௩)

பாரிற்றண்முதுகுந்நெடும்பாம்பட
மூரிவானரம்வாங்கியமொய்ம்மலை
வேரிற்றெனவெம்முழையின்னுழை
சோருநாகநிலனுறத்தூங்குமால். (௩௪)

அருணச்செம்மணிக்குன்றயலேசில
இருணற்குன்றமடுக்கினவேய்ந்தன
கருணைக்கொண்டல்வறியன்கழுத்தென
வருணற்கீந்தவருணசரத்தையே. (௩௫)

ஏய்ந்ததம்முடம்பிட்டவுயிர்க்கிடம்
ஆய்ந்துகொள்ளுமறிஞரிஞாழ்கடல்
பாய்ந்தபண்டுறையும்மலைப்பாந்தள்கள்
போந்தமாமலையின்முழைபுக்கவே. (௩௬)

சேதுவின்பெருமைக்கிணைசெப்பவோர்
ஏதுவேண்டுமென்றெண்ணுவதென்கொலோ
தூதனிட்டமலையின்றுவலையால்
மீதுவிட்டுலகுற்றனமீன்களும். (௩௭)

நீலனிட்டநெடுவரைநீணில
மூலமுட்டலின்மொய்புனல்கைமிகக்
கூலமிட்டியவார்கலிகோத்ததால்
ஓலமிட்டெழுந்தோடியுலகெலாம். (௩௮)

மயிந்தனிட்டநெடுவரைவானுற
உயர்ந்துமுட்டிவிழவெழுந்தோதநீர்
தியந்தமுட்டத்திசைநிலையானையும்
பெயர்ந்துவிட்டவையாவும்பிளிறுவ. (௩௯)

இலக்குவன்சரமாயினுமேன்றெதிர்
விலக்கினும்விலங்காதவிலங்கலால்
அலக்கணெய்தியமிழ்தெழவாழியைக்
கலக்கினான்மகன்மீளக்கலக்கினான். (௪0)

மருத்தின்மைந்தன்மணிநெடுந்தோளெனப்
பெருத்தகுன்றங்கரடிப்பெரும்படை
விருத்தனிட்டவிசையினின்வீசிய
திருத்தம்வானவர்சென்னியிற்சென்றதால். (௪௧)

குமுதனிட்டகுலவரைகூத்தரின்
திமிதமிட்டுத்திரையுந்திரைக்கடல்
துமிதமூர்புகவானவர்துள்ளினார்
அமுதமின்னுமெழுமெனுமாசையால். (௪௨)

கனசினத்துருமிற்கடுங்கார்வரை
பனசனிட்டனயாவும்பரிக்கிலன்

---

37. தூதன் - அனுமான்.
38. கூலம் - கரை.
39. தியந்தம் - திசந்தம். 40. ஆழியை - பாற்கடலை.

மனசினத்தவனந்தனவ்வாழ்விகந்
தனசினத்தொழின்மேற்கொள்வதாயின. (௪௩)

எண்ணிலெண்கினமிட்டகிரிக்குலம்
உண்ணவுண்ணச்சென்றொன்றினோடொன்றுறச்
சுண்ணநுண்பொடியாகித்தொலைந்தன
புண்ணியம்பொருந்தாதமுயற்சிபோல். (௪௪)

ஆரவாயிரயோசனையாழமுந்
தீரநீண்டபரந்ததிமிங்கிலம்
பாரமால்வரையேறப்பதைத்துடல்
பேரவேகுன்றும்வேலையும்பேர்ந்தவால். (௪௫)

குலைகொளக்குறிநோக்கியகொள்கையான்
சிலைகளொக்கமுறித்துச்செறித்தநேர்
மலைகளொக்கவடுக்கிமணற்படத்
தலைகளொக்கத்தடவுந்தடக்கையால். (௪௬)

தழுவியாயிரகோடியதாங்கிய
குழுவின்வானரந்தந்தகிரிக்குலம்
எழுவினீள்கரத்தேற்றிடவிற்றிட
வழுவிவீழ்வனகால்களின்வாங்குவான். (௪௭)

மலைசுமந்துவருவனவானரம்
நிலையினின்றனசெல்லநிலம்பெறா
அலைநெடுங்கடலன்றியுமாண்டுத்தந்
தலையின்மேலொருசேதுதருவபோன்ம். (௪௮)

பருத்தமால்வரையேந்தியபல்படை
நிரைத்தலிற்சிலசெல்லநிலம்பெறாக்
கரத்தினேந்தியகார்வரைகண்ணகன்
சிரத்தின்மேற்கொண்டுநீந்தினசென்றவால். (௪௯)

ஆய்ந்துநீளமரிதுசுமந்தன
ஓய்ந்தகாலபசியினுலந்தன
ஏந்துமால்வரைவைத்தவற்றீண்டுதேன்
மாந்திமாந்திமறந்துதுயின்றவால். (௫௦)

போதல்செய்குநரும்புகுவார்களும்
மாதிரந்தொறும்வானரவீரர்கள்

48. போன்ம் - போலும்.

சேதுவெத்துணைசென்றதென்பார்சிலர்
பாதிசென்றதெனப்பகர்வார்சிலர். (௫௧)

குறைவில்குங்குமமுங்குகைத்தேன்களும்
நிறைமலர்க்குலமுந்நிறைந்தெங்கணும்
துறைதொறுங்கிரிதூங்கினதோய்தலால்
நறைநெடுங்கடலொத்ததுநாமநீர். (௫௨)

நெடும்பன்மால்வரைதூர்த்துநெருக்கவும்
துடும்பல்வேலைதுளங்கியதில்லையால்
இடும்பையெத்தனையும்படுத்தெய்தினும்
குடும்பந்தாங்குங்குடிப்பிறந்தாரினே. (௫௩)

கொழுந்துடைபவளக்கொடியின்குலம்
அழுந்தவுய்த்தவடுக்கறகர்ந்தயல்
விழுந்தபன்மணியின்னொளிமீமிசை
எழுந்தவெங்கணுமிந்திரவில்லினே. (௫௪)

பழுமரம்பறிக்கம்பறவைக்குலம்
தழுவிநின்றொருவன்றனிதாங்குவான்
விழுதலும்புகல்வேற்றிடமின்மையால்
அழுதரற்றுங்கிளையெனவானவால். (௫௫)

தாவலோவலமென்றதுதாங்கிய
மாவெலாங்கடல்வீழ்தலும்வண்டெலாம்
காவலாளர்விழக்களைகண்ணிலா
ஏவலாளரினெங்குந்திரிந்தவால். (௫௬)

தொக்கடங்கலவோடுந்துவலைகள்
மிக்கடங்கலும்போவனமீன்குலம்
அக்கருங்கடறாரவயற்கடற்
புக்கடங்கிடப்போவனபோன்றவே. (௫௭)

மூசுவண்டினமும்மதயானையின்
ஆசைகொண்டனபோற்றொடர்ந்தாடின
ஓசையொண்கடல்குன்றொடைவைபுக
வேசைமங்கையராமெனமீண்டவே. (௫௮)

---

52. நறைநெடுங்கடல் - தேனினையுடையநெடிய சமுத்திரம்.

53. துடும்பல் - துளும்பல்.

நிலமரங்கியவேரொடுநேர்பறித்
தலமருந்துயரெய்தியவாயினும்
வலமரங்களைவிட்டிலமாசிலாக்
குலமடந்தையரென்னக்கொடிகளே. (ருசு)

துப்புறக்கடறாயதுவலையால்
அப்புறக்கடலுஞ்சுவையற்றன
எப்புறத்துருமேறுங்குளிர்ந்தன
உப்புண்றத்தனமேகமுகுத்தநீர். (சு0)

முதிர்நெடுங்கிரிவீழமுழங்குநீர்
எதிரெழுந்துபிரந்தரமெய்தலால்
மதியவன்கதிரிற்குளிர்வாய்ந்தன
கதிரவன்கனல்வெங்கதிர்க்கற்றையே. (சுக)

நன்கொடித்துநறுங்கிரிசிந்திய
பொன்கொடித்துவலைப்பொதிந்தோடுவ
வன்கொடிப்பவளங்கள்வயங்கலால்
மின்பொடித்ததுபோன்றனவிண்ணெலாம். (சுஉ)

ஓடுமோட்டருமொன்றின்முமூன்றுபோய்க்
காடுநாடுமரங்களுங்கற்களும்
நாடுநாட்டுநளிர்கடனுட்டிலோர்
பூடுமாட்டலிலாயபொருப்பரோ. (சுங)

வரைப்பரப்பும்வனப்பரப்பும்புவர்த்
தரைப்பரப்புவதென்னத்தனித்தனி
உரைப்பரப்புமுருகிரியொண்கவிக்
கரைப்பரப்புக்கடற்பரப்பானதால். (சுச)

உற்றதாலணையோங்கலிலங்கையை
முற்றமூன்றுபகலிடைமுற்றவும்
பெற்றவார்ப்புவிசும்புபிளந்ததால்
மற்றிவானம்பிறிதொருவான்கொலோ. (சுரு)

நாடுகின்றதென்வேறொன்றுநாயகன்
தோடுசேர்குழலாடுயர்நீக்குவான்

60. துப்புறக்கடல் - பவளக்கொடிகளையுடைய அக்கடல்.
62. பொன்கொடி - பொன்மயமானகொடி.
63. பூடு - சிறுசெடி.

ஓடுமென்முதுகிட்டெனவோங்கிய
சேடனென்னப்பொலிந்ததுசேதுவே. (௬௬)

மெய்யனீட்டத்திலங்கையர்மென்மகள்
பொய்யினீட்டியதீமைபொறுக்கலா
தையனீட்டியசேனைகண்டன்பினால்
கையைநீட்டியதன்மையுங்காட்டுமால். (௬௭)

கானயாறுபரந்தகருங்கடல்
ஞானநாயகன்சேனைநடத்தலால்
ஏனையாறினியானலதாரெனா
வானயாறிம்பர்வந்ததுமானுமால். (௬௮)

கற்கிடந்தொளிர்காசினங்காந்தலால்
மற்கடங்கள்வகுத்தவயங்கணை
எற்கடந்தவிருளிடையிந்திரன்
விற்கிடந்தனவென்னவிளங்குமால். (௬௯)

ஆனபேரணையன்பினமைத்தனர்
கானவாழ்க்கைக்கவிக்குலநாதனும்
மானவேலையிலங்கையர்மன்னனும்
ஏனையோருமிராமனையெய்தினார். (௭௦)

எய்தயோசனையீண்டொருநூறிவை
ஐயிரண்டினகலமமைந்திடச்
செய்ததாலணையென்றதுசெப்பினார்
வையநாதன்சரணம்வணங்கியே. (௭௧)

ஆ திருவிருத்தம் - ௬௬௧.

## ௮-வது, ஒற்றுக்கேள்விப்படலம்.

ஆண்டகையும்மன்பினொடுகாதலமிழ்ந்தூற
நீண்டகையினானளனைநெஞ்சினொடுபுல்லி
ஈண்டவெழுகென்றனனிழைத்தபடியெல்லாம்
காண்டவதன்மேனெடியகாதன்முதிர்கின்றான். (௧)

69. கற்கிடந்து - மணிகள் தங்கி.

பண்டைபுறையுட்கெதிர்படைக்கடலின்வைகும்
கொண்டலெனவந்தவனைக்குறுகிநின்றான்
அண்டமுதல்வன்னொருதனாவியனையாளைக்
கண்டனனெனப்பெரியகாதன்முதிர்கின்றான். (௨)

நின்றுநெடிதுன்னியநிரைக்கடனிரம்பக்
குன்றுகொடடைத்தணைகுயிற்றியதொர்கொள்கை
அன்றுலகுதந்தமுதலந்தணனமைத்தான்
என்றபொழுதின்கணுமிதென்றியலுமென்றான். (௩)

ஊழிமுதனாயகன்வியப்பினொடுவந்தான்
ஆழமுறைசெய்யுமளவேயினியதொன்றோ
ஆழியிலிலங்கைபெரிதத்திசையதாமேல்
ஏழுகடலுங்கடிதடைப்பனிவனென்றான். (௪)

என்றுநளனைக்கருணையிற்றழுவியன்பால்
அன்றுவருணன்னுதவுமாரமுமளித்துத்
துன்றுகதிர்பொற்கலனுமற்றுளதொகுத்தே
வென்றியினியென்றுபடையோடுடன்விரைந்தான். (௫)

நெற்றியிலரக்கர்பதிசெல்லநிறைநன்னூல்
கற்றுணருமாருதிகடைக்குழைவரத்தன்
வெற்றிபுணர்தம்பியொருபின்புசெலவீரப்
பொற்றிரள்புயக்கறுநிறக்களிறுபோனான். (௬)

இருங்கவிகொள்சேனைமணியாரமிடறத்தன்
மருங்குவளர்தண்டலைவயங்குதிரைமான
ஒருங்குநனிபோயினவுயர்ந்தகரையூடே
கருங்கடல்புகப்பெருகுகாவிரிகடுப்ப. (௭)

ஓதியகுறிஞ்சிமுதலாயநிலமுள்ள
கோதிலவருந்துவனகொள்ளையின்முகந்துற்
றியாதுமொழியாவகைசுமந்துகடலெய்தப்
போதலுறுமன்னபடைபொன்னியெனலான. (௮)

ஆயதுநெருங்கவடியிட்டடியிடாமல்
தேயுநெறிமாடுதிரையூடுவிசைசெல்லப்

---

3. இயலும் - முற்றும்.

4. அத்திசையதாமேல் - அந்ததூரதிசையிலிருப்பதனால்.

9. வடியிட்டடியிடாமல் எனப் பாடமுமுண்டு. பூசல் - போர்.

போயசிலபொங்குதொறுபொங்குதொறுபூசற்
பாய்புரவியிற்படர்வபோலினிதுபாய்வ. (கூ)

மெய்யிடைநெருங்கவிசைபுற்றவயல்வீழும்
பொய்யிடமிலாதபுனலிற்புகலிலாத
உய்விடமளிக்குமருளாளர்முறையுய்த்தார்
கையினிடைசென்றுகரைகண்டகரையில்லை. (க0)

இழைத்தனையவெங்கதிரின்வெஞ்சுடரிராமன்
மழைத்தமுகிலன்னமணிமேனிவருடாமல்
தழைத்தகிழலுற்றகுளிர்சந்தனமுயர்ந்த
அழைத்தவைவெடுத்தருகுசென்றனரநேகர். (கக)

ஓமநெறிவாணர்மறைவாய்மையொருதாமே
ஆமரசர்மைந்ததிருமேனியலசாமே
பூமரனிறுத்தவைபொருத்துவபொருத்திச்
சாமரையின்வீசினர்படைத்தலைவர்தாமே. (கஉ)

மருங்கடவளர்ந்தமுலைமங்கைமணமுன்னு
வருங்கடகமங்கையினில்வள்ளணினைகின்றான்
ஒருங்கடலுயர்ந்தபடர்தானையொடுமோதத்
திருங்கடல்கடந்துகரையேறினனிராமன். (கங)

பெருந்தவமுயன்றமரர்பேணியதவத்தால்
மருந்தனையதம்பியொடும்வன்றுணைவரோடும்
அருந்ததியும்வந்தனைசெயஞ்சொலிளவஞ்சி
இருந்தநகரின்புறனோர்குன்றிடையிறுத்தான். (கச)

வேறு.

நீலனைநெடிதுநோக்கிநேமியோன்விரையநீநம்
பால்வருசேனைக்கெல்லாமிழைத்தியாற்பாடியென்னுக்
கால்வரைவணங்கிப்போனன்கல்லினுற்கடலைக்கட்டி
நூலுரைவழிசெய்தானுக்கங்கிலைநொய்திற்சொன்னன். (கரு)

பொன்னினுமணியினுனுநான்முகன்புனைந்தபொற்பின்
நன்னலமாகவாங்கிநான்முகச்சதுரநாட்டி
இன்னதென்னுதவண்ணமிறைவர்க்கும்பிறர்க்குமெல்லாம்
நன்னகர்நொய்திற்செய்தான்முறைபுநானுட்கொண்டான். (கசு)

---

10. பொய்யிடம் - வெற்றிடம்.

11. இழைத்தனைய - பதித்துவைத்தாற்போன்ற.

வில்லினார்க்கிருக்கைசெய்யும்விருப்பினாற்பொருப்பின்வீங்கும்
கல்லினாற்கல்லையொக்கக்கடாயினான்கழைகளான
நெல்லினாலலக்குங்காலுநிரப்பினான்றருப்பையென்னும்
புல்லினாற்றொடுத்துவாசப்பூவினால்வேய்ந்துபோனான். (௧௭)

வாயினுமனத்தினானும்வாழ்த்திமன்னுயிர்கட்கெல்லாம்
தாயினுமன்பினானைத்தாளுறவணங்கித்தத்தம்
ஏயினவிருக்கைநோக்கியெண்டிசைமருங்கும்யாரும்
போயினர்பன்னசாலையிராமனுநொய்திற்புக்கான். (௧௮)

பப்புநீராயவீரர்பருவரைகடலிற்பாய்ச்சத்
துப்புநீராயதூயசுடர்களுங்கறுக்கவந்திட்
டுப்புநீரகத்துட்டோய்ந்தவொளிநிறம்விளங்கவப்பால்
அப்புநீராடுவான்போலருக்கனுமத்தஞ்சேர்ந்தான். (௧௯)

மாலுறுகுடகவானின்வயங்கியவந்துதோன்றும்
பாலுறுபசுவெண்டிங்கள்பங்கயநயனத்தண்ணல்
மேலுறுபகழிவாங்கிவெகுண்டனன்விரைவின்வந்த
காலுறவளைத்தகாமன்வில்லெனக்காட்டிற்றன்றே. (௨௦)

நூற்றிதழ்க்கமலந்தந்தநுண்ணறுஞ்சுண்ணமுண்ணத்
தீற்றிமென்பனிநீர்தோய்ந்தசீகரத்தென்றலென்னும்
காற்றினுமாலையானகனலினுங்காமவாளி
கூற்றினும்வெம்மைகாட்டிக்கொதித்ததக்குளிர்வெண்டிங்கள். (௨௧)

செயிர்ப்பினுமழகுசெய்யுந்திருமுகத்தணங்கைத்தீர்ந்து
துயிற்சுவைமறந்தான்றோளிற்றாய்நிலாத்தவழுந்தோற்றம்
மயிற்குலம்பிரிந்ததென்னமரகதமலைமேன்மெள்ள
உயிர்ப்புடைவெள்ளைப்பிள்ளைவாளராவூர்வபோன்ற. (௨௨)

மன்னெடுநகரமாடேவருதலால்வயிரச்செங்கைப்
பொன்னெடுந்திரடோளையன்மெய்யுறப்புழுங்கிநைந்தான்
பன்னெடுங்காதத்தேயுஞ்சுடவல்லபவளச்செவ்வாய்
அந்நெடுங்கருங்கட்டையையனுகினாற்றணிவதுண்டோ. (௨௩)

இற்றதுகாலமாகவிலங்கையர்வேந்தனேவ
ஒற்றர்வந்தளவுநோக்கிக்குரங்கெனவுழல்கின்றாரைப்

---

17. நெல் - மூங்கில்.
20. மேல் - மீது.
22. செயிர்ப்பினும் - கோபங்கொண்டாலும்.

பற்றினனென்பமன்னோபண்டுதான்பலநாட்செய்த
நற்றவப்பயன்றந்துய்ப்பமுந்துறப்போந்தநம்பி. (௨௪)

பேர்வுறுகவியின்சேனைப்பெருங்கடல்வெள்ளந்தன்னுள்
ஓர்வுறுமனத்தனாகியொற்றரையுணர்ந்துகொண்டான்
சேர்வுறுபாலின்வேலைசிறுதுளிதெரித்தவேனும்
நீரினைவேறுசெய்யுமன்னத்தினீரனானான். (௨௫)

பெருமையுஞ்சிறுமைதானுமுற்றுறுபெற்றியாற்ற
அருமையினகன்றுநீண்டவிஞ்சையுளடங்கித்தாமும்
உருவமுந்தெரியாவண்ணமொளித்தனருறையுமாயத்
திருவரையொருங்குகாணும்யோகியுமென்னலானான். (௨௬)

கூட்டியவிறற்றிண்கையாற்குரங்குகளிரங்கக்குத்தி
மீட்டொருவினைசெய்பாமன்மானையின்கொடியால்வீக்கிப்
பூட்டியகையர்வாயாற்குருதியேபொழிகின்றாரைக்
காட்டினன்கள்வரென்னாக்கருணையங்கடலுங்கண்டான். (௨௭)

பாம்பிழைப்பள்ளிவள்ளல்பகைஞரென்றுணரான்பல்லோர்
நோம்பிழைசெய்தகொல்லோகுரங்கெனவிரங்கிநோக்கித்
தாம்பிழைசெய்தாரேனுந்தஞ்சமென்றடைந்தோர்தம்மை
நாம்பிழைசெய்யலாமோநலிநதிடல்விடுதியென்றான். (௨௮)

அகனுறப்பொலிந்தவள்ளல்கருணையாலழுதகண்ணன்
நகனிறைகானின்வைகுநம்மினத்தவருமல்லர்
தகநிறைவில்லாவுள்ளத்திராவணன்றந்தவொற்றர்
சுகனிவனவனுஞ்சாரனென்பதுந்தெரியச்சொன்னான். (௨௯)

கல்விக்கண்மிக்கோன்சொல்லக்கருமனநிருதக்கள்வர்
வல்விற்கைவீரமற்றிவ்வானரர்வலியைநோக்கி
வெல்விக்கையரிதென்றெண்ணிவினையத்தாலெம்மையெல்லாம்
கொல்விக்கவந்தான்மெய்ம்மைகுரங்குநாங்கொள்கவென்றார். (௩௦)

கள்ளரேகாண்டியென்னாமந்திரங்கருத்துட்கொண்டான்
தெள்ளியதெரிக்குந்தெவ்வர்தீர்வினைசேர்தலோடும்
துள்ளியினிரதந்தோய்ந்துதொன்னிறங்கரந்துவேறாய்
வெள்ளியோடிருந்தசெம்புமாமெனவேறுபட்டார். (௩௧)

---

24. நம்பி - விபீடணன்.

26. இருவரை - சீவேசுரர்களாகிய இருவரை.

31. கள்ளரே - அரக்கரே. துள்ளியினிரதம் - துளியானபாதரசம்.

மின்குலாமெயிற்றராகிவெருவந்துவெற்பினின்ற
வன்கணார்தம்மைநோக்கிமணிநகைமுறுவறோன்றப்
புன்கணார்புன்மைநீக்கும்புரவலன்போந்ததன்மை
என்கொலாந்தெரியவெல்லாமியம்புதிரஞ்சலென்றான். (௩௨)

தாய்தெரிந்துலகுகாத்ததவத்தியைத்தன்னைக்கொல்லும்
நோய்தெரிந்துணரான்றேடிக்கொண்டனனுவலவென்று
வாய்தெரிந்துணராவண்ணங்கழறுவார்வணங்கிமாய
வேய்தெரிந்துரைக்கவந்தேந்தம்வினையினால்வீரவென்றார். (௩௩)

எல்லையிலிலங்கைச்செல்வமிளையவற்கீந்ததன்மை
சொல்லுதிர்மகரவேலைகவிக்குலவீரர்தூர்த்த
கல்லினிற்கடந்தவாறுங்கழறுதிர்காலந்தாழ்த்த
வில்லினர்வந்தாரென்றும்விளம்புதிர்விளம்பலாதீர். (௩௪)

கொத்துறுதலையான்வைகுங்குறும்புடையிலங்கைக்குன்றம்
தத்துறுதடநீர்வேலைதனினொருசிறையிற்றாதல்
ஒத்துறவுணர்ந்திலாமையுயிரொடுமுறவினோடும்
இத்துணையிருந்ததென்னுந்தன்மையுமியம்புவீரால். (௩௫)

சண்டங்கொள்வேகமாகத்தனிவிடையுவணந்தாங்கும்
துண்டங்கொள்பிறையான்மோலித்துளவினானோடுந்தொல்லை
அண்டங்களெவையுந்தாக்கிக்காப்பினுமறமிலாதான்
கண்டங்கள்பலவுங்காணக்காண்பதுங்கழறுவீரால். (௩௬)

தீட்டுறுமழுவால்வீரன்றாதையைச்செற்றோன்சுற்றம்
மாட்டியவண்ணமென்னவருக்கமுமற்றுமுற்றும்
வீட்டியென்றாதைக்காகமெய்ப்பலிவிசும்புளோருக்
கூட்டுவனுயிர்கொண்டென்னும்வார்த்தையுமுணர்த்துவீரால். ( )

தாழ்விலாத்தவத்தோர்தையறனியொருசிறையிற்றாகச்
சூழ்விலாவஞ்சஞ்சூழ்ந்ததன்னைத்தன்சுற்றத்தோடும்
வாழ்வெலாந்தம்பிகொள்ளவயங்கெரிநரகமென்னும்
வீழ்விலாச்சிறையின்வைப்பெனென்பதும்விளம்புவீரால். (௩௮)

நோக்கினிர்தானையெங்குநுழைந்தனிரினிவேறொன்றும்
ஆக்குவதில்லையாயினஞ்சலென்றஃதுண்டன்றே

---

33. நுவலவென்று - ஒற்றிவாருமென்று கூறுகிற்ப.
34. காலந்தாழ்ந்த - வாழ்நாளைக்குறைக்க.
37. மாட்டிய - அழித்த.

வாக்கினின்மனத்திற்கையின்மற்றினிவலியாவண்ணம்
போக்குமின்விரைவினென்றானுய்ந்தனமென்றுபோனார். (கூகூ)

வேறு.

அரவமாக்கடலஞ்சியவச்சமும்
உரவுநல்லணையோட்டியவூற்றமும்
வரவுநோக்கியிலங்கையர்மன்னவன்
இரவினெண்ணிடவேறிருந்தானரோ. (சo)

வார்குலாமுலைமாதருமைந்தரும்
ஆருநீங்கவறிஞரோடேகினன்
சேர்கவென்னினல்லாலன்றுதென்றலும்
சார்கிலாநெடுமந்திரசாலையே. (சக)

உணர்வினெஞ்சினரூமருரைப்பொருள்
புணருங்கேள்வியரல்லர்பொறியிலர்
கொணருங்கூனர்குறளர்கொழுஞ்சுடர்
துணருநல்விளக்கேந்தினர்சுற்றினார். (சஉ)

நணியர்வந்துமனிசர்நமக்கினித்
துணியுங்காரியம்யாதெனச்சொல்லினான்
பணியுந்தானவராதியர்பன்முடி
மணியினான்விளங்கும்மணித்தாளினான். (சங)

காலவெங்கனல்போலுங்கணைகளால்
வேலைவெந்துநடுங்கிவெயில்புரை
மாலைகொண்டுவணங்கியவாறெலாம்
சூலமென்னவென்னெஞ்சைத்தொளைக்குமால். (சச)

கிழிபடக்கடல்கீண்டதுமாண்டது
மொழிபடைத்தவலியெனமூண்டதோர்
பழிபடைத்தபெரும்பயத்தன்னவன்
வழிகொடுத்ததென்னுள்ளம்வருத்துமால். (சரு)

படைத்தமால்வரையாவும்பறித்துவேர்
துடைத்தவானரவீரர்தந்தோள்களைப்
புடைத்தவாறும்புணரியைப்போக்கற
அடைத்தவாறுமென்னுள்ளத்தடைத்ததால். (சசு)

---

45. அன்னவன் - அடக்கடலிறைவன்.

காந்துவெஞ்சினவீரர்கணக்கிலார்
தாந்தமாற்றலுக்கேற்றதரத்தர
வேந்தவெற்பையொருவன்விரல்களால்
ஏந்தியிட்டதென்னுள்ளத்தினிட்டதால். (சஎ)

சுட்டவாகண்டுந்தொன்னகர்வேலையைத்
தட்டவாகண்டுந்தாவற்றதெவ்வரைக்
கட்டவாகண்டுங்கண்ணெதிரேவந்து
விட்டவாகண்டுமேலெண்ணம்வேண்டுமோ. (சஅ)

என்றுதாயைப்பயந்தோனியம்பலும்
தின்றுவாயைவிழிவழித்தீயுக
நன்றுநன்றுநம்மந்திரநன்றெனா
என்றும்வாழ்தியிளவலோடேகென்றான். (சகூ)

ஈனமேகொலிதமெனவெண்ணுறா
மோனமாகியிருந்தனன்முற்றினான்
ஆனகாலையடியினிறைஞ்சிய
சேனைநாதனினையனசெப்பினான். (ருo)

கண்மையின்னகர்வேலைகடந்தவத்
திண்மையொன்றுமலாற்றிசைகாவலர்
எண்மரும்மிவற்கேவல்செய்கின்றவவ்
வுண்மையொன்றுமுணர்ந்திலைபோலென்றான். (ருக)

கூசிவானரங்குன்றுகொடிக்கடல்
வீசினாரெனும்வீரம்விளம்புவாய்
ஊசிவேரொடுமோங்கலையோங்கிய
ஈசனோடுமெடுத்ததுமில்லையோ. (ருஉ)

அதுகொடென்சிலவாரமர்மேலினி
மதிகெடுந்தகையோர்வந்துநாமுறை
பதிபுகுந்தனர்தம்மைப்படுப்பதோர்
விதிகொடுந்தவிளைந்ததுதானென்றான். (ருங)

முற்றுமூடியகஞ்சுகன்மூட்டிய
வெற்றனற்பொறிக்கண்ணினன்வேத்திரம்
பற்றுமங்கையினன்படிசாரநின்
றொற்றர்வந்தனரென்னவுணர்த்தினான். (ருச)

---

49. என்றும் - எப்பொழுதும்.

மணைக்கண்வந்தவன்பாதம்வணங்கினர்
பணைக்கைவன்குரங்கின்படர்சேனையை
நினைக்குந்தோறுமலமருநெஞ்சினர்
கணைக்குந்தோறுமுதிரங்கள்கக்குவார். (ருரு)

வெள்ளவாரிவிரிவொடவ்வீடணன்
தள்ளவாரிநிலைமையுந்தாபதன்
உள்ளவாறுமுரைமினென்றுனுயிர்
கொள்ளவாய்வெருவுங்கொடுங்கூற்றனன். (ருசு)

அடியமங்நெடுஞ்சேனையையாசையால்
முடியநோக்கலுற்றேமுதுவேலையின்
படியைநோக்கியபாரம்படர்குற்ற
கடியவேகக்கலுழனிற்கண்டிலம். (ருஎ)

நுவலயாம்வரவேண்டியநோக்கதோ
கவலைவேலையெனுங்கரைகாண்கிலா
தவலமெய்தியடைந்துழியார்த்தெழும்
துவலையேவந்துசொல்லியதில்லையோ. (ருஅ)

எல்லைநோக்கவுமெய்திலதாமெனும்
சொல்லைநோக்கியமானுடன்றேளனும்
கல்லைநோக்கிக்கணைகளைநோக்கித்தன்
வில்லைநோக்கவும்வெந்ததுவேலையே. (ருகூ)

தாருலாமணிமார்பநின்றம்பியே
தேருலாவுகதிருந்திரிந்துதன்
பேருலாவுமளவினும்பெற்றனன்
நீருலாவுமிலங்கைநெடுந்திரு. (சுo)

சேதுபந்தனஞ்செய்தனனென்றதிப்
போதுவந்தபுதுவலியோவொரு
தூதுவந்தவன்றேள்வலிசொல்லிய
ஏதுவந்தமிலாதவிருக்கவே. (சுக)

மருந்துதேவராருந்தியமாலைவாய்
இருந்ததானவர்தம்மையியைந்துமுன்

57. பாரம் - முடிவை.
58. துவலை - நீர்த்துளி.
62. இருந்ததானவர் - இராகுவாதியர்.

பெருந்திண்மாயற்குணர்த்தியபெற்றியின்
றெரிந்துகாட்டினனும்பிசினத்திருன். (கூ௨)

பற்றிவானரவீரர்பனைக்கையால்
எற்றியெங்களேயேநெடுந்தோளுறச்
சுற்றியீர்த்தலைத்துச்சுடர்போலொளிர்
வெற்றிவீரனிற்காட்டிவிளம்பினுன். (கூ௩)

சரங்களிங்கிவற்றிற்பண்டுதானுடை
வரங்கள்சிந்துவென்னென்றனன்மற்றெமைக்
குரங்கலாமைதெரிந்துமக்கொற்றவன்
இரங்கவுய்ந்தனமீதெங்களொற்றென்றூர். (கூ௪)

மற்றும்யாவையும்வாய்மையவானவன்
சொற்றயாவையுஞ்சோர்வின்றிச்சொல்லினர்
குற்றம்யாவையுங்கோளொடுநீங்குக
இற்றைநாண்முதலாயுவுண்டாகென்றூர். (கூ௫)

ஆ திருவிருத்தம் - எ௫கூ.

# கூ-வது, இலங்கைகாண்படலம்.

வைதெனக்கொல்லும்விற்கைமானுடர்மகரநீரை
நொய்தினடைத்துமான்த்தானையானுவனறநம்மூர்
எய்தினரென்றபோதின்வேறினியெண்ணவேண்டும்
செய்திறனுண்டோவென்னச்சேனைகாவாளன்செப்பும். (க)

விட்டனமாதையென்றபோதினும்வெருவிவேந்தன்
பட்டதென்றிகழ்வர்விண்ணோர்பற்றியும்பகையைத்தீர
ஒட்டலாம்போரிலொன்றொட்டினுமும்பியொட்டான்
கிட்டியபோதுசெய்வதென்னினிக்கிளத்தல்வேண்டும். (உ)

ஆண்டுசென்றரிகளோடுமனிசரையமரிற்கொன்று
மீண்டுநம்மிருக்கைசேர்துமென்பதுமேற்கொண்டேமேல்
ஈண்டுவந்திறுத்தாரென்னுமீதலாதுறுதியுண்டோ
வேண்டியதெய்தப்பெற்றால்வெற்றியின்விழுமிதன்றே. (௩)

ஆயிரவெள்ளமானவரக்கர்தந்தானையைய
தேயினுமுழிநூறுவேண்டுமாற்சிறுமையென்றே

நாயினஞ்சியங்கண்டதாமெனநடப்பதல்லால்
நீயுருத்தெழுந்தபோதுகுரங்கெதிர்நிற்பதுண்டோ. (௪)

வந்தவர்தானையோடுமெறிந்துமாக்கடலில்வீழ்ந்து
சிந்தினரிரிந்துபோகச்சேனையும்யானுஞ்சென்று
வெந்தொழில்புரியுமாறுகாணுதிவிடையீகென்று
இந்திரன்முதுகுகண்டவிராவணற்கேயச்சொன்னான். (௫)

மதிநெறியறிவுசான்றமாலியவானவ்வாய்மை
பொதுநெறிநிலையதாகப்புணர்த்துதல்புலமையென்று
விதிநெறிநிலையதாகவிளம்புகின்றோருமீண்டுச்
செதுநெறிநிலையினோரேயென்பதுந்தெரியச்சொல்லும். (௬)

பூசற்குமுயன்றுநம்பாற்பொருதிரைப்புணரிவேலைத்
தேசத்துக்கிறைவனானதசரதன்சிறுவன்றன்னை
மாசற்றசோதிவெள்ளத்துச்சியின்வரம்பிற்றோன்றும்
ஈசற்குமீசன்வந்தானென்பதோர்வார்த்தையிட்டார். (௭)

அன்னவற்கிளவன்றன்னையருமறைபரமென்றோதும்
நன்னிலைநின்றுதீர்ந்துநவையிலாவுயிர்கடோறும்
தொன்னிலைபிரிந்தானென்னப்பலவகைநின்றதூயோன்
இன்னனையெவருங்கேட்கவியம்புவரேதியாதோ. (௮)

அவ்வமர்க்கமைந்தவில்லுங்குலவரையவற்றினொன்ற
வெவ்வலிவேறுவாங்கிவிரிஞ்சனேவிதித்தமேனாள்
செவ்வழிநாணுஞ்சேடன்றெறிகணையாகச்சேர்த்திக்
கவ்வயில்காலநேமிக்கணக்கையுங்கடந்ததென்பார். (௯)

வாலிமாமகன்வந்தானைவானவர்க்கிறைவனென்றார்
நீலனையுலகமுண்ணுநெருப்பினுக்கரசனென்றார்
காலனையொக்குந்தூதன்காலுங்கண்ணுதலுமென்றார்
மேலுமொன்றுரைத்தாரன்னன்விரிஞ்சனுமினிமேலென்றார். (௧௦)

அப்பதமவனுக்கீந்தானரக்கர்வேரறுப்பதாக
இப்படியெய்தினனவிராமனென்றெவருஞ்சொன்னார்
ஒப்பினாலுரைக்கின்றாரோவுண்மையேயுணர்த்தினாரோ
செப்பியென்குரங்காய்வந்தார்தனித்தனிதேவரென்றார். (௧௧)

ஆயதுதெரிந்தோர்தங்களச்சமோவறிவோயார்க்கும்
சேயவளெளியவளென்னுச்சிந்தையினிகழலம்மா

5. மறிந்து - திரும்பி.

தூயவளமிழ்தினோடுந்தோன்றினாளென்றுந்தோன்றாத்
தாயவளுலகுக்கெல்லாமென்பதுஞ்சாற்றுகின்றார். (௧௨)

கானிடைவந்தேதயும்வானவர்கடாவவேயால்
மீனுடையகழிவேலைவிலங்கன்மேலிலங்கைவேந்தன்
தானுடைவரத்தையெண்ணித்தனித்தனித்தலைவர்தாமே
மானுடவடிவங்கொண்டாரென்பதோர்வார்த்தையிட்டார். (௧௩)

ஆயிரமுற்பாதங்களீங்குளவடுத்தவென்றார்
தாயினுமுயிர்க்குநல்லாளிருந்துழியறியத்தக்கோன்
ஏயினதூதனெற்றப்பற்றுவிட்டிலங்கைத்தெய்வம்
போயினதென்றுஞ்சொன்னார்புகுந்ததுபோருமென்றார். (௧௪)

அம்பினுக்கிலக்கமாவாரரசொடுமரக்கரென்றார்
நம்பரத்தடங்குமென்னாநாவினிற்பொய்யிலாதான்
உம்பர்மந்திரிக்குமேலாவொருமுழமுயர்ந்தஞானத்
தம்பியேசாற்றிப்போனானென்பதுஞ்சமையச்சொன்னான். (௧௫)

ஈதெலாமுணர்ந்தேனையுமென்குலமிறுதியுற்ற
தாதியினிவனாலென்றுமுன்றன்மேலன்பினாலும்
வேதனைநெஞ்சிலெய்தவெம்பியான்விளைவசொன்னேன்
சீதையைவிடுதியாயிற்றீருமித்தீமையென்றான். (௧௬)

மற்றெலாநிற்கவந்தமனிசர்வானரங்கள்வானின்
இற்றைநாளளவுநின்றாரிமையவரென்னுந்தன்மை
சொற்றவாறன்றியேயுந்தோற்றிநீயென்றுஞ்சொன்னாய்
கற்றவாநன்றுபோவென்றினையனகழறலுற்றான். (௧௭)

பேதைமானுடவரோடுகுரங்கலபிறவேயாகப்
பூதலவரைப்பினாகர்புரத்தினப்புறத்ததாகக்
காதுவெஞ்செருவேட்டென்னைக்காந்தினர்கலந்தபோது
சீதைதன்றிறத்தன்றாயினமர்த்தொழிறிறம்புவேனோ. (௧௮)

ஒன்றலபகழியென்கைக்குரியனவுலகமெல்லாம்
வென்றனவொருவன்செய்தவினையினும்வலியவெம்போர்
முன்றருகென்றதேவர்முதுகுபுக்கமரின்முன்னம்
சென்றனவின்றுவந்தகுரங்கின்மேற்செல்கலாவோ. (௧௯)

சூலமேய்தடக்கையண்ணறானுமோர்குரங்காய்த்தோன்றின்
எலுமேலிடைவதல்லாலென்செய்வனென்னைக்கால

---

14. உற்பாதம் - கெடுதிக்குரிய புதியதோற்றம்.

வேலையேகடைந்தமேனாளுலகெலாம்வெருவவந்த
ஆலமோவிழுங்கவென்கையயின்முகப்பகழியம்மா. (௨௦)

அறிகிலைபோலுமையவமரெனக்கஞ்சிப்போன
எறிசுடர்நேமியான்வந்தெதிர்ப்பினுமென்கைவாளிப்
பொறிபடச்சுடர்கடையப்போவனபோக்கிலாத
மறிகடல்கடையவந்தமணிகொலாம்பூணமார்பில். (௨௧)

கொற்றவனிமையோர்கோமான்குரக்கினதுருக்கொண்டானேல்
அற்றைநாளவன்றான்விட்டவயிற்படையறுத்துமாற்ற
இற்றவான்சிறையவாகிவிழுந்துபோயெழுந்துவீங்காப்
பொற்றைமால்வரைகளோவென்புயநெடும்பொருப்புமம்மா. (௨௨)

உள்ளமேதூதுசெல்லவுயிரனாருறையுளூடும்
கள்ளமாமகளிர்சோரநேமிப்புள்கவர்ச்சிநீங்கக்
கொள்ளைபூண்டமரர்வைகுங்குன்றையுங்கோட்டிற்கொண்ட
வெள்ளநீர்வடிந்ததென்னவீங்கிருள்விடிந்ததன்றே. (௨௩)

இன்னதோர்தன்மைத்தாமென்றெட்டியும்பார்ப்பவஞ்சிப்
பொன்மதிற்புறத்துநாளும்போகின்றான்போர்மேற்கொண்டு
மன்னவர்க்கரசன்வந்தான்வலியமாலென்றுதானும்
தொன்னகர்காண்பான்போலக்கதிரவன்றோற்றஞ்செய்தான். (௨௪)

அருந்ததியனையநங்கையவ்வழியிருந்தாளென்று
பொருந்தியகாதறாண்டப்பொன்னகர்காண்பான்போலப்
பெருந்துணைவீரர்சுற்றத்தம்பியும்பின்புசெல்ல
இருந்தமாமலையினுச்சியேறினனிராமனிப்பால். (௨௫)

செருமலிவீரரெல்லாஞ்சேர்ந்தனர்மருங்குசெல்ல
இருதிறல்வேந்தர்தாங்குமிணைநெடுங்கமலக்கையான்
பொருவலிவயவெஞ்சீயம்யாவையும்புலியுஞ்சுற்ற
அருவரையிவர்வதாங்கோரரியரசனையனானான். (௨௬)

கதமிகுந்திரைத்துப்பொங்குங்கனைகடலுலகமெல்லாம்
புதைவுசெய்யிருளிற்பொங்குமரக்கர்தம்புரமும்பொற்பும்
சிதைவுசெய்குறியைக்காட்டிவடதிசைச்சிகரக்குன்றின்
உதயமதொழியத்தோன்றுமொருகருஞாயிறொத்தான். (௨௭)

---

18. திறம்புவேனோ - தவறுவேனோ.

20. சூலமேய்தடக்கைஅண்ணல் - அபரஉருத்திரரில் ஒருவர்.

துமிலத்திண்செருவினவாளிப்பெருமழைசொரியத்தோன்றும்
விமலத்திண்சிலையனுண்டோர்வெற்பினைமேயவீரன்
அமலத்திண்கரமுங்காலும்வதனமுங்கண்ணுமான
கமலத்திண்காடுபூத்தகாளமாமேகமொத்தான். (உஅ)

மற்குவடனைய திண்டோண்யானவன்மாலமில்லாக்
கற்குவடடுக்கிவாரிக்கடலினைக்கடந்தகாட்சி
நற்குவடனையவீரரீட்டத்தினடுவணின்றான்
பொற்குவடிடையேதோன்றுமரகதக்குன்றம்போன்றான். (உகூ)

அணைநெடுங்கடலிற்றோன்றவாற்றியசீற்றத்தையன்
பிணைநெடுங்கண்ணியென்னுமின்னுயிர்துறந்தபின்னைத்
துணைபிரிந்தயருமன்றிற்சேவலிற்றுளங்குகின்றான்
இணைநெடுங்கமலக்கண்ணாலிலங்கையையெய்தக்கண்டான். (௩௦)

நந்திருநகரேயாதிவேறுளநகர்கட்கெல்லாம்
வந்தபேருவமைகூறிவழுத்துவானமைந்தகாலை
இந்திரனிருக்கையென்பரிலங்கையையெடுத்துக்காட்டார்
அந்தரமுணர்தறேற்றாருங்கவிப்புலவரம்மா. (௩க)

பழுதறவிளங்குஞ்செம்பொற்றலத்திடைப்பரிதிநாண
முழுதெரிமணியிற்செய்துமுடிந்தனமுனைவராலும்
எழுதருவகையவாயவியையவனவியையச்செய்த
தொழிறெரிகிலவாற்றங்கட்சுடர்மணிக்கற்றைசுற்றி. (௩உ)

விரிகின்றகதிரவாகிமிளிர்கின்றமணிகள்வீசச்
சொரிகின்றசுடரின்சும்மைவிசும்புறத்தொடருந்தோற்றம்
அரியென்றவெற்றியாற்றன்மாருதியமைத்ததீயால்
எரிகின்றதாமேகாணிக்கொடிநகரிருந்ததின்னும். (௩௩)

மாசடைப்பரந்தமானமரகதத்தலத்துவைத்த
காசடைசமைந்தமாடங்கதிர்த்தழைக்கற்றைசுற்ற
ஆசடைகுன்றவெள்ளியகன்மனையன்னமாகப்
பாசடைப்பொய்கைபூத்தபங்கயநிகர்ப்பபாராய். (௩௪)

தீச்சிகைசிவணுஞ்சோதிச்செம்மணிச்செய்ததூணில்
தூச்சுடர்மாடமீண்டித்துறுதலாற்கருமைதோன்றா
மீச்செலுமேகமெல்லாம்விரிசுடரிலங்கைவேறு
காய்ச்சியவிரும்புமானச்சேர்ந்தவையொளிர்வகாணாய். (௩ரு)

29. கற்குவடு - மலை. 34. பாசடை - பசியபாசை.

விற்படிதிரடோள்வீரநோக்குதிவெங்கண்யானை
அற்படிநிறத்தவேனுமாடகத்தலத்தையார்க்கக்
கற்படிவயிரத்திண்காளகங்களிற்கல்விக்கையால்
பொற்படியென்னவீசிப்பொன்மலையென்னப்போவ. (௩௬)

பூசல்விற்குமரநோக்காய்புகரறவிளங்கும்பொற்பின்
காசுடைக்கவரிக்கற்றைக்கால்களாற்கதுவுகின்ற
வீசுபொற்கொடிகளெல்லாம்விசும்பினின்விரிந்தமேக
மாசறத்துடைத்தவ்வானம்விளங்குவபோலுமாதோ. (௩௭)

நூல்படத்தொடர்ந்தபைம்பொற்சித்திரநுனித்தபத்திக்
கோல்படுமனைகளாயகுலமணியெவையுங்கூட்டிச்
சால்படுத்தரக்கன்மாடத்தனிமணிநடுவட்சார்த்தி
மால்கடற்கிறைவன்பூண்டமாலைபோன்றுளதிம்மூதூர். (௩௮)

நன்னெறியறிஞநோக்காய்நளிநெடுந்தெருவினுப்பண்
பன்மணிமாடப்பத்திநிழல்படப்படர்வபண்பால்
தன்னிறந்தெரிகிலாதவொருநிறஞ்சார்கிலாத
இன்னதோர்குலத்தவென்றுபுலப்படாபுரவியெல்லாம். (௩௯)

வீரநீபாராய்மெல்லென்பளிங்கினால்விளங்குகின்ற
மாரனுமருளச்செய்தமாளிகைமற்றோர்சோதி
சேர்தலுந்தெரிவவன்றேறற்றெரிகிலாதெரிந்தகாட்சி
நீரினுலியன்றவென்னநிழலெழுகின்றநீர்மை. (௪0)

கோணிறக்குனிவிற்செங்கைக்குமரனேகொழுவெண்டிங்கட்
கானிறக்கதிர்வெண்டிங்கடெற்றியவாயகாட்சி
வானிறத்தரளப்பந்தர்மரகதநடுவண்வைத்த
பானிறப்பரவைவைகும்பரமனைநிகர்ப்பபாராய். (௪௧)

கோளவாவரியேறன்னகுருசிலேகொள்ளநோக்காய்
நாளவாமின்றேய்மாடத்தும்பரோர்நாகர்பாவை
காளவாவுறையின்வாங்குங்கண்ணடிவிசும்பிற்கவ்வி
வாளராவிழுங்கிக்காலுமதியினைநிகர்ப்பபாராய். (௪௨)

கொற்றவான்சிலைக்கைவீரகொடியுடைமாடக்குன்றை
உற்றவான்கழுத்தவானவொட்டகம்வைத்தவும்பர்
செற்றியமணிகளீன்றசுடர்களைச்செக்கராத்தின்
கற்றைபந்தளிர்களென்னக்கவ்வியநிமிர்வகாணாய். (௪௩)

43. செற்றிய - நெருங்கிய. சேதாரத்தின் என்றும் பாடம்.

வர்க்கவெஞ்சிலைக்கைவீரமலர்க்குழல்வடிக்குமாலைத்
தோகையரிட்டதூமத்தகிற்புகைமுழுதுஞ்சுற்ற
வேகவெங்களிற்றின்வன்றோன்மெய்புறப்போர்த்ததையல்
பாகனிற்பொலிந்துதோன்றும்பவளமாளிகையைப்பாராய். (சச)

காவலன்பயந்தவீரக்கார்முகக்களிறேகற்ற
தேவர்தந்தச்சனீலக்காசினூற்றிருந்தச்செய்த
ஈவதுதெரியாவுள்ளத்திராக்கதரீட்டிவைத்த
பாவபண்டாரமன்னசெய்குன்றம்பலவும்பாராய். (சரு)

பிணைமதத்தனையநோக்கம்பாழ்படப்பிடியுண்டன்பின்
துணைவரைப்பிரிந்துபோநதுமருங்கெனத்துவளுமுள்ளப்
பணமயிர்ப்பெய்துமல்குறப்பாவையர்பருவநோக்கும்
கணமயிற்குழுவினம்மைக்காண்கின்றார்தம்மைக்காணாய். (சசு)

நாள்மலர்த்தெரியல்வீரநம்படைகாணவானத்
தியாழ்மொழித்தெரிவைமாருமைந்தருமேறுகின்றார்
வாழ்வினிச்சமைந்ததன்றேயென்றுமாநகரையெல்லாம்
பாழ்படுத்திரியல்போவாரொக்கின்றபரிசுபாராய். (சஎ)

இன்னவாறிலங்கைதன்னையிளையவற்கிராமன்காட்டிச்
சொன்னவாசொல்லாவண்ணமதிசயந்தோன்றுங்காலை
அன்னமாநகரின்வேந்தனரிக்குலப்பெருமைகாண்பான்
சென்னிவான்றடவுஞ்செம்பொற்கோபுரத்தும்பர்சேர்ந்தான். (சஅ)

ஆக திருவிருத்தம் - அoச.

---

## கo-வது, இராவணன்றனைகாண்படலம்.

கவடுகப்பொருதகாய்களிறன்னான்
அவடியக்கின்மலரம்புறவெம்பும்
சுவடுடைப்பொருவின்றோள்கொடனேகம்
குவடுடைத்தனியொர்குன்றெனநின்றான். (க)

பொலிந்ததாமினிதுபோமெனலோடும்
மலிந்தநங்கையெழிலால்வலிநாளும்

---

45. பாவபண்டாரம்-பாவத்துக்கிருப்பிடம். பண்டாரம்-பொக்கஷம்.
46 பருவம் - மழைக்காலம். 47. நாழ் - நாள்.
1. அவடியக்கு - அச்சீதையின் மோகத்தாலுண்டான மயக்கம்.

மெலிந்தநோள்கள்வடமேருவின்மேலும்
வலிந்துசெல்லமிசைசெல்லுமனத்தான். (உ)

செம்பொன்மௌலிசிகரங்கடயங்க
அம்பொன்மேருவரைகோபுரமாக
வெம்புகாலினைவிழுங்கிடமேனாள்
உம்பர்மீதுநிமிர்வாசுகியொத்தான். (ங)

தொக்கபூதமவையைந்தொடுதுன்னிட்
டொக்கநின்றதிசையொன்பதொடொன்றும்
பக்கமூநநிழல்பரப்பிவியப்பால்
மிக்கநின்றகுடைமீதுவிளங்க. (ச)

கைத்தருங்கவரிவீசியகாலால்
நெய்த்திருண்டபெருநீள்வரைமீதில்
தத்திவீழருவியின்றிரள்சால
உத்தரீகநெடுமார்பினுலாவ. (ரு)

வானகத்தினிலுருப்பசிவாசத்
தேனகத்தருதிலோத்தமைசெவ்வாய்
ஏனைக்குலவரம்பையர்யாரும்
சானகிக்கழகுதந்தயல்சார. (சு)

வீழியின்கனியிதழ்ப்பணைமென்றோள்
ஆழிவந்தவரமங்கையராஞ்னூற்
றேழிரண்டினினிரண்டுபயின்றோர்
சூழிரண்டுபுடையும்முறைசுற்ற. (எ)

முழைபடிந்தபிறைமுள்ளெயிறுள்வாள்
இழைபடிந்தவிளவெண்ணிலவீனக்
குழைபடிந்ததொருகுன்றின்முழங்கா
மழைபடிந்தனையதொங்கல்வயங்க. (அ)

ஓதுநூல்கள்வழியின்செவியுள்ளும்
சீதைசீதையெனுமாருயிர்தேய
நாதவீணையிசைநாரதர்பாட
வேதகீதவமிழ்தள்ளிவிழுங்க. (கூ)

---

3. வெம்புகாலினை - சீற்றங்கொண்ட வாயுதேவனை.

6. ஏனைக - ஏல்நகை. ஏல் பொருந்தின, நகை - தர்தங்களை யுடைய.

வெங்கரத்தரயில்வாளினர்வில்லோர்
சங்கரற்கும்வலிசாய்வில்வலத்தோர்
அங்கரக்கர்சதகோடியமைந்தோர்
பொங்கரத்தவிழியோர்புடைசூழ. (க௦)

கல்லிலங்கையுலகங்கவர்கிற்போர்
நல்லிலங்கைமுதலோர்நகையில்லோர்
சொல்லிலங்கர்சதகோடிதொடர்ந்தோர்
வில்லிலங்குபடையோர்புடைவிம்ம. (கக)

பாரியங்குநர்விசும்புபரந்தோர்
வாரியங்குமழையின்குரன்மானும்
பேரியங்கண்முருடாகுளிபெட்கும்
தூரியங்கடலினின்றுதுவைப்ப. (கஉ)

நஞ்சுமஞ்சுவிழிநாகியர்நாண
வஞ்சியஞ்சுமிடைமங்கையர்வானத்
தஞ்சொலிஞ்சொலினரம்பையரோடும்
பஞ்சமஞ்சிவணுமின்னிசைபாட. (க௩)

நஞ்சுகக்கியெரிகண்ணினர்நாமக்
கஞ்சுகத்தர்கதைபற்றியகையர்
மஞ்சுகக்குமுறுசொல்லினர்வல்வாய்ச்
சிஞ்சுகத்தின்விசையோர்திசைசெல்ல. (க௪)

கூயுரைப்பகுலமால்வரையேனும்
சாயுரைப்பரியவாயதடந்தோள்
வாயுரைத்தகலவைக்களிவாசம்
வேயுரைப்பதெனவந்துவிளம்ப. (க௫)

வேத்திரத்தரெரிவீசிவிழிக்கும்
நேத்திரத்தரிறைநின்றுழிநில்லாக்
காத்திரத்தர்மனைகாவல்விரும்பும்
சூத்திரத்தர்பதினாயிரர்சுற்ற. (க௬)

தோரணத்தின்மணிவாயின்மிசைச்சூல்
நீரணைத்தமுகிலாமெனநின்றான்
ஆரணத்தையரியைம்மறைநேடும்
காரணத்தைநிமிர்கண்கொடுகண்டான். (க௭)

---

13. பஞ்சமஞ்சிவணும் - தமிழிராகமான பஞ்சமத்தினையொத்த.

மடித்தவாயினன்வயங்கெரிவந்து
பொடித்திழிந்தவிழியன்னதுபோழ்தின்
இடித்தவன்றிசையெரிந்தனநெஞ்சம்
துடித்தகண்ணிரேடிடத்திரடோள்கள். (கஅ)

ஆகராகவனையவ்வழிகண்டான்
மாகராகநிறைவாளொளியோனை
ஏகராசியினினெய்தவெதிர்க்கும்
வேகராகுவெனவெம்பிவெகுண்டான். (ககூ)

ஏனையோனிவனிராமனெனத்தன்
மேனியேயுரைசெய்கின்றதுவென்றிச்
சேனைவீரர்படையைத்தெரிவென்று
தான்வினவவெதிர்சாரன்விளம்பும். (உO)

இங்கிவன்படையிலங்கையர்மன்னன்
தங்கையென்னலுமுதிர்ந்தசலத்தால்
அங்கைவாள்கொடவளாகம்விளங்கும்
கொங்கைநாசிசெவிகொய்துகுறைத்தான். (உக)

அறக்கணென்பதொருகண்ணிலனுகி
நிறக்கருங்கடலுமேனமியினின்று
துறக்கமெய்தியவருந்துறவாத
உறக்கமென்பதனையோடமுனிந்தான். (உஉ)

கையவன்றொடவமைந்தகரத்தான்
நையவாலியொடிவண்டநடுங்கச்
செய்தவன்செருவினிற்றிகழ்கின்றான்
வெய்யவன்புதல்வன்யாரினும்வெய்யான். (உ௩)

தந்தைமற்றவன்சார்வில்வலத்தோர்
அந்தரத்தரமுதார்கவிகாண
மந்தரத்திநெடும்வாசுகியோடும்
சுந்தரப்பெரியதோள்கடிரித்தான். (உச)

நடந்துநின்றவனகுங்கதிர்முன்பு
தொடர்ந்தவன்னுலகுசுற்றுமெயிற்றின்

---

19. ஆக - அவ்வாறாக. ராகநிறை - செந்நிறநிறைந்த. ஏகராசியினில் - அமாவாசையன்று.

23. கையவன்றொட - கரத்தினை அவ்விலக்குமணன்றொட.

25. உலகு - உலகினை. சுற்றும் - சுழற்றியெடுத்த. எயிற்றின் - வக்கிரதந்தமுடைய பூவராகப்பெருமாள்.

இடந்தெழுந்தவனையொத்தவன்வேலை
கடந்தவன்சரிதைகண்டனையன்றே. (௨௫)

நீலனின்றவனெருப்பின்மகன்றன்
சூலமுங்கயிறுமின்மைதொடர்ந்தோன்
ஆலமொன்றுநிறமென்றயலோனைக்
காலனென்பரிவனைக்கருதாதார். (௨௬)

வேறு.

வேறாகநின்றானளனென்னும்விலங்கலன்னான்
ஏறாவருணன்வழிதந்திலனென்றிராமன்
சீறாதவுள்ளத்தெழுசீற்றமுகுத்தசெந்தீ
ஆறாதமுன்னம்மகன்வேலையையாறுசெய்தான். (௨௭)

முக்காலமுமொய்ம்மதியான்முறையினுணர்வான்
புக்காலமெழப்புணரிப்புலவோர்கலக்கும்
அக்காலமுள்ளான்கரடிக்கரசாகிநின்றான்
இக்காலநின்றுமுலகேழுமெடுக்கவல்லான். (௨௮)

சேனாபதிதன்னயலேயிருள்செய்தகுன்றின்
ஆனாமருங்கேயிரண்டாடகக்குன்றினின்றார்
ஏனோரிலிராமனிலக்குவனென்னுமீட்டார்
வானோர்தமருத்துவன்மைந்தர்வலிக்கண்மிக்கார். (௨௯)

உவன்காண்குமுதன்குமுதாக்கனுமூங்கவன்காண்
இவன்காண்கவையன்கவையாக்கனுமீங்கிவன்காண்
சிவன்காணயன்காணெனுந்தூதனைப்பெற்றசெல்வன்
அவன்காணெடுங்கேசரியென்பவனாற்றன்மிக்கான். (௩௰)

முரபன்னகுதோளவன்மூரிமடங்கலென்னக்
கரபன்னகமன்னவைமின்னுகக்காந்துகின்றான்
வரபன்னகந்தன்னையும்வேரொடுவேண்டின்வாங்கும்
சரபன்னவனிவன்சதவலியாயதக்கோன். (௩௧)

வேறு.

மூன்றுகண்ணிலனாயினுமூன்றெயிலெரித்தோன்
போன்றுநின்றவன்பனசனிப்போர்க்கெலாந்தானே

---

27. ஆறுசெய்தான் - சேதுவால் வழியாக்கினான்.
31. முரபன் - வன்மையுடையவனும்.

என்றுநின்றவனிடபன்மற்றிவன்றனக்கெதிரே
தோன்றுகின்றவன்சுசேடணனறிவொடுதொடர்ந்தோன். (௩௨)

வெதிர்கொள்குன்றெலாம்வேரொடும்வாங்கிமேதினியை
முதுகுநெரய்தெனச்செய்தவன்கனலையுமுனிவோன்
கதிரவன்மகற்கிடமருங்கேநின்றகாளை
ததிமுகன்னவன்சங்கனென்றுரைக்கின்றசிங்கம். (௩௩)

அண்ணல்கேளிவரக்கவதியுமளவுமொன்றுளதோ
விண்ணின்மீனினைக்குணிப்பினும்வேலையின்மீனை
எண்ணிநோக்கினுமக்கடன்மணலினையெல்லாம்
கண்ணிநோக்கினுங்கணக்கிலரென்றனன்காட்டி. (௩௪)

சினங்கொடிண்டிறலரக்கனுஞ்சிறுநகைசெய்தான்
புனங்கொள்புன்றலைக்குரங்கினைப்புகழுதிபோலாம்
வனங்களும்படர்வரைதொறுந்திரிதருமானின்
இனங்களும்பலவென்செயுமரியினையென்றான். (௩௫)

என்னும்வேலையினிராவணற்கிளவலையிராமன்
கன்னிமாமதினகர்நின்றுநம்வலிகாண்பான்
முன்னிவானினுமுடிநின்றார்கண்முறையால்
இன்னநாமத்தரினையரென்றியம்புதியென்றான். (௩௬)

நாறுதன்குலக்கிளையெலாநரகத்துநடுவான்
சேறுசெய்துவைத்தானும்பர்திலோத்தமைமுதலாக்
கூறுமங்கையர்குழாத்திடைக்கோபுரக்குன்றத்
தேறிநின்றவன்புன்றொழிலிராவணனென்றான். (௩௭)

கருதிமற்றென்றுகழலுதன்முனம்விழிக்கனல்கள்
பொருதுபுக்கனன்முந்துறச்சூரியன்புதல்வன்
சுருதியன்னமுன்சிவந்தநற்கனியென்றுசொல்லப்
பருதிமேற்பண்டுபாய்ந்தவனுமெனப்பாய்ந்தான். (௩௮)

சுதையைத்ததோங்கியசுவேலத்தினுச்சியைத்துறந்து
சிதையைத்திண்டிறலிராவணக்குன்றிடைச்சென்றான்
ததையச்செங்கரம்பரப்பியதன்பெருந்தாதை
உதையக்குன்றினின்றுகுன்றிற்பாய்ந்தவனொத்தான். (௩௯)

பள்ளம்போய்ப்புகும்புனலெனப்படியிடைப்படிந்து
தள்ளும்பொற்கிரிசலிப்புறக்கோபுரஞ்சார்ந்தான்

வெள்ளம்போற்கண்ணீயழுதலுமிராவணன்மேற்றன்
உள்ளம்போற்செலுங்கழுகினுக்கரசனுமொத்தான். (௪0)

கரியகொண்டலைக்கருணையங்கடலினைக்காணப்
பெரியகண்கள்பெற்றுவக்கின்றவரம்பையர்பிறரும்
உரியகுன்றிடையுருமிடிவீழ்தலுமுலைவுற்
றிரியல்போயினமயிற்பெருங்குலமெனவிரிந்தார். (௪௧)

ஆக திருவிருத்தம் - ௮௪௫.

## கக-வது, மகுடபங்கப்படலம்.

காலவிருள்சிந்துகதிரோன்மதலைகண்ணுற்
றேலவெதிர்சென்றடலிராவணனையெய்தி
நீலமலைமுன்கயிலைநின்றதெனநின்றான்
ஆலவிடமன்றுவராநின்றசிவனன்னான். (௧)

இத்திசையின்வந்தபொருளென்னெனவியம்பத்
தத்தியெதிர்சென்றுதிசைவென்றுயர்தடந்தோள்
பத்தினொடுபத்துடையவனுடல்பதைப்பக்
குத்தினனுரத்தினிமிர்கைத்துணைகுளிப்ப. (௨)

திருகியசினத்தொடுசெறுத்தெதிர்விழித்தான்
ஒருபதுதிசைக்கணுமொலித்தவொலியொப்பத்
தருவனமெனப்புடைதழைத்துயர்தடக்கை
இருபதுமெடுத்துருமிடித்தெனவடித்தான். (௩)

அடித்தவிரல்பட்டவுடலத்துழியிரத்தம்
பொடித்தெழவுறுக்கியெதிர்புக்குடல்பொருத்திக்
கடுத்தவிசையிற்கடிதெழுந்துகதிர்வேலான்
முடித்தலைகள்பத்தினுமுகத்தினுமுதைத்தான். (௪)

உதைத்தவனடித்துணைபிடித்தொருகணத்தில்
பதைத்துலைவுறப்பலதிறத்திகல்பரப்பி
மதக்கரியையுற்றரிநெரித்தெனமயக்கிச்
சுதைத்தலனிடைக்கடிதடிக்கொடுதுகைத்தான். (௫)

துகைத்தவனுடற்பொறைசுறுக்கொளவிறுக்கித்
தகைப்பெருவலத்தொடுதலத்திடையமுக்கி

2. இத்திசையில் - இவ்விடத்தில்.

வகைப்பிறைநிறத்தெயிறுடைப்பொறிவழக்கிக்
குகைப்பொழிபுதுக்குருதிகைக்கொடுகுடித்தான். (௬)

கைக்கொடுகுடித்தவனுடற்கனகவெற்பைப்
பைக்கொடுமிடற்றரவெனப்பலகைபற்றி
மைக்கொடுநிறத்தவன்மறத்தொடுபுறத்தில்
திக்கொடுபொருப்புறநெருப்பொடுதிரித்தான். (௭)

திரித்தவனுரத்தினுகிர்செற்றும்வகைகுத்திப்
பெருத்துயர்தடக்கையொடடித்திடைபிடித்துக்
கருத்தழிவுறத்திரிதிறத்தெயிலகணத்தன்
றெரித்தவனையொத்தவனெடுத்தகழியிட்டான். (அ)

இட்டவனையிட்டவகழிற்கடிதினிட்டான்
தட்டவுயரத்தினிலுறுந்தசமுகத்தான்
ஒட்டவுடனேயவனும்வந்தவனையுற்றான்
விட்டிலர்புரண்டிருவரோரகழின்வீழ்ந்தார். (௯)

விழுந்தனர்சுழன்றனர்வெகுண்டனர்திரிந்தார்
அழுந்தினரழுந்திலரகன்றிலரகன்றார்
எழுந்தனரெழுந்திலரெதிர்ந்தனர்முதிர்ந்தார்
ஒழிந்தனரொழிந்திலருணர்ந்திலர்களொன்றும். (௧௦)

அந்தரவருக்கன்மகனுழியகழாகச்
சுந்தரமுடைக்கரம்வலிப்பதொர்சுழிப்பட்
டெந்திரமெனத்திரியிரக்கமிலரக்கன்
மந்தரமெனக்கடையும்வாலியையுமொத்தான். (௧௧)

ஊறுபடுசெம்புனலுடைந்தகழையுற்ற
ஆறுபடர்கின்றனவெனப்படரவன்னார்
பாறுபொருகின்றனபருந்திவையெனப்போய்
ஏறினர்விசும்பிடையிரிந்தவுலகெல்லாம். (௧௨)

தூரநெடுவானின்மலைபுஞ்சுடரவன்சேய்
காரினெடுமேருநிகர்காய்சினவரக்கன்
தாருடையதோள்கள்பலவுந்தழுவநின்றான்
ஊரினெடுகோள்கதுவுதாதையையுமொத்தான். (௧௩)

பொங்கமர்விசும்பிடையுடன்றுபொருபோழ்தில்
செங்கதிரவன்சிறுவனைத்திரள்புயத்தால்

9. இட்டவனை - தனைத்தூக்கியிட்டவனை.

மங்கலவயங்கொளிமறைத்தவலரக்கன்
வெங்கதிர்கரந்ததொருமேகமெனலானன். (கச)

நூபுரமடந்தையர்கிடந்தலறநோனார்
மாபுரமடங்கலுமிரிந்தயரவன்றாள்
மீபுரமடங்கலெனவெங்கதிரவன்சேய்
கோபுரமடங்கவிடியத்தனிகுதித்தான். (கரு)

ஒன்றுறவிழுந்தவுருமைத்தொடரவோடா
மின்றெறியெயிற்றினொருமேகம்விழுமென்னத்
தின்றிடுவெனென்றெழுசினத்திறலரக்கன்
பின்றொடரவந்திருகரத்துணைபிடித்தான். (கசு)

வந்தவனைநின்றவன்வலிந்தெதிர்மலைந்தான்
அந்தகனுமஞ்சிடநிலத்திடையறைந்தான்
எந்திரமெனக்கடிதெடுத்தவனெறிந்தான்
கந்துகமெனக்கடிதெழுந்தெதிர்கலந்தான். (கஎ)

படிந்தனமரந்தரைபகிர்ந்தனபரப்பும்
கொடுஞ்சினமுதிர்ந்தனவுரத்தின்மிசைகுத்த
நெடுஞ்சுவர்பிளந்தனநெரிந்தநிமிர்குன்றம்
இடிந்தனதகர்ந்தனவிலங்கைமதிலெங்கும். (கஅ)

செறிந்துயர்கறங்கனையமேனிநிலைதேரார்
பிறிந்தனர்பொருந்தினரெனத்தெரிதல்பேணார்
எறிந்திலர்களெய்திலர்களின்னரெனமுன்னின்
றறிந்திலரரக்கருமமர்த்தொழிலயர்ந்தார். (கக)

வேறு.

இன்னதோர்தன்மையெய்துமளவையினெழிலிவண்ணன்
மன்னுயிரனையகாதற்றுணைவனைவரவுகாணான்
உன்னிபகருமமெல்லாமுன்னொடுமுடிந்தவென்னாத்
தன்னுணர்வழிந்துசிந்தையலம்வந்துதளர்ந்துசாய்ந்தான். (உ௦)

ஒன்றியவுணர்வேயாயவோருயிர்த்துணைவவுன்னை
இன்றியானுளனாய்நின்றேனின்றியற்றுவதியைவதன்றால்
அன்றியுந்துயரத்திட்டாயமரரையரக்கர்க்கெல்லாம்
வென்றியுங்கொடுத்தாயென்னைக்கெடுத்ததுன்வெகுளியென்றான ()

---

15. நோனார் - பகைவர்.

தெய்வவெம்படையுந்திராமாயையும்வல்லதீயோன்
கையிடைப்புக்காய்நீவேறெவ்வண்ணங்கடத்திகாவல்
வையமோரேழும்பெற்றால்வாழ்வனேவாராயாகின்
உய்வனேதமியனேனுக்குயிர்தந்தவுதவியோனே. (உஉ)

ஒன்றாகநினையவொன்றாய்விளைந்ததெதன்கருமமந்தோ
என்றாலும்யானேவாழேனியிலையெனவுங்கேளேன்
இன்றாயபழியுநிற்கநெடுஞ்செருக்களத்திறென்னைக்
கொன்றாய்நீயன்றோநின்னைக்கொல்லுமேமற்குணங்கடியோன். (உ௩)

இறந்தனையென்றபோதுமிருந்தியானரக்கரென்பார்
திறந்தனையுலகினீக்கிப்பின்னுயிர்தீர்வனேனும்
புறந்தருபண்பினுயவுயிரெனப்பொருந்தினானை
மறந்தனன்வலியனென்பாராதலாலதுவுமாட்டேன். (உ௪)

அழிவனசெய்தாயையவன்பினாலளியற்றேனுக்
கொழிவருமுதவிசெய்தவுன்னையானொழியவாழ்தல்
எழுவதுவெள்ளந்தன்னினீண்டொர்பேரெஞ்சாதேகிச்
செழுநகரடையினன்றேவித்துயர்தீர்வதென்றான். (உ௫)

என்றவனிரங்குகாலத்திருவருமொருவர்தம்மில்
வென்றிலர்தோற்றிலாராய்வெஞ்சமம்விளைக்கும்வேலை
வன்றிறலரக்கன்மௌலித்தனிமணிவலியால்வாங்கிப்
பொன்றினனாகினன்றென்றவன்வெட்கவிவனும்போந்தான். (உ௬)

கொழுமணிமுடிகடோறுங்கொண்டனகுழுவின்கூட்டம்
அழுதயருறுகின்றான்னடித்தலமதனிற்சூட்டித்
தொழுதயனுணிநின்றான்றாயவரிருவரோடும்
எழுபதுவெள்ளயாக்கைக்கோருயிரெய்திற்றன்றே. (உ௭)

என்புறக்கிழிந்தபுண்ணினிழிபெருங்குருதியோடும்
புன்புலத்தரக்கன்றன்னைத்தீண்டியதீமைபோக
அன்பனையமரப்புல்லிமஞ்சனமாட்டிவிட்டான்
தன்பெருநயனமென்னுந்தாமரைசொரியுநீரால். (உ௮)

ஈர்கின்றதன்றேயென்றனுள்ளத்தைதயிங்குமங்கும்
பேர்கின்றதாவியாக்கைபெயர்கின்றதில்லைப்பின்னைத்
தேர்கின்றசிந்தையொன்றோதிகைத்தனையென்றுதெண்ணீர்
சோர்கின்றவருவிக்கண்ணான்றனைவனைநோக்கிச்சொல்லும். (உ௯)

---

26. வாயில்வாங்கி என்றும் பாடம்.

கல்லினும்வலியதோளாய்நின்னையக்கருணையில்லோன்
கொல்லுதல்செய்தானாகிற்கொடுமையாற்குற்றம்பேணிப்
பல்பெரும்பகழிமாரிவேரொடும்பறியநூறி
வெல்லினுந்தோற்றேன்யானேயல்லனோவிளிந்திலாதேன். (௩௦)

பெருமையும்வண்மைதானும்பேரெழிலாண்மைதானும்
ஒருமையினுணரநோக்கிற்பொறையினதாற்றமன்றே
அருமையுமடர்ந்துநின்றபழியையுமயர்ந்தாய்போல
இருமையுங்கெடுத்தாயன்றேயென்னினைந்தெதன்செய்தாய்நீ. (௩௧)

இந்நிலைவிரைவினெய்தாதித்துணைதாழ்த்தியாயின்
நன்னுதற்சீதையாலென்ஞாலத்தாற்பயனென்னம்பி
உன்னையான்றொடர்வெனென்னைத்தொடருமிவ்வுலகமென்றால்
பின்னையெனிதனைநோக்கிவிளையாடிப்பிழைப்பசெய்தாய். (௩௨)

என்றனனென்றலோடுமிணையடியிறைஞ்சியாங்குக்
குன்றுறழ்குவவுத்திண்டோட்கொற்றவல்வீரற்காணத்
தன்றனியுள்ளநாணுற்றழல்விழிக்கொலைவெஞ்சீயம்
நின்றெனவெருத்தங்கோட்டிநிலனுறநோக்கிக்கூறும். (௩௩)

காட்டிலேகழுகின்வேந்தன்செய்தனகாட்டமாட்டேன்
நாட்டிலேகுகனார்செய்தநன்மையைநயக்கமாட்டேன்
கேட்டிலேனின்றுகண்டுங்கிளிமொழிமாதராளை
மீட்டிலேன்றலைகள்பத்துங்கொணர்ந்திலேன்வெறுங்கைவந்தேன்()

வன்பகைநிற்கவெங்கள்வானரத்தொழிலிற்கேற்ற
புன்பகைகாட்டும்யானோபுகழ்ப்பகைக்கொருவன்போலாம்
என்பகைதீர்த்தென்னுவியரசொடுமெனக்குத்தந்த
உன்பகையுனக்குத்தந்தேனுயிர்சுமந்துழலாநின்றேன். (௩௫)

செம்புக்குஞ்சிவந்தசெங்கட்டிசைநிலைக்களிற்றின்சீற்றக்
கொம்புக்குங்குறைந்ததுண்டேயென்னுடைகுரக்குப்புன்றோள்
அம்புக்குமுன்னஞ்சென்றுனரும்பகைமுடிப்பலென்று
வெம்புற்றமனமும்யானுந்தீதின்றிமீளவந்தேன். (௩௬)

நூல்வலிகாட்டுஞ்சிந்தைநும்பெருந்தாதன்வெம்போர்
வேல்வலிகாட்டுவோர்க்கும்வில்வலிகாட்டுவோர்க்கும்
வால்வலிகாட்டிப்போந்தவளநகர்புக்குமற்றென்
கால்வலிகாட்டிப்போந்தேன்கைவலிக்கவதியுண்டோ. (௩௭)

இன்னனபலவும்பன்னியிறைஞ்சியமுடியனாகி
மன்னவர்மன்னன்முன்புவானரமன்னனிற்ப
அன்னவன்றன்னைநோக்கியழகனைநோக்கியாழி
மின்னெனவிளங்கும்பைம்பூண்வீடணன்விளம்பலுற்றான். (௩அ)

வாங்கியமணிகளன்னான்றலைமிசைமௌலிமேலே
ஓங்கியவல்லவோமற்றினியப்பாலுயர்ந்ததுண்டோ
தீங்கிவன்சிரத்தின்மேலுமுயிரினுஞ்சீரிதம்மா
வீங்கியபுகழையெல்லாம்வேரொடும்வாங்கிவிட்டாய். (௩௯)

பாரகஞ்சுமந்தபாம்பின்பணாமணிபறிக்கவேண்டின்
வார்கழற்காலினாலேகல்லவல்லவனைமுன்னாத்
தார்கெழுமௌலிபத்தின்றனிமணிவலிதிறந்த
வீரதைவிடவலோற்குமுடியுமோவேறுமுண்டோ. (௪௦)

கருமணிகண்டத்தான்றன்சென்னியிற்கறைவெண்டிங்கள்
பருமணிவண்ணன்மார்பிற்செம்மணிபறித்திட்டாலும்
தருமணியிமைக்குந்தோளாய்தசமுகன்முடியிற்றைத்த
திருமணிபறித்துத்தந்தவென்றியேசீரிதன்றோ. (௪௧)

தொடிமணியிமைக்குந்தோளாய்சொல்லினும்வேறுமுண்டோ
வடிமணிவயிரத்தோள்வாள்சிவன்வயின்வாங்கிக்கொண்டான்
முடிமணிபறித்திட்டாயோவவனினிமுடிக்கும்வென்றிக்
கடிமணியிட்டாயன்றேயரிகுலத்தரசவென்றான். (௪௨)

வென்றியென்றென்றுமன்றுவீரர்க்குவிளம்பத்தக்க
நன்றியென்றென்றுமன்றுநானிலமெயிற்றிற்கொண்ட
பன்றியன்றாகினீதாரியற்றுவார்பரிவினென்னா
இன்றிதுவென்றியென்றென்றிராமனுமிரங்கிச்சொன்னான். (௪௩)

தன்றனிப்புதல்வன்வென்றித்தசமுகன்முடியிற்றைத்த
மின்றளிர்த்தனையபன்மாமணியினைவெளியிற்கண்டான்
ஒன்றொழித்தொன்றுமென்றவ்வரக்கனுக்கொளிப்பான்போல
வன்றனிக்குன்றுக்கப்பாலிரவியுமறையப்போனான். (௪௪)

கங்குல்வந்திறுத்தகாலைக்கைவிளக்கெடுப்பக்காவல்
வெங்கழலரக்கன்மௌலிவிளக்கமேவிளக்கஞ்செய்யச்
செங்கதிர்ச்செல்வன்செய்தவென்றியைநிறையத்தேக்கிப்
பொங்கியதோளினானுமிழிந்துபோயிருக்கைபுக்கான். (௪௫)

42. கடிமனையென்றும் - பாடம்.

என்றனுமினைய தன்மையெய்தா தவிலங்கைவேந்தன்
நின்றார்கடேவர்கண்டாரென்பதோர்நாணநீள
அன்றயமகளிர்நோக்கமாடவர்நோக்கமாகப்
பொன்றாதுபொன்றின்றன்புகழெனவிழிந்துபோனான். (சசு)

ஆ திருவிருத்தம் - அகூக.

---

## கஉ-வது, அணிவகுப்புப்படலம்.

மானத்தானல்லற்பட்டமருமத்தான்வதனமெல்லாம்
கூனற்றாமரையிற்றான்றவான்றெடுங்கோயில்புக்கான்
பானத்தானல்லன்றெய்வப்பாடலானல்லனூடற்
றானத்தானல்லன்மெல்லென்சயனத்தானுரையுந்தாரான். (க)

வையம்விற்றானுநேராமணியிழந்தனனேமானும்
பய்யணைத்துயிர்க்கும்வெவ்வாய்ப்பஃறலைப்பாம்பின்பாலின்
மெய்யணைத்திரையின்வேலைமென்மலர்ப்பள்ளியான
ஐயனைப்பிரிந்துவைகுமநந்தனேயரக்கர்வேந்தன். (உ)

தாயினும்பழகினருந்தன்னிலைதெரிக்கலாகா
மாயைவல்லுருவத்தான்முன்வருதலும்வாயில்காப்பான்
சேயவர்சேனைநண்ணிச்செய்திறந்தெரித்திநீயென்
றேயவனெய்தினனென்றரசனையிறைஞ்சிச்சொன்னான். (ங)

அழைழெயனவெய்திப்பாதம்வணங்கியவறிஞன்றன்னைப்
பிழைபறவறிந்தவெல்லாமுரைத்தியென்றரக்கன்பேச
முழையுறுசீயமன்னான்முகத்தினுலகத்தைநோக்கிக்
குழையுறுமெய்யன்மையவரன்முறைகூறலுற்றான். (ச)

வீரியவிதியினெய்திப்பதினெழுவெள்ளத்தோடும்
மாருதிமேலைவாயிலுழிறைமேல்வருவதானான்
ஆரியனமைந்தவெள்ளமத்தனையோடுநெற்றிச்
சூரியன்மைந்தன்றன்னைப்பிரியலனிற்கச்சொன்னான். (ரு)

அன்றியும்பதினேழ்வெள்ளத்தரியொடுமரசன்மைந்தன்
தென்றிசைவாயில்செய்யுஞ்செருவெலாஞ்செய்வதானான்

---

46. என்றனும் - எப்பொழுதும்.
1. பானத்தான் - வெறிபானங்களை யுண்பவன். அல்லன் - அல்லாதவன்.
5. வீரிய - சௌரியமுடையாய்.

ஒன்றுபத்தாறுவெள்ளத்தரியொடுந்துணைவரோடும்
நின்றனனீலனென்பான்குணதிசைவாயினெற்றி. (௬)

இம்பரினியைந்தகாயுங்கனியுங்கொண்டிரண்டுவெள்ளம்
வெம்புவெஞ்சேனைக்கெல்லாமுணவுதந்துழலவிட்டான்
உம்பியைவாயிற்றோறுநிலைதெரிந்துணரச்சொன்னான்
தம்பியுந்தானுநிற்பதாயினான்சமைவீதென்றான். (எ)

சார்த்தூலனிதனைச்சொல்லத்தழுதெறிதறுகணானும்
பார்த்தூளிவாடைபொங்கப்படுவதுபடுமாபார்த்தி
போர்த்தூளிதுடைப்பெனைவருட்பொறையினின்றும்
ஈர்த்தாருகுருதிதன்னிலென்றனனியிறுதின்னை. (அ)

மாவணைநீலக்குன்றத்திளவெயில்வளர்ந்ததென்னத்
தூவணைக்குருதிச்செக்கர்ச்சுவடுறப்பொலிந்ததோளான்
ஏவணைவரிவிற்காமன்கணைபடவெரியாநின்ற
பூவணையாற்றவேறோர்புனைமணியிருக்கைபுக்கான். (௯)

செய்வனமுறையினெண்ணித்திறத்திறமுறையிற்றேறும்
மையறுமரபின்வந்தவமைச்சரைவருகவென்றான்
பொய்யெனப்பளிங்கினியைவிருக்கையின்புறத்தைச்சுற்றி
ஐயிரண்டாயகோடிப்பேய்க்கணங்காப்பவாக்கி. (க0)

அளந்தறிவரியராயவமைச்சரையடங்கநோக்கி
வளைந்ததுகுரங்கின்சேனைவாயில்கடோறும்வந்து
விளைந்ததுபெரும்போரென்றுவிட்டதுவிடாதுநம்மை
உளைந்தனவென்னவெண்ணியென்செயற்குரியவென்றான். (கக)

எழுபதுவெள்ளத்துற்றகுரகினமெயிலைமுற்றும்
தழுவினவென்றுசெய்யத்தக்கதுசமைதிபோலாம்
அழுவநீர்வேலையன்னதாயிரவெள்ளமன்றே
உழிஞையைத்தொடக்கநோக்கினுச்சிகைக்கொண்டதுன்னார். ()

எழுமழுத்தண்டுவேல்வாளிலைநெடுஞ்சூலம்வென்றி
முழுமுதற்படைகளேந்தியிராக்கதர்முனைந்தபோது
தொழுதுதம்படைகண்முன்னிட்டோடுவார்சுரர்களென்னின்
விழுமிதுகுரங்குவந்துவெறுங்கையாற்கொள்ளும்வென்றி. (கங)

---

7. இம்பரின் - இவ்வுலகில்.

10. மையறு - களங்கமற்ற.

ஈதிவர்நிகழ்ச்சியென்றுவெரிவிழித்திடி யினக்குப்
பூதலத்தடித்தகையனிகும்பனென்றொருவன்பொங்கி
வேதனைக்காமமந்தோவேரொடுங்கெடுத்த தென்ன
மாதுலத்தலைவன்பின்னுமன்பினோர்மாற்றஞ்சொன்றான். (௧௪)

புக்கெரிமடுத்திவ்வூரைப்பொடிசெய்துபோயினற்குச்
சக்கரமுண்டோகையிற்றசமுகன்றலைகளான
இக்கிரிபத்தின்மௌலியினமணியிடந்துகொண்ட
சுக்கிரீவற்குமுண்டோசூலமும்வாளும்வேலும். (௧௫)

தொடைகலந்திராமன்வாளிதோன்றுதன்முன்னந்தோன்றா
இடைக்கலமருதல்செய்யுமுலையிருடன்னையீந்து
படைக்கலமுடையநாமப்படையிலாப்படையையீண்ட
அடைக்கலம்புகுவதல்லாலினிப்புகுமரணுமுண்டோ. (௧௬)

என்புழிமாலிதன்னையெரியெழநோக்கியென்பால்
வன்பழிதருதிபோலாம்வரன்முறையறியாவார்த்தை
அன்பழிசிந்தைதன்றலடாதனவறையலென்றான்
பின்பழிபெய்தநின்றனவன்பின்னைப்பேச்சுவிட்டான். (௧௭)

காட்டியகாலகேபர்சொழூநிணக்கற்றைகாலத்
தீட்டியபடைக்கைவீரச்சேனையின்றலைவதெள்ளி
ஈட்டியபடைஞரோடுமிருநூறுவெள்ளங்கொண்டு
கீட்டிசைவாயினிற்றிநின்பெருங்கிளையினோடும். (௧௮)

காலன்றன்களிப்புத்தீர்த்தமகோதரக்காளையேபோய்
மாலொன்றுமனத்துவீரமாபெரும்பக்கரோடும்
கூலங்கொள்குரங்கையெல்லாங்கொல்லுதிவெள்ளமான
நாலைம்பதோடுஞ்சென்றுநமன்றிசைவாயினண்ணி. (௧௯)

ஏற்றமென்சொல்லினென்பாலிந்திரன்பகைஞவந்நாள்
காற்றினுக்கரசன்மைந்தன்கடுமைநீகண்டதன்றோ
நூற்றிரண்டாயவெள்ளநும்பெரும்படைஞர்சுற்ற
மேற்றிசைவாயிற்சேர்திவிடிவதன்முன்னம்வீர. (௨௦)

இந்நெடுங்காலமெல்லாமிமையவர்க்கிறுதிகண்டாய்
புன்னெடுங்குரங்கிற்சேறல்புல்லிதுபுகழுமன்றால்
அந்நெடுமூலத்தானைபதனொடுமமைச்சரோடும்
தொன்னெடுநகரிகாக்கவிருபாக்கவென்னச்சொன்னான். (௨௧)

14. வேதனைக்காமம் - துன்பத்தை செய்யும் இன்பம்.

கடகரிபுரவியாடேர்கமலத்தோனுலகுக்கிப்பால்
புடையுளபொருதுகொண்டுபோர்பொரப்பொங்குகின்ற
இடையிடையிடைந்தசேனையிருநூறுவெள்ளங்கொண்டு
வடதிசைவாயில்காப்பேன்யானெனவகுத்துவிட்டான். (௨௨)

கலங்கியகங்குலாகிநீங்கியகற்பங்காணும்
நலங்கிளர்தேவர்க்கேயோநான்மறைமுனிவர்க்கேயோ
பொலங்கெழுசீதைக்கேயோபொருவலியிராமற்கேயோ
இலங்கையர்வேந்தற்கேயோவெல்லார்க்குஞ்செய்ததின்பம். (௨௩)

அளித்தகையில்லாவாற்றலமைந்தவன்கொடுமையஞ்சி
வெளிப்படவரிதென்றுன்னிவேதனையுழக்கும்வேலை
களித்தவர்க்களிப்புநீங்கக்காப்பவர்தம்மைக்கண்ணுற்
றொளித்தவர்வெளிப்பட்டன்னகதிரவனுதயஞ்செய்தான். (௨௪)

உளைப்புறுமோதவேலையோங்கலையொடுங்கத்தூர்ப்ப
அளப்பருந்தூளிச்சுண்ணமாசைகளலைப்பப்பூசல்
இளைப்பருந்தலைவர்முன்னமேவலினெயிலைமுற்றும்
வளைத்தனர்விடியத்தத்தம்வாயில்கடோறும்வந்து. (௨௫)

தந்திரமிலங்கைமூதூர்மதிலினைத்தழுவித்தாவி
அந்தரக்குலமீன்சிந்தவண்டமுங்கிழியவார்ப்பச்
செந்தனிச்சுடரோன்சேயுந்தம்பியுமுன்புசெல்ல
இந்திரன்றொழுதுவாழ்த்தவிராமனுமெழுந்துசென்றான். (௨௬)

நூற்கடற்புலவரானுநுனிப்பரும்வலத்ததாய
வேற்கடற்றனையானவிரிகடல்விழுங்கிற்றேனும்
கார்க்கடல்புறத்ததாகக்கவிக்கடல்வளைந்தகாட்சி
பாற்கடலழுவத்துள்ளதொத்ததப்பதகன்மூதூர். (௨௭)

அலகிலாவரக்கன்சேனையகப்படவரியின்றானை
வலைகொலாமென்னச்சுற்றிவளைத்ததற்குவமைகூறின்
கலைகுலாம்பரவையேழுங்கால்கிளர்ந்தெழுந்தகாலத்
துலகெலாமொருங்குகூடியொதுங்கினவேயுமொத்த. (௨௮)

ஆக திருவிருத்தம் - ௲௧௧.

---

25. உளைப்புறும் - சலிப்பினையுடைய.
26. தந்திரம் - வானரசேனை.
27. அழுவத்து - நாட்டில்.

## கங-வது, அங்கதன்றூதுப்படலம்.

வள்ளலும்விரைவினெய்திவட திசைவாயின்முற்றி
வெள்ளமோரேழுபத்துக்கணித்தவன்சேனையோடும்
கள்ளனைவரவுநோக்கிநின்றனன்கணக்கிலாதான்
ஒள்ளியதுணர்ந்தேதனென்னவீடணற்குரைப்பதானான். (க)

தூதுவனொருவன்றன்னையிவ்வழிவிரைவிற்றூண்டி
மாதினைவிடுதியோவென்றுணர்த்தவேமறுக்குமாகின்
சாதுதல்கடனென்றுள்ளங்கருதியதறனுமஃதே
நீதியுமஃதேயென்றான்கருணையினிலயமன்னான். (உ)

ஆரக்கர்கோனதனைக்கேட்டானழகிற்றேயாகுமென்றான்
குரக்கினத்தலைவனின்றான்கொற்றவர்க்குற்றதென்றான்
இரக்கமதிழுக்கமென்றானிளையவனினிநாமம்பு
தூரக்குவதல்லால்வேறோர்சொல்லுண்டோவென்னச்சொன்னான்.

தேசியைச்சிறையில்வைத்தான்றேவரையிடுக்கண்செய்தான்
பூசுரர்க்கலக்கணீந்தான்மன்னுயிர்புடைத்துத்தின்றான்
ஆசையினளவுமெல்லாவுலகமுந்தானேயாள்வான்
வாசவன்றிருவுங்கொண்டான்வழியலாவழிமேற்செல்வான். (ச)

வாழியாய்நின்னையன்றுவரம்பறுதுயரின்வைகச்
சூழ்விலாமாயஞ்செய்துன்றேவியைப்பிரிவுசூழ்ந்தான்
ஏழைபாலிரக்கநோக்கியொருதனியிகன்மேற்சென்ற
ஊழிகாண்கிற்கும்வாணாளுந்தையையுயிர்பண்டுண்டான். (ரு)

அன்னவன்றனக்குமாதைவிடிலுயிரருளுவாயேல்
என்னுடைநாமநிற்குமளவெலாமிலங்கைமூதூர்
மன்னவனீயேயென்றுவந்தடைந்தவற்குவாயால்
சொன்னசொலென்னாமுன்னஞ்சூளுறவென்னாந்தோன்றல். (சு)

அறந்தருதவத்தையாயுமறிஞலவற்றைமுற்றும்
மறந்தனையெனினுமற்றிவிலங்கையின்வளமைநோக்கி
இறந்திதுபோதறீதென்றிரங்கினையெனினுமெண்ணின்
சிறந்ததுபோரேயென்றான்சேவகன்முறுவல்செய்தான். (எ)

அயர்த்திலன்முடிவுமஃதேயாயினுமறிஞராய்ந்த
நயத்துறைநூலினீதிநாந்துறந்தமைதனன்றே

---

4. தேசி - சீதாபிராட்டி.

புயத்துறைவலியரேனும்பொறையொடும்பொருந்திவாழ்தல்
சயத்துறையறனுமஃதேயென்றிவைசமையச்சொன்னான். (அ)

மாருதியின்னுஞ்செல்லின்மற்றிவனன்றிவந்து
சாருதல்வலியாரில்லையென்பதுசாலுமன்றே
யாரினியேகத்தக்காரங்கதனமையுமொன்னார்
வீரமேவிளைப்பரேனுந்தீதின்றிமீடல்வல்லான். (௯)

நன்றெனவவனைக்கூவிநம்பிநீநண்ணலார்பால்
சென்றிரண்டுரையிஞென்றைச்செப்பினைதிரிதியென்றான்
அன்றவனருளப்பெற்றவாண்டகையலங்கற்பொற்றோள்
குன்றினுமுயர்ந்ததென்றான்மனநிலைகூறலாமே. (௧௦)

என்னவற்குரைப்பதென்னவேந்திழைபாளைவிட்டுத்
தன்னுயிர்பெறுதனன்றேவன்றெனிற்றலைகள்பத்தும்
சின்னபின்னங்கள்செய்யச்செருக்களஞ்சேர்தனன்றே
சொன்னவையிரண்டிஞென்றேதுணிகெனச்சொல்லிடென்றான். ()

அறத்துறையன்றுவீரர்க்கழகுமன்றாண்மையன்று
மறத்துறையன்றுசேமமறைநதுறைந்தொதுங்கிவாழ்தல்
நிறத்துறவாளிகோத்துநேர்வந்துநிற்குமாகின்
புறத்துறவெதிரேவந்துபோர்தரப்புகறியென்றான். (௧௨)

பாரினில்வணங்கிச்சியம்விண்மிசைப்படர்வதேபோல்
வீரன்வெஞ்சிலையிற்கோத்தவம்பெனவிசையிற்போனான்
மாருதியல்லனுகினீயெனுமாற்றம்பெற்றேன்
யாரினியென்னேடொப்பாரென்பதோரின்பமுற்றான். (௧௩)

அயில்கடந்தெரியநோக்குமரக்கரைக்கடக்கவாழித்
துயில்கடந்தயோத்திவந்தான்சொற்கடவாததூதன்
வெயில்கடந்திலாதகாவன்மேருவின்மேலுநீண்ட
எயில்கடந்திலங்கையெய்தியரக்கனதிருக்கைபுக்கான். (௧௪)

அழுகின்றகண்ணராகியனுமன்கொலென்னவஞ்சித்
தொழுகின்றசுற்றஞ்சுற்றுஞ்சொல்லியதுறைகடோறும்
மொழிகின்றவீரன்வார்த்தைதமுகந்தொறுஞ்செவியின்மூழ்க
எழுகின்றசேனைநோக்கியிருந்தானைக்கண்டான். (௧௫)

கல்லுண்டுமரமுண்டேழைக்கடலொன்றுங்கடந்தேமென்னும்
சொல்லுண்டேயிவனைவெல்லுந்தோற்றத்தோர்கூற்றமுண்டே

9. மாருதி - அநுமன் ஆகுபெயர். 14. எயில் - மதில்.

எல்லுண்டபடைகைக்கொண்டானெதிருண்டேயிராமன்கையில்
வில்லுண்டேயுண்டென்றெண்ணியாற்றவும்வியந்துநின்றான். (கசு)

இன்றிவன்றன்னையெய்தநோக்கினேற்கெதிர்ந்தபோரில்
வென்றவென்றானதமார்பின்வில்லின்மேற்கணையொன்றேவிக்
கொன்றவன்றானேவந்தானென்றுடன்குறிப்பினல்லால்
ஒன்றிநின்றவனைவெல்லவல்லரோவுயிர்க்குநல்லார். (கஎ)

அணிபறித்தழகுசெய்யுமணங்கின்மேல்வைத்தவாசைப்
பிணிபறித்தவனையாவர்முடிப்பவர்படிக்கட்பேழ்வாய்ப்
பணிபறித்தெழுந்தமானக்கலுழனிவனைப்பற்றி
மணிபறித்தெழுந்தவெந்தையாரினும்வலியனென்றான். (கஅ)

நெடுந்தகைவிடுத்ததூதனிவையிவைநிரம்பவெண்ணிக்
கடுங்கனல்விடமுங்கூற்றுங்கலந்துகால்கரமுங்காட்டி
விடுஞ்சுடர்மகுடமின்னவிரிகடலிருந்ததென்னக்
கொடுந்தொழின்மடங்கலன்னானெதிர்சென்றுகுறுகிநின்றான். ()

நின்றவன்றன்னையன்னானெருப்பெழுநிமிரப்பார்த்திங்
கின்றிவண்வந்தநீயாரெய்தியகருமமென்னை
கொன்றிவர்தின்னுமுன்னங்கூறுதிதெரியவென்றான்
வன்றிறல்வாலிசேயும்வாளெயிறிலங்கநக்கான். (உ०)

பூதநாயகனீர்சூழ்ந்தபுவிக்குநாயகனப்பூமேல்
சீதைநாயகன்வேறுள்ளதெய்வநாயகனீசெப்பும்
வேதநாயகன்மேனின்றவிதிக்குநாயகன்றான்விட்ட
தூதன்யான்பணித்தமாற்றஞ்சொல்லியவந்தேனென்றான். (உக)

அரன்கொலாமரிகொலாமற்றயன்கொலாமென்பாரன்றிக்
குரங்கெலாங்கூட்டிவேலைக்குட்டத்தைச்சேதுகட்டி
இரங்குவானுகினின்னமறிதினென்றுன்னையேவும்
நரன்கொலாமுலகநாதனென்றுகொண்டரக்கனக்கான். (உஉ)

கங்கையும்பிறையுஞ்சூடுங்கண்ணுதல்கரத்துநேமி
சங்கமுந்தரித்தமான்மற்றிந்நகர்தன்னைச்சாரார்
அங்கவர்தம்மையன்றிமனிசனுக்காகவஞ்சா
திங்குவந்திதனைச்சொன்னதூதனீயாவனென்றான். (உ௩)

இந்திரன்செம்மல்பண்டோரிராவணனென்பான்றன்னைச்
சுந்தரத்தோள்களோடும்வாலிடைத்தூங்கச்சுற்றிச்

20. வாலிசேய் - அங்கதன்.

சிந்துரக்கிரிகடாவித்திரிந்தவன்றேவருண்ண
மந்தரக்கிரியால்வேலைகலக்கினான்மைந்தனென்றான். (௨௪)

உந்தையென்றுணைவனன்றேயோங்கறஞ்சான்றுமுண்டால்
நிந்தனையிதன்மேலுண்டேநீயவன்றாதனாதல்
தந்தனனினக்கியானேவானரத்தலைமைதாழா
வந்தனைநன்றுசெய்தாயென்னுடைமைந்தவென்றான். (௨௫)

தாதையைக்கொன்றான்பின்னேதலைசுமந்திருகைநாற்றிப்
பேதையனென்னவாழ்ந்தாயென்பதோர்பிழையுந்தீர்ந்தாய்
சீதையைப்பெற்றேனுன்னைச்சிறுவனுமாகப்பெற்றேன்
ஏதெனக்கரியதென்றானிறுதிநாற்கெல்லைகண்டான். (௨௬)

அந்நரரின்றுநாளையழிவதற்கையமில்லை
உன்னரசுனக்குத்தந்தேனாளுதியூழிகாலம்
பொன்னரிசுமந்தபீடத்திமையவர்போற்றிசெய்ய
மன்னவனாகயானேசூட்டுவன்மகுடமென்றான். (௨௭)

அங்கதனதனைக்கேளாவங்கையோடங்கைதாங்கித்
துங்கவன்தோளுமார்புமிலங்கையுந்துளங்கநக்கான்
இங்குநின்றார்கட்கெல்லாமிறுதியேயென்பதுன்னி
உங்கள்பானின்றுமெம்பாற்போந்தனனும்பியென்றான். (௨௮)

வாய்வரத்தக்கசொல்லியென்னையுன்வசஞ்செய்வாயேல்
ஆய்தரத்தக்கதன்றோதூதுவந்தரசதாள்கை
நீதரக்கொள்வேன்யானேயிதற்கினிநிகர்வேறெண்ணின்
நாய்தரக்கொள்ளுஞ்சீயநல்லரசென்றுநக்கான். (௨௯)

அடுவனேயென்னப்பொங்கியோங்கியவரக்கனந்தோ
தொடுவனேகுரங்கைச்சீறிச்சுடர்ப்படையொன்றுதோன்ற
நடுவனேசெய்யத்தக்கநாளுலந்தாற்குத்தூத
படுவதேதுணிந்தாயாயின்வந்ததுபகர்தியென்றான். (௩௦)

கூவியின்றென்னைநீபோய்த்தன்குலமுழுதுங்கொல்லும்
பாவியையெய்தியஞ்சியரண்புக்கப்பதுங்கினானைத்
தேவியைவிடுகவன்றேற்செருக்களத்தெதிர்ந்துதன்கண்
ஆவியைவிடுகவென்றானருளினம்விடுகிலாதான். (௩௧)

பருந்துணப்பாட்டியாக்கைபடுத்தநாள்படைஞரோடும்
மருந்தினுமினியமாமன்மடிந்தநாள்வனத்துள்வைகி

இருந்துழிவந்ததங்கையிருஞ்செவிமுலையுமூக்கும்
அரிந்தநாள்வந்திலாதானினிச்செய்யுமாண்மையுண்டோ. (௩௨)

கிளையொடும்படைஞரோடுங்கேடிலாவுயிர்கட்கெல்லாம்
களையனதம்பிமாரைவேரொடுங்களையக்கண்டும்
இளையவன்பிரியமாயமியற்றியேகொண்டுபோய
வளையெயிற்றரக்கன்வெம்போர்க்கினியிவண்வருவதுண்டோ. (௩௩)

ஏந்திழைதன்னைக்கண்ணுற்றெதிர்ந்தவர்தம்மையெற்றிச்
சாந்தெனப்புதல்வன்றன்னைத்தரையிடைத்தேய்த்துத்தன்னூர்
காந்தெரிமடுத்துத்தானுங்காணவேகடலைத்தாவிப்
போந்தபின்வந்திலாதானினிப்பொரும்போருமுண்டோ. (௩௪)

உடைக்குலத்தொற்றர்தம்பாலுயிர்கொடுத்துள்ளக்கள்ளம்
துடைத்துழிவருணன்வந்துதொழுதுழிதொழாதகொற்றக்
குடைத்தொழிலும்பிகொள்ளக்கொடுத்துழிவேலைகோலி
அடைத்துழிவந்திலாதானினிவரவையமுண்டோ. (௩௫)

மறிப்புண்டதேவர்காணமணிவரைத்தோளின்வைகும்
நெறிப்புண்டரீகமன்னமுகத்தியர்முன்னேநென்னல்
பொறிப்புண்டரீகம்போலுமொருவனுற்புனைந்தமோலி
பறிப்புண்டும்வந்திலாதானினிப்பொரும்பான்மையுண்டோ. (௩௬)

என்றிவையியம்பிவாவென்றேவினனென்னையெண்ணி
ஒன்றுனக்குறுவதுன்னித்துணிந்துரையுறுதிபார்க்கின்
துன்றிருங்குழலைவிட்டுத்தொழுதுவாழ்சுற்றத்தோடும்
பொன்றுதியாயினென்பின்வாயிலிற்புறப்படென்றான். (௩௭)

நீரிலேபட்டுச்சூழ்ந்தநெருப்பிலேபட்டுநீண்ட
பாரிலேபட்டுவானப்பரப்பிலேபட்டவெல்லாம்
போரிலேபட்டுவீழப்பொருதநீயொளித்துப்புக்குன்
ஊரிலேபட்டவென்றாற்பழியெனவுளையச்சொன்னான். (௩௮)

வேறு.

சொற்றவார்த்தையைக்கேட்டலுந்தொல்லுயிர்
முற்றுமுண்பதுபோலுமுனிவினான்
பற்றுமின்கடிதின்னெனும்பார்மிசை
எற்றுமின்னெனநால்வரையேவினான். (௩௯)

34. ஏந்திழை - ஏந்து இழை.

ஏகினான்பிடித்தாரையெடுத்தெழத்
தாகினானவர்தந்தலைபோயறக்
கூகினானவன்கோபுரவாயிலில்
தூகினான்றுகைத்தானிவைசொல்லினான். (௪௰)

ஏமஞ்சாரவெளியவர்யாவிரும்
தூமங்கால்வனவீரன்சுடுசரம்
வேமின்போல்வனவீழ்ந்தவன்முன்னமே
போமின்போமின்புறத்தென்றுபோயினான். (௪௧)

அந்தரத்திடையார்த்தெழுந்தானவன்
சிந்துரத்தந்துதைந்தெழுஞ்செச்சையான்
இந்துவிண்ணினிழிந்துளதாமென
வந்துவீரனடியின்வணங்கினான். (௪௨)

உற்றபோதவனுள்ளக்கருத்தெலாம்
கொற்றவீரனுணர்த்தென்றுகூறலும்
முற்றவோதியென்மூர்க்கன்முடித்தலை
அற்றபோதன்றியாசையறேனென்றான். (௪௩)

ஆ. திருவிருத்தம் - ௬௬௨.

## ௧௪-வது, முதற்போர்ப்படலம்.

பூசலேபிறிதில்லையெனப்புறத்
தாசைதோறுமுரசமறைந்தெனப்
பாசறைப்பறையின்னிடம்பற்றிய
வாசறோறுமுறையின்வருத்திரால். (௧)

மற்றுநின்றமலையுமரங்களும்
பற்றிவீரர்பரவையின்மும்முறை
கற்றகைகளினாற்கடிமாநகர்
சுற்றுநின்றவகழியைத்தூர்த்திரால். (௨)

இடுமின்பன்மரமெங்குமியங்கறத்
தடுமின்போர்க்குவருகெனச்சாற்றுமின்
கடுமினிப்பொழுதேகதிர்மீச்செலாக்
கொடிமதிற்குடுமித்தலைகொள்கென்றான். (௩)

42. சிந்துரத்தம் - ஒழுகுகின்ற இரத்தம். இந்து - சந்திரன்.

தடங்கொள்குன்றுமரங்களுந்தாங்கிய
மடங்கலன்னவவ்வானரமாப்படை
இடங்கர்மாவிரியப்புனலேறிடத்
தொடங்கிவேலையகழியைத்தூர்த்ததால். (௪)

ஏயவெள்ளமெழுபதுமெண்கடல்
ஆயவெள்ளத்தகழியைத்தூர்த்தலும்
தூயவெள்ளந்துணைசெய்வதாமென
வாயிலூடுபுக்கூரைவளைந்ததே. (௫)

விளையும்வென்றியிராவணன்மெய்ப்புகழ்
முளையினோடுங்களைந்துமுடிப்பபோல்
தளையவிழ்ந்தகொழுந்தடந்தாமரை
வளையம்வன்கையில்வாங்கினவானரம். (௬)

ஏளைதாரமியம்பியவண்டுகள்
பாளைதாதுகுநீர்நெடும்பண்ணைய
தாளதாமரையன்னங்கடாவிட
வாளைதாவினவானரந்தாவவே. (௭)

இகழுந்தன்மையனுயவிராவணன்
புகழுமேன்மையும்போயினவாமென
நிகழுங்கண்ணெடுநீலமுகுத்தவால்
அகழிதானுமழுவனபோன்றவே. (௮)

தண்டிருந்தபைந்தாமரைதாளறப்
பண்டிரிந்துசிதையப்படர்சிறை
வண்டிரிந்தனவாய்தொறுமுட்டையைக்
கொண்டிரிந்தனவன்னக்குழாமெலாம். (௯)

தூறுமாமரமும்மலையுந்தொடர்
நீறுநீர்மிசைசென்றுநெருக்கலான்
ஏறுபோரகழின்னின்றினப்பல
ஆறுசென்றனவார்கலிமேலரோ. (௧௦)

இழுகுமாக்கலிடுந்தொறிடுந்தொறும்
சுழிகடோறுஞ்சுரித்திடைதோன்றுதேன்

4. இடங்கர்மா - முதலை.
7. ஏளை - ஏழ்ஐ ஏழாகிய - அழகிய. தாரம் - இசை.
10. பலஆறு - பலவேறு பிரிவு. ஆறு - வழி.

ஒழுகுதாமரையொத்தனவோங்குநீர்
முழுகிமீடெழுமாதர்முகத்தையே. (௧௧)

தன்மைக்குந்தலையாயதசமுகன்
றொன்மைப்பேரகழ்வானரந்தூர்த்தலால்
இன்மைக்குமொன்றுடைமைக்கும்யாவர்க்கும்
வன்மைக்குமோர்வரம்புபுண்டாங்கொலோ. (௧௨)

தூர்த்தவானரஞ்சுள்ளிமடுத்திடச்
சேர்த்தபேரணைதன்னையுஞ்சிந்தின
வார்த்ததன்னமதிலின்வரம்புகொண்
டார்த்தவார்கலிகாரொடுமஞ்சவே. (௧௩)

வட்டமேருவிதுவெனவான்முக
டெட்டநீண்டமதின்மிசையேறிவிண்
டொட்டவானரந்தோன்றினமீத்தொக
விட்டவெண்கொடிவீங்கினவென்னவே. (௧௪)

இறுக்கவேண்டுவதில்லையெண்டேர்மணி
வெறுக்கையோங்கியமேருவிழுக்கலால்
நிறுக்கநேர்வருவீரர்நெருக்கலால்
பொறுக்கலாதுமதிறரைபுக்கதால். (௧௫)

அறைந்தமாமுரசானைப்பதாகையால்
மறைந்தவானெடுவானகமாதிரம்
குறைந்ததூளிகுழுமிவிண் ணூடுபுக்
குறைந்ததாங்கவர்போர்க்கெழுமோதையே. (௧௬)

கோடலம்பினகோதையலம்பின
ஆடலம்பரித்தாருமலம்பின
மாடலம்பினமாமணித்தேர்மணி
பாடலம்பினபாய்மதயானையே. (௧௭)

அரக்கர்தொல்குலம்வேரறவல்லவர்
வருக்கம்யாவையும்வாழ்வுறவந்தோர்
கருக்கொள்காலம்விதிகொடுகொட்டிடத்
தருக்கியுற்றெதிர்தாக்கினதானையே. (௧௮)

பற்கொடுங்நெடும்பாதவம்பற்றியும்
கற்கொடுஞ்சென்றதக்கவியின்கடல்

---

17. ஆடலம்பரி - போருக்குரிய அழகியகுதிரை,

விற்கொடுந்நெடுவேல்கொடும்வேறுள
எற்கொடும்படையுங்கொண்டதிக்கடல். (௧௯)

அம்புகற்களையள்ளினவம்பெலாம்
கொம்புடைப்பணைகூறுறநூறின
வம்புடைத்தடமாமரமாண்டன
செம்புகச்சுடர்வேற்கணஞ்செல்லவே. (௨௰)

மாக்கைவானரவீரர்மலைந்தகல்
தாக்கிவஞ்சர்தலைகடகர்த்தலால்
நாக்கினூடுஞ்செவியினுநாகம்வாழ்
மூக்கினூடுஞ்சொரிந்தனமூளையே. (௨௧)

அற்களோடுநிகர்த்தவரக்கர்தம்
விற்களோடுஞ்சரம்படவெம்புணிர்
பற்களோடுஞ்சொரிதரப்பற்றிய
கற்களோடுமுருண்டகவிகளே. (௨௨)

நின்றுமேருநெடுமதினெற்றியின்
வெற்றிவானரவீரர்விசைத்தகல்
சென்றுதீயவராருயிர்சிந்தின
குன்றின்வீழுமுருமின்குழுவினே. (௨௩)

எதிர்த்தவானரமாக்கையொடிற்றன
மதிற்புறங்கண்டுமண்ணின்மறைந்தன
கதிர்க்கொடுங்கணரக்கர்கரங்களால்
விதிர்த்தெறிந்தவிலங்கிலைவேலினே. (௨௪)

கடித்தகுத்தினகையிற்கழுத்தறப்
பிடித்தவள்ளுகிராற்பிளவாக்கின
இடித்தவெற்றினவெண்ணிலரக்கரை
முடித்தவானரம்வெஞ்சினமுற்றின. (௨௫)

எறிந்துமெய்துமெழுமுளைத்தண்டுகொண்
டறைந்தும்வெவ்வயிலாகத்தழுத்தியும்
நிறைந்துவெங்கணரக்கர்நெருக்கலால்
குறைந்தவானரவீரர்குழுக்களே. (௨௬)

---

19. இக்கடல் - இவ்வசுரசேனையாகிய கடல்.
22. அற்களோடு - இருட்டுகள் பின்னிடுகின்ற.

செப்பிற்செம்புனறோய்ந்தசெம்பொன்மதில்
துப்பிற்செய்ததுபோன்றதுசூழ்வரை
குப்புற்றீர்பிணக்குன்றுசுமந்துகொண்
டுப்பிற்சென்றவுதிரத்தொழுக்கமே. (உஎ)

வந்திறைத்தபறவைமயங்கின
அந்தரத்தினெருங்கலினங்கொரு
பந்தர்பெற்றதுபோன்றதுபற்றுதல்
இந்திரற்குமரியவிலங்கையே. (உஅ)

தங்குவெங்கனலோடுதயங்கிய
பொங்குவெங்குருதிப்புனற்செக்கர்பூங்
கங்குலன்னகவந்தமுங்கையெடுத்
தங்குமிங்குநின்றாடியவாமரோ. (உகூ)

கொன்னிறக்குருதிக்குடைபுட்களின்
தொன்னிறச்சிறையிற்றுளிதூவலால்
பன்னிறத்தபதாகைப்பரப்பெலாம்
செந்நிறத்தனவாய்நிறந்தீர்ந்தவே. (௩௦)

பொழிந்தசோரிப்புதுப்புனல்பொங்கிமீ
வழிந்தமாமதில்கைவிட்டுவானரம்
ஒழிந்தமேருவினும்பர்விட்டிம்பரின்
இழிந்தமாகடலென்னவிழிந்ததே. (௩க)

பதனமும்மதிலும்படைநாஞ்சிலும்
கதனவாயிலுங்கட்டியட்டாலையும்
முதலயாவையும்புக்குற்றுமுற்றின
விதனவெங்கணிராக்கதர்வெள்ளமே. (௩௨)

பாய்ந்தசோரிப்பரவையிற்பற்பல
நீந்தியேகுநெருக்கினிடைச்சில
சாய்ந்துசாய்ந்துசரம்படத்தள்ளலுற்
றோய்ந்துவீழ்ந்தசிலசிலவோடின. (௩௩)

தழியவானரமாக்கடல்சாய்தலும்
பொழியவெம்படைப்போர்க்கடலார்த்தலால்

27. உப்பில் - கடலில்.

32. பதனம் - பதணம் அது மதிலின் கீழ்மேடை.

ஒழியுங்காலத்துலகொருமூன்றுமொத்
தழியுமாக்கடலார்ப்பெடுத்தாயரோ. (௩௪)

முரைசுமாமுருடும்முரட்சங்கமும்
உரைசெய்காளமுமாகுளியோசையும்
விரைசும்பல்லியம்வில்லரவத்தொடும்
திரைசெய்வேலைக்கொராகுலஞ்செய்தவே. (௩௫)

ஆயகாலையனைத்துலகுந்தரும்
நாயகன்முகனுலுநடந்தென
மேயசேனைவிரிகடல்விண்குலாம்
வாயிலூடும்புறப்பட்டுவந்ததே. (௩௬)

நெடியகாவதம்விட்டுநிரம்பிய
படியவாயிற்பருப்பதம்பாய்ந்தெனக்
கொடியொடுங்கொடிசுற்றத்தொடுத்ததண்
டொடியவூன்றினமும்மதவோங்கலே. (௩௭)

சூழியானைமதம்படுதொய்யலின்
ஊழிநாணெடுங்காலெனவோடுவ
பாழியாள்வயிரப்படிபன்முறை
பூழியாக்கினபொன்னெடுந்தேர்களே. (௩௮)

பிடித்தவானரம்பேரெழிற்றோள்களால்
இடித்தமாமதிலாடையிலங்கையாள்
மடித்தமாகடல்வாவுந்திரையெலாம்
குடித்துக்கால்வனபோன்றகுதிரையே. (௩௯)

கேளிர்ஞாலங்கிளத்தியதொன்முறை
நாளுநாளுநடந்தனநள்ளிரா
நீளமெய்தியொருசிறைநின்றன
மீளுமாலையும்போன்றனர்வீரரே. (௪௦)

பத்திவன்றலைப்பாம்பின்பரங்கெட
முத்திநாட்டின்முகத்தினைமுற்றுறப்
பித்திபிற்படவன்றிசைபோர்வுறத்
தொத்திமீண்டிலவானெடுந்தூளியே. (௪௧)

---

38. சூழியானை - முகபடாமணிந்தயானை.

நெருக்கிவந்துநிருதர்நெருங்கலால்
குரக்கினப்பெருந்தானைகுலைந்துபோய்
அருக்கன்மாமகனூரமராசையால்
செருக்கிநின்றவனின்றுழிச்சென்றவால். (௪௨)

சாய்ந்ததானைத்தளர்வுஞ்சலித்தெதிர்
பாய்ந்ததானைப்பெருமையும்பார்த்துறக்
காய்ந்தநெஞ்சன்கனல்சொரிகண்ணினன்
ஏய்ந்ததங்கொர்மராமரமேந்தினான். (௪௩)

வாரணத்தெதிர்வாசியினோர்வயித்
தேர்முகத்தினிற்சேவகர்மேற்செறுத்
தோரொருத்தர்க்கொருவரினுற்றுயர்
தோரணத்தொருவன்னெனத்தோன்றினான். (௪௪)

களிறுமாவுநிருதருங்காலற
ஒளிறுமாமணித்தேருமுருட்டிவெங்
குளிறுசோரியொழுகக்கொதித்திடை
வெளியிலாமரமேகொண்டுவீசினான். (௪௫)

அன்னகாலையரிகுலவீரரும்
மன்னன்முன்புகவன்கணரக்கரும்
முன்னுமுந்தமுழங்குபெருஞ்செருத்
தன்னில்வந்துதலைமயக்குற்றனர். (௪௬)

கற்றுரந்தகளம்படவஞ்சகர்
இற்றுலந்துமுடிந்தவரெண்ணிலர்
விற்றுரந்தனவெங்கணையாலுடல்
அற்றுலந்தகுரங்குமநந்தமே. (௪௭)

கற்கடந்துநிமிர்ந்தகடுஞ்செரு
மற்கடங்கள்வலிந்துமலைந்திடத்
தர்க்கடங்கியுலந்தவர்தம்முயிர்
தெற்கடங்கிநிறைந்துசெறிந்தவால். (௪௮)

பாடுகின்றனபேய்க்கணம்பல்விதத்
தாடுகின்றவறுகுறையாழ்கடற்
கோடுகின்றவுதிரம்புகுந்துடல்
நாடுகின்றனர்கற்புடைநங்கைமார். (௪௯)

---

48. தற்கு - தருக்கு. 49. அறுகுறை - கவந்தம்.

யானைபட்டவழிபுனல்யாறெலாம்
பானல்பட்டபலகணைமாரியின்
சேனைபட்டதுசொல்லருங்வானரச்
சேனைபட்டதுபட்டதுசெம்புணீர். (௫௦)

காய்ந்தவானரவீரர்கரத்தினால்
தேய்ந்தவாயுளரானவர்செம்புணீர்
பாய்ந்ததானைப்படுகளம்பாழ்படச்
சாய்ந்ததானிருதக்கடற்றானையே. (௫௧)

தங்கண்மாப்படைசாய்தலுந்தீயெழ
வெங்கண்வாளரக்கன்விரைதேரினைக்
கங்கசாலந்தொடரக்கடற்செலுஉம்
வங்கமாமெனவந்தெதிர்தாக்கினான். (௫௨)

வந்துதாக்கிவடிக்கணைமாமழை
சிந்திவானரச்சேனைசிதைத்தலும்
இந்திராதியருநதிகைத்தேங்கினார்
நொந்துசூரியன்கான்முளைநோக்கினான். (௫௩)

நோக்கிவஞ்சனெறில்வயமாப்பரி
வீக்குதேரினின்மீதெழப்பாய்ந்துதோள்
தூக்குதூணியும்வில்லுநதொலைத்தவன்
யாக்கையுஞ்சிதைத்திட்டெழுந்தேகினான். (௫௪)

மலைகுலைந்தனவச்சிரமுட்டிதன்
நிலைகுலைந்துவிழுதலினின்றுளார்
குலைகுலைந்துகொடிநகர்நோக்கினார்
அலைகிளர்ந்தெனவானரமார்த்தவே. (௫௫)

வீழிவெங்கணிராக்கதர்வெம்படை
ஊழியாழிகிளர்ந்தெனவோங்கின
கீழைவாயிலிற்கிட்டலுமுட்டினர்
சூழும்வானரவீரர்துவன்றியே. (௫௬)

சூலம்வாளயில்சக்கரந்தோமரம்
வாலம்வாளிமழையின்வழங்கியே

---

52. கங்கசாலம் - பறவைக்கூட்டம்.

54. நெறில் வயமாப் பரி - வேகத்தினையும் வெற்றியினையு முடைய சிறந்தகுதிரை.

ஆலமன்னவரக்கரடர்த்தலும்
காலும்வாலுந்துமிந்தகவிக்குலம். (௫௭)

வென்றிவானரவீரர்விசைத்தெதிறி
குன்றுமாமரமுங்கொடுங்காலனிற்
சென்றுவீசநிருதர்கள்சிந்தினூர்
பொன்றிவீழ்ந்தபுரவிவெம்பூட்கைதேர். (௫௮)

தண்டுவாளயில்சக்கரஞ்சாயகம்
கொண்டுசீற்றநிருதர்குதித்தெழப்
புண்டிறந்துகுருதிபொழிந்துக
மண்டியோடினர்வானரவீரரே. (௫௯)

எரியின்மைந்தனிருநிலங்கீழுற
விரியநின்றமராமரம்வேரொடும்
திரியவாங்கிநிருதர்வெஞ்சேனைபோய்
நெரியவூழிநெருப்பெனவீசினான். (௬௦)

தேரும்பாகரும்வாசியுஞ்செம்முகக்
காருமயாளியுஞ்சீயமுங்காண்டகு
பாரின்வீழப்புடைப்பபசும்புணின்
நீரும்வாரியதனைநிறைத்ததே. (௬௧)

அரக்கர்சேனையடுகளம்பாழ்பட
வெருக்கொண்டோடிடவெம்படைக்காவலன்
நெருக்கநேர்ந்துகும்பானுநெடுஞ்சரம்
துரக்கவானரச்சேனைதுணிந்ததே. (௬௨)

கண்டுநின்றகரடியின்காவலன்
எண்டிசாமுகமெங்குமிடும்பனோர்
சண்டமாருதமென்னத்தடவரை
கொண்டுசீறியவனெதிர்குப்புறு. (௬௩)

தொடுத்தவாளிகள்வீழுமுன்சூழ்ந்தெதிர்
எடுத்தகுன்றையிடும்பனெறிதலும்
ஒடித்தவில்லுமிரதமுமொல்லெனப்
படுத்தவாசிபதாகையும்பாழ்பட. (௬௪)

தேரழிந்துசிலையுமழிந்துகக்
காரிழிந்தவுருமெனக்காய்ந்தெதிர்

65. கார் இழிந்த உருமு - இடி. கார் மேகம்.

பார்கிழிந்துகப்பாய்ந்தனன்வானவர்
போர்கிழிந்துபுறந்தரப்போர்செய்தான். (சுரு)

தத்திமார்பின்வயிரத்தடக்கையால்
குத்திநின்றகும்பானுவைத்தானெதிர்
மொத்திநின்றுமுடித்தலைகவ்வுறப்
பத்திவன்றடந்தோளுறப்பற்றுவான். (சுசு)

கடித்தலத்திருகாலுறக்கைகளாற்
பிடித்துத்தோளைப்பிறங்கலின்கோடுநேர்
முடித்தலத்தினைக்கவ்வுறமூளைகள்
வெடித்துவீழ்தரவீழ்த்தினனுமரோ. (சுஎ)

தன்படைத்தலைவன்படத்தன்னெதிர்
துன்படைத்தமனத்தன்சுமாலிசேய்
முன்படைத்தமுகிலன்னகாட்சியின்
வன்படைத்தவரிசிலைவாங்கினன். (சுஅ)

வாங்கிவார்சிலைவானரமாப்படை
ஏங்கநாணெறிந்திட்டிடையீடின்றித்
தூங்குமாரியெனச்சுடர்வாளிகள்
வீங்குதோளினன்விட்டனனுமரோ. (சுகூ)

நூறுமாயிரமுங்கணைநொய்தினின்
வேறுவேறுபடுதலின்வெம்பியே
ஏறில்வானரமாப்படையெங்கணும்
பாறவீரன்வெகுண்டெதிர்பார்ப்புறா. (எ0)

குன்றநின்றதெடுத்தெதிர்கூற்றெனச்
சென்றெறிந்தவன்சேனைசிதைத்தலும்
வென்றிவில்லின்விடுகணைமாரியால்
ஒன்றுநூறுதிருற்றதக்குன்றமே. (எக)

மீட்டுமங்கொர்மராமரம்வேரொடும்
ஈட்டிவானத்திடியெனவெற்றலும்
கோட்டும்வில்லுங்கொடியும்வயப்பரி
பூட்டுந்தேரும்பொடித்துகளாயவே. (எஉ)

தேரிழந்துசிலையுமிழந்திடக்
காரிழந்தவுருமெனக்காந்துவான்

70. பாற - விலகி யழிய.

பாரிழந்துபருவலித் தண்டொடும்
ஊரிழந்தகதிரெனவோடினன். (எந)

வாய்மடித்தழல்கண்டொறும்வந்துகப்
போயடுத்தலுநீலன்புகைந்தெதிர்
தாயடுத்தவன்றன்கையிற்றண்டொடும்
மீயெடுத்துவிசும்புறவீசினன். (எச)

அம்பரத்தெறிந்தார்ப்பவரக்கனும்
இம்பருற்றெரியின்றிருமைந்தன்மேல்
செம்புனற்பொழியக்கதைசேர்த்தினன்
உம்பர்தத்தமதுள்ளநடுங்கவே. (எரு)

அடித்தலோடுமதற்கிளையாதவன்
எடுத்ததண்டம்பறித்தெறியாவிகல்
முடித்துமென்றுருகைகொடுமோதினன்
குடித்துமிழ்ந்தெனக்கக்கக்குருதியே. (எசு)

குருதிவாய்நின்றொழுகவுங்கூசலன்
நிருதனீலனெடுவரைமார்பினில்
கருதலாதமுன்குத்தலுங்கைத்தவர்
பொருதபூசல்புகலவொண்ணாததே. (எஎ)

மற்றுநீலனரக்கனைமாடுறச்
சுற்றிவால்கொடுதோளினுமார்பினும்
நெற்றிமேலுநெடுங்கரநீட்டலும்
இற்றுமால்வரையென்னவிழுந்தனன். (எஅ)

இறந்துவீழ்ந்தனனேபிரகத்தனென்
றறிந்துவானவராவலங்கொட்டினூர்
வெறிந்தசெம்மயிர்வெள்ளெயிற்றுடவர்
முறிந்துதத்தமுதுநகரெய்தினர். (எகூ)

தெற்குவாயிலிற்சென்றநிசாசரர்
மற்குலாவுவயப்புயத்தங்கதன்
நிற்கவேயெதிர்நின்றிலரோடினர்
பொற்குலாவுசுபாரிசன்பொன்றினன். (அ0)

74. மீயெடுத்து - மேலெடுத்து.
77. கைத்து அவர் - பகைத்து அவர்கள்.

நூற்றிரண்டெனும்வெள்ளமுநோன்கழல்
ஆற்றல்சாறுன்முகனுமங்கார்த்தெழ
மேற்றிண்வாயிலின்மேவினர்வீடினர்
காற்றின்மாமகன்கையெனுங்காலனால். (அக)

அன்னகாலையயிந்திரவாப்முதல்
துன்னுபோர்கண்டதூதுவர்தோன்றினர்
மன்னகேளெனவந்துவணங்கினார்
சென்னிதாழ்க்கச்செவியிடைச்செப்பினர். (அஉ)

கீழைவாயிற்கிளர்நிருதப்படை
ஊழிநாளினும்வெற்றிகொண்டுற்றநின்
ஆழியன்னவனீகத்தலைமகன்
பூழியானுயிர்புக்கதுவிண்ணென்றார். (அ௩)

வென்றிவேற்கைநிருதர்வெகுண்டெழத்
தென்றிசைப்பொருவாயிலிற்சேர்ந்துழிப்
பொன்றினனச்சுபாரிசன்போயினர்
இன்றுபோனவிடமறியேமென்றார். (அச)

வடக்குவாயிலின்வச்சிரத்தாடவர்
குடக்குவாயிலிற்குன்றனதோளினர்
அடற்கரும்வலத்தைம்பதுவெள்ளமும்
படச்சிதைந்ததுநம்படையென்றனர். (அரு)

என்றவார்த்தையெரிபுகுநெய்யெனச்
சென்றுசிந்தைபுகுதலுஞ்சீற்றத்தீக்
கன்றுகண்ணின்வழிச்சுடர்கான்றிட
நின்றுநின்றுநெடிதுயிர்த்தானரோ. (அசு)

மறுத்துமற்றவனொருயிர்வவ்வினன்
இறுத்துக்கூறியென்றான்றிசையெங்கணும்
நிறுத்துநீலனெடும்பெருஞ்சேனையை
ஒறுத்துமற்றவனோடும்வந்துற்றனன். (அஎ)

உற்றபோதுமிருவருமொன்றல
கற்றபோர்களெலாஞ்செய்தகாலையில்
செற்றிமேன்மற்றநீலனெடுங்கையால்
எற்றவீந்தனனென்னவியம்பினர். (அஅ)

83. பூழியான் - புழுதியினிடத்தான்.

அன்னவன்ஞெடும்போனவரக்கரில்
நன்னகர்க்குவந்தோமையநாங்களே
என்னவென்னவெயிறிகல்வாயினைத்
தின்னத்தின்னவெரிந்தனதிக்கெலாம். (அகூ)

மாடுநின்றநிருதரைவன்கணான்
ஓடநோக்கியுயர்படையான்மற்றக்
கோடுகொண்டுபொருமக்குரங்கினால்
வீடினானென்றுமீட்டும்விளம்பினான். (கூ0)

கட்டதிந்திரன்வாழ்வைக்கடைமுறை
பட்டதிங்கொர்குரங்குபடுக்கவென்
றிட்டவெஞ்சொலெரிபுகுநெய்யெனச்
சுட்டதென்றனிநெஞ்சினைச்சுட்டதால். (கூக)

கருப்பைப்போற்குரங்கெற்றக்கதிர்சுழல்
பொருப்பையொப்பவர்தாமின்றுபொன்றினார்
அருப்பமென்றுபகையையுமாரழல்
நெருப்பையும்மிகழ்ந்தாலதுநீதியோ. (கூஉ)

நிற்கவன்னதுநீர்நிறைகண்ணினார்
வர்க்கமாயினமாப்படையோடுஞ்சென்
றொற்கம்வந்துதவாமலுறுகென
விற்கொள்வெம்படைவீரரையேவினான். (கூ௩)

மண்டுகின்றசெருவின்வழக்கெலாம்
கண்டுநின்றுகயிலையிடந்தவன்
புண்டிறந்தனகண்ணினன்பொங்கினான்
திண்டிறன்னெடுந்தேர்தெரிந்தேறினான். (கூச)

ஆயிரம்பரிபூண்டததிர்குரல்
மாயிருங்கடல்போன்றதுவானவர்
தேயமெங்குந்திரிந்ததுதிண்டிறல்
சாயவிந்திரனேபண்டுதந்தது. (கூரு)

ஏற்றியெண்ணியிறைஞ்சியிடக்கையால்
ஆற்றினான்றனுசிலையன்னதின்
மாற்றமென்னெடுநாணொலிவைத்தலும்
கூற்றினாரையுமாருயிர்கொள்வதே. (கூகூ)

---

92. கருப்பை - எலி. அருப்பம் - அற்பம். 96. ஏற்றி - காணேற்றி.

மற்றும்வான்படைவானவர்மார்பிடை
இற்றிலாதனவெண்ணுமிலாதன
பற்றினான்கவசம்படர்மார்பிடைச்
சுற்றினானெடுந்தும்பையுஞ்சூடினான். (௯௭)

பேருங்கற்றைக்கவரிப்பெருங்கடல்
நீருநீர்நுரையும்மெனநின்றவன்
ஊரும்வெண்மையுவாமதிக்கீழுயர்
காருமொத்தனன்முத்தின்கவிகையான். (௯௮)

போர்த்தசங்கப்படகம்புடைத்திடச்
சீர்த்தசங்கக்கடலுகத்தேவர்கள்
வேர்த்தசங்கிடவண்டம்வெடிபட
ஆர்த்தசங்கமறைந்தமுரசமே. (௯௯)

தேருமாவும்படைஞருந்தெற்றிட
மூரிவன்னெடுந்தானையின்முற்றினான்
நீரொரேழுமுடிவினெருக்குநாள்
மேருமால்வரையென்னவிளங்கினான். (௧௦௦)

வேறு.

ஏழிசைக்கருவிவீற்றிருந்ததென்னினும்
சூழிருந்திசைகளைத்தொடருந்தொல்கொடி
வாழியவுலகெலாம்வளைந்துவாயிடும்
ஊழியினந்தகனாவினோங்கவே. (௧௦௧)

வேணுயர்நெடுவரையரக்கர்வேலைக்கோர்
தோணிபெற்றனரெனக்கடக்குந்தொல்செருக்
காணியவந்தவர்கலக்கங்கைம்மிகச்
சேணுயர்விசும்பிடையமரர்சிந்தவே. (௧௦௨)

கண்ணுறுகடும்பொறிகதுவக்கார்நிறத்
தண்ணல்வாளரக்கர்தமரத்தப்பங்கிகள்
ஒண்ணிறங்கோடலினுருவின்வேற்றுமை
நண்ணினர்நோக்கவுமயிர்ப்புநல்கவே. (௧௦௩)

---

99. வேர்த்தசங்கிட - வேர்த்தசைய.

102. வேணுயர் - மூங்கில்கள்வளர்ந்த.

கானெடுந்தேருயர்கதலியுங்கரத்
தேனையேந்தியபதாகையீட்டமும்
ஆனையின்கொடிகளுமளவித்தோய்தலால்
வானயாறெனுமழையொற்றிவற்றவே. (கoச)

ஆயிரங்கோடிபேயங்கையாயுதம்
தூயனசுமந்துபின்றொடரச்சுற்றொளிர்
சேயிருமணிநெடுஞ்சேமத்தேர்தெரிந்
தேயினவாயிரத்திரட்டியெய்தவே. (கoரு)

ஊன்றியபெரும்படையுலையவுற்றுடன்
ஆன்றபோரரக்கர்களொருங்கியார்த்தெழத்
தோன்றினனுலகெலாந்தொடர்ந்துநின்றன
மூன்றையுங்கடந்தொருவெற்றிமுற்றினான். (கoசு)

ஓதுறுகருங்கடற்கொத்ததானையான்
தீதுறுசிறுதொழிலரக்கன்சீற்றத்தான்
போதுறுபெருங்களம்புகுந்துளானெனத்
தூதுவர்நாயகற்கறியச்சொல்லினார். (கoஎ)

ஆங்கவனமர்த்தொழிற்கணுகினானென
வாங்கினன்சீதையையென்னும்வன்மையால்
தீங்குறுபிரிவினுற்றேய்ந்ததேய்வுற
வீங்கினவிராகவன்மீளித்தோள்களே. (கoஅ)

தொடையுறுவற்கலையாடைசுற்றிமேல்
புடையுறுவயிரவாள்பொலியவீக்கினான்
இடையுறுகருமத்தினெல்லைகண்டவர்
கடையுறுநோக்கினிற்காணுங்காட்சியான். (கoகூ)

ஒத்திருசிறுகுறட்பாதமுய்த்தநாள்
வித்தகவருமறையுலகைமிக்குமேல்
பத்துளவிரல்புடைபரந்தபண்பெனச்
சித்திரச்சேவடிக்கழலுஞ்சேர்த்தினான். (கக0)

பூவுயர்மீனெலாம்பூத்தவானிகர்
மேவிருங்கவசமிட்டிறுகவீக்கினன்
தேவியைத்திருமறுமார்பிற்றீர்ந்தனன்
நோவிலலென்பதுநோக்கினான்கொலோ. (கக௧)

104. கதலியும் - கொடியையும். 110. சிறுகுறள் - வாமனமூர்த்தி.

நற்புறக்கோதை தன்னளினச்செங்கையில்
நிற்புறச்சுற்றியகாட்சிநேமிசால்
கற்பகக்கொம்பினைக்கரியமாசுணம்
பொற்புறத்தழுவிய தன்மைபோன்றவால். (ககஉ)

புதையிருட்பொழு தினுமலரும்பொங்கொளி
சிதைவருநாள்வரச்சிவந்ததாமரை
இதழ்தொறும்வண்டுவீற்றிருந்ததாமெனத்
ததைவுறுநிறைவிரட்புட்டிமுங்கினன். (ககங)

பல்லியவுலகுறுபாடைபாடமைந்
தெல்லையினூற்கடலேறநோக்கிய
நல்லியனவையறுகவிஞர்நாவரும்
சொல்லெனத்தொலைவிலாத்தூணிதூக்கினன். (ககச)

கிளர்மழைக்குழுவிடைக்கிளர்ந்தமின்னென
வளர்பிறைநெற்றியிற்பட்டமார்த்தனன்
இளவரிக்கவட்டிலைபாரொடோர்பெறத்
துளவியறும்பையஞ்சுழியற்சூடினன். (ககரு)

ஓங்கியவுலகமுழுயிருமுட்புறம்
தாங்கியபொருள்களுந்தானுந்தானென
நீங்கியதியாவதுநினைக்கிலேமவன்
வாங்கியவரிசிலைமற்றென்றேகொலாம். (ககசா)

நாற்கடலுலகமும்விசும்புநாண்மலர்
தூர்க்கவெஞ்சேனையுந்தானுந்தோன்றினன்
மாற்கடல்வண்ணன்றன்வளருமாவிரும்
பாற்கடலோடும்வந்தெதிரும்பான்மையான். (ககஎ)

ஊழியினுருத்திரனுருவுகொண்டுதான்
ஏழுயருலகமும்வீக்கின்றுனென
வாழியவரிசிலைத்தம்பிமாப்படைக்
கூழையினெற்றிநின்றனைக்கூடினன். (ககஅ)

என்புழிநிருதராமேழுவேலையும்
மின்பொழியெயிறுடைக்கவியின்வெள்ளமும்

118. கூழையின்நெற்றி - பின்னணியின் முன்னிடம்.
119. தெட்டிட என்பதும் பாடம்.

தென்புலக்கிழவனுஞ்செய்கைதீட்டிடப்
புன்புலக்களத்திடைப்பொருதபோலுமால். (கககூ)

தெற்கிலைவடக்கிலையென்னுந்திக்கெலாம்
பற்குலைபரந்தனகுரக்குப்பல்பிணம்
பொற்குலைவிகர்த்தனவிருதர்போர்ச்சவம்
கற்குலைவிகர்த்தனமலைபுங்காட்டின. (கஉ0)

துமிந்தனதலைகுடர்சொரிந்ததேர்க்குலம்
அவிந்தனபுரவியுமாளுமற்றன
குவிந்தனபிணக்குலைசுமந்துகோணிலம்
நிமிர்ந்ததுபரந்ததுகுருதிநீத்தமே. (கஉக)

கடுங்குரங்கிருகையாலெற்றக்கால்வயக்
கொடுங்குரந்துணிந்தனபுரவிகுத்திறல்
ஓடுங்குரந்துணிந்தனர்நிருதரோடின
நெடுங்குரம்பெனநிறைகுருதிநீத்தமே. (கஉஉ)

அவ்வழியிராவணனமரரஞ்சத்தன்
வெவ்விழிநெருப்புகவில்லினாணிலைச்
செவ்வழிக்கோதையிற்றெறிப்பச்சிந்தின
எவ்வழிமருங்கினுமிரிந்தவானரம். (கஉங)

உருமிடித்துழியலைந்தொளிக்குநாகமொத்
திரியலுற்றனசிலவிறந்தவாற்சில
வெருவலுற்றனசிலவிம்மலுற்றன
பொருகளத்துயிரொடும்புரண்டுபோஞ்சில. (கஉச)

பொரக்கருநிறநெடுவிசும்புபுண்பட
இரக்கமிலிராவணனெறிந்தநாணினால்
குரக்கினமுற்றதென்கூறிற்றன்குலத்
தரக்கருமனையதோரச்சமெய்தினார். (கஉரு)

வீடணனொருவனுமிளையவீரனும்
கோடணைகுரங்கினுக்கரசுங்கொள்கையால்
நாடினர்நின்றனர்நாலுதிக்கினும்
ஓடினரல்லவரொளித்தும்பரே. (கஉசா)

வேறு.

எடுக்கினானிலத்தையேந்துமிராவணனெறிந்தநாணின்
நடுக்கினாலுலகையென்பார்நல்கினானென்னற்பாற்றே

மிடுக்கினான்மிக்கவானோர்மேக்குபர்வெள்ளமேனாள்
கெடுக்குநாளுருமினார்ப்புக்கேட்டனரென்னக்கேட்டார். (கஉஎ)

ஏந்தியசிகரமொன்றங்கிந்திரன்குலிசமென்னக்
காந்தியதுருமின்விட்டான்கவிக்குலத்தரசனக்கல்
நீந்தருநெருப்புச்சிந்திநிமிர்தலுநிருதர்க்கெல்லாம்
வேந்தனும்பகழியொன்றால்வெண்டுகளாக்கிவீழ்த்தான். (கஉஅ)

அண்ணல்வாளரக்கன்விட்டவம்பினாலழிந்துசிந்தித்
திண்ணெடுஞ்சிகரநீறாய்த்திசைதிசைசிந்தலோடும்
கண்ணெடுங்கடுந்தீக்காலக்கவிக்குலத்தரசன்கையால்
மண்மகள்வயிறுகீறமரமொன்றுவாங்கிக்கொண்டான். (கஉகூ)

கொண்டமாமரத்தையம்பின்கூட்டத்தாற்காட்டத்தக்க
கண்டமாயிரத்தின்மேலுமுளவெனக்கண்டங்கண்டான்
விண்டவாளரக்கன்மீதுவிசும்பெரிபரக்கவிட்டான்
பண்டைமால்வரையின்மிக்கதொருகிரிபரிதிமைந்தன். (கஙo)

அக்கிரியினையுமாங்கோரம்பினாலறுத்துமாற்றித்
திக்கிரிதரப்போர்வென்றசிலையினையுளையவாங்கிச்
சுக்கிரிவன்றன்மார்பிற்புங்கமுந்தோன்றாவண்ணம்
உக்கிரவயிரவாளியொன்றுபுக்கொளிக்கவெய்தான். (கஙக)

சுடுகணைபடுதலோடுந்துளங்கினான்றுளங்காமுன்னம்
குடதிசைவாயினின்றமாருதிபுகுந்தகொள்கை
உடனுறைந்தறிந்தானென்னவோரிமையொடுங்காமுன்னர்
வடதிசைவாயில்வந்துமன்னவன்முன்னரானான். (கஙஉ)

பரிதிசேய்தேறுமுன்னம்பருவலியரக்கபல்போர்
புரிதியோவென்றானென்னப்புகையெழவிழித்துப்பொங்கி
வருதியோவாவென்பான்மேன்மலையொன்றுநிலையின்வாங்கிச்
சுருதியேயனையதோளால்வீசினான்காலின்றோன்றல். (கஙங)

மீயெழுமேகமெல்லாம்வெந்துவெங்கரியிற்சிந்தித்
தீயெழவிசும்பினூடுசெல்கின்றசெயலைநோக்கிக்
காய்கணையைந்துமைந்துங்கடுப்புறத்தொடுத்துக்கண்டித்
தாயிரங்கூறுசெய்தானமரரையலக்கண்செய்தான். (கஙச)

---

128. கவிக்குலத்தரசன் - சுக்கிரீவன்.
133. காலி - காற்று.

மீட்டொருசிகரம்வாங்கிவீங்குதோள்விசையின்வீசி
ஓட்டினானோட்டவானத்துருமினுங்கடுகவோடிக்
கோட்டுவெஞ்சிலையின்வாளிமுன்சென்றுகொற்றப்பொற்றோள்
பூட்டியவலையத்தோடும்பூழியாய்ப்போயிற்றன்றே. (௧௩௫)

மெய்யரியமூன்றுபொங்கிவெங்கணான்விம்மிமீட்டோர்
மைவரைவாங்குவானைவரிசிலையுளையவாங்கிக்
கையினுந்தோளின்மேலுமார்பினுங்கரக்கவாளி
ஐயிரண்டழுந்தவெய்தானவனவையாற்றிநின்றான். (௧௩௬)

யாரிதுசெய்யகிற்பாரென்றுகொண்டிமையோரேத்த
மாருதிபின்னுமாங்கோர்மராமரங்கையின்வாங்கி
வேரொடுஞ்சுழற்றிவிட்டான்விடுதலுமிலங்கைவேந்தன்
சாரதிதலையைத்தள்ளிச்சென்றதுநிருதர்சாய. (௧௩௭)

மாறியோர்பாகனேறமறிதிரைப்பரவையின்னும்
சீறியதனையனாங்கோர்செறிகழலரக்கன்றெய்வ
நூறுகோனெய்தினெய்தானவையுடனுழைதலோடும்
ஆறுபோற்சோரிசோரவனுமனுமலக்கணுற்றான். (௧௩௮)

கற்கொண்டுமரங்கள்கொண்டுங்கைக்கொண்டுங்களித்துநம்வாய்ச்
சொற்கொண்டுமயிரின்புன்றோற்றோள்கொண்டுஞ்சொள்ளைவெள்ளி
பற்கொண்டுமலைகின்றாரிற்பழிகொண்டுபயந்ததியானோர் [ப்
விற்கொண்டுநின்றபோதுவிறல்கொண்டுமிகுதிபோலாம். (௧௩௯)

என்றுரைத்தெயிற்றுப்பேழ்வாயெரியுகநகைசெய்தியான்ற
பொன்றொடர்வடிம்பின்வாளிகடையுகத்துருமுப்போல
ஒன்றினொன்றதிகமாகவாயிரகோடியுய்த்தான்
சென்றதுகுரக்குச்சேனைகாலெறிகடலிற்சிந்தி. (௧௪௦)

கலக்கியவரக்கன்வில்லின்கல்வியின்கவிகளுற்ற
அலக்கணுந்தலைவர்செய்ததன்மையுமமையக்கண்டான்
இலக்குவனென்கைவாளிக்கிலக்கிவனிவனையின்று
விலக்குவனென்னவந்தான்வில்லுடைமேருவென்ன. (௧௪௧)

தேயத்தின்றலைவன்மைந்தன்சிலையைநாணெறிந்தான்றீய
மாயத்தின்வினையைவல்லார்நிலையென்னைமுடிவின்மாரி
ஆயத்தினிடியதென்றேயஞ்சினவுலகம்யானை
சீயத்தின்முழக்கங்கேட்டல்போன்றனர்செழுநரெல்லாம். (௧௪௨)

---

140. குரக்கு - குரங்கு, வலித்தல்விகாரம்.

ஆற்றல்சாலரக்கன்றானுமயனின்றவயவர்நெஞ்சம்
வீற்றுவீற்றாகியுற்றதன்மையும்வீரன்றம்பி
கூற்றின்வெம்புருவமன்னசிலைநெடுங்குரலுங்கேளா
ஏற்றினன்மகுடமென்னேயிவனொருமனிசனென்றான். (௧௪௩)

கட்டமைதேரின்மேலுங்களிநெடுங்களிற்றின்மேலும்
விட்டெழுபுரவிமேலும்வெள்ளெயிற்றரக்கர்மேலும்
முட்டியமழையின்றுள்ளிமுறைமுறைமொய்க்குமாபோல்
பட்டதுபகழியெங்கும்பரந்தனகுருதிப்பௌவம். (௧௪௪)

நகங்களிற்பெரியவேழநறைமதவருவிநாலும்
முகங்களிற்புக்கவாளியபரத்தைமுற்றிமொய்ம்பர்
அகங்களிற்கழன்றுதேரினச்சினையுருவியப்பால்
உகங்களிற்கடைசென்றாலுமோய்விலவோடலுற்ற. (௧௪௫)

நூக்கியகளிறுந்தேரும்புரவியுநூழில்செய்ய
ஆக்கியவரக்கர்தானையையிருகோடிகையொத்
தூக்கியபடைகள்வீசியுடற்றியதுலகஞ்செய்த
பாக்கியமனையவீரன்றம்பியைச்சுற்றும்பற்றி. (௧௪௬)

உறுபகைமனிசனின்றெம்மிறைவனையுறுகிற்பானேல்
வெறுவிதுநந்தம்வீரமென்றொருமேன்மைதோன்ற
எறிபடையரக்கரேற்றாரேற்றகைம்மாற்றானென்ன
வறியவரொருவன்வண்மைபூண்டவன்மேற்சென்றென்ன. (௧௪௭)

அறுத்தனனரக்கரெய்தவெறிந்தனவறுத்தறாத
பொறுத்தனன்பகழிமாரிபொழிந்தனனுயிரின்போகம்
வெறுத்தனமனும்வேலையுதிரத்தின்வெள்ளமீள
மறித்தனமறிந்தவெங்கும்பிணங்களம்மலைகண்மான. (௧௪௮)

தலையெலாமற்றமற்றதாளெலாமற்றதோளாம்
மலையெலாமற்றபொற்றார்மார்பெலாமற்றசூலத்
திலையெலாமற்றவீரரெயிறெலாமற்றகொற்றச்
சிலையெலாமற்றகற்றசெருவெலாமற்றசிந்தி. (௧௪௯)

தேரெலாந்துமிந்தமாவின்றிறமெலாந்துமிந்தசெங்கட்
காரெலாந்துமிந்தவீரர்கழலெலாந்துமிந்தகண்டத்

---

143. ஏற்றினன் மகுடம் - மகுடத்தினையுடைய தலையைநிமிர்த்தினான்.

146. நூக்கிய - முன்சென்ற. நூழில் செய்ய - அழிக்க.

தாரெலாந்துமிந்துநின்றதருவெலாந்துமிந்துதத்தம்
போரெலாந்துமிந்துகொண்டபுகழெலாந்துமிந்துபோய. (௧௫௦)

அரவியற்றறுகண்வன்றாளான்விழவாண்மேல்வீழப்
புரவிமேற்பூட்கைவீழப்பூட்கைமேற்பொலரேர்வீழ
நிரவியதேரின்மேன்மேனெடுந்தலைகிடந்தநெய்த்தோர்
விரவியகளத்துளெங்கும்வெள்ளிடையரிதுவீழ. (௧௫௧)

கடுப்பின்கணமரரேயுங்கார்முகத்தம்புகையால்
தொடுக்கின்றான்றுரக்கின்றானென்றுணர்ந்திலர்துரந்தவாளி
இடுக்கொன்றுங்காணூர்காண்பதெய்தகோனைத்தினைத்திப்
படுக்கின்றபிணத்தின்பம்மற்குப்பையின்பரப்பேபல்கால். (௧௫௨)

கொற்றவாள்கொலைவேல்சூலங்கொடுஞ்சிலைமுதலகோலி
வெற்றிவெம்படைகள்யாவும்வெந்தொழிலரக்கர்மேற்கொண்
டுற்றனகூற்றுமஞ்சவொளிர்வனவொன்றுநூறு
அற்றனவலதியாவுமறுதனவில்லையன்றே. (௧௫௩)

குன்றனயானைமானக்குரகதங்கொடுந்தேர்கோப
வன்றிறலாளிசீயமற்றையபிறவுமுற்றும்
சென்றனவெல்லையில்லைதிரிந்தனசிறிதுபோதும்
நின்றனவில்லையெல்லாங்கிடந்தனநெளிந்தபார்மேல். (௧௫௪)

சாய்ந்ததுநிருதர்தானைதமர்தலையிடறித்தள்ளூற்
றேய்ந்ததுவொழிந்ததோடியுலர்ந்ததுமாகவன்றே
வேய்ந்ததுவாகைவீரற்கிளையவன்வரிவில்வெம்பிக்
காய்ந்ததவ்விலங்கைவேந்தன்மனமெனுங்காலச்செந்தீ. (௧௫௫)

காற்றுறழ்கலினமான்றேர்கடிதினிற்கடாவிக்கண்ணுற்
றேற்றனனிலங்கைவேந்தனெரிவிழித்திராமன்றம்பி
கூற்றுமால்கொண்டதெனக்கொல்கின்றான்குறுகச்சென்றான்
சீற்றமுந்தானுநின்றான்பெயர்ந்திலன்சிறிதுபோதும். (௧௫௬)

## வேறு.

காக்கின்றவென்னெடுங்காவலின்வலிநீக்கியகள்வ
போக்கின்றுனக்கரிதாலெனப்புகன்றான்புகையுயிர்ப்பான்
கோக்கின்றனதொடுக்கின்றனகொலையம்புகடலையோ
டார்க்கின்றனகனலொப்பனவெய்தானிகல்செய்தான். (௧௫௭)

155. இளையவன் - இலக்குமணன்.

எய்தான்சரமெய்தாவகையிற்றீர்கெனவிடையே
வைதாலெனவைதாவினவடிவாளியினறுத்தான்
ஐதாதலினறுத்தாயினியறுப்பாயெனவழிகார்
பெய்தாலெனச்சரமாரிகள்சொரிந்தான்றுயில்பிரிந்தான். (கருஅ)

ஆங்குஞ்சரமனையான்விடுமயில்வாளிகளவைதாம்
வீங்குஞ்சரபருவத்திழிமழைபோல்வனவிலக்காத்
தூங்குஞ்சரநெடும்புட்டிலிற்சுடர்வேலவற்கிளையான்
வாங்குஞ்சரம்வாங்காவகையறுத்தானறமறுத்தான். (கருகூ)

அப்போதகனயர்வாறியவனுமானமுல்விழியாப்
பொய்ப்போர்சிலபுரியேனெனவவன்றேரெதிர்புகுந்தான்
கைப்போதகமெனமுந்தவன்கடுந்தேரெதிர்நடந்தான்
இப்போரொழிபிற்போருளவவைகேளெனவிசைத்தான. (கசூ0)

வென்றாயுலகொருமூன்றையுமெலியாநெடுவலியால்
தின்றாய்செறிகழலிந்திரனிசையைத்திசைதிரிந்தாய்
என்றாலுமின்றழிவுன்வயினெய்தும்மெனவிசையா
நின்றானவனெதிரேயுலகளந்தானெனநிமிர்ந்தான். (கசூக)

எடுத்தான்வலத்தடக்கையினையதுபோயுலகெல்லாம்
அடுத்தாங்குறவளந்தான்றிருவடியின்வரவன்றென்
மடுத்தாங்குறவளர்ந்தானெனவளர்கின்றவனுருவம்
கடுத்தானெனக்கடியாற்கெதிர்காண்பாயெனக்காட்டா. (கசூஉ)

வில்லாயுதமுதலாகியவயவெம்படைமிடலோ
டெல்லாமிடைபயின்றாய்புயநாலைந்தினொடிபைந்தாய்
வல்லாய்செருவலியாய்திறன்மறவோயிதனெதிரே
நில்லாயெனநிகழ்த்தாநெடுநெருப்பாமெனவுயிர்ப்பான். (கசூ௩)

நீளாண்மையினுடனேயெதிர்நின்றாயிஃதொன்றோ
வாளாண்மையுமுலகேழினொடேயுடைவலியும்
தாளாண்மையுநிகராருமிறவியாண்மையுமினிநின்
தோளாண்மையுமிசையோடென்றுடைப்பேனொருபுடைப்பால். ()

பரக்கப்பலவுரைத்தென்படர்கயிலைப்பெருவரைக்கும்
அரக்குற்றெறிபொறிக்கட்டிசைக்கரிக்குஞ்சிறிதனுங்கா
உரக்குப்பையினுயர்தோள்பலவுடையாயுரனுடையாய்
குரக்குத்தனிக்கரத்திற்புடைபொறையாற்றுவைகொல்லாம்.(கசூரு)

---

158. துயில்பிரிந்தான் - நித்திரைவிட்ட இலக்குமணன்.

என்றோள்வலிய தனுவெடுத்தியானெற்றவுமிறவா
நின்றாயெனினீ பின்னெனைநின்கைத்தல நிரையால்
குன்றேபுரைதோளாய்மிடல்கொடுகுத்துதிருத்தப்
பொன்றேனெனினின்னோடெதிர்பொருகின்றிலெனென்றான். ()

காரிற்கரியவன்மாருதிகழறக்கடிதுகவா
வீரற்குரியதுசொற்றனைவிறலோயொருதனியேன்
நேர்நிற்பவருளரோபிறர்நீயல்லவரினிநின்
பேருக்குலகளவேயினியுளவோபிறவென்றான். (கசுஎ)

ஒன்றாயுதமுடையாயலையொருநீயெனதுறவும்
கொன்றாயுயர்தேர்மேனிமிர்கொடுவெஞ்சிலைகோலி
வன்றானையினுடன்வநதவனெதிர்வர்துநின்வலியால்
நின்றாயொடுநின்றாரினிநிகரோவுரைநெடியோய். (கசுஅ)

முத்தேவர்கண்முதலாயினர்முழுமூன்றுலகிடையும்
எத்தேவர்களெத்தானவரெவ்வீரர்களென்னோர்
பித்தேறினரல்லாலிடைபோராதெதிர்மார்பில்
குத்தேயெனநின்றாரிதுகூறுந்தரமன்றால். (கசுகூ)

பொருகைத்தலமிருபத்துளபுகழுஞ்சிறிதுளதால்
வருகைத்தலமதவெங்கரிவலிகெட்டனவருவாய்
இருகைத்தலமுடையாயெதிரிவைசொற்றனையினிமேல்
தருகைக்குரியதொர்கொற்றமெனமர்தக்கதுமன்றால். (கஎ0)

திசையத்தனையையும்வென்றதுசிதைதயப்புகழ்தெறுமவ்
வசைமற்றினியுளவேயெனதுயிர்போல்வருமகனை
அசையத்தரையரைவித்தனையழிசெம்புனலதுவோ
பசையற்றிலதொருநீயெனதெதிர்நின்றிவைபகர்வாய். (கஎக)

பூணித்திவையுரைசெய்தனையதனுலுரைபொதுவே
பாணித்ததுபிறிதென்சிலபகர்கின்றதுபழியால்
நாணித்தலையிடுகின்றிலெனனிவநதுலகெவையும்
காணக்கடிதெதிர்குத்துதியென்றான்வினைகடியான். (கஎஉ)

வீரத்திறமிதுநன்றெனவியவாமிகவிளியாத்
தேரிற்கடிதிவராமுழுவிழியிற்பொறிசிதற
ஆரத்தொடுகவசத்துடல்பொடிபட்டுகவவன்மா
மார்பிற்கடிதெதிர்குத்தினன்வயிரக்கரமதனால். (கஎ௩)

172. அதனாலுயிர் என்றும் பாடம்.

அயிருக்கனநெடுமால்வரையனவுக்கனவிழிகள்
தயிருக்கனமுழுமுளைகடலைபுக்கனதரியா
உயிருக்கனநிருதக்குலமுயர்வானரமெவையும்
மயிருக்கனவெயிறுக்கனமழைபுக்கனவானம். (கஎச)

விற்சிந்தினநெடுநாணிமிர்கரைசிந்தினவிரிநீர்
கற்சிந்தினகுலமால்வரைகதிர்சிந்தினசுடரும்
பற்சிந்தினமதயானைகள்படைசிந்தினரெவரும்
எற்சிந்தினவெரிசிந்தினவிகலோன்மணியகலம். (கஎரு)

கைக்குத்ததுபடலுங்கழனிருதர்க்கிறைகறைநீர்
மைக்குப்பையினெழில்கொண்டொளிர்வயிரத்தடமார்பில்
திக்கிற்சினமதயானைகள்வயவெம்பணைசெருவில்
புக்கிற்றனபோகாதனபுறமுக்கனபுகழின். (கஎசு)

அள்ளாடியகவசத்தவிர்மணியற்றனதிசைபோய்
விள்ளாநெடுமுழுமீனெனவிழிவெம்பொறியெழநின்
றுள்ளாடியநெடுங்கால்பொரவொடுங்காவலகுலையத்
தள்ளாடியவடமேருவிற்சலித்தானறம்வலித்தான். (கஎஎ)

ஆர்த்தார்விசும்புறைவோர்நெடிதனுமான்மிசையதிகம்
தூர்த்தார்நறுமுழுமென்மலரிசையாசிகள்சொன்னார்
வேர்த்தார்நிருதர்கள்வானவர்வியந்தாரவன்விசயம்
தீர்த்தானெனவுவந்தாடினர்முழுமெய்ம்மயிர்சிலிர்த்தார். (கஎஅ)

கற்றங்கியினெடுவாயுவினிலைகண்டவர்கதியால்
மற்றங்கொருவடிவுற்றதுமாறுடுறுகாலைப்
பற்றங்கொருமையிலன்னதுபயில்கின்றதொர்செயலால்
உற்றங்கதுபுறம்போயுடல்புகுந்தாலெனவுணர்ந்தான். (கஎகூ)

உணராநெடிதுயிராவுரையுதவாவெரியுமிழா
இணையாருமிலவனேர்வரவெய்தாவலிசெய்தாய்
அணையாயினியெனதூழெனவடராவெரிபடராப்
பணையார்புயமுடையானிடைசிலவிம்மொழிபகர்ந்தான். (கஅ௦)

வலியென்பதுமுளதேயதுநின்பாலதுமறவோய்
அலியென்பனபுறநின்றனவுலகேழினுமடைத்தாய்

---

174. அயிருக்கன - நுண் மணல் சிதறினாற்போல.

179. பற்றங்கொருமையில் - அங்குபற்றியிருந்த ஒருபிறப்பில்.

181. அலியென்பன புறநின்றன - நின்னையன்றி வேறாகவுள்ளன அலியாயுள்ளன.

சலியென்றெதிர்மலரோனுரைதந்தாலிறைசலியேன்
மெலிவென்பதுமுணர்ந்தேனெனைவென்றாயினிவிறலோய். (கஅக)

ஒன்றுண்டினியுரைநேர்குவதுன்மார்பினென்னொருகைக்
குன்றின்மிசைகடைநாள்விழுமுருமேறெனக்குளித்தால்
நின்றிங்கிலைதருவாயெனினீயல்லவருளரோ
இன்றும்முளையென்றும்முளையிலையோர்பகையென்றான். (கஅஉ)

என்றானெதிர்சென்றானிகலடுமாருதியெனைநீ
வென்றாயலையோவுன்னுயிர்வீடாதுரைசெய்தாய்
நன்றாகநின்னிலைநன்றெனநல்காவெதிர்நடவாக்
குன்றாகியதிரடோளவன்கடன்கொள்கெனக்கொடுத்தான். (கஅங)

உறுக்கித்தனியெதிர்நின்றவனுரத்திற்றனதோளிர்பல்
இறுக்கிப்பலநெடுவாய்மடித்தெரிகண்டொறுமிழிய
முறுக்கிப்பொறிநிமிரப்பலவிரன்மூரியதிசையக்
குறுக்கிக்கரநெடுந்தோள்புறநிமிரக்கொடுகுத்த. (கஅச)

பள்ளக்கடல்கொள்ளப்படர்படிபேரினும்பதையா
வள்ளப்பெருவெள்ளத்தெறுழ்வலியாரினும்வலியான்
கள்ளக்கறையுள்ளத்ததிர்கழல்வெய்யவன்கரத்தால்
தள்ளத்தளர்வெள்ளிப்பெருங்கிரியாமெனச்சலித்தான். (கஅரு)

வேறு.

சலித்தகாலையினிமையவருலகெலாஞ்சலித்த
சலித்ததாலறஞ்சலித்ததுமெய்ம்மொழிதகவும்
சலித்ததன்றியும்புகழொடுசுருதியுஞ்சலித்த
சலித்தநீதியுஞ்சலித்தனகருணையுந்தவமும். (கஅசா)

அனையகாலையினரிகுலத்தலைவரவ்வழியோர்
எனையரன்னவர்யாவருமோர்குவடேந்தி
நினைவின்முன்னெடுவிசும்பொருவெளியின்றிநெருங்க
வினையிதென்றறிந்திராவணன்மேற்செலவிட்டார். (கஅஎ)

ஒத்தகையினரூழியினிறுதியினுலகை
மெத்துமீதெழுமேகத்தின்விசும்பெலாமிடையப்
பத்துநூறுகோடிக்குமேற்பணிபடுசிகரம்
எத்தமேற்செலவெறிந்தனர்பிரிந்தனரிமையோர். (கஅஅ)

தருக்கிவீசிடவிசும்பிடமின்மையிற்றம்மின்
நெருக்குகின்றனநின்றனசென்றிலநிறைந்த

அருக்கனும்மறைந்தாரிருள்விழுங்கிய தண்டம்
சுருக்கமுற்றனரரக்கரென்றிமையவர்சூழ்ந்தார். (கஅகூ)

ஒன்றையொன்றுபட்டொடிவனவிடித்தூருமதிரச்
சென்றவன்பொறிமின்பலசெறித்திடத்தெய்வ
வென்றிவில்லெனவிருநிலம்வீழ்ந்திடமேன்மேல்
கன்றியோடிடக்கன்மழைநிகர்த்தனகற்கள். (ககூ0)

இரிந்துநீங்கியவிராக்கதப்பெரும்படையெங்கும்
விரிந்துசிந்தினவானத்துமீனெனவிமானம்
சொரிந்தவெம்பொறிபடக்கடல்சுவறினதோற்றம்
கரிந்தகண்டகர்கண்மணியெனைப்பலகழறி. (ககூக)

இறுத்ததின்றுலகென்பதோர்திமிலம்வந்தெய்தக்
கறுத்தசிந்தையனிராவணனனையதுகண்டான்
ஒறுத்துவானவர்புகழுண்டபாரவில்லுளைய
அறுத்துநீக்கினனுயிரகோடிமேலம்பால். (ககூஉ)

காம்பெலாங்கடுந்துகள்படக்களிறெலாந்துணியப்
பாம்பெலாம்படவாளியுமுழுவையும்பாறக்
கூம்பர்மாமரமெரிந்துகக்குறுந்துகணொருங்கச்
சாம்பராயினதடவரைசுடுகணைதடிய. (ககூங)

உற்றவாறென்றுமொன்றுநூறாயிரமுருவா
இற்றவாறென்றுமிடிப்புண்டுபொடிப்பொடியாகி
அற்றவாறென்றுமரக்கனையடுசிலைக்கொடியோன்
கற்றவாறென்றும்வானவர்கைத்தலங்குலைத்தார். (ககூச)

அடறுடைத்துமென்றரிகுலவீரன்றெறிந்த
திடறுடைத்தனதசமுகன்சிரமவைதிசைசூழ்
கடறுடைத்தனகளத்தினின்றுயர்தரும்பூழி
உடறுடைத்தனவுதிரமுந்துடைத்ததொண்புடவி. (ககூரு)

கொல்வெனிக்குறியேமற்றிவ்வானரக்குழுவை
வெல்வென்மானுடரிருவரையெனச்சினம்வீங்கப்
பல்வன்வார்சிலைபத்துடனிடக்கையின்வாங்கித்
தொல்வன்மாரியிற்றொடர்வனசுடுசரந்துரந்தான். (ககூசு)

---

194. உற்ற ஆறு என்றும் - மலைகள் வந்த விதமெனவும்.
195. திடல் துடைத்தன - மலைகளை யழித்தனவாகிய.

ஐயிரண்டுகொர்முகத்தினுமாயிரம்பகழி
கைகளீரைந்தினாலும்வெங்கடுப்பினிற்றொடுத்துற்
றெய்யவெஞ்சினவானரமுமிருநிலவரைப்பும்
மொய்கொள்வேலையுந்திசைகளுஞ்சரங்களாய்முடிந்த. (ககூஎ)

அந்திவானகமொத்ததல்வமர்க்களமுதிரம்
சிந்திவேலையுந்திசைகளுநிறைந்தனசரத்தால்
பந்திபந்தியாய்மடிந்ததுவானரப்பகுதி
வந்துமேகங்கள்படிந்தனபிணப்பெருமலைமேல். (ககூஅ)

நீலனம்பொடுசென்றிலனின்றிலனிலத்தான்
காலனார்வயத்தடைந்திலனேவுண்டகவயன்
ஆலமன்னதோர்சரத்தொடுமங்கதனயிர்த்தான்
சூலமன்னதோர்வாளியாற்சோம்பினன்சாம்பன். (ககூகூ)

மற்றும்வீரர்தம்மருமத்தினயிலம்புமடுப்பக்
கொற்றவீரமுமாண்டொழிற்செய்கையுங்குறைந்தார்
சுற்றும்வானரப்பெருங்கடறொலைந்ததுதொலையா
துற்றுநின்றவரோடினரிலக்குவனுருத்தான். (உ00)

நூறுகோடியநூறுநூறாயிரகோடி
வேறுவேறெய்தசரமெலாஞ்சரங்களால்விலக்கி
ஏறுசேவகன்றம்பியவ்விராவணனெடுத்த
ஆறுநாலுவெஞ்சிலையையுங்கணைகளாலறுத்தான். (உ0க)

ஆர்த்துவானவராவலங்கொட்டினரரக்கர்
வேர்த்துநெஞ்சமும்வெதும்பினர்வினையறுமுனிவர்
தூர்த்துநாண்மலர்சொரிந்தனரிராவணன்றானைப்
பார்த்துவந்தனன்குனித்ததுநல்லறம்பாடி. (உ0உ)

நன்றுபோர்வலிநன்றுபோராள்வலிவீரம்
நன்றுநோக்கமுநன்றுகைக்கடுமையுநன்று
நன்றுகல்வியுநன்றுநின்றிண்மையுநலனும்
என்றுகைம்மறித்திராவணனொருவனீயென்றான். (உ0ங)

கானினன்றிகற்கரன்படைபடுத்தவக்கரியோன்
தானுமிந்திரன்றன்னையோர்தனுவலந்தன்னால்
வானின்வென்றவென்மதலையும்வரிசிலைபிடித்த
யானுமல்லவர்யாருனக்கெதிரென்றுமிசைத்தான். (உ0ச)

---

202. ஆவலம் - கரகோஷம்.

வில்லினாலிவன்வெலப்படானெனச்சினம்வீங்கக்
கொல்லுநாளுமன்றிதுவெனச்சிந்தையிற்கொண்டான்
பல்லினாலிதழதுக்கினன்பருவலிக்கரத்தால்
எல்லினான்முகன்கொடுத்ததோர்வேலெடுத்தெறிந்தான். (௨௦௫)

எறிந்தகாலவேலெப்தவம்பியாவையுமெரிந்து
பொறிந்துபோயுகத்தீயுகவிசையினிற்பொங்கிச்
செறிந்ததாரவன்மார்பிடைச்சென்றதுசிந்தை
அறிந்தமைந்தனுமமர்நெடுங்களத்திடையயர்ந்தான். (௨௦௬)

இரியலுற்றதுவானரப்பெரும்படையிமையோர்
பரியலுற்றனருலைந்தனர்முனிவரும்பதைத்தார்
விரிதிரைக்கடற்கிரட்டிகொண்டார்த்தனர்விரவார்
திரிகையொத்ததுமண்டலங்கதிரொளிதிரிந்த. (௨௦௭)

அஞ்சினானலனயன்றந்தவேலினுமாவி
துஞ்சினானலன்றுளங்கினனென்பதுதுணியா
எஞ்சில்யாக்கையையெடுத்துக்கொண்டகல்வெனென்றெண்ணி
நஞ்சினாற்செய்தமனத்தினான்பாரின்மேனடந்தான். (௨௦௮)

உள்ளிவெம்பிணத்துதிரநீர்வெள்ளத்திலோடி
அள்ளியங்கைகளிருபதும்பற்றிப்பண்டரன்மா
வெள்ளியங்கிரியெடுத்தனன்வெள்கினனென்ன
எள்ளிப்பொன்மலையெடுக்கலுற்றானெனவெடுத்தான். (௨௦௯)

அடுத்தநல்லுணர்வொழிந்திலனம்பரஞ்செம்பொன்
உடுத்தநாயகன்றானெனவுணர்தலினொருங்கே
தொடுத்தவெண்வகைமூர்த்தியைத்துளக்கிவெண்பொருப்போ
டெடுத்ததோள்களுக்கெழுந்திலனிராமனுக்கிளையான். (௨௧௦)

தலைகள்பத்தொடுந்தழுவியதசமுகத்தலைவன்
நிலைகொண்மாகடலொத்தனன்கரம்புடைநிமிரும்
அலைகளொத்தனவதிலெழுமாமதியொத்தான்
இலைகொடண்டொழாயிலங்குதோளிராமனுக்கிளையான். (௨௧௧)

எடுக்கலுற்றவன்மேனியையேந்துதற்கேற்ற
மிடுக்கிலாமையினிராவணன்வெய்துயிர்ப்புற்றான்
இடுக்கினின்றவம்மாருதிபுகுந்தெடுத்தேந்தித்
தடுக்கலாததோர்விசையினினெழுந்தயல்சார்ந்தான். (௨௧௨)

---

210. அம்பரம் - ஆடை.

தொகவொருங்கியஞானமென்றெவரினுந்தூயான்
தகவுகொண்டதோரன்பெனுந்தனித்துணையல்லால்
அகவுகாதலாலண்டகையென்னினுமனுமன்
மகவுகொண்டுபோய்மரம்புகுமந்தியைநிகர்த்தான். (உகங)

மையல்கூர்மனத்திராவணன்படையினன்மயங்கும்
செய்யவாளரியேறனன்சிறிதினிற்றேறிக்
கையுங்கால்களுநயனமுங்கமலமேயனைய
பொய்யிலாதவனின்றிடத்தனுமனும்போனன். (உகச)

போனகாலையிற்புக்கனன்புங்கவன்போர்வேட்
டியானைமேற்செலுங்கோளரியேறிவனென்ன
வானுளோர்கணமார்த்தனர் தூர்த்தனர்மலர்மேல்
தூநவின்றவேலரக்கனுந்தேரினைத்தூரந்தான். (உகரு)

தேரிற்போரரக்கன்செலச்சேவகன்செவ்வே
பாரிற்செல்கின்றவறுமையைநோக்கினன்பரிந்தான்
சீரிற்செல்கின்றதில்லையிச்செருவெனுந்திறத்தால்
வாரிற்பெய்கழன்மாருதிகதுமெனவந்தான். (உகசு)

பண்டைநாடருபனித்திரைப்புனல்சடையேற்றுக்
கொண்டதூயவன்கொடுந்தொழினிருதர்கள்குழுமி
மண்டுவாளமர்க்களத்திலம்மலர்க்கழல்சேறல்
கண்டுகூசலனிற்குமென்றுலதுகடனே. (உகஎ)

நூறுபத்துடைநொறில்பரித்தேரின்மேனுன்முன்
மாறில்போரரக்கன்பொரநிலத்துநீமலைதல்
வேறுகாட்டுமோர்வெறுமையைமெல்லியவெனினும்
ஏறுநீயையவென்னுடைத்தோளின்மேலென்றான். (உகஅ)

நன்றுநன்றெனநாயகனேறினனமக்
குன்றின்மேலிவர்கோளரியேறெனக்கூறி
அன்றுவானவராசிகளியம்பினரீன்ற
கன்றுதாங்கியதாயெனமாருதிகளித்தான். (உகக)

மாணியாயுலகளந்தநாளவனுடைவடிவை
ஆணியாயுணர்மாருதியதிசயமுற்றான்
காணியாகப்பண்டுடையனமொருதனிக்கனுழன்
நாணினன்மற்றையனந்தனுந்தலைநடுக்குற்றான். (கூஉ0)

ஓதமொத்தனன்மாருதியதனகத்துறையும்
நாதனொத்தனனென்னினோதுயில்கிலனம்பன்
வேதமொத்தனன்மாருதிவேதத்தின்சிரத்தின்
போதமொத்தனனிராமன்வேறிதனினில்பொருவே. (உஉக)

வேறு.

தகுதியாய்நின்றவென்றிமாருதிதனிமைசார்ந்த
மிகுதியைவேறுநோக்கினெவ்வண்ணம்விளம்புந்தன்மை
புகுதிகூர்ந்துள்ளார்வேதம்பொதுவுறப்புலத்துநோக்கும்
பகுதியையொத்தான்வீரன்மேலைத்தன்பதமேயொத்தான் (உஉஉ)

மேருவின்சிகரம்போன்றதென்னினும்வெளிறுண்டாமால்
மூரிநீரண்டமெல்லாம்வயிற்றிடைமுன்னங்கொண்ட
ஆரியற்கனேகமார்க்கத்தாலிடம்வலமதாகச்
சாரிகைதிரியலானமாருதிதருமப்பொற்றோள். (உஉ௩)

வேறு.

ஆதிசொல்லினரருந்தவரறமெனுந்தெய்வம்
காசினன்னெடுங்கரமெடுத்தாடிடக்கயிலை
ஈசனான்முகனென்றிவர்முதலியவிமையோர்
பூசல்காணியவந்தனரந்தரம்புகுந்தார். (உஉச)

அண்ணலஞ்சனவண்ணனுமமர்குறித்தமர்ந்தான்
எண்ணரும்பெருந்தனிவலிச்சிலையைநாணெறிந்தான்
மண்ணும்வானமுமற்றையபிறவுந்தன்வாய்ப்பெய்
துண்ணுங்காலத்தவ்வுருத்திரனார்ப்பொத்ததோதை. (உஉரு)

ஆவிசென்றிலர்நின்றிலராக்கரோடியக்கர்
நாவுலர்ந்தனர்கலங்கினர்விலங்கினர்நடுங்கிக்
கோவைநின்றபேரண்டமுங்குலைந்தனகுலையாத்
தேவதேவனும்விரிஞ்சனுஞ்சிரதலங்குலைந்தார். (உஉசா)

ஊழிவெங்கனலொப்பனதுப்பனவுருவ
ஆழிநீரையுங்குடிப்பனதிசைகளையளப்ப
வீழின்மீச்செலின்மண்ணையும்விண்ணையுந்தொளைப்ப
ஏழுவெஞ்சரமுடன்றொடுத்திராவணனெய்தான். (உஉஎ)

எய்தவாளியையேழினாலேழினாடேழு
செய்துவெஞ்சரமைந்தொருதொடையினிற்சேர்த்தி

222. புகுதி - புகு, புகுந்த, தி, அறிவு.
225. அண்ணல் - பெருமையுடைய.

வெய்துகாலவெங்கனல்களும்வெள்குறப்பொறிகள்
பெய்துபோம்வகையிராகவன்சிலைநின்றுபெயர்த்தான். (உஉஅ)

வாளியைந்தையுமைந்திலுல்விசும்பிடைமாற்றி
ஆளிமொய்ம்பினவ்வரக்கனுமையிரண்டம்பு
தோளிலுனுறவாங்கினன்றுரந்தனன்சுருதி
ஆளுநாயகனவற்றையுமவற்றிலுலறுத்தான். (உஉகூ)

அறுத்துமற்றவனயனின்றவளக்கருமளக்கர்
செறுத்துவிட்டனபடையெலாங்கணைகளாற்சிந்தி
இறுத்துவீசியகிரிகளைபெரியுகநூறி
ஒறுத்துமற்றவர்தலைகளாற்சிலமலையுயர்த்தான். (உ௩௦)

மீனுடைக்கருங்கடல்புரையிராக்கதர்விட்ட
ஊனுடைப்படையிராவணனம்பொடுமோடி
வானரக்கடல்படாவகைவாளியான்மாற்றித்
தானுடைச்சரத்தாலவர்தலைமலைதடிந்தான். (உ௩க)

இம்பரானெனின்விசும்பினருகுமோரிமைப்பின்
தும்பைசூடியவிராவணன்முகந்தொறுந்தோன்றும்
வெம்புவஞ்சகர்விழிதொறுந்திரியுமேனின்றான்
அம்பின்முன்செலுமனத்திற்குமுன்செலுமனுமன். (உ௩உ)

ஆடுகின்றனகவந்தமுமவற்றொடுமோடிப்
பாடுகின்றனவலகையுநீங்கியபணைக்கைக்
கோடுதுன்றியகரிகளும்பரிகளுந்தலைக்கொண்
டோடுகின்றனவுலப்பிலவுதிரவாறுவரி. (உ௩௩)

அற்றவாழியவறுப்புண்டவச்சினவம்போ
டிற்றகொய்யுளைப்புரவியதேர்க்குலமெல்லாம்
ஒற்றைவாளியோடுருண்டனகருங்களிற்றோங்கல்
சுற்றும்வாசியுந்துமிந்தனவமர்க்களந்தொடர்ந்த. (உ௩௪)

தேரிழந்துவெஞ்சிலைகளுமிழந்துசெந்தருகட்
காரிழந்துவெங்கலினமாக்கால்களுமிழந்து
சூரிழந்துவன்கவசமுமிழந்துதுப்பிழந்து
தாரிழந்துபின்னிழந்தனர்நிருதர்தந்தலைகள். (உ௩௫)

அரவினுண்ணிடையரக்கியர்கணவரன்றற்ற
சிரமுமன்னவையாதலின்வேற்றுமைதெரியாப்

233. உவரி - சமுத்திரம்.

புரவியின்றலைபூட்கையின்றலையிவைபொருத்திக்
கரவிலின்னுயிர்துறந்தனர்க்கவ்வுறத்தழுவி. (௨௩௬)

ஆர்ப்படங்கினவாயெலாமழற்கொழுந்தொழுகப்
பார்ப்படங்கினகண்ணெலாம்பலவகைப்படைகள்
தூர்ப்படங்கினகையெலாந்தூளியின்படலைப்
போர்ப்படங்கினவுலகெலாமுரசெலாம்போன. (௨௩௭)

ஒன்றுநூற்றிரண்டாயிரங்கொடுந்தலையுருட்டிச்
சென்றுதீர்வனவெனைப்பலகோடியுஞ்சிந்தி
நின்றதேரொடிராவணனொருவனுநிற்பக்
கொன்றுவீழ்த்தினதிராகவன்சரமெனுங்கூற்றம். (௨௩௮)

தேரும்யானையும்புரவியுமரக்கருந்தெற்றிப்
பேரும்மோரிடமின்றெனத்திசைதொறும்பிறங்கிக்
காரும்வானமுந்தொடுவனபிணக்குவைகண்டான்
மூரிவெஞ்சிலையிராவணனராவெனமுனிந்தான். (௨௩௯)

முரண்டொகுஞ்சிலையிமைப்பினின்முறையுறவாங்கிப்
புரண்டுதோளுறப்பொலன்கொணாண்வலம்படப்போக்கித்
திரண்டவாளிகள்சேவகன்மரகதசிகரத்
திரண்டுதோளினுமிரண்டுபுக்கழுந்திடவெய்தான். (௨௪௦)

முறுவலெய்தியமுகத்தினன்முளரியங்கண்ணன்
மறுவிலாததோர்வடிக்கணைதொடுத்துறவாங்கி
இறுதியெய்துநாட்கால்பொரமந்தரமிடையிட்
டறுவதாமெனவிராவணன்சிலையினையறுத்தான். (௨௪௧)

மாற்றும்வெஞ்சிலைவாங்கினன்வடிம்புடைநெடுநாண்
ஏற்றுறாமுனமிடையறக்கணைகளாலெய்தான்
காற்றினுங்கடிதாவனகதிர்மணிநெடுந்தேர்
ஆற்றுகொய்யுளைப்புரவியின்சிரங்களுமறுத்தான். (க௪௨)

மற்றும்வெம்படைவாங்கினன்வழங்குறாமுன்னம்
இற்றவிந்துகவெரிகணையிடையறவெய்தான்
கொற்றவெண்குடைகொடியொடுந்துணிபடக்குறைத்தான்
கற்றையஞ்சுடர்க்கவசமுங்கட்டறக்கழித்தான். (௨௪௩)

மாற்றுத்தேரவண்வந்தனவந்தனவாரா
வீற்றுவீற்றுகவெயிலுமிழ்கடுங்கணைவிட்டான்

சேற்றுச்செம்புனற்படுகளப்பரப்பிடைச்செங்கட்
கூற்றுங்கையெடுத்தாடிடவிராவணன்கொதித்தான். (உ௪௪)

மின்னும்பன்மணிமவுலிமேலொருகணைவிட்டான்
அன்னகாய்கதிரிரவிமேற்பாய்ந்தபோரனுமன்
என்னலாயதோர்விசையினிற்சென்றவன்றலையில்
பொன்னின்மாமணிமகுடத்தைப்புணரியில்வீழ்த்த. (உ௪௫)

செறிந்தபன்மணிப்பெருவனந்திசைபரந்தெரியப்
பொறிந்தவாய்வயக்கடுஞ்சுடர்க்கணைபடும்பொழுதின்
எறிந்தகால்பொரமேருவின்கொடுமுடியிழந்து
மறிந்துவீழ்ந்ததுமொத்ததவ்வரக்கன்றன்மகுடம். (உ௪௬)

அண்டர்நாயகனடுஞ்சிலைபுதைத்தபேரம்பு
கொண்டுபோகப்போய்க்குரைகடற்குளித்தவக்கொள்கை
மண்டலந்தொடர்வயங்குவெங்கதிர்களைவ்வாயால்
உண்டகோளொடுமொலிகடல்வீழ்ந்ததுமொக்கும். (உ௪௭)

சொல்லுமத்தனையளவையின்மணிமுடிதுறந்தான்
எல்லிமைத்தெழுமதியமுஞாயிறுமிழந்த
அல்லுமொத்தனன்பகலுமொத்தனனமர்பொருமேல்
வெல்லுமத்தனையல்லதுதோற்றிலாவிறலோன். (உ௪௮)

மாற்றருந்தடமணிமுடியிழந்தவாளரக்கன்
ஏற்றமெவ்வுலகத்தினுமுயர்ந்துளானெனினும்
ஆற்றனன்னெடுங்கவிஞரோரங்கதமுரைப்பப்
போற்றரும்புகழிழந்தபேரொருவனும்போன்றான். (உ௪௯)

அறங்கடந்தவர்செயலிதென்றுலகெலாமார்ப்ப
நிறங்கரிந்திடநிலம்விரல்கிளைத்திடநின்றான்
இறங்குகண்ணினனெல்லழிமுகத்தினன்றலையன்
வெறுங்கைநாற்றினன்விழுதுடையாலன்னமெய்யன். (உ௫0)

நின்றவன்னிலைநோக்கியநெடுந்தகையிவனைக்
கொன்றலுன்னிலன்வெறுங்கைநின்றானெனக்கொள்ளா
இன்றவிந்ததுபோலுமுன்றீமையென்றிசையோ
டொன்றவந்தனவாசகமினையனவுரைத்தான். (உ௫௧)

அறத்தினாலன்றியமரர்க்குமருஞ்சமங்கடத்தல்
மறத்தினாலரிதென்பதுமனத்திடைவலித்தி

250. நிறம்கரிந்திட - தேகம்கறுத்திட.

பறத்திநின்னெடும்பதிபுகக்கிளையொடும்பாவி
இறத்தியானதுநினைக்கிலென்றனிமைகண்டிரங்கி. (௨௫௨)

உடைப்பெருங்குலத்தினரொடுமுறவொடுமுதலும்
படைக்கலங்களுமற்றுநீதேடியபலவும்
அடைத்துவைத்தன திறந்துகொண்டாற்றுதியாயின்
கிடைத்தியல்லையேலொளித்தியாற்சிறுதொழிற்கீழோய். (௨௫௩)

சிறையில்வைத்தவடன்னைவிட்டுலகினிற்றேவர்
முறையில்வைத்துநின்றம்பியையிராக்கதர்முதற்பேர்
இறையில்வைத்தவற்கேவல்செய்திருத்தியேலின்னும்
தறையில்வைக்கிலெனின்றலைவாளியிற்றடிந்து. (௨௫௪)

அல்லையாமெனினாரமராற்றெனுந்தோற்றம்
வல்லையாமெனினுனக்குளவலியெலாங்கொண்டு
நில்லையாவெனநேர்நின்றுபொன்றுதியெனினும்
நல்லையாகுதிபிழைப்பினியுண்டெனநயவேல். (௨௫௫)

ஆளையாவுனக்கமைந்தனமாருதமறைந்த
பூளையாயினகண்டனையின்றுபோய்ப்போர்க்கு
நாளைவாவெனநல்கினானிளங்கமுகின்
வாளைதாவுறுகோசலைநாடுடைவள்ளல். (௨௫௬)

ஆக திருவிருத்தம் - ௧௨௧௮.

## ௧௫-வது, கும்பகருணன்வதைப்படலம்.

வாரணம்பொருதமார்பும்வரையினையெடுத்ததோளும்
நாரதமுனிவற்கேற்பநயம்படவுரைத்தநாவும்
தாரணிமவுலிபத்துஞ்சங்கரன்கொடுத்தவாளும்
வீரமுங்களத்தேபோட்டுவெறுங்கையோடிலங்கைபுக்கான். (௧)

கிடந்தபோர்வலியார்மாட்டேகெடாதவானவரையெல்லாம்
கடந்துபோயுலகமூன்றுங்காக்கின்றகாவலாளன்
தொடர்ந்துபோம்பழியினோடுந்தூக்கியகரங்களோடும்
நடந்துபோய்நகரம்புக்கானருக்கனுநாகஞ்சேர்ந்தான். (௨)

256. ஆளையா - அரக்கரை ஆளும் அரசனே.
1. சங்கரன் - சுகம் கொடுப்பவன்.

மாதிரமெவையுநோக்கான்வளநகர்நோக்கான்வந்த
காதலர்தம்மைநோக்கான்கடற்பெருஞ்சேனைநோக்கான்
தாதவிழ்கூந்தன்மாதர்தனித்தனிநோக்கத்தானப்
பூதலமென்னுநங்கைதன்னையேநோக்கிப்புக்கான். (௩)

நாளொத்தநளினமன்னமுகத்தியர்நயனமெல்லாம்
வாளொத்தமைந்தர்வார்த்தைதயிராகவன்வாளியொத்த
கோளொத்தசிறைவைத்தாண்டகொற்றவற்கற்றைநாடன்
தாளொத்ததுணைமென்கொங்கைநோக்கங்குத்தொடர்கிலாமை. ()

மந்திரச்சுற்றத்தாரும்வானுதல்சுற்றத்தாரும்
தந்திரச்சுற்றத்தாருந்தன்கிளைச்சுற்றத்தாரும்
எந்திரப்பொறியினிற்பயாவருமின்றித்தானோர்
சிந்துரக்களிறுகூடம்புக்கெனக்கோயில்சேர்ந்தான். (௫)

ஆண்டொருசெம்பொற்பீடத்திருந்துதன்வருத்தமாறி
நீண்டயாநிலைப்பனுகிக்கஞ்சுகியயனின்றானை
ஈண்டுநந்தூதர்தம்மையிவ்வழித்தருதியென்றான்
பூண்டதோர்பணியின்வல்லைநால்வரைக்கொண்டுபுக்கான். (௬)

மனகதிவாயுவேகன்மருத்தன்மாமேகனென்றிவ்
வினையறிதொழிலர்முன்னுவாயிலர்விரவிமுறை
நினைவதன்முன்னநீர்போய்நெடுந்திசையெட்டுநீந்தி
கனைகழலரக்கர்தானைகொணருதிர்கடிதினென்றான். (௭)

எழ்பெருங்கடலுஞ்சூழ்ந்தவேழ்பெருந்தீவுமெண்ணில்
பாழியம்பொருப்புங்கீழ்பாலடுத்தபாதாளத்துள்ளும்
ஆழியங்கிரியின்மேலுமரக்கரானவரையெல்லாம்
தாழ்விலிர்கொணர்திரென்றானவரதுதலைமேற்கொண்டார். (௮)

மூவகையுலகுளோருமுறையினின்றேவல்செய்வார்
பாவகமின்னதென்றுதெரிகிலர்பதைத்துவிம்மித்
தூவகலாதவைவாயெஃகுறத்தொளைக்கையானை
சேவகமமைந்ததென்னச்செறிமலரமளிசேர்ந்தான். (௯)

பண்ணிறைபவளச்செவ்வாய்ப்பைந்தொடிச்சீதையென்னும்
பெண்ணிறைகொண்டநெஞ்சினுணிறைகொண்டபின்னர்
கண்ணிறைகோடல்செய்யான்கையறுகவலைசுற்ற
உண்ணிறைமானந்தன்னையுமிழ்ந்தெரியுயிர்ப்பதானான். (௧௦)

வானகுமண்ணுமெல்லாநகுநெடுவயிரத்தோளான்
நானகுபகைஞரெல்லாநகுவரென்றதற்குநாணுன்
வேனகுநெடுங்கட்செவ்வாய் மெல்லியன்மிதிலைவந்த
சானகிநகுவளென்றேநாணத்தாற்சாம்புகின்றான். (கக)

ஆங்கவன்றன்முதாதையாகியமுப்பின்யாக்கை
வாங்கியவரிவிலன்னமாலியவானென்றோதும்
பூங்கழலரக்கன்வந்துபொலங்கழலிலங்கைவேந்தைத்
தாங்கியவமளிமாடோர் தவிசுடைப்பீடஞ்சார்ந்தான். (கஉ)

இருந்தவனிலங்கைவேந்தனியற்கையையெய்தநோக்கி
பொருந்தவந்துற்றபோரிற்றோற்றனன்போலுமென்னு
வருந்திமனமுந்தோளும்வாடினைநாளும்வாடாப்
பெருந்தவமுடையவையவென்னுற்றபெற்றியென்றான். (கந)

கவையுறுநெஞ்சன்காந்திக்கனல்கின்றகண்ணன்பத்துச்
சிவையின்வாயென்னச்செந்தீயுயிர்ப்புறச்சிவந்தமூக்கன்
நவையறுபாகையன்றியமுதினைநக்கினாலும்
சுவையறப்புலர்ந்தநாவானினையனசொல்லலுற்றான். (கச)

சங்கம்வந்துற்றகொற்றத்தாபதர் தம்மோடெம்மோ
டங்கம்வந்துற்றதாகவமரர்வந்துற்றதாற்றார்
கங்கம்வந்துற்றசெய்யகளத்துநங்குலத்துக்கொவ்வாப்
பங்கம்வந்துற்றதன்றிப்பழியும்வந்துற்றதென்றான். (கரு)

முளையமைதிங்கள்சூடுமுக்கணான்முதல்வனாகக்
கிளையமைபுவனமூன்றும்வந்துடன்கிடைத்தவேனும்
வளையமைவரிவில்வாளிமெய்யுறவழங்குமாயின்
இளையவன்றனக்குமாற்றாதென்பெருஞ்சேனைநம்ப. (கசு)

எறித்தபோரரக்கராவியெண்ணிலாவெள்ளமெஞ்சப்
பறித்தபோதென்னையந்தப்பரிபவமுதுகிற்பற்றப்
பொறித்தபோதன்னனதக்கூனிகூன்போகவுண்டை
செறித்தபோதோத்ததன்றிச்சினவுண்மைதெரிந்ததில்லை. (கஎ)

மலையுறப்பெரியராயவாளெயிற்றரக்கர்தானை
நிலையுறச்செறிந்தவெள்ளநூற்றிரண்டெனினுநேரே
குலையுறக்குளித்தவாளிகுதிரையைக்களிற்றையாளின்
தலையறப்பட்டதல்லாலுடல்களிற்றங்கிற்றுண்டோ. (கஅ)

---

11. சானகி - சனகன்மகள் சீதை.

போயபினவன் கைவாளியுலகெலாம்புகுவதல்லால்
ஓயுமென்றுரைக்கலாமோவூழிசென்றுலூழித்
தீயையுந்தீக்குஞ்செல்லுந்திசையையுந்தீக்குஞ்சொல்லும்
வாயையுந்தீக்குமுன்னின்மனத்தையுந்தீக்குமன்றே. (௧௯)

மேருவையுருவுமென்றால்விண்கடந்தேகுமென்றால்
பாரினைப்பிளக்குமென்றாற்கடல்களைப்பருகுமென்றால்
ஆருமேயவற்றினாற்றலாற்றுமேலநந்தகோடி
மேருவும்விண்ணுமண்ணுங்கடல்களும்வேண்டுமன்றே. (௨௦)

வரிசிலைநாணிற்கோத்துவாங்கினன்விடுதலொன்றும்
தெரிகிலதமர்தனாற்றல்யாரவன்செய்கைதேர்வார்
பொருசினத்தரக்கராவிபோகியபோகவென்று
கருதியவுலகமெல்லாஞ்சரங்களாய்க்காட்டுமன்றே. (௨௧)

நல்லியற்கவிஞர்நாவிற்பொருள்குறித்தமர்ந்தநாமச்
சொல்லெனச்செய்யுட்கொண்ட தொடையெனத்தொடையைநீக்கி
எல்லையில்செல்வந்தீராவிசையெனப்பழுதிலாத
பல்லலங்காரப்பண்பேகாகுத்தன்பகழிமாதோ. (௨௨)

இந்திரன்குலிசவேலுமீசன்கையிலைமூன்றென்னு
மந்திரவயிலுமாயோன்வளையெஃகின்வரவுங்கண்டேன்
அந்தரநீளிதம்மாதாபதனம்புக்காற்றா
நொந்தனர்யானலாதாராரவைநோக்ககிற்பார். (௨௩)

பேயிருங்கணங்களோடுசுடுகளத்துறையும்பெற்றி
ஏயவன்றோள்களெட்டுமிந்திரனிரண்டுதோளும்
மாயிருஞாலமுற்றும்வயிற்றிடைவைத்தமாயன்
ஆயிரந்தோளுமன்னான்விரலொன்றினாற்றலாற்றா. (௨௪)

சீர்த்தவீரியராயுள்ளார்செங்கண்மாலெனினும்யானக்
கார்த்தவீரியனைநேர்வாருளரெனக்கருதலாற்றேன்
பார்த்தபோதவனுமற்றத்தாபதன்றம்பிபாதத்
தார்த்ததோர்துகளுக்கொவ்வானாரவற்காற்றகிற்பார். (௨௫)

முப்புரமொருங்கச்சுட்டமூரிவெஞ்சிலையும்வீரன்
அற்புதவில்லுக்கையவம்பெனக்கொளலுமாகா
ஒப்புவேறுரைக்கலாவதொருபொருளில்லைவேதம்
தப்பினபோதுமன்னான்றனுவுமிழ்சரங்கடப்பா. (௨௬)

---

24. சுடுகளம் - சர்வசங்கார மயானம்.

உற்பத்தியயனையொக்குமோடும்போதரியேயொக்கும்
கற்பத்தினரனையொக்கும்பகைஞரைக்கலந்தகாலைச்
சிற்பத்தினம்மாற்பேசச்சிறியவோவென்னைத்தீராத்
தற்பத்தைத்துடைத்தவென்றாற்பிறிதொருசான்றுமுண்டோ. ()

குடக்கதோகுணக்கதேயோகோணத்தின்பாலதேயோ
தடத்தபேருலகத்தேயோவிசும்பதோவெங்குந்தானோ
வடக்கதோதெற்கதோவென்றுணர்ந்திலென்மனிசன்வல்லில்
இடத்ததோவலத்ததோவென்றுணர்ந்திலேன்யானுமின்னும். ()

ஏற்றமொன்றில்லையென்பதேழைமைப்பாலதன்றே
ஆற்றல்சால்கலுழனேதானாற்றுமேயமரினாற்றல்
காற்றையேமேற்கொண்டானோகனலையேகடாவினானோ
கூற்றையேயூர்கின்றானோகுரங்கின்மேற்கொண்டுநின்றான். (உகூ)

போயினித்தெரிவதென்னைபொறையினாலுலகம்போலும்
வேயெனத்தகையதோளியிராகவன்மேனிநோக்கித்
தீயெனக்கொடியவீரச்சேவகச்செய்கைகண்டால்
நாயெனத்தகுதுமன்றேகாமனுநாமுமெல்லாம். (௩௦)

வாசவன்மாயன்மற்றைமலருளோன்மழுவாளங்கை
ஈசனென்றினையதன்மையிளிவருமிவராலன்றி
நாசம்வந்துற்றபோதுநல்லதோர்பகையைப்பெற்றேன்
பூசல்வண்டுறையுந்தாராயிதுவிங்குப்புகுந்ததென்றான். (௩க)

முன்னுரைத்தேனைவாளாமுனிந்தனைமுனியாவும்பி
இன்னுரைப்பொருளுங்கேளாயேதுவுண்டெனினுமோராய்
நின்னுரைக்குரைவேறுண்டோநெருப்புரைத்தாலுநீண்ட
மின்னுரைத்தாலுமொவ்வாவிளங்கொளியிலங்கல்வேலாய். (௩உ)

உளைவனவெனினுமெய்ம்மையுற்றவர்முற்றுமோர்ந்தார்
விளைவனசொன்னபோதுங்கொள்கிலைவிடுதிகண்டாய்
கிளைதருசுற்றம்வெற்றிகேண்மைநங்கல்விசெல்வம்
களைவருதானையோடுகழிவதுகாண்டியென்றான். (௩௩)

ஆயவனுரைத்தலோடுமப்புறத்திருந்தானன்ற
மாயைகள்பலவும்வல்லமகோதரன்கடிதின்வந்து

---

27. தற்பம் - அகங்காரம்.

31. நாசம்வந்துற்றபோது - எனக்கழிவுவந்தகாலத்து.

தீயெழநோக்கியென்னிச்சிறுமைநீசெப்பிற்றென்னா
ஓயுறுசிந்தையானுக்குறாதபேருறுதிசொன்னான். (௩௪)

நன்றியீதென்றுகொண்டநயத்தினைநயந்துவேறு
வென்றியேயாகமற்றோர்தோற்றுயிர்விடுதலாக
ஒன்றிலேநிற்றல்போலாமுத்தமர்க்குரியதொல்கிப்
பின்றுமேலவனுக்கன்றோபழியொடுநரகம்பின்னை. (௩௫)

திரிபுரமெரியவாங்கோர்தனிச்சரந்துரந்தசெல்வன்
ஒருவனிப்புவனமூன்றுமோரடியொடுக்கிக்கொண்டோன்
பொருதுனக்குடைந்துபோனார்மானுடர்பொருதபோர்க்கு
வெருவுதிபோலுமானக்கயிலையைவெருவல்கண்டாய். (௩௬)

வென்றவர்தோற்பர்தோற்றோர்வெல்குவரெவர்க்குமேலாய்
நின்றவர்தாழ்வர்தாழ்ந்தோருயர்குவர்நெறியுமஃதே
என்றனரறிஞரன்றேயாற்றலுக்கெல்லையுண்டோ
புன்றவரிருவர்போரைப்புகழ்தியோபுகழ்க்குமேலோய். (௩௭)

தேவியைவிடுதியாயிற்றீருமுன்றிமையன்றேல்
ஆவியைவிடுதலன்றியல்லதொன்றாவதுண்டோ
தாவரும்பெருமையம்மாநீயினித்தாழ்ந்ததென்னே
காவலவிடுதியின்றிக்கையறுகவலைநோய்தின். (௩௮)

இனியிறைதாழ்த்தியாயினிலங்கையும்யாமுமெல்லாம்
கனியுடைமரங்களாகக்கவிக்குலங்கடக்குங்காண்டி
பனியுடைவேலைச்சின்னீர்பருகினனிரவியென்னத்
துனியுழந்தயர்வதென்னேதுறத்தியாற்றுன்பமென்றான். (௩௯)

முன்னுனக்கிறைவரானமூவருந்தோற்றார்தேவர்
பின்னுனக்கேவல்செய்யவுலகொருமூன்றும்பெற்றாய்
புன்னுனைப்பணிநீரன்னமனிசரைப்பொருளென்றுன்னி
என்னுனக்கிளையகும்பகருணனையிகழ்ந்ததெந்தாய். (௪௦)

ஆங்கவன்றன்னைக்கூவியேவுதியென்னினைய
ஓங்கலேபோல்வான்மேனிகாணவேயொளிப்பரன்றே
தாங்குவார்செருமுன்னென்னிற்றாபதருயிரைத்தானே
வாங்குமென்றினையசொன்னானவனதுமனத்துக்கொண்டான். (௪௧)

---

37. புன்றவர் - குறைந்ததவத்தினையுடையவர்.

39. யாமுமெல்லாம் - நம்மனைவரையும்.

பெறுதியேயெவையுஞ்சொல்லிப்பேரறிவாளசீரிற்
றறிதியேயென்பால்வைத்தவன்பினுக்கவதியுண்டோ
உறுதியேசொன்னுயென்னுவுள்ளமும்வேறுபட்டான்
இறுதியேயியைவதானுலிடையொன்ருற்றடையுண்டாமோ. (சஉ)

நன்றிதுகருமமென்னுநம்பியைநணுகவோடிச்
சென்றிவட்டருதிரென்றுனென்றலுநால்வர்சென்றுர்
தென்றிசைக்கிழவன்றூதர்தேடினர்திரிவரென்னக்
குன்றினுமுயர்ந்ததோளான்கொற்றமாக்கோயில்புக்கார். (சங)

கிங்கரர்நால்வர்சென்றக்கிரியனுன்கிடந்தகோயில்
மங்குறேருப்வாயில்சார்ந்துமன்னனீயுணர்தியென்னுத்
தங்கையினெழுவினுலேதலைசெவிதாக்கிப்பின்னும்
வெங்கணுர்துயில்கின்றுனைவெகுளியாலினையசொன்னுர். (சச)

வேறு.

உறங்குகின்றகும்பகன்னவுங்கண்மாயவாழ்வெலாம்
இறங்குகின்றதின்றுகாணெழுந்திராயெழுந்திராய்
கறங்குபோலவிற்பிடித்தகாலதூதர்கையிலே
உறங்குவாயுறங்குவாயினிக்கிடந்துறங்குவாய். (சரு)

என்றுமீறிலாவரக்கரின்பமாயவாழ்வெலாம்
சென்றுதீயநும்முனேனென்றெரிந்துதீமைதேடினுன்
இன்றிறத்தறிண்ணமாகவின்னுமுன்னுறக்கமே
அன்றலைத்தசெங்கையாலலைத்தலைத்துணர்த்தினுர். (சசு)

என்றுசொல்லவன்னவன்னெழுந்திராமைகண்டுபோய்
மன்றறங்குமாலைமார்பவன்றுயில்லெழுப்பலம்
அன்றுகொள்கைகேண்மினென்றுமாவோடாளியேவினுன்
ஒன்றின்மேலோராயிரம்முழுக்கிவிட்டெழுப்புவீர். (சஎ)

அனையதானையன்றுசெல்லவாண்டுநின்றுபேர்ந்திலன்
இனையசேனைமீண்டதென்றிராவணற்கியம்பலும்
வினையம்வல்லநீங்களுங்கடானையோடுசென்மினென்
றினையமல்லராயிரரைரயேவிநின்றியம்பினுன். (சஅ)

வேறு.

சென்றனர்பத்துநூற்றுச்சீரியவீரரோடி
மன்றலங்தொங்கலான்றன்மனந்தனின்வருத்தமாற

42. இறுதியேயியைவதானுல் - முடிவுகாலம்பொருந்துமானுல்.

இன்றிவன்முடிக்குமென்றுவெண்ணினரெண்ணிமீண்டக்
குன்றெனவுயர்ந்ததேர்ளான்கொற்றமாக்கோயில்புக்கார். (௪௯)

திண்டிறல்வீரர்வாயிற்றிறத்தலுஞ்சுவாதவாதம்
மண்டுறவீரரெல்லாம்வருவதுபோவதாகிக்
கொண்டுறுதடக்கைபற்றிக்குலமுடைவலியினாலே
கண்டுயிலெழுப்பவெண்ணிக்கடிதொருவாயில்புக்கார். (௫௰)

இங்கிவன்றன்னையாமின்றெழுப்பலாம்வகையேதென்று
துங்கபேழ்வாயுமூக்குங்கண்டுமெய்துணுக்கமுற்றார்
அங்கைகடண்டவஞ்சியாழ்செவியதனினூடு
சங்கொடுதாரைசின்னஞ்சமைவுறச்சாற்றலுற்றார். (௫௧)

கோடிகறண்டுகூடங்குந்தம்வல்லோர்கள்கூடித்
தாடைகள்சந்துமார்புதலையெனுமவையிற்றாக்கி
வாடியகையராகிமன்னவற்குரைப்பப்பின்னும்
நீடியபரிகளெல்லாநிரப்பிடும்விரைவிடென்றான். (௫௨)

கட்டுறுகவனமாவோராயிரங்கடிதின்வந்து
மட்டறவுறங்குவான்றன்மார்பிடைமாலைமான
விட்டறநடத்தியோட்டிவிரைவுளசாரிவந்தார்
தட்டுறுகுறங்குபோலத்தடந்துயில்கொளவதானான். (௫௩)

கொய்மலர்தொங்கலான்றன்குரைகழல்வணங்கியைய
உய்யலாம்வகைகளென்றிங்கெழுப்பலாம்வகையேசெய்தும்
கையெலாம்வலியுமோய்ந்தகவனமாக்காலுமோய்ந்த
செய்யலாம்வகைவேறுண்டோசெப்புதிதெரியவென்றார். (௫௪)

வேறு.

இடைபேராவிளையானையிணையாழிமணிநெடுந்தேர்
படைபேராவரும்போதும்பதையாதவுடம்பானை
மடைபேராச்சூலத்தான்மழுவாட்கொண்டெறிந்தாலும்
புடைபேராத்துயிலானைத்துயிலெழுப்பிக்கொணர்கென்றான். (௫௫)

என்றலுமேயடிவணங்கியீரைஞ்ஞூறிராக்கதர்கள்
வன்றொழிலாற்றுயில்கின்றமன்னவன்றன்மாடணுகி
நின்றிரண்டுகதுப்புமுறநெடுமுசலங்கொண்டடிப்பப்
பொன்றினவனெழுந்தாற்போற்புடைபெயர்ந்தங்கெழுந்திருந்தான்.

53. தட்டு குறங்குபோல - உறக்கம்வருதற்கு தொடையைத்தட்டுவது போல். குறங்கு - தொடை.

வேறு.

விண்ணினையிடறுமென்மைவிசும்பினைநிறைக்குமேனி
கண்ணெனுமவையிரண்டுங்கடல்களிற்பெரியவாகும்
எண்ணினும்பெரியனானவிலங்கையர்வேந்தன்பின்னோன்
மண்ணினையளந்துநின்றமாலெனவளர்ந்துநின்றான். (ருஎ)

மூவகையுலகுமுட்கமுரட்டிசைப்பனைக்கையானை
தாவருந்திசையினின்றுசலித்திடக்கதிருமுட்கப்
பூவுளான்புணரிமேலான்பொருப்பினான்முதல்வராய
யாவருந்துணுக்குற்றேங்கவெளிதினினெழுந்தான்வீரன். (ருஅ)

வேறு.

உறக்கமவ்வழிநீங்கியுணர்த்தரும்
வறைக்கமைந்தனவூனொடுவாக்கிய
நறைக்குடங்கள்பெருன்கடைநக்குவான்
இறக்கநின்றமுகத்தினையெய்துவான். (ருகூ)

ஆறுநூறுசகடத்தடிசிலும்
நூறுநூறுகுடங்களுநுங்கினான்
ஏறுகின்றபசியையெழுப்பினான்
சீறுகின்றமுகத்திருசெங்கணான். (சூ0)

எருமையேற்றையோரீராறுநூற்றையும்
அருமையின்றியேதின்றிறையாறினான்
பெருமையேற்றதுகோடுமென்றேபிறங்
குருமையேற்றைப்பிசைந்தெறியூதுவான். (சூக)

இருந்தபோதுமிராவணனின்றெனத்
தெரிந்தமேனியன்றிண்கடலின்றிரை
நெரிந்ததன்னபுருவத்துநெற்றியான்
சொரிந்தசோரிதன்வாய்வரத்தூங்குவான். (சூஉ)

உதிரவாரியோடூனொடெலும்புதோல்
உதிரவாரிநுகர்வதோருணினான்
கதிரவாள்வயிரப்பனைக்கையினான்
கதிரவாள்வயிரக்கழற்காலினான். (சூ௩)

(இ-ள்.) உதிரவாரியோடு - உதிரப்பெருக்கத்தையும், ஊனொடு - ஊனையும், எலும்புதோல் - எலும்புந்தோலும், உதிர - சிந்து

59. நறைக்குடங்கள் - கட்குடங்கள்.

மாறு, வாரி - ஒருங்கெடுத்து, நுகர்வது - உண்ணுதலாகிய, ஓரு ணினுன் - ஒருவகையூணுடையான், கதிர - நெற்கதிரின்வடிவின தாயுள்ள, வாள் - வாளையும், வயிரம் - தண்டத்தையுந் தாங்குகி ன்ற, பனைக்கையினுன்-பனையையொத்தகையை யுடையான், கதிர- சந்திரனுடைய, வாள் - கிரணங்கள்போலுங் கிரணங்களமைந்த, வயிரம் - வயிரமணிகளழுத்திய, கழற்காலினுன் - வீரக்கழலணிந் தபாதமுடையான். எ-று.

ஒடுவிரண்டும் எண்ணுப்பொருள். கதிர என்னுமிரண்டனுள் முன்னையது பெயரெச்சக்குறிப்பு; பின்னையது ஆறனுருபேற்ற பெ யர். கதிரிரண்டும் - ஆகுபெயர். புகழ்பொருளுக்கியையக் கதிரெ ன்பதற்குச் சந்திரனென்று பொருள் கூறலாயிற்று. பனை மெய்யு ருவங்களையும், வாள் - உருவத்தையும் பற்றிவந்தவுவமை. (கூங)

இரும்பசிக்குமருந்தெனவெஃகினே
டிரும்பசிக்குமருந்துமெயிற்றினுன்
வருங்களிற்றினைத்தின்றனன்மாலரு
அருங்களிற்றிரிகின்றவோராசையான். (கூச)

(இ-ள்.) இரும்பசிக்கு - மிக்கபசிநோய்க்கு, மருந்தென-ஆற் றுமருந்தென்று, எஃகினேடிரும்பு - தன்பக்கலுள்ள எழுப்படைக ளையும் இருப்புப்படைகளையும், அருந்தும் - மென்றுண்ணும், அசி க்கும். இவைவலியிலவென்று அவமதித்துச்சிரிக்கும், எயிற்றினு ன் - பற்களையுடையான், வருங்களிற்றினை - தன்பாற்செல்லுகின் ற யானைகளை, தின்றனன் - தின்று, மாலரு - பசிமயக்கம் நீங்கா மல், அருங்களில் - அருமையாகிய கள்ளில், திரிகின்றது - இடை விடாது செல்லுகின்றதாகிய, ஓராசையான் - ஒப்பற்ற ஆசையை யுடையான். எ-று.

எண்ணெடுநீட்டல், அவ்வெண்ணிடைச்சொல்லை இரும்பென் பதனேடுங்கூட்டுக. எஃகு - இரும்பு, ஆகுபெயர். அருவென்பத னீறுதொகுத்தல். எனவெனெச்சம் அருந்துமென்னும் வினையொ டுமுடிதலின் அதனை அசிக்குமென்பதன்முன் கூட்டப்பட்டது, கா ரியப்பொருளவாய்நின்ற அருந்தும் அசிக்குமென்னும் பெயரெச்ச மிரண்டடுக்கி எயிறென்னுங்கருவிப்பெயரோடு முடிந்தன. வருங்க ளிற்றினைத் தின்றனனெனவே புடைபெயரா நிலைமைவாய் நிற்ற லிற் றிசைக்களிறுகள் இவனு லுண்ணப்படாமலுய்ந்தன வென்ப தும், உறங்குதலிலன்றி உலாவலின்மிக்க வேட்டகையிலனென்பதுங்

குறிப்பெச்சம். மருமென்பது இடவழுவமைதி. "அவற்றுள், தரு சொல்வருசொலாயிரு கிளவியுந் தன்மை முன்னிலை யாயீரிடத்த, என்பதோதாததாகலின், மது அரக்கர்க்குச் சிறந்ததோர் பானமாக லின் அருங்களென்றார். (௯௪)

சூலமேகந்திருத்தியதோளினன்
சூலமேகந்திருத்தியதோற்றத்தான்
காலன்மேனிமர்மத்தன்கழற்பொரு
காலன்மேனிமிர்செம்மயிர்க்கற்றையான். (௯௫)

(இ-ள்.) சூலமே - சூலமொன்றையே, கந்து - கழுத்தடியில், இருத்திய - தங்கப்பிடித்த, தோளினன் - கையையுடையான், சூல - சூல்கொண்ட, மேகம் - கார்மேகத்தை, திருத்திய - திருத்தச்செய்த, தோற்றத்தான் - காட்சியையுடையான். காலன் - காலனுடைய, மேனிமர்மத்தன் - உருவத்தையும் மார்பையுமுடையன், கழல் - வீரகண்டை, பொரு - தாக்குண்டொலிக்கின்ற, காலன் - காலையுடையான், மேனிமிர் - (தலையில்) மேலோங்கிய, செம்மயிர்க்கற்றையான் - மயிர்த்தொகுதியையுடையான். எ-று.

ஆலமுண்டவனுற்றரப்பட்டுச் சூருளோர்காலமுண்ட வெற்றியதாகலிற் படைபலவற்றுள்ளு மிஃதொன்றுமே மிகுதியும் பயிறலுடையானென்பார் சூலமேகந்திருத்திய தோளினன் என்றார். ஏ - பிரிநிலைக்கண்வந்தது. சூலமேகந்திருத்திய தோற்றத்தானென்பது பெயர்பொருட்டற் குறிப்பேற்றவணி. (௯௫)

எயிறலைத்தகரதலத்திந்திரன்
எயிறலைத்தகரதலத்தெற்றினன்
அயிறலைத்தொடரங்கையன்சிங்கவூன்
அயிறலைத்தொடரங்ககல்வாயினன். (௯௬)

(இ-ள்.) எயிறலைத்த - சினங்கொண்டு பற்களைமென்றெதிர்த்த, கரதலத்து - திண்ணியகரத்தையுடைய, இந்திரன் - இந்திரனை, எயிறலை - அண்டப்பித்திகையின்கண், தகர - வலிசிதையும்படி, தலத்து - பூலோகத்தில், எற்றினன் - எறிந்தான், அயில்-முத்தலையயிலையும், தலை - சிறப்பாகிய, தொடர்பாசத்தையும்பற்றிய, அங்கையன் - அகங்கையுடையான். ஊன் - (தொழிலாளர்கொண்டுவந்த) தசை, சிங்க - குறைந்தால், அயிறலை - உண்ணலை, தொடர் - மேலுந்தொடர்ந்து, அங்கு - உண்ணவிருந்தவிடத்தே, அகல்வாயினன் - வாயையங் காந்திருப்பவன். எ-று.

எயிறலை தகரதலத்தென்பவற்றில் றகர தகரம் முறையே தொகுத்தல் அயில்தொடரென்பன ஆகுபெயர். தொடரென்னு முதனிலை தொடர்ந்தென வினையெச்சப்பொருள் தந்தது. மற்றை யோரால் தாங்கப்படாத திண்மையாகிய வச்சிரத்தைத் தாங்கும் வன்மை சான்றகையை யுடையனென்பார் வாளாகரதலத் திந்திர னென்றார் இவனதானையும் படையையும் பலமுறைகூறியது. உண வின்தொழிலையும் சாதுக்களை நலிதலையுமே மிகுதியும்விநோதமாக வேட்டானென்பது தோன்றற்கு. சிங்கவூன் என்பதற்கு. சிங்கத் தின் தூனெனினும்பொருந்தும். (௬௬)

உடர்கிடந்துழியும்பர்க்குமுற்றுயிர்
குடர்கிடந்தடங்காநெடுங்கோளினான்
கடர்கிடந்ததுநின்றதன்மேற்கதழ்
படர்கடுங்கனல்போன்மயிர்ப்பங்கியான். (௬௭)

திக்கடங்கலும்வென்றவன்சீறிட
மிக்கடங்கலில்வெங்கதிரங்கிகள்
புக்கடங்கியமேருப்புழையெனத்
தொக்கடங்கித்துயிறருகண்ணினான். (௬௮)

காம்புறங்குங்கனவரைக்கைம்மலைத்
தூம்புறங்குமுகத்தினதுய்த்துடல்
ஓம்புறும்முழையென்றுயர்மூக்கினான்
பாம்புறங்கும்படர்செவிப்பாழியான். (௬௯)

கூயினன்னும்முனென்றவர்கூறலும்
போயினன்னகர்பொம்மென்றிரைத்தெழ
வாயில்வல்லைநுழைந்துமதிதொடும்
கோயிலெய்தினன்குன்றனகொள்கையான். (௭௦)

நிலைகிடந்தநெடுமதிட்கோபுரத்
தலைகிடந்தவிலங்கையரண்ணலைக்
கொலைகிடந்தவேற்கும்பகருணனோர்
மலைகிடந்ததுபோலவணங்கினான். (௭௧)

வன்றுணைப்பெருந்தம்பிவணங்கலும்
தன்றிரண்டதோளாரத்தழுவினான்

67. பங்கி - பந்து, வரிசை.

நின்றகுன்றென்றநீணெடுங்காலொடும்
சென்றகுன்றைத்தழீஇயன்னசெய்கையான். (எ௨)

உடனிருத்தியுதிரத்தொடொண்ணறைக்
குடனிரைத்தவையூட்டிததசைகொளீஇக்
கடனுரைத்துகில்சுற்றிக்கதிர்க்குழாம்
புடைநிரைத்தொளிர்பல்கலன்பூட்டினான். (எ௩)

பேரவிட்டபெருவலியிந்திரன்
ஊரவிட்டகளிற்றெருடுமோடுநாள்
சோரவிட்டசுடர்மணியோடைடை
வீரப்பட்டமெனநுதல்வீக்கினான். (எ௪)

மெய்யெலாமிளிர்மின்வெயில்வீசிடத்
தொய்யில்வாசத்துவர்துதைந்தாடிய
கையினைகமெனக்கடலாமெனத்
தெய்வநாறுசெஞ்சாந்தமுஞ்சேர்த்தினான். (எ௫)

விடமெழுந்ததுபோனெடுவிண்ணினைத்
தொடவுயர்ந்தவன்மார்பிடைச்சுற்றினான்
இடபமுந்துமெரிபுரைநான்குதோட்
கடவுளீந்தகவசமுங்கட்டினான். (எ௬)

அன்னகாலையிலாயத்தம்யாவையும்
என்னகாரணத்தாலென்றியம்பினான்
மின்னினன்னபுருவமும்விண்ணினைத்
துன்னுதோளுமிடந்துடியாநின்றான். (எஎ)

வானரப்பெருந்தானையர்மானுடர்
கோனகர்ப்புறஞ்சுற்றினர்கொற்றமும்
ஆனையுற்றனர்நீயவரின்னுயிர்
போனகத்தொழின்முற்றதிபோயென்றான். (எஅ)

வேறு.

ஆனதோவெஞ்சமமலகில்கற்புடைச்
சானகிதுயரினந்தவிர்ந்ததில்லையோ
வானமும்வையமும்வளர்ந்தவான்புகழ்
போனதோபுகுந்ததோபொன்றுங்காலமே. (எ௯)

79. அலகில் - அளவில்லாத.

கிட்டியதோசெருக்கிளர்பொற்சீதையைச்
சுட்டியதோமுனஞ்சொன்னசொற்களால்
திட்டியின்விடமன்னகற்பின்செல்வியை
விட்டிலையோவிதுவிதியின்வண்ணமே. (அ௰)

கல்லலாமுலகினைவரம்புகட்டவும்
சொல்லலாம்பெருவலியிராமன்றோள்களை
வெல்லலாமென்பதுஞ்சீதைமேனியைப்
புல்லலாமென்பதுபோலுமாலைய. (அக)

புலத்தியன்வழிமுதல்வந்தபொய்யிறு
குலத்தியல்பழிந்ததுகொற்றமுற்றுமோ
வலத்தியலழிவதற்கேதுமையறு
நிலத்தியனீரியலென்னுநீரதால். (அஉ)

கொடுத்தனையிந்திரற்குலகுங்கொற்றமும்
கெடுத்தனைநின்பெருங்கிளையுநின்னையும்
படுத்தனைபலவகையமரர்தங்களை
விடுத்தனைவேறினிவீடுமில்லையால். (அ௩)

அறமுனக்கஞ்சியின்றொளித்ததாலதன்
திறமுனமுழத்தலின்வலியுஞ்செல்வமும்
நிறமுனக்களித்ததங்கதனைநீக்கிநீ
இறமுனங்கியாருனையெடுத்துநாட்டுவார். (அ௪)

தஞ்சமுந்தருமமுந்தகவுமேயவர்
நெஞ்சமுங்கருமமுமுரையுமேநெடு
வஞ்சமும்பாவமும்பொய்யும்வல்லநாம்
உஞ்சுமோவதற்கொருகுறையுண்டாகுமோ. (அ௫)

என்றுகொண்டினையனவிளம்பியானுனக்
கொன்றுளதுணர்த்துவதுணர்ந்துகோடியேல்
நன்றதுநாயகநயக்கிலாயெனின்
பொன்றினையாகவேகோடிபோக்கிலாய். (அ௬)

காலினிற்கருங்கடல்கடந்தகாற்றது
போலவன்குரங்குளசீதைபோகிலள்
வாலியையுரங்கிழித்தேதகவல்லன
கோலுளயாமுளேங்குறையுண்டாகுமோ. (அ௭)

---

82. நிலத்தியல் நீரியல் - திருக்குறள்.

தையலைவிட்டவன்சரணந்தாழ்ந்துநின்
மையறுதம்பியோடளவளாவுதல்
உய்திறமன்றெனின்னுளதுவேறுமோர்
செய்திறமுண்டதுதெளிந்துகோடியால். (௮௮)

பந்தியிற்பந்தியிற்படையைவிட்டவை
சிந்துதல்கண்டுநீயிருந்துதேம்புதல்
மந்திரமன்றுநம்வலியெலாமுடன்
உந்துதல்கருமமென்றுணரக்கூறினான். (௮௯)

உறுவதுதெரியவன்றுன்னைக்கூயது
சிறுதொழின்மனிசரைக்கோறிசென்றெனக்
கறிவுடையமைச்சனீயல்லையஞ்சினை
வெறிவிதுன்வீரமென்றிவைவிளம்பினான். (௯0)

மறங்கிளர்செருவினுக்குரிமைமாண்டனை
பிறங்கியதசையொடுநறவும்பெற்றனை
இறங்கியகண்முகிழ்த்திரவுமெல்லியும்
உறங்குதிபோயெனவுளையக்கூறினான். (௯௧)

மானுடரிருவரைவணங்கிமற்றுமக்
கூனுடைக்குரங்கையுங்கும்பிட்டுய்தொழில்
ஊனுடையும்பிக்குமுனக்குமேகடன்
யானதுமுடிக்கிலேனெழுதிபோதியால். (௯௨)

தருகவென்றேர்படைசாற்றென்கூற்றையும்
வருகவென்வானமுமண்ணுமற்றவும்
இருகைவன்சிறுவரோடொன்றியென்னொடும்
பொருகைவெம்போரெனப்போதன்மேயினான். (௯௩)

அன்னதுகண்டவன்றம்பியாயவன்
பொன்னடிவணங்கிநீபொருத்தியாலென
வன்னெடுஞ்சூலத்தைவலத்துவாங்கினான்
இன்னுமொன்றுரையுளதென்னக்கூறினான். (௯௪)

வென்றிவண்வருதெனென்றுரைக்கிலேன்விதி
நின்றதுபிடர்பிடித்துந்தநின்றது
பொன்றுவென்பொன்றினாற்பொலன்கொடோளியை
நன்றெனநாயகவிடுதிநன்றரோ. (௯௫)

---

91. மறம் - கருணை இல்லாமை.

இந்திரன்பகைஞனுமிராமன்றம்பிகை
மந்திரவலியினன்மடிதல்வாய்மையால்
தந்திரங்காற்றுறுசாம்பல்பின்னரும்
மந்திரமுணர்ந்துனக்குறுவதாற்றுவாய். (கூசு)

என்னைவென்றுளரெனினிலங்கைகாவல
உன்னைவென்றுயருதலுண்மையாதலால்
பின்னைநின்றெண்ணுதல்பிழையப்பெய்வளை
தன்னைநன்களிப்பதுதவத்தின்பாலதே. (கூஎ)

இற்றைநாள்வரைமுதல்யான்முன்செய்தன
குற்றமுமுளவெனிற்பொறுத்திகொற்றவ
அற்றதான்முகத்தினில்விழித்தலாரிய
பெற்றனென்விடையெனப்பெயர்ந்துபோயினான். (கூஅ)

அவ்வழியிராவணனனைத்துநாட்டமும்
செவ்வழிநீரொடுங்குருதிதேக்கினன்
எவ்வழியோர்களுமிரங்கியேங்கினர்
இவ்வழியவனும்போய்வாயிலெய்தினன். (கூகூ)

இரும்படைகடிப்பெடுத்தெற்றியேகுக
பெரும்படையிளவலோடென்றபேச்சினால்
வரும்படைவந்ததுவானுளோர்கடம்
சுரும்படைமலர்முடிதூளிதூர்க்கவே. (க00)

தேர்க்கொடியானையின்பதாகைசேணுறு
தார்க்கொடியென்றிவைதகைந்துவீங்குவ
பார்க்கொடுந்தூளிபோய்த்துறக்கம்பண்புற
ஆர்ப்பதுதுடைப்பதுபோன்றவாடுவ. (க0க)

எண்ணுறுபடைக்கலமிழுகவெற்றிட
நண்ணுறுபொறிகளும்படைக்குநாயகர்
கண்ணுறுபொறிகளுங்கதுவக்கண்ணகல்
விண்ணுறுமழையெலாங்கரிந்துவீழ்ந்தவால். (க0உ)

தேர்செலக்கரிசெலநெருக்கிச்செம்முகக்
கார்செலத்தேர்செலப்புரவிக்கால்செலத்
தார்செலக்கடைசெலச்சென்றதானையும்
பார்செலற்கரிதெனவிசும்பிற்பாய்ந்ததால். (க0ங)

---

100. சுரும்பு - வண்டு. 101. பதாகை - கொடி.

ஆயிரங்கோளரியாளியாயிரம்
ஆயிரமதகரிபூதமாயிரம்
மாயிருஞாலத்தைச்சுமப்பவாங்குவ
தேயிருஞ்சுடர்மணித்தேரொன்றேறினன். (க0ச)

தோமரஞ்சக்கரஞ்சூலங்கோன்மழு
நாமவேலுலக்கைவாளுஞ்சிறண்டெழு
வாமவில்வலயங்கற்பரிசைமற்றுள
சேமவெம்படையெலாஞ்சுமந்துசென்றவால். (க0ரு)

நறையுடைத்தசும்பொடுநறையின்வெந்தவூன்
குறைவினற்சகடமோராயிரங்கொடு
பிறையுடையெயிற்றவன்பின்புசென்றனர்
முறைமுறைகைக்கொடுமுடுகிநீட்டுவார். (க0சு)

ஒன்றலப்பலருதவுமூனறை
பின்றரும்பிலனிடைப்பெய்யுமாறுபோல்
வன்றிறலிருகரம்வழங்கமாந்தியே
சென்றனன்யாவருந்திடுக்கமெய்தவே. (க0எ)

கணந்தருகுரங்கொடுகழிவதன்றிது
நிணந்தருநெடுந்தடிக்குலகுநேருமோ
பிணந்தலைப்பட்டதுபெயர்வதெங்கினி
உணர்ந்ததுகூற்றமென்றும்பரோடினர். (க0அ)

பாந்தளினெடுந்தலைவழுவிப்பாரொடும்
வேந்தனவிளங்கியமேருமால்வரை
போந்ததுபோற்பொலந்தேரிற்பொங்கிய
ஏந்தலையெந்தெழிலிராமனோக்கினன். (க0கூ)

வீணையென்றுணரினதன்றுவிண்டொடும்
சேணுயர்கொடியதுவயவெஞ்சீயமாக்
காணினுங்காவின்மேலரியகாட்சியன்
பூணொளிமார்பினன்யாவன்போலுமால். (கக0)

தோளொடுதோள்செலத்தொடர்ந்துநோக்குறின்
நாள்பலகழியுமாதடுவணின்றதோர்
தாளுடைமலைகொலாஞ்சமரம்வேட்டதோர்
ஆளெனவுணர்கிலேனார்கொலாமிவன். (ககக)

அரக்கனவ்வுருவொழித் தரியின்சேனையை
வெருக்கொளத்தோன்றுவான்கொண்டவேடமோ
தெரிக்கிலேனிவ்வுருத்தெரியும்வண்ணநீ
பொருக்கெனவிடணபுகறியாலென்றான். (ககஉ)

வேறு.

ஆரியனனையகூறவடியிணையிறைஞ்சியைய
பேரியவிலங்கைவேந்தன்பின்னவனெனக்குமுன்னோன்
காரியல்காலனன்னகழற்கும்பகருணனென்னும்
கூரியசூலத்தானென்றவனிலைகூறலுற்றான். (ககங)

தவனுணங்கியரும்வேதத்தலைவருமுணருந்தன்மைச்
சிவனுணர்ந்தலரின்மேலைத்திசைமுகனுணருந்தேவன்
அவனுணர்ந்தெழுந்தகாலத்தசுரர்கள்படுவரெல்லாம்
இவனுணர்ந்தெழுந்தகாலத்திமையவர்படுவரெந்தாய். (ககச)

வேறு.

ஆழியாயிவனருவான்
ஏழைவாழ்வுடையெம்முனோன்
தாழ்விலாவொருதம்பியோர்
ஊழிநாளுமுறங்குவான். (ககரு)

காலனாருயிர்காலனல்
காலின்மேனிமிர்காலினன்
மாலினார்கெடவாகையே
சூலமேகொடுசூடினன். (ககசு)

தாங்குகொம்பொருநான்குகால்
ஓங்கலொன்றினையும்பர்கோன்
வீங்குநெஞ்சன்விழுந்திலான்
தூங்கநின்றுசுழற்றினன். (ககஎ)

ஒழிந்ததீயொடுகாலையும்
பிழிந்துசாறுகொள்பெற்றியான்
அழிந்துமீதுகவாழிநீர்
இழிந்துகாலினினெற்றுவான். (ககஅ)

ஊனுயர்ந்தவுரத்தினன்
மேனிமிர்ந்தமிடுக்கினன்

113. ஆரியன் - மேலானவன்,

தானுயர்ந்ததவத்தினன்
வானுயர்ந்தவரத்தினன். (கககூ)

திறங்கொள்சாரிதிரிந்தநாள்
கறங்கலாதுகணக்கிலான்
இறங்குதாரவனின்றுகா
று றங்கலாலுலகுய்ந்ததால். (கஉ0)

சூலமுண்டதுசூருளோர்
காலமுண்டதுகைக்கொள்வான்
ஆலமுண்டவனூழிவாய்
ஞாலமுண்டவனல்கினன். (கஉக)

மின்னினொன்றியவிண்ணுளோர்
முன்னிலென்றமர்முற்றினர்
என்னினென்றுமவெண்ணிலா
வென்னிலன்றிவிழித்திலான். (கஉஉ)

தருமமன்றிதுதானிதால்
வருநமக்குயிர்மாய்வெனு
உருமில்வெய்யவனுக்குரை
இருமைமேலுமியம்பினன். (கஉங)

மறுத்ததம்முனைவாய்மையால்
ஒறுத்துமாவதுணர்த்தினன்
வெறுத்துமாய்வதுமெய்யெனு
இறுத்துநின்னெதிரெய்தினன். (கஉச)

நன்றிதன்றுநமக்கெனு
ஒன்றுநீதியுணர்த்தினன்
இன்றுகாலன்முனெய்தினன்
என்றுசொல்லியிறைஞ்சினன். (கஉரு)

வேறு.

என்றவனுரைத்தலோடுமிரவிசேயிவனையின்று
கொன்றொருபயனுமில்லைக்கூடுமேற்கூட்டிக்கொண்டு
நின்றதுபுரிதுமற்றிந்நிருதர்கோனிடருநீங்கும்
நன்றெனநினைத்தேனென்றானதனுநலனீதென்றான். (கஉகூ)

---

121. ஆழிவாழ்ஞாலமுண்டவனல்கினன் என்றும்பாடம்.

ஏகுதற்குரியார்யாரேயென்னனுமிலங்கைவேந்தன்
ஆகின்மற்றடியனேனென்றறிவினலவனையுள்ளம்
சேகறத்தெருட்டியீண்டுச்சேருமேற்சேர்ப்பலென்றான்
மேகமொப்பானுநன்றுபோகென்றுவிடையுமீநதான். (கஉஎ)

தந்திரக்கடலைநீந்தித்தன்பெரும்பலத்தைச்சார்ந்தான்
வெந்திறலவனுக்கையவீடணன்விரைவினுன்பால்
வந்தனனென்னச்சொன்னார்வரம்பிலாவுவகைகூரச்
சிந்தையாற்களிக்கின்றான்றன்செறிகழற்சென்னிசேர்த்தான். ()

முந்திவந்திறைஞ்சினானைமுகநதுயிர்மூழ்கப்புல்லி
உய்ந்தனையொருவன்போனாயெனமனமுவக்கின்றேனென்
சிந்தனைமுழுதுஞ்சிந்தத்தெளிவிலார்போலமீள
வந்ததென்றனியேயென்றான்மழையினீர்வழங்குகண்ணான். (கஉகூ)

அவயநீபெற்றவாறுமமரரும்பெறுதலாற்றா
உவயலோகத்தினுள்ளசிறப்புங்கேட்டுவந்தேனுள்ளம்
கவிஞரினறிவுமிக்காய்காலன்வாய்க்களிக்கின்றேம்பால்
நவையிலைவந்ததென்னீயமுதுண்பாய்நஞ்சுண்பாயோ. (கௌ௦)

குலத்தியல்பழிந்ததேனுங்குமரமற்றுன்னைக்கொண்டே
புலத்தியன்மரபுமாயாப்புண்ணியம்பொருந்திற்றென்ன
வலத்தியன்றோனைநோக்கிமகிழ்கின்றேன்மன்னவாயை
உலத்தினைதிரியவந்தாயுளைகின்றதுள்ளமந்தோ. (கௌக)

அறப்பெறுந்துணைவர்தம்மையபயமென்றடைந்தவுன்னைத்
துறப்பதுதுணியார்தங்களாருயிர்துறந்தபோதும்
இறப்பெனும்பதத்தைவிட்டயிராமனென்பளவுமற்றிப்
பிறப்பெனும்புன்மையில்லைநினைந்தென்கொல்பெயர்ந்தவண்ணம். ()

அறமெனநின்றநம்பற்கடிமைபெற்றவன்றனாலே
மறமெனநின்றமூன்றுமருங்கறமாற்றிமற்றும்
திறமெனநின்றதீமையின்மையேதீர்ந்தசெல்வ
பிறர்மனைநோக்குவேமையுறவெனப்பெறுதிபோலாம். (கௌஙூ)

நீதியுந்தருமநின்றநிலைமையும்புலமைதானும்
ஆதியங்கடவுளாலேயருந்தவமாற்றிப்பெற்றாய்
வேதியர்தேவன்சொல்லால்விளிவிலாவாயுப்பெற்றாய்
சாதியின்புன்மையின்னுந்தவிர்ந்திலைபோலுந்தக்கோய். (கௌச)

128. பலம் - முன்வருசேனை.

ஏற்றியவில்லோன்யார்க்குமிறைபவனிராமனின்ருன்
மாற்றருந்தம்பிநின்ருன்மற்றையோர்முற்றுநின்ருர்
கூற்றமுநின்றடுதம்மைக்கொல்லியவிதியுநின்ற
தோற்றவெம்பக்கலைபடுவெவ்வலிதொலையவந்தாய். (கரு)

ஐயநீயயோத்திவேநதற்கடைக்கலமாகியாங்கே
உய்கிலையென்னின்மற்றிவ்வரக்கராயுள்ளோரெல்லாம்
மொய்கணைமாரியாலேயிறந்துபாழ்முழுதும்பட்டால்
கையினலெண்ணீர்நல்கிக்கடன்கழிப்பாரைக்காட்டாய். (கசு)

வருவதுமிலங்கையூர்க்கிப்புலையெலாமாண்டபின்னைத்
திருவுறைமார்பனேடும்புகுந்தபின்னென்றுந்தீராப்
பொருவருஞ்செல்வந்துய்க்கப்போதுதிவிரைவினென்ருன்
கருமமுண்டுரைப்பவென்ருனுரையெனக்கழறலுற்ருன். (கஎ)

இருளுறுசிந்தையேற்குமின்னருள்சுரர்தவீரன்
அருளுநீசேரின்ஞென்ரேவவயமுமளிக்குமன்றி
மருளுறுபிறவிநோய்க்குமருந்துமாமாறிச்செல்லும்
உருளுறுசகடவாழ்க்கையொழித்துவீடளிக்குமன்றே. (கஅ)

எனக்கவன்றந்தசெல்வத்திலங்கையுமரசுமெல்லாம்
நினக்குநான்றருவென்றந்துன்னேவலினெளிதினிற்பென்
உனக்கிதினுறுதியில்லையுத்தமவுன்பின்வநதேன்
மனக்குநோய்துடைத்துவந்தமரபையும்விளக்கிவாழ்தி. (கக)

போதலோவரிதுபோருற்புகலிடமில்லைவல்லே
சாதலோசரதநீதியறத்தொடுந்தழுவிநின்ருய்
ஆதலானுளதாமாவியநாயமேயுகுத்தென்னைய
வேதநூன்மரபுக்கேற்றவொழுக்கமேபிடித்தல்வேண்டும். (கசo)

தீயவைசெய்வாராகிற்சிறந்தவர்பிறந்தவுற்ருர்
தாயவைதந்தைமாறென்றுணர்வரோதருமம்பார்ப்பார்
நீயவையறிதியன்றேநினக்கியானுரைப்பதென்னே
தூயவைதுணிந்தபோதுபழிவநதுதொடர்வதுண்டோ. (கசக)

மக்களைக்குரவர்தம்மைமாதரைமற்றுளோரை
ஒக்குமின்னுயிரன்னுரையுதவிசெய்தாரோடொன்றத்
துக்கமித்தொடர்ச்சியென்றுதுறப்பராற்றுணிவுபூண்டோர்
மிக்கதுநலனேயாகிவீடுபேரளிக்குமன்றே. (கசஉ)

138. சகடம் - ஓருருளை.

தீவினையொருவன்செய்யவவனொடுந்தீங்கிலாதோர்
வீவினையுறுதலையமேன்மையோகீழ்மைதானே
ஆய்வினையுடையையன்றேயறத்தினைநோக்கியீன்ற
தாய்வினைசெய்யவன்றேகொன்றனனன்றவத்தின்மிக்கோன். (௧௪௩)

கண்ணுதறீமைசெய்யக்கமலத்துமுளைத்ததாதை
அண்ணறன்றலையினொன்றையறுக்கவன்றமைந்தானன்றே
புண்ணுறுபுலவுவேலோய்பழியொடும்பொருந்திப்பின்னை
எண்ணுறுநரகின்வீழ்வதறிஞறுமியற்றுவாரோ. (௧௪௪)

உடலிடைத்தோன்றிற்றொன்றையறுத்ததனுதிரமுற்றிச்
சுடருறச்சுட்டுவேறோர்மருந்தினாற்றுயரநீர்வர்
கடலிடைக்கோட்டந்தேய்த்துக்கழிவதுகருமமன்றால்
மடலுடையலங்கன்மார்பமதியுடையவர்க்குமன்றே. (௧௪௫)

காக்கலாநும்முன்றன்னையெனினதுகண்டதில்லை
ஆக்கலாமறத்தைவேறேயெனினுமாங்காவதில்லைத்
தீக்கலாங்கொண்டதேவர்சிரிக்கலாஞ்செருமுன்னவி
போக்கலாம்புகலாம்பின்னைநரகன்றிப்பொருந்திற்றுண்டோ. ()

மறங்கிளருலகைவென்றுவாழ்ந்திலைமண்ணின்மேலா
இறங்கினையின்றுகாறுமிளமையும்வறிதேபோக
உறங்கினையென்பதல்லாலுற்றதொன்றுளதோவென்னை
அறங்கெடவுயிரைநீத்துமேற்கொள்வானமைந்ததைய. (௧௪௭)

திருமறுமார்பனல்கவனந்தருந்தீர்ந்துசெல்வப்
பெருமையுமெய்திவாழியீறிலாநாளும்பெற்றாய்
ஒருமையேயரசுசெய்வாயுரிமையேயுளதேயொன்றும்
அருமையுமிவற்றினில்லைக்காலமுமடுத்ததைய. (௧௪௮)

தேவர்க்குந்தேவனல்கவிலங்கையிற்செல்வம்பெற்றால்
எவர்க்குஞ்சிறியையல்லையாருனைநலியுமீட்டார்
மூவர்க்குந்தலைவராயமூர்த்தியாரறத்தைமுற்றும்
காவற்குப்புகுந்துநின்றார்காகுத்தவேடங்காட்டி. (௧௪௯)

உன்மக்களாகியுள்ளாருன்னொடுமொருங்குதோன்றும்
என்மக்களாகியுள்ளாரிக்குடிக்கிறுதிசூழ்ந்தான்
தன்மக்களாகியுள்ளார்தலையொடுந்திரிவரன்றே
புன்மக்கட்டருமம்பூணப்புலமக்கட்டருமம்பூண்டால். (௧௫௦)

---

144. கண்ணுதல் - பல்லாயிர உருத்திரரில் ஒருவர்.

முனிவருங்கருணைவைப்பர்மூன்றுலகத்துந்தோன்றி
இனிவரும்பகையுமில்லையீறுண்டென்றிரங்கல்வேண்டா
துனிவருஞ்செறுநரானதேவரேதுணைவராவர்
கனிவருங்காலத்தையபூக்கொய்யக்கருதலாமோ. (க௫க)

வேதநாயகனேயுன்னைக்கருணையால்வேண்டிவிட்டான்
காதலாலென்மேல்வைத்தகருணையாற்கருமமீதே
ஆதலானவனைக்காணவறத்தொடுந்திறம்பிலைய
போதுவாய்நீயேயென்னாப்பொன்னடியிரண்டும்பூண்டான். (க௫௨)

தும்பியந்தொடையன்மாலைச்சுடர்முடியடியிற்றோயப்
பம்புபொற்கழல்கள்கையாற்பற்றினன்புலம்பும்பொற்றோள்
தம்பியையெடுத்துமார்பிற்றழுவித்தன்றறுகணூடு
வெம்புணீர்சொரியநின்றானினையனவிளம்பலுற்றான். (க௫௩)

நீர்க்கோலவாழ்வைநச்சிநெடிதுநாள்வளர்த்துப்பின்னைப்
போர்க்கோலஞ்செய்துவிட்டாற்குயிர்கொடாதங்குப்போகேன்
தார்க்கோலமேனிமைந்தவென்றுயர்தவிர்த்தியாயின்
கார்க்கோலமேனியானைக்கூடுதிகடிதினென்றான். (க௫௪)

மலரின்மேலிருந்தவள்ளல்வழுவிலாவரத்தினானீ
உலைவிலாத்தருமம்பூண்டாயுலகுளதனையுமுள்ளாய்
தலைவனீயுலகுக்கெல்லாமுனக்கதுதக்கதேயால்
புலையுறுமரணமெய்தலெனக்கதுபுகழதேயால். (க௫௫)

கருத்திலாவிறைவன்றீமைகருதினாலதனைக்காத்துத்
திருத்தலாமாகினன்றேதிருத்துதறீராதாயின்
பொருத்துறுபொருளுண்டாமோபொருதொழிற்குரியராகி
ஒருத்தரின்முன்னஞ்சாதலுண்டவர்க்குரியதம்மா. (க௫௬)

தும்பியந்தொடையல்வீரன்சுடுகணைதுரப்பச்சுற்றும்
வெம்புவெஞ்சேனையோடும்வேறுளகிளைஞரோடும்
உம்பரும்பிறரும்போற்றவொருவன்மூவுலகையாண்டு
தம்பியரின்றிமாண்டுகிடப்பனோதமையன்மண்மேல். (க௫௭)

அணையின்றியயர்ந்தவென்றியஞ்சினார்நகையதாகப்
பிணையொன்றுகண்ணாள்பங்கன்பெருங்கிரிநெருங்கப்போர்த்த
பணையொன்றுதிரடோள்காலபாசத்தாற்பிணிப்பக்கூசித்
துணையின்றிச்சேறனன்றேதோற்றுளகூற்றின்சூழல். (க௫௮)

---

157. தும்பி - வண்டுகளின் பேதம்.

செம்பிட்டுச்செய் தவிஞ்சித் திருநகர்ச்செல்வந்தேறி
வம்பிட்டதெரியலெம்முனுயிர்கொண்டபகையைவாழ்த்தி
அம்பிட்டுத்துன்னங்கொண்டபுண்ணுடைநெஞ்சோடைய
கும்பிட்டுவாழ்கிலேன்யான்கூற்றையுமாடல்கொண்டேன். (௧௫௯)

அனுமனைவாலிசேயையருக்கன்சேய்தன்னையம்பொற்
றனுவுடையவரைவேறோர்நீலனைச்சாம்பன்றன்னைக்
கனிதொடர்குரங்கின்காலக்கடலொடுங்கடந்துமற்றப்
பணிதுடைத்துவகஞ்சுற்றுங்கதிரெனத்திரிவன்பார்த்தி. (௧௬௦)

ஆலங்கண்டஞ்சியோடுமமரர்போலரிகளோடச்
சூலங்கொண்டோடிவேலைதொடர்வதோர்தோற்றந்தோன்ற
நீலங்கொள்கடலுமோடக்காலொடுநெருப்புமோடக்
காலங்கொளுலகுமோடக்கறங்கெனத்திரிவன்காண்டி. (௧௬௧)

செருவிடையஞ்சார்வந்தென்கண்ணெதிர்சேர்வராகில்
கருவரைகனகக்குன்றமென்னலாங்காட்சிதந்த
இருவருநிற்கமற்றிங்கியாருளரவரையெல்லாம்
ஒருவருந்திரியவொட்டேனுயிர்சுமந்துலகினென்றான். (௧௬௨)

தாட்கிற்பாயல்லையென்சொற்றலைக்கொளத்தக்கதென்று
கேட்கிற்பாயாயினெய்தியவரொடுங்கெழீஇயநட்பை
வேட்கிற்பாயினியோர்மாற்றம்விளம்பினல்விளைவுண்டென்று
சூட்கிற்பாயல்லையாருந்தொழுகிற்பாயென்னச்சொன்னான். (௧௬௩)

போதிநீயையபின்னைப்பொன்றினார்க்கெல்லாநின்ற
வேதியர்தேவன்றன்னைவேண்டினைபெற்றுமெய்ம்மை
ஆதிநூன்மரபினாலேகடன்மையுமாற்றியேற்ற
மாதுயர்நரகநண்ணாவண்ணமுங்காத்திமன்னோ. (௧௬௪)

ஆகுவதாகுங்காலத்தழிவதுமழிந்துசிந்திப்
போகுவதயலேநின்றுபோற்றினும்போதல்செய்யும்
சேகறவுணர்ந்தோர்நின்னின்யாருளர்வருத்தல்செய்யா
தேகுதியெம்மைநோக்கியிரங்கலையென்றுமுள்ளாய். (௧௬௫)

என்றவன்றன்னைமீட்டுமெடுத்துமார்பிறுகப்புல்லி
நின்றுநின்றிரங்கியேங்கிநிறைகணானெடிதுநோக்கி
இன்றொடுந்தவிர்ந்ததன்றேபுடன்பிறப்பென்பதென்றான்
வென்றிவெந்திறலினானுமவனடித்தலத்துவீழ்ந்தான். (௧௬௬)

---

158. பிணை - மான்.

வணங்கினான்வணங்கிக்கண்ணும்வதனமுமனமும்வாயும்
உணங்கினனுயிரோடியாக்கையொடுங்கினனுரைசெய்தின்னும்
பிணங்கினாலாவதில்லைப்பெயர்வதென்றெழுந்துபோந்தான்
குணங்களாலுயர்ந்தான்சேனைக்கடலெலாங்கரங்கள்கூப்ப. (கசுஎ)

கள்ளநீர்வாழ்க்கையேமைக்கைவிட்டுக்காலும்விட்டான்
பிள்ளைமைதுறந்தானென்றாப்பேதுறுநிலையனாகி
வெள்ளநீர்வேலைதன்னில்வீழ்ந்தநீர்வீழவெங்கண்
உள்ளநீரெல்லாமாறியுதிரநீரொழுகநின்றான். (கசுஅ)

எய்தியநிருதர்கோனுமிராமனையிறைஞ்சியெந்தாய்
உய்திறனுடையார்க்கன்றோவறநெறியொழுக்கமுண்மை
பெய்திறனெல்லாம்பெய்துபேசினேன்பெருந்தன்மை
செய்திலன்குலத்துமானந்தீர்ந்திலன்சிறிதுமென்றான். (கசுகூ)

கொய்திறச்சடையின்கற்றைகொந்தளக்கோலக்கொண்டல்
நொய்தினிற்றுளக்கியையநுன்னெதிர்நும்முன்னோனை
எய்துறத்துணித்துவீழ்த்தலினிதன்றென்றினையசொன்னேன்
செய்திறனினிவேறுண்டோவிதியையார்தீர்க்கிற்பார். (கஎ0)

எனவினிதுரைக்கும்வேலையிராக்கதர்சேனையென்னும்
கனைகடல்கவியின்றானைக்கழியினைவளைந்துகட்டி
முனைதொழின்முயன்றதாகமூவகையுலகுமுற்றத்
தனிநெடுந்தூளியார்த்ததார்த்திலபரவைதள்ளி. (கஎக)

ஓடினபுரவிவேழமோடினவுருளைத்திண்டேர்
ஓடினமலைகளோடவோடினவுதிரப்பேரா
றாடினகவந்தபந்தமாடினவலகைமேன்மேல்
ஆடினபதாகையோங்கியாடினபறவையம்மா. (கஎஉ)

மூளையுந்தசையுமென்புங்குருதியுநிணமுமூரி
வாளொடுங்குழம்புபட்டார்வாளெயிற்றரக்கர்மற்றவ்
வாளிருங்குருதிவெள்ளத்தழுந்தியகவிகளம்பொற்
றோளொடுமரனுங்கல்லுஞ்சூலமும்வேலுந்தாக்க. (கஎங)

எய்தனர்நிருதர்கல்லாலெறிந்தனகவிகளேந்திப்
பெய்தனவரக்கர்பற்றிப்பிசைந்தனராரிகள்பின்றா
வைதனயாதுதானர்வலித்தனர்வானரேசர்
செய்தனர்பிறவும்வெம்போர்திகைத்தனர்தேவரெல்லாம். (கஎச)

169. குலத்துமானம் - குலாபிமானம்.

நீரினையோட்டுங்காற்றுங்காற்றெதிர்நிற்குநீரும்
போரினையாகவென்றுபொருகின்றபூசனேக்கித்
தேரினையோட்டிவந்தான்றிருவினைத்தேவர்தங்கள்
ஊரினைநோக்காவண்ணமுதிரவேனேக்கியுள்ளான். (களரு)

ஊழியிற்பட்டகாலத்துலகங்கள்பட்டாலொப்பப்
பூழியிற்பட்டுச்செங்கீர்ப்புணரியிற்பட்டுப்பொங்கும்
சூழியிற்பட்டநெற்றிக்களிற்றொடுந்துரந்ததேரின்
ஆழியிற்பட்டவன்றேயவனியிற்பட்டவெல்லாம். (களசு)

குன்றுகொண்டெறியும்பாரிற்குதிக்கும்வெங்கூலம்பற்றி
ஒன்றுகொண்டொன்றையெற்று முதைக்கும்விட்டுழக்கும்வாரித்
தின்றுதின்றுமிழும்பற்றிச்சிரங்களைத்திருகுந்தேய்க்கும்
மென்றுமென்றிழிச்சும்விண்ணில்வீசுமேற்பிசைந்துபூசும். (களஎ)

வாரியினமுக்குங்கையான்மண்ணிடைத்தேய்க்கும்வாரி
நீரிடைக்குவிக்குமப்பானெருப்பிடைநிமிரவீசும்
தேரிடையெற்றுமெட்டுத்திசையினுஞ்செல்லச்சிந்தும்
தூரிடைமரத்துமோதுமலைகளிற்புடைக்குஞ்சுற்றி. (களஅ)

பறந்தனரமராஞ்சிப்பல்பெரும்பிணத்தின்பம்மல்
நிறைந்தனபறவையெல்லாநெடுந்திசைநான்குநான்கும்
மறைந்தனபெருமைதீர்ந்தமலைக்குலம்வற்றிவற்றிக்
குறைந்தனகுரக்குவெள்ளங்கொன்றனன்கூற்றுங்கூச. (களகூ)

மற்றினியொருவன்மேலோர்மரனெடுங்கறகள்வைக்கப்
பெற்றிலவாகுமன்றேயின்றொடும்பெறுவதாமே
முற்றனநீங்குமென்னுவரிகுலத்தலைவர்பற்றி
ஏற்றினவெறிந்தவெல்லாமிணைநெடுந்தோளினேற்றான். (கஅ0)

கல்லொடுமரனும்வேருங்கட்டையுங்காலிற்றீண்டும்
புல்லொடுபிறவுமெல்லாம்பொடிப்பொடியாகிப்போன
இல்லைமற்றெறியத்தக்கவெற்றுவசுற்றுமென்னப்
பல்லொடுபல்லுமென்றுபட்டனகுரங்குமுட்டி. (கஅக)

நன்றின்வீழ்குரீஇயென்னக்குழாங்கொளக்குதித்துக்கூடிச்
சென்றுமேலெழுந்துபற்றிக்கைத்தலந்தேயக்குத்தி
வன்திறலெயிற்றாற்கவ்விவள்ளுகிர்மடியக்கீளா
ஒன்றுமாகின்றதில்லையென்றிழிந்தோடிப்போன. (கஅஉ)

176. ஊழி - பிரளயகாலம்.

மூலமேமண்ணின்மூழ்கிக்கிடந்ததோர்பொருப்பைமுற்றும்
காலமேலெழுந்தகால்போற்கையினாற்கடிதின்வாங்கி
நீலன்மேனிமிர்ந்ததாங்கோர்நெருப்பெனத்திரித்துவிட்டான்
சூலமேகொண்டுநூறிமுறுவலுந்தோன்றநின்றான். (௧௮௫)

பெயர்ந்தொருசிகரந்தேடினச்சமாம்பிறர்க்குமென்னாப்
புயங்களேபடைகளாகத்தேரெதிரோடிப்புக்கான்
இயங்களுங்கடலுமேகத்திடிகளுமொழியயாரும்
பயங்கொளக்கரங்களோச்சிக்குத்தினானுதைத்தான்பல்கால். ()

கைத்தலஞ்சலித்துக்காலுங்குலைந்துதன்கருத்துமுற்றி
நெய்த்தலையழலிற்காந்தியெரிகின்றநீலன்றன்னை
வைத்துயிர்குடிப்பலென்றுவெற்றினனிடதுகையால்
மெய்த்தலைச்சூலமோச்சான்வெறுங்கையானென்றுவெள்கி. ()

ஆண்டதுநோக்கிநின்றவங்கதனுழிதன்னுள்
நீண்டதோர்நெடுந்திண்குன்றநிலமுதுகாற்றநீக்கி
மாண்டனனரக்கன்றம்பியென்றுலகேழும்வாழ்த்தத்
தூண்டினனதனையன்னொருதனித்தோளினேற்றான். (௧௮௬)

ஏற்றபோதனையகுன்றமெண்ணருந்துகளதாகி
வீற்றுவீற்றாகியோடிவிழுதலுங்கவியின்வெள்ளம்
ஊற்றமேதமக்கென்றெண்ணியுடைந்ததுகுமரனுற்ற
சீற்றமுந்தானுநின்றான்பெயர்ந்திலன்சென்றுபாதம். (௧௮௭)

இடைக்கையாலரக்கனுங்கோரெழுமுனைவயிரத்தண்டு
தடுக்கலாந்தரத்ததல்லாவலியது தருக்கின்வாங்கி
மடக்குவாயுயிரையென்னாவீசினனதனைமைந்தன்
தடக்கையாற்பிடித்துக்கொண்டான்வானவர்தன்னைவாழ்த்த. ()

பிடித்ததுசுழற்றிமற்றப்பெருவலியரக்கன்றன்னை
இடித்துருமேறுகுன்றத்தெரிமடுத்தியங்குமாபோல்
அடித்துயிர்குடிப்பனென்னாவனல்விழித்தார்த்துமண்டிக்
கொடித்தடந்தேரின்முன்னர்க்குதித்தெதிர்குறுகிநின்றான். ()

நின்றவன்றன்னையன்னானெருப்பெழநிமிரநோக்கிப்
பொன்றவந்தடைந்ததானைப்புரவலனொருவன்றானோ
அன்றயன்மகனோவெம்மூரனன்மடுத்தரக்கர்தம்மை
வென்றவன்றானோவாரோசொல்லுதிவிரைவினென்றான். (௧௯௦)

---

190. பொன்றுதல் - அழிதல்.

நும்முனைவாலிற்சுற்றினோன்றிசைநான்குந்தாவி
மும்முனைநெடுவேலண்ணன்முளரியஞ்சரணந்தாழ்ந்த
வெம்முனைவீரன்மைந்தனின்னையென்வாலின்வீக்கித்
தெம்முனையிராமன்பாதம்வணங்கிடச்செல்வெனென்றான். (௧௯௧)

உந்தையைமறைந்தோரம்பாலுயிருண்டவுதவியோற்குப்
பந்தனைபகையைச்செற்றுக்காட்டலையென்னிற்பாரோர்
நிந்தனைநின்னைச்செய்வர்நல்லதுநினைந்தாய்நேரே
வந்தனைபுரிவான்றேவீரராய்வசையிற்றீர்ந்தார். (௧௯௨)

இத்தலைவந்ததென்னையிராமன்பால்வாலினீர்த்து
வைத்தலைநுதலியன்றுவானவர்மார்பிற்றைத்த
முத்தலையயிலினுச்சிமுதுகுறமூரிவால்போல்
கைத்தலங்காலுந்தூங்கக்கிடத்தலைக்கருதியென்றான். (௧௯௩)

அற்றவனுரைத்தலோடுமனல்விழித்தசனிகுன்றத்
துற்றதுபோலுமென்னுமொலிபடவுலகமுட்கப்
பொற்றடந்தோளின்வீசிப்புடைத்தனன்பொறியிற்சிந்தி
இற்றதுநூறுகூறுயெழுமுனைவயிரத்தண்டு. (௧௯௪)

தண்டிறத்தடக்கையோச்சித்தழுவியதறுகணனைக்
கொண்டிறப்புறுவெனென்னாத்தலையுறக்குனிக்குங்காலைப்
புண்டிறப்புறவலாளன்கையினாற்புகைந்துகுத்த
மண்டிறப்பெய்தவீழ்ந்தான்மாருதியிமைப்பின்வந்தான். (௧௯௫)

மறித்தவனவனைத்தன்கைவயிரவாட்சூலமார்பில்
குறித்துறவெறியலுற்றகாலையிற்குன்றமொன்று
பறித்தவனெற்றிமுற்றப்பரப்பிடைப்பாகமுள்ளே
செறித்தெனச்சுரிக்கவீசித்தீர்த்தனைவாழ்த்தியார்த்தான். (௧௯௬)

தலையினிற்றைத்துவேறோர்தலையெனநின்றதன்ன
மலையினைக்கையின்வாங்கிமாருதிவயிரமார்பின்
உலையுறவெந்தபொன்செய்கம்மியர்கூடமொப்பக்
கொலையுறுபொறிகள்சிந்தவீசித்தோள்கொட்டியார்த்தான். (௧௯௭)

அவ்வழிவாலிசேயையரிகுலவீரரஞ்சார்
வவ்வினர்கொண்டுபோந்தார்மாருதிவானைமுற்றும்
கவ்வியதனையதாங்கோர்நெடுவரைகடிதின்வாங்கி
எவ்வமிலாற்றலானைநோக்கிநின்றினையசொன்னான். (௧௯௮)

---

194. அசனி - இடி.

எறிகுவனிதனைநின்மேலிமைப்புறுமளவிலாற்றல்
மறிகுவதன்றியல்லான்மாற்றிலையென்னின்வன்மை
அறிகுவரெவரும்பின்னையானுன்னோடமருஞ்செய்யேன்
பிறிகுவனுலகில்வல்லோய்பெரும்புகழ்பெறுதியென்றான். (௧௯௯)

மாற்றமஃதுரைப்பக்கேளாமலைமுழைதிறந்ததென்னக்
கூற்றுறழ்பகுவாய்விள்ளச்சிரித்துநீகொணர்ந்தகுன்றை
ஏற்றனனேற்றகாலத்திறையதற்கொற்கமெய்தின்
தோற்றனெனுனக்கென்வன்மைசுருங்குமென்றரக்கன்சொன்னான்.

மாருதிவல்லையாயினில்லடாமாட்டாயாகிற்
பேருதியுயிர்கொண்டென்றுபெருங்கையானெருங்கிவிட்ட
காருதிர்வயிரக்குன்றைக்காத்திலன்றோண்மேலேற்றான்
ஓருதிர்நூறுகூறாயுக்கதெவ்வுலகுமுட்க (௨௦௧)

இளக்கமொன்றின்றிநின்றவியற்கைபார்த்திவனதாற்றல்
அளக்குறற்பாலுமாகாகுலவரையமரினாற்றா
துளக்குறுநிலையானல்லன்சுந்தரத்தோளன்வாளி
பிளக்குமேற்பிளக்குமென்னாமாருதிபெயரப்போனான். (௨௦௨)

எழுபதுவெள்ளத்துள்ளாரிறந்தவரொழியயாரும்
முழுமுதன்மாள்வரின்றேயிவன்வலத்தமைந்தமுச்சூற்
கழுவினினென்றுவானோர்கலங்கினார்நடுங்கினாரால்
பொழுதினினுலகமூன்றுந்திரியுமென்றுள்ளம்பொங்கி. (௨௦௩)

தாக்கினார்தாக்கினார்தங்கைத்தலஞ்சலித்ததன்றி
நூக்கினாரில்லையாருநோவுசெய்தாருமில்லை
ஆக்கினான்களத்தினாங்கோர்குரங்கினதடியுமின்றிப்
போக்கினானாண்மையோடும்புதுக்கினான்புகழையம்மா. (௨௦௪)

சங்கத்தார்குரங்குசாயத்தாபதரென்னத்தக்கார்
இங்குற்றாரல்லரோதான்வேறுமோரிலங்கையுண்டோ
எங்குற்றாரெங்குற்றாரென்றெடுத்தழைத்திமையோரஞ்சத்
துங்கத்தோள்கொட்டியார்த்தான் கூற்றையுந்துணுக்கங் கொண்டா [ன்.

பறந்தலையதனின்வந்தபலபெருங்கவியின்பண்ணை
இறந்ததுகிடக்கநின்றதிரிதலின்யாருமின்றி

206. பறந்தலை - போர்க்களம்.

வறந்ததுசோரிபாயவளர்ந்தனமகரவேலை
குன்றந்தனவுவாவுற்றோதங்கிளர்ந்துமீக்கொண்டதென்ன. (௨௦௬)

வேறு.

குன்றுங்கற்களுமரங்களுங்குறைந்தனகுரங்கின்
வென்றியம்பெருஞ்சேனையோர்பாதியின்மேலும்
இன்றுதேய்ந்ததென்றுரைத்தலுமமரர்கண்டுவப்பச்
சென்றுதாக்கினனொருதனிச்சுமித்திரைச்சிங்கம். (௨௦௭)

நாணறிந்தனன்சிலையினையரக்கியர்நகுபொற்
பூணறிந்தனர்படியிடையிடிபொடித்தென்னச்
சேணறிந்தெழுதிசைசெவிடெறிந்தனவலகை
தூணறிந்தனகையெடுத்தாடினதுணங்கை. (௨௦௮)

இலக்குவன்கடிதேவியதிரைபெருதிரைப்பச்
சிலைக்கடுங்கணைநெடுங்கணஞ்சிறையுடன்செல்வ
உலைக்கொடுங்கனல்வெதும்பிடவாயெரிந்தோடிக்
குலக்கயங்களிற்குளித்தனகுடித்தனகுருதி. (௨௦௯)

அலைபடைத்தவாளரக்கரைசிலகழுத்தரிவ
சிலசிரத்தினைத்துணித்தவைதிசைகொண்டுசெல்வ
கொலைபடைத்தவெங்களத்திடைவிழாக்கொண்டுபோவ
தலைபடைத்தனபோன்றனவாநெடுஞ்சரங்கள். (௨௧௦)

உருப்பதங்கணையொப்பனசிலகணையோடைப்
பொருப்பதங்களையுருவிமற்றப்புறம்போவ
செருப்பதம்பெறுவரக்கர்தந்தலைபலசிந்திப்
பருப்பதங்கள்புக்கொளிப்பனமுழைபுகுபாம்பின். (௨௧௧)

மின்புகுந்தனபல்குழுவாமெனமிளிர்வ
பொன்புகுந்தொளிர்வடிம்பினகடுங்கணைபோவ
முன்புநின்றவர்முகத்திற்குங்கடைக்குழைமுதுகின்
பின்புநின்றவர்பிடர்க்குமிவ்விசையொக்கும்பிறழா. (௨௧௨)

போர்த்தபேரியின்கண்ணனகாளத்தின்பொகுட்ட
ஆர்த்தவாயனகையனவாளையின்கழுத்த
ஈர்த்ததேரனவிவுளியின்றலையனவெவர்க்கும்
பார்த்தநோக்கனகலந்தனவிலக்குவன்பகழி. (௨௧௩)

209. இலக்குவன் - இலக்ஷ்மணன்.

மருப்பிழந்தனகளிறெலாம்வால்செவியிழந்த
நெருப்புகுங்கண்களிழந்தனநெடுங்கரந்துணிந்த
செருப்புகுங்கடுங்காற்றுராஞ்சிந்தினசிகரப்
பொருப்புருண்டனவாமெனத்தலத்திடைப்புரண்ட. (உகச)

தீரந்தூரந்தொடைநெகிழ்த்தலிற்றிசையெங்குநிறைந்த
சரந்தலைத்தலைபடப்படமயங்கினசாய்ந்த
உரந்தலத்துறவுழைத்தலாற்பிழைத்ததொன்றில்லைக்
குரந்தலத்தினும்விசும்பினுமிதித்திலாக்குதிரை. (உகரு)

பல்லவப்படைபடப்படுபுரவியபல்கால்
வில்லுடைத்தலையாரொடுகூதரைவீழ்த்த
எல்லையுற்றவெங்குருதியினீர்ப்புண்டவல்லால்
செல்லகிற்றிலநின்றிலகொடிநெடுந்தேர்கள். (உகசு)

பேழையொத்தகல்வாயனபேய்க்கணமுகக்கும்
மூழையொத்தலகழுத்தறவீழ்ந்தனமுறைசால்
ஊழையொத்தனவோர்கணைதைத்தனவுதிரத்
தாழியொத்தவெங்குருதியின்மிதப்பனதலைகள். (உகஎ)

ஒட்டிநாயகன்வென்றிநாள்குறித்தொளிர்முளைகள்
அட்டிவைத்தனபாலிகைநிகர்த்தனவழிந்து
நட்டவாமெனவீழ்ந்தனதுடிகளினவைதீர்
வட்டவான்களில்வதிந்தனவருணசாமரைகள். (உகஅ)

எரிந்தவெங்கணைநெற்றியிற்படுதொறும்யானை
அரிந்தவங்குசத்தங்கையிற்கல்வியினமைவால்
திரிந்தவேகத்தபாரங்கடீர்ந்தனசெருவில்
புரந்தவானரத்தானையிற்புக்கனபுயலின். (உகக)

வேனிலானன்னவிலக்குவன்கடுங்கணைவிலக்க
மானவெள்ளையிற்றரக்கர்தம்படைக்கலம்வாரிப்
போனபோயினதிசைதொறும்பொறிக்குலம்பொடிப்ப
மீனெலாமுடன்விசும்பினின்றுதிர்ந்தெனவீழ்ந்த. (உஉ0)

காங்குடைந்தனதொடர்ந்துபோய்க்கொய்யுளைக்கடுமாக்
குரங்குடைந்தனவெரிநுறக்கொடிநெடுங்கொற்றத்
தரங்குடைந்தனவணிநெடுந்தேர்க்குலங்குடைந்த
அரங்குடைந்தனவயினெடுவாளிகளம்மா. (உஉக)

---

220. வேனிலான் - மன்மதன்.

தூரக்குமெய்புணர்விருவிலைகளையெனுஞ்சொல்லில்
காக்கும்வீரதைதீமையையெனுமிதுகண்டேம்
இரக்கநீங்கினரறத்தொடுந்திறம்பினரெனினும்
அரக்கராக்கையையரம்பையர்தழுவினர்விரும்பி. (உஉஉ)

மறக்கொடுந்தொழிலரக்கர்கண்மறுக்கிலாமழைபோல்
நிறக்கொடுங்கணைநெருப்பொடுநிகர்வனதிமிர
இறக்கமெய்தினர்யாவருமெய்தினரெனினத்
துறக்கமென்பதிற்பெரியதொன்றுளதெனச்சொல்லேம். (உஉ௩)

ஒருவரைக்கரமொருவரைச்சிரமற்றங்கொருவர்
குரைகழற்றுணைதோளிணைபிறமற்றுங்கொளலால்
விரவலர்ப்பெறுவறுமையவாயினவெவ்வே
றிரவுகற்றனபோன்றனவிலக்குவன்பகழி. (உஉ௪)

சிலவரைக்கரஞ்சிலவரைச்செவிசிலர்நாசி
சிலவரைக்கழல்சிலவரைக்கண்கொளுஞ்செயலால்
நிலவரைத்தருபொருள்வழிதண்டமிழ்நிரப்பும்
புலவர்சொற்றுறைபுரிந்தவும்போன்றனபுங்கம். (உஉ௫)

அறத்தினின்னுயிரனையவன்கணைபடவரக்கர்
இறத்துமிங்கிறைநிற்பினென்றிரியலின்மயங்கித்
திறத்திறம்படத்திசைதொறுந்திசைதொறுஞ்சிந்திப்
புறத்திலோடினரோடினகுருதியேபோல. (உஉ௬)

செருவின்மாண்டவர்பெருமைபுமிலக்குவன்செய்த
வரிவிலாண்மையுநோக்கியபுலத்தியன்மருமான்
திரிபுரஞ்செற்றதேவனுமிவனுமேசெருவின்
ஒருவிலாளரென்றுயிரக்காலெடுத்துரைத்தான். (உஉ௭)

படர்நெடுந்தடந்தட்டிடைத்திசைதொறும்பாகர்
கடவுகின்றதுகாற்றினுமனத்தினுங்கடிய
தடல்வயங்கொள்வெஞ்சீயநின்றூர்க்கின்றதம்பொன்
வடபெருங்கிரிபோல்வதேரோட்டினன்வந்தான். (உஉ௮)

தொளைகொள்வாணுகச்சுடர்நெடுந்தேர்மிசைத்தோன்றி
வளைகொள்வெள்ளெயிற்றரக்கன்வெஞ்செருத்தொழின்மலையக்

227. ஒருவிலாளர் - நீங்காதசமானமானோர்.
228. வடபெருங்கிரி - இமயமலை.

கிளைகொள்ளா திகலென்றெண்ணிமாருதிகிடைத்தான்
இளையவள்ளலேயேறுதியோதாண்மிசையென்றான். (உஉ௯)

ஏறினானிளங்கோளரியிமையவராசி
கூறினாரெடுத்தார்த்ததுவானரக்குழுவும்
நூறுபத்துடைப்பத்தியினேரிற்பரிபூண்ட
ஆறுதேரினுமகன்றதவ்வநுமன்றன்றடந்தோள். (உ௩0)

தன்னினேர்பிறர்தானலாதில்லவன்றோண்மேல்
அன்னுபேரொளியிலக்குவன்றோன்றியதோற்றம்
பொன்னின்மால்வரைவெள்ளிமால்வரைமிசைபொலிந்த
தென்னுமாறன்றிப்பிறிதெடுத்தியம்புவதியாதோ. (உ௩க)

ஆங்குவீரனோடமர்செய்வானமைந்தவாளரக்கன்
தாங்குபல்கணைப்புட்டிலுந்தகைபெறக்கட்டி
வீங்குதோள்வலிக்கேயதுவிசும்பில்வில்வெள்க
வாங்கினானெடுவடவரைபுரைவதோர்வரிவில். (உ௩உ)

இராமன்றம்பிநீயிராவணன்றம்பிநானிருவேம்
பொராநின்றேமிதுகாணியவந்தனர்புலவோர்
பராவுந்தொல்செருமுறைவலிக்குரியனபகர்ந்து
விராவுநல்லமர்விளைக்குதும்யாமெனவிளம்பா. (உ௩௩)

பெய்தவத்தினோர்பெண்கொடியெம்முழைப்பிறந்தாள்
செய்தகுற்றமொன்றில்லவளுசிவெஞ்சினத்தால்
கொய்தகொற்றவமற்றவள்கூந்தலொட்டீர்த்த
கைதலத்திடைக்கிடத்துவென்காக்குதியென்றான். (உ௩௪)

அல்லினாற்செய்தநிறத்தவனனையதுபகர
மல்லினாற்செய்ததோளினன்மாற்றங்கணும்பால்
வில்லினாற்சொல்வினல்லதுவெந்திறல்வெள்கச்
சொல்லினாற்சொலக்கற்றிலம்யாமெனச்சொன்னான். (உ௩௫)

விண்ணிரண்டுகூறுயதுவிளந்ததுவெற்பு
மண்ணிரண்டுறக்கிழிந்ததெதன்றிமையவர்மறுகக்
கண்ணிரண்டினுந்தீயுகக்கதிர்முகப்பகழி
எண்ணிரண்டினோடிரண்டொருதொடைதொடுத்தெய்தான். ()

கொம்புநாலுடைக்குலக்கரிகும்பத்திற்குளித்த
உம்பராற்றலையொதுக்கியவுருமெனச்செல்வ

232. விசும்பில்வில் - இந்திரவில்.

வெம்புவெஞ்சினத்திராவணற்கிளையவன்விட்ட
அம்புகான்கினூற்பத்தினோடெட்டையுமறுத்தான். (௨௩௭)

அறுத்தகாலையினரக்கனுமமரரைநெடுநாள்
ஒறுத்ததாயிரமுருவதுதிசைமுகனுதவப்
பொறுத்ததாங்கொருபுகர்முகக்கடுங்கணைப்புத்தேள்
இறுத்திமற்றிதுவல்லையேலென்றுகோத்தெய்தான். (௨௩௮)

புரிந்துநோக்கியதிசைதொறும்பகழியின்புயலால்
எரிந்துசெல்வதைநோக்கியவிராமனுக்கிளையான்
தெரிந்துமற்றதுதன்னையோர்தெய்வவெங்கணையால்
அரிந்துவீழ்த்தலுமாயிரவுருச்சரமற்ற. (௨௩௯)

ஆறிரண்டுவெங்கடுங்கணையனுமன்மேலழுத்தி
வேறுவெஞ்சரமிரண்டிளங்குமரன்மேலேற்றி
நூறுமைம்பதுமொருதொடைதொடுத்தொருநொடியில்
கூறுதிக்கையும்விசும்பையுமறைத்தனன்கொடியோன். (௨௪0)

மறைத்தவாளிகளெவற்றையுமவற்றினன்மாற்றித்
துறைத்தலந்தொறுந்தலந்தொறுநின்றுதேர்சுமக்கும்
பொறைக்கமைந்தவெங்கரிபரியாளிமாப்பூதம்
திறத்திறம்படத்துணித்தவன்றேரையுஞ்சிதைத்தான். (௨௪௧)

தேரழிந்ததுசெங்கதிர்ச்செல்வனைச்சூழ்ந்த
ஊரழிந்ததுபோற்றுறந்தூர்பவருலந்தார்
நீரழிந்திடாநெடுமறைக்குழாத்திடைநிமிர்ந்த
பாரவெஞ்சிலையழிந்தெனத்துமிந்ததப்பருவில். (௨௪௨)

ஊன்றுதேரொடுசிலையிலன்கடல்கிளர்ந்தொப்பான்
என்றுமற்றவனின்னுயிர்குடிப்பலென்றுலக
மூன்றும்வென்றமைக்கிடுகுறியென்னமுச்சிகைத்தாய்த்
தோன்றும்வெஞ்சுடர்ச்சூலவெங்கூற்றினைத்தொட்டான். (௨௪௩)

செய்தபோரினைநோக்கியித்தேரிடைச்சேர்ந்த
கொய்யுளைக்கடுங்கோளரிமுதலியகுழுவை
எய்துகொன்றனனோநெடுமந்திரமியம்பி
வைதுகொன்றனனோவெனவானவர்மயர்ந்தார். (௨௪௪)

இழியப்பாய்ந்தனனிருநிலம்பிளந்திருகூறாக்
கிழியப்பாய்புனல்கிளர்ந்தெனக்கிளர்சினத்தரக்கன்

---

243. மடல்கிளர்ந்தொப்பான் என்றும் பாடம்.

பழியப்பாலிவன்பதாதியென்றனுமன்றன்படர்தோள்
ஒழியப்பார்மிசையிழிந்துசென்றிளவலுமுற்றான். (௨௪௫)

உற்றகாலையினிராவணன்றம்பிமாடுதவ
இற்றதானையினிருமடியிகற்படையேவ
முற்றியன்னவைமுழங்குமுந்நீரெனமுடுகிச்
சுற்றியார்த்தனசுமித்திரைசிங்கத்தைத்தொடர. (௨௪௬)

இரிந்துவானவரிரியலின்மயங்கினரெவரும்
சொரிந்தவெம்படைதுணித்திடத்தடுப்பருந்தொழிலால்
பரிந்தவண்ணலும்பரிவிலனொருபுடைபடரப்
புரிந்தவன்னெடுஞ்சேனையங்கருங்கடல்புக்கான். (௨௪௭)

முருக்கினாண்மலர்முகைவிரிந்தாலன்னமுரட்கண்
அரக்கர்செம்மயிர்க்கருந்தலையடுக்கலினணைகள்
பெருக்கினாற்பெருங்கடலிடைப்பெய்துபெய்தெருவை
உருக்கினாலன்னகுருதிநீராறுகளோதுங்க. (௨௪௮)

கரியின்கைகளும்புரவியின்கால்களுங்காலிற்
றிரியுந்தேர்களின்சில்லியுமரக்கர்தஞ்சிரமும்
சொரியுஞ்சோரியுந்துறைதொறுந்துறைதொறுஞ்சுழிப்ப
நெரியும்பல்பிணப்பெருங்கரைகடந்திலநீத்தம். (௨௪௯)

கொற்றவாளெழுத்தண்டுவேல்கோன்மழுக்குலிசம்
மற்றும்வேறுளபடைக்கலமிலக்குவன்வாளி
சுற்றுமோடுவதொடர்ந்திடைதுணித்திடத்தொகையா
அற்றதுண்டங்கள்படப்படத்துணிந்தனவநந்தம். (௨௫௦)

குண்டலங்களுமோலியுமாரமுங்கோவை
தண்டைதோள்வளைகடகமென்றினையனதறுகட்
கண்டகண்டங்களொடுங்கணைதுரந்தனகதிர்சூழ்
மண்டலங்களைமாறுகொண்டிமைத்தனவாளி. (௨௫௧)

பரந்தவெண்குடைசாமரைநெடுங்கொடிபதாகை
சரந்தருஞ்சிலைகேடகம்பிச்சமொய்சரங்கள்
துரந்துசெல்வனகுருதிநீராறுகடோறும்
நிரந்தபேய்க்கணங்கரைதொறுங்குவித்தனநீந்தி. (௨௫௨)

ஈண்டுவெஞ்செருவினையனநிகழ்வுழியெவர்க்கும்
நீண்டவெள்ளெயிற்றரக்கன்மற்றொருதிசைநின்றான்

பூண்டவெஞ்செருவிரவிகான்முளையொடும்பொருதான்
காண்டகும்மெனவிமையவர்குழுக்கொண்டுகண்டார். (௨௫௩)

வேறு.

பொறிந்தெழுகண்ணினன்புகையும்வாயினன்
செறிந்தெழுகதிரவன்சிறுவன்சீறினான்
முறிந்தனவரக்கன்மாமுரட்டிண்டோளென
எறிந்தனன்விசும்பின்மாமலையொன்றேந்தியே. (௨௫௪)

அம்மலைநின்றுவந்தவனியெய்திய
செம்மலையனையவெங்களிறுஞ்சேனையின்
வெம்மலைவேழமும்பொருதவேறினி
எம்மலையுளவவற்கெடுக்கொணுதன. (௨௫௫)

இவ்வகைநெடுமலையிழிந்தமாசுணம்
கவ்வியநிருதர்தங்களிறுங்கட்டற
அவ்வகைமலையினையேற்றொராங்கையால்
வவ்வினனரக்கன்வாளவுணர்வாழ்ந்தினர். (௨௫௬)

ஏற்றொருகையினொலிதுகொனீயடா
ஆற்றியகுன்றமென்றளவிலாற்றலான்
நீற்றியனுணுகுறப்பிசைந்துநீங்கெனத்
தூற்றினனிமையவர்துணுக்கமெய்தினர். (௨௫௭)

செல்வனேர்நெடுங்கிரியினுந்தேர்ந்தென
எல்லவன்கான்முளையுணருமேல்வையில்
கொல்லெனவெறிநதனன்குறைவினேன்பினோர்
சொல்லெனபிழைப்பிலாச்சூலஞ்சோர்விலான். (௨௫௮)

பட்டனன்பட்டனனென்றுபார்த்தவர்
விட்டுலம்பிடநெடுவிசும்பிற்சேறலும்
எட்டினனதுபிடித்திறுத்துநீக்கினன்
ஒட்டுமோமாருதியறத்தையோம்புவான். (௨௫௯)

சித்திரவனமுலைச்சீதைசெவ்வியால்
முத்தமூர்மிதிலையூரறிவுமுற்றிய
பித்தன்வெஞ்சிலையினையறுத்தபேரொலி
ஒத்ததுசூலமன்றிற்றவோசையே. (௨௬௦)

---

254. பொறிந்தெழுகண் - நெருப்புப்பொறி கொட்டும்கண்.

நிருதனுமனையவனிலைமைநோக்கியே
கருதவுமியம்பவுமரிதுன்கைவலி
அரியனமுடிப்பதற்கனைத்துநாட்டினும்
ஒருதனியுளையிதற்குவமம்யாதென்றான். (உ௬க)

என்றெடும்பொருதியேலின்னும்யானமர்
சொன்னனபுரிவலென்றரக்கன்சொல்லலும்
முன்னினியெதிர்க்கிலேனென்றுமுற்றிய
பின்னிகல்பழுதெனப்பெயர்ந்துபோயினான். (உ௬உ)

அற்றதுகாலையினரக்கனுயுதம்
பெற்றிலன்பெயர்ந்தினையபெற்றியில்
பற்றினன்பாய்ந்தெதிர்பருதிகான்முளை
எற்றினன்குத்தினனெறியுங்கைகளால். (உ௬௩)

அரக்கனுநன்றுநின்னண்மையாயினும்
தருக்கினியின்றெசைமையுந்தாவென
நெருக்கினன்பற்றினனீங்கொணுவகை
உருக்கியசெம்பெனவுதிரக்கண்ணினான். (உ௬௪)

திரிந்தனர்சாரிகைதேவர்கண்டிலர்
புரிந்தனர்நெடுஞ்செருப்புகையும்போர்த்தெழ
எரிந்தனவுருமெலாமிருவர்வாய்களும்
சொரிந்தனகுருதிதாமிறையுஞ்சோர்ந்திலர். (உ௬௫)

உறுக்கினரொருவரையொருவருற்றிகல்
முறுக்கினர்முறைமுறையரக்கன்மொய்ம்பினால்
பொறுக்கிலாவகைநெடும்புயங்களாற்பிடித்
திறுக்கினனிவன்சிறிதுணர்வுமெஞ்சினான். (உ௬௬)

மண்டமரின்றெடுமடங்குமன்னிலாத்
தண்டலில்பெரும்படைசிந்துந்தக்கதோர்
எண்டருகருமமற்றிதனினில்லெனக்
கொண்டனன்போயினனிருதர்கோனகர். (உ௬௭)

ஊற்றினபரவையையூறுகொண்டெழச்
சிரற்றினபார்ப்பினிற்சிந்தைசிந்திட
விரற்றுறுகைத்தலத்தடித்துவெய்துயிர்த்
தாற்றினகவிக்குலமரக்கரார்த்தனர். (உ௬௮)

264. சமையும் - முடியும்.

நடுங்கினரமரருநாவும்வேர்த்துலர்ந்
தொடுங்கினர்வானரத்தலைவருண்முகிழ்த்
திடுங்கினகண்ணினனெரிந்தநெஞ்சினன்
அடங்கினனுமுயிர்ப்பென்னுமன்பினார். (க௬௯)

புழுங்கியவெஞ்சினத்தரக்கன்போகுவான்
அழுங்கலில்கோண்முகத்தரவமாயினான்
எழுங்கதிரிரவிதன்புதல்வனெண்ணுற
விழுங்கியமதியெனமெலிந்துதோன்றினான். (௨௭௦)

திக்குறவிளங்குவான்சிறுவன்றீயவன்
மைக்கருநிறத்திடைமறைந்ததன்னுரு
மிக்கதுங்குறைந்ததுமாகமேகத்துப்
புக்கதும்புறத்துமாமதியும்போன்றனன். (௨௭௧)

ஒருங்கமர்புரிகிலேனுன்றொடியானெனா
நெருங்கியவுரையினைநினைந்துநேர்கிலன்
கருங்கடல்கடந்தவக்காலன்காலன்வாழ்
பெருங்கரம்பிசைந்தவன்பின்புசென்றனன். (௨௭௨)

ஆயிரம்பெயரவனடியில்வீழ்ந்தனர்
நாயகரெமக்கினியாவர்நாட்டினில்
காய்கதிர்ச்சிறுவனைப்பிணித்தகையினன்
போயினனரக்கனென்றிசைத்தபூசலார். (௨௭௩)

தீயினுமுதிர்வுறச்சிவந்தகண்ணினான்
காய்கணைசிலையொடுங்கவர்ந்தகையினான்
ஏயெனுமளவினிலிலங்கைமாநகர்
வாயில்சென்றெய்தினான்மழையின்மேனியான். (௨௭௪)

உடைப்பெருந்துணைவனையுயிரிற்கொண்டுபோய்
கிடைப்பருங்கொடிநகரடையிற்கேடெனத்
தொடைப்பரும்பகழியின்மாரிதூர்த்துற
அடைப்பனென்றடைத்தனன்விசும்பினாறெலாம். (௨௭௫)

மாதிரமறைந்தனவயங்குவெய்யவன்
சோதியின்கிளர்நிலைதொடர்தலோவின

---

272. எமக்கினி என்றும் - பாடம்.
274. ஏயெனுமளவு - மாத்திரைப்போது.

யாதும்விண்படர்கிலவியங்குகார்மழை
மீதுநின்றகன்றனவிசும்புதூர்த்தலால். (உஎசு)

மனத்தினுங்கடியதேர்திசையின்வான்செல்வான்
இனக்கொடும்பகழியின்மதிலையெய்தினான்
நினைத்தனைநீக்குதலருமையின்றெனச்
சினக்கொடுந்திறலவன்றிரிந்துநோக்கினான். (உஎஎ)

கண்டனன்வதனம்வாய்கண்கைகாலெனப்
புண்டரீகத்தடம்பூத்துப்பொற்சிலை
மண்டலந்தொடர்ந்துமண்வயங்கவந்ததோர்
கொண்டலிற்பொலிதருகோலத்தான்றனை. (உஎஅ)

மடித்தவாய்கொழும்புகைவழங்கமாறிதழ்
துடித்தமார்புருவங்கள்சுறுக்கொண்டேறிடப்
பொடித்ததீநயனங்கள்பொறுக்கிலாமையால்
இடித்தவான்றெழிப்பினாலிடிந்தகுன்றெலாம். (உஎகூ)

மாக்கவந்தனும்வலிதொலைந்தவாலியாம்
பூக்கவர்ந்துண்ணியும்போலுமென்றனைத்
தாக்கவந்தனையிவன்றன்னையின்னுயிர்
காக்கவந்தனையெனக்கழறன்மேயினான். (உஅ0)

உம்பியைமுனிந்திலேனவனுக்கூர்தியாம்
தும்பியைமுனிந்திலேன்றொடர்ந்தவாலிதன்
தம்பியைமுனிந்திலேன்சமரந்தன்னில்யான்
அம்பியல்சிலையினைப்புகழன்றுதலான். (உஅக)

தேடினன்றிரிந்தனனின்னைத்திக்கிறந்
தோடியதுன்படையும்பியோர்க்கொரு
பாடுறநடந்தனனுமன்பாறினன்
ஈடுறுமிவனைக்கொண்டெளிதினெய்தினேன். (உஅஉ)

காக்கியவந்தனையென்னிற்கண்டவென்
பாக்கியந்தந்ததுநினனைப்பன்முறை
ஆக்கியசெருவெலாமாக்கியெம்முனைப்
போக்கவன்மனத்துறுகாதற்புன்கணோய். (உஅங)

எதிவெந்திறலினோயிமைப்பிலோரெதிர்
பேதுறுகுரங்கையான்பிணித்தகைப்பிணி

கோதைவெஞ்சிலையினாற்கோடிவீடெனிற்
சீதையும்பெயர்ந்தனள்சிறைநின்றுமென்றான். (உஅச)

என்றலுமுறுவலித்திராமன்யானுடை
இன்றுணையொருவனையெடுத்ததோளினைக்
குன்றினுமுயர்ந்தனகுறைக்கிலேனெனின்
பின்றினெனுனக்குவிற்பிடிக்கிலேனென்றான். (உஅரு)

மீட்டவன்கரங்களால்விலங்கலானையே
மூட்டறநீக்குவான்முயலும்வேலையில்
வாட்டலைபிடர்த்தலைவயங்கவாளிகள்
சேட்டகநெற்றியினிரண்டுசேர்த்தினான். (உஅசு)

சுற்றியகுருதியின்செக்கர்சூழ்ந்தெழ
நெற்றியினெடுங்கணையொளிரநின்றவன்
முற்றியகதிரவன்முளைக்குமுந்துவந்
துற்றெழுமருணனதுதயம்போன்றனன். (உஅஎ)

குன்றின்வீழருவிற்குதித்துக்கோத்திழி
புன்றலைக்குருதிநீர்முகத்தைப்போர்த்தலும்
இன்றுயிலெழுந்தனவுணர்ச்சியெய்தினான்
வன்றிறறோற்றிலான்மயக்கமெய்தினான். (உஅஅ)

நெற்றியினின்றொளிநெடிதினமம்பன
கொற்றவன்சரமெனக்குறிப்பினுன்னினான்
சுற்றுறநோக்கினன்றொழுதுநோக்கினான்
முற்றியபொருட்கெலாமுடிவுளான்றனை. (உஅகூ)

கண்டனனாயகன்றன்னைக்கண்ணுறாத்
தண்டலின்மானமுநாணுந்தாங்கினான்
விண்டவனாசியுஞ்செவியும்வேரொடும்
கொண்டனனெழுந்துபோய்த்தமரைக்கூடினான். (உகூ0)

வானரமார்த்தனமழையுமார்த்தன
தானரமகளிருந்தமருமார்த்தனர்
மீனறல்வேலையும்வெற்புமார்த்தன
வானவரோடுநின்றறமுமார்த்ததே. (உகூக)

---

290. தண்டலில் - நீங்காத.
284. கோடிவீடெனின் - விடுதலைக்கொள்ளுவாயாகின்.
288. வன்றிறறோற்றிலான் - வலியவெற்றியை இழக்காதகும்பகருணன்.

காந்திகலரக்கன்வெங்கரத்துணிங்கிய
வேந்தலையகமகிழ்ந்தெய்தநோக்கிய
வேந்தனுஞ்சானகியிலங்கைவெஞ்சிறை
போந்தனளாமெனப்பொருமனீங்கினான். (உ௬உ)

மத்தகம்பிளந்துமாடுருவவார்சிலை
வித்தகன்சரந்தொடமெலிவுதோன்றியச்
சித்திரம்பெறுதலிற்செவியுமூக்குங்கொண்
டத்திசைபோயினனல்லதொண்ணுமோ. (உ௬௩)

அக்கணத்தறிவுவந்தனுகவங்கைநின்
றுக்கனன்கவியரசென்னுமுண்மையும்
மிக்குயர்நாசியுஞ்செவியும்வேறிடம்
புக்கதுமுணர்ந்தனனுதிரப்போர்வையான். (உ௬௪)

தாதுராகத்தடங்குன்றந்தாரைசால்
கூதிர்காலெனடுமழைசொரியக்கோத்திழி
ஊதையோடருவிகளுமிழ்வதொத்தனன்
மீதுறுகுருதியாறொழுகுமேனியான். (உ௬௫)

எண்ணுடைத்தன்மையணிஃனயவெண்ணிலாப்
பெண்ணுடைத்தன்மையனுயபீடையால்
புண்ணுடைச்செவியொடுமூக்கும்பொன்றலால்
கண்ணுடைச்சுழிகளுங்குருதிகால்வன. (உ௬௬)

ஏசியுற்றெழும்விசும்பினரைப்பார்க்குந்தன்
நாசியைப்பார்க்குமுன்னடந்தநாளுடை
வாசியைப்பார்க்குமிம்மண்ணைப்பார்க்குமால்
சீசியுற்றதுவெனத்தீயுநெஞ்சினான். (உ௬௭)

என்முகங்காண்பதன்முன்னம்யானவன்
தன்முகங்காண்பதுசரதந்தானெனாப்
பொன்முகங்காண்பதோர்தோலும்போரிடை
வன்முகங்காண்பதோர்வாளும்வாங்கினான். (உ௬அ)

வீசினன்கேடகம்விசும்பின்மீனெலாம்
கூசினவமரருங்குடர்குழம்பினார்
காய்சினவரக்கனுங்கன்னற்போதவன்
நாசியுஞ்செவியும்வெங்குருதிநான்றதே. (உ௬௯)

ஆயிரம்பேய்சுமந்தளித்ததாங்கொரு
மாயிருங்கேடகமிடத்துவாங்கினான்
பேயிரண்டாயிரஞ்சுமந்துபேர்வதோர்
காரொளிவயிரவாள்பிடித்தகையினான். (௩00)

விதிர்த்தனன்வீசினன்விசும்பின்மீனெலாம்
உதிர்த்தனனுலகினையநந்தனுச்சியோ
டதிர்த்தனனார்த்தனனாயிரம்பெருங்
கதிர்த்தலஞ்சூழ்வடவரையின்காட்சியான். (௩0௧)

வீசினகேடகமுகத்துவீங்குகால்
கூசினகுரக்குவெங்குழுவைக்கொண்டெழுந்
தாசைகடோறும்விட்டெறியவார்த்தெழும்
ஓசையொண்கடலையுந்திடர்செய்தோடமால். (௩0௨)

போயினகேடகம்போகநோக்கினன்
ஆயிரம்பெயரவனறியுமுன்பவன்
பேயிரண்டாயிரம்பேணுங்கேடகம்
ஏயெனுமளவினினெய்தச்சென்றதால். (௩0௩)

தோலிடைத்துரக்கவுந்துகைக்கவுஞ்சுடர்
வேலுடைக்கூற்றினுற்றுணியவீசவும்
காலுடைக்கடலெனச்சிந்திக்கைகெட
வாலுடைநெடும்படையிரிந்துமாய்ந்ததால். (௩0௪)

ஏறுபட்டதுமிடையெதிர்ந்துளோரெலாம்
கூறுபட்டதுங்கொழுங்குருதிகோத்திழிந்
தாறுபட்டதுநிலமநந்தனுச்சியும்
சேறுபட்டதுமொருகணத்திற்றீர்ந்ததால். (௩0௫)

இடுக்கிலையெதிரினியிவனையிவ்வழித்
தடுக்கிலையாமெனிற்குரங்கின்றானையை
ஒடுக்கினையரக்கனையுயர்த்தியென்று
முடுக்கினனிராமனைச்சாம்பன்முன்பினான். (௩0௬)

அண்ணலுந்தானையினழிவுமாங்கவன்
திண்ணெடுங்கொற்றமும்வலியுஞ்சிந்தியா

---

302. ஆசைகள்தோறும் - திசைமுற்றும்.
306. முடுக்கினன் - முன்செல்லச்செய்தான்.

நண்ணினனடந்தெதிர்நமனையின்றிவன்
கண்ணிடைநிறுத்துவனென்னுங்கற்பினான். (௩௦௭)

ஆறினோடேழுகோலசனியேறென
ஈறிலாவிசையனவிராமனெய்தனன்
பாறுகுசிறையெனவிசும்பிற்பாறிட
நூறினான்வாளினாலுணங்குகல்வியான். (௩௦௮)

ஆடவர்க்கரசனுந்தொடரவவ்வழிக்
கோடையிற்கதிரெனக்கொடியகூர்ங்கணை
ஈடறத்துரந்தனனவையுமிற்றுகக்
கேடகப்புறத்தினாற்கிழியச்சிந்தினான். (௩௦௯)

சிறுத்ததோர்முறுவலுந்தெரியச்செங்கணான்
மறித்தொருவடிக்கணைதொடுக்கமற்றவன்
ஒறுத்தொளிர்வாளெனுமுரவுநாகத்தை
அறுத்ததுகலுழனினமாரார்க்கவே. (௩௧௦)

அற்றதுதடக்கைவாளற்றதில்லென
மற்றொருவயிரவாள்கடிதின்வாங்கினான்
முற்றினன்முற்றினனென்றுமுன்புவந்
துற்றனனாழித்தீயவியவூதுவான். (௩௧௧)

அந்நெடுவாளையுந்துணித்தவாண்டகை
பொன்னெடுங்கேடகம்புரட்டிப்போர்த்ததோர்
நன்னெடுங்கவசத்துநாமவெங்கணை
மின்னொடுநிகர்ப்பனபலவும்வீசினான். (௩௧௨)

அந்தரமன்னதுநிகழுமவ்வழி
இந்திரன்றமரொடுமிரியலெய்திடச்
சிந்துவுந்தன்னிலைகுலையச்சேணுற
வந்ததுதசமுகன்விடுத்தமாப்படை. (௩௧௩)

வில்வினையொருவனுமிவனைவீட்டுதற்
கொல்வினையிதுவெனக்கருதியூன்றினான்
வல்வினைதீயெனவந்தபோதொரு
நல்வினையொத்ததுநடந்ததானையே. (௩௧௪)

கோத்ததுபுடைதொறுங்குதிரைதேரொடாள்
பூத்திழிமதமலைமிடைந்தபோர்ப்படை

காத்ததுகருணைக்கண்டுமாயமாக்
கூத்தனும்வருகெனக்கடிதுகூவினான். (௩௧௫)

சூழிவெங்கடகரிபுரவிதூண்டுமால்
ஆழியந்தேரொடுமிடைந்தவார்கலி
ஏழிருகோடிவந்தெய்திற்றென்பரால்
ஊழியினொருவனுமெதிர்சென்றூன்றினான். (௩௧௬)

காலமுங்காலனுங்கணக்கிறீமையும்
மூலமூன்றிலையெனவகுத்துமுற்றிய
ஞாலமுநாகரும்விசும்புநக்குறும்
சூலமொன்றரக்கனும்வாங்கித்தோன்றினான். (௩௧௭)

வேறு.

அரங்கிடந்தனவறுகுறைநடிப்பனவல்லவென்றிமையோரும்
மரங்கிடந்தனமலைக்குவைகிடந்தனவாமெனமாருடிக்
கரங்கிடந்தனகாத்திரங்கிடந்தனகறைபடும்படிகவ்விச்
சிரங்கிடந்தனகண்டனர்கண்டிலருயிர்கொடுதிரிவாரை. (௩௧௮)

இற்றவல்லவுமீர்ப்புண்டவல்லவுமிடையிடைமுறிந்தெங்கும்
துற்றவல்லவுந்துணிபட்டவல்லவுஞ்சுடுபொறித்தொகைதூவி
வெற்றவெம்பொடியாயினவல்லவும்வேறொன்றுநூறாகி
அற்றவல்லவுங்கண்டிலர்படைக்கலமடுகளந்திடராக. (௩௧௯)

படர்ந்தகும்பத்துப்பாய்ந்தனபகழிகள்பாகரைப்பறிந்தோடிக்
குடைந்துவையகம்புக்குறத்தாக்கியகுருதியாற்குடர்சோரத் [க்
தொடர்ந்துநோயொடுந்துணைமருப்பிழந்துதங்காத்திரந்துணியாகி
கிடந்தவல்லதுநடந்தனகண்டிலர்கிளர்மதகரியெங்கும். (௩௨௦)

வீழ்ந்தவாயினவிளிவுற்றபதாகையவெயிலுமிழயிலம்பு
போழ்ந்தபன்னெடும்புரவியமுறைமுறையச்சொடும்பொறியற்றுத்
தாழ்ந்தவெண்ணிணந்தயங்குவெங்குழம்பிடைத்தலைத்தலைமாருடி
ஆழ்ந்தவல்லதுபெயர்ந்தனகண்டிலரதிர்குரன்மணித்தேர்கள். ()

ஆடறீர்ந்தனவளைகழுத்தற்றனவதிர்பெருங்குரனீத்த
தாடுணிந்தனதறுகண்வெங்கரிநிரைதாங்கியபிணத்தோங்கற்
கோடமைந்தவெங்குருதிநீராறுகள்சுழிதொறுங்கொணர்ந்துந்தி
ஓடலன்றிநின்றுகள்வனகண்டிலருருகெழுபரியெல்லாம். (௩௨௨)

---

315. கூத்தனும் ஒருமென என்றும் பாடம்.

வேதநாயகன்வெங்கணைவழக்கத்தின்மிகுதியைவெவ்வேறிட்
டோதுகின்றதென்னும்பருமரக்கர்வெங்களத்துவந்துற்றாரைக்
காதல்விண்ணிடைக்கண்டனரல்லதுகணவர்தமுடனாடும்
மாதர்வெள்ளமேகண்டனர்கண்டிலர்மலையினும்பெரியாரை. (௩உ௩)

பணிப்பட்டாலெனக்கதிர்வரப்படுவதுபட்டதப்படைபற்றார்
துணிப்பட்டாரெனத்துலங்கினரிமையவர்யாவர்க்குந்தோலாதான்
இனிப்பட்டானெனவீங்கினவரக்கருமேங்கினரிவனந்தோ [தன்
தனிப்பட்டானெனவவன்முகநோக்கியொன்றுரைத்தனன்றனிநா

ஏதியோடெதிர்பெருந்துணையிழந்தனையெதிரொருதனிநின்றாய்
நீதியோனுடன்பிறந்தனையாகலினின்னுயிர்நினக்கீவேன்
போதியோபின்னைவருதியோவன்றெனிற்போர்புரிந்திப்போதே
சாதியோநினக்குறுவதுசொல்லுதிதெரிவுறச்சமைந்தம்மா. ()

இழைத்ததீவினையிற்றிலதாகலின்யானுனையிளையோனால்
அழைத்தபோதினும்வந்திலையந்தகனாணையின்வழிநின்றாய்
பிழைத்ததாலுனக்கருந்திருநாளொடுபெருந்துயினெடுங்காலம்
உழைத்துவீடுவதாயினையென்னுனக்குறுவதொன்றுரையென்றான்

மற்றெலாநிற்கவாசியுமானமுமறத்துறைவழுவாத
கொற்றநீதியுங்குலமுதற்றருமமுமென்றிவைகுடியாகப்
பெற்றநுங்களாலெங்களைப்பிரிந்ததன்பெருஞ்செவிமூக்கோடும்
அற்றவெங்கைபோலென்முகங்காட்டிநின்றாற்றலனுயிரம்மா. ()

நோக்கிழந்தனர்வானவரெங்களாலவ்வகைநிலைநோக்கித்
தாக்கணங்கனையவள்பிறர்மனையெனத்தடுத்தனன்றக்கோர்முன்
வாக்கிழந்ததென்றயர்வுறுவென்செவிதன்னொடுமாற்றாற்
மூக்கிழந்தபின்மீளலென்றாலதுமுடியுமோமுடியாதாய். (௩உஅ)

உங்கடோடலைவாள்கொடுதுணித்துயிர்குடித்தெம்முனுவந்தெய்த
நங்கைநன்னலங்கொடுக்கியவந்தநான்வானவர்நகைசெய்யச்
செங்கைதாங்கியசிரத்தொடுங்கண்ணீர்குருதியினொடுதேக்கி [மா
எங்கைபோலெடுத்தழைத்து நான்வீழ்வெனோ விராவணனெதிரம்

ஒருத்தனீதனியுலகொருமூன்றிற்குமாயினும்பழியோரும்
கருத்தினால்வருஞ்சேவகனல்லையோசேவகர்கடனோராய்
செருத்திண்வாளினாற்றிறத்திறனுங்களையமர்த்துறைசிரங்கொய்து
பொருத்தினாலதுபொருந்துமோதக்கதுபுகன்றிலைபோலென்றான்.

---

325. நீதியோன் - விபீஷணன்.

என்றுதன்னெடுஞ்சூலத்தையிடக்கையின்மாற்றிவலக்கையால்
குன்றுநின்றதுகோத்தெடுத்திருநிலக்குடர்கவர்ந்தெனக்கொண்டான்
சென்றுவிண்ணெடுபொறியொடுதீச்செலச்சேவகன்சென்னிநேரே
வென்றுதீர்கெனவிட்டனனதுவந்துபட்டதுமேலென்ன. (௩௩௧)

அனையகுன்றெனுமசனியையாவர்க்குமறிவருந்தனிமேனி
புனையவங்கெழுதுகளெனநூறியபுரவலன்பொரவென்று
நினையுமாத்திரையொருகைநின்றொருகையினிமிர்கின்றநெடுவேலை
தினையின்மாத்திரைதுணிபடவரன்முறைசிந்தினன்சரஞ்சிந்தி. ()

அண்ணல்விற்கொடுங்கால்விசைத்துகைத்தனவலைகடல்வறளாக
உண்ணகிற்பனவுருமையுஞ்சுடுவனமேருவையுருவிப்போய்
விண்ணகத்தையுங்கடப்பனபிழைப்பிலாமெய்யனமேற்சேர்ந்த
கண்ணுதற்பெருங்கடவுடன்கவசத்தைக்கடந்திலகதிர்வாளி. ()

தாக்குகின்றனனுழைகிலதலையதுதாமரைத்தடங்கண்ணன்
நோக்கியிங்கிதுசங்கரன்கவசமென்றுணர்வுறநுனித்துன்னி
ஆக்கியங்கவனடுபடைதொடுத்துவிட்டறுத்தனனதுசிந்தி
வீக்கிழந்ததுவீழ்ந்ததுவரைசுழல்விரிசுடர்வீழ்ந்தென்ன. (௩௩௪)

காந்துவெஞ்சுடர்க்கவசமற்றுகுதலுங்கண்டொறுங்கனல்சிந்தி
ஏந்துவன்னெடுந்தோள்புடைத்தார்த்தங்கொரேழுமூளவயிரப்போர
வாய்ந்தவன்னெடுந்தண்டினைப்பற்றினன்வானரப்படைமுற்றும்
சாந்துசெய்குவனெனமுறைமுறையரைத்தனன்றரையோடும். ()

பறப்பவாயிரம்படுவனவாயிரம்பட்டெழிலகன்மார்பம்
திறப்பவாயிரந்திரிவனவாயிரஞ்சென்றுபுக்குருவாது
மறைப்பவாயிரம்வருவனவாயிரம்வடிக்கணையென்றாலும் [ரி.
பிறப்பவாயிடைத்தெழித்துறத்திரிந்தனன்கறங்கெனப்பெருஞ்சா

தண்டுகைத்தலத்துளதெனினுளதன்றுதானையென்றதுசாற்றக் [ண்
கொண்டலொத்தவன்கொடுங்கணைபத்தொருதொடையினிற்றொடுத்தெய்தா
கண்டமுற்றனமற்றதுகருங்கழலரக்கனுங்கனன்றுங்கோர்
மண்டலச்சுடராமெனக்கேடகம்வாங்கினன்வாளோடும். (௩௩௭)

வாளெடுத்தலும்வானரவீரர்கண்மறுகினர்வழிதோறும்
தாளெடுத்தனர்கழிந்தனர்வானவர்தலையெடுத்திலர்தாழ்ந்தார்
கோளெடுத்ததுமீளவென்றுரைத்தலுங்கொற்றவன்குன்றொத்த
தோளெடுத்ததுணித்தியென்றொருசரந்தூரந்தனன்சுரர்வாழ்த்த.

336. கறங்கு - பம்பரம்.

அலக்கணுற்றது தீவினைநல்வினையார்த்தெழுந்ததுவேர்த்துக்
கலக்கமுற்றனரிராக்கதர்காலவெங்கருங்கடற்றிரைபோலும்
வலக்கையற்றதுவாளொடுங்கோளுடைவானமர்மதிபோலும்
இலக்கையற்றதவ்விலங்கைக்குமிராவணன்றனக்குமென்றெழுந்தோடா. ()

முற்றும்வீரர்களுள்ளெனற்கெளிதரோமறத்தொழிலிவன்மாடு
பெற்றுநீங்கினதாமெனினல்லதுபேரெழிற்றோளோடும்
அற்றுவீழ்ந்தகையறாதவெங்கையினாலெடுத்தவனார்த்தோடி
எற்றவீழ்ந்தனவெயிறிளித்தோடினவானரக்குலமெல்லாம். (௩௪௦)

வள்ளல்காத்துடனிற்பவும்வானரத்தானையைமறக்கூற்றம் [க்கி
கொள்ளைகொண்டிடப்பண்டையின்மும்மடிகுமைக்கின்றகுறிநோ
வெள்ளமின்றொடும்வீந்துறுமென்பதோர்விம்மலுற்றுயிர்வெம்ப
உள்ளகையினுமற்றவெங்கரத்தையேயஞ்சினவுலகெல்லாம். (௩௪௧)

மாறுவானரப்பெருங்கடலோடத்தன்றோணின்றுவார்சோரி
யாறுவிண்டொடும்பிணஞ்சுமந்தோடமேலமரருமிரிந்தோடக்
கூறுகூறுபட்டிலங்கையும்விலங்கலும்பறவையுங்குலைந்தோட
ஏறுசேவகன்மேலெழுந்தோடினன்மழைக்குலமிரிந்தோட. (௩௪௨)

ஈற்றுக்கையையுமிக்கணத்தரிதியென்றிமையவர்தொழுதேத்தத்
தோற்றுக்கையகன்றொழிந்தவனுளவைதொலையவுந்தோன்றாத
கூற்றுக்கையமுமச்சமுங்கெடநெடுங்கொற்றவன்கொலையம்பால்
வேற்றுக்கையையும்வேலையிட்டனன்வேறுமோரணையாக. (௩௪௩)

சந்திரப்பெருந்தூணொடுசார்த்தியததினொன்றுந்தவறாகா
தந்தரத்தவரலைகடலமிழ்தெழக்கடைவுறுமந்நாளில்
சுந்தரத்தடந்தோள்வளைமாசுணஞ்சுற்றியதொழில்காட்ட
மந்தரத்தையுங்கடுத்ததுமற்றவன்மணியணிவயிரத்தோள். (௩௪௪)

சிவணவண்ணவான்கருங்கடற்கொடுவந்தசெயலுஞ்செறிதாரைச்
சுவணவண்ணவெஞ்சிறையுடைக்கடுவிசைமுடுகியதொழிலானும்
அவணவண்ணலதேவலினியற்றியவமைவினுமயில்வாளி
உவணவண்ணலையொத்ததுமந்தரமொத்ததவ்வுயர்பொற்றோள். ()

பழக்கநாள்வருமேருவையுள்ளுறத்தொளைத்தொருபணையாக்கி
வழக்கினாலுலகளந்தவனமைத்ததோர்வான்குணில்வலத்தேந்தி
முழக்கினாலெனமுழங்குபோரார்ப்பினான்வானரமுந்நீரை
உழக்கினான்றசைதோலெலும்பெனுமிவைகுருதியோடொன்றாக.()

நிலத்தகால்கனம்புனலெனவிவைமுற்றுமிருதனதுருவாகிக்
கொலத்தகாதகேதார்வடிவுகொண்டாலெனவுயிர்களைக்குடிப்பானைச்
சலத்தகாலனைத்தறுகணார்க்கரசனைத்தருக்கினிற்பெரியானை
வலத்தகாலையும்வடித்தவெங்கணையினுற்றடிந்தனன்றனுவல்லான்.

பந்திபந்தியின்பற்குலமீன்குலப்பாடுபாடுறப்பாகத் [கர்
திந்துவெள்ளெயி றிமைத்திடக்குருதியாமெக்கர்கொண்டெழுசெக்
அந்திவந்தெனவகனெடுவாய்விரித்தடியொன்றுகடிதோட்டிக்
குந்திவந்தனனெடுநிலங்குழிபடக்குரைகடல்கோத்தேற. (௩௪அ)

மாறுகாலின்றிவானுறநிமிர்ந்துமாடுளவெல்லாம்வளைத்தேந்திச்
சூறைமாருதமாமெனச்சுழித்துமேற்றொடர்கின்றதொழிலானை
ஏறுசேவகனெரிமுகப்பகழியாலிருநிலம்பொறைநீங்க
வேறுகாலையுந்துணித்தனனறத்தொடுவேதங்கள்கூத்தாட. (௩௪௯)

கையிரண்டொடுங்கால்களுந்துணிந்தனகருவரைபொருவுந்தன்
மெய்யிரண்டுநூறாயிரம்பகழியால்வெரிநுறத்தொளைபோய
செய்யகண்பொழிதீச்சிகையிருமடிசிறந்ததுதெழிப்போடு
வையம்வானிடைமழையினும்பெருத்ததுவளர்ந்ததுபெருஞ்சீற்றம்.

பாதங்கைகளோடிழந்தனன்படியிடையிருந்துவான்பகுவாயால்
காதநீளியமலைகளைக்கடித்திறுத்தெடுத்துவெங்கனல்பொங்கி
மீதுமீது தன்னகத்தெழுகாற்றினால்விசைகொடுதிசைசெல்ல
ஊதவூதப்பட்டலந்தனவானரமுருமின்வீழ்வுயிரென்ன. (௩௫௧)

தீயினாற்செய்தகண்ணுடையானெடுஞ்சிகையினாற்றிசைதீய
வேயினாற்றிணிவெற்பொன்றுநாவினால்விசும்புறவளைத்தேந்திப்
பேயினார்ப்புடைப்பெருங்களமிரிந்தெழப்பிலந்திறந்ததுபோலும்
வாயினாற்செலவீசினன்வள்ளலுமலர்க்கரம்விதிர்ப்புற்றான். (௩௫௨)

ஐயன்விற்றொழிற்காயிரமிராவணரமைவிலரந்தோயான்
கையுங்கால்களுமிழந்தனன்வேறினியுதவலாந்துணைகாணேன்
மையனேய்கொடுமுடிந்தவனானென்றுவரம்பின்றிவாழ்ந்தானுக்
குய்யுமாறரிதென்றுதன்னுள்ளத்தினுணர்ந்தொருதுயருற்றான். ()

வேறு.

சிந்துறச்செம்பசுங்குருதிதிசைகடொறுஞ்சிறையாறு
எந்திறத்தேர்கரிபரியாளீர்த்தோடப்பார்த்திருந்த

---

348. செக்கர் அந்தி - சிவந்தமாலை.
351. பகுவாய் - பிளப்புடைய வாய்.

கந்தரப்பொற்கிரியாண்மைக்களிறனையான்கண்ணின்ற
சுந்தரப்பொற்றோளானைமுகநோக்கியிவைசொன்னான். (௩௫௪)

புக்கடைந்தபுறவொன்றின்பொருட்டாகத்துலைபுக்க
மைக்கடங்கார்மதயானைவாள்வேந்தன்வழிவந்தீர்
இக்கடன்களுடையீர்நீரெம்வினைதீர்த்தும்முடைய
கைக்கடன்றானுயிர்காக்கக்கடவீரென்கடைக்கூட்டால். (௩௫௫)

நீதியால்வந்ததொருநெடுந்தருமநெறியல்லால்
சாதியால்வந்தசிறுநெறியறியானென்றம்பி
ஆதியாயுனையடைந்தானரசருக்கொண்டமைந்த
வேதியாவின்னுமுனக்கடைக்கலம்யான்வேண்டினேன். (௩௫௬)

வெல்லுமாநினைக்கின்றவேலரக்கன்வேரோடும்
கல்லுமாமுயல்கின்றானிவனெனலுங்கறுவுடையான்
ஒல்லுமாறியலுமேலுடன்பிறப்பின்பயனோரான்
கொல்லுமாலவனிவனைக்குறிக்கோடிகோடாதாய். (௩௫௭)

தம்பியெனநினைந்திரங்கித்தவிரானத்தகவில்லான்
நம்பியிவன்றனைக்காணிற்கொல்லுமிறைநல்கானால்
உம்பியைத்தானுன்னைத்தானனுமனைத்தானொருபொழுதும்
எம்பிபிரியானாகவருளுதியான்வேண்டினேன். (௩௫௮)

மூக்கிலாமுகமென்றுமுனிவர்களுமமரர்களும்
நோக்குவார்நோக்காமைநுன்கணையாலென்கழுத்தை
நீக்குவாய்நீக்கியபின்னெடுந்தலையைக்கருங்கடலுள்
போக்குவாயிதுநின்னைவேண்டுகின்றபொருளென்றான். (௩௫௯)

வரங்கொண்டானினிமறுத்தல்வழக்கன்றென்றொருவாளி
உரங்கொண்டதடஞ்சிலையினுயர்நெடுநாணுட்கொளுவாச்
சிரங்கொண்டான்கொண்டதனைத்திண்காற்றின்கடும்படையால்
அரங்கொண்டகருங்கடலுளழுவத்துளழுத்தினான். (௩௬0)

மாக்கூடுபடர்வேலைமறிமகரத்திரைவாங்கி
மேக்கூடுகிழக்கூடுமிக்கிரண்டுதிக்கூடு
போக்கூடுகவித்திருகண்புகையோடுபுகையுயிர்க்க
மூக்கூடுபுகப்புக்குமூழ்கியதம்முகக்குன்றம். (௩௬௧)

ஆடினார்வானவர்களரமகளிரமுதவிசை
பாடினார்மாதவம்வேதியரும்பயந்தீர்ந்தார்

358. இறைநல்கான் - சற்றிருக்க ஒட்டான்.

கூடினார்படைத்தலைவர்கொற்றவனைக்குடர்கலங்கி
ஓடினார்டலரக்கரிராவணனுக்குணர்த்துவான். (௩௬உ)

ஆ திருவிருத்தம் - கருஅo.

## க௯-வது, மாயாசனகப்படலம்.

அவ்வழிக்கருணன்செய்தபேரெழிலாண்மையெல்லாம்
செவ்வழியுணர்வுதோன்றச்செப்பினன்சிறுமைதீரா
வெவ்வழிமாயையொன்றுவேறிருந்தெண்ணிவேட்கை
இவ்வழியிலங்கைவேந்தனியற்றியதியம்பலுற்றும். (க)

மாதிரங்கடந்ததோளான்மந்திரவிருக்கைவந்த
மோதரனென்னுநாமத்தொருவனைமுறையினோக்கிச்
சீதையையெய்தியுள்ளஞ்சிறுமையிற்றீருஞ்செய்கை
யாதெனக்குணர்த்தியின்றென்னின்னுயிரீதியென்றான். (உ)

உணர்த்துவனின்றுநன்றோருபாயத்தினுறுதிமாயை
புணர்த்துவன்சீதைதானேபுணர்வதோர்வினையம்போற்றிக்
கணத்துவன்சனகன்றன்னைக்கட்டினென்கொணர்ந்துகாட்ட
மணத்தொழில்புரியுமன்றேமருத்தனையுருவமாற்றி. (௩)

எனவவனுரைத்தலோடுமெழுந்துமார்பிறுகப்புல்லி
அனையவன்றன்னைக்கொண்டாங்கணுகுதியன்பவென்னாப்
புனைமலர்ச்சரளச்சோலைநோக்கினனெழுந்துபோனான்
வினைகளைக்கற்பின்வென்றவிளக்கினைவெருவல்காண்பான். (௪)

பண்களாற்கிளவிசெய்துபவளத்தாலதரமாக்கிப்
பெண்களானார்க்குணல்லவுறுப்பெலாம்பெருக்கியீட்ட
எண்களாலளவாமானக்குணங்தொகுத்தியற்றினாளைக்
கண்களாலரக்கன்கண்டானவளையோர்கலக்கங்காண்பான். (௫)

மின்னெளிர்மகுடகோடிவெயிலொளிவிரித்துவீசத்
துன்னிருளிரிநதுதோற்பச்சுடர்மணித்தோளிற்றோன்றும்
பொன்னரிமாலைநீலமலையின்வீழருவிபோர்ப்ப
நன்னெடுங்களிமால்யானைநாணுறநடந்துவந்தான். (௬)

விளக்கொருவிளக்கந்தாங்கிமின்னணியரவிற்சுற்றி
இளைப்புறுமருங்குனைவமுலைசுமந்தியங்குமென்ன

1. கருணன் - கும்பகருணன். வேட்கை - சனகியிடத்துள்ள ஆசை.

முளைப்பிறைநெற்றிவானமடந்தையர்முன்னும்பின்னும்
வளைத்தனர்வந்துசூழவந்திகர்வாழ்த்தவந்தான். (எ)

இட்டதோரிரணபீடத்தாமரையிருக்கைநின்றும்
கட்டதோட்கானஞ்சுற்றக்கழலொன்றுகாலிற்காண
வட்டவெண்கவிகையோங்கச்சாமரைமருங்குவீசத்
தொட்டதோர்சுரிகையாளனிருந்தனனினையசொன்னான். (அ)

என்றுதானடியனேனுக்கிரங்குவதிந்துவென்பான்
என்றுதானிரவியோடும்வேற்றுமைதெரிவதென்பால்
என்றுதானனங்கவாளிக்கிலக்கலாதிருக்கலாவ
தென்றுதானுற்றதெல்லாமியம்புவாெனடுத்துக்கொண்டான். (கூ)

வஞ்சனேனெனக்குநானேமாதரார்வடிவுகொண்ட
நஞ்சுதோயமுதமுண்பானச்சினேனுளுந்தேய்ந்து
நெஞ்சுநேரானதும்மைநினைப்புவிட்டாவிநீக்க
அஞ்சினேனடியனேனும்மடைக்கலமமுதின்வந்தீர். (க0)

தோற்பித்தீர்மதிக்குமேனிசுடுவித்தீர்தென்றறாற்ற
வேர்ப்பித்தீர்வயிரத்தோளைமெலிவித்தீர்வேனில்வேளை
ஆர்ப்பித்தீரென்னையின்னலறிவித்தீரமரரச்சம்
தீர்ப்பித்தீரின்னமென்னென்செய்வித்துத்தீர்தீரம்மா. (கக)

பெண்ணெலாநீரேயாக்கிப்பேரெலாமுமதேயாக்கிக்
கண்ணெலாநுங்கணுக்கிக்காமவேளென்னுநாமத்
தண்ணலெய்வானுமாக்கியைங்கணைக்கரியத்தக்க
புண்ணெலாமெனக்கேயாக்கிவிபரீதம்புணர்த்திவிட்டீர். (கஉ)

ஈசனேமுதலாமற்றைமானுடரிறுதியாகக்
கூசமூன்றுலகுங்காக்குங்கொற்றத்தென்வீரக்கோட்டி
பேசுவாரொருவற்காவிதோற்றிலென்பெண்பால்வைத்த
ஆசைநோய்கொன்றதென்றனாண்மைதான்மாசுண்டோதா. (கங)

நோயிடைநுகரவேயுநுணங்கிநின்றுணங்குமாவி
நாயுயிராகுமன்றேநாள்பலகழித்தகாலைப்
பாயிரமுணர்ந்துநூலோர்காமத்துப்பகுத்தபத்தி
ஆயிரமல்லபோனவையிரண்டென்பர்பொய்யே. (கச)

12. ஐங்கணை-பஞ்சபாணம். அது-தாமரை, மா, அசோகு. முல்லை, நீலம் என்பன.

அறந்தருஞ்செல்வமன்னீ ரமிழ்தினுமினியீரென்னைப்
பிறந்திலனுக்கவந்தீர்பேரெழின்மானங்கொல்ல
மறந்தனைபெரியபோனவருமெனுமருந்துதன்னால்
இறந்திறந்துய்கின்றேன்யான்யாரிதுதெரியுமீட்டார். (கரு)

அந்தரமுணரின்மேனாளகலிகையென்பாள்காதல்
இந்திரனூரத்தைநல்கியெய்தினளிழுக்குற்றாளோ
மந்திரமில்லைவேறோர்மருந்தில்லைமையறேய்க்குச்
சுந்தரக்குமுதச்செவ்வாயமுதலாலமுதச்சொல்லீர். (கசு)

என்றுரைத்தெழுந்துசென்றங்கிருபதென்றுரைக்குரீலக்
குன்றுரைத்தானுநேராக்குவவுத்தோணிலத்தைக்கூட
மின்றிரைத்தருக்கன்றன்னைவிரித்துமுன்றொகுத்தபோல
நின்றிமைக்கின்றபத்துமுடிபடிநெடிதின்வைத்தான். (கஎ)

வல்லியமருங்குகண்டமானெனமறுக்கமுற்று
மெல்லியலாக்கைமுற்றுநடுங்கினள்விம்முகின்றாள்
கொல்லியவரினுமுள்ளகூறுவென்றெறியவென்னைப்
புல்லியகிடந்ததொன்மைநோக்கினள்புகல்வதானாள். (கஅ)

பழியிதுபாவமென்றுபார்க்கிலைபகரத்தக்க
மொழியிவையல்லவென்பதுணர்கிலைமுறைமைநோக்காய்
கிழிகிலைநெஞ்சம்வஞ்சக்கிளையொடுமின்றுகாறும்
அழிகிலையென்றபோதென்கற்பெனுமறந்தானென்னும். (கக)

வானுளவறத்திற்றேன்றுஞ்சொல்வழிவாழுமண்ணின்
ஊனுளவுடம்புக்கெல்லாமுயிருளவுணர்வுமுண்டால்
தானுளபத்துப்பேழ்வாய்தகாதனவுரைக்கத்தக்க
யானுளன்கேட்கவென்றாலென்சொலாயாதுசெய்யாய். (உ0)

வாசவன்மலரின்மேலான்மழுவலான்மைந்தன்மற்றக்
கேசவன்சிறுவரென்றதன்மையோர்தம்மைக்கேளாய்
பூசலினெதிர்ந்தேனென்றாய்போர்க்களம்புக்கபோதென்
ஆசையின்கனியைக்கண்ணிற்கண்டிலைபோலுமஞ்சி. (உக)

ஊணிலாயாக்கைபேணியுயர்புகழ்சூடாதுன்முன்
நாணிலாதிருந்தேனல்லேனவையறுகுணங்களென்னும்
பூணெலாம்பொறுத்தமேனிப்புண்ணியமூர்த்திதன்னைக்
காணலாமின்னுமென்னுங்காதலாலிருந்தேன்கண்டாய். (உஉ)

---

21. என்னாசையின்கனி - என்றது இராமனை.

சென்றுசென்றழியுமாவி திரிக்குமாற்செருவிற்சேமக்
குன்றுநின்றனைய தம்பிபுறக்கொடைகாத்துநிற்பக்
கொன்றுநின்றலைகள்சிந்தியரக்கர் தங்குலத்தை முற்றும்
வென்றுநின்றருளுங்கோலங்காணியகிடந்தவேட்கை. (உங)

எனக்குயிர்பிறிதுமொன்றுண்டென்றிரேலெனக்குமல்லால்
தனக்குயிர்வேறின்றாகித் தாமரைக்கண்ணனாகிக்
கனக்கருமேகமொன்றுகார்முகந்தாங்கியார்க்கும்
மனக்கினிதாகிநிற்குமஃதன்றிவரம்பிலாதாய். (உச)

என்றனளென்றலோடுமெரியுறுகண்ணன்றன்னைக்
கொன்றனமானங்தோன்றக்கூற்றனைசீற்றங்கொண்டான்
வென்றெனையிராமனுன்னைமீட்டபினவனோடாவி
ஒன்றெனவாழ்திபோலென்றிடியுறுமொக்கநக்கான். (உரு)

இனத்துளாருலகத்துள்ளாரிமையவர்முதலினோரென்
சினத்துளார்யாவர்தீர்ந்தார் தயரதன்சிறுவன்றன்னைப்
புனத்துளாய்மாலையானென்றுவக்கின்றவொருவன்புக்குன்
மனத்துளானெனினுங்கொல்வென்வாழுதிபின்னைமன்னோ. (உசு)

வளைத்தனமதிலைவேலைவகுத்தனவரம்புவாயால்
உளைத்தனகுரங்குபல்காலென்றகமுவந்ததுண்டேல்
இளைத்தநுண்மருங்குனங்காயென்னைதிரெய்திற்றெல்லாம
விளக்கெதிர்வீழ்ந்தவிட்டிற்பான்மையேவியக்கவேண்டா. (உஎ)

கொற்றவாளரக்கர் தம்மையயோத்தியர்குலத்தை முற்றும்
பற்றிநீர் தருதிரன்றேற்பசுந்தலைகொணர்திர்பாரித்
துற்றதொன்றியற்றுவீரென்றுந்தினேனுந்தைமேலும்
வெற்றியர்தம்மைச்செல்லச்சொல்லினெனவிரைவினென்றான். ()

என்றவனுரைத்தகாலையென்னையிம்மாயஞ்செய்தாற்
கொன்றுமிங்கரியதில்லையென்பதோர்துணுக்கமுந்த
நின்றுநின்றுயிர்த்துநெஞ்சம்வெதும்பினொருப்பைமீளத்
தின்றுதின்றுமிழ்கின்றாரிற்றுயருக்கேசேக்கையாளுள். (உகூ)

இத்தலையின்னசெய்தவிதியினோரென்னையின்னும்
அத்தலையன்னசெய்யச்சிறியரோவளியரம்மா
பொய்த்தலையுடையதெல்லாந்தருமமேபோலுமென்னுக்
கைத்தனளுள்ளம்வெள்ளக்கண்ணினீர்கரையிலாதாள். (௩௦)

ஆயதுகாலத்தாங்கோரரக்கனைச்சனகனுக்கி
வாய்திறந்தரற்றப்பற்றிமகோதரன்கடிதின்வந்தான்
காயெரியனையான்முன்னர்க்காட்டினன்வணங்கண்டாள்
தாயெரிவீழக்கண்டபார்ப்பெனத்தரிக்கிலாதாள். (௩௧)

கைகளைநெரித்தாள்கண்ணைமோதினாள்கமலக்கால்கள்
செய்யெரிமிதித்தாலென்னநிலத்திடைப்பதைத்தாணெஞ்சம்
மெய்யெனவெரிந்தாளேங்கிவிம்மினாடுங்கிவீழ்ந்தாள்
பொய்யெனவுணராளன்பாற்புரண்டரும்பூசலிட்டாள். (௩௨)

தெய்வமோவென்னுமெய்ம்மைசிதைந்ததோவென்னுந்தீய
வைவலோவுலகையென்னும்வஞ்சமோவலியதென்னும்
உய்வலோவின்னுமென்னுமொன்றலதுயுரமுற்றாள்
தையலோதருமமேயோவாரவடன்மைதேர்வார். (௩௩)

எந்தையேயெந்தையேயின்றென்பொருட்டுனக்குமிக்கோள்
வந்ததேயென்னைப்பெற்றுவாழ்ந்தவாறிதுவோமண்ணோர்
தந்தையேதாயேசெய்ததருமமேதவமேயென்னும்
வெந்துயரொன்னுந்தீவீழ்விறகெனவெந்துவீழ்ந்தாள். (௩௪)

இட்டுண்டாயறங்கள்செய்தாயெதிர்ந்துளோரிருக்கையெல்லாம்
சுட்டுண்டாயுயர்நதவேள்வித்துறையெலாந்தொலைவுகண்டாய்
மட்டுண்டார்மனிசர்த்தின்றவஞ்சரால்வயிரத்தோள்கள்
கட்டுண்டாயென்னேயானுங்காண்கின்றேன்போலுங்கண்ணால். ()

என்றனள்பலவும்பன்னியெழுந்துவீழ்ந்திடரிற்றேய்ந்தாள்
பொன்றினள்போலுமென்னப்பொறையழிந்துயிர்ப்புப்போவாள்
மின்றனிநிலத்துவீழ்ந்துபுரள்கின்றதனையமெய்யாள்
அன்றிலம்பேடைபோலவாய்திறந்தரற்றலுற்றாள். (௩௬)

பிறையுடைநுதலார்க்கேற்றபிறந்தவிற்கடன்கள்செய்ய
இறையுடையிருக்கைமூதாரென்றும்வந்திறக்கலாதீர்
சிறையிடைக்காணநீருஞ்சிறையொடுஞ்சேர்ந்தவாறே
மறையுடைவரம்புநீங்காவழிவந்தமன்னர்நீரே. (௩௭)

வன்சிறைப்பறவையூரும்வானவன்வரம்பின்மாயப்
புன்சிறைப்பிறவிதீர்ப்பானுளனெனப்புலவர்நின்றார்

31. பார்ப்பு - இளங்குஞ்சு.

34. விராயென - என்றும் பாடம்.

என்சிறைதீர்க்குவாரைக்காண்கிலேனென்னின்வந்த
உன்சிறைவிடுக்கற்பாலர்யாருளருலகத்துள்ளார். (௩௮)

பண்பெற்றாரோடுகூடாப்பகைபெற்றாய்பகழிபாய
விண்பெற்றாயெனினுநன்றால்வேந்தராயுயர்ந்தமேலோர்
எண்பெற்றாய்பழியும்பெற்றாயிதுநின்னாற்பெற்றதன்றால்
பெண்பெற்றாயதனாற்பெற்றாயாரின்னபேறுபெற்றார். (௩௯)

சுற்றுண்டபாசநாஞ்சிற்சுமையொடுஞ்சூடுண்டாற்ற
எற்றுண்டுமளறுநீங்காவிழுசிறுகுண்டையென்னப்
பற்றுண்டநாளேமாளாப்பாவியேனும்மையெல்லாம்
விற்றுண்டேனெனக்குமீளும்விதியுண்டேநரகின்வீழ்ந்தால். (௪௦)

இருந்துநான்பகையையெல்லாமீறுகண்டளவிலின்பம்
பொருந்தினேனல்லேனெங்கோன்றிருவடிபுனைந்தேனல்லேன்
வருந்தினேனெடுநாளும்மைவழியொடுமுடித்தேன்வாயால்
அருந்தினேனயோத்திவந்தவரசர்தம்புகழையம்மா. (௪௧)

கொல்லெனக்கணவற்காங்கோர்நெடும்பகைகொடுத்தேனெந்தை
கல்லெனத்திரண்டதோளைப்பாசத்தாற்கட்டக்கண்டேன்
இல்லெனச்சிறந்துநின்றவிரண்டுக்குமின்னல்சூழ்ந்தேன்
அல்லெனோவெளியெனோயானளியற்றேனிறக்கலாதேன். (௪௨)

இணையறுவேள்விமேனாளியற்றியீன்றெடுத்தவெந்தை
புணையுறுதிரடோளார்த்துப்பூழியிற்புரளக்கண்டேன்
மணவினைமுடித்தென்கையைமந்திரமரபிற்றொட்ட
கணவனையினையேன்காண்டலின்றியேகழிகின்றேனோ. (௪௩)

அன்னையீரையன்மீரென்னாருயிர்த்தங்கைமீரே
என்னையீன்றெடுத்தவெந்தைக்கெய்தியதியாதுமொன்றும்
உன்னலீருணர்ந்திலீரோவுமக்கும்வேறுற்றதுண்டோ
துன்னருநெறியின்வந்துதொடர்ந்திலீர்துஞ்சினீரோ. (௪௪)

மேருவிற்கும்பர்சேர்ந்துவிண்ணினைமீக்கொண்டாலும்
நீருடைக்காவன்மீதூரெய்தலாநெறியிற்றன்றால்
போரிடைக்கொண்டாரேனும்வஞ்சனைபுணர்த்தாரேனும்
ஆருமக்கறையற்பாலாரனுமனுமுளனோரும்பால். (௪௫)

சரதமற்றிவனைத்தந்தார்தவம்புரியாற்றல்சான்ற
பரதனைக்கொணர்தற்கேதுமையுறவில்லைப்பன்னாள்

வரதனும்வாழ்ந்தானல்லன்றம்பியுமனையன்வாழான்
விரதமுற்றறத்தினின்றாற்கிவைகொலாம்விளைவமென்மேல். (௪௬)

அடைத்ததுகடலைமேல்வந்தடைந்ததுமதிலையாவி
துடைத்ததுபகையைச்சேனையெனச்சிலர்சொல்லச்சொல்லப்
படைத்ததோருவகைதன்னைவேறொருவினையம்பண்ணி
உடைத்ததுவிதியேயென்றென்றுளைத்தனளுணர்வுதீர்வாள். (௪௭)

ஏங்குவானினையபன்னவிமையவரேற்றமெல்லாம்
வாங்குவாளரக்கனாற்றமனமகிழ்ந்தினிதினோக்கித
தாங்குவாளல்லடுன்பமிவளையுந்தாங்கித்தானும்
ஓங்குவானென்னவுன்னியினையனவுரைக்கலுற்றான். (௪௮)

காரிகைநின்னையெய்துங்காதலாற்கருதலாகாப்
பேரிடரியற்றலுற்றேன்பிழையிதுபொறுத்தியின்னும்
வேரறமிதிலையோரைவிளிகிலேன்விளிந்தபோதும்
ஆருயிரிவனையுண்ணேனஞ்சலையன்னமன்னாய். (௪௯)

இமையவருலகமேதானிவ்வுலகேழுமேதான்
அமைவரும்புவனமூன்றிலென்னுடையாட்சியேதான்
சமைவுறத்தருவன்பற்றித்தாரணிமன்னற்கின்னற்
சுமையுடைக்காமவெந்நோய்துடைத்தியேற்றொழுதுவாழ்வேன். ()

இலங்கையூரிவனுக்கீந்துவேறிடத்திருந்துவாழ்வேன்
நலங்கிளர்நிதியமூன்றுநல்குவெனுமத்தெய்வப்
பொலங்கிளர்மானந்தானேபொதுவறக்கொடுப்பென்புத்தேள்
வலங்கிளர்வாளும்வேண்டின்வழங்குவென்யாதுமாற்றேன். (௫௧)

இந்திரன்கவித்தமௌலியிமையவரிறைஞ்சியேத்த
மந்திரமரபிற்சூட்டிவானவர்மகளிர்யாரும்
பந்தரினுரிமைசெய்யயானிவன்பணியினிற்பேன்
சுந்தரப்பவளவாயோரருண்மொழிசிறிதுசொல்லின். (௫௨)

எந்தைதன்றந்தைதாதையிவ்வுலகீன்றானென்முன்
வந்தவன்றானேவிட்டவரமெலாம்வழங்கிமற்றை
அந்தமிலடியார்செய்கையாற்றுவேனமிழ்தின்வந்த
செந்திருநீரல்லீரேலவளும்வந்தேவல்செய்யும். (௫௩)

தேவரேமுதலாமற்றைத்திண்டிறனுகர்மண்ணோர்
யாவரும்வந்துநுந்தையடிதொழுதேவல்செய்வர்

---

50. இமையவர் - கண்ணிமையாதவர்,

பாவைநீயிவனின்வந்தபயன்பழுதாவதன்றால்
மூவுலகாளுஞ்செல்வங்கொடுத்தது முடித்தியென்றான். (ருச)

இத்திருப்பெறுகிற்பானுமிந்திரனிலங்கை நுங்கள்
பொய்த்திருப்பெறுகிற்பானும்வீடணன்புலவர்கோமான்
கைத்திருச்சரங்களூன்றன்மார்பிடைக்கலக்கற்பால
மைத்திருநிறத்தான்றுளென்றலைமிசைவைக்கற்பால. (ருரு)

நருவனநின்னோடையனுயகனுமவாளி
புகுவனபோழ்ந்துன்மார்பிற்றிறந்தனபுண்களெல்லாம்
தருவனவினையசொல்லத்தக்கனசாபநாணின்
உருவனமலைகளெஞ்சப்பிறப்பனவொலிகளம்மா. (ருகூ)

சொல்லுவமதுரமாற்றந்துண்டத்தானுண்டுன்கண்ணைக்
கல்லுவகாகம்வந்துகலப்பனகமலக்கண்ணன்
வில்லுமிழ்பகழிபின்னர்விலங்கெழிலலங்கன்மார்பம்
புல்லுவகளிப்புக்கூர்ந்துபுலவுநாறலகையெல்லாம். (ருஎ)

விரும்பிநான்கேட்பதுண்டானின்னுழைவார்த்தைவீரன்
இரும்பியல்வயிரவாளியிடறிடவெயிற்றுப்பேழ்வாய்ப்
பெரும்பியற்றலைகள்சிந்திப்பிழைப்பிலமுடிந்தாயென்ன
அரும்பியற்றளவப்பைந்தாரனுமன்வந்தளித்தவந்நாள். (ருஅ)

புன்மகன்கேட்டிகேட்டற்குரியதுபுகுந்தபோரின்
உன்மகனுயிரையெம்மோய்ச்சுமித்திரையுய்யவீன்ற
நன்மகன்வாளிநக்கநாயவனுடலைநக்க
என்மகனிறந்தானென்னநீயெடுத்தரற்றலென்றான். (ருகூ)

வெய்யவனனையகேளாவெயிலுகவிழித்துவீரக்
கைபலபிசைந்துபேழ்வாயெயிற்றுப்புக்கழுந்தக்கவ்வித்
தையன்மேலோடலோடுமகோதரன்றடுத்தானீன்ற
மொய்கழற்றாதைவேண்டவிசையுநீமுனியலென்றான். (கூ0)

அன்றவன்றகைப்பமீண்டானுசனத்திருக்கவாவி
பொன்றினனுகுமென்னத்தரையிடைக்கிடந்தபொய்யோன்
இன்றிதுநேராயென்னினென்னையென்குலத்தினோடும்
கொன்றனையாதியென்னுவினையனகூறலுற்றான். (கூக)

பூவின்மேலிருந்ததெய்வத்தையலும்பொதுமையுற்றாள்
பாவியான்பயந்தநங்கைநின்பொருட்டாகப்பட்டேன்

56. போழ்ந்து - பிளந்து.

62. பொதுமையுற்றாள் - ஒருவனிடந்தங்காது பலரிடத்துந்தங்கினள்.

ஆவிபோயழியனன்றேயமரர்க்குமரசனாவான்
தேவியாயிருத்தநீதேசிறையிடைத்தேம்புகின்றாய். (௬௨.)

என்னையென்குலத்திலோடுமின்னுயிர்தாங்கியீண்டு
நன்னெடுஞ்செல்வந்துய்ப்பேனாக்கினைநல்கிநாளும்
உன்னைவெஞ்சிறையினீக்கியின்பத்துளுய்ப்பாயென்னாப்
பொன்னடிமருங்குவீழ்ந்தானுருமுகப்பொருமுகின்றான். (௬௩)

அவ்வுரைகேட்டநங்கைசெவிகளையமையப்பொத்தி
வெவ்வுயர்த்தாவிதள்ளிவீங்கினள்வெகுளிபொங்கி
இவ்வுரையெந்தைகூறானின்னுயிர்வாழ்க்கைபேணிச்
செவ்வுரையன்றிதென்னாச்சீறினளுளையச்செப்பும். (௬௪)

அறங்கெடவழக்குநீங்கவரசர்தமரபுக்கான்ற
மறங்கெடமெய்ம்மைதேயவசையுறமறைகளோதும்
திறங்கெடவொழுக்கங்குன்றத்தேவரும்பேணத்தக்க
நிறங்கெடவினையசொன்னாய்சனகன்கொனினையினைய. (௬௫)

வழிகெடவரினுந்தத்தம்வாழ்க்கைதேய்ந்திறினுமார்பம்
கிழிபடவயில்வேல்வந்துகிழிப்பினுமான்றோர்கூறும்
மொழிகொடுவாழ்வதல்லான்முறைகெடப்புறநின்றார்க்கும்
பழிபடவாழ்கிற்பாரும்பார்த்திவருளரோபாவம். (௬௬)

நீயுநின்கிளையுமற்றிந்நெடுநிலவரைப்புநேரே
மாயினுமுறைமைகுன்றவாழ்வெனோவயிரத்திண்டோள்
ஆயிரநாமத்தாழியரியினுக்கடிமைசெய்வேன்
நாயினைநோக்குவேனோநாண்டுறந்தாவிநச்சி. (௬௭)

வரிசிலையொருவனல்லான்மைந்தரென்மருங்குவந்தார்
எரியிடைவீழ்ந்தவிட்டிலல்லரோவரசுக்கேற்ற
அரியொடும்வாழ்ந்தபேடையங்கணத்தழுக்குத்தின்னும்
நரியொடும்வாழ்வதுண்டோநாயினுங்கடைப்பட்டோனே. (௬௮)

அல்லையேலெந்தையாணையாகத்தானலங்கல்வீரன்
வில்லையேவாழ்த்திமீட்கின்மீளுதுமீட்சியென்ப
இல்லையேலிறந்துதீர்துமிதுவலாலியம்பலாகாச் [ள்.
சொல்லையேயுரைத்தாயென்னும்பழிகொண்டாயென்னச்சொன்னா

---

65. வழக்கு - உலகானுபவம்.

68. அங்கணம் - சேற்றுநிலமுற்றம்.

வன்றிறலரக்கனன்னவாசகமனத்துக்கொள்ளா
நின்றதுநிற்கமண்மேனிகழ்ந்தவாநிகழ்கநின்முன்
நின்றவனல்லன்போலாஞ்சனகனிக்கணத்தினின்முன்
கொன்றுயிர்குடிப்பெனென்னுச்சுரிகைவாளுரீஇக்கொண்டானல்.()

என்னையுங்கொல்லாயின்னேயிவனையுங்கொல்லாயினனும்
உன்னையுங்கொல்லாய்மற்றிவ்வுலகையுங்கொல்லாயானே
இன்னுயிர்நீங்கியென்றுங்கெடாப்புகழெய்துகின்றேன்
பின்னையுமெங்கோனம்பிற்கிளையொடும்பிழையாயென்றாள். (எக)

இரந்தனன்வேண்டிற்றல்லாலிவன்பிழையிழைத்ததுண்டோ
புரந்தரன்செல்வத்தையாகொல்கையோர்பொருளிற்றோதான்
பரந்தவெம்பகையைவென்றானின்வழிப்படருநங்கை
அரந்தையளாகுமன்றேதந்தையைநலிவதாயின். (எஉ)

என்றவன்விலக்கமீண்டாண்டிருந்ததோரிறுதியின்கண்
குன்றெனநீண்டகும்பகருணனையிராமன்கொல்ல
வன்றிறற்குரங்கின்றானைவானுறவார்த்தவோதை
சென்றனசெவியினூடுதேவர்களார்ப்புஞ்செல்ல. (எங)

உகுந்திறலமரர்நாடும்வானரவோதத்தோரும்
மிகுந்திறம்பினில்லாவிருவர்நாவொலியும்விஞ்சத்
தகுந்திறனினைந்தேனம்பிக்கமரிடைத்தனிமைப்பாடு
புகுந்துளதுண்டென்றுள்ளம்பொருமல்வந்துற்றபோழ்தின். (எச)

புறந்தருசேனைமுந்நீரிருஞ்சிறைபோக்கிப்போதப்
பரந்தனரனையதூதர்செவிமருங்கெய்திப்பையத்
திறந்திறமாகிநின்றகவிப்பெருங்கடலைச்சிந்தி
இறந்தனனும்பியம்பிற்கொன்றனனிராமனென்றார். (எரு)

ஊரொடும்பொருந்திக்தோன்றுமொளியவனென்னவொண்பொற்
றாரொடும்புனைந்தமோலிதரையொடும்பொருந்தத்தள்ளிப்
பாரொடும்பொருந்திநின்றமராமரம்பணைகளோடும்
வேரொடும்பறிந்துமண்மேல்வீழ்வதேபோலவீழ்ந்தான். (எசு)

பிறிவெனும்பீழைதாங்கள்பிறந்தநாட்டொடங்கியென்றும்
உறுவதோன்றின்றியாவியொன்றெனநினைந்துநின்றான்
எறிவருஞ்செருவிற்றம்பிதன்பொருட்டிறந்தானென்ன
அறிவழிந்தவசனுகியாற்றினானண்டமுற்ற. (எஎ)

76. ஊர் - வரிவேடம். 77. முற்ற - இடிய.

வேறு.

தம்பியோவானவராந் தாமரையின்காடுழக்கும்
தும்பியோநான்முகத்தோன்செய்மதலைதோன்றலோ
நம்பியோவிந்திரனைநாமப்பொறிதுடைத்த
எம்பியோயானுன்னையிவ்வுரையுங்கேட்டேனோ. (எஅ)

மின்னிலையவேலோனேயானுன்விழிகாணேன்
நின்னிலையாதென்றேனுயிர்பேணிநிற்கின்றேன்
உன்னிலைமையீதாயினோடைக்களிறுந்திப்
பொன்னுலகமீளப்புகாரோபுரந்தரனார். (எகூ)

வன்னெஞ்சினென்னைநீத்துப்போய்வானடைந்தால்
இன்னஞ்சிலரோடொருவயிற்றின்யார்பிறப்பார்
மின்னஞ்சும்வேலோய்விழியஞ்சவாழ்கின்றார்
தன்னெஞ்சந்தாமேதடவாரோதானவர்கள். (அ௦)

கல்லன்றோநீராடுங்காலத்துட்காதேய்க்கும்
மல்லொன்றுதோளாய்வடமேருமானுடவன்
வில்லொன்றுநின்னைவிளிவித்துளதென்னும்
சொல்லன்றோவென்னைச்சுடுகின்றதுதோன்றால். (அக)

மாண்டனவாஞ்சூலமுஞ்சக்கரமும்வச்சிரமும்
தீண்டினவாவொன்றுஞ்செயலாற்றாவாந்தெறித்து
மீண்டனவாமானுடவன்மெல்லம்புமெய்யுருவ
நீண்டனவாந்தாமின்னுநின்றாராந்தோனோக்கி. (அஉ)

நோக்கறவுமெம்பியர்கண்மாளவுமிந்நொய்திலங்கை
போக்கறவுமாதுலனார்பொன்றவுமென்பின்பிறந்தாள்
மூக்கறவும்வாழ்ந்தேனொருத்திமுலைக்கிடந்த
ஏக்கறவாலின்னமிரேனோவுனையிழந்தும். (அ௩)

தன்னைத்தான்றம்பியைத்தான்றானைத்தலைவனைத்தான்
மன்னைத்தான்மைந்தனைத்தான்மாருதத்தின்காதலைத்தான்
பின்னைக்கரடிக்கிறையைத்தான்பேர்மாய்த்தாய்
என்னைத்தான்கேட்டிலேனென்னனைவாறிதுவே. (அச)

ஏழைமகளிரடிவருடவீர்ந்தென்றல்
வாழுமணியரங்கிற்பூம்பள்ளிவைகுவாய்

---

78. தும்பியோ - யானையே. ஓ, இரக்கத்தைக்குறிக்கும்விளிவேற்றுமை.
83. ஏக்கறவால் - ஆசையால்.

சூழுமலகைதுணங்கைப்பறைதுவைப்பப்
பூழியணைமேற்றுயின்றனையோபோர்க்களத்தே. (௮௫)

செந்தேன்பருகித்திசைதிசையுநீவாழ
உய்ந்தேனினியின்றுநாளுமுனக்காவி
நொந்தேன்பிரியேன்றனிப்போகத்தாழ்க்கிலேன்
வந்தேன்றொடரமதக்களிறேறவந்தேனால். (௮௬)

அண்டத்தளவுமினையபகர்ந்தழைத்துப்
பண்டைத்தன்னாமத்தின்காரணத்தைப்பாரித்தான்
தொண்டைக்கனிவாய்துடிப்பமயிர்பொடிப்பக்
கெண்டைத்தடங்கண்ணாளுள்ளேகிளுகிளுந்தாள். (௮௭)

வீங்கினாள்கொங்கைமெலிந்தமெலிவகல
ஓங்கினாளுள்ளமுவந்தாளுயிர்புகுந்தாள்
தீங்கிலாக்கற்பிற்றிருமடந்தைசேடியாம்
பாங்கினாளுற்றதனையாரேபகர்கிற்பார். (௮௮)

கண்டாள்கருணனைத்தன்கண்கடந்ததோளானைக்
கொண்டாளொருதுணுக்கமன்னவனைக்கொற்றவனார்
தண்டாதவாளிதடிந்ததனிவார்த்தை
உண்டாளுடறடித்தாள்வேறொருத்தியொக்கின்றாள். (௮௯)

தாவரியபேருலகத்தெம்பிசவத்தோடும்
யாவரையும்கொன்றடுக்கியென்றும்மிறவாத
மூவரையுமேலைநாண்மூவாமருந்துண்ட
தேவரையும்வைப்பேன்சிறையென்னச்சீறினான். (௯௦)

அக்கணத்துமந்திரியராற்றச்சிறிதாறி
இக்கணத்துமானுடவீரக்குருதியால்
முக்கைப்புனலுகுப்பனெம்பிக்கெனமுனியாத்
திக்கனைத்தும்போர்கடந்தான்போயினான்றீவிழியான். (௯௧)

கூற்றுமினிநாமக்கும்பகருணனார்
பாறுடுவெங்களத்துப்பட்டாரெனப்பதையா
வேறோர்சிறையிவனைவைம்மின்விரைந்தென்ன
மாறோர்திசைநோக்கிப்போனார்மகோதரனார். (௯௨)

---

87. இராவணன் என்பதற் கழுபவன் என்றும் பொருளாதலிற் பண்டைத்தன்னாமத்தின் காரணத்தைப் பாரித்தான் என்றார்.

91. முக்கைப்புனலுகுப்பன் - மூன்றுகை நீரளிப்பன்.

வேறு.

வரிசடைநறுமலர்வண்டுபாடலாத்
துரிசடைபுரிகுழல்சும்மைசுற்றிய
ஒருசடையுடையவட்குடையவன்பினாள்
திரிசடைதெருட்டுவாளினையசெப்புவாள். (௯௩)

உந்தையென்றுனக்கெதிருருவமாற்றியே
வந்தவன்மருத்தனென்றுளனோர்மாயையான்
அந்தமில்கொடுந்தொழிலரக்கனாமெனாச்
சிந்தையினுணர்த்தினளமுதின்செம்மையாள். (௯௪)

நங்கையுமவளுரைநாளுந்தேறுவாள்
சங்கையுமின்னலுந்துயருந்தள்ளினாள்
இங்குநின்றேகியவிலங்கைகாவலன்
அங்குநின்றியற்றியதறைகுவாமரோ. (௯௫)

ஆக திருவிருத்தம் - ௧௬௭௫.

## ௧௭-வது, அதிகாயன்வதைப்படலம்.

கொழுந்துவிட்டழன்றெறிமடங்கல்கூட்டற
எழுந்தெரிவெகுளியானிருமருங்கினும்
தொழுந்தகையமைச்சரைச்சுளித்துநோக்குறா
மொழிந்தனனிடியொடுமுகிலுஞ்சிந்தவே. (௧)

ஏகுதிரெம்முகத்தெவருமென்னுடை
யோகவெஞ்சேனையுமுடற்றுமும்முடைச்
சாகரத்தானையுந்தழுவச்சார்ந்தவர்
வேகவெஞ்சிலைத்தொழில்விலக்கிவீட்டிரால். (௨)

எடுத்தவரிருந்துழியெய்தியாரையும்
படுத்திவண்மீடுமென்றுரைத்தபண்பினீர்
தடுத்திலீரெம்பியைத்தாங்குகிற்றிலீர்
கொடுத்திலீரும்முயிர்வீரக்கோட்டியீர். (௩)

உம்மையினன்றுநானுலகமூன்றுமென்
வெம்மையினாண்டதுநீரென்வென்றியால்
இம்மையினெடுந்திருவெய்தினீரினிச்
செம்மையினின்றுயிர்தீர்ந்துதீர்திரால். (௪)

ஆற்றலமென்றிரேலென்மின்யானவர்
தோற்றலம்வந்துகத்துரந்துதொன்னெடுங்
கூற்றலதுயிரதுகுடிக்குங்கூர்த்தவென்
வேற்றலைமானுடர்வெரிநிற்காண்பெறல். (௫)

அல்லதுமுண்டுமக்குரைப்பதாரமர்
வெல்லுதுமென்றிரேன்மேற்செல்வீரினி,
வல்லதுமடிதலேயென்னின்மாறுதிர்
சொல்லுறுங்கருத்தெனமுனிந்துசொல்லினன். (௬)

வேறு.

நதிகாய்நெடுமானமுநாணுமுறு
மதிகாய்குடைமன்னனைவைதுரையா
விதிகாயினும்வீரம்வெலற்கரியான்
அதிகாயனெனும்பெயரானறைவான். (௭)

வானஞ்சுகவையகமஞ்சுகமா
லானஞ்சுமுகத்தவனஞ்சுகமேல்
நானஞ்சினெனென்றுனைநாணுகபோர்
யானஞ்சினெனென்றுமியம்புமதோ. (௮)

வெம்மைப்பொருதானவர்மேல்வலியோர்
தம்மைத்தளையிற்கொடுதந்திலனோ
உம்மைக்குலையப்பொருமும்பரையும்
கொம்மைக்குயவட்டணைகொண்டிலனோ. (௯)

காய்ப்புண்டநெடும்படைகையுளதாத்
தேய்ப்புண்டவனுஞ்சிலசில்கணையால்
ஆய்ப்புண்டவனும்மவர்சொல்வலதால்
ஏய்ப்புண்டவனும்மெனவெண்ணிணையோ. (௧௦)

உம்பிக்குயிரீறுசெய்தாரொருவன்
தம்பிக்குயிரீறுசமைத்தவனைக்
கம்பிப்பதொர்வன்றுயர்கண்டிலனேல்
நம்பிக்கொருநன்மகனோவினிநான். (௧௧)

---

5. என்மின் - என்றுரையுங்கள்.

8. மாலான் அஞ்சுமுகத்தவன் - மாலும் ஐம்முகனாகிய உருத்திரன்.

9. வட்டணைகொண்டிலனோ - தாளம்போட்டிலனோ.

10. தேய்ப்புண்டவன் - அட்சன். ஆய்ப்புண்டவன் - கும்பகருணன். ஏய்ப்புண்டவன் - விபீடணன்.

11. நம்பிக்கு - ஆடவர்திலதனாகிய உனக்கு.

கிட்டிப்பொருதக்கிளர்சேனையெலாம்
மட்டித்துயர்வானரர்வன்றலையை
வெட்டித்தரையிட்டிருவில்லினரைக்
கட்டித்தருவென்னிதுகாணுதியால். (கஉ)

சேனைக்கடலோடிடைசெல்கெனினும்
யானிப்பொழுதேதனியேகெனினும்
தானொத்ததுசொல்லுதிதாவிடையென்
றூனித்திறமுன்னியரக்கர்பிரான். (கங)

சொன்னயிதுநன்றுதுணிந்தனைநீ
அன்னனுயிர்தந்தனையாமெனின்யான்
பின்னுளவிராமனெனும்பெயரான்
தன்னாருயிர்கொண்டுசமைக்குவெனால். (கச)

போவாயிதுபோதுபொலங்கழலோய்
மூவாயிரகோடியரோடுமுரண்
காவார்கரிதேர்பரிகாவலினின்
றேவாதனயாவையுமேவினனால். (கரு)

கும்பக்கொடியோனுநிகும்பனும்வே
றம்பொற்கழல்வீரனகம்பனுமுன்
செம்பொற்பொலிதேரயல்செல்குவரால்
உம்பர்க்கும்வெலற்கரியாருரவோர். (கசு)

ஓரேறுசிவற்குளதொப்புளவாம்
வாரேறுவயப்பரியாயிரம்வன்
போரேறிடவேறுவபூணுறுதிண்
தேரேறுதிதந்தனென்வெந்திறலோய். (கஎ)

ஆமத்தனைமாவுடையத்தனைதேர்
சேமத்தனபின்புடைசெல்லவடும்
கோமத்தநெடுங்கரிகோடியொடும்
போமத்தனைவெம்புரவிக்கடலீர். (கஅ)

என்றேவிடைநல்கவிறைஞ்சியெழா
வன்றாள்வயிரச்சிலைகைக்கொடுவாள்
பொன்றாழ்கவசம்புகுதாமுகிலின்
நின்றானிமையோர்கணெளிந்தனரால். (ககூ)

பல்வேறுபடைக்கலம்வெம்பகலோன்
எவ்வேறுதெரிப்பதொடேகினனால்
சொல்வேறுதெழிக்குநர்சுற்றவுமா
வில்வேறுதெரிப்புறுமேனியினான். (உ௦)

இழையஞ்சனமால்களிறெண்ணிலரி
முழையஞ்சமுழங்கினமும்முறைநீர்
உழையஞ்சமுழங்கினநாணொலிகோள்
மழையஞ்சமுழங்கினமாமுரசே. (உக)

ஆர்த்தார்நெடுவானநடுங்கவடி
பேர்த்தார்நிலமாமகள்பேர்வளனத்
தூர்த்தார்நெடுவேலைகடூளியினால்
வேர்த்தாரதுகண்டுவிசும்புறைவோர். (உஉ)

அடியோடுமதக்களியானைகளில்
பிடியோடுநிகர்த்தனபின்புறமுன்
தடியோடுதொடக்கியதாரையவெண்
கொடியோடுதொடக்கியகொண்முகில்லாம். (உ௩)

தாறூடினமால்கரிபின்புடைகாழ்
மாறூடினமாமதமண்டுதலால்
ஆறூடினபாய்பரியானைகளும்
சேறூடினசேணெறிசென்றவெலாம். (உ௪)

தேர்சென்றனசெங்கதிரோனொடுதேர்
ஊர்சென்றனபோலொளியோடைகளின்
கார்சென்றனகார்நிறைசென்றனபோல்
பார்சென்றனசென்றிலபாய்பரியே. (உரு)

மேருத்தனைவெற்பினமொய்த்துநெடும்
பாரிற்செலுமாறுபடப்படரும்
தேர்சுற்றிடவேகொடுசென்றுமுரட்
போர்முற்றுகளத்திடைபுக்கனனால். (உ௬)

கண்டானவிராமனெனுங்களிமா
உண்டாடியவெங்களனூடுருவப்
புண்டானுறுநெஞ்சுபுழுக்கமுறத்
திண்டாடினன்வந்தசினத்திறலோன். (உ௭)

---

20. வெம்பகலோன் - உச்சிக்கால சூரியன்.

மலைகண்டனபோல்வருதோளொடுதோள்
கலைகண்டகருங்கடல்கண்டுளவாம்
நிலைகண்டனகண்டொருதாதைநெடுந்
தலைகண்டிலனின்றுசலித்தனனால். (௨௮)

மிடலொன்றுசரத்தொடுமீதுயர்வான்
திடலன்றுதிசைக்களிறன்றொருதிண்
கடலன்றிதெனந்தைகடக்கரியான்
உடலென்றுயிரோடுமுகுத்தனனால். (௨௯)

எல்லையிவைகாணியவெய்தினனோ
வல்லையுளராயினமானுடரைக்
கொல்லேலனொருநானுயிர்கோணெறியிற்
செல்லேலெனினிவ்விடர்தீர்குவெனோ. (௩௦)

என்னாமுனியாவிதிழைத்துளவன்
பின்னானையுமிப்படிசெய்துபெயர்ந்
தன்னானிடர்கண்டிடராறுவனென்
றுன்னாவொருவற்கிதுணர்த்தினனால். (௩௧)

வாநீமயிடன்னொருவல்லிசையிற்
போநீயவிலக்குவனிற்புகல்வாய்
நாணீதுதுணிந்தனெனண்ணினனால்
மேனீயிதுணர்ந்துவிளம்பிடுவாய். (௩௨)

அந்தாரிளவற்கயர்வெய்தியழும்
தந்தாதைமனத்திடர்தள்ளிடுவான்
உந்தார்துயரோடுமுருத்தெரிவான்
வந்தானெனமுன்சொல்வழங்குதியால். (௩௩)

கோளுற்றவனெஞ்சுசுடக்குழைவான்
ஆளுற்றவிருக்கையில்யானொருதன்
தாளற்றுருளக்கணைதள்ளிடுவான்
சூளுற்றதுமுண்டதுசொல்லுதியால். (௩௪)

தீதென்றதுசிந்தனைசெய்திலனால்
ஈதென்றறமன்னெறியாமெனநீ
தூதென்றிகழாதுளசொல்வதலால்
போதென்றுடனேகொடுபோதுதியால். (௩௫)

---

32. வானீஎன்றும்பாடம்.

செருவாசையினார்புகழ்தேடுறுவார்
இருவோரையுநீவலியுற்றெதிரே
பொருவோர்நமனார்பதிபுக்குறைவோர்
வருவோரையெலாம்வருகென்னுதியால். (௩௬)

சிந்தாகுலமெய்ந்தைதிருத்திடுவான்
வந்தானெனவென்னெதிரேமதியோய்
தந்தாயெனின்யானலதியார்தருவார்
உந்தாரியவல்லவுயர்ந்தவெலாம். (௩௭)

வேறேயவிலக்குவனென்னவிளம்
பேறேவருமேலிமையோரெதிரே
கூறேபலசெய்துயிர்கொண்டிணையும்
மாறேயொருமன்னனைவைக்குவெனால். (௩௮)

விண்ணாடியர்விஞ்சையரஞ்சொலினார்
பெண்ணாரமுதன்னவர்பெய்தெவரும்
உண்ணாதனகூர்நறவுண்டதசும்
பெண்ணாயிரமாயினுமீகுவெனால். (௩௯)

உறைதந்தனசெங்கதிரோனுருவில்
பொறைதந்தனகாசொளிர்பூணிமையோர்
திறைதந்தனதெய்வநிதிக்கிழவன்
முறைதந்தனதந்துமுடிக்குவெனால். (௪௦)

மாறுமதவாரியவண்டினொடும்
பாறுடுமுகத்தனபல்பகலும்
தேறுதனசெங்களிவெங்கதமா
நூறாயிரமாயினுநுந்துவெனால். (௪௧)

செம்பொன்னிணைமைந்துசமைந்தனதேர்
உம்பர்நெடுவானினுமொப்புறமா
பம்பும்மணிதாரணிபாய்பரிமா
இம்பர்நடவாதனவீகுவெனால். (௪௨)

நிதியின்னிரைகுப்பைநிறைந்தனவும்
பொதியின்மிளிர்காசுபொறுத்தனவும்

37. உந்தாரிய - உந்த அரிய. உந்த - நீக்க.
42. இம்பர் நடவாதன - வானிற்செல்வன.

மதியின்னொளிர்தூசுவகுத்தனவும்
அதிகஞ்சுகமாயிரமீகுவெனால். (௪௩)

மற்றும்மொருதீதின்மணிக்கணிதம்
உற்றுன்னினைவியாவையுமுந்துவெனால்
பொற்றிண்கழலாய்நனிபோவெனலோ
டெற்றுந்திரடோளவனேகினால். (௪௪)

ஏகித்தனிசென்றெதிரெய்தலுறும்
காகுத்தனையெய்தியகாலையின்வாய்
வேகத்தொடுவீரர்விசைத்தெழலும்
ஓகைப்பொருளுண்டெனவோதினால். (௪௫)

போதம்முதல்வாய்மொழியேபுகல்வோன்
ஏதும்மதியான்வறிதேகினால்
தூதன்னவனைச்சுளியன்மினெனா
வேதம்முதனாதன்விலக்கினால். (௪௬)

என்வந்தகுறிப்பதியம்பெனலும்
மின்வந்தவெயிற்றவன்வில்வலவுன்
பின்வந்தவனேயறிபெற்றியதால்
மன்வந்தகருத்தெனமன்னர்பிரான். (௪௭)

சொல்லாயதுசொல்லிடுசொல்லிடெனா
வில்லாளனிளங்கிளையோன்வினவப்
பல்லாயிரகோடிபடைக்கடன்முன்
நில்லாயெனநின்றுநிகழ்த்தினால். (௪௮)

உன்மேலதிகாயனுருத்துளனாய்
நன்மேருவினின்றனனாடியவன்
தன்மேலெதிரும்வலிதக்குளையேல்
பொன்மேனியவென்னொடுபோதுதியால். (௪௯)

சையப்படிவத்தொருதந்தையைமுன்
மெய்யெப்படிசெய்தனனும்முன்விரைந்
தய்யப்படலப்படியிப்படியில்
செய்யப்படுகிற்றிதெரித்ததனால். (௫௰)

கொன்றானொழியக்கொலைகோளறியான்
நின்றானொடுநின்றதெனேடியெனின்
தன்றாதைபடுந்துயர்தந்தையைமுன்
வென்றானையியற்றுமவேட்கையினால். (௫௧)

வானோர்களுமண்ணினுளோர்களுமற்
றீனோர்களுமிவ்வுரைகேண்மினிவன்
தானேபொருவானயலேதமர்வந்
தானாருமுடன்பொருவானமைவான். (௫௨)

என்றேயுலகேழினொடேழினையும்
தன்றாமரைபோலிருதாளளவா
நின்றானுரைசெய்யநிசாசரனும்
பின்றாவுரையொன்றுபிதற்றினனால். (௫௩)

எழுவாயினியென்னுடனென்றெரியும்
மழுவாய்நிகர்வெஞ்சொல்வழங்குதலும்
தழுவாயுடனேகுதிதாழெனத்
தொழுவார்தொழுதாளரிசொல்லுதலும். (௫௪)

எல்லாமுடனெய்தியபின்னிவனே
வில்லாலொருபோர்செயவேண்டுமென
நல்லாறுடைவீடணனாரணன்முன்
சொல்லாடினனன்னவைசொல்லுதுமால். (௫௫)

வாரேறுகழற்சினவாளரியெம்
போரேரொருபோர்புரிவானமையாத்
தேரேறுசினக்கடுவெந்தறுகட்
காரேறெனவந்தகதத்தொழிலோன். (௫௬)

ஓவாநெடுமாதவமொன்றுடையான்
தேவாசுரராதியர்செய்செருவில்
சாவானிறையுஞ்சலியாவலியான்
மூவாமுதனான்முகனார்மொழியால். (௫௭)

கடமேய்கயிலைக்கிரிகண்ணுதலோ
டிடமேறவெடுத்தனமென்றிவனைத்
திடமேலுலகிற்பலதேவரொடும்
வடமேருவெடுக்கவளர்த்தனனால். (௫௮)

மாலாரொடுமந்தரமாசுணமும்
மேலாகியதேவரும்வேண்டுமென

57. தேவர் அசுரர் - தேவாசுரர்.

58. கடமே - இமயமலை.

ஆலாலமுமாரமிழ்தும்மமையக்
காலானெடுவேலைகலக்கிடுமால். (௫௯)

ஊழிக்குமுயர்ந்தொருநாளொருவாப்
பாழித்திசைநின்றுசுமந்தபணைச்
சூழிக்கரிதள்ளுதடோள்வலியோ
ஆழிக்கிரிதள்ளுமொராங்கையினால். (௬௦)

காலங்கள்கணக்கிலகண்ணிமையா
ஆலங்கொண்மிடற்றவனாரழல்வாய்
வேலங்கொழியக்கொடுவிட்டதுநீள்
சூலங்கொலெனப்பகர்சொல்லுடையான். (௬௧)

பகையாடியவானவர்பல்பகையூர்
புகையாடியநாள்புனைவாகையினான்
மிகையாருயிருண்டெனவீசியவெந்
தகையாழிதகைந்ததனுத்தொழிலான். (௬௨)

உயிரொப்புறுபல்படையுள்ளவெலாம்
செயிரொப்புறுமிந்திரர்சிந்தியநாள்
அயிரொப்பனநுண்டுகள்செய்தவர்தம்
வயிரப்படைதள்ளியவாளியினான். (௬௩)

கற்றான்மறைநூலொடுகண்ணுதல்பால்
முற்றாதனதேவர்முரட்படைதாம்
மற்றாரும்வழங்கவலாரிலவும்
பெற்றானெடிதாண்மைபிறந்துடையான். (௬௪)

அறனல்லதுநல்லதுமற்றறியான்
மறனல்லதுபல்பணிமாறணியான்
திறனல்லதொராருயிருஞ்சிதையான்
உறனல்லதுபேரிசையென்றுணர்வான். (௬௫)

காயத்துயிரேவிடுகாலையினும்
மாயத்தவர்கூடிமலைந்திடினும்
தேயத்தவர்செய்குதல்செய்திடினும்
மாயத்தொழில்செய்யமதித்திலனால். (௬௬)

மதுகைடவரென்பவர்வானவர்தம்
பதிகைகொடுகட்டவர்பண்டொருநாள்

அதிகைதவராழியனந்தனையும்
விதிகைம்மிகமுட்டியவெம்மையினர். (௬௭)

நீராழியிழிந்துநெடுந்தகையைத்
தாராயமரென்றனர்தாமொருநாள்
ஆராழியவண்ணனுமஃதிசையா
வாராவமர்செய்கெனவந்தனனால். (௬௮)

வல்லாருருவாயிரமாய்வரினும்
நல்லார்முறைநவிசிநருந்திறலார்
மல்லாவிளகாதுமலைந்தனன்மால்
அல்லாயிரமாயிரமஃகினவால். (௬௯)

தன்போல்பவர்தானுமிலாததனிப்
பொன்போலொளிர்மேனியனைப்புகழோய்
என்போல்பவர்சொல்லுவதெண்ணுடையார்
உன்போல்பவர்யாருளரென்றுரையா. (௭௦)

ஒருவேமுலகேழையுமுண்டுமிழ்வேம்
இருவேமொடுநீதனியித்தனைநாள்
பொருவேமொடுநேர்பொருதாய்புகழோய்
தருவேநின்மனத்ததுதந்தனமால். (௭௧)

ஒல்லும்படிநல்லதுனக்குதவச்
சொல்லும்படியென்றவர்சோறலுமே
வெல்லும்படிநும்மைவிளம்புமெனக்
கொல்லும்படியாலரிகூறுதலும். (௭௨)

இடையிற்படுகிற்கிலம்யாமொருநின்
தொடையிற்படுகிற்றுமெனத்துணியா
அடையச்செயகிற்றியதாணையெனா
நடையிற்படுநீதியர்நல்குதலும். (௭௩)

விட்டானுலகியாவையுமேலொடுகீழ்
எட்டாவொருவன்றனிடத்தொடையை
ஒட்டாதவரொன்றினரூழ்வலியால்
பட்டாரிதுபட்டதுபண்டொருநாள். (௭௪)

தனிநாயகன்வன்கதைதன்கைகொளா
நனிசாடவிழுந்தனர்நாளுலவாப்

72. ஒல்லும்படி - பொருந்தும்படி. 74. இதுபட்டது - இதுநடந்தது.

பனியாமதுமேதைபடப்படர்மே
தினியானதுபூவுலகெங்கணுமே. (எ௫)

விதியாலிவ்வுகந்தனின்மெய்வலியான்
மதுவானவனெம்முன்மடிந்தனனால்
கதிர்தானிகர்கைடவனிக்கதிர்வேல்
அதிகாயனிதாகவறிந்தனனால். (எ௬)

என்றானவ்விராவணனுக்கிளையான்
நன்றாகுகவென்றொருநாயகனும்
மின்றானுமிழ்வெண்ணகைவேறுசெயா
நின்றானிதுகூறிநிகழ்த்தினனால். (எஎ)

எண்ணாயிரகோடியிராவணரும்
விண்ணாடரும்வேறுலகத்தெவரும்
நண்ணாவொருமூவருநண்ணிடினும்
கண்ணாலிவன்விற்றொழில்காணுதியால். (எ௮)

வானென்பதெதன்வையகமென்பதெதன்மால்
தானென்பதெதன்வேறுதனிச்சிலையோர்
யானென்பதெனீசனெனின்றிமையோர்
கோனென்பதனெம்பிகொதித்திடுமேல். (எ௯)

தெய்வப்படையுஞ்சினமுந்திறனும்
மையற்றொழிமாதவமற்றுமெலாம்
எய்தற்குளவோவிவனிச்சிலையில்
கைவைப்பளவேயிறல்காணுதியால். (௮௦)

என்றேறவியைவஞ்சனைசெய்தெழுவான்
அன்றேமுடிவானிவனன்னவள்சொல்
குன்றேறெனவேகியகொள்கையினால்
நின்றானுளனையநெடுந்தகையான். (௮௧)

ஏகாயுடனீயுமெதிர்ந்துளனும்
மாகாயனெடுந்தலைவாளியொடும்
ஆகாயமளந்துவிழுந்ததனைக்
காகாதியநுங்குதல்காணுதியால். (௮௨)

நீரைக்கொடுநீயெதிர்நிற்கினுமே
தீரக்கொடியாரொடுதேவர்பொரும்

79. கொதித்திடுமேல் - சீறுவானானால்.

போரைக்கொடுவந்துபுகுந்ததுநாம்
ஆரைக்கொடுவந்தயர்த்தனையோ. (அ௩)

சிவனல்லனெனிற்றிருவின்பெருமான்
அவனல்லனெனிற்புவிதந்தருளும்
தவனல்லனெனிற்றனியேதவயோன்
இவனல்லனெனிற்பிறர்யாருளரே. (அ௪)

ஒன்றுயிரவெள்ளமொருங்குளவாம்
வன்றனையர்வந்துவளைந்தவெலாம்
கொன்றனிவனல்லதுகொண்டடனே
நின்றார்பிறருண்மைநினைந்தனையோ. (அ௫)

கொல்வானுமிவன்கொடியோனையெலாம்
வெல்வானுமிவன்னடல்விண்டுவென
ஒல்வானுமிவன்னுடனேயொருநீ
செல்வாயெனவேவுதல்செய்தனனால். (அ௬)

அக்காலையிலக்குவனாரியனை
முக்காலும்வலங்கொடுமூதுணர்வின்
மிக்கான்மதிவீடணன்மெய்தொடரப்
புக்கானவன்வந்துபுகுந்தகளம். (அ௭)

சேனைக்கடல்சென்றதுதென்கடன்மேல்
ஏனைக்கடல்வந்ததெழுந்ததென
ஆனைக்கடறேர்பரியாண்மிடையும்
தானைக்கடலோடுதலைப்படலும். (அஅ)

வேறு.

பசும்படுகுருதியிற்பண்டுசேறுபட்
டசும்பறவுருகியவுலகமார்ப்பெழக்
குசும்பையினறுமலர்ச்சுண்ணக்குப்பையின்
விசும்பையுங்கடந்ததுவிரிந்ததூளியே. (அ௯)

தாமிடித்தெழும்பணைமுழக்குஞ்சங்கினம்
ஆமிடிக்குமுறலுமார்ப்பினோதையும்
ஏமுடைக்கொடுஞ்சிலையிடிப்புமஞ்சித்தம்
வாய்மடித்தொடுங்கினமகரவேலையே. (௯0)

89. குசும்பை - ஒருமலர்விசேடம்.
90. மகரம் - சுறுமீன்.

உலைதொறுங்குருதிநீரருவியொத்துக
இலைதுறுமரமெனக்கொடிகளிற்றுக
மலைதொறும்பாய்ந்தெனமானயானையின்
தலைதொறும்பாய்ந்தனகுரங்குதாவியே. (௬௧)

கிட்டினகிளைநெடுங்கோட்டகீழுகு
மட்டினவருவியின்மதத்தவானரம்
விட்டனநெடுவரைவெம்மைவேழத்தை
முட்டினவொத்தனமுகத்தின்வீழ்வன. (௬௨)

இடித்தனவுறுக்கினவிறுக்கியேய்ந்தன
தடித்தனவெயிற்றினிற்றலைகள்சந்தறக்
கடித்தனகவிக்குங்கால்கண்மேற்படத்
துடித்தனகுருதியிற்றுரகராசியே. (௬௩)

அடைந்தனகவிக்குலமெற்றவற்றன
குடைந்தெறிகால்பொரப்பூட்கைக்குப்பைகள்
இடைந்தனமுகிற்குலமிரிந்துசாய்ந்தென
உடைந்தனகுலமருப்புகுத்தமுத்தமே. (௬௪)

தோல்படத்துதைந்தெழுவயிரத்தூணிகர்
கால்படக்கைபடக்காலபாசம்போல்
வால்படப்புரண்டனர்நிருதர்மற்றவர்
வேல்படப்புரண்டனர்கவியின்வீரரே. (௬௫)

மரவமுஞ்சிலையொடுமலையும்வாளெயிற்
றரவமுங்கரிகளும்பரியுமல்லவும்
விரவினகவிக்குலம்வீசவிம்மலால்
உரவருங்கானெனப்பொலிந்ததும்பரே. (௬௬)

தடவரைக்கவிக்குலத்தலைவர்தாங்கின
அடல்வலிநிருதர்தம்மணிகராசிமேல்
விடவிடவிசும்பிடையிடைந்துவீழ்வன
படர்கடலினமழைபடிவபோன்றவே. (௬௭)

இழுக்கினரடிகளினிங்குமங்குமா
மழுக்களுமயில்களும்வாளுந்தோள்களும்
முழுக்கினருழக்கினர்மூரியாக்கையை
ஒழுக்கினர்நிருதரையுதிரவாற்றினே. (௬௮)

மிடலுடைக்கவிக்குலங்குருதிவெள்ளநீர்
இடையிடைநீந்தினவியைந்தயானையின்
திடரிடைச்சென்றவையொழுகிச்சேர்ந்தன
கடலிடைப்புக்கனகரையுங்காண்கில. (௯௯)

கால்பிடித்தீர்த்திழிகுருதிக்கண்ணகன்
சேல்பிடித்தெழுதிரையாற்றிற்றிண்ணெடுங்
கோல்பிடித்தெழுகுறுகுருடர்கூட்டம்போல்
வால்பிடித்தொழுகினகவியின்மாலையே. (௧௦௦)

பாய்ந்ததுநிருதர்தம்பரவைபன்முறை
காய்ந்ததுகடும்படைகலக்கிக்கைதொறும்
தேய்ந்ததுசிதைந்ததுசிந்திச்சேணுறச்
சாய்ந்ததுதகைப்பெருங்கவியின்றானையே. (௧௦௧)

அத்துணையிலக்குவனஞ்சலஞ்சலென்
றெத்துணைமொழிகளுமியம்பியேற்றினன்
கைத்துணைவில்லினைக்காலன்வாழ்வினை
மொய்த்துணைநாணினைமுழங்கத்தாக்கினான். (௧௦௨)

ஞான்மறைந்தொளிப்பினுநுவன்றபூதங்கள்
மேன்மறைந்தொளிப்பினும்விரிஞ்சன்வீயினும்
கான்மறைந்தொளிக்கிலாக்கடையிற்கண்ணகன்
நான்மறையார்ப்பெனநடந்ததவ்வொலி. (௧௦௩)

துரந்தனசுடுசரந்துரந்ததோன்றல
கரந்தனநிருதர்தங்கரையில்யாக்கையின்
நிரந்தரநெடும்பிணம்விசும்பினெஞ்சுறப்
பரந்தனகுருதியப்பள்ளவெள்ளத்தின். (௧௦௪)

யானையின்கரந்துரந்திரதவீரர்தம்
வானுயர்முடித்தலைதடிந்துவாசியின்
கானிரையறுத்துவெங்கறைக்கண்மொய்ம்பரை
ஊனுடையுடல்பிளந்தோடுமம்புகள். (௧௦௫)

வில்லிடையறுத்துவேறுணித்துவீரர்தம்
எல்விடுகவசமுமார்புமீர்த்தெறி
கல்லிடையறுத்துமாக்கடிந்துதேரழீஇக்
கொல்லியல்யானையைக்கொல்லுங்கூற்றினே. (௧௦௬)

---

102. அத்துணை - அவ்வமயம்.

வெற்றிவெங்கரிகளின்வளைந்தவெண்மருப்
பற்றெழுவிசைகளினும்பரண்மின
முற்றருமுப்பகற்றிங்கள்வெண்முளை
உற்றனவிசும்பிடைப்பலவுமொத்தன. (௧0௭)

கண்டகர்நெடுந்தலைகளுங்கண்ணன
துண்டவெண்பிறைத்துணிகவ்வித்தூக்கிய
குண்டலமீன்குலந்தழுவிக்கோண்மதி
மண்டலம்விழுந்தனபோன்றமண்ணினே. (௧0௮)

கூர்மருப்பிணையனகுறைந்தகையன
கார்மதக்கனவரைகவிழ்ந்துவீழ்வன
போர்முகக்குருதியின்புணரிபுக்கன
பாரெடுக்குறுநெடும்பன்றிபோன்றன. (௧0௯)

புண்ணுறவுயிருகும்புரவிபூட்டறக்
கண்ணகன்றேர்க்குலமறிந்தகாட்சிய
எண்ணுறுபெரும்பதம்வினையினெஞ்சிட
மண்ணுறவிண்ணின்வீழ்மானம்போன்றன. (௧௧0)

அடற்கருங்கவந்தநின்றாடுகின்றன
விடற்கரும்வினையறச்சிந்திமெய்யுயிர்
கடக்கருந்துறக்கமேகலந்தவாமென
உடற்பொறையுவகையிற்குனிப்பவொத்தன. (௧௧௧)

ஆடுகவந்தமொன்றாறெண்ணாயிரம்
வீடியபொழுதெனும்பனுவன்மெய்யதேல்
கோடியின்மேலுளகுனித்தகொற்றவன்
பாடினியொருவராற்பகரற்பாலதோ. (௧௧௨)

ஆனையின்குருதியுமரக்கர்சோரியும்
ஏனைவெம்புரவியினுதிரத்தீட்டமும்
கானினுமலையினும்பரந்தகார்ப்புனல்
வானயாறெனக்கடன்மடுத்ததே. (௧௧௩)

தாக்கியசரங்களிற்றலைகணீங்கிய
ஆக்கையபுரசையோடளைந்ததாளன
மேக்குயரங்குசக்கையவெங்கரி
நூக்குவகணிப்பிலவரக்கர்நோன்பிணம். (௧௧௪)

---

112. கொற்றவன் - இலக்குமணன். பாடு - பெருமை.

கோளுடைக்கணைபடப்புரவிகூத்தன
தோளுடைநெடுந்தலைதுமிந்துந்தீர்கில
ஆளுடைக்குறைத்தலையதிரவாடுவ
வாளுடைத்தடக்கையவாசிமேலன. (௧௧௫)

வைவனமுனிவர்சொல்லனையவாளிகள்
கொய்வனதலைகடோள்குறைத்தலைக்குழாம்
கைவளைவரிசிலைக்கடுப்பிற்கைவிடா
எய்வனவெனைப்பலவிரதமேலன. (௧௧௬)

தாதையைத்தம்முனைத்தம்பியைத்தனிக்
காதலைப்பெயரனைமருகனைக்களத்
தூதையினொருகணையுருவமாண்டனர்
சீதையென்றொருகொடுங்கூற்றந்தேடினார். (௧௧௭)

தூண்டருங்கணைபடத்துமிந்துதுள்ளிய
தீண்டருநெடுந்தலைதழுவிச்சேர்ந்தன
பூண்டெழுகரதலம்பொறுக்கலாதன
ஆண்டலைநிகர்த்தனவெருவையாடுவ. (௧௧௮)

ஆயிரவாயிரகோடியாய்வரும்
தீயுமிழ்கடுங்கணைமனத்திற்செல்வன
பாய்வனபுகுவனநிருதர்பல்லுயிர்
ஓய்வனநமன்றமர்கால்களோயவே. (௧௧௯)

விளக்குவான்கணைகளால்விளிந்துமேருவைத்
துளக்குவாருடற்பொறைதுணிந்துதுள்ளுவார்
இளக்குவாரமரர்தஞ்சிரத்தையேன்முது
குளுக்குவாணிலமகள்பிணத்தினோங்கலால். (௧௨௦)

தாருகனென்றுளனொருவன்றானெடு
மேருவின்பெருமையானெரியின்வெம்மையான்
போருவந்துழக்குவான்புகுந்துதாங்கினான்
தேரினான்சிலையினனுமிழுந்தீயினன். (௧௨௧)

தூரந்தனனெடுஞ்சரநெருப்பின்றோற்றத்த
பரந்தனவிசும்பிடையொடுங்கப்பண்டுடை
வரந்தனின்வளர்வனவற்றைவள்ளலும்
கரந்தனன்கணைகளான்முனிவுகாந்துவான். (௧௨௨)

117. ஊதை - ஊழிக்காற்று.

அண்ணறன்வடிக்கணை துணிப்பவற்றவன்
கண்ணகநெடுந்தலைவிசையிற்காரென
விண்ணிடையார்த்ததுவிரைவின்மெய்யுயிர்
உண்ணியவந்தவெங்கூற்றுமுட்கவே. (கஉ௩)

காலனுங்குலிசனுங்காலசங்கனும்
மாலியுமருத்தனுமருவுமைவரும்
சூலமுங்கணிச்சியுங்கடிதுசுற்றினர்
பாலமும்பாசமுமயிலும்பற்றுவார். (கஉ௪)

அன்னவரெய்தனவெறிந்தவாயிரம்
துன்னரும்படைக்கலந்துணித்துத்தூவினன்
நன்னெடுந்தலைகளைத்துணித்துநால்வகைப்
பன்னெடுந்தானையைப்பாறநூறினன். (கஉ௫)

ஆண்டதிகாயன்றன்சேனையாடவர்
ஈண்டினமதகரியேழுணுயிரம்
தூண்டினர்மருங்குறச்சுற்றினர்தொகை
வேண்டியபடைக்கலமுறையின்வீசுவார். (கஉ௬)

போக்கிலாவகைப்புறம்வளைத்துப்பொங்கினர்
தாக்கினர்திசைதொறுந்தடக்கைமால்வரை
நூக்கினர்படைகளானுறுக்கினர்குழம்
பாக்கினர்கவிகடங்குழுவையார்ப்பினர். (கஉ௭)

எறிந்தனவெய்தனவெய்தியொன்றொடொன்
றறைந்தனவசனியின்விசையினைசைகள்
நிறைந்தனமழையெனநெருக்கிநிற்றலால்
மறைந்தனவுலகொடுதிசையும்வானமும். (கஉ௮)

அப்படையனைத்தையுமறுத்துவீழ்த்தவர்
துப்புடைத்தடக்கைகடுணித்துச்சுற்றிய
முப்புடைமதமலைக்குலத்தைமுட்டினன்
எப்புடைமருங்கினுமெரியும்வாளியான். (கஉ௯)

வேறு.

குன்றனமதகரிகொம்பொடுகரமற
வன்றலைதுமிதரமஞ்செனமறிவன

ஒன்றலவொருபதுமொன்பதுமொருகணை
சென்றரிதரமழைசிந்துவமதமலை. (௧௱௦)

ஒருதொடைவிடுவனவுருமுறழ்கணைபட
இருதொடைபுரசையொடிறுபவரெறிபடை
விருதுடைநிருதர்கண்மலையெனவிழுவர்கள்
பொருதுடைவனமதமழையெனபுகர்மலை. (௧௱௧)

பருமமுமுதுகிடுபடிகையும்வலிபடர்
மருமமுமழிபடவுழைவனவடிகணை
உருமெனவலியெனவுருள்வனதிசைதிசை
கருமலைநிகர்வனதனிமலைகனல்வன. (௧௱௨)

இறுவனகொடியவையெறிவனவிடையிடை
துறுவனசுடுகணைதுணிவனமதகரி
அறுவனவவையவைகடவினர்தடிதலை
வெறுமைகள்கெடுவனவிழிகுழிகழுதுகள். (௧௱௩)

மிடலொடுவிடுகணைமழையினுமிகையுள
படலொடுமுருமெறிபருவரைநிலையென
உடலொடுமுருள்கரிபுதிரமதுருகெழு
கடலொடுபொருததுகரியொடுகரியென. (௧௱௪)

மேலவர்படுதலின்விடுமுறையிலமிடல்
ஆலமுமசனியுமனையனவிடுகரி
மாலுறுகரியினின்மறுகினமதமழை
போல்வனதமதமவெதிரெதிர்பொருவன. (௧௱௫)

கால்சிலதுணிவனகரமறுவனகதழ்
வால்சிலதுணிவனவயிறுகள்வெளிபட
நால்சிலகுடரனநகழ்வனசிலவரு
தோல்சிலகணைபலசொரிவனமழையன. (௧௱௬)

முட்டினமுட்டறமுரணுறுதிசைநிலை
எட்டினுமெட்டருநிலையனவெவையவன்
விட்டனவிட்டனவிடுகணைபடுதொறும்
பட்டனபட்டனபடர்பணைகுவிவன. (௧௱௭)

அறுபதின்முதலிடைநாலொழியாயிரம்
இறுதியமதகரியிறுதலுமெரியுமிழ்

132, மருமம் - மார்பு. 134, நாலுதல் - தொங்குதல்.

தறுகணர் தகையறுநிலையினர் சலமுறு
கறுவினரவனெதிர்கடவினர்கடலென. (௧௩௮)

எல்லையின்மதகரிவிரவினவினனிகர்
செல்வனமுடிவிலதெறிதொழின்மறவனை
வில்லியையினியிதுவிடுகணைமழையன
கொல்லுதியெனவெதிர்கடவினர்கொடியவர். (௧௩௯)

வந்தனமதகரிவளைதலின்மழைபொதி
செந்தனியொருசுடரெனமறைதிறலவன்
இந்திரதனுவெனவெழுசிலைகுனிவழி
தந்தியினெடுமழைசிதறினதரையின. (௧௪0)

வேறு.

மையற்றனசெவிமுற்பொழிமழைபெற்றனமலையின்
மெய்பெற்றனகடலொப்பனவெயிலுக்கனவிழியின்
மொய்பெற்றனமுதுகிற்றனமுகமுக்கனமுரண்வெங்
கையற்றனமதமுற்றியகணிதத்தியல்கதமா. (௧௪௧)

உண்ணின்றலையலைநீருகவிறுதிக்கடையுறுகால்
எண்ணின்றலைநிமிர்கின்றனவிகல்வெங்கணையிரணப்
பண்ணின்படர்தலையிற்படமடிகின்றனபலவா
மண்ணின்றலைபுருள்கின்றனமழையொத்தனமதமா. (௧௪௨)

பிறைபற்றியவெனுநெற்றியபிழையற்றனபிறழப்
பறையற்றமில்விசைபெற்றனபரியக்கிரியமரர்க்
கிறையற்றையமுனிவிற்படையெறியப்புடையெழுபொற்
சிறையற்றனவெனவிற்றனசினமுற்றியமதமா. (௧௪௩)

கதிரொப்பனகணைபட்டுளகதமற்றிலகதழ்கார்
அதிரத்தனியதிர்கைக்கிரியளவற்றனவளவா
எதிர்பட்டனவொழியக்கிரியிவரித்திரையெழுகார்
உதிரத்தொடுமொழுகிக்கடனடுவுற்றவுமுளவால். (௧௪௪)

கண்ணின்றலையில்வெங்கணைபடைநின்றனகாறு
எண்ணின்றலைநிமிர்வெங்கதமுதிர்கின்றனவினமா
மண்ணின்றலைநெரியும்படிதிரிகின்றனமலைபோல்
உண்ணின்றலைநிருதக்கடலுளறிட்டவுமுளவால். (௧௪௫)

141. முரண்வெம் கை - துதிக்கை.

ஓராயிரமயில்வெங்கணையொருகால்விடுதொடையில்
காராயிரம்விடுதாரையினிமிர்கின்றனகதுவுற்
றீராயிரமதமால்கரிவிழுகின்றனவினிமேல்
ஆராய்வதெனவன்விற்றொழிலமரேசருமறியார். (கசசு)

தேருந்தெறுகரியும்பொருசினமன்னரும்வயவெம்
போரின்றலையுகள்கின்றனபுரவிக்குலமெவையும்
பேருந்திசைபெறுகின்றிலபணையின்பிணைமதவெங்
காரின்றருகுருதிப்பொருகடனின்றனகடவா. (கசஎ)

நூறாயிரமதவெங்கரியொருநாழிகைநுவலக்
கூறாயினபயமுற்றொருகுலைவாயினவுலகம்
தேறாதனமலைநின்றனதெரியாதனசினமா
வேறாயினவவையாவையுமுடனேவரவிட்டான். (கசஅ)

ஒருகோடியமதமால்கரியுளவந்தனவுடன்முன்
பொருகோடியிலுயிருக்கனவொழியப்பொழிமதயா
றருகோடவவரவுந்தினரசனிப்படிகணைகால்
இருகோடுடைமழைவெஞ்சிலையிளவாளரியெதிரே. (கசகூ)

உலகத்துளமலையெத்தனையவையத்தனையுடனே
கொலநிற்பனபொருகிற்பனபுடைசுற்றினகுழுவா
அலகற்றனசினமுற்றியவனலொப்பனவவையும்
தலையற்றனகரமற்றனதனிவிற்றொழிலதனால். (கரு0)

நாலாயினநவயோசனைநனிவன்றிசையெவையும்
மாலாயினமதவெங்கரிதிரிகின்றனவராலும்
தோலாயினவுலகெங்கணுமெனவஞ்சினதுகளே
போலாயினவயவானமுமாறுனதுபுவியே. (கருக)

கடைகண்டனதலைகண்டிலகமுதின்றிரள்பிணமா
இடைகண்டனமலைகொண்டெனவெழுகின்றனதிரையால்
புடைகொண்டெறிகுருதிக்கடல்புணர்கின்றனபொறிவெம்
படைகொண்டிடைபடர்கின்றனமதயாறுகள்பலவால். (கருஉ)

ஒற்றைச்சரமதனோடொருகரிபட்டுகவொளிவாய்
வெற்றிக்கணையுருமொப்பனவெயிலொப்பனவயில்போல்
வற்றக்கடல்சுடுகிற்பனமழையொப்பனபொழியும்
கொற்றக்கரிபதினாயிரமொருபத்தியிற்கொல்வான். (கருங)

மலையஞ்சினமழையஞ்சினவனமஞ்சினபிறவும்
நிலையஞ்சின திசைவெங்கரிநிமிர்கின்றனகடலின்
அலையஞ்சினபிறிதென்சில தனியைங்கரகரியும்
கொலையஞ்சலிபுரிகின்றதுகரியின்படிகொளலால். (கரு௪)

காலேறினசிலநாணொலிகடலேறுகள்படவான்
மேலேறினர்மிசையாளர்கடலைமெய்தொறுமுருவக்
கோலேறினவுருமேறுகள்குடியேறினவெனலாய்
மாலேறினகளியானைகண்மழையேறெனமறிய. (கரு௫)

இவ்வேலையினனுமான்முதலெழுவேலையுமனையான்
வெவ்வேலவர்செலவேவியகொலையானையின்மிகையைச்
செவ்வேயுறநினையாவொருசெயல்செய்குவனென்பான்
தவ்வேலெனவந்தானிவன்றனிவேலெனத்தகையான். (கரு௬)

ஆர்த்தங்கனல்விழியாமுதிர்மதயானையையனையான்
தீர்த்தன்கழல்பரவாமுதலரிபோல்வருதிறலான்
வார்த்தங்கியகழலானொருமரனின்றருகமனூர்
போர்த்தண்டினும்வலியாயதுகொண்டான்புகழ்கொண்டான். ()

கருங்கார்புரைநெடுங்கையனகளியானைகளவைசென்
றொருங்காயினவுயிர்மாய்ந்தனபிறிதென்பலவுரையால்
வருங்காலமும்பெரும்பூதமுமழைமேகமுமுடனுப்
பொருங்காலையின்மலைமேல்விழுமுருமேறெனப்புடைத்தான். ()

மிதியாற்பலவிசையாற்பலமிடலாற்பலவிடறும்
கதியாற்பலகாலாற்பலவாலாற்பலவாலின்
நுதியாற்பலநுதலாற்பலநொடியாற்பலபயிலும்
குதியாற்பலகுமையாற்பலகொன்றானறனின்றான். (கரு௯)

பறித்தான்சிலபகிர்ந்தான்சிலவகிர்ந்தான்சிலபணைபோல்
இறுத்தான்சிலவிடந்தான்சிலபிளந்தான்சிலவெயிற்றால்
கறித்தான்சிலகர்வந்தான்சிலகடித்தான்சிலபிடித்தான்
முறித்தான்சிலதிறத்தானையினெடுங்கோடுகண்முனிந்தான். (க௬0)

வாரிக்குரைகடலிற்புகவிலகுந்நெடுமரத்தால்
சாரித்தலைத்துருட்டுந்நெடுந்தலத்திற்படுத்தரைக்கும்
பாரிற்பிடித்தடிக்குங்குடர்பறிக்கும்படர்விசும்பின்
ஊரிற்செலவெறியும்மிதித்துழக்கும்முகத்துதைக்கும். (க௬க)

---

156. எழுவேலை - எழுகடல்.

வாலால்வரவளைக்குந்நெடுமலைப்பாம்பெனவளையா
மேலாளொடுபிசையும்முழுமலைமேற்செலவிலக்கும்
ஆலாலமுண்டவனேயெனவகல்வாயினிட்டதுக்கும்
தோலாயிரமிமைப்போதினினரியேறெனத்தொலைக்கும். (கசஉ)

சையத்தினுமுயர்வுற்றன தறுகட்களிமதமா
நொய்திற்கடிதெதிருற்றனநூறாயிரமாறு
மையற்கரியுகிரிற்சிலகுழைபுக்குருமறையத்
தொய்யற்படரழுவக்கொழுஞ்சேறுயுகத்துகைப்பான். (கசங)

வேறாயினமதவெங்கரியொருகோடியின்விறலோன்
நூறாயிரம்படுத்தானிது நுவல்காலையினிளையோன்
கூறாயினவெனவன்னவைகொலைவாளியிற்கொன்றான்
ஏறுநெடும்பயத்தானெடுநிசிகாவலரிரிந்தார். (கசச)

இரிந்தார் திசை திசையெங்கணும்யானைப்பிணமெற்ற
நெரிந்தார்களுநெரியாதுயிர்நிலைத்தார்களுநெருக்கால்
எரிந்தார்நெடுந்தடந்தேரிழிநதெல்லாருமுன்செல்லத்
திரிந்தானொருதனியேநெடுநதேவாந்தகன்சினத்தான். (கசரு)

உதிரக்கடல்பிணமால்வரையொன்றல்லனபலவா
எதிரக்கடுநெடும்போர்க்களததொருதான்புகுந்தேற்றான்
கதிரொப்பனசிலவெங்கணையனுமானுடற்கரந்தான்
அதிரக்கடனெடுந்தேரினன்மழையேறெனவார்த்தான். (கசசு)

அப்போதினினுமானுமொர்மரமோச்சிநின்றார்த்தான்
இப்போதிவனுயிர்போமெனவுருமேறெனவெறிந்தான்
வெப்போவெனவெயில்கால்வளவயில்வெங்கணைவிசையால்
துப்போவெனத்துணியாம்வகைதேவாந்தகன்றுரந்தான். (கசஎ)

மாறுங்கொருமலைவாங்கினன்வயவானரக்குலத்தோர்க்
கேறுங்கதுவெறியாதமுன்முறியாயுகவெய்தான
கோறுங்கியசிலையானுடனெடுமாருதிகொதித்தான்
பாறுங்கெனப்புகப்பாய்ந்தவனெடுவில்லினைப்பறித்தான். (கசஅ)

பறித்தானெடும்படைவானவர்பலரார்த்திடப்பலவா
முறித்தானவன்வலிகண்டுயர்தேவாநதகன்முனிந்தான்
மறித்தாங்கொருசுடர்த்தோமரம்வாங்காமிசையோங்காச்
செறித்தானவனிடத்தோண்மிசையிமையோர்களுந்திகைத்தார்.()

சுடர்த்தோமரமெறிந்தார்த்தலுங்கனலாமெனச்சுளித்தான்
அடற்றோமரம்பறித்தான்றிரிந்தூருமேறெனவடித்தான்
புடைத்தானவன்றடந்தேரொடுநெடுஞ்சாரதிபுரண்டான்
மடற்றோகையர்வலிவென்றவன்வானோர்முகமலர்ந்தார். (கள௦)

சூலப்படைதொடுவான்றனையிமையாதமுன்றொடர்ந்தான்
ஆலத்தினும்வலியானும்வந்தெதிரேபுகுந்தடர்த்தான்
காலற்கிருகண்ணான்றனகையாலவன்கதுப்பின்
மூலத்திடைபுடைத்தானுயிர்முடித்தான்சிரமடித்தான். (களக)

கண்டானெதிரதிகாயனுங்கனலாமெனக்கனன்றான்
புண்டானெனப்புனலோடிழியுதிரம்விழிபொழிவான்
உண்டேனிவனுயிரிப்பொழுதொழியேனெனவுரையாத்
திண்டேரினைக்கடிதேவெனச்சென்றானவனின்றான். (களஉ)

அன்னான்வருமளவின்றலைநிலைநின்றனவனிகம்
பின்னானதுமுன்னானதுபிறிந்தார்களுஞ்செறிந்தார்
பொன்னாலுயர்நெடுமால்வரைபோல்வானெதிர்புக்கான்
சொன்னானிவையதிகாயனும்வடமேருவைத்துணிப்பான். (கள௩)

தேய்த்தாயொருதனியெம்பியைத்தலத்தோடொருதிறத்தால்
போய்த்தாவினைநெடுமாகடல்பிழைத்தாய்கடல்புகுந்தாய்
வாய்த்தானையுமடித்தாயதுகண்டேனெதிர்வந்தேன்
ஆய்த்தாயதுமுடிவின்றுனக்கணித்தாகவந்தடுத்தாய். (களச)

இன்றல்லதுநெடுநாளுனையொருநாளினுமெதிரேன்
ஒன்றல்லதுசெய்தாயெமையிளையோனையுமுனையும்
வென்றல்லதுமீளாதவென்மிடல்வெங்கணைமழையால்
கொன்றல்லதுசெல்லேனிதுகொள்ளென்றனன்கொடியோன். ()

பிழையாதிதுபிழையாதெனப்பெருங்கைத்தலம்பிசையா
மழையாமெனச்சிரித்தான்வடமலையாமெனுநிலையான்
முழைவாளரியனையாயினுமெனைநீமிகமுனிவாய்
அழையாய்திரிசிரத்தோனையுநிலத்தோடுமிட்டரைக்க. (களசு)

ஆமாமெனத்தலைமூன்றுடையவனார்த்துவந்தடர்த்தான்.
கோமான்றனிப்பெருந்தூதனுமெதிரேசெருக்கொடுத்தான்
காமாண்டவர்கல்லாதவர்வல்லீரெனக்கழறா
நாமாண்டனரயனின்றுறநடுவேபுகநடந்தான். (களஎ)

174. எம்பி - தம்பி, பின்னவன்.

தேர்மேற்செலக்குதித்தான் றிரிசிரத்தோனையோர் திறத்தால்
கார்மேற்றுயின்மலைபோலியைக்கரத்தாற்பிடித்தெடுத்தான்
பார்மேற்படுத்தரைத்தானவர்பழிமேற்படப்படுத்தான்
போர்மேற்றிசைநெடுவாயிலினுளதாமெனப்போனான். (கஎஅ)

வேறு.

இமையிடையாகச்சென்றுனிகலதிகாயனின்றான்
அமைவதொன்றுற்றதேற்றானருவியோடமுல்கால்கண்ணான்
உமையொருபாகனேயுமிவன்முனிந்துருத்தபோது
கமையிலனாற்றலென்னாக்கதத்தொடுங்குலைக்குங்கையான். (கஎகூ)

பூணிப்பொன்றுடையனாகிப்புகுந்தநான்புறத்துநின்று
பாணித்தல்வீரமன்றாற்பருவலிபடைத்தோர்க்கெல்லாம்
ஆணிப்பொன்னானன்றனைப்பின்னுங்கண்டறிவெனென்னாத்[ன்.
தூணிப்பொற்புறத்தான்றிண்டேரிளவன்மேற்றாண்டச்சொன்னா

தேரொலிகடலைச்சீறச்சிலையொலிமழையைச்சீறப்
பேரொலிமுரசினோதைதிசைகளிற்புறத்துப்போகத்
தாரொலிகழற்கான்மைந்தன்றானையுந்தானுஞ்சென்றான்
வீரனுமெதிரேநின்றான்விண்ணவர்விசயஞ்சொல்ல. (கஅக)

வல்லையினாகவந்துவணங்கியவாலிமைந்தன்
சில்லியந்தேரின்மேலானவனமர்செவ்விதன்றால்
வில்லியர்திலதமன்னநின்றிருமேனிதாங்கப்
புல்லியவெனினுமென்றோளேறுதிபுனிதவென்றான். (கஅஉ)

ஆமெனவமலன்றம்பியங்கதனலங்கற்றோண்மேல்
தாமரைச்சரணம்வைத்தான்கலுழனிற்றாங்கிநின்ற
கோமகனாற்றலோக்கிக்குளிர்கின்றமனத்தராகிப்
பூமழைபொழிந்துவாழ்த்திப்புகழ்ந்தனர்புலவரெல்லாம். (கஅங)

ஆயிரம்புரவிபூண்டவதிர்குரலசனித்திண்டேர்
போயினதிசைகளெங்குங்கறங்கெனச்சாரிபோமால்
மீயெழினுயருந்தாழிற்றாழும்விண்செல்லிற்செல்லும்
தீயெழவுவரிநீரைக்கலக்கினான்சிறுவனம்மா. (கஅச)

அத்தொழிலோக்கியாங்குவானரத்தலைவரார்த்தார்
இத்தொழில்கலுழற்கேயுமரிதெனவிமையோரெல்லாம்

179. இமையிடையாக - கண்ணிமைப்பொழுதிற்குள்ளாக.
183. கலுழன் - கருடன்.

கைத்தலங்குலைத்தாராகக்களிற்றினும்புரவிமேலும்
தைத்தனவிளையவீரன்சரமெனுந்தாரைமாரி. (க௮௫)

முழங்கினமுரசம்வேழமுழங்கினமூரித்திண்டேர்
முழங்கினமுகரப்பாய்மாமுழங்கினமுழுவெண்சங்கம்
முழங்கினதனுவினோதைமுழங்கினகழலுந்தாரும்
முழங்கினதெழிப்புமார்ப்புமுழங்கினமுகிலின்மும்மை. (க௮௬)

கரிபடக்காலாள்வெள்ளங்களப்படக்கலினக்கால்போல்
பரிபடக்கண்டகூற்றும்பயம்படப்பைம்பொற்றிண்டேர்
எரிபடப்பொருதபூமியிடம்படவெதிர்ந்தவெல்லாம்
முரிபடப்பட்டவீரன்முரட்கணைமூரிமாரி. (க௮௭)

மன்னவன்றம்பிமற்றவ்விராவணன்மகனைநோக்கி
என்னுனக்கிச்சைநின்றவெறிபடைச்சேனையெல்லாம்
சின்னபின்னங்கள்பட்டாற்பொருதியோதிரிந்துநீயே
நன்னெடுஞ்செருச்செய்வாயோசொல்லுதிநயந்ததென்றான். ()

யாவரும்பொருவரல்லரெதிர்ந்துளயானுநீயும்
தேவரும்பிறருங்காணச்செருவதுசெய்வவெல்லாம்
காவல்வந்துன்னைக்காப்பார்காப்பவுமமையும்வேறே
கூவியததனுக்கன்றோவென்றனன்கூற்றின்வெய்யோன். (க௮௯)

உமையனேகாக்கமற்றங்குமையொருகூறன்காக்க
இமையவரெல்லாங்காக்கவுலகமோரேழுங்காக்க
சமையுமுன்வாழ்க்கையின்றோடென்றுதன்சங்கமூதி
அமையுருக்கொண்டகூற்றைநாணெறிந்துருமினார்த்தான். (க௯௦)

அன்னதுகேட்டமைந்தனரும்பியன்முறுவறோன்றச்
சொன்னவர்வாரார்யானேதோற்கினுந்தோற்கத்தக்கேன்
என்னைநீபொருதுவெல்லினவரையும்வென்றியென்னா
மின்னினுமிளிர்வதாங்கோர்வெஞ்சரங்கோத்துவிட்டான். (க௯௧)

விட்டவெம்பகழிதன்னைவெற்பினைவெதுப்புந்தோளான்
சுட்டதோர்கணையினாலேவிசும்பிடைத்துணித்துநீக்கி
எட்டினோடெட்டுவாளியிலக்குவனிலக்காயென்னாத்
திட்டியின்விடத்துநாகமனையனசிந்தியார்த்தான். (க௯௨)

ஆர்த்தவனெய்தவாளியனைத்தையுமறுத்துமாற்றி
வேர்த்தொலிவயிரவெங்கோன்மேருவைப்பிளக்கற்பால

தூர்த்தனனிராமன் றம்பியவையெலாந்துணித்துச்சிந்திக்
கூர்த்தனபகழிகோத்தான்குபேரனையாடல்கொண்டான். (கசுங)

எய்தனவெய்தவெல்லாமெரிமுகப்பகழியாலே
கொய்தனனகற்றியார்க்குமரக்கனைக்குரிசில்கோபம்
செய்தனன்றுரந்தான்றெய்வச்செயலன்னகணையைவெங்கோல்
நொய்தவன்கவசங்கீறி நுழைவனபிழைப்பிலாத. (கசுச)

நாறுகோல்கவசங்கீறி நுழைதலுங்குழைவுதோன்றத்
தேறலாந்துணையுந்தெய்வச்சிலைநெடுந்தேரினூன்றி
ஆறினனதுகாலத்தங்கவனுடையனீகமெல்லாம்
கூறுகூறாக்கியம்பாற்கோடியின்மேலுங்கொன்றான். (கசுரு)

புடைநின்றார்புரண்டவாறும்போகின்றபுங்கவாளி
கடைநின்றுகணிக்கவாங்கோர்கணக்கிலாவாறுங்கண்டான்
இடைநின்றமயக்கந்தீர்ந்தானேந்தியசிலையன்காந்தித்
தொடைநின்றபகழிமாரிமாரியின்மும்மைதூர்த்தான். (கசுசு)

வானெலாம்பகழிவானின்வரம்பெலாம்பகழிமண்ணே
தானெலாம்பகழிகுன்றின்றலையெலாம்பகழிசார்ந்தோர்
ஊனெலாம்பகழிநின்றோருடலெலாம்பகழிவேலை
மீனெலாம்பகழியாகவித்தினன்வெகுளிமிக்கோன். (கசுஎ)

மறைந்தனதிசைகளெல்லாம்வானவர்மனமேபோலக்
குறைந்தனசுடரின்மும்மைக்கொழுங்கதிர்குவிந்தொன்றொன்றை
அறைந்தனபகழிவையமதிர்ந்ததுவிண்ணுமஃதே
நிறைந்தனபொறியின்குப்பைநிமிர்ந்தனநெருப்பின்கற்றை. (கசுஅ)

முற்றியதின்றேயன்றேவானரமுழுங்குதானை
மற்றிவன்றன்னைவெல்லவல்லனோவள்ளறம்பி
கற்றதுகாலனோடோகொலையிவனொருவன்கற்ற
விற்றொழிலென்னேவென்னாத்தேவருவெருவலுற்றார். (கசுகூ)

அங்கதனெற்றிமேலுந்தோளினுமாகத்துள்ளும்
புங்கமேதோன்றவண்ணம்பொருசரம்பலவும்போக்கி
வெங்கணையிரண்டுமொன்றும்வீரன்மேலேவிமேகச்
சங்கமுழுதிவிண்ணோர்தலைபொதிரெறியவார்த்தான். (உ00)

வாலிசேய்மேனிமேலுமடிழபொருகுருதிவாரி
காலுயர்வரையிற்செங்கேழருவிபோலொழுகக்கண்டான்

196. புடை - பக்கம்.

கோலொருபத்துநூற்றாற்குதிரையின்றலைகள்கொய்து
மேலவன்சிரத்தைச்சிந்திவில்லையுந்துணித்தான்வீரன். (உ०க)

மாற்றொருதடந்தேரேறிமாறொருசிலையும்வாங்கி
ஏற்றவல்லரக்கன்றன்மேலெரிமுகதற்கடவுளென்பான்
ஆற்றல்சால்படையைவிட்டானரியனரக்கனம்மா
வேற்றுளதாங்கவென்னாவெய்யவன்படையைவிட்டான். (உ०உ)

பொருபடையிரண்டுந்தம்மிற்பொருதனபொருதலோடும்
எரிகணைபுருமின்வெய்யவிலக்குவனுரந்தமார்பை
உருவினவுலப்பிலாதவுலகிலனாற்றலோயான் -
சொரிகணைமழையின்மும்மைசொரிந்தனன்றெழிக்குஞ்சொல்லான்

பின்னின்றார்முன்னின்றாரைக்காணலாம்பெற்றித்தாக
மின்னின்றவயிரவாளிதிறந்தனமேனிமுற்றும்
அந்நின்றநிலையினாற்றல்குறைந்திலனாவிநீங்கான்
பொன்னின்றவடிம்பின்வாளியுருமெனப்பொழியும்வில்லான்.(உ०ச)

கோன்முகந்தள்ளியவாளிக்கொடுஞ்சிலைநாணிற்கோத்துக்
கான்முகங்குழையவாங்கிச்சொரிகின்றகாளைவீரன்
பான்முகந்தோன்றநின்றுகாற்றினுக்கரசன்பண்டை
நான்முகன்படையாலன்றிச்சாகிலனம்பவென்றான். (உ०ரு)

நன்றெனவுவந்துவீரனான்முகன்படையைவாங்கி
மின்றனிதிரண்டதென்னச்சரத்தொடுங்கூட்டிவிட்டான்
குன்றினுமுயர்ந்ததீயோன்றலையினைக்கொண்டவாளி
சென்றதுவிசும்பினூடுதேவருந்தெரியக்கண்டார். (உ०சு)

பூமழைபொழிந்துவானோர்போயதெம்பொருமலென்றார்
தாமழைத்தலறியெங்குமிரிந்தனரரக்கர்தள்ளித்
தீமையுங்களிப்புநீங்கித்திகைத்தனகுரங்குச்சேனைக்
கோமகன்றோளினின்றுங்குதித்தனன்கொற்றவில்லான். (உ०எ)

வெந்திறற்சித்திகண்டவீடணன்வியந்தநெஞ்சன்
அந்தரசித்தரார்ப்புமமலையுங்கேட்டானையன்
மந்திரசித்தியன்னசிலைத்தொழில்வலியிதாயின்
இந்திரசித்தினுற்குமிறுதியேயியையவதென்றான். (உ०அ)

ஏந்தெழிலாகத்தெம்முனிறந்தனனென்றுநீநின்
சாந்தகன்மார்புதிண்டோணோக்கிநின்றனுவைநோக்கிப்

---

201. மேலவன் - சாரதி.

போர்த்தகைக்குரியையன்றூற்போகலைபோகலென்று
நார்த்தகமின்னும்வீசிநாராந்தகனடந்துவந்தான். (உ0க)

தேரிடைநின்றுகண்கடையுகச்சீற்றம்பொங்கப்
பாரிடைகிழியப்பாய்ந்துபகலிடைப்பரிதியென்பான்
ஊரிடைநின்றானென்னக்கேடகமொருகைதோன்ற
நீரிடைமுகிலின்மின்போல்வாணிடைதிமிரவந்தான். (உக0)

வீசினமரமுங்கல்லும்விலங்கலும்வீற்றுவீற்று
ஆசைகடோறும்வீசவாளினாலறுத்துமாற்றித்
தூசியுமிரண்டுகையுநெற்றியுஞ்சுருண்டுநீர்மேற்
பாசியின்றொறுங்கவந்தானங்கதனதனைப்பார்த்தான். (உகக)

மரமொன்றுவிரைவின்வாங்கிவாய்மடித்துருத்துவள்ளல்
சரமொன்றுகடிதிற்சென்றுதாக்கினான்றாக்கினன்றன்
கரமொன்றிற்றிரிவதாருங்காண்கிலாததனைத்தன்கை
அரமொன்றுவயிரவாளாலாயிரங்கண்டங்கண்டான். (உகஉ)

அவ்விடைவெறுங்கைநின்றவங்கதனுண்மையன்றால்
இவ்விடைபெயர்தலென்றுவிமையிடைபொதுங்காமுன்னம்
வெவ்விடமென்னப்பொங்கியவனிடையெறிந்தவீச்சுத்
தவ்விடவுருமிற்புக்குவாளொடுந்தழுவிக்கொண்டான். (உகங)

அத்தொழில்கண்டவானோராவலங்கொட்டியார்த்தார்
இத்தொழிலிவனுக்கல்லாலீசற்குமியலாதென்பார்
குத்தொழித்தவன்கைவாடன்கூருகிர்த்தடக்கைக்கொண்டான்
ஒத்திருகூறாய்வீழவீசினனுலையவார்த்தான். (உகச)

கூர்மத்தின்வெரிநின்வைத்துவானவரமுதங்கொண்ட
நீர்மத்தினிமிர்ந்ததோளானிறைமத்தமதுவைத்தேக்கி
ஊர்மத்தமுண்டாலன்னமயக்கத்தானுருமுத்தின்பான்
போர்மத்தனென்பான்வந்தான்புகர்மத்தப்பூட்கைமேலான். ()

காற்றன்றேறற்கடுமையென்னுங்கடலன்றேன்முழக்கமென்னும்
கூற்றன்றேற்கொலைமற்றென்னுமுருமன்றேற்கொடுமையென்னும்
சீற்றந்தானன்றேற்சீற்றம்வேறொன்றுதெரிப்பதெங்கே
மாற்றன்றேமலைமற்றென்னேமத்தன்றன்மத்தயானை. (உகசு)

வேகமாக்கவிகள்வீசும்வெற்பினம்வீழுவமேன்மேல்
பாகர்காற்சிலையிற்றாண்டுமுண்டையாமெனவும்பற்று

211. ஆசை - திசை. 215. வெரிந் - முதுகு.

மாகமாமரங்களெல்லாங்கடாத்திடைவண்டுசேர்வ
தாகினுமாமதன்றேற்கரும்பென்றேயறையலாமால். (உகஎ)

காலிடைப்பட்டுமானக்கையிடைப்பட்டுங்கால
வாலிடைப்பட்டும்வெய்யமருப்பிடைப்பட்டுமாண்டு
நாலிடைப்பட்டசேனைநாயகன்றம்பியெய்த
கோலிடைப்பட்டவெல்லாம்பட்டனகுரங்குச்சேனை. (உகஅ)

தன்படையுற்றதன்மைநோக்கினன்றரிக்கிலாமை
அன்படையுள்ளத்தண்ணலனலின்றன்புதல்வனுழி
வன்படையனையதாங்கோர்மராமரஞ்சுழற்றிவந்தான்
பின்படைசெல்லநள்ளார்பெரும்படையிரிந்துபோர. (உகக)

சேறலுங்களிற்றின்மேலான்றிண்டிறலரக்கன்செவ்வே
ஆறிரண்டம்பினாலந்நெடுமரமறுத்துவீழ்த்தான்
வேறொருகுன்றநீலன்வீசினனதனைவிண்ணில்
நூறுவெம்பகழிதன்னானுறுக்கினன்களிறுநூக்கி. (உஉ0)

பின்னெடுங்குன்றந்தேடிப்பெயர்குவான்பெயராவண்ணம்
பொன்னெடுங்குன்றஞ்சூழ்ந்தபொறிவரியரவம்போல
அந்நெடுங்கோபயானையமரும்வெயர்ப்பவங்கி
தன்னெடுமகனைப்பற்றிப்பிடித்தது தடைக்கைநீட்டி. (உஉக)

ஒடுங்கினனுமுமாற்றலூற்றமுமுயிருமென்னக்
கொடும்படைவயிரக்கோட்டாற்குத்துவான்குறிக்குங்காலை
நெடுங்கையுந்தலையுமபிய்யாநொய்தினினிமிர்ந்துபோனான்
நடுங்கினரரக்கர்விண்ணோர்நன்றுநன்றென்னநக்கார். (உஉஉ)

தறைத்தலையுற்றானீலனென்பதோர்காலந்தன்னில்
நிறைத்தலைவழங்குஞ்சோரிநீர்த்ததுநெடுங்குன்றென்னக்
குறைத்தலைவேழம்வீழவிசும்பின்மேற்கொண்டுநின்றான்
பிறைத்தலைவயிரவாளிமழையெனப்பெய்யுங்கையான். (உஉ௩)

வாங்கியசிரத்தின்மற்றைவயிரவான்கோட்டைவவ்வி
வீங்கியவிசையினீலனரக்கன்மேற்செல்லவிட்டான்
ஆங்கவனவற்றையாண்டோரம்பினாலறுத்தோரம்பால்
ஓங்கல்போற்புயத்தினன்றனுரத்திடையொளிக்கவெய்தான். ()

215. ஊர்மத்தம் - ஊரிலுள்ள யூமத்தங்காய், இஃதிக்காலத்து ஊமத்தங்காய் என வழங்குகினறது.

221. அங்கிதன்னெடுமகன் - அக்கினிகுமாரனானநீலன்.

எய்தது காலமாகவீழ்ந்திலதியானையென்னக்
கையுடைமலையொன்றேறிக்காற்றெனக்கடாவிவந்தான்
வெய்யவனவனைத்தானுமேற்கொளாவில்லினோடும்
மொய்பெருங்களிற்றினிட்டான்மும்மதக்களிற்றின்முன்னர். ()

இட்டனனவனிநின்றுமெழுவதன்முன்னம்யானை
கட்டமைவயிரக்கோட்டாற்களப்படவீழ்த்திக்காலால்
வெட்டிவன்றடக்கைதன்னாலெடுத்தெதெங்கும்விரைவின்வீசப்
பட்டிலன்றானேதன்போர்க்கரியினைப்படுத்துவீழ்த்தான். (௨௨௬)

தன்கரிதானேகொன்றுதடக்கையாற்படுத்துவீழ்த்த
பின்கரிதென்னமின்னுமெயிற்றினான்வெகுளிநோக்கிப்
பொன்கரிதென்னுங்கண்கள்பொறியுகநீலன்புக்கான்
வன்கரமுறுக்கிமார்பிற்குத்தினன்மத்தன்மாண்டான். (௨௨௭)

உன்மத்தன்வயிரமார்பினுருமொத்தகரஞ்சென்றுற்ற
வன்மத்தைக்கண்டுமாண்டமதமத்தமலையைப்பார்த்தும்
சன்மத்தின்றன்மையானுந்தருமதனைத்தள்ளிவாழ்ந்த
கன்மத்தின்கடைக்கூட்டானும்வயமத்தன்கடிதின்வந்தான். ()

பொய்யினும்பெரியமெய்யான்பொருப்பினைப்பழித்ததோளான்
வெய்யனென்றுரைக்கச்சாலதிண்ணியான்வில்லின்செல்வன்
பெய்கழலரக்கன்சேனையார்த்தெழப்பிறங்குபல்பேய
ஐயிருநூறுபூண்டவாழியந்தேரின்மேலான். (௨௨௯)

ஆர்க்கின்றானுலகையெல்லாமதிர்க்கின்றானுருமுமஞ்சப்
பார்க்கின்றான்பொன்றினாரைப்பழிக்கின்றான்பகழிமாரி
தூர்க்கின்றான்குரங்குச்சேனைதுரக்கின்றான்றுணிவைநோக்கி
ஏற்கின்றாரில்லையென்னாவிடபன்வந்தவனோடேற்றான். (௨௩0)

சென்றவன்றன்னைநோக்கிச்சிரித்துநீசிறியையுன்னை
வென்றவமும்மையெல்லாம்விளிப்பெனோவிரிஞசன்றானே
என்றவனெதிர்நதபோதுமிராவணன்மகனையின்று [ன்.
கொன்றவன்றன்னைக்கொன்றேகுரங்கின்மேற்கொதிப்பேனென்றா

வாய்கொண்டசொற்றற்கேற்றவலிகொண்டபெரியுண்வாழ்க்கைப்
பேய்கொண்டவெல்லவநதபித்தனேபிடுக்கைப்பேணி
நோய்கொண்டமருந்துசெய்யாவொருவநின்னேன்மையெல்லாம்
ஓய்கின்றாய்காண்டியென்னாவுரைத்தனனிடபனேல்கான். (௨௩௨)

225. கையுடைமலை - யானை. 232. நோய்கொண்டு - நோய்தெரிந்து.

ஓடுதியென்னவோடாதுரைத்தியேலுன்ளுேடின்னே
ஆடுவென்விளையாட்டென்ளுவயிலெயிற்றரக்கனம்பொற்
கோடுறுவயிரப்போர்விற்காலொடுபுருவங்கோட்டி
ஈடுறவிடபன்மார்பத்தீரைந்துபகழியெய்தான். (உ௩௩)

அசும்புடைக்குருதிபாயுமாகத்தான்வேகத்தாலத்
தசும்புடைக்கொடுந்தேர்தன்னைத்தடக்கையாலெடுத்துவீசப்
பசுங்கழற்கண்ணபேயும்பறந்தனபரவைநோக்கி
விசும்பிடைச்செல்லுங்காரின்றுரைபோனுன்றமெய்யான். (உ௩௪)

தேரொடுங்கடலின்வீழ்ந்துசிலையுந்தன்றலையுமெல்லாம்
நீரிடையழுந்திப்பின்னுநெருப்பொடுநிமிரவந்தான்
பாரிடைக்குதியாமுன்னமிடபனும்பதகநீபோய்
ஆரிடைப்புகுதியென்ளுவந்தரத்தார்த்துவந்தான். (உ௩௫)

அல்லினைத்தழுவிநின்றபகலெனவரக்கன்றன்னைக்
கல்லினும்வலியதோளாற்கட்டியிட்டிறுக்குங்காலைப்
பல்லிடைப்பிலவாயூடும்பசும்பெருங்குருதிபாய
வில்லுடைமேகமென்னவிழுந்தனனுயிர்விண்செல்ல. (உ௩௬)

குரங்கினுக்கரசும்வென்றிக்கும்பனுங்குறித்தவெம்போர்
அரங்கினுக்கழகுசெய்யவாயிரஞ்சாரிபோந்தார்
மரங்கொடுந்தண்டுகொண்டுமலையெனமலையாநின்றுர்
சிரங்களுங்கரமுமெல்லாங்குலைந்தனர்கண்டதேவர். (உ௩௭)

வேறு.

கிடைத்தாருடலிற்கிழிசோரியைவாரித்
துடைத்தார்விழியிற்றழன்மாரிசொரிந்தார்
உடைத்தாரொடுபைங்கழலார்ப்பவுலாவிப்
புடைத்தார்பொருகின்றனர்கோளரிபோல்வார். (உ௩௮)

தண்டங்கையின்வீசியதாகவரக்கன்
அண்டங்கள்வெடிப்பனவென்னவடித்தான்
கண்டங்கதுமாமரமேகொடுகாத்தான்
விண்டங்கதுதீர்ந்ததுமன்னன்வெகுண்டான். (உ௩௯)

பொன்றப்பொருவேனினியென்றுபொருதான்
ஒன்றப்புகுகின்றதொர்காலமுணர்ந்தான்
நின்றப்பெரிபோனினையாதமுனீலன்
குன்றொப்பதொர்தண்டுகொணர்ந்துகொடுத்தான். (உ௪௦)

239. மராமரம் என்றும் பாடம்.

அத்தண்டுகொடுத்ததுகைக்கொடமைந்தான்
ஒத்தண்டமுமண்ணுநடுங்கவுருத்தான்
பித்தன்றடமார்பொடுதோள்கள்பிளந்தான்
சித்தங்கணடுங்கியரக்கர்திகைத்தார். (உ௪௧)

அடியுண்டவரக்கனருங்கனன்மின்று
இடியுண்டதொர்மால்வரையென்னவிழுந்தான்
முடியும்மிவெனன்பதொர்முன்னம்வெகுண்டான்
ஓடியும்முனைதோளெமோதியுடன்றான். (உ௪௨)

தோளிற்புடையுண்டயர்சூரியன்மைந்தன்
தாளிற்றடுமாறறவிர்ந்துதகைந்தான்
வாளிக்கடுவல்விசையாலெதிர்மண்டி
ஆளித்தொழிலன்னவன்மார்பினறைந்தான். (உ௪௩)

அடியாயிரகோடியின்மேலுமடித்தார்
முடிவானவன்யாரெனவானவர்மொய்த்தார்
இடியோடிடிகிட்டியதென்னவிரண்டும்
பொடியாயினதண்டுபொருந்தினர்புக்கார். (உ௪௪)

மத்தச்சினமால்களிறென்னமலைந்தார்
பத்துத்திசையுஞ்செவிடெய்தினபல்கால்
தத்தித்தழுவித்திரடோள்கொடுதள்ளிக்
குத்தித்தனிகுத்தெனமார்புகொடுத்தான். (உ௪௫)

நிலையிற்சுடரோன்மகன்வன்கைநெருங்க
வலையிற்படுகம்பியர்கூடமலைப்ப
உலையிற்படிரும்பெனவன்மையொடுங்க
மலையிற்பிளவுற்றதுதீயவன்மார்பம். (உ௪௬)

செய்வாயிகலென்றவனின்றுசிரித்தான்
ஐவாயரவம்முழைபுக்கெனவையன்
கைவாய்வழிசென்றவனாருயிர்கக்கப்
பைவாய்நெடுநாவைமுனிந்துபறித்தான். (உ௪௭)

அக்காலைநிகும்பனனற்சொரிகண்ணன்
புக்கானினியெங்கடபோகுவதென்று
மிக்கானெதிரங்கதனுற்றுவெகுண்டான்
எக்காலமுமில்லதொர்பூசலிழைத்தார். (உ௪௮)

248. எங்கட - எங்கு அடா.

சூலப்படையானிடை வந்துதொடர்ந்தான்
ஆலத்தினும்வெய்யவனங் கதனங்கோர்
தாலப்படைகைக்கொடுசென்றுதடுத்தான்
நீலக்கிரிமேனிமிர்பொற்கிரிநேர்வான். (உசகூ)

எறிவானிகல்சூலமெடுத்தலுமின்னே
முறிவானிகலங்கதனென்பதன்முன்னே
அறிவானடன்மாருதியற்றமுணர்ந்தான்
பொறிவானுருதீயெனவந்துபுகுந்தான். (உருo)

தடையேதுமில்சூலமுனிந்துசலத்தால்
விடையேநிகரங்கதன்மேல்விடுவானை
இடையேதடைகொண்டுதனேடவிழுங்கைப்
புடையேகொடுகொன்றடன்மாருதிபோனான். (உருக)

நின்றார்கடடுப்பவரின்மைநெளிந்தார்
பின்றாதவர்பின்றியிரிந்துபிரிந்தார்
வன்றாண்மரம்வீசியவானரவீரர்
கொன்றார்மிகுதானையரக்கர்குறைந்தார். (உருஉ)

ஓடிப்புகுவாயினொருக்கினுலந்தார்
கோடிக்கதிகத்தினுமேலுளர்குத்தால்
பீடிப்புறுபுண்ணுடலோடுபெயர்ந்தார்
பாடித்தலையுற்றவரெண்ணிலர்பட்டார். (உருங)

தண்ணீர்தருகென்றனர்தாவுறவோடி
யுண்ணீரறவாவியுலர்ந்தனருக்கார்
கண்ணீரொடுமாவிகலுழ்ந்தனர்காலால்
மண்ணீரமுறக்கடிதூர்புகவந்தார். (உருச)

விண்மேனெடிதோடினராருயிர்விட்டார்
மண்மேனெடுமால்வரையென்னமறிந்தார்
எண்மேலுநிமிர்ந்துளரீருடயங்கப்
புண்மேலுடைமேனியினார்திசைபோனார். (உருரு)

அறியும்மவர்தங்களையையவிவம்பைப்
பறியும்மெனவந்துபறித்தலுமாவி
பிறியும்மவரெண்ணிலர்தம்மனைபெற்றார்
குறியும்பறிகின்றிலர்சிந்தைகுறைந்தார். (உருசு)

---

250. அற்றம் - அபயம்.

பரிபட்டுவிழச்சிலர்நின்றுபதைத்தார்
கரிபட்டுருளச்சிலர்கால்கொடுசென்றார்
நெரிபட்டழிதேரிடையேபலர்நின்றார்
எரிபட்டமனைக்குளிருந்தவரென்ன. (௨௫௭)

மண்ணின்றலைவானரமேனியர்வந்தார்
புண்ணின்றவுடற்பொறையோர்சிலர்புக்கார்
கண்ணின்றகுரங்குகலந்தனவென்று
உண்ணின்றவரக்கர்மலைக்கவுலந்தார். (௨௫௮)

வேறு.

இருகணுந்திறந்துநோக்கியயலிருந்திரங்குகின்ற
உருகுதங்காதலோரையுண்ணுநீருதவுமென்றார்
வருவதன்முன்னமாண்டார்சிலர்சிலர்வந்ததண்ணீர்
பருகுவாரிடையேபட்டார்சிலர்சிலர்பருகிப்பட்டார். (௨௫௯)

மக்களைச்சுமந்துசெல்லுந்தாதையர்வழியிறுவி
உக்கனரென்னவீசித்தம்மைக்கொண்டோடிப்போனார்
கக்கினர்குருதிவாயாற்கண்மணிசிதறிக்காலால்
திக்கொடுநெறியுங்காணார்திரிந்துசென்றுயிருந்தீர்ந்தார். (௨௬௦)

இன்னதோர்தன்மையெய்தியிராக்கதரிரிந்துசிந்திப்
பொன்னகர்புக்காரிப்பாற்பூசல்கண்டோடிப்போன
துன்னருந்தூதர்சென்றார்தொடுகழலரக்கர்க்கெல்லாம்
மன்னவனடியில்வீழ்ந்தார்மழையினீர்வழங்குகண்ணார். (௨௬௧)

நோக்கியவிலங்கைவேந்தனுற்றதுநுவன்மினென்றான்
போக்கியசேனைதம்மிற்புகுந்துளவிறையும்போதா
ஆக்கியபோரினையவதிகாயன்முதல்வராய
கோக்குலக்குமரரெல்லாங்கொடுத்தனராவியென்றார். (௨௬௨)

ஏங்கியவிம்மன்மானமிரங்கியவிரக்கம்வீரம்
ஓங்கியவெகுளிதுன்பமென்றிவையொன்றிற்கொன்று
தாங்கியதரங்கமாகக்கரையினைத்தள்ளித்தள்ளி
வாங்கியகடல்போனின்றானருவிநீர்வழங்குகண்ணான். (௨௬௩)

திசையினைநோக்குநின்றதேவரைநோக்கும்வந்த
வசையினைநோக்குங்கொற்றவாளினைநோக்கும்பற்றிப்

257. எரிபட்டமனை - தீபட்டெரிகிற கூரைவீடு.

பிசையுறுங்கையைமீசைசுறுக்கொளவுயிர்க்கும்பேதை
நசையிடைக்கண்டானென்னநகுமழுமுனியுநானும். (உ௬௪)

மண்ணினையெடுக்கவெண்ணும்வானினைபிடிக்கவெண்ணும்
எண்ணியவுயிர்களெல்லாமொருகணத்தெற்றவெண்ணும்
பெண்ணெனும்பெயரவெல்லாம்பிளப்பெனென்றெண்ணுமெண்ணிப்
புண்ணிடையெரிபுக்கென்னமானத்தாற்புழுங்கினையும். (உ௬௫)

ஒருவருமுரையார்வாயினுயிர்த்திலருள்ளேமோய்வார்
வெருவருந்தகையராகிவிம்மினரிருந்தவேலை
தருவனமனையதோளான்றன்னெதிர்தானமானை
இரியலிட்டலறியோயாப்பூசலிட்டேங்கிவந்தாள். (உ௬௬)

மலைக்குவட்டிடிவீழ்ந்தென்னவளைகளோடாரமேங்க
முலைக்குவட்டெற்றுங்கையாண்முழைதிறந்தன்னவாயாள்
தலைக்குவட்டணைந்தசெக்கர்சரிந்தனகுழல்கடத்தி
உலைக்குவட்டுருகுசெம்பொத்துதிரநீர்வழங்குங்கண்ணாள். (உ௬௭)

வீழ்ந்தனளரக்கன்றாண்மேன்மென்மைத்தோணிலத்தைதமேவப்[ச்
போழ்ந்தனள்பெரும்பாம்பென்னப்புரண்டனள்பொருமிப்பொங்கி
சூழ்ந்தனைகொடியாயென்றுத்துடித்தருந்துயரவெள்ளத்
தாழ்ந்தனள்புலம்பலுற்றாளழக்கண்டுமறிந்திலாதாள். (உ௬அ)

வேறு.

மாட்டாயோவிக்காலம்வல்லோர்வலிதீர்க்க
மீட்டாயோவீரமெலிந்தாயோதோளாற்றல்
கேட்டாயுணர்ந்திலையோவென்னுரையுங்கேளாயோ
காட்டாயோவென்னுடையகண்மணியைக்காட்டாயோ. ()

இந்திரற்குந்தோலாதநன்மகனையீன்றாளென்
றந்தரத்துவாழ்வாருமேத்துமளியத்தேன்
மந்தரத்தோளென்மகனைவாட்டாமனிசன்றன்
உந்துசிலைப்பகழிக்குண்ணக்கொடுத்தேனே. (உ௭௦)

அக்கனுலந்தானதிகாயன்றானுலந்தான்
மிக்கதிறத்துள்ளார்களெல்லாரும்வீடினார்
மக்களினினின்றுள்ளான்மண்டோதரிமகனே
திக்குவிசயமினியொருகாற்செய்யாயோ. (உ௭௧)

261. பூசல் - யுத்தம், சண்டை.

ஏதையாசிந்தித்திருக்கின்றாயெண்ணிறந்த
கோதையார்வேலரக்கர்பட்டாரைக்கூவாயோ
பேதையாய்க்காமம்பிடிப்பாய்பிழைப்பாயோ
சீதையாலின்னும்வருவசிலவேயோ. (உ௭உ)

உம்பியுணர்வுடையான்சொன்னவுரைகேளாய்
நம்பிகுலக்கிழவன்கூறுநலமோராய்
கும்பகருணனையுங்கொல்வித்தென்கோமகனை
அம்புக்கிரையாக்கியாண்டாயரசைய. (உ௭௩)

என்றுபலபலவும்பன்னியெடுத்தழைத்துக்
கன்றுபடப்பிழைத்ததாய்போற்கவல்வானை
நின்றவுருப்பசியுமேனகையுநேர்ந்தெடுத்துக்
குன்றுபுரையுநெடுங்கோயில்கொண்டணைந்தார். (உ௭௪)

தானநகரத்தரக்கர்தலைமயங்கிப்
போனமகவுடையார்போலப்புலம்பினார்
ஏனமகளிர்நிலையென்னாகும்போயிரங்கி
வானமகளிருந்தம்வாய்திறந்துமாழ்கினார். (உ௭௫)

தாரகலத்தண்ணறணிக்கோயிறுசரதி
பேரவுலகுற்றதுற்றதாற்பேரிலங்கை
ஊரகலமெல்லாமரந்தையுவாவுற்ற
ஆர்கலியேயொத்ததழுதகுரலோசை. (உ௭௬)

ஆ திருவிருத்தம் - ௧௯௫௧.

---

## ௧அ-வது, நாகபாசப்படலம்.

---

குழுமிக்கொலைவாட்கணரக்கியர்கூந்தறுழத்
தழுவித்தலைபெய்துதங்கைகொடுமார்பினெற்றி
அழுமித்தொழிலியாதுகொலென்றுராயிர்ப்புமுற்றான்
எழிலித்தனியேறெனவிந்திரசித்தெழுந்தான். (௧)

எட்டாகியதிக்கையும்வென்றவனின்றுமீடு
பட்டான்கொலதன்றெனிற்பட்டழிந்தான்கொல்பண்டு

273. உம்பி - தம்பி, விபூஷணன்,
274. கன்றுபட - கன்றிரக்க,

சுட்டானிவகன்பதியைத்தொடுவேலையோடும்
கட்டான்கொலிதற்கொருகாரணமென்கொலென்றான். (௨)

கேட்டானிடையுற்றதென்னென்றுகிளத்தல்யாரும்
மாட்டாதுநடுங்கினர்மாற்றமறந்துநின்றார்
ஓட்டாநெடுந்தேர்கடிதோட்டியிமைப்பினுற்றான்
காட்டாதனகாட்டியதாதையைச்சென்றுகண்டான். (௩)

கண்டானிறையாறியநெஞ்சினன்கைகள்கூப்பி
உண்டாயதெனிவ்வுழியென்றலுமும்பிமாரைக்
கொண்டானுயிர்காலனுங்கும்பநிகும்பரோடும்
விண்டானடைந்தானதிகாயனும்வீரவென்றான். (௪)

சொல்லாதமுன்னஞ்சுடரைச்சுடர்தூண்டுகண்ணான்
பல்லாலதரத்தையதுக்கிவிண்மீதுபார்த்தான்
எல்லாருமிறந்தனரோவெனவேங்கிநைந்தான்
வில்லாளரையெண்ணில்விரற்குமுன்னிற்கும்வீரன். (௫)

ஆர்கொன்றவரென்றலும்பேரதிகாயனென்னும்
பேர்கொன்றவன்வென்றியிலக்குவன்பின்புநின்றார்
ஊர்கொன்றவனுற்பிறராலெனவுற்றவெல்லாம்
தார்கொன்றையினான்கிரிசாய்த்தவன்றானுரைத்தான். (௬)

கொன்றாரவரோகொலைசூழ்கெனநீகொடுத்தாய்
வன்றானையர்மானுடர்வன்மையறிந்துமன்னா
என்றானுமெனைச்செலவேவலையிற்றதென்னா
நின்றானெடிதுன்னிமுனிந்துநெருப்புயிர்ப்பான். (௭)

அக்கப்பெயரோனைநிலத்தொடரைத்துளானை
விக்கற்பொருதூதுவனென்றுவிளம்பிவிட்டாய்
புக்கத்தலையெய்தநினைந்திலைபுந்தியில்லாய்
மக்கட்டுணையற்றனையிற்றதுன்வாழ்க்கைமன்னோ. (௮)

என்னின்றுநினைத்துமியம்பியுமெண்ணியுந்தான்
கொன்னின்றபடைக்கலத்தெம்பியைக்கொன்றுளானை
அந்நின்றநிலத்தவனுக்கையைநீக்கியல்லால்
மன்னின்றநகர்க்கினிவாரலென்வாழ்வும்வேண்டேன். (௯)

மாற்றாவுயிரெம்பியைமாற்றியமானுடன்றன்
ஊற்றார்குருதிப்புனல்பார்மகளுண்டிலாளேல்

8. புந்தி - புத்தி.

வற்றுணிகலிந்திரனீரிருகாலெனக்கே
தோற்றான்றனக்கென்னெடுஞ்சேவகந்தோற்கவென்றான். (கo)

வெங்கண்ணெடுவானரத்தானையைவீற்றுவீற்றாய்ப்
பங்கம்முறநூறியிலக்குவனைப்படேனேல்
அங்கந்தரவஞ்சியென்னுணைகடக்கிலாத
செங்கண்ணெடுமான்முதற்றேவர்சிரிக்கவென்னை. (கக)

பாம்பிற்றருவெம்படைபாசுபதத்தினோடும்
தேம்பற்பிறைசென்னிவைததான்றருதெய்வவேதி
ஓம்பித்திரிந்தேதற்கினியின்றுதவாதுபோமேற்
சோம்பித்துறப்பென்னுயிர்சோறுமுகந்துவாழேன். (கஉ)

மருந்தேதநிகரெம்பிதன்னுருயிர்வேளவினானை
விருந்தேயெனவந்தகற்கிலன்வில்லுமேநதிப்
பொருந்தேவர்குழாநகைசெய்திடப்போந்துபாரின்
இருந்தேனெனினனவ்விராவணியல்லனென்றான். (கங)

ஏகாவிதுசெய்தெனதின்னலைநீக்கிடெநதைக்
காகாதனவும்முளவோவெனக்காற்றலார்மேல்
மாகால்வரிவெஞ்சிலையோடும்வளைததபோது
சேகாகுமென்றெண்ணியிவ்வின்னலிறசிநதைசெய்தேன். (கச)

என்றானைவணங்கியிலங்கயில்வாளுமார்த்திட்
டொன்றானுமருவுருவாவுடற்காவலோடும்
பொன்றாழ்கணையின்னெடும்புட்டில்புறத்துவீக்கி
வன்றாள்வயிரச்சிலைவாங்கினன்வானைவென்றோன். (கரு)

வயிரந்நெடுமால்வரைகொண்டுமலர்ககண்வந்தான்
செயிரொன்றுமுறுவகையிந்திரற்கென்றுசெய்த
உயர்வெஞ்சிலையச்சிலைபண்டவன்றன்னையோட்டித்
துயரின்றலைவைத்திவன்கொண்டதுதோற்றமீதால். (கசு)

தோளிற்கணைப்புட்டிலுமிந்திரன்றோற்றநாளே
ஆளிதந்திறலன்னவன்கொண்டனவாழியேழும்
மாளப்புனல்வற்றினும்வாளியறாதவன்கட்
கூளிக்கொடுங்கூற்றினூறுபதோர்கூடுபோல்வ. (கஎ)

பல்லாயிரகோடிபடைக்கலம்பண்டுதேவர்
எல்லாருமுனைத்தலையாவருமீந்தமேரு

---

15. புட்டில் - அம்பறாத்தூணி.

வில்லாளன்கொடுத்தவிரிஞ்சனளித்தமெய்ம்மை
அல்லாற்புரியாதனயாவையுமாய்ந்துகொண்டான். (௧௮)

நூறுயிரம்யாளியினேனெண்மைதெரிந்தசீயத்
தேருமவையன்னவையாயிரம்பூண்டதென்ப
மாறுபொரிலங்கைநிகர்ப்பதுவானுமேளாரும்
தேறுததுமற்றவனேறியதெய்வமாத்தேர். (௧௯)

பொன்சென்றறியாவுவணத்தனிப்புள்ளினுக்கும்
மின்சென்றறியாமழுவாளன்விடைக்குமேனாள்
பின்சென்றதல்லதொருமாண்சிறப்புற்றபோதும்
முன்சென்றறியாததுமூன்றுலகத்தினுள்ளும். (௨௦)

ஏயாத்தனிப்போர்வலிகாட்டியவிந்திரன்றன்
சாயாப்பெருஞ்சாய்கெடத்தாம்புகளாற்றடந்தோள்
போயார்த்தவன்வந்தனன்வந்தனனென்றுபூசற்
பேயாத்தெழுந்தாடுநெடுங்கொடிபெற்றதம்மா. (௨௧)

செதுகைப்பெருந்தானவரூடுநெடுந்தேய்த்தநேமி
யதுகைத்திசையானையையோட்டியதென்னலாமே
மதுகைத்தடந்தோள்வலிகாட்டியவானவேந்தன்
முதுகைத்தழும்பாக்கியமொய்யொளிமொட்டதம்மா. (௨௨)

அத்தேரினையேறியதொப்பனவாயிரந்தேர்
ஒத்தேய்வனசேமமதாய்வரவுள்ளம்வெம்போர்ப்
பித்தேறினனென்னநடந்தனன்பின்பலான்மற்
றெத்தேவரையும்முகங்கண்டறியாதவீட்டான். (௨௩)

அன்னோனொடுபோகியதானையறிந்துகூற
என்னாலரிதேனுமியம்புவான்மீகனென்னும்
நன்னூன்மறையானதுநாற்பதுவெள்ளமென்னச்
சொன்னான்பிறர்யாரஃதுணர்ந்துதொகுக்கவல்லார். (௨௪)

தூமக்கணரக்கனுந்தொல்லமர்யார்க்குந்தோலா
மாபக்கனுமங்நெடுந்தேர்மணியாழிகாக்கத்
தாமக்குடைமீதுயரப்பெருஞ்சங்கம்விம்ம
நாமக்கடற்பல்லியநாற்கடன்மேலுமார்ப்ப. (௨௫)

தேராயிரமாயிரகோடிதன்மாடுசெல்லப்
போரானைபுறத்தினவற்றினிரட்டிபோதத்

25. தூமக்கண் - புகைக்கண். தூபக்கண் என்றும் பாடம்.

தாரார்புரவிக்கடல்பின்செலத்தானைவீரப்
பேராழிமுகஞ்செலச்சென்றனன்பேர்ச்சியில்லான். (உ௬)

வேறு.

நின்றனனிலக்குவன்களத்தைநீங்கலன்
பொன்றினனிராவணன்புதல்வன்போர்க்கினி
அன்றவனல்லனேலமரர்வேந்தனை
வென்றவன்வருமெனவிரும்புஞ்சிந்தையான். (உ௭)

யாரிவன்வருபவனியம்புவாயென
வீரவெந்தொழிலினன்விளம்பவீடணன்
ஆரியவிவனிகலமரர்வேந்தனைப்
போர்கடந்தவனின்றுவலிதுபோரென்றான். (உ௮)

எண்ணினதுணர்த்துவதுளதொன்றெம்பிரான்
கண்ணகன்பெரும்படைத்துணைவர்காத்திட
நண்ணினதுணையொடுபொருதனன்றிது
திண்ணிதினுணர்தியாற்றெளியுஞ்சிந்தையாய். (உ௯)

மாருதிசாம்பவன்வானரேந்திரன்
தாரைசேய்நீலனென்றினையதன்மையார்
வீரர்வந்துடனுறவிமலநீநெடும்
போர்செயறகுதியாற்புகழின்பூணினாய். (௩0)

பல்பதினாயிரந்தேவர்பக்கமா
எல்லையில்சேனைகொண்டெதிர்ந்தவிந்திரன்
ஒல்லையினுடைந்தனனுயிர்கொண்டுய்ந்துளான்
மல்லலந்தோளினாயமிழ்தின்வன்மையால். (௩௧)

இனியவைமறையுமோவிந்திரன்புயப்
பனிவரையுளநெடும்பாசப்பஃறழும்
பனுமனைப்பிணித்துளனானபோதவன்
தனுமறைவித்தகநடுக்கற்பாலதோ. (௩௨)

என்றவனிறைஞ்சலுமிளையவள்ளலும்
நன்றெனமொழிதலுநணுகினனரோ
வன்றிறன்மாருதியிலங்கைக்கோமகன்
சென்றனனிளவன்மேலென்னுஞ்சிந்தையான். (௩௩)

32. தழும்பு - குறி.

கூற்றமுங்கட்புலம்புதைப்பக்கோத்தெழு
தோற்றமுமிராவணிதுணிபுநோக்குறு
மேற்றிசைவாயிலைவிட்டுவெங்கடுங்
காற்றெனவனுகினன்கடிதின்வந்தரோ. (௩௪)

அங்கதன்முன்னரேயாண்டையானயல்
துங்கவன்றோளினரெவருஞ்சுற்றினர்
செங்கதிரோன்மகன்முன்புசென்றனன்
சங்கநீர்க்கடலெனத்ததீஇபதானையான். (௩௫)

இருதிரைப்பெருங்கடலிரண்டுதிக்கினும்
பொருதொழில்வேட்டுவந்தார்த்துப்பொங்கின
வருவனபோன்றனமனத்தினுற்சினம்
திருகினவெதிரெதிர்செல்லுஞ்சேனையே. (௩௬)

கண்ணினன்மனத்தினுற்கருத்தினுற்றெரிந்
தெண்ணினர்பெறுபயனெய்துமின்றென
நண்ணினரிமையவர்நங்கைமாரொடும்
விண்ணினுடுறைவிடம்வெறுமைகூரவே. (௩௭)

ஒத்திருதானையுமுடற்றவுற்றுழி
அத்தனைவீரருமார்த்தவார்கலி
நத்தொலிமுரசொலிநடுக்கலாற்றலை
பொத்தினர்செவிகளைப்புரந்தராதியர். (௩௮)

எற்றுமின்பற்றுமினெறிமினெய்ம்மினென்
றுற்றனவுற்றனவுரைக்குமோதையும்
முற்றுறுகடையுகத்திடியின்மும்மடி
பெற்றனபிறந்தனசிலையின்பேரொலி. (௩௯)

கற்படமரம்படக்காலவேல்பட
விற்படுகணைபடவீழும்வீரர்தம்
எற்படுமுடல்படவிரண்டுசேனையும்
பிற்படநெடுநிலம்பிளந்துபேருமால். (௪௦)

எழுத்தொடர்மரங்களாலெற்றமுற்றிய
விழுத்தலைமுழுவதுஞ்சிதறிவீழ்ந்தன
அழுத்தியபெருஞ்சினத்தரக்கராக்கைகள்
கழுத்துளதலையிலகளத்தினுடுவ. (௪௧)

40. கற்பட - மலை உடைய.

வெட்டியதலையனநரம்புவீசமேல்
முட்டியகுருதியகுரங்கின்மொய்யுடல்
சுட்டியர்நெடுவனந்தொலைந்தபின்னெடுங்
கட்டைகளெரிவனபோன்றுகாட்டுவ. (௪௨)

பிடித்தனநிருதரைப்பெரியதோள்பெயர்த்
தொடித்தனகால்விசைத்துதைத்தவுந்தின
கடித்தனகழுத்தறக்கைகளாலெடுத்
தடித்தனவரைத்தனவார்த்தவானரம். (௪௩)

வாள்களிற்கவிக்குலவீரர்வார்கழற்
றாள்களைத்துணித்தனர்தலையைத்தள்ளினர்
தோள்களைப்பிரித்தனருடலைத்துண்டவன்
போழ்களிற்புரட்டினர்நிருதர்பொங்கினார். (௪௪)

மரங்களிலரக்கரைமலைகள்போன்றுயர்
சிரங்களைச்சிதறினவுயிரைச்சிந்தின
கரங்களைக்கழல்களையொடியக்காதின
குரங்கெனப்பெயர்கொடுதிரியுங்கூற்றமே. (௪௫)

சுடர்த்தலைநெடும்பொறிசொரியுங்கண்ணன
அடற்றலைநெடுமரமற்றகையன
உடற்றலைவயிரவேலுருவவுய்த்தவர்
மிடற்றினைக்கடித்துடன்விளிந்துபோவன. (௪௬)

அடர்ந்தனகிரிகளையசனியேறெனத்
தொடர்ந்தனமழைபொழிதும்பிக்கும்பங்கள்
இடந்தனமூளைகளினிதினுண்டன
கடந்தனபசித்தழல்கரடிகாதுவ. (௪௭)

கொலைமதகரியனகுதிரைமேலன
வலமணித்தேரனவாளின்மேலன
சிலைகளின்குடுமியசிரத்தின்மேலன
மலைகளிற்பெரியனகுரங்குவாவுவ. (௪௮)

### வேறு.

தண்டுகொண்டரக்கர்தாக்கச்சாய்ந்துகுநிலையசந்தில்
துண்டங்களாகவாளிற்றுணிந்தபேருடலைத்தூவிக்
கொண்டெழுமலைகளோடுங்குரக்கினப்பிணத்தின்குப்பை
மண்டுவெங்குருதியாறம்மறிகடன்மடுத்தமாதோ. (௪௯)

பனிவென்றபதாகையென்றும்பல்லுளைப்பரிமாவென்றும்
தனுவென்றும்வாளியென்றுந்தண்டென்றுந்தனிவேலென்றும்
சினவென்றிமதமாவென்றுந்தேரென்றுந்தெரிந்ததில்லை
அனுமன்கைவயிரக்குன்றாலரைப்புண்டவரக்கர்தானை. (ரு௦)

பொங்குதேர்ப்புரவியானைபொருகழனிருதரென்னும்
சங்கையுமில்லாவண்ணந்தன்னுளேதழுவிக்கூற்றம்
எங்குளவுயிரென்றெண்ணியிணைக்கையாற்றிளைத்ததென்ப
அங்கதன்மரங்கொண்டெற்றவளறுபட்டழிந்ததானை. (ருக)

தாக்கியதிசைகடோறுந்தலைத்தலைமயங்கித்தம்மின்
றாக்கியகளிறுந்தேரும்புரவியுநூழில்செய்ய
ஆக்கியசெருவைநோக்கியமரரோடசுரர்போரைத்
தூக்கியமுனிவரென்னேயிதற்கதுதோற்குமென்றார். (ருஉ)

எடுத்ததுநிருதர்தானையிரிந்ததுகுரங்கினீட்டம்
தடுத்தனர்முகங்கடாங்கித்தனித்தனிதலைவர்தள்ளிப்
படுத்தனரரக்கர்வேலைபட்டதும்படவும்பாரார்
கடுத்தனர்கடுத்தபின்னுங்காத்தனர்கவியின்வீரர். (ருங)

சூலமுமழுவுந்தாங்கித்தோளிருநான்குந்தோன்ற
மூலம்வந்துலகையுண்ணுமுருத்திரமூர்த்தியென்ன
நீலனின்றுழியேநின்றானிரந்தரங்கணங்களோடு
காலனென்றொருவன்யாண்டும்பிரிந்திலன்பாசக்கையான். (ருச)

காற்றலன்புனலோவல்லன்கனலல்லனிரண்டுகையால்
ஆற்றலனாற்றுகின்றவருஞ்சமமிதுவேயாகில்
ஏற்றமென்பலவுஞ்சொல்லியென்பதமிழந்தேதனென்னுக்
கூற்றமுங்குலுங்கியஞ்சவெங்கதக்குமுதன்கொன்றான். (ருரு)

மறிகடல்புடைசூழ்வைப்பின்மானவன்வாளிபோன
செறிபணைமரமேநின்றமரங்களிற்றெறியச்செப்புங்
குறியுடைமலைகடம்மிற்குலவரைக்குலமேகொள்ளா
எறிதலோடறைதல்வேட்டவிடவனன்றிடந்திலாத. (ருசு)

வாம்பரிமதமாமான்றேர்வாளெயிற்றரக்கர்மாயப்
பாம்பினும்வெய்யோர்சாலப்படுகுவர்பயமின்றின்றே
றாம்புறழ்குருதிமண்டத்தொடர்நெடுமரங்கள்சுற்றிச்
சாம்பவன்கொல்லச்சாம்புமென்றுரையமரர்தந்தார். (ருஎ)

54. மூலம்-முடிவுகாலம், சர்வசம்மாரகாலம். 56. எடுத்திலாத என்றும்பாடம்.

பொருங்குலப்புரவியான திரைகளுங்கலம்பொற்றேரும்
இருங்களியானையானமகரமுமிரியல்போக
நெருங்கியபடைகளானமீன்குலமிரிந்துசிந்தக்
கருங்கடல்கலக்குமத்திற்பனசனுங்கலக்கிப்புக்கான். (ருஅ)

மயிந்தனுமிளவலுமழைக்குலங்கிழித்துவானத்
துயர்ந்தெழுமெருவைவேந்தருடன்பிறந்தவரையொத்தார்
கயங்குடைந்தாடும்வீரக்களிறெனத்தான்கவையன்காலிற்
பெயர்ந்திலனுற்றதல்லாற்கேசரிபெரும்போர்பெற்றான். (ருக)

பெரும்படைத்தலைவர்யாரும்பெயர்ந்திலர்பிணத்தின்குப்பை
வரம்பிலபரம்பியார்த்துமலைகின்றபொழுதின்வந்துற்
றிரிந்தனகவியுங்கூடியெடுத்தனவெடுத்தலோடும்
சரிந்தனதிருதர்தானைதாக்கினனரக்கன்றானே. (சுo)

வேறு.

பூணெறிந்தகுவடனையதோள்களிருபுடைபரந்துயர வடல்வலித், தூணெறிந்தனைய வியல்கள்கோதையொடு சிலையெறிந்ததொருதொழில்படச், சேணெறிந்துநிமிர் திசைகளோடுமலை செவிடெறிந்துடைய மிடல்வலோன், நாணெறிந்துமுறை முறைதொடர்ந்துகட லுலகம்யாவையு நடுக்கினான். (சுக)

சிங்கவேறுகடல்போன்முழங்கிநிமிர்தேர்கடாய்நெடிதுசெல்கென
அங்கதாதிபரனுங்கவானவர்களஞ்சவெஞ்சினவனந்தன்மாச்
சங்கபாலகுளிகாதிவாலெயிறுதந்ததீவிடமுமிழ்ந்துசார்
வெங்கணாகமெனவேகமாயுருமுமஞ்சவெங்கணைகள்சிந்தினான் (சுஉ)

சுற்றும்வந்துகவிவீரர்வீசியசுடர்த்தடங்கல்வரைதோன்மரம்
இற்றெரிந்துபொடியாயுதிர்ந்தனவெழுந்துசேணிடையிழிந்தபோல்
வெற்றிவெங்கணைபடப்படத்தலைகள்விண்ணினூடுதிசைமீதுபோய்
அற்றெழுந்தனவிழுந்துமண்ணிடையழுந்துகின்றனவநந்தமால். ()

சிலைத்தடம்பொழி வயக்கடும்பகழி செல்லவொல்கினர் சினத்திறல், உலைத்தெறிந்திட வெடுத்தகுன்றுதொ றுடற்பரங்கள்கொடொதுங்கினார், நிலைத்துநின்றுசின முந்துசெல்லவெதிர் சென்றுசென்றுற நெருக்கலால், மலைத்தலங்களொடுரத்தலங்கழல வூடுசென்றபல வாளியே. (சுச)

---

63. தோய்மரம் என்றும் பாடம்.

முழுத்தமொன்றிலொரு வெள்ளவானர முடிந்துமாள்வன தடிந்துபோய்க், கழுத்தகையநிமிர் காலவாலபல கண்டமானபடிகண்டுளோர், எழுத்தொடர்ந்தபடர் தோள்களாலெறிய வெற்றவுற்றனவெழுந்துமேல், விழுத்தலைந்தலைய வேணுமால்வரைகள் வீசிவீசியுடன்வீழுமால். (௬௫)

அற்றலைந்தலை யரிந்துசென்றன வயிற்கடுங்கணை வெயிற்கள்போல், புற்றடைந்தகொடு வெவ்வராவினெடு நாகலோகமது புக்கவால், வெற்றவெள்ளிடை விரிந்துபோவதொரு மேடுபள்ளம்வெளியின்மையால், உற்றசெங்குருதி வெள்ளமுள்ளதிரை யோதவேலையொடு மொத்ததால். (௬௬)

விழிக்குமேல்விழிய நிற்கின்மார்பிடைய மீளுமேன் முதுகைமேனியைக், கழிக்குமேலுயரி னேடுமேனெடிய காலவீசினிமிர்கையவாய்த், தெழிக்குமேலகவு நாவசிந்தையின வுன்னுமேற்சிகரம்யாவையும், பழிக்குமேனிய குரக்கின்மேலவன் விடுங்கொடும்பகழி பாயவே. (௬௭)

மொய்யெடுத்தகணைமாரியாலிடைமுடிந்த தொன்றுமுறைகண்டிலார், எய்விடத்தெறிபு நாணினோசையல தியாதுமொன்றுசெவியுற்றிலார், மெய்யெடுத்தகவி வெள்ளம்யாவையும் விழுந்துபோனவெனும் விம்மலால், கையெடுத்தன குரங்கினோடுமுறை கண்டுதேவர்கள் கலங்கினார். (௬௮)

கண்டவானரமனந்தகோடிமுறைகண்டமானபடிகண்டவக்
கண்டமாறொருவ ரின்மைகண்டுகணை மாறினான்விடுதலின்மையாய்க்
கண்டகாலையில்விலங்கினனிரவிகா தல்காதுவதொர்காதலால்
கண்டகார்சிதையமீதுயர்ந்தொளிர்மராமரஞ்சுலவுகையினான். (௬௯)

உடைந்துதன்படை யுலைந்துசிந்தியபி றால்கவெல்செரு வுடற்றலால், கடைந்துதெள்ளமுது கொள்ளும்வள்ளலென மேனிமிர்ந்ததொர் கறுப்பினான், இடைந்துசென்றவனை யெய்தியெய்தரிய காவல்பெற்றிகவி யற்றுவான், மிடைந்துநின்றபடை வேலைகாறளரவீசினானிருதர் கூசினார். (௭௦)

சுற்றிநின்றபடைசிந்தியோடவொர்மராமரங்கொடுதுகைத்துளான்
வெற்றிகண்டுவலிநன்றுநன்றெனவியந்துவெங்கணைதெரிந்தவன்
நெற்றியின்றலையிரண்டுமார்பிடையொரஞ்சுநஞ்செனநிறுத்தவன்
பற்றிவந்தமரம்வேறுவேறுறநுறுக்கிநுண்பொடிபரப்பினான். (௭௧)

அக்கணத்தனுமனுலகாலமெனலாயதோர்வெகுளியாயினன்
புக்கனைத்துலகமுங்குலுங்கநிமிர்தோள்புடைத்துருமுபோலுரு
இக்கணத்தவனிறக்குமென்பதொருகுன்றெடுத்துமிசையேவினன்
உக்கதக்கிரிசொரிந்தவாளிகளினூழிலாதசிறுபூழியாய். (எஉ)

நில்லடாசிறிதுநில்லடாவுனைநினைத்துவந்தனன்முனைக்குநான்
வில்லெடாமைநினதாண்மைபேசியுயிரோடுநின்றுவிளையாடினாய்
கல்லெடாநெடுமரங்களோவருகருத்தினேன்வலிகடப்பநீ
சொல்லடாவெனவியம்பினானிகலரக்கனையனிவைசொல்லினான்.

வில்லெடுக்கவுரியார்களையசிலவீரரிங்குமுளர்மெல்லியோய்
கல்லெடுக்கவுரியானுநின்றனனதின்றுநாளையிடைகாணலாம்
எல்லெடுத்தபடையிந்திராதியருனக்கிடைந்துயிர்கொடேகுவார்
புல்லெடுத்தவர்களல்லம்வேறுசிலபோரெடுத்தெதிர்புகுந்துளேம்.

என்னொடேபொருதியோவதன்றெனி னிலக்குவப்பெயரினெ
ம்பிரான், தன்னொடேபொருதிபோவுனுந்தைதலைதள்ளநின்றதனி
வள்ளலாம், மன்னொடேபொருதியோவுரைத்ததுமறுக்கிலோமென
வழங்கினான், பொன்னொடேபொருவினல்லதொன்றுடுபொதுப்ப
டாவுயர்புயத்தினான். (எரு)

எங்குநின்றனனிலக்குவப்பெயரவ்வேழையெம்பியதிகாயனும் [ன்
சிங்கம்வந்தவனைவென்றுதன்னுயிரெனக்குவைத்ததொர்சிறப்பினு
அங்கவன்றனைமலைந்துகொன்றுமுனிவாறவநதனனதன்றியும் [னே.
உங்கடன்மையினடங்குமோவுல கொடுக்கும்வெங்கணைதொடுப்பி

ஆருமென்படைஞரெய்தலின்றியபலேகயானுமிகல்வில்லுமோ
ர், தேரினின்றுமையடங்கலுந்திரள்சிரந்துணிப்பனிதுதிண்ணமால்
வாருமுங்களுடன்வானுளோர்களையு மண்ணுளோரையும்வரச்சொ
லும், போருமின்றொருபகற்கணேபொருது வெல்வென்வென்றலது
போகிலேன். (எஎ)

என்றுவெம்பகழியேழுநூறுமிருநூறும்வெஞ்சிலைகொடேவினான்
குன்றுநின்றனையவீரமாருதிதன்மேனிமேலவைகுழூக்களாய்ச்
சென்றுசென்றுருவலோடும்வாளெயிறுதின்றுசீறியொருசேமவன்
குன்றுநின்றதுபறித்தெடுத்தவனையெய்திநொய்தினிதுகூறினான்.

---

74. கல்லெடுக்கவுரியான் - பிதிர்க்கடன்செய்யுங்காலத்து, பாடாணத்தா பனஞ் செய்தற்குரியவிபீடணன். கல்லெடுக்க வுரியெனும் நினறனேன் என றும் பாடம்.

தும்பியென்றுலகினுள்ளயானையவை யேனையுந்தொகுபுதுள் ளுதாள், வெம்புவெஞ்சினமடங்கலொன்றின்வலிதன்னைநின்றெளி தின்வெல்லுமோ, நம்பிதம்பியெனதெம்பிரான்வருதுணைத்தரிக்கி லைநலித்தியேல், அம்பின்முந்தியுனதாவியுண்ணுமிதுகாவடாசிலைவ லாண்மையால். (௭௯)

செருப்பயிற்றியதடக்கையாளிசெல விட்டகுன்றுதிசையானை யின், மருப்பையுற்றதிரடோளிராவணன்மகன்றன்மார்பினுயர்வச் சிரப், பொருப்பையுற்றதொரபொருப்பெனக்கடிதொடிந்திடிந்துதி சைபோயதால், நெருப்பையுற்றதொரிரும்புகூடமுறநீறுபட்டதுநி கர்த்ததால். (௮௦)

விலங்கன்மேல்வரவிலங்கவீசியவிலங்கனீறுபடுவேலையில்
சலங்கைமேனிமிரவெஞ்சினந்திருகிவஞ்சன்மேனிகர்தருக்கினான்
வலங்கொள்பேருலகமேருவோடெனமதிக்குமாருதிதன்வாசநா
றலங்கன்மார்பினொடுதோளினூடுருவவாயிரஞ்சரமழுத்தினான்.

ஒன்றுபோல்வனவொராயிரம்பகழியூடுபோயுருவவாடகக் [யான்
குன்றுகால்குடையமேலுயர்ந் திடைகுலுங்குகின்றனையகொள்கை
மன்றனாறுதடமேனிமேலுதிரவாரிசோரவருமாருதி [ன்.
நின்றுதேறுமளவின்கண்வெங்கண்விழி நீலன்வந்திடைநெருக்கினா

நீலனின்றதொருநீலமால்வரைநெடுந்தடக்கையினிடந்துநேர்
மேலெழுந்தெர்விசும்புசெல்வதொருவெம்மையோடுவரவீசலும்
சூலமந்தகனெறிந்ததன்னதுதுணிந்துசிந்தவிடைசொல்லுறுங்
காலமொன்றுமறியாமலம்புகொடுகல்லினோடியவில்லினான். (௮௩)

ஊகமெங்குமுயிரோடுநின்றனவுமோடவானவர்களுள்ளமும்
மோகமெங்குமுளவாகமேருவினுமும்மடங்குவலிதிண்மைசால்
ஆகமெங்கும்வெளியாகவெங்குருதியாறுபாயவனலஞ்சுவாய்
நாகவெங்கணகுவாளிபாய்தொறுநடுங்கினான்மலைபிடுங்கினான். ()

மேருமேருவெனவல்லதல்லதெனவேரினோடுநெடுவெற்பெலாம்
மாரின்மேலுமுயர்தோளின்மேலும்வரவாலிகாதலன்வழங்கினான்
சேருமேயவைதனுக்கைநிற்கவெதிர்செல்லுமேகடிதுசெல்லினும்
பேருமேகொடியவாளியான்முறிபெறுகலாவவைநுறுக்கினான். ()

நெற்றிமேலுமுயர்தோளின்மேலுநெடுமார்பின்மேலுநிமிர்தாளினு
புற்றினூடுநுழைநாகமன்னபுகைவேகவாளிகள்புகப்புகத்

80. திசையானை - அட்டதிக்கில் காவலாயுள்ள யானை.

தெற்றிவாளெயிறு தின்றுகைத்துணை பிசைந்துகண்களெரி தீயுக
வற்றிடுதிரவாரிசோர்வுறமயங்கினனிலமுயங்கினன். (அ௬)

மற்றைவீரர்கடமார்பினமேலுமுயர்தோளின்மேலுமழைமாரிபோல்
கொற்றவெங்கணையிலக்கமெய்தவை குளிப்பகினறுடல்குலுங்கினர்
இற்றவிந்தனபெரும்பதாதியுயிருள்ளவெங்கணுமிரிந்தவப்
பெற்றிகண்டிளையவள்ளலொள்ளெரி பிறந்தகண்ணனிவைபேசினன்

வேறு.

பிழைத்ததுகொள்கைபோதப்பெரும்படைத்தலைவர்யாரும்
உழைத்தனர்குருதிவெள்ளத்துலந்ததுமுலப்பிற்றன்றே
அழைத்திவன்றன்னையானேயாயிருர்கொளப்படாதே
இழைத்ததுபழுதேயன்றேவீடணாவென்னச்சொன்னான். (அஅ)

ஐயவீதன்னதேயாலாயிரகோடிதேவர்
எய்தினரெய்தினரேயீடுபட்டிரிந்ததல்லால்
செய்திலரிவனையொன்றுநீயிதுதீர்ப்பினல்லால்
உய்திறனுண்டோவேறிவ்வுலகினுக்குயிரோடென்றான். (அ௯)

என்பதுசொல்லக்கேட்டவிந்திரவில்லினோடும்
பொன்பொருமேகமொன்றுவருவதுபோல்கின்றானை
முன்பனைமுன்புநோக்கியிவன்கொலாம்பரதன்முன்னோன்
தன்பெருந்தம்பியென்றானுமெனச்சாரன்சொன்னான். (௯0)

தீயவனிளவறன்மேற்செல்வதன்முன்னஞ்செல்கென்
றேயினரொருவரின்றியிராக்கதத்தலைவரெங்கள்
நாயகன்மகனைக்கொன்றுய்நண்ணினைநாங்கள்காணப்
போயினியுய்வதெங்கேயென்றெரிவிழித்துப்புக்கார். (௯க)

கோடிநூறியைந்தகூட்டத்திராக்கதர்கொடித்திண்டேரும்
ஆடன்மாக்களிறுமாவுங்கடாவினரார்த்துமண்டி
மூடினார்மூடினாரைமுறைமுறைதுணித்துவாகை
சூடினனிராமன்பாதஞ்சூடியதோன்றறம்பி. (௯உ)

அதிர்ந்தனவுலகமேழுமனற்பொறியசனியென்னப்
பிதிர்ந்தனமலையும்பாரும்பிளந்தனபிணத்தின்மேன்மேல்
உதிர்ந்தனதலைகண்மண்டியோடினவுதிரநீத்தம்
விதிர்ந்தனவயரர்கைகள்விளைந்ததுகொடியவெம்போர். (௯௩)

87. வள்ளல் - வரையாது கொடுப்போன்.

விட்டனன்விசிகம்வேகம்விடாதனவீரன்மார்பில்
பட்டனவுலகமெங்கும்பரந்தனபதாகைக்காட்டைச்
சுட்டனதுரகராசிதுணித்தனபனைக்கைமாவை
அட்டனகூற்றமென்னவடர்ந்தனவனந்தமம்மா. (௯௪)

உலக்குநருலக்கின்றுரையெண்ணுவானுற்றவிண்ணோர்
கலக்குறுகண்ணர்நோக்கிக்கடையுறக்காணலாற்றார்
விலக்கரும்பகழிமாரிவிளைக்கின்றவிளைவையுன்னி
இலக்குவன்சிலைகொடேகொலெழுமழைபயின்றதென்றார். (௯௫)

மீளியொண்கணைகடோறுமுந்தியவேழமொற்றை
வாளியின்றலையபாரின்மறிவனமலையிற்சூழ்ந்த
ஆளியின்றுப்பின்வீரர்பொருகளத்தார்த்தவாழித்
தூளியின்றொகையவள்ளல்சுடுகணைத்தொகையுமம்மா. (௯௬)

பிறவியிற்பெரியநோக்கிற்பிசிதமுண்டுழலும்பெற்றிச்
சிறையனவென்னநோக்கித்தேவருந்திகைக்கத்தேற்றித்
துறைதொறுந்தொடர்ந்துவானம்வெளியறத்துவன்றிவீழும்
பறவையிற்பெரிதுபட்டார்பிணத்தின்மேற்படிவமாதோ. (௯௭)

திறந்தருகவியின்சேனைசெறிகழனிருதன்சீற
இறந்தனகிடந்தவெள்ளமெழுபதிற்பாதிமேலும்
பறந்தலைமுழுதும்பட்டவஞ்சகர்படிவமூடி
மறைந்ததுகுருதியோடிமறிகடன்மடுத்திலாத. (௯௮)

கையற்றார்கால்களற்றார்கழுத்தற்றார்கவசமற்றார்
மெய்யற்றார்குடர்கள்சோரவிசையற்றார்விளிவுமற்றார்
மையற்றார்க்கரியுநதேரும்வாசியுமற்றுமற்றார்
உய்யச்சாய்ந்தோடிச்சென்றுருயிருள்ளாராகியுள்ளார். (௯௯)

வற்றியகடலுணின்றமலையெனமருங்கின்யாரும்
சுற்றினரின்றித்தோன்றுந்தசமுகன்றோன்றறுள்ளித்
தெற்றினபுருவத்தோன்றன்மனமெனச்செல்லுந்தேரான்
உற்றனனிளையகோவையனுமனுமுடன்வந்துற்றான். (௧00)

தோளின்மேலாதியையவென்றடிதொழுதுநின்றான்
ஆளிபோன்மொய்ம்பினனுமேறினனமரரார்த்தார்
காளியேயனையகாலன்கொலையனகனலின்வெய்ய
வாளிமேல்வாளிதூர்த்தார்மழையின்மேன்மழைவந்தன்னார். (௧0௧)

---

101. காளியே அனையகாலன் - மாகாளியை ஒத்த காலன்.

இடித்தனசிலையினுண்களிரிந்தனதிசைகளிற்று
வெடித்தனமலைகள்விண்டுபிளந்தனவிசும்புமேன்மேல்
பொடித்தவிவ்வுலகமெங்கும்பொழிந்தனபொறிகள்பொங்கிக்
கடித்தனகணைகளோடுகணைகடம்மயில்வாய்கவ்வி. (௧0௨)

அம்பினோடம்பொன்றொன்றையறுக்கமற்றறுக்கிலாத
வெம்பொறிகதுவவிண்ணில்வெந்தனகரிந்துவீழ்ந்த
உம்பருமுணர்வுசிந்திபொடுங்கினருலகமியாவும்
கம்பமுற்றலைந்தவேலைக்கலமெனக்கலங்கிற்றண்டம். (௧0௩)

அரியினம்பூண்டதேருமனுமனுமனந்தசாரி
புரிதலினிலங்கையூருந்திரிந்ததுபுலவரேயும்
எரிகணைப்படலமூடவிலருளரென்னுநதன்மை
தெரிகிலர்செவிடுசெல்லக்கிழிநதனதிசைகளெல்லாம். (௧0௪)

நாண்பொருவரிவிற்செங்கைநாமனானவின்றகல்வி
மாண்பொருவகையிற்றன்றுவலிக்கிலையவதிவானம்
சேண்பெரிதென்றுசென்றதேவருமிருவர்செய்கை
காண்பரிதென்றுகாட்சிக்கையறவெய்திற்றன்றே. (௧0௫)

என்செய்தாரென்செய்தாரென்றியம்புவாரினையதன்மை
முன்செய்தாரியாவரென்பார்முன்னேதுபின்னேதென்பார்
கொன்செய்தார்வீரரின்னதிசையிரென்றுங்கொள்ளார்
பொன்செய்தார்மவுலிவிண்ணோருணர்ந்திலர்புகுந்ததொன்றும். ()

ஆயிரகோடிபல்லமயிலெயிற்றரக்கனெய்தான்
ஆயிரகோடிபல்லத்தவைதுணித்தறுத்தானையன்
ஆயிரகோடிநாகக்கணைதொடுத்தரக்கனெய்தான்
ஆயிரகோடிநாகக்கணைகளாலறுத்தானண்ணல். (௧0௭)

கோட்டியின்றலையகோடிகோடியம்பரக்கன்கோத்தான்
கோட்டியின்றலையகோடிகோடியாற்குறைத்தான்கொண்டல்
மீட்டொருகோடிகோடிவெஞ்சினத்தரக்கன்விட்டான்
மீட்டொருகோடிகோடிகொண்டவைதடுத்தான்வீரன். (௧0௮)

கங்கபத்திரமோர்கோடிகைவிசைத்தரக்கனெய்தான்
கங்கபத்திரமோர்கோடிகணைதொடுத்திளவல்காத்தான்
திங்களிற்பாதிகோடியிலக்குவன்றெரிந்துவிட்டான்
திங்களிற்பாதிகோடிதொடுத்தவையரக்கன்றீர்த்தான். (௧0௯)

கோரையின்றலையகோடி கொடுங்கணையரக்கன்கோத்தான்
கோரையின்றலையகோடி தொடுத்தவையிளவல்கொன்றான்
பாரையின்றலையகோடிபரப்பினனிளவல்பல்கால்
பாரையின்றலையகோடியரக்கனும்பதைக்கவெய்தான். (ககo)

தாமரைத்தலையவாளிதாமரைக்கணக்கிற்சார்ந்த
தாம்வரத்துரந்துமுந்தித்தசமுகன்றனையனார்த்தான்
தாமரைத்தலையவாளிதாமரைக்கணக்கிற்சார்ந்த
தாம்வரத்தடுத்துவீழ்த்தான்றாமரைக்கண்ணன்றம்பி. (ககக)

வச்சிரப்பகழிகோடிவளையெயிற்றரக்கனெய்தான்
வச்சிரப்பகழிகோடிதுரந்தவையனகன்மாய்த்தான்
முச்சிரப்பகழிகோடியிலக்குவன்முடுகவிட்டான்
முச்சிரப்பகழிகோடிதொடுத்தவைதடுத்தான்முன்பன். (ககஉ)

அஞ்சலியஞ்சுகோடிதொடுத்திகலரக்கனெய்தான்
அஞ்சலியஞ்சுகோடிதொடுத்தவையறுத்தானையன்
குஞ்சரக்கன்னங்கோடியிலக்குவன்சிலையிற்கோத்தான்
குஞ்சரக்கன்னங்கோடிதொடுத்தவையரக்கன்காத்தான். (ககங)

எய்பவுமெய்தவாளிவிலக்கவுமுலகமெல்லாம்
மொய்கணைக்கானமாகிமுடிந்ததுமுழங்குவேலை
பெய்கணைப்பொதிகளாலேவளர்ந்ததுபிறந்தகோபம்
கைமிகக்கனன்றதல்லாற்றளர்ந்திலர்காளைவீரர். (ககச)

வீழியின்கனிபோன்மேனிகிழிபடவனுமன்வீரச்
சூழெழுவனையதோண்மேலாயிரம்பகழிதூவி
ஊழியினிமிர்ந்தசெந்தீயுருமினையுமிழ்வதென்ன
ஏழிருநூறுவாளியிலக்குவன்கவசத்தெய்தான். (ககரு)

முற்கொண்டானரக்கனென்னுமுளரிவாண்முகங்கடேவர்
பிற்கொண்டாரிளையகோவைப் பியற்கொண்டான் பெருந்தோணின்
கற்கொண்டார்கிரியினூடுமருவிபோற்குருதிகண்டார் [றும்
விற்கொண்டாரிவனேயென்றுவெருக்கொண்டார்முனிவர்மேலார்()

சீறுநூறெறிந்தசிந்தையிலக்குவன்சிலைக்கைவாளி
நூறுநூறேவிநொய்தினுடங்குளைமடங்கன்மாவும்
வேறுகூறியற்றிவீரக்கொடியையுமறுத்துவீழ்த்தி
ஆறுநூறம்புசெம்பொற்கவசம்புக்கழுந்தவெய்தான். (ககஎ)

111. தாமரைக்கண்ணன் - இராமன். 112. வளை எயிறு - வளைந்தகோரப்பல்.

காளமேகத்தைச்சார்ந்தகதிரவனென்னக்காந்தித்
தோளின்மேன்மார்பின்மேலுஞ்சுடர்விடுகவசஞ்சூழ
நீளிளபவளவல்லிநிரையொளிநிமிர்வவென்ன
வாளிவாய்தோறும்வந்துபொடித்தனகுருதிவாரி. (௧௧௮)

பொன்னுறுதடந்தேர்பூண்டமடங்கன்மாப்புரண்டபோதும்
மின்னுறுபதாகையோடுசாரதிவீழ்ந்தபோதும்
தன்னிறத்துருவவாளிதடுப்பிலசார்ந்தபோதும்
இன்னதென்றறியானன்னுனிவனைபதோர்மாற்றஞ்சொன்னான். ()

அந்தரனல்லனுகின்றானனவனன்றேல்
பின்னரன்பிரமனென்பார்ப்பேசுகபிறந்துவாழும்
மன்னர்நம்பதியின்வந்துவரிசிலைபிடித்தகல்வி
இந்தரன்றன்னோடொப்பார்யாருளரினையரென்றான். (௧உ0)

வாயிடைநெருப்புக்காலவுடனெடுங்குருதிவாரத்
தீயிடைநெய்வார்த்தன்னவெகுளியானுயிர்தீர்ந்தாலும்
ஓய்விடமில்லான்வல்லையோரிமையொடுங்காமுன்னம்
ஆயிரம்புரவிபூண்டவாழியந்தேரினானன்.  (௧உ௧)

வேறு.

ஆசையெங்கனுமம்புகவெம்புபோர்
ஓசைவிம்மவுருத்திரனும்முடல்
கூசவாயிரகோடிகொலைக்கணை
வீசிவிண்ணைவெளியிலதாக்கினான். (௧உஉ)

அத்திறத்திலனகனுமாயிரம்
பத்திபத்தியினெய்குவபல்கணை
சித்திரத்தினிற்சிந்தியிராவணன்
புத்திரற்குமோராயிரம்போக்கினான். (௧உ௩)

ஆயிரங்கணைபாய்ந்தனவாற்றருங்
காயெரித்தலைநெய்யெனக்காந்துறுத்
தூயவன்சுடர்சூழொளிநெற்றியில்
தீயவெங்கணைநூறுசெலுத்தினான். (௧உ௪)

நெற்றிமேலொருநூறுநெடுங்கணை
உற்றபோதினும்யாதுமொன்றுற்றிலன்
மற்றவன்றெழிலோன்மணிமார்பிடை
முற்றவெங்கணைநூறுமுடுக்கினான். (௧உ௫)

122. ஆசை - திசை. 124. தூயவன் - இலக்குமணன்.

நூறுவெங்கணைமார்பினுழைதலின்
ஊறுசோரியொடுள்ளமுஞ்சோர்தரத்
தேறலாந்துணையுஞ்சிலையூன்றியே
ஆறினின்றனனாற்றலிற்றோற்றிலான். (கஉசு)

புதையுநன்மணிபொன்னுருளச்சொடு
சிதையவாயிரம்பாய்பரிசிந்திட
வதையின்மற்றொருகூற்றெனமாருதி
உதையினாலவன்றேரையுருட்டினான். (கஉஎ)

பேயொராயிரம்பூண்டதுபெய்ம்மணி
ஏயதேரிமைப்பின்னிடையேறினான்
தூயவன்சுடர்த்தோளிணைமேற்சுடர்
தீயவெங்கணையைம்பதுசிந்தினான். (கஉஅ)

ஏறியேறியிழிந்ததல்லாலிகல்
வேறுசெய்திலன்வெய்யவன்வீரனும்
ஆறுகோடிப்பகழியிணையிரு
நூறுதேரொருநாழிகைநூறினான். (கஉகூ)

ஆசிகூறினரார்த்தனராய்மலர்
வீசிவீசிவணங்கினர்விண்ணவர்
ஊசனீங்கினருத்தரிகத்தொடு
தூசுவீசினர்நன்னெறிதுன்னினார். (கஙo)

அக்கணத்திறோராயிரமாயிரம்
மிக்கவெங்கணரக்கரவ்வீரனோ
டொக்கவின்பமொருவழியூணினார்
புக்குமுந்தினர்போரிடைப்பொன்றுவார். (கஙக)

தேரர்தேரினிவுளியர்செம்முகக்
காரர்காரினிடிப்பினர்கண்டையின்
தாரர்தாரணியும்விசும்புந்தவழ்
பேரர்பேரிமுழக்கன்னபேச்சினார் (கஙஉ)

பார்த்தபார்த்ததிசைதொறும்பன்மழை
போர்த்தவானமெனவிடிபோர்த்தெழ
ஆர்த்தவோசையுமம்பொடுவெம்படை
தூர்த்தவோசையும்விண்ணினைத்தூர்த்தவால். (கஙங)

130. ஊசனீங்கி - தடுமாற்றமொழிந்து.

ஆளியார்த்தனவாளரியார்த்தன
கூளியார்த்தனகுஞ்சரமார்த்தன
வாளியார்த்தனதேரிவர்மண்டிலம்
தூளியார்த்திலதாற்பிணந்துன்னலால். (கரு௪)

வந்தணைந்ததொர்வாளரிவாவுதேர்
இந்திரன்றனைவென்றவனேறினான்
சிந்தினன்சரமாரிதிசைத்திசை
அந்திவண்ணனொராம்பினகற்றினான். (கருரு)

சுற்றும்வந்துபரந்துதொடர்ந்தவர்
எற்றுகின்றனவெய்தவெறிந்தன
அற்றுதிர்ந்தனவாயிரம்வன்றலை
ஒற்றைவெங்கணையோடுமுருண்டவால். (கருசு)

குடர்கிடந்தனபாம்பெனக்கோண்மதித்
திடர்கிடந்தனசிந்தினதேர்த்திரள்
படர்கிடந்தனர்பல்படைக்கையினர்
கடர்கிடந்தனபோன்றகளத்தினே. (கருஎ)

குண்டலங்களுமாரமுங்கோவையும்
கண்டநாணுங்கழலுங்கவசமும்
சண்டமாருதம்வீசத்தலத்துகும்
விண்டலத்தினின்மீனெனவீழ்ந்தவால். (கருஅ)

அரக்கன்மைந்தனையாரியனம்பினால்
கரக்கநூறியெதிர்பொருகண்டகா
சிரக்கொடுங்குவைக்குன்றுதிரட்டினான்
இரக்கமெய்திவெங்காலனுமெஞ்சவே. (கருகூ)

சுற்றிவால்கொடுதூவுந்துகைக்கும்விட்
டெற்றும்வானினெடுத்தெறியும்மெதிர்
உற்றுமோதுமுதைக்குமுறுக்குமால்
கொற்றவில்லியன்றேறியகூற்றமே. (க௪0)

பார்க்குமஞ்சவுறுக்கும்பகட்டினால்
தூர்க்கும்வேலையைத்தோள்புடைகொட்டிநின்

140. கொற்றவில்லி - வெற்றிபொருந்திய விற்படையினனான இலக்குமணன்.

ருர்க்குமாயிரங்தேர்பிடித்தங்கையால்
ஈர்க்குமையனன்றேறியயானையே. (கசக)

மாவும்யானையும்வாளுடைத்தானையும்
பூவுநீரும்புனைதளிரும்மெனத்
தூவுமள்ளிப்பிசையுந்துகைக்குமால்
சேவகன்றெரிந்தேறியசீயமே. (கசஉ)

உரகம்பூண்டவுருளைபொருந்தின
இரதமாயிரமேயெனுமாத்திரை
சரதமாகத்தரைப்படச்சாடுமால்
வரதனன்றுவந்தேறியவாசியே. (கசங)

அவ்விடத்தினிலாய்மருந்தாலழல்
வெவ்விடத்தினையுண்டவர்மீண்டென
எவ்விடத்தினும்வீழ்ந்தவினத்தலைத்
தெவ்வடக்கும்வலியவர்தேறினர். (கசச)

தேறினர்களெருப்புகச்சீறினர்
ஊறினர்வந்திளவலையொன்றினர்
மாறுமாறுமலையுமரங்களும்
நூறுமாயிரமுங்கொடுநூறினர். (கசரு)

விகடமுற்றமரனெடுவெற்பினம்
புகடவுற்றபொறுத்தனபோவன
துகடவத்தொழில்செய்துறைக்கம்பியர்
சகடமொத்தனதாரணிதேரெலாம். (கசசா)

வாலிமைந்தனேர்மாமரம்வாங்கினன்
காலின்வந்தவரக்கனைக்காவிது
போலுமுன்னுயிருண்பதுபுக்கெனு
மேனிமிர்ந்துநெருப்புகவீசினன். (கசஎ)

ஏரழித்ததுசெய்தவனீண்டெழிற்
சீரழித்தவனனெனத்தேவர்கள்
ஊரழித்தவுயர்வரைத்தோளவன்
தேரழித்ததிமைப்பினிற்சென்றதால். (கசஅ)

அந்தவேலையினுர்த்தெழுந்தாடினர்
சிந்தைசீரினுயர்ந்தனர்தேவர்கள்

தந்தைதந்தைபண்டெற்றசழக்கெலாம்
எந்தைதீர்த்தனனென்பதோரேம்பலால். (க௪௯)

அழிந்ததேரினின்றந்தரத்தக்கணத்
தெழுந்துமற்றோரிரதமுற்றேறினான்
கழிந்துபோகலைநில்லெனக்கைக்கணை
பொழிந்துசென்றனன்றீயெனப்பொங்கினான். (க௫௦)

இந்திரன்மகன்மைந்தனையின்னுயிர்
தந்துபோகெனச்சாரலுற்றான்றனை
வந்துமற்றையவானரவீரரும்
முந்துபோர்க்குமுறைமுறைமுற்றினார். (க௫க)

மரமுங்குன்றுமடிந்தவரக்கர்தம்
சிரமுந்தேரும்புரவியுந்திண்கரிக்
கரமுமாளியும்வாரிக்கடியவன்
சரமுந்தாழ்தரவீசினர்தாங்கினார். (க௫௨)

அனையகாலையிலாயிரமாயிரம்
வினையவெங்கணரக்கரைவிண்ணவர்
நினையுமாத்திரத்தாருயிர்நீக்கினான்
மனையும்வாழ்வுமறக்கமுமாற்றினான். (க௫௩)

ஆனையுந்தடந்தேருந்தன்னாருயிர்த்
தானையும்பரியும்பட்டதன்மையை
மானவெங்கணரக்கன்மனக்கொள்ளாப்
போனவென்றியன்றீயெனப்பொங்கினான். (க௫௪)

சீர்த்தடம்பெருஞ்சில்லியந்தேரினர்
காத்துநின்றவிருவரைக்கண்டனன்
ஆர்த்ததம்பெருஞ்சேனைகொண்டண்டமேல்
ஈர்த்தசோரிப்பரவைநின்றீர்த்தலால். (க௫௫)

நேர்செலாதிடைநின்றனர்நீணெடுங்
கார்செலாவிருள்கீறியகண்ணகன்
தேர்செலாதுவிசும்பிடைச்செல்வதோர்
பேர்செலாதுபிணத்தின்பிறக்கமே. (க௫௬)

அன்றுதன்னயனின்றவரக்கரை
ஒன்றுவாண்முகநோக்கியொருவிலான்

---

156. பிணத்தின்பிறக்கம் - பிணத்தினச்சம்.

நன்றுநம்படைநாற்பதுவெள்ளமும்
கொன்றுநின்றபடியெனக்கூறினான். (கருஎ)

ஆயவீரருமையவமர்த்தலை
நீயுநாற்பதுவெள்ளநெடும்படை
மாயவெங்கணைமாரிவழங்கினை
ஓய்வில்வெஞ்செருவொக்குமென்றோதினர். (கருஅ)

வந்துநேர்ந்தனர்மாருதிமேல்வரும்
அந்திவண்ணனுமாயிரமாயிரம்
சிந்தினான்கணைதேவரைவென்றவன்
நுந்தநுந்தமுறைமுறைநூறினான். (கருகூ)

ஆறுமேழுமறுபதுமைம்பதும்
நூறுமாயிரமுங்கணைநூக்கிவந்
தூறினானைபுணர்வுதொலைத்துயிர்
தேறினானைநெடுநிலஞ்சேர்த்தினான். (கசுo)

கதிரின்மைந்தன்முதலினோர்காவலர்
உதிரவெள்ளத்தினொல்கியொதுங்கலும்
எதிரினின்றவிராவணியீடுற
வெதிரின்காட்டெரிபோற்சரம்வித்தினான். (கசுக)

உளைவுதோன்றவிராவணியொல்கினான்
கிளையினின்றவிருவர்கிளைத்தலும்
அளவில்சேனையவிதரவாரியற்
கிளையவீரன்சுடுசரமேவினான். (கசுஉ)

வேறு.

தெரிகணைமாரிபெய்யத்தேர்களுஞ்சினக்கைமாவும்
பரிகளுந்தாமுமன்றுபட்டவர்கிடக்கக்கண்டார்
இருவருநின்றார்மற்றங்கிராக்கதரென்னும்பேரார்
ஒருவருநின்றாரில்லையுள்ளவரோடிப்போனார். (கசுரு)

ஓடினாரரக்கர்தண்ணீருண்ணவாசையுலந்தநாவர்
தேடினாரெதிர்ந்துகையான்முகிலினைமுகந்துதேக்கிப்
பாடுறுபுண்கடோறும்பசும்புனல்பாயப்பாய
வீடினார்சிலவர்சில்லோர்பெற்றிலர்விளிந்துவீழ்ந்தார். (கசுச)

---

161. இராவணி - இராவணன்மகன்.

வெங்கணை திறந்தமெய்யர்விளிந்திலர்விரைந்துசென்றார்
செங்குழற்கற்றைசோரத்தெரிவையராற்றத்தெய்வப்
பொங்கிரும்பள்ளிபுக்காரவருடல்பொருந்தப்புல்லி
அங்கவராவியோடுந்தம்முயிர்போக்கியற்றார். (௧௬௫)

பொறிக்கொடும்பகழிமார்பர்போயினரிடங்கள்புக்கார்
மறிக்கொளுஞ்சிறுவர்தம்மைமற்றுளசுற்றந்தம்மைக்
குறிக்கொளுமென்றுகூறியவர்முகங்குழையநோக்கி
நெறிக்கொளுங்கூற்றைநோக்கியாருயிரொறுத்துநீத்தார். (௧௬௬)

தாமரைக்கண்ணன்றம்பிதன்மையீதாகின்மெய்ம்மை
வேமரைக்கணத்தினிவ்வூரிராவணிவிளிதன்முன்னம்
மாமரக்கானிற்குன்றின்மறைந்திருமறையவல்லை
போமெனத்தமரைச்சொல்லிச்சிலருடனுறந்துபோனார். (௧௬௭)

வரையுண்டமதுகைமேனிமருமத்துவள்ளல்வாளி
இரையுண்டுதுயிலச்சென்றார்வாங்கிடினிறப்பெனென்றார்
பிரையுண்டபாலினுள்ளம்பிறிதுறப்பிறர்முன்சொல்லா
உரையுண்டநல்லோரென்னவுயிர்த்துயிர்த்துழைப்பதானார். (௧௬௮)

தேரிடைச்செல்லார்மானப்புரவியிற்செல்லார்செங்கட்
காரிடைச்செல்லார்காலிற்காலெனச்செல்லார்காவல்
ஊரிடைச்செல்லார்நாணுலுயிரின்மேலுடையவன்பால்
போரிடைத்திரியாநின்றுநடுங்கினர்புறத்தும்போகார். (௧௬௯)

நொய்தினிற்சென்றுகூடியிராவணியுளவைநோக்கி
வெய்தினிற்கொன்றுவீழ்ப்பலென்பதோர்வெகுளிவீங்கிப்
பெய்துழிப்பெய்யுமாரியனையவன்பிணங்குகூற்றின்
கையினிற்பெரியவம்பாற்கவசத்தைக்கழித்துவீழ்த்தான். (௧௭௦)

கவசத்தைக்கழித்துவீழ்ப்பக்காப்புறுகடனின்றாகி
அவசத்தையடைந்தவீரனறிவுறுந்துணையின்வீரத்
துவசத்தின்புரவித்திண்டேர்கடிதுறத்தூண்டியாமிட்
திவசத்தின்முடித்தும்வெம்போரெனச்சினந்திருகிச்சென்றார். ()

மாருதிமேலுமையன்மார்பினுந்தோளின்மேலும்
தேரினரிருவர்சென்றார்சிந்தினபகழிசிந்தி
ஆரியன்வாகைவில்லுமச்சுடைத்தேருமத்தேர்
ஊர்குவாருயிருங்கொண்டான்புரவியினுயிருமுண்டான். (௧௭௨)

இருவருமிழந்தவில்லாரெழுமுளைவயிரத்தண்டர்
உருமெனக்கடிதினோடியனுமனையிமைப்பினாற்றார்
பொருகனற்பொறிகள்சிந்தப்புடைத்தனர்புடைத்தலோடும்
பருவலிக்கரத்தினாற்றண்டிரண்டையும்பறித்துக்கொண்டான். ()

தண்டவன்கையதாயதன்மையைத்தறுகணாளர்
கண்டனர்கண்டுசெய்யலாவதொன்றானுங்காணார்
கொண்டனனெறிந்துநம்மைக்கொல்லுமென்றச்சங்கொண்டார்
உண்டசெஞ்சோறுநோக்காருயிருக்கேயுதவிசெய்தார். (கஎச)

காற்றுவந்தசைத்தலாலுங்காலமல்லாமையாலும்
கூற்றுவந்தாவிகொள்ளுங்குறியின்மைகுறித்தலாலும்
தேற்றம்வந்தெய்தினின்றமயக்கமுநோவுந்தீர்ந்தார்
ஏற்றமும்வலியும்பெற்றாரெழுந்தனர்வீரரெல்லாம். (கஎரு)

அங்கதன்குமுதனீலன்சாம்பவனருக்கன்மைந்தன்
பங்கமின்மயிந்தன்றம்பிசதவலிபனசன்முன்னாச்
சிங்கவேறனையவீரர்யாவருஞ்சிகரமேந்தி
மங்கலம்வானோர்சொல்லமழையெனவார்த்துவந்தார். (கஎசு)

அத்தனையோருங்குன்றமளப்பிலாவசனியேற்றோ
டொத்தனநெருப்புவீசுமுருமெனவொருங்கவுய்த்தார்
இத்தனைபோலுஞ்செய்புமிகலெனாமுறுவலெய்தி
சித்திரவில்வலோனுஞ்சின்னபின்னங்கள்செய்தான். (கஎஎ)

மரங்களுமலையுங்கல்லுமழையெனவழங்கிவந்து
நெருங்கினார்நெருங்கக்கண்டுமொருதனிநெஞ்சும்வில்லும்
சரங்களுந்துணையாய்நின்றநிசாசரன்றனிமைநோக்கி
இரங்கினானென்னமேல்பாற்குன்றுபுக்கருக்கனின்றான். (கஎஅ)

வாழியவேதநான்குமனுமுதல்வந்தநூலும்
வேள்வியுமெய்யுந்தெய்வவேதியர்விளைவுமஃதே
ஆழியங்கமலக்கையானாகியபரமனென்னா
ஏழையருள்ளமென்னவிருண்டனதிசைகளெல்லாம். (கஎகூ)

நாகமேயனையநம்பநாழிகையொன்றுநான்கு
பாகமேகாலமாகப்படுத்தியேற்பட்டானன்றேல்
வேகவாளரக்கர்காலம்விளைந்ததுவிசும்பின்மீதா
ஏகுமேல்வெல்வனென்பதிராவணற்கிளவல்சொன்னான். (கஅ0)

179. கையானாதியம்பரமனெனனா - என்றும் பாடம்.
180. நான்குபாகம் - கால்நாழிகையளவு.

அத்தனைவீரர்மேலுமாண்டகையனுமன்மேலும்
எத்தனைகோடிவாளிமழையெனவெய்யாநின்ற
வித்தகவில்லினானைக்கொல்வதுவிரும்பிவீரன்
சித்திரத்தேரைத்தெய்வப்பகழியாற்சிதைத்துவீழ்த்தான். (௧௮௧)

அழித்ததேராழுந்தாமுன்னமம்பொடுகிடந்துவெம்பி
உழைத்துயிர்விடுவதல்லாலுறுசெருவென்றேமென்று
பிழைத்திவர்போவரல்லர்பாசத்தாற்பிணிப்பினென்னா
விழித்திமையாதமுன்னம்வில்லொடும்விசும்பிற்சென்றான். (௧௮௨)

பொன்குலாமேனிமைந்தன்றன்னொடுபுகழ்தற்கொத்தான்
வன்கலாமியற்றிநின்றான்மற்றொருமனத்தனாகி
மின்குலாங்கழற்கால்வீரன்விண்ணிடைவிரைந்ததன்மை
என்கொலாமென்னவஞ்சிவானவரிரியல்போனார். (௧௮௩)

தாங்குவிற்கரத்தன்றாணிதழுவியபுறத்தன்றன்னின்
ஓங்கியுற்றெறியாநின்றவெகுளியினுயிர்ப்பன்றீயன்
தீங்கிழைப்பவர்கட்கெல்லாஞ்சீரியன்மாயச்செல்வன்
வீங்கிருட்பிழம்பினும்பர்வேகத்தின்மீதினானான். (௧௮௪)

தணிவறப்பண்டுசெய்ததவத்தினுந்தருமத்தாலும்
பிணியறுப்பவரிற்பெற்றவரத்தினும்பிறப்பினாலும்
மணிநிறத்தரக்கன்செய்தமாயமந்திரத்தினாலும்
அணுவெனச்சிறியதாங்கோராக்கையுமுடையானானான். (௧௮௫)

வாங்கினான்மலரின்மேலைவானவன்வானக்கங்கை
தாங்கினானுலகந்தாங்குஞ்சக்கரத்தவனென்றாலும்
வீங்குவான்றோளைவீக்கிவீழ்த்தலான்மீள்கிலாத
ஓங்குவாளரவினாமத்தொருதனிப்படையையுன்னி. (௧௮௬)

ஆயினகாலத்தார்த்தாரமர்த்தொழிலஞ்சியப்பால்
போயினனென்பதுன்னிவானரவீரர்போல்வார்
நாயகற்கிளையகோவுமன்னதேநினைந்துநக்கான்
மாயையைத்தெரியவுன்னார்போர்த்தொழின்மாற்றிநின்றார். (௧௮௭)

அதுகணத்தனுமன்றோணின்றையனுமிழிந்துவெய்ய
கதுவலிச்சிலையைவென்றியங்கதன்கையதாக்கி
முதுகுறச்சென்றுநின்றகணையெலாமுறையின்வாங்கி
விதுவிதுப்பாற்றலுற்றான்விளைகின்றதுணர்ந்திலாதான். (௧௮௮)

விட்டனனரக்கன்வெய்யபடையினைவிடுத்தலோடும்
எட்டினோடிரண்டுதிக்குமிருடிரிந்திரியவோடிக்
கட்டினதென்பமன்னோகாகுத்தற்கிளையகாளை
வட்டவான்வயிரத்திண்டோண்மலைகளையுளையவாங்கி. (௧௮௯)

இறுகுறப்பிணித்தலோடும்யாவையுமெதிர்ந்தபோதும்
மறுகுறக்கடவானல்லன்மாயமென்றுணர்வானல்லன்
உறுகுறைத்துன்பமில்லானொடுங்கினன்செய்வதோரான்
அறுகுறைக்களத்தைநோக்கியந்தரமதனைநோக்கும். (௧௯௦)

காலுடைச்சிறுவன்மாயக்கள்வனைக்கணத்தின்காலை
மேல்விசைத்தெழுந்துநாடிப்பிடிப்பெனென்றுறுக்கும்வேலை
எல்புடைப்பாசமேனாளிராவணன்புயத்தைவாலி
வால்பிணித்தென்னச்சுற்றிப்பிணித்ததுவயிரத்தோளை. (௧௯௧)

மற்றையோர்தமையுமெல்லாம்வாளெயிற்றரவம்வந்து
சுற்றினவயிரத்தூணின்மலையினிற்பெரியதோள்கள்
இற்றனவிற்றவென்னவிறுக்கினவிளகாவுள்ளம்
தெற்றெனவுடையவீரரிருந்தனர்செய்வதோரார். (௧௯௨)

மலையெனவெழுவர்வீழ்வர்மண்ணிடைப்புரள்வர்வானில்
தலைகளையெடுத்துநோக்கித்தழலெழவிழிப்பர்தாவி
அலைகிளர்வாலாற்பாரினடிப்பர்வாய்மடிப்பராண்மைச்
சிலையவற்கிளையகோவைநோக்குவாருள்ளந்தீவர். (௧௯௩)

வீடணன்முகத்தைநோக்கிவினையுண்டேயிதனுக்கென்பர்
மூடினகங்குன்மாலையிருளினைமுனிவர்மொய்ம்பில்
ஈடுறத்தக்கபோலாநம்மெதிரென்னாவேந்தல்
ஆடகத்தோளைநோக்கிநகைசெய்வர்விழுவரஞ்சார். (௧௯௪)

ஆரிதுதீர்க்கவல்லாரஞ்சனைபயந்தவள்ளல்
மாருதிபிழைத்தான்கொல்லோவென்றனர்மறுகிநோக்கி
வீரனைக்கண்டுபட்டதிதுகொலாமென்றுவிம்மி
வார்கழற்றம்பிதன்மைகாணுமோவள்ளலென்பார். (௧௯௫)

என்சென்றதன்னசொல்லினெறுழ்வலியரக்கனெய்தான்
மின்சென்றதன்னவானத்துருமினம்வீழ்வவென்னப்
பொன்சென்றவடிம்பின்வாளிபுகையொடுபொறியுஞ்சிந்தி
முன்சென்றமுதுகிற்பாயப்பின்சென்றமார்பமுற்ற. (௧௯௬)

---

191. காலுடைச்சிறுவன் - அனுமன்.

மலைத்தலைக்காலமாரிமறித்தெறிவாடைமோதத்
தலைத்தலைமயங்கிவீழ்ந்தன்மையிற்றலைகள்சிந்தும்
கொலைத்தலைவாளிபாயுங்குன்றனைகுவவுத்தோளார்
நிலைத்திலருலைந்துசாய்ந்தார்நிமிர்ந்ததுகுருதிநீத்தம். (க௯௭)

ஆயிரகோடிமேலுமம்புதனுகத்தூடு
போயினபோதுமொன்றுந்துடித்திலன்பொடித்துமானத்
தீயெரிசிதறுஞ்செங்கணஞ்சனைச்சிங்கமேனி
நாயகன்றம்பிக்குற்றதுயர்சுடநடுங்குகின்றான். (க௯௮)

வேறுளவீரரெல்லாம்வீழ்ந்தனருருமின்வெய்ய
நூறுமாயிரமும்வாளியுடலிடைநுழையச்சோரி
ஆறுபோலொழுகவண்ணலங்கதனனந்தவாளி
ஏறினமெய்யனேனுமிருந்தனனிடைந்திலாதான். (க௯௯)

கதிரவன்காதன்மைந்தன்கழலிளம்பசுங்காயன்ன
எதிரெதிர்பகழிதைத்தயாக்கையனெரியுங்கண்ணன்
வெதிர்நெடுங்கானமென்னவேகின்றமனத்தன்மெய்யன்
உதிரவெங்கடலுட்டாதையுதிக்கின்றான்றனையுமொத்தான். (உ00)

வெப்பாரும்பாசம்வீக்கிவெங்கணைவளைக்குமெய்யன்
ஒப்பாருமில்லான்றம்பியுணர்ந்திருந்தின்னலுய்ப்பான்
இப்பாசமாய்க்குமாயம்யான்வல்லெனென்பதோர்ந்தும்
அப்பாசம்வீசவாற்றாதழிந்தநல்லறிவுபோன்றான். (உ0க)

அம்பெலாங்கதிர்களாகவழிந்தழிந்திழியுமாகச்
செம்புனல்வெயிலிற்றோன்றத்திசையிருளிரியச்சீறிப்
பம்புபேரொளியநாகம்பற்றியபடிவத்தோடும்
உம்பர்நாடிறந்துவீழ்ந்தவொளியவனையுமொத்தான். (உ0உ)

மயங்கினான்வள்ளறம்பிமற்றையோர்முற்றுமண்ணை
முயங்கினார்மேனியெல்லாமூடினானரக்கன்மூரித்
தயங்குபேராற்றலானுந்தன்னுடைறைத்தவாளிக்
குயங்கினனுளைந்தான்வாயாலுதிரநீருமிழாநின்றான். (உ0௩)

சொற்றதுமுடித்தேனையென்னுடற்சோர்வைநீக்கி
மற்றதுமுடிப்பெனென்னாவெண்ணினான்மனிசன்வாழ்க்கை
இற்றதுகுரங்கின்றானையிறந்ததென்றிரண்டுபாலும்
கொற்றமங்கலங்களார்ப்பவிராவணன்கோயில்புக்கான். (உ0௪)

ஈர்க்கடைப்பகழிமாரியிலக்குவனென்னநின்ற
நீர்க்கடைமேகந்தன்னைநீங்கியுஞ்செருவினீங்கான்
வார்க்கடைமதுகைக்கொங்கைமணிக்குறுமுறுவன்மாதர்
போர்க்கடைக்கருங்கண்வாளிபுயந்தொறும்பொழியப்புக்கான். ()

ஐயிருகோடிசெம்பொன்மணிவிளக்கங்கையேந்தி
மையறுவானநாட்டுமாதருமற்றைநாட்டுப்
பையரவல்குலாரும்பலாண்டிசைபரவத்தங்கள்
தையலரறுகுதூவிவாழ்த்தினர்தழுவச்சார்ந்தான். (௨௦௬)

தந்தையையெய்தியன்றாங்குற்றுளதன்மையெல்லாம்
சிந்தையினுணரக்கூறித்திருதியிடர்நீயெந்தாய்
நொந்தனென்யாக்கைநொய்தினாற்றிமேனுவல்லென்னாப்
புந்தியிலனுக்கந்தீர்ப்பான்றன்னுடைக்கோயில்புக்கான். (௨௦௭)

இத்தலையின்னலுற்றவீடணனிழைப்பதோரான்
மத்துறுதயிரினுள்ளமறுகினன்மயங்குகின்றான்
அத்தலைக்கொடியனென்னையட்டிலனளியத்தேனான்
செத்திலன்வலியெனின்றேனென்றுபோய்வையஞ்சேர்ந்தான். ()

பாசத்தாலனகன்றம்பிபிணிப்புண்டபடியேபட்ட
நேசத்தாரெல்லாம்வீழ்ந்தார்யானொருதமியேனின்றேன்
தேசத்தாரென்னையென்னென்சிந்திப்பாரென்றுதீயும்
வாசத்தார்மாலைமார்பன்வாய்திறந்தரற்றலுற்றான். (௨௦௯)

கொல்வித்தாலுடனேநின்றானென்பரோகொண்டுபோனான்
வெல்வித்தான்மகனையென்றுபகர்வரோவிளைவிற்கெல்லாம்
நல்வித்தாய்நடந்தான்முன்னேயென்பரோநயந்தோர்தத்தம்
கல்வித்தாய்வார்த்தையென்றுகரைவித்தானுயிரைக்கண்போல். ()

போரவன்புரிந்தபோதேபொருவருவயிரத்தண்டால்
தேரொடும்புரண்டுவீழச்சிந்தியென்சிந்தைசெப்பும்
வீரமுன்றெரித்தேனல்லேன்விளிந்திலேன்மெலிந்தேனிங்ஙன்
ஆருறவாகத்தக்கேனளியற்றேனழுந்துகின்றேன். (௨௧௧)

ஒத்தலைத்தொக்கவீடியுய்வினுமுய்வித்துள்ளம்
கைத்தலைநெல்லிபோலக்காட்டிலேன்கழிந்துமில்லேன்
அத்தலைக்கல்லேன்யானீண்டவயமென்றடைந்துநின்ற
இத்தலைக்கல்லேனல்லேனிருதலைக்கொள்ளியொப்பேன். (௨௧௨)

---

211. இஞ்ஞான்று என்றும் பாடம்.

அனையனபலவும்பன்னியாகுலித்தரற்றுவானை
வினையுளபலவுஞ்செய்யத்தக்கநல்வீரநீயும்
நினைவிலார்போலநெஞ்சநெகிழ்தியோநீத்தியென்று
இனையனசொல்லித்தேற்றியனலன்மற்றிதுவுஞ்சொன்னான். (உகங.)

நீயினிதிருத்தியான்போய்நெடியவற்குரைப்பனென்னாப்
போயினனனலன்போயப்புண்ணியன்பொலன்கொள்பாதம்
மேயினன்வணங்கியுற்றவினையெலாமியம்பிநின்றான்
ஆயிரம்பெயரினானுமருந்துயர்க்கடலுளாழ்ந்தான். (உகச)

உரைத்திலனொன்றுந்தன்னையுணர்ந்திலனுயிருமோடக்
கரைத்திலன்கண்ணினீரைக்கண்டிலன்யாதுங்கண்ணால்
அரைத்திலனுலகமெல்லாமங்கையாற்பொங்கிப்பொங்கி
இரைத்திலனுளனென்றெண்ணியிருந்தனன்விம்மியேங்கி. (உகரு)

விம்மினன்வெதும்பிவெய்துற்றேங்கினனிருந்தவீரன்
இம்முறையிருந்துசெய்வதியாவதுமில்லென்றெண்ணிப்
பொம்மெனவெழுந்துநொய்திற்பொருக்கெனவிசையிற்போனான்
தெம்முறைதுறந்துவென்றசெங்களமருங்கிற்சேர்ந்தான். (உகசா)

இழிந்தெழுகாளமேகமெறிகடலனையமற்றும்
ஒழிந்தனநீலவண்ணமுள்ளனவெல்லாமொக்கப்
பிழிந்ததுகாலமாகக்காளிமைப்பிழம்புபோதப்
பொழிந்ததுபோன்றதன்றேபொங்கிருட்கங்குற்போர்வை. (உகஎ)

ஆரிருளன்னதாகவாயிரநாமத்தண்ணல்
சீரியவனலித்தெய்வப்படைக்கலந்தெரிந்துவாங்கிப்
பாரியவிடுத்தலோடும்பகையிருளிரிந்துபாறச்
சூரியனுச்சியுற்றாலொத்ததவ்வுலகின்சூழல். (உகஅ)

படையுறுபிணத்தின்பம்மற்பருப்பதந்துவன்றிப்பல்வே
றிடையுறுகுருதிவெள்ளத்தெறிகடலெழுநீர்தும்பி
உடையுறுதலைக்கையண்ணலுயிரெலாமொருங்கியுண்ணும்
கடையுறுகாலத்தாழியுலகன்னகளத்தைக்கண்டான். (உகக)

பிணப்பெருங்குன்றினூடுங்குருதிநீர்பெயரப்பேரும்
நிணப்பெருஞ்சேற்றினூடும்படைக்கலநெருக்கினூடும்
மணப்பெருங்களத்தின்மோடிமங்கலவாழ்க்கைவைப்பில்
கணத்திலும்பாதிப்போதிற்றம்பியைச்சென்றுகண்டான். (உஉ0)

---

219. பொங்கி என்றும் பாட முண்டு.

ஐயவனுக்கைதன்மேல்விழுந்துமார்பழுந்தப்புல்லி
உய்யலனென்னவாவியுயிர்த்துயிர்த்துருகுகின்றான்
பெய்யிருதாரைக்கண்ணன்பெருந்துளிபிறங்கவானின்
வெய்யவன்றன்னைச்சேர்ந்தநீணிறமேகமொத்தான். (௨௨௧)

உழைக்கும்வெய்துயிர்க்குமாவியுருகும்போயுணர்வுசோரும்
இழைக்குவதறிதறோற்றானிலக்குவாவிலக்குவாவென்
றழைக்குந்தன்கையைவாயின்மூக்கின்வைத்தயர்க்குமையா
பிழைத்தியோவென்னுமெய்யேபிறந்தேயும்பிறந்திலாதான். ( )

தாமரைக்கையாற்றாளைத்தைவருங்குறங்கைத்தட்டும்
தூமலர்க்கண்ணைநோக்குமார்பிடைத்துடிப்புண்டென்னு
ஏமுறும்விசும்பைநோக்குமெடுக்குந்தன்மார்பினேற்றும்
பூமியின்வளர்த்துங்கள்வன்போயகன்றானோவென்னும். (௨௨௩)

வில்லினைநோக்கும்பாசவிசிப்பினைநோக்கும்வீயா
வல்லினைநோக்கும்வானத்தமரரைநோக்கும்பாரைக்
கல்லுவென்வேரோடென்னும்பவளவாய்கறிக்குங்கற்றோர்
சொல்லினைநோக்குந்தன்பொற்புகழினைநோக்குந்தோளான். (௨௨௪)

வீரரையெல்லாம்பார்க்கும்விதியினைப்பார்க்கும்வீரப்
பாரவெஞ்சிலையைப்பார்க்கும்பகழியைப்பார்க்கும்பாரின்
யாரிதுபட்டாரென்போலெளிவருதவண்ணமென்னும்
நேரிதுபெரிதென்றோதுமளவையினிமிரநின்றான். (௨௨௫)

எடுத்தபோரிலங்கைவேந்தன்மைந்தனோடிளையகோவுக்
கடுத்ததென்றென்னைவல்லைபழைத்திலையமரர்பாசம்
தொடுத்தகைதலையினோடுந்துணித்துயிர்துடைக்கவென்னைக்
கெடுத்தனைவீடணாநீயென்றனன்கேடிலாதான். (௨௨௬)

அவ்வுரையருளக்கேட்டானழிகின்றவரக்கன்றம்பி
இவ்வழியவன்வந்தேதற்பதறிந்திலமெதிர்ந்தபோதும்
வெவ்வழியவனேதோற்குமென்பதுவிரும்பிநின்றேன்
தெய்வவன்பாசஞ்செய்தசெயலிந்தமாயச்செய்கை. (௨௨௭)

அற்றதிகாயனுக்கைதலையிலதாக்கியாண்ட
வெற்றியனுபவீரன்மீண்டிலனிலங்கைமேனான்

---

225. நேரிது பெரிதன்றோது மளவையான் நிமிரநின்றான் - நேராக இதுபெரிதென்று சொல்லுகின்ற அளவையினு முயரநின்றான்.

பெற்றவனெய்துமென்னும்பெற்றியையுன்னிப்பிற்போ
துற்றனன்மைந்தன்றானைநாற்பதுவெள்ளத்தோடும். (௨௨௮)

ஈண்டுநஞ்சேனைவெள்ளமிருபதிற்றிரட்டிமாளத்
தூண்டினன்பகழிமாரிதலைவர்கடொலைந்துசோர
மூண்டெழுபோரிற்பாரின்முறைமுறைமுடித்தான்பின்னர்
ஆண்டகையோடுமேற்றானாயிரமடங்கற்றேரான். (௨௨௯)

அனுமன்மேனின்றவையனாயிரந்தேருமாயத்
தனுவலங்காட்டிப்பின்னைநாற்பதுவெள்ளத்தானை
பனியெனப்படுவித்தன்னான்பலத்தையுந்தொலைத்துப்பட்டான்
இனியெனவயிரவாளியெண்ணிலஃதிறத்தினெய்தான். (௨௩௦)

ஏவுண்டபகுவாயோடுங்குருதிநீரிழியநின்றான்
தூவுண்டதானைமுற்றும்படவொருதமியன்சோர்வான்
போவுண்டதென்னினையபுணர்க்குமாமாயமென்று
பாவுண்டகீர்த்தியானுக்குணர்த்தினென்பரிதிபட்டான். (௨௩௧)

மாயத்தாலிருண்டதாழியுலகெலாம்வஞ்சன்வானில்
போயத்தானுடையவஞ்சவரத்தினாலொளித்துப்போயிவ்
வாயத்தார்பாசமேவியயர்வித்தானம்பில்வெம்பும்
காயத்தானென்னச்சொல்லிவணங்கினான்கலுழிக்கண்ணான். ()

பின்னையுமெழுந்துபேர்த்தும்வணங்கியெம்பெருமயாரும்
இன்னுயிர்துறந்தாரல்லரிறுக்கியபாசமிற்றால்
புன்னுனைப்பகழிக்கோயுந்தரத்தரோபுலம்பியென்னை
இன்னலுற்றயரல்வெல்லாதருமத்தைப்பாவமென்றான். (௨௩௩)

யாரிதுகொடுத்ததேவனென்னையீதிதனைத்தீரும்
காரணம்யாதுநின்னாலுணர்ந்ததுகழறிக்காணென்
றாரியன்வினவவண்ணல்வீடணனமலசாலச்
சீரிதென்றதனையுள்ளபரிசெலாந்தெரியச்சொன்னான். (௨௩௪)

ஆழியஞ்செல்வபண்டிங்ககலிடமளித்தவண்ணல்
வேள்வியிற்படைத்ததீசன்வேண்டினன்பெற்றுவெற்றித்
தாழ்வுறுசிந்தையோர்க்குத்தவத்தினாலளித்ததானை
ஊழியினிமிர்ந்தகாலத்துருமினதூற்றமீதால். (௨௩௫)

அன்னதனாற்றலன்றேயாயிரங்கண்ணினானைப்
பின்னுறவயிரத்திண்டோள்பிணித்ததுபெயர்த்தொன்றெண்ணி

234. ஆரியன் - இராமன்.

என்னினியனுமன்றோளையிறுக்கியதிதனாலாண்டும்
பொன்னுலகாளுஞ்செல்வந்துறந்ததுபுலவோரெல்லாம். (உ௩௬)

தான்விடின்விடுமிதொன்றேசதுமுகன்முதல்வராய
வான்விடின்விடாதுமற்றிம்மண்ணினையெண்ணியென்னே
ஊன்விடவுயிர்போய்நீங்கநீங்கும்வேறுய்தியில்லைத்
தேன்விடுதுளபத்தாராய்துவிதன்செய்கையென்றான். (உ௩௭)

ஈய்ந்துளதேவர்மேலேயெழுகெனோவுலகம்யாவும்
தீய்ந்துக.நாறியானுந்தீர்கெனோவிலங்கைசிந்தப்
பாய்ந்தவர்சுற்றமுற்றும்படுப்பெனோவியன்றபண்போ
டேய்ந்ததுபகர்தியென்றானிமையவரிடுக்கண்டீர்ப்பான். (உ௩௮)

வரங்கொடுத்தினையபாசம்வழங்கினான்றானேநேர்வந்
திரங்கிடத்தக்கதுண்டேவிகழ்கிலெனில்லையென்னின்
உரங்கெடுத்துலகமூன்றுமொருவனோரம்பிற்சுட்ட
புரங்களிற்றீத்துக்காண்பேன்பொடியொருகடிகைப்போழ்தின். ()

எம்பியேயிறக்குமென்னினெனக்கினியிலங்கைவேந்தன்
தம்பியேபுகழ்தானென்னைபழியென்னையறந்தானென்னை
நம்பியேயென்னைச்சேர்ந்தநண்பரினல்லவாமேல்
உம்பருமுலகத்துள்ளவுயிர்களுமுதவிபார்த்தால். (உ௪0)

என்றுகொண்டியம்பியீண்டிங்கொருவனிங்கிடுக்கண்செய்ய
வென்றருமுலகைமாய்த்தல்விதியன்றாலென்றுவிம்மி
நின்றுநின்றுன்னியுன்னிநெடிதுயிர்த்தலக்கணுற்றான்
தன்றுணைத்தம்பிமேலுந்துணைவர்மேற்றாழ்ந்தவன்பான். (உ௪௧)

மீட்டும்வந்திளையவீரன்வெற்பன்னவிசயத்தோளைப்
பூட்டுறுபாசந்தன்னைப்பன்முறைபுரிந்துநோக்கி
வீட்டியதென்னிற்பின்னைவீவெனென்றெண்ணும்வேதத்
தோட்டியின்றொடக்கினிற்குந்துணைக்கைமால்யானையன்னான். ()

## பெரியதிருவடி தோத்திரம்.

### வேறு.

இத்தன்மையெய்துமளவின்கண்வந்த விமையோர்களஞ்சியிது போய், எத்தன்மையெய்திமுடியுங் கொலென்றுகுலைகின்றவெல்லையிதன்வாய், அத்தன்மைகண்டுபுடைநின்றவண்ணல் கலுழன்றனன்

241. துணைவர் - வானரவீரர்.

பின்மிசையால், சித்தந்நடுங்கியிதுதீரமெள்ள விருளூடுவந்துதெரி
வான்.

(இதன்பதப்பொருள்.)

**இத்தன்மை** - இவ்வண்ணம், **எய்துமளவின்கண்** - நடக்கும் காலத்தில், **வந்த** - இராமாநுஜன் விறல்காணவுற்ற, **இமையோர்கள்** - பிரமஉருத்திரேந்திராதிதேவர்கள், **அஞ்சி** - பயந்து, **இது**-இக்கோபம், **போய்** - மிகுந்து, **எத்தன்மை** - எவ்விதமாய், **எய்தி**-நடந்து, **முடியுங்கொலென**-ஆகுமோவென்று, **குலைகின்ற**-நடுங்குகின்ற, **எல்லை**-சமயமாகிய, **இதன்வாய்**-இத்தருணத்தில், **அத்தன்மை**-அந்தப்பிரகாரத்தை, **கண்டு**-பார்த்து, **புடை**-பக்கத்திலே, **நின்ற**-நில்லாநின்ற, **அண்ணல்கலுழன்**-பெருமாளுடைய பெரியதிருவடி, **தன்** - பெருமாளுடைய, **அன்பின் மிசையால்** - பிரியத்தின் மிகுதியால், **சித்தம்** - மனது, **நடுங்கி** - கலங்கி, **இது** - இந்தத்துயரம், **தீர**-நீங்க, **மெள்ள** - பைய, **இருளூடு** - அந்தகாரத்திலுள்ளே, **வந்துதெரிவான்** - தோன்றிவிளங்குகிறான்,—என்றவாறு.

இது முதலெட்டுப் பாட்டும் குளகம். இதன் கருத்து பெரிய திருவடிகள் வருமாறும் பெருமாளைக்கண்டு தொழுமாறுந் துதிக்குமாறுங் கூறுகின்றது. பதப்பொருள் கீழுரைத்தாங்குரைக்க காட்டு-கோயில்கடோறும் பெரியதிருவடியை புறப்பாட்டிற்சேவித்து நடத்தல் - நிற்றல் - கைகுவித்தல் - பணிதல் - மொழிதல்களைப் பாவித்துக்காண்க. இனிவிடைகூறவே வினவும் விளங்குமாகாலால் அவ்விரண்டு முள்ளூறுத்திக் கூறுகின்றாம். மறைந்து வந்த நியாமகனைத் தொடர்ந்தடிமை செய்யக்கடவ நியாமியங்களு மறைந்து நின்றமையாற் புடைநின்ற வண்ணல் கலுழனென்றார். (உ௬௩)

அசையாதசிந்தையரவாலனுங்கவழியாதவுள்ளமழிவான்
இசையாவிலங்கையரசோடுமண்ணலருளின்மைகண்டுநயவான்
விசையாலனுங்கவடமேருவையமொளியால்விளங்கவிமையாத்
திசையானைகண்கண்முகிழாவொடுங்கநிறைகால்வழங்குசிறையான்.

இ - ள். **அசையாத** - கலங்காத, **சிந்தை** - மனம், **அரவால்**-நாகபாசத்தாலே, **அனுங்க** - பெருமாள்கலங்க, (**அதுகண்டு**) **அழியாத** - நடுங்காத, **உள்ளம்** - மனம், **அழிவான்** - நடுங்குவானாய், **இசையா** - சரணாகதிக்குடன்படாத, **இலங்கையரசோடும்** - இராவணன்முதலிய யாவர்விஷயத்திலும், **அண்ணல்** - பெருமாள், **அருளின்மை**-அருளின்றிக்கோபங்கொள்ளுதலை, **கண்டும்** - பார்த்தும்,

நயவான்-விரும்பாதவனாய், விசையால் - வேகத்தாலே, அனுங்க வடமேரு-மேருமலைகுலையவும், வையம்-உலகமெல்லாம், ஒளியால்-காந்தியால், விளங்க-பிரகாசிக்கவும், இமையா-நிமையாத, திசையானை - திக்கானைகள், கண்கள் - விழிகள், முகிழா - மூடி, ஒடுங்க-பதுங்கவும், நிறை - நிரம்பிய, கால் - காற்றை, வழங்கு - தருகின்ற, சிறையான் - இறகையுடையவனாய். எ-று.

கலங்காத திருவுள்ளம் பெருமாள் கலங்கக்கண்டு திருவடிதானுங்கலங்கினனென்றார். இசையாவிலங்கை யரசொடுமென்றது எச்சவும்மையாகலான்பாவர் விஷயத்திலுமென்றார். (உசச)

காதங்கள்கோடிகடைசென்றுகாணுநயனங்கள்வாரிகலுழக்
கேதங்கள்கூரவயர்கின்றவள்ளறிருமேனிகண்டுகிளர்வான்
சீதங்கொள்வேலையலைசிந்தஞாலமிருள்சிந்தவந்தசிறையான்
வேதங்கள்பாடவுலகங்கள்யாவும்வினைசிந்தநாகமெலிய.

இ-ள். காதங்கள் கோடி - கோடிகாதத்தின், கடைசென்று-எல்லையளவுஞ்சென்று, காணும் - அங்குள்ளனவற்றையுந் தெரியத்தக்க, நயனங்கள் - கண்களிலே, வாரி - ஊறிவருகிறநீர், கலுழ-சிந்தவும், கேதங்கள்கூர - துக்கமிகுதியாக, அயர்கின்ற - சோர்ந்துகிடக்கிற, வள்ளல் - பரமோதாரராகிய பெருமாளுடைய, திருமேனி - திவ்வியமங்கள விக்கிரகத்தை, கண்டு - பார்த்து, கிளர்வான் - பூரித்தவனாய், சீதங்கொள் - குளிர்ச்சியைக்கொண்ட, வேலை - சமுத்திரமானது, அலை - தரங்கங்களை, சிந்த - மிகுத்துவீசவும், ஞாலம் - உலகத்தைமூடிய, இருள் - அந்தகாரம்,சிந்த - சிதறிவில்கவும், வந்த - விளங்கிவருகிற, சிறையான் - இறகினாலே, வேதங்கள் - வேதகானங்களை, பாட - கோஷிக்கவும், உலகங்கள் யாவும் - எல்லாவுலகங்களும், வினை - பாவங்களை, சிந்த - நீங்கவும், நாகம் - பிடித்திருக்கிற நாகபாசம், மெலிய - தளரவும். எ-று.

இருக் கெசுச் சாம வதருவச் சிறையாகலான் அச்சிறகொலியான் வேதங்கள் பாடவென்றார். (உசரு)

அல்லைச்சுருட்டிவெயிலைப்பரப்பியகலாசையெங்குமழியா
வில்லைச்செலுத்திநிலவைத்திரட்டிவிரிகின்றசோதிமிளிர
எல்லைக்குயிற்றியெரிகின்றமோலியிடைநின்றமேருவெனுமத்
தொல்லைப்பொருப்பின்மிசையேவிளங்குசுடரோனின்மும்மைசுடர

இ-ள். அல்லை-இருளை, சுருட்டி - இறகடிக்கொள்ளுதலாலே சுருளப்பண்ணியும், வெயிலை - சூரியகிரணத்தை, பரப்பி - பொன்

ளொளியாலேவிரித்து, அகல் - அகன்ற, ஆசையெங்கும் - திக்குக ளெல்லாம், அழியா - சேதியாத, வில்லை - மூக்கின்வளைவாகிற வி ல்லொளியை, செலுத்தி - ஒதுங்கப்பண்ணியும், நிலவை - சந்திர னை, திரட்டி - கண்டத்தொளியாலே திரளப்பண்ணியும், விரிகின் ற - அச்சந்திரனிழலிருந்து மிகாநிற்கிற, சோதி - சந்திரிகை, மி ளிர - விளங்கவும், எல்லை - சூரியனொளியை, குயிற்றி - சேரப்ப ண்ணி, எரிகின்ற - காந்துகின்ற. மோலி - கிரீடமானது, இடைநி ன்ற - உலக நடுவிலே நில்லா நிற்கிற, மேருவெனும் - வடமேரு வென்கிற, அ - அந்த, தொல்லை - பழமையான, பொருப்பின்மி சையே - மலையின்மேலே, விளங்கு - பிரகாசியாநின்ற, சுடரோனி ன் - சூரியனைப்பார்க்கிலும், மும்மை - மும்மடங்கு, சுடர் - விள ங்க. எ-று.

தோன்றிமறையும் வானவில்லைப்போலாது அழியாவில்லென் றது வேற்றுமையணி. விற்போல் வளைநத மூக்கை வில்லென்றது ம் நிலவைப்போலுங் கண்டத்தொளியை நிலவென்றது முருவகவு யர்வு நவிற்சியணிகள். செலுத்தலும் திரட்டலும் அதனதன் பிர திபிம்பத்தை. மோலி சுடரோனின் மும்மைசுடரவென்ற தெதிர் நிலையணி. பெரிய திருவடியை யிடைநின்றமேருவெனு மத்தொல் லைப் பொருப்பென்ற துருவகவுயர்வு நவிற்சியணி. ஆகவே வில்லு நிலவுஞ்சுடரோனு மொருகாலத்தின் மேருமிசை தொடரச்செய்த து தொடர்புயர்வு நவிற்சியணி.                                                    (உசுசு)

நன்பால்விளங்குமணிகோடியோடுநளிர்போதுசெம்பொன்முதலாத்
தன்பாலியைந்தநிழல்கொண்டமைந்ததழுவாதுவந்துதழுவ [ன்
மின்பாலியன்றதொருகுன்றம்வானின்விழுகின்றதென்னவெயிலோ
தென்பாலெழுந்துவடபானிமிர்ந்துவருகின்றசெய்கைதெரிய.

இ-ள். நன்பால் - கண்டத்தொளியாகிய பரிசுத்த வெள்ளையி ல், விளங்கும் - விளங்காநின்ற, மணிகோடியோடு - கோடி அரதந க்கோவைமாலையோடு, நளிர் - பிரகாசியாநின்ற, போது - புட்பமா லையும், செம்பொன் - சிவந்தபொன்னரிமாலையும், முதலா - ஆதி யாகிய, தன்பால் - அம்மாலைகளிடத்து, இயைந்த - தனித்தனியே பொருந்திய, நிழல்கொண்டு - பிரபைகளைக்கொண்டு, அமைந்த - உண்டாகியவை, தழுவாது - மார்பிலே பொருந்தாமல், வந்து - அ ம்மாலைகளாய்த்தோன்றி, தழுவ - பொருந்தவும், மின்பால் - ஒளி யெடும்பகுதிகளெல்லாம், இயைந்தது - கூடியதாகிய, ஒருகுன்றம்-

ஒருநெடியமலை, வானின் - ஆகாயத்தினின்றும், விழுகின்றதென்ன - இறங்குவதுபோல, வெயிலோன் - சூரியன், தென்பால் - தென்றிசையில், எழுந்து - உதயமாகி, வடபால் - வடதிசைநோக்கி, நிமிர்ந்து - மேலெழுநது, வருகின்ற - வாராநிற்கிற, செய்கைதெரிய - நூதனவிசேஷமாய்த் தோன்றவும். எ-று.

பொன்னரிமாலை - என்பது—பொன்வண்டுமாலை.

பால்போலுங் கண்டத்தொளியைப் பாலென்ற துருவகவுயர்வுநவிற்சியணி. மணியாலும் பூவாலும் பொன்னாலுமாகிய மாலைகளைத்தழுவாதென்றது அதனதன் பிரதிபிம்பத்தை தழுவவென்றது. அம்மாலைகளை மின்பாலியைந்த தொருகுன்ற மென்னவென்றது பண்புவமை. அம்மாலைகளது தொங்குதலைகுன்றம் வானின்விழுகின்றதென்னவென்றது தொழிலுவமை. தகுதிபற்றிவிழுகின்ற தென்றதற்கியையத் தொங்குதலைவருவிக்க.கீழ்ப்பாட்டிலுரைத்தாமென்றவுத்தியானமோலியாகியதன்மை. மறத்தல்துறத்தல்களையுடைய சூரியன்மின்பாலியைந்ததொருகுன்றமாகிய உதயகிரியிலேதென்றிசையிலுதித்து வடதிசைமேற் செல்வதாகச் செய்தது தொடர்புயர்வு நவிற்சி. உதயகிரியென்றது மின்பாலியைநததொரு குன்றமென்றதும், மோலியென்றது வெயிலோ னென்றதும் உருவகவுயர்வுநவிற்சி. மொழிந்த பொருளோடொன்ற வவ்வயின் மொழியாததனையு முட்டின்று முடித்தலென்னும் உத்தியால் உதயகிரிக்குந் தென்றிசைக்கும் வெயிலோனுக்கு மியைய‌ப் பெரியதிருவடிதலையாகிய தேர்மேலென்று கொள்வது முருவகவுயர்வு நவிற்சி. ()

பன்னகர்சென்னிமணிகோடிகோடிபலகொண்டுசெய்தவகையால்
மின்னலியன்றதெனலாய்விளங்குமிளிர்பூண்வயங்கும்வெயில்கால்
பொன்னலியன்றநகையோடைபொங்கவனமாலைமார்புபுரளத்
தொன்னாள்பிரிந்ததுயர்தீரவண்ணறிருமேனிகண்டுதொழுவான்.

இ-ள். பன்னகர் - பலநாகங்களுக்குஞ் சிரேஷ்டர்களுடைய, சென்னிமணி - சிரோரத்தினங்களை, கோடிகோடி - உச்சியினின்றும் உச்சியினின்றும், பல - அநேகமாக, கொண்டு - சீக்தெடுத்து, செய்தவகையால் - இழைத்த வகுப்புகளாலே, மின்னல் - மின்னலைக்கொண்டு, இயன்றது - செய்தது, எனலாய் - என்று சொல்லும்படியாய், விளங்கும் - பிரகாசியாநின்ற, மிளிர் - காந்தியையுடைய, பூண் - ஆபரணங்களும், வயங்கும் - பிரகாசியாநின்ற, வெயில் - சூரியப்பிரபையை, கால் - கக்குகின்ற, பொன்னல்-சுவ'ர

ணத்தால், இயன்ற - செய்த, நகை - விளங்குதலையுடைய, ஓடை- நெற்றிப்பட்டமும், பொங்க - பிரகாசிக்கவும், வனமாலை - துளசி மணிமாலை, மார்பு - மார்பின்கண்ணே, புரள - அசையவும், தொன்ஞள் - ஆதிகாலத்தில், பிரிந்த - நீங்கலாகிய, துயர் - கிலேசம், தீர - போக, அண்ணல் - பெருமாளுடைய, திருமேனி - திவ்விய மங்கள விக்கிரகத்தை, கண்டு - பார்த்து, தொழுவான் - கைகுவிப்பானுய். எ-று.

கோடிகோடியென்பவற்றில் ஐந்தனுருபுகடொக்கன. இவ்வடுக்குமொழி பலவுச்சிகளைக் குறிப்பிக்கின்றது. பலகொண்டென்றமையால் பூண் - ஓடை - மாலை - என்பவற்றில் எண்ணும்மைக டொக்கன. (உ௪அ)

முடிமேனிமிர்ந்தமுகிழேறுகையன்முகின்மேனிமிர்ந்தவொளியான்
அடிமேல்விழுந்துபணியாமனின்றநிலையுன்னியுன்னியழிவான்
கொடிமேலிருந்திவ்வுலகேழொடேழுதொழநின்றகோளுமிலனுய்ப்
படிமேலெழுந்துவருவான்விரைந்துபலகானினைந்துபணிவான்.

இ-ள். முடிமேல் - உச்சிக்குமேலே, நிமிர்ந்த-உயர்ந்த, முகிழேறு-குவித்தலைக்கொண்ட, கையன்-கரங்களையுடையவனுய், முகின்மேல்-மேகத்தைதக்காட்டிலும், நிமிர்ந்த-அதிகமான, ஒளியான்-சாமளவர்ணத்தையுடைய பெருமாளுடைய, அடிமேல் - திருவடியின்கீழே, விழுந்து பணியாமல் - சாஷ்டாங்கதண்டஞ் சமர்ப்பியாமல், நின்று - நின்றுகொண்டு, அந்நிலை - சோகித்துக்கிடக்கிற அந்தச்சுபாவத்தை, உன்னியுன்னி-நினைத்துநினைத்து, அழிவான்-தளர்வானுய், கொடிமேல் - துவசத்தின்மேல், இருந்து - வாசம் பண்ணி, இ - இந்த, உலகேழொடேழு-பதினுலுலகமும், தொழ - வணங்குதல்செய்ய, நின்றகோளும் - நில்லாநின்ற கொள்கையும், இலனுய் - இல்லாதவனுய், படிமேல் - பூமியின்கண்ணே, எழுந்து-எழுந்தருளி, வருவான் விரைந்து - விரைந்து நடப்பவனுய், பல கால் - அநேகவிதமாய், நினைந்து - எண்ணியெண்ணி, பணிவான் - வணங்குவானுய். எ-று.

தெரிவான் முதற் றெழுவா னிறுதியாகிய முற்றுக்கள் எச்சமாய் முகிழேறுகையனுய்ப் பணியலாயினுன் எனக்கூட்டுக. (உ௪௯)

வந்தான்மறைந்துபிரிவால்வருந்துமலர்மேலயன்றன்முதலோர்
தந்தாதைதாதையிறைவாமறைந்துவிளையாடுகின்றதனியோய்

சிந்தாகுலங்கள்களைவாய்தளர்ந்துதுயர்கூரலென்னசெயலோ
எந்தாய்வருந்தலுடையாய்வருந்தலெனவின்னபன்னிமொழிவான்.

இ-ள். வந்தான்மறைந்து - மறைந்துவந்தா னென்றபடி, (இனிச்சொல்லாமல்வந்தால்)பிரிவால்-பிரிவாற்றுமையாலே, வருந்தும் - நோவையடைவான், (யாரென்றால்) மலர்மேல்-பூமிமேலிருக்கிற, அயன் - நானமுகன், தன் - தனக்கு, முதலோர் - பூருவராகிய நித்தியசூரிகள், தம் - தமக்கு, தாதை - காரணராகிய சேனையர்கோனுக்கு, தாதை - பிரதானராகிய, (திருவநந்தாழ்வான் மறைந்துவந்தால் வருந்து மென்றந்வயம்) இறைவா - பரமபுருஷனே, மறைந்து - எனக்குரையாது, விளையாடுகின்ற - லீலைசெய்கின்ற, தனியோய் - ஒப்பற்றவனே, சிந்தாகுலங்கள் - மனக்கிலேசங்களை, களைவாய் - எல்லாருக்கும் போக்குகிறவனே, தளர்ந்து - மெலிந்து, துயர்கூரல் - துக்கத்தழுந்துதல், என்னசெயலோ-யாது காரணமோ, எந்தாய் என்சுவாமியே, வருந்தல் - நோவுபடாதை, உடையாய் - சர்வசுவாமியே, வருந்தல் - நோவுபடாதை, என - என்று, இன்ன - இவ்விதங்களாய், பன்னி - பிரலாபித்து, மொழிவான் - துதிக்கத்தொடங்குவான். எ-று.

தாதையென்றது மகனெனுங் காரியம்பிறக்கக் காரணமாயினேனை யாகலால் அயனுக்குக்காரணமானோர் நித்தியசூரிகளாகவும், அவருக்குக்காரணஞ் சேனையர்கோனாகவும், அவருக்குக்காரணங் கருடனாகிய தாமாயிருக்க நைச்சியாநுசந்தானத்தாற் றம்மைக் கூறாது திருவநந்தாழ்வானைக் கூறினாரென்றுகொள்க. அண்ணல் கலுழனென்னு மெழுவாய் பணிவானாய் மொழிவானென்னும் பயனிலைகொண்டது. இனிவரும் பாட்டுகளுக்குக் கருத்து முதலியவைந்தும் பொருள்விளக்கவேண்டியவாறே யெழுதுகின்றமையால் ஆங்காங்குணர்க இருக்கெசுச்சாம வதருவச்சிறை யென்றது சிறையையுடையனென்றாகுபெயராய் சிரஞ்சேதனமென்கிற செய்யுளிற் காண்க. (உ௫௦)

தேவாதிதேவர்பலராலுமுந்துதிருநாமமோதுசெயலோய்
மூவாதநாளுமுலகேழொடேழுமரசாளுமேன்மைமுதல்வா
மேவாதவின்பமவைமேவிமேவநெடுவீடுகாட்டமுடியாய்
ஆவாய்வருந்தியழிவாய்கொலாரிவ்வதிரேகமாயையறிவார்.

இதில் வீற்றிருந்து ஏழுலகுந் தனிக்கோல்செல்ல வீவில்சீராற்றன் மிக்காளுமம்மானே வருந்தாதையென்கிறார்.

இ-ள். தேவு - சேனையர்கோனை, ஆதி - முதலாகவுடைய, தேவர் - நித்தியசூரிகள், பலராலும் - அநேகராலும், மூந்து - ஆரம்பத்திலே, திருநாமம - ஹரி என்கிற திருநாமத்தைக்கொண்டு, ஓது - துதிக்கத்தக்க, செயலோய் - செய்கையையுடையவனே,மூவராது - தேவ மனித திரியக்குத் தாவரமாம் யாவையுங்கெடாமல், அந்நாளும் - உட்கொண்ட அக்காலத்திலும், உலகு - உலகங்கள், எழொடேழும் - பதினாலும், அரசு - தனிக்கோல்வழியே,ஆளும்-செல்லநடாத்துகிற, மேன்மை - மேம்பாட்டையுடைய, முதல்வா-காரணபூதனே, மேவாத - மானிடராகவரலரிதாகிய, இன்பம்-ஆநந்தங்கள், அவை - அப்பதிறென்றும், மேவி - அடைந்து, மேவு-பின்படையத்தக்க, அந்நெடுவீடு - அவ்வின்பங்களினெடிய வின்பத்தை, காட்டு - காட்டுதற்கிடமான, அம் - அழகிய, முடியாய்-பதினாலுலகுக்குந் தலைபான திருநாட்டையுடையவனே, ஆவாய்-இங்குநின்ற நிலையிலுமாகுமவன், வருந்தி - இங்ஙனேநோவுபட்டு, அழிவாய்கொல் - கலங்குமவனோ, ஆர் - மயர்வற மதிநல மருளப்பெறுதாரில் யாவர், இவ்-கலங்காதவன் கலங்குதலாகியவிந்த,அதிரேகமாயை - மகாமாயையை, அறிவார் அறியத்தக்கவர், ஒருவருமறியாரென்றபடி. எ-று.

நாளுமென்றவும்மையால் உட்கொள்ளாதகாலத்திலும் அரசாளுகை தானேபோதரும். * உருத்திரனுக் கந்தரியாமியாய் நின்றுயிர்வாழ்தற்கிடமாகிய பூதவுடம்பைப்பிரித்தபோ தவ்வுடம்பழிதல்பற்றி அழித்தலுமோர் செய்கையென்னும் பிறர்தம்மதமேற் கொண்டு களைந்து தானுட்டித்தனுது நிறுப்பானுண்டபோது முண்ணுதுபோதும் அரசாளுகை தவிரானென்கிறூர். இதுபற்றி யன்றேகடவுள்வாழ்த்தில், உலகம் யாவையுந் தாமுளவாக்கலு, நிலைபெறுத்தலு நீக்கலுமென்றது. மனிதன் மனிதகந்தருவன் றேவகந்தருவன் பிதிர்கருமத் தேவன்றனுடன்ன சுரன் சுரனிந்திரனுசானும் பிரசாபதியானோன் கனகன் விராட்டிரணிய கர்ப்பன் முறைகருதுமிப் பதினொருபேர்கள் பினவானந்தங்கணுரையாம் பிரளயவெள்ளக்கடல் பரமாநந்தம் என்னுமிப்பாட்டானே உயர்வற வுயர்நலமென்றுகொள்க. மனிதவின்பந்தொடங்கி மலரோனின் பங்காறு மொவ்வொன்றுக விட்டடையுமின்பத்தை வீடென்றதாகுபெயர். மேவ காட்டவெனப் பெயரெச்சங்களாகவும், உயர்வறவுயர் நலத்தைக்காட்டுகின்ற திருநாட்டை முடியாகவும், அதனீற்றயலெதிர் மறையா

* அபர உருத்திரர் பலரில் ஒருவர்.

காரமாகவு மயங்கக்கூறுதல் குற்றமன்றோவென்னிலன்று,தேவாதி யென்று தொடங்கிய கீழுமெழுவாயென்று நடத்துகிறமேலு நோக்கி எற்புழியறிந்திதற் கிவ்வகையாமெனத்தகும் வகைசெனுத்து தறந்திரவுத்தி யென்கிறபடியே யுய்த்துணர்கவென்பார் ஆழமுடைத்தாலாகிய அழகுதோன்றக்கூறினர். இங்ஙனங்கூறுகின்ற வெல்லாங் கம்பசூத்திரமென்பதுநாடகவழக்கு சித்திரமெனவுங்கூறுப.

எழுவாயெவர்க்குமுதலாகியீறொடிடையாகியெங்குமுளேயாய்
வழுவாதவர்க்கும்வரமீபவல்லேயவரால்வரங்கள்பெறுவாய்
தொழுவாயுணர்ச்சிதொடராததன்மையுறுவாய்மறைந்துதுயரால்
அழுவாயொருத்தனுளேபோலுமாரிவ்வதிரேகமாயையறிவார்.

கீழே பரத்துவங்கூறி யிதிலே வியூகமும் அந்தரியா மித்துவமும் விபவமுங் கூறத்தொடங்கி ஏகமூர்த்தி யிருமூர்த்தி மூன்றுமூர்த்தி பலமூர்த்தியாகி யைந்துபூதமா யிரண்டுசுடராயருவாகி நாகமேறிநடுக்கடலுட்டுயின்ற நாராயணனே வருந்தாதையென்கிறார்.

இ-ள். எழுவாய் - பாற்கடலில் வாசுதேவனுயெழுந்தருளுவாய், எவர்க்கும் - எவ்வகைமேம்பாட்டோருக்கும், முதலாகி - ஆக்குங்காரணனுய், ஈறொடு - நீக்குங்காரணனுதலோடு, இடையாகி- காக்குங்காரணனுமா யெழுவாயென்றந்வயம். எங்கும் - கரந்தசிலிடந்தொறு மிடந்திகழ் பொருடொறும், உளேயாய் - வியாபிக்குமவனுய், வழுவாது - தப்பாமல், அவர்க்கும் - அநதமூவருக்கும், வரம் - வேண்டுமவைகளை, ஈயவல்லே - கொடுக்கமாட்டுவை, அவரால் - அந்தமூவராலும், வரங்கள் - வேண்டுமவைகளை, பெறுவாய் - பிரமாவிஷ்ணுருத்திரர்களாகிக் கொள்ளுவாய், தொழுவாய் - இந்திராதிதேவர்களாய் வணங்குவாய், உணர்ச்சி - மெய்யுணர்வை, தொடராது - பொருந்தாமல் பிரமாதிகளைத் தொழுவாயென்றந்வயம், அது - அந்த மெய்யுணர்வை, அன்மை - அல்லாதவையந்திரி பறியாமைகளையுடைய, உருவாய் - மனிதவடிவாகி, மறைந்து - தெரியாதவனுய், துயரால் - துன்பத்தாலே, அழுவாய் - அழுமவனுய், ஒருத்தன் - இராமனென்னுமொப்பற்றவனுய், உளே - உளனுகிறுய், போலும் - முன்னிலேயசை, ஆர் - எவர், இ - இந்த, அதிரேகம் - பெரிதாகிய, மாயை - மயக்கத்தை, அறிவார் - தெரிகிறவர், இப்படிப்பட்ட மகாமாயையறிவாரார். எ-று.

ஆமோத-பிரமோத-சம்மோதமென்கிற மூன்றுலகங்களிலும் சங்கருஷ்ணப் பிரத்யும் நாநிருத்தர்களா யெழுந்தருளியிருக்கிறார்க

ளென்பது சித்தாந்தமாகலாற் பிரமாதிமூவர்க்குரிய முத்தொழிற் குங்காரணமாக வம்மூவரையுங் கூறினாராயிற்று. வரங்கள்பெறுவா யென்றதனாலே அம்மூவரதநுக்கிரகத்தா லிம்மூவரு முத்தொழிற் குரியராயினரென்றாயிற்று. இப்பாட்டு மிகைபடக்கூறாது சுருங்கச் சொல்லலென்னு மழகுகுன்றக்கூறலன்றுமேல்விளங்கவைத்தலால்.

உன்னொக்கவைத்த விருவர்க்குமொத்தி யொருவர்க்கு முண் மையுரையாய், முன்னொக்கநிற்றி யுலகொக்கவொத்தி முடிவொக்கி னொன்றுமுடியாய், என்னொக்குமின்ன செயலோவிதென்னி லிரு ளொக்குமென்றுவிடியாய், அந்நொப்பமேகொல் பிரிதேகொலாரிவ் வதிரேகமாயை யறிவார். (உருஉ)

கீழே வைகுந்தத்திற் பரவாசுதேவனென்றேகமூர்த்தி பாற் கடலில் வாசுதேவனே டிருமூர்த்தி மூன்றுமூர்த்தி பலமூர்த்தியெ ன்றா ராதியிலே மூன்றுமூர்த்தி பலமூர்த்தியென்றதை யநுவாதித் தைந்துபூதமா யிரண்டு சுடராயருவானவனே வருந்தாதையென் கிறார்.

இ-ள். உன் - விஷ்ணுவாகிய உன்னோடு, ஒக்க - கூட்டியெ ண்ண, வைத்த - நிறுத்திய, இருவர்க்கும் - பிரமருத்திரர்க்கும், ஒத்தி - வியாபகத்திலொத்திருக்கிறாய், ஒருவர்க்கும் - இருவரி லொருவருக்காயினும், உண்மை - (எல்லாநாராயணனேயென்கிற) மெய்புணர்ச்சியை, உரையாய் - தெரியப்படுத்தாய், முன் - இம்மூ வருக்கு முன்பே, ஒக்க - விஷ்ணுவவதரித்தா னென்பதற்கியைய, நிற்றி - இராமனாய் நிற்கிறாய், உலகு - ஐந்துபூதமிரண்டு சுடரென் பதற்கு, ஒக்க - இயைய, ஒத்தி - வியாபகத்தி லொத்திருக்கிறாய், முடிவு - இந்தலீலாவிபூதியடங்கலும், ஒக்கின்-இருமூர்த்தியு மேக மூர்த்தியே யென்று கலக்குமிடத்தில், ஒன்றும்-பொருந்துதற்கிட மான, முடியாய் - திருநாடாகிய நித்திய விபூதிநாதனே, என்- யாதொன்று, ஒக்கும் - இப்படியெல்லாவற்றிலும் வியாபித்திருக் கும், இன்ன-இப்படிப்பட்ட, செயலோ - செய்கைதானோ, இது- இந்த வியாபகவஸ்து, என்னில் - என்றாராயப்புக்கால், இருள்- அந்தகாரத்தை, ஒக்கும் - ஒத்துவிளங்காதிருக்கும், (இது இன்ன செயலோ என்னொக்குமென்னி லிருளொக்கும் மென்றந்வயம்) என்று - சூரியன்போல, விடியாய் - விளக்கமாகாய், (இரண்டு சுட ரென்பதில்லையேயெனின் - இருளென்பதில் மதிதோன்றி யென்றி லடங்கினதற்கொண் சுடரிரவியிடத்தினிற் றிங்கடொறுமினிது

றவு செய்குவதேயென்பதனுற்காண்க.) அந்நோப்பமே - எங்குமு ளேயென் றங்குச்சொன்னநோப்பமே,) மங்கிய வருவாநோப்பமு நீயே) பிறிதே - வேறொன்று அன்று இரண்டுகொல்லு மசைநிலை, நோப்பத்தினேகாரந்தேற்றம், பிறிதினேகாரம் வினு, முடிவொக் கினென்பதில் எழனுருபைந்தனுருபாய்மயங்கிற்று. எ-று. (உடுங)

வாணளளித்திமுடியாமனீதிவருநாளுநிற்றிமறைபோய் [யாய்
பேணுயுனக்கொர் பொருள்வேண்டுமென்று பெறுவானருத்திபிழை
ஊணுயுயிர்க்குமுயிராகிநிற்றியுணர்வாயபெண்ணினுருவாய்
ஆணுகிமற்றுமலியாகியாரிவ்வதிரேகமாயையறிவார்.

இதில் ஆயபதப்பொருளைக்கூறிக் கீழே எல்லாநாராயணனே யென்றதைத் திருஷ்டாந்தரத்தாற்கூறி வருந்தாதையென்கிறர்.

இ-ள். வாழ்நாள் - உடம்போடுகூடி வாழுநாளை, அளித்தி- கொடுக்கிறாய், முடியாமல்-தீராமல், (நீங்காது பந்தத்தைக்கொடுக் கிற யென்றாயிற்று.) நீதி - சிங்காமை விரித்தவறநூலின்வழியே, வருநாளும் - அடையுங்காலத்திலும், நிற்றி - வீட்டையுந்தந்து நிற்கிறாய், மறைபோய் - வேதவிளக்கே, பேணுய் - அறப்பொரு ளின்பங்களை வேண்டினேரை விரும்பாய், உனக்கு - ஒன்றுலொ ன்று குறைவில்லாதவுனக்கு, ஓர்பொருள் வேண்டுமென்று - ஏதே னுமொருபொருளையாயினுங் கருதிப்பேணுயென்றந்வயம், (அவர்க ருதிய வின்றிலொன்றைத்தந்து பந்தத்தில் விடுகிறயென்றுகரு த்து) பெறுவான் - கைங்கரியமாகிய பரமபுருஷார்த்தத்தை வேண் டினேரைப்பெறுதற்கு, அருத்தி - விரும்பிநிற்றலை, பிழையாய்- தவிராய், (இவ்விரண்டடியாலும் உருவோபாய புருஷார்த்தங்க ளின்னபடியென்றும், அதற்குத்தகுதியாகத் தலைக்கட்டுகிறான் அர்ச்சாவதாரமா யென்றுங் கூறினாராயிற்று. தமருகந்த தெவ்வு ருவமவ்வுருவந்தானே தமருகந்ததெப்பேர் மற்றப்பேர், மாறாயி ணைந்த தன்பொன்னடியன்றி இவைகளாற்காண்க.) ஊணுய்-அன்ன மயமாகிய வுடம்பாகியும், உயிர்க்கும் - அவ்வுடம்பில்வாழு மான் மாவாகியு மவ்வான்மாவுக்கும், உயிராகி - பரமான்மாவாகி, நிற்றி- நிற்கிறாய், (அசித்தும் - சித்தும் - ஈஸ்வரனுமாகி நிற்கிறயென்றா யிற்று. ஆகவே அசித்தும் - சித்தும் - சரீரமாகத்தான் சரீரியாய் நிற்கிறனென்று கருத்து. எங்ஙனேயென்னின்) உணர்வாய - இம் மூன்றையுங் காட்சியளவையாலறிதற்காகிய, பெண்ணினுருவாய்- பிரகிருதியென்றதற்குப் பெண்வடிவாகியும், ஆணுகி - அத்தாலே

மயங்கிக்கிடக்கிற புருடனென்றறிதற்காண்வடிவாகியும், மற்று-அசைநிலை,)இவ்விரண்டுக்கும் வேறாகிய பிறிதெனப்பொருள்கூறவுமாம்.) அலியாகி - பெண்டன்மையும் ஆண்டன்மையு மல்லாததுமாகி, ஊனுபுயிர்க்குமுயிராகி நிற்றியென்றநவயம், மற்றின்கணும்மையை நடுநிலைச்சொற்றீவகமாக்கி யேனையிரண்டிடத்துங்கூட்டுக. ஊனுயென்றபோதே யுயிராயென்பதுதானே போதரவேண்டி யுயிர்க்குமென்றுடனே விதந்தார். இவ்விடத்தும்மைகடொக்கன. ()

தானந்தமில்லை பலவென்னுமொன்று தனியென்னுமொன்றுதவிரா, ஞானந்தொடர்ந்த சுடரென்னுமொன்று நயனந்தொடர்ந்தவொளியால், வானந்தொடர்ந்த பதமென்னுமூன்னை மறைநாலின்வந்தமுறையால், ஆனந்தமென்னு மயலென்னுமாரிவ் வதிரேகமாயையறிவார்.

கீழே திருமந்திரத்தைச்சொன்னாய் வேதவிளக்கென்றது நால்வகை என்றும் அவற்றினதுசார மிருவகையென்றும்கூறி வருந்தாதையென்கிறார்.

இ-ள். தான் - வேதவிளக்காகியதுதான், அந்தமில்லை - முடிவில்லையாகலால், பல - மனமும் வாசகமும் செய்கையும் யானு நீதானே, என்னும் (ப்ரக்ஞாப்ரம்மம்) என்றுசொல்லும், ஒன்று- இருக்கு, தனி - யானுந்தானுயொழிந்தானே, என்னும் - (அஹம் ப்ரம்மாஸ்மி) என்றுசொல்லும், ஒன்று - எசு, தவிரா - நீங்காத, ஞானம் - அறிவை, தொடர்ந்த - கூடிய, சுடர் - ஜோதி அவனென்னுகியொழிந்தான், என்னும் - (தத்வமஸி) என்றுசொல்லும், ஒன்று - சாமம், நயனம் - (எண்ணிற்கண்ணிலொன்றே என்கையால் அன்றிக்கே நயனம்) இரண்டுகண்களும், தொடர்ந்த (கூடலான்கண்ணுகிய சூரியமண்டலத்தை தொடர்ந்த) பற்றிச்செல்லுகிற, ஒளியால் - ஜோதியாலே, வானம் - பரமாகாசமாக, தொடர்ந்த - கூடப்பெற்ற, பதம் - இடம், (யானே நீயாகியென்னை யாள்வானே) என்னும் (அயமான் மாப்ரம்மம்) என்றுசொல்லும் தகுதிபற்றி வருவித்து, ஒன்று - அதர்வணம், உன்னை - இராமனுகியவுன்னையே, மறைநாலின், நான்குவேதத்தாலும், வந்த - திரண்டுவந்த, முறையால் - கிரமமிதுவாகையாலே, ஆநந்தம் - முழுநலம், என்னும் - என்றுசொல்லும், அயல் - அவ்வாநந்தத்துக்கிடமாகிய முழுவுணர்வு, என்னும் - என்

று சொல்லும், ஆக ஞாநாநந்தமயனென்றது சாரம். உன்னையே யென்பதிற் றேற்றேகாரந்தொக்கது செய்யுளாகலான்,—எ-று. (௨௫௫)

மீளாதவேதமுடிவின்கணின்னைமெய்யாகமெய்யினினையும்
கேளாதவென்றுபிறவென்றுசொன்ன கெடுவார்கள்சொன்னகடவா
மாளாதநீதியிகழாமைநின்கணபிமானமில்லைவறியோர் [ன்
ஆளாயும்வாழ்தியரசாள்தியாரிவ்வதிரேகமாயையறிவார்.

வேதாந்தக்கருத்துணராத சூனியவாதிகளைக் கண்டித்து அடிமையும் ஆண்டானுமானவனே வருந்தாதையென்கிறார்.

இ-ள். மீளாதவேதம் - அவ்வேதம் மீளாது (இதன்றிதன்றென்று சென்ற வேதங்கள் மீட்சியின்றிக்கே,) முடிவின்கண் - அந்தங்களிலே, நின்னை - நாராயணனாகிய வுன்னை, மெய்யாக - ஞாநாநந்தமயனாக, மெய்யில் - தமதறிவின்கண்ணே, நினையும் - எண்ணும் இவற்றை, கேளாதவென்று - கேட்டறியாதன வென்றும், பிறவென்று-கண்டறியாதனவென்றும், சொன்ன - முதலிலேசொன்னவைக்கு, கெடுவார்கள் - அறிவு கெடுமவர்கள், சொன்ன-அவாங் மன கோசரமென்றவற்றைத் தானே சொல்லிய, கடவால்-மறுமொழியினாலே, மாளாத - அழியாத, நீதி - வேதங்களது சொல்லுகையை, இகழாமல் - தப்பாமல், நின் - உன்னுடைய, கண்ணபிமானம் - கடாக்ஷ வீக்ஷண்யம், இல்லை - இல்லையாகி, வறியோர் - சூனியவாதிகளானார்கள், (அவர்கள் வேத விரோதிகளாகையாலே அவ் வேதவிளக்காகிய வுனக்கு விரோதிகளானார்களென்று கருத்து. ஊன் சுடர் மிகு சுருதியு ளொன்றதை யறியாரே வறியார் நித்தியமாகலான் ஞானத்தைமெய்யென்றார்,) ஆளாயும் - நானென்கிற அடிமையாகியும், வாழ்தி - கைங்கரியமாகிய புருஷார்த்தத்தோடு வாழ்கிறாய், அரசு - நாராயணனென்கிற ஆண்டானாகியும், ஆள்தி - அக்கைங்கிரியத்தைக் கொள்ளுகிறாய், —எ-று.

சொல்லொன்றுரைத்திபொருளாதி தூயமறையுந்துறந்துதிரிவாய், வில்லொன்றெடுத்திசரமொன்றெடுத்திமிளிர் சங்கமங்கையுடையாய், கொல்லென்றுரைத்திகோலையுண்டுநிற்றி கொடியாயுன்மாயையறியேன், அல்லென்றுநிற்றிபகலாதியாரிவ்வதிரேக மாயையறிவார்.

கீழே திருமந்திரத்தை வெளியிட்டபடியைக்கூறி இதிலே அதனது சங்கிரகமாகிய பிரணவத்தையும் அதனதுபொருளையுங் கூறி வேதவிளக்கென்பதையறியாது சூனியரான விராவணாதிகளை ழிய வெளிவந்தவனே வருந்தாதை என்கிறார்.

இ-ள். சொல்லொன்று - மூன்றெழுத்தாகிய பதமொன்றை, உரைத்தி-உபதேசிக்கிறாய், பொருள் - ஆண்டானுக்கே அடிமைக ளென்கிற பொருளும், ஆதி - நாராயணவடிவாகிறாய் (முந்து திரு நாமமென்றதிலே ஹரி என்று இதிலே ஓம் என்று இப்படித்தொ டங்குவதாகிய), தூய - பரிசுத்தத்தையுடைய, மறையும் - வேதத் தையும், துறந்து - விட்டு, திரிவாய் - ஞானநந்தமயனென்பதற்கு வேறாய், வில்லொன்று - வேறே ஒருவில்லை, எடுத்தி - எடுக்கிறாய், சரமொன்று - அவ்வில்லுக்கேற்றபாணமொன்றும், எடுத்தி - எடு க்கிறாய், மிளிர் - பிரகாசியாநின்ற, சங்கம் - சங்கு முதலிய திவ் வியாயுதங்களை, அங்கை - அழகிய கையிலே, உடையாய் - வே தத்திலே உடையவனென்று சொல்லப்படுகிறாய், (சங்கென்றதில் மற்றை யாயுதங்களையு முப லக்ஷணமாய்க் கூட்டுக) கொல்லென்று ரைத்தி - தேவருக் கந்தரியாமியாய் வதைபண் ணென்கிறாய், கொலையுண்டு - இராக்கதருக் கந்தரியாமியாய் வதைபட்டு, நிற்றி- நிற்கிறாய், கொடியாய் - இப்படிக் கோணலாயிருக்கிறவனே, உன் மாயை - உனது மயக்கச்செய்கையை, அறியேன் - ஊர்தியாகிய யானே யறியேன், அல்லென்றும் - ஆவரணமாகவும், நிற்றி - நிற் கிறாய், பகல் - விக்ஷேபமும், ஆதி - ஆகிறாய்,—எ-று.

மறந்தாயுமொத்திமறவாயுமொத்திமயலாரும்யானுமறியேம்
துறந்தாயுமொத்திதுறவாயுமொத்தியொருதன்மைசொல்லவரியாய்
பிறந்தாயுமொத்திபிறவாயுமொத்திபிறவாமனல்குபெரியோய்
அறந்தாணிறுத்தலரிதாகவாரிவ்வதிமோகமாயையறிவார்.

கீழே அந்தரியாமியாகையாலே ஆவரணசத்தியாலே யொரு கான்மயக்கியும், விக்ஷேபசத்தியாலே யொருகால்விளக்கியும் நிற்கி றதேயன்றிச் சூனியவாதிகளறிய விபவமாகி நிற்கிறநிலையிலும் அம் மயக்க விளக்கங்களை யுடையவனேவருந்தாதையென்கிறார்.

இ-ள். மறந்தாயும் - முற்றுமுணர்தல் முடிவிலாற்றல்களைமற ந்தாயென்றாலும், ஒத்தி - அன்புமிகுத்துச்சித்தங்கலங்குதலாலே ஒத்திருக்கின்றாய், மறவாயும் - அவற்றை மறவாயென்றாலும், ஒத்தி-இலங்கையரசு முதலானதோடருளின்மையாலே யொத்திரு க்கின்றாய், மயல் பிரகிருதிக்குள்ளாகிய, ஆரும் - எல்லாரும், யானு ம் அதுநீங்கியயானும், அறியேம் - அறியாதிருக்கிறோம், துறந் தாயும் - நீசங்கசக்கராதி அநந்த கருடாதிகளை விட்டிருக்கிறா யென்றாலும், ஒத்தி - மறைந்து வந்தமையா லொத்திருக்கிறாய்,

துறவாயும் - அவைகளை விடாதிருக்கின்றாயென்றாலும், ஒத்தி - அவைகள் புடையே நின்றமையா லொத்திருக்கிறாய், ஒரு தன்மை - (மறத்தல் துறத்தல்களை யுடையன் மறவாமை துறவாமைகளையிலனென்) றொருபடியாக, சொல்ல - (மயலாராலே யவைகளையுடைய னென்றும் என்றுமேலயவைகளை யிலனென்றுஞ்) சொல்லுதற்கு, அரியாய - அருமையானவனே (இருதிறத்தாருக்கு மிரண்டுபடியாகையா லொருபடியல்லையென்கிறார்) இவை யுரைத்தாமென்னு முத்திகள். பிறந்தாயும் - (சக்கரவர்த்தித் திருமகனுயவதரித்தா யென்றாலும், ஒத்தி - வில்லொன்று சரமொன்றெடுத்தமையா லொத்திருக்கிறாய், பிறவாயும் - நெடுவீடுகொட்டமுடியாயென்றாலும், ஒத்தி - (பல்லாயிரத்தின் முடியாத பக்கமவை வீசமேனி வடுத்தீரவும், தன்னசங்கமுந் தானுமுழுங்கிற்றாகவும், மேலேவிக்கொள்ளுதலாலே) ஒத்திருக்கிறாய், இவை உரைத்து மென்னு முத்தி. பிறவாமல் - பிறவித்துன்பமென் றடைந்தாரைமீள அப்பிறவியில் விடாமல், நல்கு - கடைகணிக்கின்ற, பெரியோய் - (இயல்பாகவே) பாசங்களினீங்கினேய், அறம் - தருமத்தை, தான் - தானுன தன்மையொன்றையே கொண்டு, நிறுத்தல் - நிலைநிற்கச் செய்தலில், அரிதாகி - கூடாமையா யிரண்டுபடியுங்கொண்டு நிற்கிறாயென்றங்வயம் என்றாலென்பது சொல்லெச்சம். எ-று. (உ௬௮)

வினைவர்க்கமுற்றுமுடனேபடைத்தியவையெய்தியென்றும்விளையா
நினைவர்க்குநெஞ்சினுறுகாமமுற்றியறியாமைநிற்றிமனமா [ர்
முனைவர்க்குமொத்தியமரர்க்குமொத்திமுழுமூடரென்றிம்முதலோ
அனைவர்க்குமொத்தியறியாமையாரிவ்வதிரேகமாயையறிவார்.

இதில் முக்காலங்களுமுணர்ந்த பெரியதிருவடிதாமாக இந்திரியங்களின் மனமாகின்றேனும் யானேயென்னும் நீதோபநிடதாசாரியனே வருந்தாதை யென்கிறார்.

இ-ள். வினை - வினையைத் தருகையாலே வினையென்றதாகு பெயர், வர்க்கமுற்றும் - அவ்வினைமுழுதும், உடனே - எக்காலத்திலே, படைத்தி - சிருட்டிக்கிறாய், அவை - அவ்வினைங்களை, எய்தி - அடைந்து, என்றும் (அவற்றின் பயனைப்பொறுக்கமாட்டாம) லெக்காலத்திலும், விளையா - மீளவுண்டாகாமல், நினைவர்க்கு - எண்ணுவோர்க்கு, நெஞ்சில் - சுழுத்திநிலையில், உறு - எல்லாவற்றிலு மிருந்த, காமம் - காமத்தை, முற்றி - நிரம்பச்செய்து, அறியாமல் - அவ்வினையாமையை யெண்ணுவோரை அறியவொட்டாம

ல், நிற்றிமனமா - மனமாக நிற்கிறாய், மூனைவர்க்கும் - முதல்வராகிய பிரமருத்திராதிகளுக்கும், ஒத்தி - ஒத்துநிற்கிறாய், அமரர்க்கும் - இந்திராதி தேவர்களுக்கும், ஒத்தி - ஒத்து நிற்கிறாய்,முழுமூடர் - முழுதுமறிவீனர், என்று - என்று சொல்லப்படுகிற, இம்முதலோர் - இவ்விராவணாதிகளோடு, அனைவர்க்கும் - எல்லாருக்கும், ஒத்தி - (உருப்பசி, மோகினி, அகலிகை, சீதை, கைகேசி, முதலாயினோர் விஷயத்தில், பிரம னுருத்திர னிந்திர னிராவணன் சக்கரவர்த்தி முதலாயினோர் மிக்க காமங்கொண்டமையா)லொத்து நிற்கிறாய், அறியாமை - மதிநலமருளப்பெற்றறியாமல், இவ்வதிரேகமாயையை யறிவாரார், எல்லாவற்றிலு மிக்கது காமமென்பதை 'காதலகாதலறியாமை' என்கிற திருவள்ளுவராற் காண்க. எ-று. (உ௫௯)

எறிந்தாறுமேறுபடுவாருமின்னபொருள்கண்டிரங்குபவரும்
செறிந்தாரினுண்மையெனலாபதன்மைதெரிகின்றதுன்னதிடையே
பிறிந்தார்பிறிந்தபொருளோடுபோதிபிறியாதுநிற்றிபெரியோய்
அறிந்தாரறிந்தபொருளாதியாரிவ்வதிரேகமாயையறிவார்.

இதில் அவ்வினைவர்க்கம் இத்துணைத்தென்றும் அத்துணையுமனமாகிய நின்னிடத்துந தோன்றநிற்கிறவனை வருந்தானதை யென்கிறார்.

இ-ள். எறிந்தாரும் - நாகபாசத்தை வீசினோரும்,ஏறுபடுவாரும் - அவ்வீசலையேற்றுக்கிடக்கிறவரும், இன்னபொருள் - வெற்றிதோல்வியென் றிருவகையானபொருளையும், கண்டு - பார்த்து, இரங்குபவரும் - கலங்குபவருமாக, செறிந்தாரில் - கூடினோரிடத்தே, நுண்மையெனலாயதன்மை - அணுரூபமான மனமென்று சொல்லலாகியபடி, தெரிகின்றது - விளங்குகின்றது, உன்னதிடையே - உனது விஷயத்திலே, (எவ்வாறென்னில்) பிறிந்தார் - வெகுளியாற் பிறிந்தாராகிய இராவணாதிகள் விஷயத்தில், பிறிந்தபொருளோடு - பிறிதற்கேதுவான வெகுளியென்கிற பொருளோடு, போதி - போகிறாய், பிறியாது - (காமத்தாற் பிறியாராகிய இளையபெருமாளாதிகள் விஷயத்திற் காமத்தோடு) பிறியாமல், நிற்றி - நிற்கிறாய், பெரியோய் - வரம்பிலின்பத்தால் பெரியோனே, அறிந்தார் - இவ்விருதிறத்தையுங் கண்டறிந்தாராகிய இந்திராதிகள் விஷயத்தில், அறிந்த பொருள் - (ஏத்தன்மையெய்தி முடியுங்கொலென்னு) மயக்கமாகியபொருள், ஆதி - காமித்தலும் கோபித்தலு

யின்றி மயக்கமாகி நிற்கிறாய், இவ்வதிரேகமாயையறிவாரார், வாளாள் மறந்தாய் - எறிந்தார் இம்மூன்று செய்யுளும் நிரனிறையணி, கண்டிருந்த தேவர்களை யென்செய்யலாமென் றெண்ணுகையான் மயக்கமாயிற்று, காமாதி - ஆறுவர்க்கமும், இராகாதி - பதின்மூன்று வர்க்கமுமடங்க 'காமம் வெகுளி - மயக்க மிவைமூன்று என்ற' திருவள்ளுவரில் இவருமடக்கினமைகாண்க. எ-று. (௨௯௦)

பேராயிரங்களுடையாய்பிறந்தபொருடோறுநிற்றிபிரியாய்
தீராய்பிரிந்துதிரிவாய்திறந்தொலவைதேறுமென்றுதெளியாய்
கூராழியங்கையுடையாய்திரண்டொருருவாதிகோடலுரிபோல்
ஆராயினேதுமிலையாதியாரிவ்வதிரேகமாயையறிவார்.

இதிலே திரிபுடியாய்த் தேடுதற்கரியவனே வருந்தாதை யென்கிறார்.

இ-ள். பேராயிரங்க ளுடையாய் - ஆயிரநாமங்களை யுடையவனே, பிறந்த - உடம்போடு பிறந்த, பொருடோறும் - ஆன்மாக்களெல்லாம், நிற்றி - நிற்கிறாய், பிரியாய் - பிரியாதவனாய், தீராய் - அப்படி ஒருபடியே நீங்காதவனாய், பிரிந்து - மெய் வாய் கண்ணோடு மூக்குச் செவிவழியாலே, திரிவாய் - வேறுபடுவாய், திறந்தொறு - இதிலும்மைதொக்கது, (சுவையொளி யூறோசை நாற்றங்களையுண்டு) அவை - அப்பொறிகளும், தேறுமென்று - அறியுமென்று, தெளியாய் - தெளியப்பட்டாய், கூர்-கூரிய, ஆழி- திருவாழியை, அங்கை - அழகிய கையிலே, உடையாய் - உடையவனே, திரண்டு - திரிபுடியாகத்திரண்டு, ஒருருவாதி - ஒருவடிவாகிறாய், கோடல் - வெண்காந்தற்கிழங்கை, உரிபோல் - உரித்தாற்போல, ஆராயின் - உள்ளேயிருப்ப தெதுவென் றாராயப்புக்கால், ஏதுமிலையாதி - ஒன்றுமில்லையாகிறாய், இவ்வதிரேக மாயையறிவாரார், "இன்பமுதலிய பேற்றுக்கேதுவா மிந்திரியமனமா மஃதே-யின்பமலியான்மாத்தோறும் மிருப்பதாலநந்தமெனவு நித்தத் தின்பகுதியெனவு மணுரூபமெனவுந் துலங்க விலங்குமான் கண் - ணின்பகுதிகவர்ந்து கெண்டையெனப் பிறழ்ந்து வண்டுறழ் நேத்திரத்தினளே" என்பது நியாயவிவேகம். இம்மூன்றுபாட்டும் பிறர்மதத்திற்குடன்படல். எ-று. (௨௯௧)

என்றின்னபன்னியழிவானெறிந்தவெறிசோதிகீறவிருள்போய்ப்
பொன்றுன்னியன்னவெயில்வீசுகின்றபொருள்கண்டுநின்றபுகழோன்

நின்றுன்னியுன்னியிவன்யாவனென்று நிமிர்கின்றவெல்லைநிமிரச்
சென்றுன்னிமுன்னருடலானிவ்வுலகேழுமூடுசிறையான்.

இவ்வாறு திருவடிதெருட்டப் பெருமாள் சோகந்தெளிந்து கண்டமை கூறுகின்றது.

இ-ள். என்று-என்றுசொல்லி, இன்ன-இவ்விதமாக, பன்னி-பிரலாபித்து, அழிவான் - கலங்குகின்ற திருவடி, எறிந்த-வீசிய, எறிசோதி - காந்துகிற சூரியன், கீற - கிழிக்க, இருள் - மயக்கவிருளானது, போய் - கழிந்து, பொன்-சுவர்ணப்பிரபை, துன்னியன்ன - நெருங்கினாற்போல, வெயில் - சூரியப்பிரபையை, வீசுகின்ற - தந்துநிற்கிற, பொருள்-தமது பொருளாகிய திருவடியை, கண்டு - பார்த்து, நின்ற-நிலைபெற்ற, புகழோன் - வாத்ஸல்யாதி கல்யாணகுணங்களையுடைய பெருமாள், நின்று-நிதானித்து, உன்னியுன்னி - எண்ணியெண்ணி, இவன் - இந்தமஹாபுருஷன், யாவனென்று - எவ்வுலகத்தானென்று, நிமிர்கின்ற - தலைதூக்குகிற, எல்லை சமயத்தில், நிமிர - முழுதுந்தலைதூக்க, சென்று - போய், உன்னிமுன்னர் - ஆலோசிக்கிற பெருமாளுக்கு முன்னே, உடலானான் - கூடலானான், இவ்வுலகேழும் - இந்த வுலகேழையும், மூடு - மறைக்கத்தக்க, சிறையான்-சிறகையுடையவன். எ-று. ()

எறிநதவெறிசோதி இருள் உருவக வுயர்நவிற்சி. பொன்றுன்னியன்னவெயில் உவமையணி. வீசுகின்ற பொருளென்பதுமது. வில்லியென்றாற்போல வுன்னியென்றது வினைமுதற்பொருண்மையுணர்த்து மிகரவிகுதி.

வாசங்கலந்தமரைநாளநூலின்வகையென்பதென்னைமழையென்
றாசங்கைகொண்டகொடைமீளியண்ணல்சரராமன்வெண்ணெயணுகும்
தேசங்கலந்தமறைவாணர்செஞ்சொலறிவாளரென்றிம்முதலோர்
பாசங்கலந்தபசிபோலகன்றபதகன்றுரந்தவுரகம்.

இ-ள். வாசம்-பரிமளத்தோடு, கலந்த - கூடிப்பிறந்த, மரை-தாமரையினது, நாளம் - தண்டிலுண்டாகிய, நூலின் - மெல்லிய இழையினது, வகை - விதமாயிற்று, என்பது - என்று சொல்லுமது, என்னை - எப்படி, (தேரீர்க்கும் வடம்போலு நாகபாசத்தை மெல்லிய தாமரை நூல்போலாயிற் றென்கிறது முழுதுந் தேயாமையா லவ்வுவமை கூடாதென்றபடி.) மழையென்று - கைம்மாறு கருதாது வழங்கு மேகமென்று, ஆசங்கைகொண்ட-மயங்குதலைச்

செய்து நிற்கிற, கொடை - கொடுத்தற்றொழிலிலே, மீளி - மீட்சி யில்லாதவனுகையால், அண்ணல்-அக்கொடைவீரரிற் றலைவனுகிய, சரராமன் - சரராமமுதலியார்வாழும், வெண்ணெயனுகும்-வெண் ணெய்நல்லூரையடைந்த, தேசங்கலந்த - ஞானவொளியாகிய வழ் குகூடிய, மறைவாணர்-வடநூன்முனிவரும், செஞ்சொலறிவாளர்- தென்மொழிப்புலவரும், என்று - என்று சொல்லுகிற, இம்முத லோர் - இவர் முதலாயினோரை, பாசம் - கயிருக, கலந்த - பிணிக் கப்பட்டிருக்கிற, பசிபோல்-உதராக்கினிபோல, அகன்ற-நீங்கின, பதகன் - இந்திரசித்தாகிய வஞ்சகன், துரந்த-பிரயோகித்த, உர கம்-நாகபாசம், இவ்வுவமை நாகபாசமுழுது மில்லையாயிற்றென்று துவளிக்கின்றதாகையாற்கூடுமெவ்வுவமை கூடாதென்றார் என்றதொ ழிப்பணி, சரராமனென்ப துருவகவுயர்வுநவிற்சி. ஆசங்கித்தல்- மயங்குதல். இன்னதல்லதிதுவென மொழிதலென்னு முத்தி. ()

பல்லாயிரத்தின்முடியாதபக்கமவைவீசவந்துபடர்கால்
செல்லாநிலத்தினிருளாதல்செல்லவுடனின்றவாளிசிதறுற்
றெல்லாவிதத்துமுணர்வோடுநண்ணியிவனேபிழைக்குமெனவோர்
வல்லாளொருத்தனிடையேபடுத்தவடுவானமேனிவடிவும்.

இவ்விரண்டுபாட்டும் நாகபாசம் நீங்கினமை கூறுகின்றன.

இ-ள். பல்-பல்லுக்குவமையான முருந்து, (அதாவது இறகி னடிக்குருத்து.) ஆயிரத்தின் - ஆயிரமென்கிற கணக்கினும், முடி யாத - அளவுபடாது மேலிடுகிற, பக்கம் - சிறகுகளாகிய, அவை- அவ்விரண்டாலும், வீச - வெயிலையெறிய, வந்து - நாசிவழியே வந்து, படர் - பாதிகழிந்து பாதி மீண்டு மவ்வழியேசெல்லுகிற, கால் - பிராணவாயு, செல்லாத - போகக்கூடாத, நிலத்தின்-சுவா திட்டான நிலையிலுள்ள, இருள்-மயக்கமாகிய விருள், ஆதல் - ஆகி யிருந்தது, செல்ல - கழியுமளவில், உடல்-அவரவருடம்புகளிலே, நின்ற - தைத்திருந்த, வாளி - பாணங்களும், சிதைவுற்று-அழிவு பட்டு, எல்லாவிதத்தும் - சகல விஷயங்களிலும், உணர்வோடு- சோர்வுறாத வுணர்வோடு, நண்ணி - நடக்கப்பெற்று, இவனே- இத்தன்மையவனு, பிழைக்கும் - சோர்வை யடைவான், என- என்று சொல்லலாக, ஓர் - ஒப்பற்ற அல்லதுணருமவனை, வல்லா ளொருத்தன் - உணர்வால்வல்ல வொருவன், இடையே - இவ்வு ணர்வோடு நண்ணிய நடுவிலே, படுத்த - பூர்வகர்மத்தாலடைய லான, வடு - சோர்வாகிய குற்றத்தை, ஆன - ஒப்பாயின, மேனி

அவருடம்பிலுள்ள, வடுவும் - பாணத்தாலாகிய தழும்புகளும், உட லிற் றழும்புகூட வில்லையென்றுயிற்று. எ-று.

இசையுமெனினு மிசையாதெனினும் வசைதீரவெண்ணுவர் சான்றோராகலான் இடையேபடுத்த வடுவிசையி னரிமாவுளங் கிழி த்த அம்பினிற்றீதோ வரிமாப்பிழைப்பெய்த கோல்தீதன்றுகையா லே இடையேபடுத்த வடு குற்றமன்றென்றார், இதுவேற்றுப்பொ ருள் வைப்பணி இதற்குவமையணியங்கம். முருந்தைப் பல்லென் றது எதிர்நிலையை அங்கமாகக்கொண்ட உருவகவுயர்வுநவிற்சி. மய க்கத்தை யிருளென்றதுமது. (உ௬௪)

தருமத்தினொன்றுமொழுகாதசெய்கைதழுவிப்புணர்ந்ததகையால்
உருமொத்தவெங்கண்வினைதீயவஞ்சருடலுய்த்ததில்லையுலகின்
கருமத்தினின்றகவிசேனைவெள்ளமலர்மேலவ்வள்ளல்கடைநாள்
நிருமித்ததென்னவுயிரோடெழுந்துநிலைநின்றதெய்வநெறியால்.

இ-ள். தருமத்தின் - அறத்தின்வழியே, ஒன்றும் - ஒருவித த்திலும், ஒழுகாத - நடவாத, செய்கை - செய்யுந் தன்மையை, தழுவி - அநுசரித்து, புணர்ந்த - அச்செய்புந்தன்மையான பாவ த்தோடுகூடிய, தகையால் - பண்பினாலே, உரும் - இடியை, ஒத்த- ஒப்பான, வெங்கண் - கொடுமையான, வினை - பாவமானது, தீய- நசிக்கும்படி, வஞ்சர் - பாதகருடைய, உடல் - தேகங்களிலே,உய் த்ததில்லை - அப்பக்கத்தொளிசென்றதில்லை, உலகின்-உயர்ந்தோ ர்களுடைய, கருமத்தின்-காரியத்தின்கண்ணே, நின்ற-உத்தியோ கித்துநின்ற, கவிசேனை - வானரசேனையாகிய, வெள்ளம்-எழுபது வெள்ளமும், மலர்மேல் - பூமேலிருநது, அவ்வள்ளல்-முன்னேசிரு ட்டித்த அந்தப்பிரமன், கடைநாள் - அவ்வெள்ளமுடிவாகியபிற்கா லத்திலும், நிருமித்ததென்ன - மீளவுஞ்சிருட்டித்தாற்போல, உயி ரோடெழுந்து - உயிருடனேயெழுந்து, நிலைநின்ற - பெருமாளரு கேநின்றன, தெய்வநெறியால் - ஈஸ்வரசங்கல்பத்தாலே, கடைநா ணிருமித்ததென்னவென்பதில்பொருளுவமை, உலகினென்பதிலா றனுருபைந்த னுருபாய்மயங்கிற்று, வெவ்வியகண்போறலிற் கொடு மையை வெங்கணென்றார். எ-று. (உ௬௫)

இளையானெழுந்துதொழுவானையன்பினிணையாரமார்பினணையா
விளையாததுன்பம் விளைவித்ததெய்வம் வெளிவந்ததென்னவியவாக்
கிளையாரினின்னதுணையோரையாவிகெழுவாவெழுந்துதழுவா
முளையாததிங்களுகிரான்முன்வந்துமுறைநின்றவீரன்மொழிவான்.

இ-ள். இளையான் - சலியாதவனாய், எழுந்து - வீரத்தோடெழுந்து, தொழுவானை - வணங்குகிறவிளையபெருமாளை, அன்போடு-பிரீதியோடே, இணை - தம்மோடொத்ததன்மை, ஆர - தோன்ற, மார்பின் - திருமார்பிலே, அணையா - அணைத்து, விளையாத-வரத்தகாத, துன்பம் - துக்கத்தை, விளைவித்த - வரப்பண்ணின, தெய்வம் - காட்சியாகாத தெய்வந்தானே, வெளிவந்தது - காணவந்தது, என்ன - என்கிறதாக, வியவா - அதிசயித்து, கிளையாரின்-மீண்டு மூய்யாதவர்போல, இன்ன - இத்தன்மையான, துணையோரை - அளவாயினோரை, ஆவி - தமதுபிராணன், கெழுவா - அப்போது பொருந்தியதாக, எழுந்து - அத்துணையோரின் முன்னே யெழுந்து, தழுவா - தழுவிக்கொண்டு, முளையாத - ஆகாயத்தின் முளைத்துமறையாத, திங்கள் - பாதிச்சந்திரனைப்போலும், உகிரான்முன் - நகத்தையுடைய பெரிய திருவடிக்குமுன்னே, முறைநின்று - தெய்வசந்நிதானத்தின்முறையேநின்று, அவ்வீரன் - அவ்விரகுவீரனாகியபெருமாள், மொழிவான்-சொல்லத்தொடங்கினான்.

வே று.

ஐயநீயாரையெங்களருந்தவப்பயத்தினுன்வந்
தெய்தினையுயிரும்வாழ்வுமீந்தனையெம்மனோரால்
கையுறைகோடற்கொத்தகாட்சியையல்லைமீட்சி
செய்திறமிலையாலென்றான்றேவர்க்குந்தெரிக்கிலாதான். (௨௬௭)

பொருளினியுணரவேறுபுறத்துமொன்றுண்டோபுந்தித்
தெருளினையுடையராகிற்செயலருங்கருணைச்செல்வம்
மருளினையிரவின்வந்தவாழ்க்கையீதாகின்வாயால்
அருளினையென்னினெய்தவரியனவுளவோவைய. (௨௬௮)

கண்டிலைமுன்புசொல்லக்கேட்டிலைகடனென்றெம்பால்
கொண்டிலைகொடுப்பதல்லாற்குறையிலையிதுநின்கொள்கை
உண்டிலையென்னநின்றவுயிர்தந்தவுதவியோனே
பண்டிலைநண்புநாங்கள்செய்வதென்பகர்தியென்றான். (௨௬௯)

பறவையின்குலங்கள்காக்கும்பாவகன்பழையநின்றோ
டுறவுளதன்மையெல்லாமுணர்த்துவெனரக்கனோடம்
மறவினைமுடித்தபின்னர்வருவெனின்னுழைபன்மாயப்
பிறவியின்பகைஞநல்குவிடையெனப்பெயர்ந்துபோனான். (௨௭௦)

ஆரியனவனைநோக்கியாருயிருதவியாதும்
காரியமில்லான்போனான்கருணையோர்கடன்மையீதால்
பேரியலாளர்செய்கையூதியம்பிடித்துமென்னார்
மாரியைநோக்கிக்கைம்மாறியற்றுமோவையமென்றான். (௨௭௧)

இறந்தனனிளவலென்னாவிறைவியுமிடுக்கணெய்தும்
மறந்தனளுறங்குகின்றவஞ்சருமறுகிமீளப்
பிறந்தனரென்றுகொண்டோர்பெரும்பயம்பிடிப்பரன்றே
அறந்தருசிந்தையன்பவார்த்துமென்றநுமன்சொன்னான். (௨௭௨)

அழகிதென்றண்ணல்கூறவார்த்தனர்கடல்களஞ்சிக்
குழைவுறவனந்தனுச்சிக்குன்றநின்றண்டகோளம்
எழுமிசையுலகமேன்மேலெங்கிடவிரிந்துசிந்தி
மழைவிழுமலைகள்கீறமாதிரம்பிளக்கமாதோ. (௨௭௩)

பழிப்பருஞ்சிந்தையாள்பாற்சிந்தனைபடரக்கண்கள்
விழிப்பிலன்மேனிசாலவெதும்பினனீசன்வேலும்
குழிப்பரிதாயமார்பைமன்மதன்கொற்றவாளி
கிழிப்புறவுயிர்ப்புநீங்கிக்கிடந்தவாளரக்கன்கேட்டான். (௨௭௪)

தாதைசொற்றலைமேற்கொண்டதாபதன்றருமமூர்த்தி
ஈதைகடீர்க்குநாமத்திராமனையெண்ணியெங்கும்
சீதையுமவளையுன்னிச்சிந்தனைதீர்ந்துந்தீராப்
பேதையுமன்றியவ்வூர்யாருளர்துயில்பெறாதார். (௨௭௫)

சிங்கவேறசனியேறுகேட்டலுஞ்சீற்றச்சேனை
பொங்கியதென்னமன்னன்பொருக்கெனவெழுந்துபோரில்
மங்கினர்பகைஞரென்றவார்த்தையேவலியதென்னா
அங்கையோடங்கைகொட்டியலங்கற்றோள்குலுங்கநக்கான். (௨௭௬)

இடிக்கின்றதசனியென்னவிரைக்கின்றதிராமன்போர்வில்
வெடிக்கின்றதண்டமென்னப்படுவதுதம்பிவின்னாண்
அடிக்கின்றதென்னவந்துசெவிதொறுமனுமனார்ப்புப்
பிடிக்கின்றதுலகமெங்கும்பரிதிசேயார்ப்பின்பெற்றி. (௨௭௭)

அங்கதனவனோவார்த்தானந்தரமார்க்கின்றானும்
வெங்கதநீலன்மற்றைவீரரும்வேறுவேறு

---

271. திருவள்ளுவர்.
275. ஈதை - துன்பம்.

பொங்கினரார்த்தவோசையண்டத்தும்புறத்தும்போன
சங்கையொன்றின்றித்தீர்ந்தார்பாசத்தைத்தருமநல்க. (௨௭௮)

என்பதுசொல்லிப்பன்னிச்சேக்கைநின்றிழிந்துவேந்தன்
ஒன்பதுகோடிவாட்கையரக்கர்வந்துழையர்சுற்றப்
பொன்பொதிவிளக்கங்கோடிபூங்குழைமகளிரேந்தத்
தன்பெருங்கோயினின்றுமகன்றனிக்கோயில்சார்ந்தான். (௨௭௯)

தாங்கியதுகிலார்மெள்ளச்சரிந்துவீழ்குழலார்தாங்கி
வீங்கியவுயிர்ப்பார்விண்ணைவிழுங்கியமுலையார்மெல்லத்
தூங்கியவிழியார்த்தள்ளித்துளங்கியநடையார்வல்லி
வாங்கியமருங்குன்மாதரனந்தரான்மயங்கிவந்தார். (௨௮0)

பானமுந்துயிலுங்கண்டகனவும்பண்கனிந்தபண்ணைக்
கானமுந்தள்ளத்தள்ளிக்களியொடுங்கள்ளங்கற்ற
மீனினும்பெரியவாட்கண்விழிப்பதுமுகிழ்ப்பதாக
வானவர்மகளிர்போனார்மழலையஞ்சதங்கைமாழ்க. (௨௮௧)

மழையினைநீலமூட்டிவாசமும்புகையுமாட்டி
உழையுழைசுருட்டிமென்பூகுவித்திடைக்கிடையூறென்னப்
பிழையுடைவிதியார்செய்தபெருங்குழற்கருங்கட்செவ்வாய்
இழையணிமகளிர்சூழ்ந்தாரனந்தராலிடங்கடோறும். (௨௮௨)

தேனிடைக்கரும்பிற்பாலிலமுதினிற்கிளவிதேடி
மானிடைக்கயலில்வாளின்மலரிடைநயனம்வாங்கி
மேனடையனையமற்றுநல்வழிநல்கவேண்டி
வானுடையண்ணல்செய்தமங்கையர்மருங்குசென்றார். (௨௮௩)

தொடங்கியவார்ப்பினோசைசெவிப்புலந்தொடர்தலோடும்
இடங்கரின்வயப்போத்தன்னவெறுழ்வலியரக்கர்யாரும்
மடங்கலின்முழக்கங்கேட்டவான்கரியொத்தார்மாதர்
அடங்கலுமசனிகேட்டவளையுறையரவமொத்தார். (௨௮௪)

அரக்கனுமைந்தன்வைகுமாடகத்தமைந்தமாடம்
பொருக்கெனச்சென்றுபுக்கான்புண்ணினிற்குமிழிபொங்கத்
தரிக்கிலன்மடங்கலேற்றுற்றொலைப்புண்டுசாய்ந்துபோன
கருக்கிளர்மேகமன்னகளிறனையானைக்கண்டான். (௨௮௫)

எழுந்தடிவணங்கலாற்றானிருகையுமரிதினேற்றித்
தொழுந்தொழிலானைநோக்கித்துனுக்குற்றமனத்தன்றோன்றல்

284. அளை - வளை.

அழுங்கினைவந்தெதென்னையடுத்ததென்றடுத்துச்சொன்னான்
புழுங்கியபுண்ணினானுமினையனபுகறலுற்றான். (௨அ௬)

உருவினவுரத்தைதமுற்றுமுலப்பிலவுதிரம்வற்றப்
பருகினவளப்பிலாதபகழிகள்கவசம்பற்றற்
றருகினபின்னைச்சாலவலசினெனையகண்கள்
செருகினவன்றேயானுமாயையிற்றீர்ந்திலேனேல். (௨அ௭)

இந்திரன்விடையின்பாகனெறும்வலிக்கனுழனேறும்
சுந்தரனருக்கனென்றித்தொடக்கத்தார்தொடர்ந்தபோரில்
நொந்திலெனிளையதொன்றுநுவன்றிலென்மனிசனென்மை
மந்தரமனையதோளாய்வரம்புடைத்தன்றுமன்றே. (௨அ௮)

இளையவன்றன்மையீதாலிராமனதாற்றலெண்ணின்
தளையவிழலங்கன்மார்பநம்வயிற்றங்கிற்றன்றால்
விளைவுகண்டுணர்தலல்லால்வென்றிமேல்விளையுமென்ன
உளையதன்றென்னச்சொன்னானுற்றுளதுணர்ந்திலாதான். (௨அ௯)

வென்றதுபாசத்தாலுமாயையின்விளைவினாலும்
கொன்றதுகுரக்குவீரர்தம்மொடக்கொற்றத்தோனை
நின்றனனிராமனின்னுநிகழ்ந்தவாநிகழ்கமேன்மேல்
என்றனனென்னக்கேட்டவிராவணனிதனைச்சொன்னான். (௨௯0)

வார்கழற்காலமற்றவ்விலக்குவன்வயிரவில்லின்
பேரொலியரவம்விண்ணைப்பிளந்திடக்குரங்குபேர்ந்த
காரொலிமடங்கவல்லைக்கம்பிக்கக்களத்தினார்த்த
போரொலியொன்றுமையவறிந்திலைபோலுமென்றான். (௨௯௧)

ஐயவெம்பாசந்தன்னாலார்ப்புண்டாரசனியென்னப்
பெய்யும்வெஞ்சரத்தான்மேனிபிளப்புண்டாருணர்வுபோந்தார்
உய்யுநரென்றுரைத்ததுண்மையோவொழிக்கவொன்றோ
செய்யுமென்றெண்ணத்தெய்வஞ்சிறிதன்றோதெரியினம்மா. ()

ஈதுரைநிகழும்வேலையெய்துவதறியப்போய
தூதுவர்விரைவின்வந்தார்புகுநதடிதொழுதலோடும்
யாதவணிகழ்ந்ததென்னவிராவணனியம்பவீறின்
றோதியகல்வியாளர்புகுந்துளதுரைக்கலுற்றார். (௨௯௩)

பாசத்தாற்பிணிப்புண்டாரைப்பகழியாற்களப்பட்டாரைத்
தேசத்தாரரசன்மைந்தனிடையிருள்சேர்ந்துநின்றே

---

289. தங்கிற்றன்றால் - தங்கிற்று, ஆல் - அசை.

ஏசற்றுனிரங்கியேங்கியுலகெலாமெரிப்பெனென்றான்
வாசத்தார்மாலைமார்பவானுறைகலுழன்வந்தான். (உகூச)

அன்னவன்வரவுகாணுவயிலெயிற்றரவமெல்லாம
சின்னபின்னங்களானபுண்ணுடைமயர்வுதீர்ந்தார்
முன்னையின்வலியராகிமொய்க்களநெருங்கிமொய்த்தார்
இன்னதுநிகழ்ந்ததென்றாரரக்கனீதெடுத்துச்சொன்னான். (உகூரு)

ஏற்றருந்தடந்தோளாற்றலென்மகனெய்தபாசம்
காற்றிடைக்கழித்துத்தீர்த்தான்கலுழனுங்காண்மின்காண்மின்
வார்த்தையீதாயினன்றாலிராவணன்வாழ்ந்தவாழ்க்கை
மூத்ததுகொள்கைபோலாமென்னுடைமுயற்சியெல்லாம். (உகூசு)

உண்டுலகேழுமேழுமுமிழ்ந்தவனென்னுமூற்றம்
கொண்டவனன்றேயேற்றசெருவினின்மறுக்கங்கொண்டான்
மண்டிலந்திரிந்தபோதுமறுகடன்மறைந்தபோதும்
கண்டிலன்போலுஞ்சொற்றகலுழனன்றென்னைக்கண்ணால். (உகூஎ)

கரங்களினேமிசங்கந்தாங்கியகரியோன்காக்கும்
புரங்களுமழியப்போனபோழ்திலென்சிலையிற்பொங்கி
உரங்களின்முதுகிற்றோளினுறையுறுசிறையினுற்ற
சரங்களுநிற்கவேகொல்வந்ததவ்வருணன்றம்பி. (உகூஅ)

ஈண்டதுகிடக்கமேன்மேலியைந்தவாறிசையவெஞ்சி
மீண்டவர்தம்மைக்கொல்லும்வேட்கையைவேட்குமன்றே
ஆண்டகைநீயேயின்னுமாற்றுதியரும்போரன்றேன்
காண்டலுநானுமென்றான்மைந்தனுங்கருத்தைச்சொன்னான். ()

இன்றொருபொழுதுதாழ்த்தென்னிகற்பெருஞ்சிரமநீங்கிச்
சென்றொருகணத்திலேநான்முகன்படைத்ததெய்வ
வென்றிவெம்படையினலுன்மனத்துயர்மீட்பெனென்றான்
நன்றெனவரக்கன்போய்த்தனளிமலர்க்கோயில்புக்கான். (௩00)

ஆ திருவிருத்தம் - உஉருஉ.

---

## கக௯-வது, படைத்தலைவர்வதைப்படலம்.

ஆர்த்தெழுமோசைகேட்டவரக்கருமுரசமார்ப்பப்
போர்த்தொழில்வேட்கைபூண்டுபொங்கினர்புகுந்துமொய்த்தார்
தார்த்தடமார்பன்றன்னைத்தாவிடையென்னச்சார்ந்தார்
பார்த்தனன்முனிந்துமன்னனினையனபகர்வதானான். (க)

மாபெரும்பக்கனோடுவான்புகைக்கண்ணன்வந்தான்
ஏவுதியெம்மையென்பார்தம்முகமினிதினோக்கிப்
போவதுபுரிதிரென்னப்புகறலும்பொருததூதர்
தேவமற்றிவர்கள்செய்கைகேளெனத்தெரியச்சொன்னார். (உ)

ஆனையும்பரியுந்தேருமரக்கருமமைந்தவானித்
தானையும்வீயநின்றதலைமகன்றனிமையோரார்
மானவன்வாளிவாளியென்கின்றமழலைவாயார்
போனவர்மீளவந்துபுகுந்தனர்போலுமென்றார். (௩)

வேறு.

அற்றவர்கூறலுமாரழலிற்றாய்
முற்றியகோபமுருங்கமுனிந்தான்
இற்றிதுவோவிவர்சேவகமென்னாப்
பற்றுமினென்றனன்வெம்மைபயின்றான். (௪)

என்றலுமெய்தினர்கிங்கரரென்பார்
பின்றலினோரைவலிந்துபிடித்தார்
நின்றனராயிடைநீலநிறத்தான்
கொன்றிடுவீரலிர்கொண்மினிதென்றான். (௫)

ஏற்றமினிச்செயல்வேறிலையீர்வீர்
நாற்றநுகர்ந்துயர்நாசியைநாமக்
கோற்றருதிண்பணைகொட்டினிர்கொண்டோர்
சாற்றுமினஞ்சினரென்றுரைதந்தே. (௬)

அக்கணனேயயில்வாளினர்நேரா
மிக்குயர்நாசியையீரவிரைந்தார்
புக்கனரப்பொழுதிற்புகழ்தக்கோய்
தக்கிலதென்றனன்மாலிதடுத்தான். (௭)

4. அற்று - அப்போது.

அஞ்சமமஞ்சியழிக்துளராஞர்
வெஞ்சமம்வேறலும்வென்றியதன்ருய்த்
துஞ்சலுமென்றிவைதொல்லையவன்றே
தஞ்செனவாருளராண்மைதகைந்தார். (அ)

அந்தரமொன்றுமறிந்திலையன்றே
வந்தனநம்வயினெத்துணைமன்ஞ
தந்திரம்வானவர்தானவரென்னும்
இந்திரனஞ்சினனெண்ணுதியன்றே. (௯)

வருணனடுங்கினன்வந்துவணங்கிக்
கருணைபெறுந்துணையும்முயிர்கால்வான்
இருணிறவஞ்சகரெங்குளரெந்தாய்
பருணிதர்தண்டமிதன்றுபகர்ந்தால். (௧௦)

பத்தொருநான்குபகுத்தபரப்பின்
அத்தனைவெள்ளமரக்கரவிந்தார்
ஒத்தொருமூவர்பிழைத்தனருய்ந்தார்
வித்தகர்யாரினிவீரம்விளைப்பார். (௧௧)

பாசமுமிற்றதுபாதியின்மேலும்
நாசமுமுற்றதுநம்பிநடந்தாய்
பூசன்முகத்தொருகான்முளைபோதா
நீசரைவெட்டுதியோநெடுநாசி. (௧௨)

வாழியிலக்குவனென்னின்மறுக்குற்
ருழியரக்கர்தம்வாயிலடைப்பார்
ஏழுகடற்றுணையோவினிநாசி
ஊழியறுத்திடினும்முலவாதால். (௧௩)

தூதுநடந்தவனைத்தொழுதந்நாள்
ஓதுநெடுஞ்செருவஞ்சியுடைந்தார்
தீதிலர்நின்றவர்சேனையினின்ருர்
பாதியின்மேலுளர்நாசிபடைத்தார். (௧௪)

விட்டிலைசீதையையாமெனின்வீரர்
ஒட்டியபோருளதோவொருநாளே
வெட்டுதிநாசியைவெந்தொழில்வல்லோர்
பட்டிலரென்றிலையென்றுபகர்ந்தான். (௧௫)

---

11. அவிந்தார் - உயிர்நீங்கிஞர்.

ஆறினபின்னரழிந்தனரன்னார்
தேறினரன்னதுசிந்தையுணர்ந்தார்
சீறியநெஞ்சினர்செங்கணரொன்றோ
கூறினர்தந்நிலைசெய்கைகுறித்தார். (௧௬)

உன்மகனொல்கியொதுங்கினனொன்றோ
மின்னகுவானிடையேகவிரைந்தான்
அன்னதின்மாயையியற்றியகன்றான்
இநநகரெய்தினனுய்ந்தனனெநதாய். (௧௭)

இப்பகலொன்றினினாளையினல்லால்
முப்பகறீர்கிலமாவிமுடிப்பேம்
வெப்பகலாவெரிவெந்தழல்வெநத
செப்பகல்வெண்ணெயினோன்மைதெரிந்தோய். (௧௮)

விட்டனையெம்மைவிடுத்தினிவெம்போர்
பட்டனரென்றுபடுத்தனரொன்றோ
கெட்டனரென்பதுகேளலையென்னா
ஓட்டினராவிமுடிக்கவுவந்தார். (௧௯)

அன்னவர்தம்மொடுமையிருவெள்ளம்
மின்னுபடைக்கையரக்கரைவிட்டான்
சொன்னதொகைக்கமையானைசுடர்த்தேர்
துன்னுவயப்பரியோடுதொகுத்தான். (௨௦)

நெய்யழல்வேள்விநெடும்பகைநேர்விண்
தைவருசூரியசத்துருவென்பான்
பெய்கழன்மாலிபிசாசனெனும்பேர்
வெய்யவன்வச்சிரம்வென்றவெயிற்றான். (௨௧)

என்றவரோடுமெழுந்துலகேழும்
வென்றவனேவலின்முன்னம்விரைந்தார்
சென்றனமால்கரிதேர்பரிசெல்லக்
குன்றினமென்னநடந்தனர்கொட்பால். (௨௨)

விண்ணைவிழுங்கியதூளியவிண்ணோர்
கண்ணைவிழுங்குதலிற்கரைகாணார்
எண்ணைவிழுங்கியசேனையையாரும்
பண்ணைவிழுங்கவுணர்ந்திலர்பண்பால். (௨௩)

---

23. எண்ணை விழுங்கின - அளவைகடந்தன.

கால்கிளர்தேரொடுகொல்வரையோடு
மேல்கிளர்பல்கொடிவெண்டிரைவீச
மால்கடலானதுமாமழைவானப்
பால்கிளர்மீனிடையாடியபண்பால். (௨௪)

பேரிகலித்தனபேருலகைச்சூழ்
வாரிகலித்தனவாமெனயானைக்
காரிகலிக்கடலோடுகலித்த
மாரிகலித்தெனவாசிகலித்த. (௨௫)

சென்றனசென்றசுவட்டொடுசெல்லா
நின்றுபிணங்கியகல்வியினில்லா
ஒன்றினையொன்றுதொடர்ந்தனவோடைக்
குன்றுநடந்தனபோற்கொலையானை. (௨௬)

மாகநெடுங்கரம்வானின்வழங்கா
மேகநெடும்புனல்வாரினமேன்மேல்
போகவிலங்கினவுண்டனபோலாங்
காகநெடுங்களியானைகளிப்பால். (௨௭)

எரிந்தெழுபல்படையின்னொளிவீரர்
அருங்கலமின்னொளிதேர்பரியானை
பொருந்தியபண்ணொளிதாரொளிபொங்க
இரிந்தனபேரிருளெண்டிசைதோறும். (௨௮)

எய்தியசேனையையீசனெதிர்ந்தான்
வெய்திவண்வுந்தவன்மாயையின்வெற்றி
செய்தவனேகொறெரிந்தியதென்றான்
ஐயமில்வீடணனன்னதுரைத்தான். (௨௯)

வேறு.

முழைக்குலச்சீயம்வெம்போர்வேட்டதுமுனிந்ததென்னப்
புழைப்பிறையெயிற்றுப்பேழ்வாயிடிக்குலம்பொடிப்பவார்த்துத்
தழைப்பொறிவாளிப்புட்டில்கட்டிவிற்றூங்கிச்சார்வான்
மழைக்குரற்றேரின்மேலான்மாபெரும்பக்கன்மன்னோ. (௩௦)

வேறு.

சிகைநிறக்கனல்பொளிதெறுகட்செக்கரான்
பகைநிறத்தவருயிர்பருகும்பண்பினால்
நகைநிறப்பெருங்கடல்வாயினக்குவான்
புகைநிறக்கண்ணவன்பொலம்பொற்றேரினன். (௩௧)

பிச்சரிற்றிகைத்தனன்பெற்றபோரினான்
முச்சிரத்தயிலினான்மூரித்தேரினான்
இச்சிரமும்மதேயெனவந்தெய்துவான்
வச்சிரத்தெயிற்றவன்மலையின்மேனியான். (௩௨)

காலையுமனத்தையும்பிறகுகாண்பதோர்
வாலுளைப்புரவியன்மடித்தவாயினான்
வேலையினார்ப்பினன்விண்ணைமீக்கொளும்
சூலமொன்றுடையவன்பிசாசன்றோன்றினான். (௩௩)

சூரியன்பகைஞனிசுடர்பொற்றேரினன்
நீரியன்முழக்கினனெருப்பின்வெம்மையான்
ஆரியவேள்வியின்பகைஞனுமவன்
சோரியுங்கனலியுஞ்சொரியுங்கண்ணினான். (௩௪)

சாலிவண்கதிர்நிகர்புரவித்தானையான்
மூலிவெங்கொடுமையிற்றவத்தின்முற்றினான்
சூலியும்வெருக்கொளத்தேரிற்றோன்றுவான்
மாலியென்றடிமுறைவணங்கிக்கூறினான். (௩௫)

ஆர்த்தெதிர்நடந்ததவ்வரியின்றானையும்
தீர்த்தனைவாழ்த்தியுற்றிரண்டுசேனையும்
போர்த்தொழில்புரிந்தனபுலவர்போக்கிலார்
வேர்த்துயிர்பதைத்தனர்நடுங்கிவிம்மியே. (௩௬)

கல்லெறிந்தனகடையுருமிற்காலென
வில்லெறிந்தனகணைவிசும்பின்மேகத்த
செல்லெறிந்தனவெனச்சிதறிவீழ்ந்தன
பல்லெறிந்தனதலைமலையின்பண்பென. (௩௭)

கடம்படுகரிபடக்கலினமாப்பட
இடம்படுசில்லியினீர்த்ததேர்பட
உடம்படுமரக்கரையனந்தனுச்சியில்
படம்படுமெனப்படுங்கவியின்கற்படை. (௩௮)

கொலையொடுங்காநெடும்புயத்தின்குன்றொடும்
நிலைநெடுங்காலொடுநிமிர்ந்தவாலொடும்
மலையொடுமரத்தொடுங்கவியின்வன்னெடுந்
தலையொடும்போம்விசைத்தெறிந்தசக்கரம். (௩௯)

---

32. பிச்சர் - பைத்தியம்பிடித்தோர். 38. அநந்தன் - ஆதிசேஷன்.

ஆண்டகைக்கவிக்குலத்தலைவராக்கையைத்
கீண்டனபுலியினைக்கிழித்தமாக்கரி
தாண்டுவகுலப்பரிமனத்திற்றுவுவ
தூண்டினர்கைவிசைத்தெறிந்ததோமரம். (௪௦)

சில்லியந்தேர்க்கொடிசிதையச்சாரதி
பல்லுடைநெடுநதலைமடியப்பாதகர்
வில்லொடுகழுத்திறப்பகட்டைவீட்டுமால்
கல்லெனக்கவிக்குலம்வீசுங்கல்லரோ. (௪௧)

கரகமுந்தினமலைமுழையிற்கட்செவி
உரகமுந்தினவெனவொளிக்குமொள்ளிலை
அரகமுந்தினகவித்தலைவராக்கையில்
துரகமுந்தினபெடுத்தெறியுஞ்சூலமே. (௪௨)

வால்பிடித்தடிக்கும்வானரத்தைமால்கரி
கால்பிடித்தடிக்குமக்கரியினைக்கவி
தோல்பிடித்தரக்கரையெறியுஞ்சூர்முசு
வேல்பிடித்தெறிவரம்முசுவைவெங்கணார். (௪௩)

முற்படுகவிக்குலமுடுகவீசிய
கற்படக்களம்படுமரக்கர்க்கார்க்கடல்
பற்படுதலைப்படப்படுவபாதகர்
விற்படுகணைபடக்குரங்கின்வேலையே. (௪௪)

எயிற்றொடுநெடுந்தலையிட்டகல்லொடும்
வயிற்றிடைபுகப்பலபகலும்வைகிய
பயிற்றியராயினுந்தெரிக்கும்பண்பிலார்
அயிர்ப்பர்தங்கணவரையணுகியந்நலார். (௪௫)

இச்சுறுகிரிபடக்கிளர்பொற்றேர்க்கிழை
அச்சிறச்செல்கிலவாடல்வாம்பரி
எச்சுறுதுயரிடையெய்தவீத்துணா
முச்சிறுவாழ்க்கையின்மூண்டுளோரென. (௪௬)

மீயவர்யாவரும்வீயவெங்கரி
சேயறுங்குருதியிற்றிரிவசேர்வில
நாயகர்ராளொடுமவியநவ்விதம்
பாயொடுவேலையிற்றிரியும்பண்பின. (௪௭)

படையொடுமேலவர்மடியப்பல்பரி
இடையிடைதரவிழுந்திழிந்தபண்பன
கடனெடுங்குருதியகனலிகாலுறு
வடவையைநிகர்த்தனவுதிரவாயன. (சஅ)

வேறு.

தூமக்கண்ணனுமனுமனுவெதிரெதிர்தொடர்ந்தார்
தாமத்தங்கதன்மாபெரும்பக்கனைத்தடுத்தான்
சேமத்திண்சிலைமாலியுநீலனுஞ்செறுத்தார்
வாமப்போர்வயப்பிசாசனும்பனசனுமலைந்தார். (சகூ)

சூரியன்பெரும்பகைஞனுஞ்சூரியன்மகனும்
நேரெதிர்ந்தனர்நெருப்புடைவேள்வியின்பகையும்
ஆரியன்றனித்தம்பியுமவரெதிரடர்ந்தார்
வீரவச்சிரத்தெயிற்றனுமிடபனுமிடைந்தார். (ருo)

வெங்கண்வெள்ளெயிற்றரக்கரிற்கவிக்குலவீரச்
சிங்கமன்னபோர்த்தலைவரிற்றலைவராய்த்தெரிந்தார்
அங்கமர்க்களத்தொருவரோடொருவர்சென்றடர்த்தார்
பொங்குவெஞ்செருத்தேவருநடுக்குறப்பொருதார். (ருக)

இன்னகாலையினீரைந்துவெள்ளம்வந்தேற்ற
மின்னும்வெள்ளெயிற்றரக்கர்தஞ்சேனையைவீரன்
அன்னவெஞ்சமத்தாறுவெள்ளத்தையுமவித்தான்
சொன்னநாலையுமிலக்குவன்பகழியாற்றொலைத்தான். (ருஉ)

உப்புடைக்கடன்மடுத்தனவுதிரநீரோதம்
அப்பொடோத்தனகடுத்திலவார்கலிமுழுதும்
செப்புருக்கெனத்தெரிந்ததுமீன்குலஞ்செருக்கித்
துப்பொடோத்தனமுத்தினங்குன்றியிற்றோன்ற. (ருங)

தத்துநீர்க்கடன்முழுவதுங்குருதியாய்த்தழங்கச்
சித்திரக்குலப்பன்னிறமணிகளுஞ்சேந்த
ஒத்துவேறுருத்தெரியலவுயர்மதத்தோங்கல்
மத்தகத்துகுதரளமும்வளைசொரிமுத்தும். (ருச)

அதிரவெஞ்செருவனனதொன்றமைக்கின்றவளவில்
கதிரவன்கொழுஞ்சேயொளிக்கற்றையங்கரத்தான்

50. ஆரியன் தனித்தம்பி - இலக்குமணன். 53. ஆர்கலி - சமுத்திரம்.

எதிரவல்லிருட் கரியிறுத்தெழுமுறைமுழ்கி
உதிரவெள்ளத்துளெழுந்தவனுமெனவுதித்தான். (ருரு)

அரக்கரென்றபேரிருளேயிராமனுமிரவி
துரக்கவெஞ்சுடர்க்கதிரவன்புறத்திருடிரக்கப்
புரக்கும்வெய்யவரிருவரையுடையவர்போல
நிரைக்குநல்லொளிபரந்தனவுலகெலாநிமிர. (ருசு)

நிலைகொள்பேரிருணீங்கலுநிலத்திடைநின்ற
மலையும்வேலையும்வரம்பிலவயின்றொறும்பரந்து
தொலைவிலாதவைதோன்றுவபோன்றனசோரி
அலைகொள்வேலையுமரும்பிணக்குன்றமுநிரம்ப. (ருஎ)

நிலந்தவாதசெந்நீரிடைநிணக்கொழுஞ்சேற்றில்
புலர்ந்தகாலையிற்பொறிவரியம்பெனுந்தும்பி
கலந்ததாமரைப்பெருவனங்கதிரவன்கரத்தால்
மலர்ந்ததாமெனப்பொலிந்தனவுலந்தவர்வதனம். (ருஅ)

தேரும்யானையும்புரவியும்விரவினதேவர்
ஊருமானமுமுடிக்களுமுலகமுமலையும்
பேருமானவெங்காலத்துக்கால்பொரப்பிணங்கிப்
பாருள்வீழ்ந்தனபோன்றனகிடந்தனபரந்த. (ருகூ)

எல்லிசுற்றியமதிநிகர்முகத்தியரெரிவீழ்
அல்லிசுற்றியகோதையர்களம்புகுந்தடைந்தார்
புல்லிமுற்றியவுயிரினர்பொருந்தினர்கிடந்தார்
வல்லிசுற்றியமாமரநிகர்த்தனர்வயவர். (சுo)

வணங்குநுண்ணிடைமலைமுலைச்செச்சர்வார்கூந்தல்
அணங்குவெயிற்றற்றரக்கியர்களத்துவந்தடைந்தார்
குணங்கொளுந்துணைக்கணவர்தம்பசுந்தலைகொடாது
பிணங்குபேய்களைப்பிளந்தனர்தொடர்ந்தனர்பிடித்தார். (சுக)

சுடருஞ்வெள்வளைத்தோளிதன்கொழுநனைத்தொடர்வாள்
உடருமங்கமுங்கண்டுகொண்டொருவழியுய்யாள்
குடருமீரலுங்கண்ணுமோர்குறுநரிகொள்ளத்
தொடரவாற்றலளெடித்துயிர்த்தாருயிர்துறந்தாள். (சுஉ)

பெரியவாட்டடங்கண்ணியோர்கணவன்றன்பெருந்தோள்
நரிகளீர்த்தனவணங்கவுமிணங்கவுநல்கா

திரியல்போவனதொடர்ந்தயலினப்படைகிடந்த
அரியநொந்திலவலத்தகச்சிறடியயர்ந்தாள். (௬௩)

நலங்கொணெஞ்சினர் தந்துணைக்கணவரைநாடி
விலங்கலன்னவான்பெரும்பிணக்குப்பையின்மேலார்
அலங்கலோதியருந்துணைபிரிந்துநின்றயரும்
பொலங்கொண்மாமயில்வரையின்மேற்றிரிவனபோன்றார். (௬௪)

சிலவர் தம்பெருங்கணவர் தஞ்செருத்தொழிற்சினத்தால்
பலரும்வாய்மடித்துயிர்துறந்தார்களைப்பார்த்தார்
அலகில்வெள்ளெயிற்றுலிதழ்மறைந்துளதயலாள்
கலவியின்குறிகாண்டுமென்றுமெனக்கனன்றார். (௬௫)

நவசெய்வன்றலையிழந்ததந்நண்பரைநணுகி
அவசமெய்தியமடந்தையருருத்தெரிந்தறியார்
துவசமன்னதங்கூருகிர்ப்பெருங்குறிதோண்மேல்
கவசநீக்கினர்கண்டுகண்டாருயிர்கழித்தார். (௬௬)

மாரியாக்கியகண்ணியர்கணவர் தம்வயிரப்
போரியாக்கைகளுடியப்பொருகளம்புகுந்தார்
பேரியாக்கையின்பிணப்பெருங்குன்றிடைப்பிறந்த
சோரியாற்றிடையழுந்தினரின்னுயிர்துறந்தார். (௬௭)

வேறு.

வகைநின்றுயர் தாணெடுமொருதியும்
புகையின்பொருகண்ணவனும்பொருவார்
மிகைசென்றிலர்பின்றிலர்வென்றிலரால்
சிகைசென்றுநிரம்பியதீயுமிழ்வார். (௬௮)

ஐயஞ்சழல்வாளியழற்கொடியோன்
மெய்யஞ்சனைகான்முளைமேனியின்மேல்
வையஞ்சிலையாறுவழங்கினனால்
மொய்யஞ்சனமேகமுனிந்தனையான். (௬௯)

பாழிப்புயமம்புருவப்படலும்
வீழிக்கனிபோற்புனல்வீசவெகுண்
டாழிப்பெருந்தேரையழித்தனனால்
ஊழிப்பெயர்கார்நிகரொண்டிறலான். (௭௦)

சில்லிப்பொருதேர்சிதையச்சிலையோ
டெல்லிற்பொலிவிண்ணின்விசைத்தெழுவான்
வில்லிற்றதிலக்குவன்வெங்கணையால்
புல்லித்தரையிட்டனனேர்பொருவான். (எக)

மலையிற்பெரியானுடன்மண்ணிடையிட்
டுலறக்கடறுவியகால்கொடுதைத்
தலையிற்பருகிப்பகுவாயனல்கால்
தலைகைக்கொடெறிந்துதணிந்தனனால். (எ௨)

மாபக்கனுமங்கதனும்மலைவார்
தீபத்தினெரிந்தெழுசெங்கணினார்
கோபத்தினர்கொல்லநினைந்தடர்வார்
தூபத்தினுயிர்ப்பர்தொடர்ந்தனரால் (எ௩)

ஐம்பத்தொருவெங்கணையங்கதன்மா
மொய்ம்பிற்புகவுய்த்தனன்மொய்தொழிலான்
வெம்பிக்களியோடுவிளிந்தெழுதிண்
கம்பக்கரியுண்டைகடாயெனவே. (எ௪)

ஊரோடுமெடுத்தொளியோனையுறும்
காரோடுநிகர்க்கதநாகமனான்
தேரோடுமெடுத்துயர்திண்கையினால்
பாரோடுமெடுத்தெறிபண்பிடையே. (எ௫)

வில்லைச்செலவீசிவிழுந்தழியும்
எல்லிற்பொலிதேரிடைநின்றிழியாச்
சொல்லிற்பிழையாதொருசூலமவன்
மல்லிற்பொலிமார்பின்வழங்கினனால். (எ௬)

சூலம்மெனின்றுதொல்லைவரும்
காலம்மெனவுன்னுகருத்தினனாய்
ஞாலம்முடையானதுநாமறவோர்
ஆலமுடையம்பினறுத்தனனால். (எள)

உளந்தானினையாதமுனுற்றுதவாக்
கிளர்ந்தானையிரண்டுகிழித்துணையாப்
பிளந்தானுலகேழினொடேழுபெயர்ந்
தளந்தான்வலிநன்றெனவங்கதனே. (எஅ)

---

71. எல்லி - சூரியன்.

மாமாவியுநீலனும்வானவர்தம்
கோமானொடுதானவர்கோனிகலே
ஆமாறுமலைந்தனனென்றிமையோர்
பூமாரிபொழிந்துபுகழ்ந்தனரால். (எகூ)

கல்லொன்றுகடாவியகாலையவன்
வில்லொன்றிருகூறுவிளைத்திடலும்
செல்லொன்றியவாளொடுதேரினனாய்
நில்லென்றிடைசென்றுநெருக்கினனால். (அ௦)

அற்றத்தொழிலெய்தலுமக்கணனே
மற்றப்புறநின்றவன்வந்தணுகாக்
கொற்றங்குமுதன்னொருகுன்றுகொளா
எற்றப்பொருதேர்பொடியெய்தியதால். (அக)

தாளார்மரனீலனெடுத்தனதன்
வாளான்மடிவித்துவலித்தடர்வான்
தோளர்சறவாளிதுரந்தனனால்
மீளாவினைநூறும்விடைக்கிளையான். (அ௨)

மின்போன்மிளிர்வாளொடுதோள்விழவும்
தன்போர்தவிராதவனைச்சலியா
என்போலியர்போரெனினன்றிதுவோர்
புன்போரெனநின்றயல்போயினனால். (அ௩)

நீர்வீரையனானெதிர்நேர்வரலும்
பேர்வீரனைவாசிபிடித்தவனை
யார்வீரதையின்னசெய்தார்களெனாப்
போர்வீரருவந்துபுகழ்ந்தனரால். (அச)

வேள்விப்பகையோடுவெகுண்டடரும்
தோள்வித்தகனங்கொர்சுடர்க்கணையால்
வாழ்வித்தனையென்றவன்மார்பகலம்
போழ்வித்தனனாருயிர்போயினனால். (அரு)

மல்லற்றடமார்பன்வடிக்கணையால்
எல்லுற்றுயர்வேள்வியிரும்பகைஞன்
வில்லற்றதுதேரொடுமேனிமிரும்
கல்லற்றகழுத்தொடுகோல்களொடும். (அசு)

81. அற்று - அப்போது.

தன்றுணைதனைமுன்புதடுத்தொருநாள்
வென்றானைவிலங்கலின்மேனியனைப்
பின்றாதவலத்துயர்பெற்றியனைக்
கொன்றான்கவியின்குலமாளுடையான். (அஎ)

இடவன்றனிவெஞ்சமமுற்றெதிரும்
விடவெங்கணையிற்றவன்விண்ணதிரக்
கடவுங்கதழ்தேர்கடவாளினொடும்
படவங்கொருகுன்றுபடர்த்தினனால். (அஅ)

திண்டோரழியச்சிலைவிட்டொருதன்
தண்டோடுமிழ்ந்துதலத்தினனாய்
உண்டோவுயிரென்னவுருத்துருமோ
டெண்டோளனுமுட்கிடவெற்றினனால். (அகூ)

அடியுண்டவனாவிகுலைந்தயரா
இடியுண்டமலைக்குவடிற்றனபோல்
முடியும்மெனுமெல்லையின்முந்தினனால்
நெடியன்குறியன்னெனுநீர்மையினான். (கூ0)

கிடைத்தானிகன்மாருதியைக்கிளர்வான்
அடைத்தானெனமீதுயராக்கையினைப்
படைத்தானைநெடும்புகழ்பைங்கழலான்
புடைத்தானவன்மார்புபொடிச்சிதற. (கூக)

எற்றிப்பெயர்வானையிடக்கையினால்
பற்றிக்கிளர்தண்டுபறித்தெறியா
வெற்றிக்கிளர்கைக்கொடுமெய்வலிபோய்
முற்றித்தனிகுத்தமுடிந்தனனால். (கூஉ)

காத்தோர்மரம்வீசுறுகைக்கதழ்வன்
போத்தோர்புலிபோற்பனசன்புரளக்
கோத்தோடநெடுங்குருதிப்புனறிண்
மாத்தோமரமார்பின்வழங்கினனால். (கூ௩)

கார்மேலினனோகடன்மேலினனோ
பார்மேலினனோபகன்மேலினனோ
ஆர்மேலினனோவிவனென்றறியாம்
போர்மேலினன்வாகியெனும்பொறியான். (கூச)

90. இடியுண்டமலை - அடியிற்குடையப்பட்டமலை.

நூறாயிரகோடிகொலன்றுகொலென்
றூறாயிரவானவரும்மறிவின்
தேறாவகைநின்றுதிரிந்துளதால்
பாறாடுகளத்தொருபாய்பரியே. (௯௫)

கண்ணிற்கடுகும்மனனிற்கடுகும்
விண்ணிற்படர்காலின்மிகக்கடுகும்
உண்ணிற்குமெனிற்புறனிற்குமுலாய்
மண்ணிற்றிரியாதவயப்பரியே. (௯௬)

மாப்புண்டரவாசியின்வட்டணைமேல்
ஆப்புண்டவனொத்தவனூரயிலால்
பூப்புண்டரவாவிபுறத்தகலக்
கோப்புண்டனவானரவெங்குழுவே. (௯௭)

நூறும்மிருநூறுநொடிப்பளவில்
ஏறுந்நதிவேலினிறைப்பொழுதில்
சீறுங்கவிசேனைசிதைக்குமெனா
ஆறுந்திறலும்பருமஞ்சினரால். (௯௮)

தோற்றும்முருவொன்றெனவேதுணியாக்
கூற்றின்கொலையாலுழல்கொள்கையனை
ஏற்றுஞ்சிலையாண்மையிலக்குவன்வெங்
காற்றின்படைகொண்டுகடந்தனனால். (௯௯)

குலையப்பொருசூலனெடுங்கொலையும்
உலைவுற்றிலவுய்த்தலுமோய்விலனெண்
டலையற்றுகவுந்தரையுற்றிலனால்
இலையப்பரிகோளினிருக்கையினான். (௧௦௦)

இன்றாதியமுண்டெனவின்னகைபால்
சென்றாதியதும்பிகடென்றிசையான்
வன்றாதருமெய்தினர்வஞ்சனையான்
றன்றாதருமெய்தினர்தன்னகர்வாய். (௧௦௧)

ஏகித்தனிமன்னனிருந்துழிபுக்
கோகைப்பொருளின்றெனவுள்ளழியா
வேகத்தடல்வீரர்விளிந்தவெலாம்
சோகத்தொடிறைஞ்சினர்சொல்லினரால். (௧௦௨)

ஆ திருவிருத்தம் - ௨௩௫௪.

## ௨௦-வது, மகரக்கண்ணன்வதைப்படலம்.

சொன்னாரவர்சொற்செவிபாற்றொடர்வோன்
இன்னாதமனத்தனிலங்கையர்கோன்
வெந்நாகவுயிர்ப்பினன்விம்மினனால்
அன்னாணிலைகண்டயனின்றறைவான். (௧)

முந்தேயெனதாதையைமொய்யமர்வாய்
அந்தோவுயிருண்டவனாருயிர்மேல்
உந்தாயெனையாதுமுணர்ந்திலையோ
எந்தாயொருநீயிடர்கூருதியோ. (௨)

யானேசெலவெண்ணுவெனெய்தவவன்
தானேர்வதுதீதெனவேதணிவேன்
வானேநிலனேமுதன்மற்றுமெலாம்
கோனேயெனைவெல்வதொர்கொள்கையதோ. (௩)

வேறு.

அருந்துயர்க்கடலுளாளென்னமமனையழுதகண்ணள்
பெருந்திருக்கழித்தலாற்றாள்கணவனைக்கொன்றுபோந்தோன்
கருந்தலைக்கலத்தினல்லாற்கடனதுகழியேனென்றாள்
பருந்தினுக்கினியவேலாயின்னருள்பணித்தியென்றான். (௪)

அவ்வுரைமகரக்கண்ணனறைதலுமரக்கனைய
செவ்விதுசேறிசென்றுன்பழம்பகைதீர்த்தியென்றான்
வெவ்வழியவனும்பெற்றவிடையினன்றேர்மேற்கொண்டான்
வவ்வியவில்லான்போனான்வரம்பெற்றுவளர்ந்ததோளான். (௫)

தன்னுடைச்சேனைகோடியைநதுடன்றழுவத்தானை
மன்னுடைச்சேனைவெள்ளமோரைந்துமழையிற்பொங்கிப்
பின்னுடைத்தாகப்பேரிக்கடல்படப்பெயர்ந்ததூளி
பொன்னுடைச்சிமையத்துச்சிக்குச்சியும்புதையப்போனான். (௬)

சோணிதக்கண்ணனோடுஞ்சிங்கனுந்துரகத்திண்டேர்த்
தாண்முதற்காவல்பூண்டுசெல்கெனத்தக்கதென்னா
வாண்முகற்றனையோடுமனைவருந்தொடரப்போனான்
நாண்முதற்றிங்கடன்னைத்தழுவியவனையநண்பான். (௭)

---

3. வானே நிலனே முதல் - பஞ்சபூதம் முதலியன.

பல்பெரும்பதாகைபற்றிமீமிசைதொடுத்தபந்தர்
எல்லவன்சுடரொண்கற்றைமுற்றியநீழலீயத்
தொல்சினயானையங்கைவிலாழிநீர்த்துவலைதூற்றச்
செல்பெருங்கவியின்சேனையமர்த்தொழிற்சிரமந்தீர்ந்த. (௮)

முழங்கினயானைவாசியொலித்தனமுரசின்பண்ணை
தழங்கினவயவரார்த்தாரென்பதோர்முறைமைதள்ள
வழங்கினபதலையோதையண்டத்தின்வரம்பின்காறும்
புழுங்கினவுயிர்கள்யாண்டுங்கால்புகப்புரையின்றாக. (௯)

வெய்தினினுற்றதானைமுறைவிடாநாழில்வெம்போர்
செய்தனசெருக்கிற்சென்றுநெருக்கினர்தலைவர்சேர்த்திக்
கையொடுகைகளுற்றுக்கலந்தனர்கல்லும்வில்லும்
எய்தனவெறிந்தயானையீர்த்தனசோர்த்தசோரி. (௧௦)

வானரவீரர்விட்டமலைகளையரக்கர்வவ்வி
மீனொடுமேகஞ்சிந்தவிசைத்தனர்மீட்டும்வீசக்
கானகமிடிபுண்டென்னக்கவிக்குலமடியக்கவ்விப்
போனகநுகரும்பேய்கள்வாய்ப்புறம்புடைப்போடார்ப்ப. (௧௧)

மைந்நிறவரக்கர்வன்கைவயிரவாள்வலியின்வாங்கி
மெய்ந்நிறத்தெறிந்துகொல்வர்வானரவீரர்வீரர்
கைந்நிறைத்தெடுத்தகல்லுமரனுந்தங்கரத்தின்வாங்கி
மொய்ந்நிறத்தெறிவரெற்றிமுருக்குவரரக்கர்முன்பர். (௧௨)

வண்டுலாவலங்கன்மார்பன்மகரக்கண்மழையேயென்னத்
திண்டிறலரக்கன்கொற்றப்பொற்றடஞ்சில்லித்தேரைத்
தண்டலைமருதவைப்பிற்கங்கைநீர்தழுவுநாட்டுக்
கொண்டன்மேலோட்டிச்சென்றான்குரக்கினப்படையைக்கொன்றான். (௧௩)

இந்திரன்பகைஞனேகொலென்பதோரச்சமெய்தித்
தந்திரமிரிந்துசிந்தப்படைப்பெருந்தலைவர்தாக்கி
எந்திரமெறிந்தவென்னவேவுண்டுபுரண்டாரெய்திச்
சுந்தரத்தோளினானைநோக்கிநின்றினையசொன்னான். (௧௪)

என்னுடைத்தாதைதன்னையின்னுயிருண்டாயென்று
முன்னுடைத்தாயதீயமுழுப்பகைமூவர்க்கின்றி
நின்னுடைத்தாயதன்றேயின்றதுநிமிர்வனென்றான்
பொன்னுடைத்தாதைவண்டுகுடைந்துண்ணும்பொலன்பொற்றாரான். (௧௫)

11. போனகம் - உணவு.

தீயவன்பகர்ந்தமாற்றஞ்சேவகன்றெரியக்கேட்டான்
நீய்கரன்புதல்வன்கொல்லாநெம்பகைநிமிரவந்தாய்
ஆயதுகடனேயன்றோவாண்பிறந்தமைந்தார்க்கைய
வேயதுசொன்னாயென்றானிசையினுக்கிசைந்ததோளான். (௧௬)

உருமிடித்தென்னவின்னாணொலிபடுத்துன்னோடெந்தை
செருமுடித்தென்கணின்றசினமுடித்தமைவனென்னாக்
கருமுடித்தமைந்தமேகங்கான்முடித்தெழுந்தகாலம்
பெருமுடிக்கிரியிற்பெய்யுந்தாரைபோற்பகழிபெய்தான். (௧௭)

அம்புயக்கண்ணன்கண்டத்தாயிரம்பகழிநாட்டித்
தம்பிதன்கவசமீதேயிரட்டிச்சாயகங்கடாக்கி
வெம்பிகளனுமன்மீதேவெங்கணைமாரிவித்தி
உம்பர்தமுலகமுற்றுஞ்சரங்களாய்மூடவுய்த்தான். (௧௮)

சொரிந்தனபகழியெல்லாஞ்சுடர்க்கடுங்கணைகடேவி
அரிந்தனனகற்றிமற்றையாண்டகையலங்கலாகத்
தெரிந்தொருபகழிபாயவெய்தனனிராமனேவ
நெரிந்தெழுபுருவத்தான்றன்னிறத்துற்றுநின்றதன்றே. (௧௯)

ஏவுண்டுதுளக்கமெய்தாவிரத்தகப்பரிதியீன்ற
பூவுண்டகண்ணன்வாயிற்புகையுண்டதுமிழ்வான்போல்வான்
தேவுண்டகீர்த்தியண்ணறிருவுண்டகவசஞ்சேரத்
தூவுண்டவயிரவாளியாயிரந்தூவியார்த்தான். (௨௦)

அன்னதுகண்டவாறோரதிசயமுற்றூராழி
மன்னனுமுறுவலெய்திவாயம்போராறுவாங்கிப்
பொன்னெடுந்தடந்தேர்பூண்டபுரவியின்குரங்கள்போக்கி
வின்னடுவறுத்துப்பாகன்றலையையுநிலத்துவீழ்த்தான். (௨௧)

மார்பிடைநின்றவாளிவாயிடைவெயிலின்வாரும்
சோரியன்விசும்பினூடோரிமைப்பிடைத்தோன்றுநின்றான்
காருருமேறுங்காற்றுங்கனலியுங்கடைநாள்வையம்
பேர்வுறுகாலமென்னப்பெருக்கினன்றவத்தின்பேற்றால். (௨௨)

உருமுறையநந்தகோடியுதிர்ந்தனவூழிநாளின்
இருமுறைகாற்றுச்சீறியெழுந்ததுவிழுந்தவெங்கும்
கருமுறைநிறைந்தமேகங்கான்றனகல்லின்மாரி
பொருமுறைமயங்கிச்சுற்றுமிரியலிற்கவிகள்போன. (௨௩)

---

17. பெருமுடி - மேருவின் சிகரம்.

போயின திசைகளெங்கும்புகையொடுநெருப்பும்போர்ப்பத்
தீயினமணையசெல்லுமாயமாமாரிசிந்த
ஆயிரகோடிமேலுமவிந்தனகவிகளையன்
மாயமோவரமோவென்றான்வீடணன்வணங்கிச்சொன்னான். (உ௪)

நோற்றுடைத்தவத்திஞேன்மைநோக்கினர்கருணைநோக்கிக்
காற்றுடைச்செல்வன்றனுமழைபுடைக்கடவுடானும்
மாற்றலரீந்ததெய்வவரத்தினால்வந்ததென்றான்
நூற்றிகழ்க்கமலக்கண்ணனகற்றுவெனெடியினென்றான். (உ௫)

காலவன்படையுந்தெய்வக்கடலவன்படையுங்காலக்
கோலவன்சிலையிற்கோத்துக்கொடுங்கணையோடுங்கூட்டி
மேலவன்றுரத்தலோடும்விசும்பினின்றெரிந்துவெய்தின்
மாவிருங்கடலின்வீழ்ந்துமறைந்தனமழையுங்காற்றும். (உ௬)

அத்துணையரக்கனேக்கியந்தரவானமெல்லாம்
ஒத்தனவுருவேயாகித்தான்மறைந்தெரளித்துச்சூலப்
பத்திகள்கோடிகோடிபரப்பினனதனைப்பார்த்த
வித்தகனெருவன்செய்தவினையமென்றினையசொன்னான். (உ௭)

மாயத்தால்வகுத்தான்யாண்டும்வரம்பிலாவுருவத்தானைத்
தேயத்தானென்னவண்ணங்கரந்தனன்றெரிந்திலாதான்
காயத்தாவினையனென்றுநினையலாங்கருத்தனல்லன்
தீயொத்தான்பிறத்தினென்னைசெயலெனச்சிந்தைநொந்தான். ()

அம்பின்வாயாறுசோருமரக்கன்றனருளில்யாக்கை
உம்பரிற்பரப்பித்தான்வேறெளித்தனனென்னவோர்வான்
செம்புனற்சுவடுநோக்கியிதுநெறியென்றுதேவர்
தம்பிரான்பகழிதூண்டத்தலைபற்றுத்தலத்தனானன். (உ௯)

அயில்படைத்துருமிற்செல்லும்பொடுமரக்கன்யாக்கை
புயல்படக்குருதிவீசிப்படியிடைப்புரடலோடும்
வெயில்கெடுத்திருளையோட்டுங்காலத்தின்விளைவினேடும்
துயில்கெடக்கனவுமாய்ந்தாலொத்ததுசூழ்ந்தமாயை. (௩௦)

குருதியின்கண்ணன்வண்ணக்கொடிநெடுந்தேரன்கோடைப்
பரிதியினடுவட்டோன்றும்பசுஞ்சுடர்மேகப்பண்பன்

29. தம்பிரான் - தலைவன், இது சைவ சம்பிரதாயச்சொல்.

எரிகணைசிந்திக்காலினெய்தினான்றன்னோடேற்றான்
விரிகடற்றட்டான்கொல்லன்வெஞ்சினத்தச்சன்வெய்யோன். (௩௧)

அன்றவனுமவின்ஞாணலங்கற்றோளிலங்கவாங்கி
ஒன்றலபகழிமாரியூழித்தீயென்னவுய்த்தான்
நின்றவனெடியதாங்கோர்தருவினாலகலநீக்கிச்
சென்றனன்கணையின்மாரிக்கெதிர்படசீயமன்னான். (௩௨)

கரத்தினிற்றிரியாநின்றமரத்தினைக்கண்டமாகச்
சரத்தினிற்றுணித்துவீழ்த்ததறுகணான்றன்னைநோக்கி
உரத்தினைச்சுருக்கிப்பாரினொடுங்கினான்றன்னையொப்பான்
சிரத்தினிற்குதித்தான்றேவர்திசைமுகங்கிழியவார்த்தார். (௩௩)

எரியும்வெங்குன்றினும்பரிந்திரவில்லிட்டென்னப்
பெரியவன்றலைமேனின்றபேரெழிலாளன்சோரி
சொரியவன்கண்ணின்மூக்கிற்செவிகளின்மூளைதூங்க
நெரியவன்றலையைக்காலாலுதைத்துமாநிலத்திலிட்டான். (௩௪)

அங்கவனுலத்தலோடுமழற்கொழுந்தொழுகுங்கண்ணான்
சிங்கன்வெங்கணையன்வில்லன்றாரணிதேரின்மேலான்
எங்கடாபோதியென்னாவெய்தினனெதிரிலாத
பங்கமின்மேருவாற்றற்பனசன்வந்திடையிற்பாய்ந்தான். (௩௫)

பாய்ந்தவன்றோளின்மார்பின்பல்லங்கணல்லபண்போ
டாய்ந்தனவசனிபோலவையிரண்டழுந்தவெய்தான்
காய்ந்தனன்கனலிநெய்யாற்கனன்றதுபோலக்காந்தி
ஏய்ந்தெழுதேரினோடுமிமைப்பிடையெடுத்துக்கொண்டான். (௩௬)

தேரொடுமெடுத்தலோடுநிலத்திடைக்குதித்தசெங்கண்
மேருவிற்றோற்றத்தான்றனுச்சிமேலதனைவீசப்
பாரிடைவிழுதலோடுந்தானவனும்பர்பாயச்
சோரியுமுயிருஞ்சோரத்துகைத்தனன்வயிரத்தோளான். (௩௭)

தராதலவேந்தன்மைந்தர்சரத்தினுங்கவியின்றானை
மராமரமலையென்றின்னவழங்கவும்வளைந்ததானை
பராவரும்வெள்ளம்பத்தும்பட்டனபட்டிலாதார்
இராவணன்றூதர்போனார்படைக்கலமெடுத்திலாதார். (௩௮)

ஆக திருவிருத்தம் - ௨௩௬௨.

---

31. விரிகடற்றட்டான் - நளன். கொல்லன் - கோபமுடையவன். அச்சன் - அச்சமுள்ளவன்.

*

## ௨௧-வது, பிரமாத்திரப்படலம்.

கரன்மகன்பட்டவாறுங்குருதியின்கண்ணன்காவற்
சிரனெரிந்துக்கவாறுஞ்சிங்கனிற்சீறுஞ்சேனைப்
பரமினியுலகுக்காகாதென்பதும்பகரக்கேட்டான்
வரன்முறைதவிர்த்தான்வல்லைதருதிரென்மகனையென்றான். (௧)

கூயினனுந்தையென்றார்குன்றெனக்குவிந்ததோளான்
போயினநிருதர்யாரும்பொன்றினர்போலுமென்றான்
ஏயினபின்னைமீள்வார்நீயலாதியாவரென்னா
மேயதுசொன்னார்கேட்டான்றாதைபால்விரைவின்வந்தான். (௨)

வணங்கிநீயையநொய்தின்மாண்டனர்மக்களென்ன
உணங்கலையின்றுகாண்டியுலப்பறுகுரங்கைநீக்கிப்
பிணங்களின்குப்பைமற்றையாருயிர்பிரிந்தயாக்கை
கணங்குழைச்சீதைதானுமமரருங்காண்பரென்றான். (௩)

வலங்கொடுவணங்கிவான்செலாயிரமடங்கல்பூண்ட
பொலங்கொடிநெடுந்தேரேறிப்போர்ப்பணைமுழங்கப்போனான்
அலங்கல்வாளரக்கர்தானையறுபதுவெள்ளயானைக்
குலங்களுந்தேருமாவுங்குழாங்கொளக்குழீஇயவன்றே. (௪)

கும்பிகைதிமிலைதிண்டிகுறடுமாப்பேரிகொட்டும்
பம்பைதார்முரசங்கஞ்சம்பாண்டில்போர்ப்பணவந்தூரி
கம்பலிபுறுமைதக்கைகரடிகைதுடிவேய்கண்டை
அம்பலிகனுவையூமைசகடையோடார்த்தவன்றே. (௫)

யானைமேற்பறைசாலீட்டத்தறைமணியார்த்ததாழி
மானமாப்புரவிப்பொற்றார்மாக்கொடிக்கண்டைமானச்
சேனையோர்கழலுந்தாருஞ்சேடகப்புளகச்சில்லி
ஆனகத்தோடுவானையரியெனவளைந்தவன்றே. (௬)

சங்கொலிவயிரினோசையாகுளிதழங்குகாளம்
பொங்கொலிவரிகண்பீலிபோரொலிவேயின்பொம்மல்
சிங்கத்தின்முழக்கம்வாசிச்சிரிப்புத்தேரிடிப்புத்திண்கைம்
மங்குலினதிர்வுவானமழையொடுமலைந்தவன்றே. (௭)

பண்டருகிளவிச்செவ்விப்பல்லியத்தொழுகுதீந்தேன்
கண்டினிற்குயின்றவீணைநரம்பொடுகமழுந்தேறல்

---

1. வரன்முறை - நியாயவழி.

வண்டினிற்பொலியுநல்யாழ்வழிபுறுநறவம்வானத்
தண்டர்தஞ்செவியினுண்ணுமமிழ்தெனலாயவன்றே. (௮)

வில்லொலிவயவரார்க்கும்விளியொலிதெழிப்பினோங்கும்
ஒல்லொலிவீரர்பேசுமுறையொலியுரப்பிற்றேன்றும்
செல்லொலிதிரடோளகொட்டுஞ்சேணொலிநிலத்திற்செல்லும்
கல்லொலிதுரப்பமற்றைக்கடலொலிகரந்ததன்றே. (௯)

நாற்கடலனையதானைநடந்திடக்கிடந்தபாரின்
மேற்கடந்தெழுந்ததூளிவிசும்பின்மேக்கொழுநதுவீச
மாற்கடற்சேனைகாணும்வானவர்மகளிர்மானுப்
பாற்கடலனையவாட்கண்பனிக்கடல்படைத்ததன்றே. (௧0)

ஆயிரகோடித்திண்டேரமரர்கோனகரமென்ன
மேயவர்சுற்றத்தானோர்கொற்றப்பொற்றேரின்மேலான்
தூயவிற்சுடர்களெல்லாஞ்சுற்றுறநடுவட்டோன்றும்
நாயகப்பரிதிபோன்றான்றேவரைநடுக்கங்கொண்டான். (௧௧)

சென்றுவெங்களத்தையெய்திச்சிறையொடுதுண்டஞ்செங்கண்
ஒன்றியகழுத்துமேனிகாலுகிர்வாலொடொப்பப்
பின்றவில்வெள்ளத்தானைமுறைபடப்பரப்பிப்பேழ்வாய்
அன்றிலினுருவதாயவணிவகுத்தமைந்துநின்றான். (௧௨)

புரந்தரன்செருவிற்றந்துபோயதுபுணரியேழும்
உரந்தவிர்த்தூழிபேருங்காலத்துளொலிக்குமோதை
கரந்ததுவயிற்றுக்காலவலம்புரிகையின்வாங்கிச்
சிரம்பொதிர்ந்தமரரஞ்சவூதினன்றிசையுஞ்சிந்த. (௧௩)

சங்கத்தின்முழக்கங்கேட்டகவிப்பெருந்தானைதள்ளிச்
சிங்கத்தினதம்வந்துசெவிப்புகவிலங்குசிந்தி
எங்குற்றவென்னுவண்ணமிரிந்தனதிருந்தவ்வேழை
பங்கத்தன்பலவிலன்னசிலையொலிபரப்பியார்த்தான். (௧௪)

கீண்டனசெவிகணெஞ்சங்கிழிந்தனகிளர்ந்துசெல்லா
மீண்டனகால்கள்கையின்வீழ்ந்தனமரனும்வெற்பும்
பூண்டனநடுக்கம்வாய்கள்புலர்ந்தனமயிரும்பொங்க
மாண்டனமன்றேவென்றவானரமெவையுமாதோ. (௧௫)

படைப்பெருந்தலைவர்நிற்கப்பல்பெருந்தானைவேலை
உடைப்புறுபுனலினோடவூழிநாளுவரியோதை

12. அன்றில் - கிரவுஞ்சம்.

கிடைத்திடமுழக்கியார்த்துக்கிளர்ந்தது நிருதர்சேனை
அடைத்தது திசைகளெல்லாமன்னவர்களத்தரானார். (கசு)

செங்கதிர்ச்செல்வன்சேயுஞ்சமீரணன்சிறுவன்றானும்
அங்கதப்பெயரினானுமண்ணலுமிளையகோவும்
வெங்கதிர்மவுலிச்செங்கண்வீடணன்முதலாவீரர்
இங்கிவர்நின்றாரல்லதிரிந்ததுகுரங்கினீட்டம். (கஎ)

மாருதியலங்கன்மாலைமணியணிவயிரத்தோண்மேல்
வீரனும்வாலிசேய்தன்விறல்கெழுசிகரத்தோண்மேல்
ஆரியற்கிளையகோவுமேவநின்றமரர்வாழ்த்தி
வேரியம்பூவின்மாரிசொரிந்தனரிடைவிடாமை. (கஅ)

விடையின்மேற்கலுழன்றன்மேல்வில்லினர்விளங்குகின்ற
கடையின்மேலுயர்ந்தகாட்சியிருவருங்கடுத்தார்கண்ணுற்
றடையின்மேருவையுஞ்சாய்க்குமனுமனங்கதனன்றன்னோர்
றொடையின்மேன்மலர்ந்ததாரர்தோளின்மேற்றோன்றும்வீரர். ()

நீலனைமுதலாயுள்ளநெடும்படைத்தலைவர்நின்றார்
தாலமுமலையுமேந்தித்தாக்குவான்சமையுங்காலை
ஞாலமும்விசும்புங்காத்தநாணிலக்கிழவன்மைந்தன்
மேலமர்விளைவையுன்னிவிலக்கினன்விளம்பலுற்றான். (உ௦)

கடவுளர்படைகளும்மேல்வெய்யவன்றுரந்தகாலம்
தடையுளவல்லதாகுந்தன்மையிரல்லிர்தாக்கிற்
கிடையுளதெம்பானல்கிப்பின்னிறைநிற்றிரீண்டிப்
படையுளதனையேயின்றெம்விற்றொழில்பார்த்திரென்றான். (உக)

அருண்முறையவருநின்றாராண்டகைவீரராழி
உருண்முறைத்தேரின்மாவினோடைமால்வரையினூழி
இருண்முறைநிருதர்தம்மேலேவினரிமைப்பிலோரும்
மருண்முறையெய்திற்றென்பர்சிலைவழங்கசனிமாரி. (உஉ)

இமைப்பதன்முன்னம்வந்தவிராக்கதவெள்ளந்தன்னைக்
குமைத்தொழில்புரிந்தவீரர்தனுத்தொழில்குறித்தின்றெம்மால்
அமைப்பதென்பிறிதொன்றுண்டோமேருவென்றமைந்தவில்லால்
உமைக்கொருபாகனெய்தபுரங்களினொருங்கிவீழ்ந்த. (உ௩)

தேரின்மேற்சிலையினின்றவிந்திரசித்தென்றோறும்
வீரருள்வீரன்கண்டான்விழுந்தனவிழுந்தவென்னும்

---

18. ஆரியற்கிளையகோ - இலக்குமணன்.

பாரின்மேலோர்க்கலன்றேறப்பட்டனர்பட்டாரென்னும்
போரின்மேலோர்க்கலீதிவ்விருவரும்பொருதபூசல். (உ௪)

யானைபட்டனவோவென்றானிரதமிற்றனவோவென்றான்
மானமாவந்தவெல்லாமறிந்தொழிந்தனவோவென்றான்
ஏனைவாளரக்கர்யாருமில்லையோவெடுக்கவென்றான்
வானுயர்பிணத்தின்குப்பைமறைத்தலின்மயக்கமுற்றான். (உரு)

செய்கின்றாரிருவர்வெம்போர்சிதைகின்றசேனைநோக்கின்
ஐயந்தானில்லாவெள்ளமறுபதுமவிகவென்று
வைகின்றாரல்லராகின்வரிசிலைவலத்தான்மாள
எய்கின்றாரல்லரீதெவ்விந்திரசாலமென்றான். (உ௬)

அம்பின்மாமழையைநோக்குமுதிரத்தினூற்றைநோக்கும்
உம்பரினளவுஞ்சென்றபிணக்குன்றினுயர்வைநோக்கும்
கொம்பறவுதிர்ந்தமுத்தின்குப்பையைநோக்குங்கொன்ற
தும்பியைநோக்கும்வீரர்சுந்தரத்தோளைநோக்கும். (உ௭)

மலைகளைநோக்குமற்றவானுறக்குவிந்தவன்கட்
டலைகளைநோக்கும்வீரர்சரங்களைநோக்குந்தாக்கி
உலைகொள்வெம்பொறியினுக்கபடைக்கலத்தொழுக்கைநோக்கும்
சிலைகளைநோக்குநாணேற்றிடியினைச்செவியினோர்க்கும். (உ௮)

ஆயிரந்தேரையாடலானையையலங்கன்மாவை
ஆயிரந்தலையையாழிப்படைகளையறுத்துமப்பால்
போயினபகழிவேகத்தன்மையைப்புரிந்துநோக்கும்
பாயும்வெம்பகழிக்கொன்றுங்கணக்கிலாப்பரப்பைப்பார்க்கும். ()

அறுபதுவெள்ளத்தாயவரக்கர்தமாற்றற்கேற்ற
எறிவனவெய்வபெய்வவெற்றுறுபடைகள்யாவும்
பொறிவனம்வெந்தபோலச்சாம்பராய்ப்போவதல்லால்
செறிவனவில்லாவார்த்தைதசிந்தையாற்றெரியநோக்கும். (௩௦)

வயிறலைத்தோடிவந்துகொழுநர்மேன்மகளிர்மாழ்கிக்
குயிறலத்துக்கவென்னக்குழைகின்றகுழைவைநோக்கும்
எயிறலைத்திடுக்கும்பேழ்வாய்த்தலையிலாவாக்கையீட்டம்
பயிறலைப்பறவைபாரிற்படிகலாப்படியைப்பார்க்கும். (௩௧)

அங்கதரநந்தகோடியுளரெனுமனுமனென்பார்க்
கிங்கினியுலகமெல்லாமிடமிலைபோலுமென்னும்

27. உம்பர் - ஆகாயம் - தும்பி - யானை.

எங்குமிம்மனிசரென்பாரிருவரேகொல்லென்றானும்
சிங்கவேறனையவீரர்கடுமையைத்தெரிக்கிலாதான். (௩௨)

ஆர்க்கின்றவமரர்தம்மைநோக்குமங்கவர்களள்ளித்
தூர்க்கின்றபூவைநோக்குந்துடிக்கின்றதோளைநோக்கும்
பார்க்கின்றதிசைகளெங்கும்படும்பிணப்பரப்பைப்பார்க்கும்
ஈர்க்கின்றகுருதியாற்றோடியானையின்பிணத்தைநோக்கும். (௩௩)

ஆயிரகோடித்தேருமரக்கருமொழியவல்லார்
மாயிருஞ்சேனையெல்லாமாய்ந்தவர்கண்டும்வல்லைப்
போயினகுரங்குத்தானைபுகுந்திலதன்றேபொற்றேர்த்
தீயவன்றன்மேலுள்ளபயத்தினாற்கலக்கந்தீரா. (௩௪)

தளப்பருஞ்சேனைவெள்ளத்தறுபதுந்தலத்ததாக
வளப்பருந்தேரினுள்ளதாயிரகோடியாகத்
துளக்கமிலாற்றல்வீரர்பொருதபோர்த்தொழிலைநோக்கி
அளப்பருந்தோளைக்கொட்டியஞ்சனைமதலையார்த்தான். (௩௫)

ஆரிடையனுவனார்த்தவார்கலியசனிகேளாத்
தேரிடைநின்றுவீழ்ந்தார்சிலர்சிலர்படைகள்சிந்திப்
பாரிடையிழிந்துபோகப்பாரித்தார்பைம்பொனிஞ்சி
ஊரிடைநின்றுளாருமுயிரினோடிரங்கான்றார். (௩௬)

அஞ்சினிர்போமினின்றோரார்ப்பொலிக்கிழியற்பாலிர்
வெஞ்சமம்விளைப்பதென்னோநீருமிவீரரோடு
துஞ்சினிர்போலுமன்றேயென்றவர்ச்சுளித்துநோக்கி
மஞ்சினிற்கரியமெய்யானிருவர்மேலொருவன்வந்தான். (௩௭)

அக்கணத்தார்த்துமண்டியாயிரகோடித்தேரும்
புக்கனநேமிப்பாடிற்கிழிந்தனபுவனமென்னத்
திக்கிடைநின்றயானைசிரம்பொதிரெறியச்சிந்தி
உக்கனவிசும்பின்மீன்களுதிர்ந்திடத்தேவருட்க. (௩௮)

வேறு.

மாற்றமொன்றிளையவன்வளைவிற்செங்கரத்
தேற்றினன்வணங்கிநின்றியம்புவானிகல்
ஆற்றினனரவுகொண்டசைப்பவாரமர்
தோற்றனனென்றுகொண்டுலகஞ்சொல்லுமால். (௩௯)

35. அஞ்சனைமதலை - அநுமன்.

காக்கவுங்கிற்றிலன்காதனண்பரைப்
போக்கவுங்கிற்றிலனொருவன்போய்ப்பிணி
ஆக்கவுங்கிற்றிலன்வென்றியாருயிர்
நீக்கவுங்கிற்றிலனென்றுநின்றதால். (சு0

இந்திரன்பகையெனுமிவனையென்சரம்
அந்தரத்தருந்தலையறுக்கலாதெனின்
வெந்தொழிற்செய்கையன்விருந்துமாய்நெடு
மைந்தரிற்கடையெனப்படுவன்வாழியாய். (சுக

நின்னுடைமுன்னரிந்நெறியினீர்மையான்
தன்னுடைச்சிரத்தையென்சரத்திற்றள்ளினால்
பொன்னுடைவனைகழற்பொலன்பொற்றோளினாய்
என்னுடையடிமையுமிசையிற்றுமரோ. (சுஉ

நெடியனவுலகெலாங்கண்டுநிற்கவென்
அடுசரமிவன்றலையறுக்கலாதெனின்
முடியவொன்றுணர்த்துவெனுனக்குநான்முயல்
அடிமையின்பயனிகந்தறுவதாகென்றான். (சுங

வல்லவனவ்வுரைவழங்குமேல்வையுள்
அல்லனீங்கினமெனவமரரார்த்தனர்
எல்லையிலுலகமுமெவையுமார்த்தன
நல்லறமார்த்தனநமனுமார்த்தனன். (சுச

முறுவல்வாண்முகத்தினன்முளரிக்கண்ணனும்
அறிவைநீயடுவலென்றமைதியாமெனின்
இறுதியுங்காவலுமியற்றுமீசரும்
வெறுவியர்வேறினிவிளைவதியாதென்றான். (சுரு)

சொல்லிதுகேட்டடிதொழுதுசுற்றிய
பல்பெருந்தேரொடுமரக்கர்பண்ணையைக்
கொல்வலிங்கன்னதுகாண்டிகொல்லென
ஒல்லையிலெழுந்தனனுவகையுள்ளத்தான். (சுகூ)

அங்கதனார்த்தனனசனியேறென
மங்குனின்றதிர்ந்தனவயவன்றேர்வரும்
சிங்கமுநடுக்குறத்திருவினாயகன்
சங்கமொன்றொலித்ததுகடலுந்தள்ளுற. (சஎ)

எழுமரச்சக்கரமீட்டிதேரமரம்
முழுமுரட்டண்டுவேன்முசுண்டிமூவிலைக்
கழுவயில்கப்பணங்கவண்கல்கன்னகம்
விழுமழைக்கிரட்டிவிட்டரக்கர்வீசினர். (௪௮)

மீனெலாம்விண்ணினின்றுருங்குவீழ்ந்தன
வானெலாமண்ணெலாமறையவந்தன
தானெலாந்துணிந்துபோய்த்தகர்ந்துசாய்ந்தன
வேனிலானனையவன்பகழிவெம்மையால். (௪௯)

ஆயிரந்தேரொருதொடையினச்சிறும்
பாய்பரிக்குலம்படும்பாகர்பொன்றுவர்
நாயகர்நெடுந்தலைதுமியுநாமறத்
தீயெழும்புகையெழுமுலகந்தீய்ந்தற. (௫௦)

அடியறுந்தேர்முரணுழியச்சறும்
வடிநெடுஞ்சிலையறும்வாசிமார்பறும்
கொடியறுங்குடையறுங்கொற்றவீரர்தம்
முடியறுமுரசறுமுகிலுஞ்சிந்துமால். (௫௧)

இன்னவோருறுப்பிவையினையதேர்பரி
மன்னவரிவருவர்படைஞர்மற்றுளோர்
என்னவோர்தன்மையுந்தெரிந்ததில்லையால்
சின்னபின்னங்களாய்மயங்கிச்சிந்தலால். (௫௨)

தந்தையர்தெரிடைத்தனயர்வன்றலை
வந்தனதாதையர்வயிரவான்சிரம்
சிந்தினகாதலர்தெரிற்சின்னமா
அந்தரத்தம்பொடுமற்றெழுந்தன. (௫௩)

செம்பெருங்குருதியிற்றிகழ்ந்தசெங்கண்மீன்
கொம்பொடும்பரவையிற்றிரியுங்கொட்பெனத்
தும்பையின்றொடையலார்தடக்கைதூணிவாங்
கம்பொடுந்துணிந்தனசிலையொடற்றன. (௫௪)

தடிவனகொடுஞ்சரந்தள்ளத்தள்ளுற
மடிவனகொடிகளுங்குடையுமற்றவும்
வெடிபடுகடனிகர்குருதிவெள்ளத்தில்
படிவனவொத்தனபறவைபன்மைய. (௫௫)

49. மீன் - நக்ஷத்திரம்.   51. அக்கறும் என்றும் பாடம்.

வேறு.

சிந்துரங்களின்பருமமும்பகழியுந்தேரும்
குந்துவன்னெடுஞ்சிலைமுதற்படைகளுங்கொடியும்
இந்தனங்களாயிறந்தவர்விழிக்கனலிலங்க
வெந்தவெம்பிணம்விழுங்கினகழுதுகள்விரும்பி. (௫௬)

சில்லியூடறச்சிதறினசிலசிலகோத்த
வல்லியூடறமறிந்தனபுரவிகண்மறையப்
புல்லிமண்ணிடைப்புரண்டனசிலசிலபோராள்
வில்லிசாரதியொடும்படத்திரிந்தனவெறிய. (௫௭)

அலங்குபன்மணிக்கதிரனகுருதியினழுந்த
விலங்குசெஞ்சுடர்விடுவனவளவின்றிமிடைந்த
குலங்கொள்வெய்யவரமர்க்களத்தீயிடைக்குளித்த
இலங்கைமாநகர்மாளிகைநிகர்த்தனவிரதம். (௫௮)

ஆனகாலையினிராமனுமயின்முகப்பகழி
சோனைமாரியிற்சொரிந்தனனநுமனைத்தூண்டி
வானமானங்கண்மடிந்தெனத்தேரெலாமடிந்த
தானுந்தேருமேயாயினனிராவணன்றனயன். (௫௯)

பல்விலங்கொடுபுரவிகள்பூண்டதேர்ப்பரவை
வல்விலங்கல்போலரக்கர்தங்குழாத்தொடுமடிய
வில்விலங்கியவீரரைநோக்கினன்வெகுண்டான்
சொல்விலங்கலன்சொல்லினனிராவணன்றோன்றல். (௬௦)

இருவிரென்னொடுபொருதிரோவன்றெனினேற்ற
ஒருவிர்வந்துயிர்தருதிரோவும்படையோடும்
பொருதுபொன்றுதல்புரிதிரோவுறுவதுபுகலும்
தருவலின்றுமக்கேற்றுளதொன்றெனச்சலித்தான். (௬௧)

வாளிற்றின்சிலைத்தொழிலினின்மல்லினின்மற்றை
ஆளுற்றெண்ணியபடைக்கலமெவற்றினுமமரில்
கோளுற்றுன்னொடுகுறித்ததுசெய்துயிர்கொள்வான்
சூளுற்றேனிதுசரதமென்றிலக்குவன்சொன்னான். (௬௨)

முன்பிறந்தவுன்றம்முனைமுறைதவிர்த்துனக்குப்
பின்பிறந்தவனுக்குவென்பின்பிறந்தோனை
முன்பிறந்தவனுக்குவனிதுமுடியேனேல்
என்பிறந்ததனாற்பயனிராவணற்கென்றான். (௬௩)

இலக்குவன்னெனும்பெயருனக்கிசைவதேயென்று
இலக்குவன்கணைக்காக்குவெனினிதுபுகுந்திடையே
விலக்குவன்னெனவிடையவன்விலக்கினும்வீரம்
விலக்குவன்னினைக்காணுமுன்றமையனும்விழியால். (௩௪)

இதன்பொருள், வன்கணைக்கு - (என்) வலிய அம்புக்கு, இல க்கு - எய்புங்குறியாக, ஆக்குவென் - (உன்னைச்)செய்வேன், (ஆத லால்) இலக்குவனெனும் பெயர் - இலக்குவனெனச் சிறப்பித்துக் கூறும் பெயர், உனக்கிசைவதே - உனக்குத்தக்கதே, என்று - எ ன்றுகூறி, இனி - இவ்வாறு யான் துணிந்தபின், விடையவன்-எங் கட்குவேண்டிய வரங்களைத்தரும் இடபவாகனனாகிய சிவன், புகுந் திடையே - போர்க்கிடையே புகுந்து, விலங்கு உவனென - சிங்க வுருக்கொண்ட அத்திருமாலைப்போல, விலக்கினும் - என்போரை மறுத்தாலும், நினைவீரம் விலக்குவல் - நின்னினின்றும் வீரத்தை நீக்குவேன், உன்றமையனும் - உன்னை உயிரினும் மேலாகக்கொ ண்ட உன்னண்ணனும், விழியால் காணும் - கண்களால் அதை பார்ப்பான். எ-று.

னகரமூன்றும் விரித்தல். விலக்கென்பதில் ககரம் வலித்தல், இது நரமடங்கலை யுணர்த்திற்று. இறைவனவ்வுருக்கொண்டு இர ணியன் முதலிய இராக்கதர்குழுவைக்கொலைசெய்தானாகலின், காத் தலின்நன்மைபுரிகுநர் நன்னலம் துய்த்துப்பல்கலாற் படைத்தலை யும், தீமைபுரிகுநர்துன்பந்துய்த்தழிதலால் அழித்தலையுந் தன்னு ளடக்கிக்கொண்டு அவ்விருதொழிலுக்கு மிடைநிகரதாய் நிற்றலி னதனுடைய இறைவனை உவனென்று சுட்டியும் தைத்தியர் கால னென்பவாகலின் அழித்தற்குரிய விடையவனுக்கவனை யுவமித்துங் கூறினான். இதுதொழிலுவமை. தன்னுயிரினுஞ் சிறப்பாகக்கொண் டானென்பது உன் தமையனுமென்ற சொல்லாற்றலாற் போந்த பொருள். உம்மைசிறப்பு. காணுமென்றமேலே யமைந்திருக்க விழியா லெனவேண்டாது கூறியது நீ அதிகாயன் முதலிய போர்வீரரை வெற்றிகொண்டதைக் கண்டதெனத்தான்வேண்டி அவ்விழியின் சிறப்பைத் தோற்றுவித்தற்கு. நினை என்பது உருபுமயக்கம்.

அறுபதாகியவெள்ளத்தினரக்கரையம்பால்
இறுவதாக்கியவிரண்டுவில்லீருங்கண்டிரங்க
மறுவதாக்கியவெழுபதுவெள்ளமுமாள
வெறுவிதாக்குவெனுலகினைக்கணத்தினோர்வில்லால். (௩௫)

கும்பகன்னனென்ருெருவனீரம்பிடைக்குறைத்த
தம்பியல்லனுனிராவணன்மகனெருதமியேன்
எம்பிமாருக்குமென்சிறுதாதைக்குமிருவீர்
செம்புணீர்கொடுகடன்கழிப்பானின்றுதீர்ந்தேன். (௬௬)

அரக்கரென்பதோர்பெயர்படைத்தவர்க்கெலாமடுத்த
புரக்குநன்கடன்செயவுளன்வீடணன்போந்தான்
கரக்குறுந்தைக்குநீசெயக்கடவனகடன்கள்
இரக்கமுற்றுனக்கவன்செயுமென்றனனிளையோன். (௬எ)

ஆனகாலையினயிலெயிற்றரக்கனெஞ்சழன்றுன்
வானம்வையமுந்திசைகளும்யாவையுமறையப்
பானல்வேலையைப்பருகுவசுடர்முகப்பகழி
சோனைமாரியினிருமடிமும்மடிதுரந்தான். (௬அ)

அங்கதன்றன்மேலாயிரமவற்றினுக்கிரட்டி
வெங்கண்மாருதிமேனிமேல்வேறுளவீரச்
சிங்கமன்னவராக்கைமேலுலப்பிலசெலுத்தி
எங்குமவெங்கணையாக்கினனிராவணன்சிறுவன். (௬௯)

இளையமைந்தன்மேலிராமன்மேலிராவணியிகலில்
விளையும்வன்ருெழில்வானரவீரர்மேன்மெய்யுற்
றுளையும்வெஞ்சரஞ்சொரிந்தனனுழிகையொன்று
வளையமண்டிலப்பிறையெனநின்றதுவரிவில். (எ0)

பச்சிமத்தினுமுகத்தினுமருங்கினும்பகழி
உச்சிமுற்றியவெய்யவன்கதிரெனவுமிழக்
கச்சமுற்றவன்கைத்துணைக்கடுமையைக்காணு
அச்சமுற்றனர்கண்புதைத்தொடுங்கினரமரர். (எக)

மெய்யிற்பட்டனபடப்படாதனவெலாம்விலக்கித்
தெய்வப்பொற்கணைக்கத்துணைக்கத்துணைசெலுத்தி
ஐயற்காங்கிளங்கோளரியறிவிலானறைந்த
பொய்யிற்போம்படிபோக்கினன்கடிதினிற்புக்கான். (எ௨)

பிறகுநின்றனன்பெருந்தகையிளவலைப்பிரியான்
அறமிதன்றெனவரக்கன்மேற்சரந்துரந்தருளான்
இறவுகண்டிலரிருவருமொருவரையொருவார்
விறகின்வெந்தனவிசும்பிடைச்செறிந்தனவிசிகம். (எ௩)

மாடெரிந்தெழுந் திருவர் தங்கணைகளும்வழங்கக்
காடெரிந்தனகனவரையெரிந்தனகனக
வீடெரிந்தனவேலைகளெரிந்தனவிலங்கல்
ஊடெரிந்தனவூழியினெரிந்தனவுலகம். (எச)

படங்கொள்பாம்பணை துறந்தவற்கிளையவன்பகழி
விடங்கொள்வெள்ளத்தின்மேலனவருவனவிலக்கி
இடங்கரேறனவெறுழ்வலியரக்கன்றேரீர்க்கும்
மடங்கலையிருநூற்றையுங்கூற்றின்வாய்மடுத்தான். (எரு)

தேரழிந்திடச்சேமத்தேர்பிறிதிலன்செறிந்த
ஊரழிந்திடத்தனிநின்றகதிரவனொத்தான்
பாரழிந்ததுபுரமெனும்படியவான்பகையின்
சூரழிந்திடத்துரந்தனன்சுடுசரஞ்சொரிந்தான். (எசு)

அற்றதேர்மிசைநின்றுபோரங்கதனலங்கற்
கொற்றத்தோளினுமிலக்குவன்புயத்தினுங்குளிக்க
முற்றவெண்ணிலாமுரட்கணைதூர்த்தனன்முரட்போர்
ஒற்றைச்சங்கெடுத்துதினுலகெலாமுலைய. (எஎ)

சங்கமூதியதசமுகன்றனிமகன்றரித்த
கங்கமார்பெருங்கவசமுமிற்றுடன்கழல
வெங்கொடுங்கணையயிரண்டுருமெனவீசிச்
சிங்கவேறன்னவிலக்குவன்சிலையைநாணறிந்தான். (எஅ)

கண்டகார்முகில்வண்ணனுங்கமலக்கண்கலுழத்
துண்டவெண்பிறைநிலவெனமுறுவலுந்தோன்ற
அண்டமுண்டதன்வாயினலார்மினென்றருள
விண்டதண்டமென்றுலைந்திடவார்த்தனர்வீரர். (எகூ)

கண்ணிமைப்பதன்முன்புபோய்விசும்பிடைக்கரந்தான்
அண்ணன்மற்றவனுக்கைகண்டறிகிலனாகிப்
பண்ணவற்கிவன்பிழைக்குமேற்படுக்குநம்படையை
எண்ணமற்றிலையயன்படைதொடுப்பலென்றிசைத்தான். (அ0)

ஆன்றவன்னதுபுகறலுமறவனீமுனிந்தால்
ஈன்றவந்தணன்படைக்கலந்தொடுக்கவிவ்வுலக
மூன்றையுஞ்சுடுமொருவனுன்முடிகலதென்றுன்
சான்றவன்னதுதவிர்ந்தனனுணர்வுடைத்தம்பி. (அக)

74. ஊழியின் - பிரளயகாலத்திற்போல.

மறைந்துபோய்நின்றவஞ்சனுமவருடைமனத்தை
அறிந்துதெய்வவான்படைக்கலந்தொடுப்பதற்கமைந்தான்
பிறிந்துபோவதேகருமமிப்பொழுதெனப்பெயர்ந்தான்
செறிந்ததேவர்களாவலங்கொட்டினர்சிரித்தார். (௮௨)

செஞ்சரத்தொடுசெம்மழைவிசும்பின்மேற்செல்லா
மஞ்சன்மாமழையோவியமாமெனமாற
அஞ்சினனகன்றனெனவறிந்தனரார்த்தார்
வெஞ்சினந்தருகளிப்பினர்வானரவீரர். (௮௩)

உடைந்தவானரச்சேனையுமோதநீருவரி
அடைந்ததாமெனவந்திரைத்தார்த்தெழுந்தாடித்
தொடர்ந்துசென்றதுதோற்றவன்யாவர்க்குந்தோன்றாக்
கடைந்தவேலைபோற்கலங்குறுமிலங்கையைக்கலந்தான். (௮௪)

எற்கொணான்முகன்படைக்கலமிவரென்மேல்விடாமுன்
முற்கொள்வேனெனுமுயற்சியன்மறைமுறைமொழிந்த
சொற்கொள்வேள்விபோய்த்தொடங்குவானமைந்தவன்றுணிவை
மற்கொடோளவருணர்ந்திலரவன்றிறமறந்தார். (௮௫)

அனுமனங்கதன்றோளினின்றிழிந்தனராகித்
தனுவும்வெங்கணைப்புட்டிலுங்கவசமுந்தடக்கைக்
கினியகோதையுந்துறந்தனரிருந்தனரிமையோர்
பணிமலர்த்தொகைபொழிந்தனர்வாழ்த்தொலிபரப்பி. (௮௬)

ஆர்த்தசேனையினமலைபோய்விசும்பினையலைக்க
ஈர்த்ததேரொடுங்கடிதுசென்றனகன்றிரவி
தீர்த்தன்மேலவன்றிசைமுகன்படைக்கலஞ்செலுத்தப்
பார்க்கிலேன்முந்திப்படுவலென்பானெனப்பட்டான். (௮௭)

இரவுநன்பகலும்பெருநெடுஞ்செருவியற்றி
உரவுநம்படைமெலிந்துளதருந்துதற்குணவு
வரவுதாழ்த்ததுவீடணவல்லையினேகித்
தரவுவேண்டினெனென்றனன்தாமரைக்கண்ணன். (௮௮)

இன்னதேகடிதியற்றுவெனெனத்தொழுதெழுந்தான்
பொன்னின்மோலியன்வீடணன்றமரொடும்போனான்
கன்னலொன்றிலோர்காலினின்வேலையைக்கடந்தான்
அன்னவேலையினிராமனீதிளையவற்கறைந்தான். (௮௯)

---

83. செம்மழை - செந்நிறமான மேகம்போல. மஞ்சன் - வீரனாகிய இந்திரசித்து. 88. தாழ்த்தல் - தாமதித்தல்.

தெய்வவான்பெரும்படைகட்குவரன்முறைதிருந்து
மெய்கொள்பூசனையியற்றினம்விடுமிதுவிதியால்
அய்யநானிவையாற்றினன்வருவதோரளவும்
கைகொள்சேனையைக்காவெனப்போர்க்களங்கடந்தான். (௯0)

தந்தையைக்கண்டுபுகுந்துளதன்மையுந்தன்மேல்
முந்தைநான்முகன்படைக்கலந்தொடுக்குற்றமுறையும்
சிந்தையுட்புகச்செப்பினனனையவன்றிகைத்தான்
எந்தையென்னினிச்செயத்தக்கதிசையெனவிசைத்தான். (௯௧)

தன்னைக்கொல்வதுதுணிவரேற்றனக்கதுதகுமேல்
முன்னர்க்கொல்லியமுயல்கவென்றறிஞரேமொழிந்தார்
அன்னப்போரவரறிவரும்வகைமறைந்தயன்றன்
வென்னப்போர்ப்படைவிடுதலேநலமிதுவிதியால். (௯௨)

தொடுக்கின்றேனென்பதுணர்வரேலப்படைதொடுத்தே
தடுப்பர்காண்பரேற்கொல்லவும்வலத்தராத்தவத்தோர்
இடுக்கொன்றாகின்றதில்லைநல்வேள்வியையியற்றி
முடிப்பலன்னவர்வாழ்வையோர்கணத்தென்றுமுடித்தான். (௯௩)

என்னையன்னவர்மறந்தனர்நின்றிகலியற்றத்
துன்னுபோர்ப்படைமுடிவிலாதவர்வயிற்றூண்டிப்
பின்னைநின்றதுபுரிவலென்றனையவன்பேச
மன்னன்முன்னின்றமகோதரற்கிம்மொழிவழங்கும். (௯௪)

வெள்ளநூறுடைவெஞ்சினச்சேனையைவீர
அள்ளிலைப்படையகம்பனைமுதலியவரக்கர்
எள்ளிலெண்ணிலர்தம்மொடுவிரைந்தனையேகிக்
கொள்ளைவெஞ்செருவியற்றுதிமனிசரைக்குறுகி. (௯௫)

மாயையென்றனவல்லனயாவையும்வழங்கித்
தீயிருட்பெரும்பரப்பினைச்செறிவுறத்திருத்தி
நீயொருத்தனேயுலகொருமூன்றையுநிமிர்வாய்
போயுருத்தவருயிர்குடித்துதவெனப்புகன்றான். (௯௬)

என்றகாலையினென்றுகொலேவுவதென்று
நின்றவாளெயிற்றரக்கனுமுவகையினிமிர்ந்தான்
சென்றுதேர்மிசையேறினனிராக்கதர்செறிந்தார்
குன்றுசுற்றியமதகரிக்குலமன்னகுறியார். (௯௭)

95. எள்ளிலெண்ணினர் - கணக்கில்லாதவர்.

கோடிகோடி நூறுயிரமாயிரங்குறித்த
ஆடல்யானைகளணிதொறுமணிதொறுமமைத்த
ஓடுதேர்க்குலமுலப்பிலவோடிவந்துற்ற
கேடில்வாம்பரிகணக்கையுங்கடந்தனகிளர்ந்த. (௯௮)

படைக்கலங்களும்பருமணிப்பூண்களும்பகுவாய்
இடைக்கலந்தனவெயிற்றிளம்பிறைகளுமெறிப்பப்
புடைப்பரந்தனவெயில்களுநிலாக்களும்புரள
விடைக்குலங்கள்போலிராக்கதப்பதாதியுமிடைந்த. (௯௯)

கொடிக்குழாமியனகொழுந்தெடுத்தெழுந்துமேற்கொள்ள
இடிக்குழாமியனமழைப்பெருங்குலங்களையிரித்த
அடிக்குழாமியிடுமிடந்தொறும்பிதிர்ந்தெழுந்தார்த்த
பொடிக்குழாமியண்டம்படைத்தவன்கண்ணையும்புதைத்த. (௧௦௦)

ஆனையென்னுமாமலைகளினிழிதருமருவி
வானயாறுகள்வாசிவாய்நுரையொடுமயங்கிக்
கானமாமரங்கல்லொடுமீர்த்தனகடிதில்
போனபோதரும்பெருமையபுணரியுட்புக்க. (௧௦௧)

தடித்துமின்குலம்விசும்பிடைத்தயங்குவசலத்தின்
மடித்தவாயினர்வாளெயிற்றரக்கர்தம்வலத்தின்
பிடித்ததிண்படைவிதிர்த்திடவிதிர்த்திடப்பிறழ்ந்து
பொடித்தவெம்பொறிகொதித்துமேற்போவனபோன்ற. (௧௦௨)

சொன்னநூறுடைவெள்ளமன்றிராவணன்றுரந்த
அன்னசேனையைவாயினூடுமிழ்கின்றவமைதி
முன்னம்வேலையைமுழுவதுங்குடித்ததுமுரையீ
தென்னமீட்டுமிழ்குறுமுனியொத்ததவ்விலங்கை. (௧௦௩)

சங்கபேரியுங்காளமுந்தாளமுந்தலைவர்
சிங்கநாதமுஞ்சிலையினொலிகளுஞ்சினமாப்
பொங்குமோதையும்புரவியின்றொதையும்பொலிதேர்
வெங்கணோலமுமாலெனவிழுங்கியவுலகை. (௧௦௪)

புக்கதாற்பெரும்போர்ப்படைப்பறந்தலைப்புறத்தில்
தொக்கதானெடுவானரத்தானையுந்துவன்றி
ஒக்கவார்த்தனவுருக்கினதெழித்தனவுருமின்
மிக்கவான்படைவிடுகணைமாமலைவிலக்கி. (௧௦௫)

103. குறுமுனி - அகத்தியன்.

குன்றுகோடியுங்கோடிமேற்கோடியுங்குறித்த
வென்றிவானரவீரர்கண்முகந்தொறும்விலங்கல்
ஒன்றிமூல்வருமைவருமிராக்கதருலந்தார்
பொன்றிவீழ்ந்தனபொருகரிபாய்பரிபொலந்தேர். (௧0௬)

மழுவுஞ்சூலமும்வலயமுநாஞ்சிலும்வாளும்
எழுவுமீட்டியுந்தோட்டியுமெழுமுளைத்தண்டும்
கழுவும்வேலொடுகணையமும்பகழியுங்காத்த
குழுவினோடுபட்டொருண்டனவானரக்குலங்கள். (௧0௭)

முற்காங்களுமுசலமுமுசுண்டியுமுளையும்
சக்கரங்களும்பிண்டிபாலத்தொடுதண்டும்
கற்பணங்களுங்கணையமுங்கவண்விடுகல்லும்
வெற்பினங்களைநுறுக்கினகவிகளைவீழ்த்த. (௧0௮)

கதிரயிற்படைக்கலம்வரன்முறைமுறைகடாவ
அதிர்பிணப்பெருங்குன்றுகள்படப்படவழிந்த
உதிரமுற்றபேராறுகடிசைத்திசையோட
எதிர்நடக்கிலகவிக்குலமரக்கருமியங்கார். (௧0௯)

யாவராங்கிகல்வானரராயினரெவரும்
தேவராகலினவரொடும்விசும்பிடைத்திரிந்தார்
மேவுகாதலின்மெலிவுறுமரம்பையர்விரும்பி
ஆவியொன்றிடவிழைவினர்பிரிவுநோயகன்றார். (௧௧0)

கரக்குமாயமும்வஞ்சமுங்களவுமேகடனு
இரக்கமேமுதற்றருமந்திறனிக்கென்றுமிழியா
அரக்கரைப்பெருந்தேவர்களாக்கினவமலன்
சரத்தின்மேலினிப்பவித்திரமுளவெனத்தகுமே. (௧௧௧)

அந்தகன்பெரும்படைக்கலமந்திரத்தமைந்தான்
இந்துவெள்ளெயிற்றரக்கரும்யானையுந்தேரும்
வந்தவந்தனவானகமிடம்பெறுவண்ணம்
சிந்தினன்சரமிலக்குவன்முகந்தொறுந்திரிந்தான். (௧௧௨)

கும்பகன்னனுண்டிட்டதுவயிரவான்குன்றின்
வெம்புவெஞ்சுடர்விரிப்பதுதேவரைமேனாள்
தும்பையின்றலைதூரந்ததுசுடர்மணித்தண்டொன்
றிம்பர்ஞாலத்தைநெளிப்பதுமாருதியெடுத்தான். (௧௧௩)

112. முகந்தொறும் - திசைதொறும்.

வேறு.

காற்றன்றிதுகனலன்றெனவிமையோரிடைகாணு
ஏற்றங்கடுவிசையோடுயர்கொலைநீடியவியல்பால்
சீற்றந்தனியுருவாயிடைதேறாததொர்மாறாய்க்
கூற்றங்கொடுமுனைவநதெனக்கொன்றானிகனின்றான். (௧௪௧)

வெங்கண்மதமலைமேல்விரைபரிமேல்விடுதேர்மேல்
சங்கந்தருபடைவீரர்களுடன்மேலவர்தலைமேல்
எங்குமுளனொருவன்னெதிர்த்திருநான்மறைதெரிக்கும்
செங்கண்ணவனிவனேயெனத்திரிந்தான்கலைதெரிந்தான். (௧௧௫)

கிளர்ந்தாரையுங்கிடைத்தாரையுங்கிழித்தான்கனல்விழித்தான்
களந்தானொருகுழம்பாம்வகையரைத்தானுருக்கரைத்தான்
வளர்ந்தானிலையுணர்ந்தாருலகொருமூன்றையும்வலத்தால்
அளந்தான்முனமிவனேயெனவிமையோர்களுமயிர்த்தார். (௧௧௬)

மத்தக்கரிநெடுமத்தகம்வகிர்பட்டுகமணிமேல்
முத்திற்பொலிமுழுமேனியன்முகில்விண்டொடுமெய்யான்
ஒத்தக்கடையுகமுற்றுழியுறுகால்பொரவுடுமீன்
தொத்தப்பொலிகனகக்கிரிவெயில்சுற்றியதொத்தான். (௧௧௭)

இடித்தானிலம்விசும்போடெனவிட்டானடியெழுந்தான்
பொடித்தான்கடற்பெருஞ்சேனையைப்பொலந்தண்டுதன்வலத்தால்
பிடித்தான்மதகரிதேர்முதற்பிழம்பானவைகுழம்பா
அடித்தானுயிர்குடித்தானெடுத்தார்த்தான்பகைதீர்த்தான். (௧௧௮)

நூறாயிரமதமால்கரியொருநாழிகைநுவல்போ
தாறாய்நெடுங்கடுஞ்சோரியினளறாம்வகையரைப்பான்
ஏறாயிரமெனலாயெழுவயவீரரையிடறித்
தேறாதுறுகொலைமேவியதிசையானையிற்றிரிந்தான். (௧௧௯)

தேரேறினர்பரியேறினர்விடையேறினர்சினவெங்
காரேறினர்மழையேறினர்கலையேறினர்பலவெம்
போரேறினர்புகழேறினர்புகுந்தார்புடைவளைந்தார்
நேரேறினர்விசும்பேறிடநெரித்தான்கதைதிரித்தான். (௧௨௦)

வேறு.

அரிகுலமன்னனீலனங்கதன்குமுதன்சாம்பன்
பருவலிப்பனசனென்றிப்படைத்தலைவீரர்யாரும்

118. மதகரி - மும்மதங் கொண்டயானை.

பொருசினந்திருகிவெற்றிப்போர்க்களமருங்கிற்புக்கார்
ஒருவரையொருவர்காணுருயர்படைக்கடலினுள்ளார். (கஉக)

தொகும்படையரக்கர்வெள்ளந்துறைதுறையள்ளத்தூவி
நகும்படைத்தலைவர்கொல்லுநரசிங்கநடந்ததென்ன
மிகும்படைக்கடலுட்செல்லுமாருதிவீரவாழ்க்கை
அகம்பனைக்கிடைத்தான்றண்டாலரக்கரையரைக்குங்கையான். ()

மலைப்பெருங்கழுதையைஞ்ஞூற்றிரட்டியான்மனத்திற்செல்லும்
தலைத்தடங்தேரான்வில்லன்றுருகனென்னுந்தன்மைக்
கொலைத்தொழிலவணன்பின்னையிராக்கதவேடங்கொண்டான்
சிலைத்தொழிற்குமரன்கொல்லத் தொல்லைநாட்செருவிற்றீர்ந்தான்.

பாகசாதனனுமற்றைப்பகையடுந்திகிரிபற்றும்
ஏகசாதனனுமூன்றுபுரமும்பண்டெரித்துளோனும்
போகதாமொருவர்பற்றிக்குரங்கொடுபொரக்கற்றுரே
ஆககூற்றுவியுண்பதிதனின்மேற்றுகுமென்றுன். (கஉச)

யான்றடேனென்னின்மற்றிவ்வெழுதிரைவளாகமென்னும்
வான்றடாதரக்கனென்னும்பெயரையுமாய்க்குமென்று
ஊன்றடாநின்றவாளிமழைதுறந்துருத்துச்சென்றுன்
மீன்றொடாநின்றதிண்டோளனுமனும்விரைவின்வந்தான். (கஉரு)

தேரொடுகளிறுமாவுமரக்கருநெருக்கித்தெற்றிக்
காரொடுகனலுங்காலுங்கிளர்ந்ததோர்காலமென்ன
வாரொடுதொடர்ந்தபைம்பொற்கழலினுன்வருதலோடும்
சூரொடுந்தொடர்ந்ததண்டைச்சுழற்றினுன்வயிரத்தோளான். ()

எற்றினவெறிந்தவெல்லையெய்தினவெய்தபெய்த
முற்றினபடைகள்யாவுமுறைமுறைமுறிந்துசிந்தச்
சுற்றினவயிரத்தண்டாற்றுகைத்தனனமரர்துள்ளக்
கற்றிலனின்றுகற்றுன்கதையினுல்வதையின்கல்வி. (கஉஎ)

அகம்பனும்காணக்காணவைவிருகோடிகைம்மா
முகம்பையில்கலினப்பாய்மாமுளையெயிற்றிட்டமூரி
நுகம்பயிறேரினேடுநுறுக்கினனூழிதீர்த்தான்
உகம்பெயரூழிக்காற்றினுலைவிலாமேருவொப்பான். (கஉஅ)

படுகளப்பரப்பைநோக்கிப்பாழிவாயதுக்கிநூழிற்
சுடுகிளர்புகைவெங்கண்ணிற்றேன்றிடக்கொடித்தேர்தூண்டி

விடுகணைப்படலைமாரிமழையினுமும்மைவீசி
முடுகுறச்சென்றுகுன்றின்முட்டினான்முகிலினார்ப்பான். (௧௨௯)

சொரிந்தனபகழிமாரிதோளினுமார்பின்மேலும்
தெரிந்தனவசனிபோல்வசெறிபொறிபிதிர்வதிக்கின்
வரிந்தனவெருவைமானச்சிறைகளாலமரர்மார்பை
அரிந்தனவடிம்புபொன்கொண்டமைந்தனவாகுங்கண்ண. (௧௩௦)

மார்பினுந்தோளின்மேலும்வாளிவாய்மடுத்தவாயில்
சோர்பெருங்குருதிசோரத்துளங்குவான்றேருமுன்னம்
தேரிரண்டருகும்பூண்டகழுதையுமச்சுஞ்சிந்தச்
சாரதிபுரளவீரத்தண்டினாற்கண்டஞ்செய்தான். (௧௩௧)

வில்லினாலிவனைவெல்வதரிதெனநிருதன்வெய்ய
மல்லினாலியன்றதோளின்வலியினால்வானத்தச்சன்
கொல்லினாலமைத்ததாண்டோர்கொடுமுனைத்தண்டுகொண்டான்
அல்லினால்வகுத்ததன்னமேனியான்கடலினார்ப்பான். (௧௩௨)

இன்றிவன்றன்னைவிண்ணாட்டேற்றிவாளிலங்கைவேந்தை
வென்றியனாக்கிமற்றைமனிசரைவெறியராக்கி
நின்றுயர்கொடியதுன்பமமரர்பாணிறுப்பலென்னாச்
சென்றனனரக்கனன்றுவருகெனவனுமன்சேர்ந்தான். (௧௩௩)

தாக்கினாரிடத்துமற்றும்வலத்தினுந்திரிந்தார்சாரி
ஓக்கினாரூழினார்ப்புக்கொட்டினார்கிட்டினார்கீழ்த்
தூக்கினார்சுழற்றிமேன்மேற்சுற்றினாரெற்றிவெற்றி
நீக்கினார்நெருக்கினார்போய்நீங்கினாரேங்கினார்மேல். (௧௩௪)

தட்டினார்தழுவினார்மேற்றாவினார்தரையினோடும்
கிட்டினார்கிடைத்தார்வீசிப்புடைத்தனவகீழுமேலும்
கட்டினார்காத்தாரொன்றுங்காண்கிலாரிறவுகண்ணுற்
றொட்டினார்மாதிவட்டமோடினாராதிபோனார். (௧௩௫)

மையொடுபகைத்துநின்றநிறத்தினான்வயிரமார்பில்
பொய்யொடுபகைத்துநின்றகுணத்தினான்புகுந்துமோத
வெய்யவனதனைத்தண்டால்விலக்கினான்விலக்கலோடும்
கையொடுமிற்றுமற்றைக்கதைகளங்கண்டதன்றே. (௧௩௬)

---

130. அசனிபோல்வசெறிபொறிபிதிர்வதிக்கின் - இடிபோன்ற ஓசையுடன் நெருங்கிய தீப்பொறிகளைத் திசைகடோறுங் கக்குவன.

132. வானத்தச்சன் - விச்சுவகருமன்.

கையொடுதண்டுநீங்கக்கடலெனக்கலக்கமுற்ற
மெய்யொடுநின்றவெய்யோன்மிடலுடையிடக்கையோச்சி
ஐயனையலங்கலாகத்தடித்தனனடித்தலோடும்
ஒய்யெனவயிரக்குன்றத்துருமினேறிடித்ததொத்த. (௧௩௭)

அடித்தவன்றன்னைநோக்கியசனியேறனையதண்டு
பிடித்துநின்றேயுமெற்றான்வெறுங்கையான்பிழையிற்றென்னா
மடித்துவாயிடத்தகையான்மார்பிடைக்குத்தவாயால்
குடித்துநின்றுமிழ்வானென்னக்கக்கினன்குருதிக்கொள்ளை. (௧௩௮)

மீட்டுமக்கையால்வீசிச்செவித்தலத்தெற்றிவீழ்ந்தான்
கூட்டினானுயிரைவிண்ணோர்குழாத்திடையரக்கர்கூட்டம்
காட்டில்வாழ்விலங்குமாக்கள்கோளரிகண்டவென்ன
ஈட்டமுற்றெதிர்ந்தவெல்லாமிரிந்தனதிசைகளெங்கும். (௧௩௯)

மாண்டனனகம்பன்மண்மேன்மடிந்தனநிருதர்சேனை
மீண்டனர்குரக்குவீரர்விழுந்தனசினக்கைவேழம்
தூண்டினகொடித்தேரற்றுத்துணிந்தனதொடுத்தவாசி
ஆண்டகையிளையவீரனடுசிலைபொழியுமம்பால். (௧௪௦)

ஆர்க்கின்றகுரலுங்கேளானிலக்குவனசனியேற்றைப்
போர்க்கின்றசிலையினாணின்பேரொலிகேளான்வீரர்
யார்க்கின்னதுற்றதென்பதுணர்ந்திலனிசைப்போரில்லைப்
போர்க்குன்றமனையதோளானினையதோர்பொருமலுற்றான். (௧௪௧)

வீசினநிருதர்சேனைவேலையிற்றென்மேற்றிக்கின்
யோசனையேழுசென்றானங்கதனதனுக்கப்பால்
ஆசையினிரட்டிசென்றானரிகுலத்தரசனப்பால்
ஈசனுக்கிளையவீரனிரட்டிக்குமிரட்டிசென்றான். (௧௪௨)

மற்றையோர்நாலுமைந்தும்யோசனைமலைந்துபுக்கார்
கொற்றமாருதியும்வள்ளலிலக்குவனின்றுகொற்றம்
முற்றினனிரண்டுமூன்றுகாவதமொழியப்பின்னும்
சுற்றியசேனைநீர்மேற்பாசிபோன்மிடையுந்துன்னி. (௧௪௩)

இளையவனின்றசூழலெய்துவென்விரைவினென்றோர்
உளைவுவந்துள்ளத்தூண்டவூழிவெங்காலிற்செல்வான்
களைவருந்துன்பநீங்கக்கண்டனனென்பமன்னோ
விளைவனசெருவிற்பல்வேறாயினகுறிகண்மேய. (௧௪௪)

ஆனையின்கோடும்பீலித் தழைகளுமாரத்தோடு
மானமாமணியும்பொன்னுமுத்தமுங்கொழித்துவாரி
மீனெனவங்குமிங்கும்படைக்கலமிளிரவீசும்
பேனவெண்குடையவாயகுருதிப்பேராறுகண்டான். (கசரு)

ஆசைகடோறுஞ்சுற்றியலைக்கின்றவரக்கர்தம்மேல்
வீசினபகழிபற்றத்தலையொடும்விசும்பைமுட்டி
ஓசையினுலகமெங்குமுதிர்வுறவூழிநாளில்
காசறுகல்லின்மாரிபொழிவபோல்விழுவகண்டான். (கசசு)

மானவேலரக்கர்விட்டபடைக்கலம்வானமாரி
ஆனவன்பகழிசிந்தத்திசைதொறும்பொறியோடற்ற
மீனினம்விசும்பினின்றுமிருளுகவீழ்வபோலக்
கானகந்தொடர்ந்ததீயிற்சுடுவனபலவுங்கண்டான். (கசஎ)

அருளுடைக்குரிசில்வாளியந்தரமெங்குந்தாமாய்த்
தெருளுறத்தொடர்நதுவீசிச்செல்வனதேவர்காண
இருளுடைச்சுடலையாடுமெண்புயத்தண்ணல்வண்ணச்
சுருளுடைச்சடையினகற்றைச்சுற்றெனச்சுடர்வகண்டான். (கசஅ)

நெய்யுறக்கொளுத்தப்பட்டநெருப்பெனப்பொருப்பினோங்கும்
மெய்யுறக்குருதித்தாரைவிசும்புறவிளங்குகின்ற
ஐயனிக்கங்குன்மாலையரசெனவறிந்துகாலம்
கைவிளக்கெடுத்ததென்னக்கவந்தத்தின்காடுகண்டான். (கசகூ)

ஆளெலாமழிந்ததேருமானையுமாடன்மாவும்
நாளெலாமெண்ணினாலுந்தொலைவிலாநாதரின்றித்
தாளெலாங்குலையவோடித்திரிவனதாங்கலாற்றும்
கோளிலாமன்னனாட்டிற்குடியெனக்குலைவகண்டான். (கருo)

மிடல்கொளும்பகழிமாரிவானினுமும்மைவீசி
மடல்கொளுமலங்கன்மார்பன்மலைந்திடவுலைந்துமாண்டார்
உடல்களுமுதிரநீருமுடைப்படைக்கலமுமுற்ற
கடல்களுநெடியகானுங்கார்தவழ்மலையுங்கண்டான். (கருக)

சுழித்தெறியூழிக்காலிற்றுருவினன்றொடருந்தோன்றல்
தழிக்கொடுகுருதிவேலைதாவுவான்றனிப்பேரண்டம்
கிழித்ததுகிழித்ததென்னுநாணுருமேறுகேட்டான்
அழித்தொழிகாலத்தார்க்குமார்கலிக்கிரட்டியார்த்தான். (கருஉ)

145. பேனம் - நுரை. 148. சுடலை - சர்வசம்மார மயானம்.

ஆர்த்தபேரமலேகேளாவனுகினனுமனெல்லார்
வார்த்தையுங்கேட்கலாகுமென்றகமகிழ்ந்துவள்ளல்
பார்ப்பதன்முன்னம்வந்துவணங்கினன்விசயப்பாவை
தூர்த்தனேயிளேயவீரன்றழுவினனிளேயசொன்னுன். (கருங)

அரிகுலவீரரையயாண்டையாருக்கன்மைந்தன்
பிரிவுனேச்செய்தெவ்வாறங்கதன்பெயர்ந்ததெங்கே
விரியிருட்பரவைச்சேனேவெள்ளத்துவிளேந்தொன்றும்
தெரிகிலெனுரைத்தியென்முன்சென்னிமேற்கையன்சொன்னுன்.

போயினூர்போயவாறுபோயினதன்றிப்போரில்
ஆயினூரயதொன்றுமறிந்திலெனேயயாரும்
மேயினூர்மேயபோதேதெரிவதுவிளேந்ததென்முன்
தாயினுன்வேலேயோடுமயிந்திரப்பரவைதானே. (கருரு)

மந்திரமுளதாலேயவுணர்வுறுமாலேத்தகைதுன்
சிந்தையினுணர்ந்துசெய்யற்பாற்றெனிற்செய்திதெவ்வர்
தந்திரமிதனேத்தெய்வப்படையிறைச்சமைப்பினல்லால்
எந்தைநின்னடியர்யாருமெய்தலர்நின்னேயென்முன். (கருசு)

அன்னதுபுரிவெனென்னுவாயிரநாமத்தண்ணல்
தன்னேயேவணங்கிவாழ்த்திச்சரங்களேத்தெரிந்துதாங்கிப்
பொன்மலேவில்லினுன்றன்படைக்கலம்பொருந்தவேந்தி
மின்னெயிற்றரக்கர்தம்மேல்வீசினுன்வில்லின்செல்வன். (கருஎ)

முக்கணுன்படையைமூட்டிவிடுதலுமூங்கிற்காட்டில்
புக்கதோரூழித்தீயிற்புறத்திரேருருவம்போகா
தக்கணத்தெரிந்துவீழ்ந்ததரக்கர்தஞ்சேனையாழித்
திக்கெலாமிருளுந்தீர்ந்ததேவருமயக்கந்தீர்ந்தார். (கருஅ)

தேவர்தம்படையைவிட்டானென்பதுசிந்தைசெய்யா
மாவருமாயைநீங்கமகோதரன்மறையப்போனுன்
யாவருமிரிந்தாரெல்லாமினமழைகழியவார்த்துக்
கோவிளங்களிற்றைவந்துகூடினூராடல்கொண்டார். (கருகூ)

யாவர்க்குந்தீதிலாமைகண்டுகண்டுவகையேறத்
தேவர்க்குந்தேவன்றம்பிதிருமனத்தையந்தீர்ந்தான்

155. அயிந்திரம் - ஐந்திரமென்னும் இலக்கணநூல்.

காவற்போர்க்குரக்குச்சேனைகல்லெனக்கலந்துபுல்லப்
பூவர்க்கமிமையோர்தூவப்பொலிந்தனர்தூதர்போனார். (௧௬௦)

இலங்கையர்கோனையெய்தியெய்தியதுரைத்தார்நீவிர்
விலங்கினிர்போலும்வெள்ளநூற்றையோர்வில்லின்வேழக்
குலங்களினோடுங்கொல்லக்கூடுமோவென்னக்கொன்றை
அலங்கலான்படையினென்றானனதேலாகுமென்றான். (௧௬௧)

தோடவிழலங்கலென்செய்க்குணர்த்துமினென்னச்சொன்னான்
ஓடினார்சாரர்வல்லையுணர்த்தினர்துணுக்கமெய்தா
ஆடவர்திலகன்யாண்டையானிகலநுமனேனோர்
வீடணன்யாங்கணுள்ளாருணர்த்துமின்விரைவினென்றான். (௧௬௨)

வந்திலனிராமன்வேறோர்மலையுளானுந்தைமாயம்
தந்தனதீர்வான்போனானுண்பனதாழ்ப்பத்தாழா
எந்தையிதயன்றதென்னமகோதரன்யாண்டையென்ன
அந்தரத்திடையானென்னவிராவணியழகிற்றென்றான். (௧௬௩)

வேறு.

காலமீதெனக்கருதியவிராவணன்காதல்
ஆலமாமரனொன்றினைவிரைவினினடைந்தான்
மூலவேள்விக்குவேண்டுவகலப்பைகண்முறையால்
கூலநீங்கியவிராக்கதப்பூசுரர்கொணர்ந்தார். (௧௬௪)

அம்பினாற்பெருஞ்சமிதைகளமைத்தனரனலில்
தும்பைமாமலர்தூவினர்காரியெட்சொரிந்தார்
கொம்புபல்லொடுகரியவெள்ளாட்டிருங்குருதி
வெம்புவெந்தசைமுறையினிட்டெண்ணெயால்வேட்டார். (௧௬௫)

வலஞ்சுழித்துவந்தெழுந்தெரிநறுவெறிவயங்கி
நலஞ்சுரந்தனபெருங்குறிமுறைமையினல்கக்
குலஞ்சுரந்தெழுகொடுமையான்முறையினிற்கொண்டே
நிலஞ்சுரந்தெழுவென்றியென்றும்பரினிமிர்ந்தான். (௧௬௬)

விசும்புபோயினன்மாயையின்பெருமையான்மேலைப்
பசும்பொனாட்டவர்நாட்டமுமுள்ளமும்படரா
அசும்புவிண்ணிடையடங்கினன்முனிவருமறியார்
தசும்புநுண்ணெடுங்கோளொடுகாலமுஞ்சார. (௧௬௭)

அனையனின்றனனவ்வழிமகோதரனறிந்தோர்
வினையமெண்ணினனிந்திரவேடத்தைமேவித்

160. பூவர்க்கம் - பூவின்வகை.

துணைவலத்தவைராவதத்தெருத்தின்மேற்றோன்றி
முனைவர்வானவரவரொடும்போர்செயமூண்டான். (௧௬௮)

அரக்கர்மானுடர்குரங்கெனுமவையெலாமல்ல
உருக்கள்யாவுளவுயிரினியுலகத்தினுழல்வ
தருக்குபோர்க்குடன்வந்துளவாமெனச்சமைத்தான்
வெருக்கொளப்பெருங்கவிப்படைசூலந்தனுவிலங்கி. (௧௬௯)

கோடுநான்குடைப்பாணிறக்குன்றமேற்கொண்டான்
ஆடலிந்திரனல்லவர்யாவருமமரர்
சேடர்சிந்தனைமுனிவர்களமர்பொரச்சீறி
ஊடுவந்துற்றதென்கொலோவெனவுலைந்தார். (௧௭௦)

அனுமன்வாண்முகநோக்கினனூழியையகற்றித்
தனுவலங்கொண்டதாமரைக்கண்ணவன்றம்பி
முனிவர்வானவர்முனிந்துவந்தெதய்தயாமுயன்ற
துனியிதென்கொலோசொல்லுதிவிரைந்தெனச்சொன்னான். (௧௭௧)

இன்னகாலையினிலக்குவன்மேனிமேலெய்தான்
முன்னைநான்முகன்படைக்கலமிமைப்பதன்முன்னம்
பொன்னின்மால்வரைக்குரீஇயினமொய்த்ததுபோலப்
பன்னலாந்தரமல்லனசுடர்க்கணைபாய்ந்த. (௧௭௨)

கோடிகோடிநூறாயிரங்கொடுங்கணைக்குழாங்கள்
மூடிமேனியைமுற்றுறச்சுற்றினமூழ்க
ஊடுசெய்வதொன்றுணர்ந்திலனுணர்வுபுக்கொடுங்க
ஆடன்மாகரிசேவகமமைந்தெனவசைந்தான். (௧௭௩)

அனுமனிந்திரன்வந்தவனேகொலிதமைந்தான்
இனியனேற்றுவென்களிற்றினேயெடுத்தெனவெழுந்தான்
தனுமனுயிரகோடிவெங்கடுங்கணைதைக்க
நினைவுஞ்செய்கையுமறந்துபோய்நெடுநிலஞ்சேர்ந்தான். (௧௭௪)

அருக்கன்மாமகனுடகக்குன்றமொன்றலர்ந்த
முருக்கின்கானகமாமெனக்குருதிநீர்முடுகத்
தருக்கின்வெஞ்சரந்தலைத்தலைமயங்கினதைக்க
உருக்குசெம்பெனக்கண்ணினனெடுநிலமுற்றான். (௧௭௫)

அங்கதன்பதினாயிரமயிற்கணையழுந்தச்
சிங்கவேறிடியுண்டெனநெடுநிலஞ்சேர்ந்தான்

170. பாணிறக்குன்றம் - வெள்ளை யானை.

சங்கமேறியபெரும்புகழ்ச்சாம்பனுஞ்சாய்ந்தான்
துங்கமார்பையுந்தோளையும்வடிக்கணைதொலைக்க. (௧௭௬)

நீலனுயிரம்வடிக்கணைநிறம்புக்குநெருங்கக்
காலனூர்முகங்கண்டனனிடபன்விண்கலந்தான்
ஆலமேயன்னபகழியாற்பனசனுமசைந்தான்
கோலின்மேவியகூற்றினூற்குமுதனுங்குலைந்தான். (௧௭௭)

வேலைதட்டவனுயிரம்பகழியால்வீழ்ந்தான்
வாலிநேர்வலிமயிந்தனிந்துமிந்தனுமடிந்தார்
காலவெந்தொழிற்கவயனும்வானகங்கண்டான்
மாலைவாளியிற்கேசரிமண்ணிடைமறைந்தான். (௧௭௮)

விந்தமன்னதோட்சதவலிசுசேடணன்வினதன்
கெந்தமாதனிடும்பன்வன்றதிமுகன்கிளர
உந்துவார்கணைகோடிதம்முடலமுற்றொளிப்பத்
தந்தநல்லுணர்வொடுங்கினர்மண்ணுறச்சாய்ந்தார். (௧௭௯)

மற்றைவீரர்கள்யாவரும்வடிக்கணைமழையால்
முற்றும்வீந்தனர்முழங்குபேருதிரத்திரன்முந்நீர்
எற்றுவான்றிரைக்கடலொடும்பொருதுசென்றேற
ஒற்றைவான்கணையாயிரங்குரங்கினையுருட்ட. (௧௮௦)

தளைத்துவைத்ததுசதுமுகன்பெரும்படைதள்ளி
ஒளிக்கமற்றொருபுகலிடமுணர்கிலருமின்
வளைத்துவித்தியவாளியான்மண்ணொடுந்திண்ண
முளைப்புடைத்தனவொத்தனவானரமுடிந்த. (௧௮௧)

குவளைக்கண்ணிணைவானவர்மடந்தையர்கோட்டித்
துவளப்பாரிடைக்கிடந்தனர்குருதிநீர்சுற்றித்
திவளக்கீழொடுமேல்புடைபரந்திடைசெறியப்
பவளக்காடுடைப்பாற்கடலொத்ததப்பரவை. (௧௮௨)

விண்ணிற்சென்றதுகவிக்குலப்பெரும்படைவெள்ளம்
கண்ணிற்கண்டனர்வானவர்விருந்தெனக்கலந்தார்
உண்ணிற்கும்பெருங்களிப்பினராளவளாயுகந்தார்
மண்ணிற்செல்லுதிரிக்கணத்தேதெயெனவலித்தார். (௧௮௩)

---

176. சங்கம் - கூட்டம்.

பார்படைத்தவன்படைக்கொருபூசனைபடைத்தீர்
நீர்படக்கடவீரலீர்வரிசிலைநெடியோன்
பேர்படைத்தவர்க்கடியவர்க்கடியரும்பெறுவார்
வேர்படைத்தவெம்பிறவியாற்றுவக்குறுவீடு. (க௮௪)

நங்கள்காரியமியற்றுவானுலகிடைநடந்தீர்
உங்களாருயிரும்முயிருடல்பிறிதுற்றீர்
செங்கணாயகற்காகவெங்களத்திடைத்தீர்ந்தீர்
எங்கணாயகர்நீர்களென்றிமையவரிசைத்தார். (க௮௫)

வெங்கண்வானரக்குழுவொடுமிளையவன்விளிந்தான்
இங்குவந்திலனகன்றனனிராமனென்றிகழ்ந்தான்
சங்கமூதினன்றூதையைவல்லையிற்சார்ந்தான்
பொங்குபோரிடைப்புகுந்துளபொருளெலாம்புகன்றான். (க௮௬)

இறந்திலன்கொலவ்விராமனென்றிராவணனிசைத்தான்
துறந்துநீங்கினனல்லனேற்றம்பியைத்தொலைத்துச்
சிறந்தநண்பரைக்கொன்றுதன்சேனையைச்சிதைக்க
மறந்துநிற்குமேமற்றவன்றிறனெனாமன்மதலை. (க௮௭)

அன்னதேயெனவரக்கனுமாதரித்தமைந்தான்
சொன்னமைந்தனுநதன்பெருநகோயிலைச்சூழ்ந்தான்
மன்னவனேவலின்மகோதரன்போயினன்வந்தான்
என்னையாளுடைநாயகன்வேறிடத்திருந்தான். (க௮௮)

செய்யதாமரைநாண்மலர்க்கைத்தலஞ்சேப்பத்
துய்யதேவர்தம்படைக்கெலாம்வரன்முறைதுரக்கும்
மெய்கொள்பூசனைவிதிமுறையியற்றிமேல்வீரன்
மொய்கொள்போர்க்களத்தெய்துவாமினியெனமுயன்றான். (க௮௯)

கொள்ளியிற்சுடரனலிதன்பகழிகைக்கொண்டான்
அள்ளிநுங்கலாமாரிருட்பிழம்பினையழித்தான்
வெள்ளிவெங்களப்பரப்பினிற்பொருக்கெனவிழித்தான்
தள்ளிருமரைச்சேவடிநுடங்குறச்சார்நதான். (க௯௦)

நோக்கினான்பெருந்திசைதொறுமுறைமுறைநோக்கி
ஊக்கினான்றடந்தாமரைத்திருமுகத்துதிரம்

---

184. நீர்படக்கடவீரலீர் - நீர்சாகக்கடவீரல்லீர்.
பேர்படைத்தவர்க்கு - இராமனென்னும் பெயர்வாய்த்தவருக்கு.

போக்கினானிணைப்பங்கயத்தழுவத்துட்புக்கான்
காக்கும்வன்றுணைத்தலைவரைத்தனித்தனிக்கண்டான். (௧௯௧)

சுக்கிரீவனைநோக்கித்தன்றாமரைத்துணைக்கண்
உக்கநீர்த்திரளொழுகிடநெடிதுநின்றுயிர்த்தான்
தக்கதோவிதுநினக்கென்றுதனிமனந்தளர்ந்தான்
பக்கநோக்கினன்மாருதிதன்மையைப்பார்த்தான். (௧௯௨)

கடர்கடந்துபுக்கரக்கரைக்கருவொடுங்கலக்கி
இடர்கடந்துநாணிருக்கநீநல்கியதிதற்கோ
உடர்கடந்தனவோவுன்னையரக்கன்வில்லுதைத்த
அடர்கடந்தபோர்வாளியென்றாகுலித்தழுதான். (௧௯௩)

முன்னைத்தேவர்தம்வரங்களுமுனிவர்தம்மொழியும்
பின்னைச்சானகியுதவியும்பிழைத்தனபிறந்த
புன்மைச்செய்தொழிலென்வினைக்கொடுமையாற்புகழோய்
என்னைப்போல்பவராருளரொருவரென்றிசைத்தான். (௧௯௪)

புன்றொழிற்புலையரசினைவெஃகியென்பூண்டேன்
கொன்றொருக்கினேனெந்தையைச்சடாயுவைக்குறைத்தேன்
இன்றொருக்கினேனித்தனைவீரரையிருந்தேன்
வன்றொழிற்கொருவரம்புமுண்டாய்வரவற்றோ. (௧௯௫)

தமையனைக்கொன்றுதம்பிக்குவானரத்தலைமை
அமையநல்கினனடங்கலுமவிப்பதற்கமைந்தேன்
கமைபிடித்துநின்றுங்களையித்துணைகண்டேன்
சுமையுடற்பொறைசுமக்கவந்தனெனெனச்சொன்னான். (௧௯௬)

விடைக்குலங்களினடுவணோர்விடைகிடந்தென்னக்
கடைக்கண்டீயுகவங்கதக்களிற்றினைக்கண்டான்
படைக்கலங்களைச்சுமக்கின்றபதகனேன்பழிபார்த்
தடைக்கலப்பொருள்காத்தவாறழகிதென்றழுதான். (௧௯௭)

உடரிடைத்தொடர்பகழியினொளிர்கதிர்க்கற்றைச்
சுடருடைப்பெருங்குருதியிற்பாம்பெனச்சுமந்த
மிடருடைப்பணமீமிசைத்தான்பண்டைவெள்ளக்
கடரிடைத்துயில்வானன்னதம்பியைக்கண்டான். (௧௯௮)

---

195. புன்றொழிற் புலையரசு - அற்பத்தில் அற்பமாகிய அரசு.

198. பணம் - படம், ஆதிசேடன்.

பொருமினானகம்பொங்கினானுயிர்முற்றும்புகைந்தான்
குருமணித்திருமேனியுமன்னவாகுலைந்தான்
தருமநின்றுதன்கண்புடைத்தலம்வரச்சாய்ந்தான்
உருமினாலிடியுண்டதோர்மராமரமொத்தான். (௧௯௯)

உயிர்த்திலன்னொருநாழிகையுணர்ந்திலனொன்றும்
வியர்த்திலனுடல்விழித்திலன்கண்ணிணைவிண்ணோர்
அயிர்த்திலன்கொலென்றஞ்சினரங்கையுந்தாளும்
பெயர்த்திலனுயிர்பிறிந்திலன்கருணையாற்பிறந்தான். (௨௦௦)

தாங்குவாரிலைத்தம்பியைத்தழீஇக்கொண்டதன்னை
வாங்குவாரில்லைவாக்கினாற்றெருட்டுவாரில்லை
பாங்கராயுள்ளோர்யாவரும்பட்டனர்பட்ட
தீங்குவாலிதுதமியனையார்துயர்தீர்ப்பார். (௨௦௧)

கவந்தபந்தமுங்கழுதுந்தங்கணவரைக்காணார்
சிவந்தகண்ணினர்தேடினர்திரிபவர்திரளும்
உவந்தசாதகத்திட்டமுமோரியினொழுக்கும்
நிவந்தவல்லதுபிறவிலைக்களத்திடைநின்ற. (௨௦௨)

வானநாடியர்வயிறலைத்தழுதகண்மழைநீர்
சோனைமாரியிற்சொரிந்தனர்தேவருஞ்சொரிந்தார்
ஏனைநிற்பவுந்திரிபவுமிரங்கினவெவையும்
ஞானநாயகனுருவமேயாகலினடுங்கி. (௨௦௩)

முகையினாண்மலர்க்கிழவற்குமுக்கணான்றனக்கும்
நகையுநீக்கியதிருமுகங்கருணையுநலியத்
தொகையினின்றவர்க்குள்ளதுசொல்லியென்றொடர்ந்த
பகையும்பார்க்கின்றபாவமுங்கலுழ்ந்ததுபரிவால். (௨௦௪)

அண்ணலுஞ்சிறிதுணர்வினோடயர்வுயிர்ப்பணுகிக்
கண்விழித்தனன்றம்பியைத்தெரிவுறக்கண்டான்
விண்ணையுற்றனன்மீள்கிலனென்றகம்வெதும்பாப்
புண்ணினுற்றதோரெரியன்னதுயரினன்புலம்பும். (௨௦௫)

வேறு.

எந்தையிறந்தானென்னுமிருந்தேனுலகெல்லாம்
தந்தனனென்னுங்கொள்கைதவிர்ந்தேதறமியல்லேன்
உய்ந்துமிருந்தாய்நீயெனநின்றேனுரைகாணேன்
வந்தனெனையாவந்தனெனையாவினிவாழேன். (௨௦௬)

தாயோநீயே தந்தையுநீயே தவநீயே
சேயோநீயே தம்பியுநீயே திருநீயே
போயோநின்றாயென்னையிகந்தாய்புகழ்பாராய்
நீயோயானோநின்னினுநெஞ்சம்வலியேனோ. (௨௦௭)

ஊறாநின்றபுண்ணுடையாய்பாலுயிர்காணேன்
ஆறாநின்றேனாவிசுமந்தேயழுகின்றேன்
ஏறேயின்னுமுய்யினுமுய்வேனிருகூறாக்
கீறாநெஞ்சம்பெற்றனெனன்றோகெடுவேனே. (௨௦௮)

பயிலுங்காலம்பத்தொடுநாலும்படர்கானத்
தயில்கின்றேனுக்காவனநல்கியயிலாதாய்
வெயிலென்றுன்னாய்நின்றுதளர்ந்தேமெலிவெய்தித்
துயில்கின்றாயோவின்றிவ்வுறக்கந்துறவாயோ. (௨௦௯)

அயிராநெஞ்சுமாவியுமொன்றேயெனுமச்சொற்
பயிராவெல்லைபாதகனேற்கும்பரிவுண்டோ
செயிரோவில்லாவுன்னையிழந்துந்திரிகின்றேன்
உயிரோநானோவாரினியுன்னோடுறவையா. (௨௧௦)

வேழ்விக்கேகிவில்லுமிறுத்தோர்விடமம்மா
வாழ்விக்குமென்றெண்ணினென்முன்னேவருவித்தேன்
சூழ்வித்தென்னைச்சுற்றினரோடுஞ்சுடுவித்தேன்
தாழ்வித்தேனோவித்தனைகேடுந்தருவித்தேன். (௨௧௧)

மண்மேல்வைத்தகாதலின்மாதாழ்தலோர்க்கும்
புண்மேல்வைத்ததீநிகர்துன்பம்புகுவித்தேன்
பெண்மேல்வைத்தகாதலினிப்பேறுகள்பெற்றேன்
எண்மேல்வைத்தேனென்புகழ்யான்றானெளியேனோ. (௨௧௨)

மாண்டாய்நீயோயானொருபோதுமுயிர்வாழேன்
ஆண்டானல்லனானிலமந்தோபரதன்றான்
பூண்டாரெல்லாம்பொன்றுவர்துன்பம்பொறைபாற்றார்
வேண்டாவோநானல்லறமஞ்சிமெலிவுற்றால். (௨௧௩)

அறந்தாய்தந்தைசுற்றமுமற்றுமெனையல்லால்
துறந்தாயென்றுமெய்ம்மறவாதாய்துணைவந்து
பிறந்தாயென்னைப்பின்புதொடர்ந்தாய்பிரிவாற்றாய்
இறந்தாயுன்னைக்கண்டுமிருந்தேனெளியேனோ. (௨௧௪)

---

212. பெண் - ஜானகி.

சான்றோர்மாதைத்தக்கதரக்கன்சிறைதட்ட
ஆன்றோர்சொல்லுநல்லறமன்றன்வயமானால்
மூன்றாய்நின்றபேருலகொன்றாய்முடியாவேல்
தோன்றாவோவென்வல்வில்வின்வீரத்தொழிலம்மா. (௨௧௫)

வேலைப்பள்ளக்குண்டகழிக்கும்விராதற்கும்
காலிற்செல்லுங்காகமணிக்குங்கரனுக்கும்
மூலப்பொத்தற்செத்தமரத்தேழ்முதலுக்கும்
வாலிக்கும்மேயாயினவாறென்வலியம்மா. (௨௧௬)

இருந்தேனுனலிந்திரசித்தேமுதலாய
பெருந்தோராரைக்கொன்றுபிழைக்கப்பெறுவேனோ
வருநந்தனீயேவெல்லுதியென்னும்வலிகொண்டேன்
பொருந்தேனுனிப்பொய்ப்பிறவிக்கும்பொறையல்லேன். (௨௧௭)

மாதாவுந்நஞ்சுற்றமுநாடுமறையோரும்
ஏதானோரோவென்றுதளர்ந்தேயிருவாரைத்
தாதாய்காணச்சாலநினைந்தேன்றரையாள்வேம்
போதாயையாபொன்முடியென்னைப்புனைவிப்பான். (௨௧௮)

பாசமுமுற்றச்சுற்றியபோதும்பகையாலே
நாசமுற்றபோதுநடந்தேனுடனில்லேன்
நேசமுமற்றார்செய்வனசெய்தேநிலைநின்றேன்
தேசமுமற்றென்கொற்றநலத்தைத்தெரியாதே. (௨௧௯)

கொடுத்தேனன்றேவீடணனுக்குக்குலமாள
முடித்தோர்செல்வம்யான்முடியாதேமுடிகின்றேன்
படித்தோரென்றேபொய்ம்மைகுடிக்குப்பழிபெற்றேன்
ஒடித்தேனன்றேயென்புகழ்நானேபுணர்வற்றேன். (௨௨0)

என்றென்றேங்கும்விம்முமுயிர்க்கும்மிடையஃகிச்
சென்றொன்றொன்றோடுந்தியமெல்லாஞ்சிறையெய்தப்
பொன்றும்மென்னுந்தம்பியையார்வத்தொடுபுல்லி
ஒன்றுந்தேறான்றன்னைமறந்தான்றுயில்வுற்றான். (௨௨௧)

கண்டார்விண்ணோர்கண்கள்புடைத்தார்கலுழ்கின்றார்
கொண்டார்துன்பமென்முடிவென்னக்குலைகின்றார்
அண்டாவையாவெங்கள்பொருட்டாலயர்கின்றாய்
உண்டோவுன்பாற்றுன்பெனவன்பாலுரைசெய்தார். (௨௨௨)

---

219. நாசமுமொற்றப்போது நடந்தேனுடனல்லேன் என்றும் பாடம்.

வே று.

உன்னையுள்ளபடியறியேமுலகையுள்ளதிறமுள்ளேம்
பின்னறியேமுன்னறியேமிடையுமறியேம்பிறழாமல்
நின்னைவணங்கிநீவகுத்தநெறியினிற்குமதுவல்லால்
என்னையடியேஞ்செயற்பாலவின்பதுன்பமில்லோனே. (உஉ௧)

அரக்கர்குலத்தைவேரறுத்தெம்மல்லனீக்கியருளாயென்
றிரக்கவெம்மேற்கருணையினாலியையாவுருவமிஃதெய்திப்
புரக்குமன்னர்குடிப்பிறந்துபோந்தாயறத்தைப்பொறைதீர்ப்பான்
கரக்கநின்றேநெடுமாயமெமக்குங்காட்டக்கடவாயோ. (உஉ௪)

ஈன்றெம்மிடுக்கண்டுடைத்தளிப்பானிரங்கியரசரிற்பிறந்தாய்
மூன்றுமுலகந்துயர்தீர்த்தியென்னுமாசைமுயல்கின்றேம்
என்றுமறந்தேமவனல்லன்மனிசனென்றேயிதுமாயம்
போன்றதில்லையாளுடையாய்பொய்யும்புகலப்புக்காயோ. (உஉ௫)

அண்டம்பலவுமனைத்துயிருமகத்தும்புறத்துமுளவாக்கி
உண்டுமிழ்ந்துமளந்திடந்துமுள்ளும்புறத்துமுளையாகிக்
கொண்டுசிலம்பிதன்வாயிற்கூர்நூலியையக்கூடியற்றிப்
பண்டுமின்றுமமைக்கின்றபடியையொருவாய்பரமேட்டி. (உஉ௬)

துன்பம்விளையாட்டிதுவேயுமுன்னைத்துன்பந்தொடர்பின்மை
இன்பவிளையாட்டாமெனினுமறியாதேமுக்கிடருற்றால்
அன்புவிளையுமருள்விளையுமறிவுவிளையுமவையெல்லாம்
முன்புபின்புநடுவில்லாய்முடித்தாலன்றிமுடியாவே. (உஉ௭)

வருவாய்போலவாராதாய்வந்தாயென்றுமனங்களிப்ப
வெருவாதிருந்தேநீயிடையேதுன்பம்விளைக்கமெலிகின்றேம்
கருவாயளிக்குங்களைகண்ணேநீயேயிதனைக்களையாயேல்
திருவாழ்மார்பநின்மாயையெம்மாற்றீர்க்கத்தீருமோ. (உஉ௮)

அம்பரீடற்கருளியதுமயனார்மகனார்க்களித்ததுவும்
எம்பிரானேயெமக்கின்றுபயந்தாயென்றேயேமுறுவேம்
வெம்புதுயரநீயுழக்கவெளிகாணதுமெலிகின்றேம்
தம்பிதுணைவநீயிதனைத்தவிர்த்தெம்முணர்வைத்தாராயோ. ()

229. அம்பரீடர்க்கருளியது என்றது - துருவாசமுனிவிடுத்த பூதத்தினின்றுங் காத்ததனை.

என்பபலவுமெடுத்தியம்பியிமையாதோருமிடருழந்தார்
அன்புமிகுதியாலேயனறிவுமுள்ளேயடங்கினன்
துன்பமணிசர்கருமமேபுரியமுன்புதுணிந்தமையால்
புன்கணிருதர்பெருந்தூதர்போனாரரக்கனிடம்புகுந்தார். (௨௩௦)

என்வந்ததுநீரென்றரக்கர்க்கிறைவனியம்பவெறிசெருவில்
நின்மைந்தனதுநெடுஞ்சரத்தாற்றுணைவரெல்லாநிலஞ்சேரப்
பின்வந்தவனுமுயிரிழந்தபிழையைநோக்கிப்பெருந்துயரால்
முன்வந்தவனுமுடிந்தானுன்பகைபோய்முடிந்ததெனமொழிந்தார்.

ஆக திருவிருத்தம் - ௨௬௨௩.

---

## ௨௨-வது, பிராட்டிகளங்காண்படலம்.

பொய்யார்தூதரென்பதனாற்பொங்கியெழுந்தவுவகையனாய்
மெய்யார்நிதியின்பெருவெறுக்கைவெறுக்கவீசிவிளைந்தபடி
கையார்வரைமேன்முரசேற்றிச்சாற்றிநகரங்களிசிறப்ப
நெய்யாராடலாகென்றுநிகழ்த்துகென்றானெறியில்லான். (௧)

அந்தநெறியையவர்செய்யவரக்கன்மருத்தன்றனைக்கூவி
முந்தநீபோயரக்கருடன்முழுதுங்கடலின்முடுக்கிடுநின்
சிந்தையொழியப்பிறரறியிற்சிரமும்வரமுஞ்சிந்துவனென்
றுந்தவவன்போயரக்கருடன்முழுதுங்கடலினுள்ளிட்டான். (௨)

தெய்வமானத்திடையேற்றிமணிசர்க்குற்றசெயலெல்லாம்
தையல்காணக்காட்டுமின்கள்கண்டாலன்றித்தனதுள்ளத்
தையநீங்காளென்றுரைப்பவரக்கர்மகளிரிரைத்தார்ப்ப
உய்யுமுணர்வுநீத்தாளைநெடும்போர்க்களத்தினிடையுய்த்தார். (௩)

கண்டாள்கண்ணாற்கணவனுருவன்றியொன்றுங்காணாதாள்
உண்டாள்விடத்தையெனவுடலுமுணர்வுமுயிர்ப்புமுடனோய்ந்தாள்
தண்டாமரைப்பூநெருப்புற்றதன்மையுற்றுடரியாதாள்
பெண்டானுற்றபெரும்பீழையுலகுக்கெல்லாம்பெரிதன்றோ. (௪)

மங்கையழலும்வானாட்டுமயில்களழுதார்மழவிடையோன்
பங்கினுறைபுங்குயிலழுதாள்பதுமமலர்மேன்மாதழுதாள்

---

1. நெறி - தருமம்.
5. குயில் - பார்ப்பதி.

கங்கையழுதாளுமடந்தையழுதாள்கமலத்தடங்கண்ணன்
தங்கையழுதாளிரங்காதவரக்கிமாருந்தளர்ந்தழுதார். (௫)

பொன்றாழ்குழையாடனையின்றபூமாமடந்தைபுரிந்தழுதாள்
குன்றுமறையுந்தருமமுமெய்குழைந்துகுழைந்துவிழுந்தழுத
பின்றுதுடற்றும்பெரும்பாவமழுதபின்னென்பிறர்செய்கை
நின்றார்நின்றபடியழுதார்நினைப்புமுயிர்ப்புநீத்திட்டாள். (௬)

நினைப்புமுயிர்ப்புநீத்தாளைநீராற்றெளித்துநெடும்பொழுதின்
இனத்தினரக்கர்மடவார்களெடுத்தாருயிர்வந்தேங்கினாள்
கனத்தினிறத்தான்றனைப்பெயர்த்துங்கண்டாள்கயலைக்கமலத்தால்
சினத்தினலைப்பாளெனக்கண்ணைச்சிதையக்கையான்மோதினாள்.

அடித்தாண்முலைமேல்வயிறலைத்தாளழுதாடொழுதாளனல்வீழ்ந்த, கொடித்தானென்ன மெய்சுருண்டாள்கொதித்தாள் பதைத்தாள்குலைவுற்றாள், துடித்தாண்மீன்போலுயிர்கரப்பச் சோர்ந்தாள் சுழன்றுள்ளினாள், குடித்தாடயரையுயிரோடுங் குழைத்தாளுழைத்தாள்குயிலன்னாள். (௮)

விழுந்தாள் புரண்டாளுடன்முழுதும் வியர்த்தா ளுயிர்த்தாள் வெதும்பினாள், எழுந்தாளிருந்தாண் மலர்க்கரத்தைநெரித்தாள்சிரித்தாளேங்கினாள், கொழுந்தாவென்றாளயோத்தியர் தங்கோவேயென்றாளெவ்வுலகும், தொழுந்தாளரசே யோவென்றாள்சோர்ந்தாளரற்றத்தொடங்கினாள். (௯)

## வேறு.

உறமேவியகாதலுனக்குடையார்
புறமேதுமிலாரொடுபூண்முலையான்
மறமேபுரிவார்வசமாயினையோ
அறமேகொடியாயிதுவோவருடான். (௧௦)

முதியாருணர்வேதமொழிந்தவலால்
கதியேதுமிலார்துயர்காணுதியோ
மதியேன்மதியேனுனைவாய்மையினால்
விதியோகொடியாய்விளையாடுதியோ. (௧௧)

கொடியேனிவைகாணகிலேனுயிர்கோள்
முடியாநமனேமுறையோமுறையோ

விடியாவிருள்வாயெனைவீசினையோ
அடியேனுயிரேயருணாயகனே. (க௨)

எண்ணாமயலோடுமிருந்ததுநின்
புண்ணாகியமேனிபொருந்திடவோ
மண்ணோருயிரேயிமையோர்வலியே
கண்ணேயமிழ்தேகருணாகரனே. (க௩)

மேவிக்கனன்முன்மிதிலைத்தலையென்
பாவிக்கைபிடித்ததுபண்ணவநின்
ஆவிக்கொருகோள்வரவோவலர்வாழ்
தேவிக்கமிழ்தேமறையின்றெளிவே. (க௪)

உய்யாளுயிர்கோசலைதன்னுயிரோ
ஐயாவிளையோருயிர்வாழ்கிலரால்
மெய்யாவினையெண்ணிவிடுத்தகொடுங்
கைகேசிகருத்திதுவோகளிறே. (க௫)

தகைவாணகர்நீதவிர்வாயெனவும்
வகையாதுதொடர்நதொருமான்முதலாப்
புகையாடியகாடுபுகுந்துடனே
பகையாடியவாபரிவேதுமிலேன். (க௬)

இன்றீகலையேலிறவிவ்விடைமான்
அன்றீயெனவும்பரிவோடடியேன்
நின்றீவதுநின்னைநெடுஞ்செருவில்
கொன்றீவதொர்தீமைகுறித்தலினே. (க௭)

மேதாவிளையோய்விதியார்விளைவால்
போதாநெறியெம்மொடுபோதுறுநாள்
மூதானவன்முன்னர்முடிந்திடெனும்
மாதாவுரையின்வழிநின்றனையோ. (க௮)

பூவுந்தளிருந்தொகுபொங்கணைமேல்
கோவுந்துயிலத்தருவாய்கொடியார்
ஏவின்றலைவந்தவிருங்கணையால்
மேவுங்குளிர்மெல்லணைமேவினையோ. (க௯)

நெய்யார்பெருவேள்விநிரப்பிநெடுஞ்
செய்யார்புனனாடுதிருத்துதியால்

15. இளையோர் - இலக்குமணர்.

மெய்யாகியவாசகமும்விதியும்
பொய்யானவென்மேனிபொருந்துதலால். (௨௦)

மழுவாள்வரினும்பிளவாமனனுண்
டழுவேனினியின்றிடராறிடயான்
விழுவேனவன்மேனியின்மீதினென
எழுவாளைவிலக்கியியம்பினளால். (௨௧)

வேறு.

மாடுறவளைந்துநின்றவளையெயிற்றரக்கிமாரைப்
பாடுறவற்றநோக்கிப்பார்வையைத்தழுவிப்பற்றிக
கூடினளென்னநின்றுசெவியிடைக்குறுகிச்சொன்னாள்
தேடியதவமேயன்னதிரிசடைமறுக்கந்தீர்ப்பாள். (௨௨)

மாயமான்விடுத்தவாறுஞ்சனகனைவகுத்தவாறும்
போயமாநாகபாசம்பிணித்ததுபோனவாறும்
நீயமாநினைவாய்மாளநினைதியோநெறியிலாரால்
ஆயமாமாயமொன்றுமறிந்திலையன்னமன்னாய். (௨௩)

கண்டனகனவும்பெற்றநிமித்தமுநினதுகற்பும்
தண்டவாளரக்கர்பாவச்செய்கையுந்தருமந்தாங்கும்
அண்டர்நாயகன்றன்வீரத்தன்மையுமயர்க்கலாமோ
புண்டரீகற்குமுண்டோவிறுதியிப்புலையர்க்கல்லால். (௨௪)

ஆழியானுக்கைதன்னினம்பொன்றுமறுக்கிலாமை
ஏழைநீகாண்டியன்றேயிளையவன்வதனமின்னும்
ஊழிநாளிரவியென்னவொளிர்கின்றதுயிருக்கின்னல்
வாழியார்க்கில்லைவாளாமயங்கலைவேள்விவந்தாய். (௨௫)

ஓய்ந்துளன்வீரனென்னினுலகமோரேழுமேழும்
தீய்ந்துறுமிரவிபின்னுந்திரியுமேதெய்வமென்னும்
வீய்ந்துறுமெண்கணான்முன்னுயிரெலாம்வெருவலன்னை
ஆய்ந்தவையுள்ளபோதேயவருளரறமுமுண்டால். (௨௬)

மாருதிக்கில்லையன்றேமங்கைநின்வரத்தினாலே
ஆருயிர்நீங்கலானுற்கற்புக்குமழிவுண்டாமே
சீரியதன்றிதோன்றுந்திசைமுகன்படையின்செய்கை
பேருமிப்பொழுதேதேவரெண்ணமும்பிழைப்பதுண்டோ. (௨௭)

---

22. மாடு - பக்கம்.

தேவரைக்கண்டேன்பைம்பொற்செங்கரஞ்சிரத்திற்சேர்த்தி
மூவரைக்கண்டாரென்னவிருவரைமுறையினோக்கி
ஆவலிப்பெய்துகின்றாரயர்த்திலரஞ்சலன்னை
கூவலிற்புக்குவேலைகோட்படுமென்றுகொள்ளேல். (௨௮)

மங்கலநீங்கினாரையாருயிர்வாங்கினாரை
நங்கையிக்கடவுண்மானந்தாங்குறுநவையிற்றன்றால்
இங்கிவையளவையாகவிடர்க்கடல்கடத்தியென்றாள்
செங்கையளாயதையல்சிறிதுயிர்தரிப்பதானாள். (௨௯)

அன்னைநீயுரைத்ததொன்றுமழிந்திலதாதலானே
உன்னையேதெய்வமாக்கொண்டித்தனைகாலமுய்ந்தேன்
இன்னமிவ்விரவுமுற்றுமிருக்கின்றேனிறத்தலென்பால்
முன்னமேமுடிந்ததன்றேயென்றனண்முளரிநீத்தாள். (௩௦)

நாணெலாந்துறந்தேனில்லினன்மையினல்லார்க்கேய்ந்த
பூணெலாந்துறந்தேனென்றன்பொருசிலைமேகந்தன்னைக்
காணலாமென்னுமாசைகடுக்கவென்னுவிகாத்தேன்
ஏணிலாவுடலினீங்கவெளிதெனக்கெனவுஞ்சொன்னாள். (௩௧)

தையலையிராமன்மேனிதைத்தவேற்றடங்கண்ணாளைக்
கைகளிற்பற்றிக்கொண்டார்விமானத்தைக்கடாவுகின்றார்
மெய்யுயிருலகத்தாகவிதியையும்வலித்துவிண்மேல்
பொய்யுடல்கொண்டுசெல்லுநமனுடைத்தூதர்போன்றார். (௩௨)

ஆ திருவிருத்தம் - ௨௬௫௫.

## ௨௩-வது, மருத்துமலைப்படலம்.

போயினனடையலிப்பாற்புரிகெனப்புலவர்கோமான்
ஏயினகருமநோக்கியெய்தியவிலங்கைவேந்தன்
மேயினவுணவுகொண்டுமீண்டவையுறையுள்விட்ட
ஆயினவாகத்தான்வந்தமர்ப்பெருங்களத்தினானன். (௧)

நோக்கினான்கண்டான்பண்டிவ்வுலகங்கள்படைக்கநோற்றான்
வாக்கினான்மாண்டாரென்னவானரவீரர்முற்றும்
தாக்கினாரெல்லாம்பட்டதன்மையைவிடத்தைத்தானே
தேக்கினானென்னநின்றுதியங்கினானுணர்வுதீர்ந்தான். (௨)

28. கூவல் - கிணறு. 31. ஏண் - பெருமை.

விளைந்தவாறுணர்ந்திலாதான்வீங்கினான்வெதும்பினான்மெய்
உளைந்துளைந்துயிர்த்தானாவியுண்டிலையென்னவோய்ந்தான்
வளைந்தபேய்க்கணமுநாயுநரிகளுமிரியவந்தான்
இளங்கிளையோடுஞ்சாய்ந்தவிராமனையிடையிற்கண்டான். (௩)

என்பென்பதியாக்கையென்பதுயிரென்பதிவைகளெல்லாம்
பின்பென்பவல்லவேனுந்தம்முடைநிலைபிற்பேரா
முன்பென்பவுளவென்றாலுமுழுவதுந்தெரிந்தவாற்றால்
அன்பென்பதொன்றின்றன்மையமரருமறிந்ததன்றால். (௪)

ஆயினுமிவருக்கில்லையழிவெனுமதனாலாவி
போயினதில்லைவாயாற்புலம்பலன்பொருமிப்பொங்கித்
தீயினுமெரியுநெஞ்சின்வெருவலாற்றெரியநோக்கி
நாயகன்மேனிக்கில்லைவடுவெனநடுக்கந்தீர்ந்தான். (௫)

அந்தணன்படையால்வந்ததென்பதுமாற்றலான்ற
இந்திரசித்தேயெய்தானென்பதுமிளவற்காக
நொந்தனனிராமனென்னுநுண்மையுநொய்துநோக்கிச்
சிந்தையினெண்ணியெண்ணித்தீர்வதோருபாயந்தேர்வான். (௬)

உள்ளுறுதுன்பமுன்றவுற்றனவுறக்கமன்றோ
தெள்ளிதினுணர்ந்தபின்னைச்சிந்தனைதெரிவதன்றே
வள்ளலோதம்பிமாயவாழ்கிலன்மாயவாழ்க்கைக்
கள்ளனோவென்றானென்னாமழையெனக்கலுழுங்கண்ணான். (௭)

பாசம்போயிற்றாற்போலப்பதுமத்தோன்படையுமின்றே
நாசம்போயெய்துநம்பிதம்பிக்குநடுக்கமில்லை
வீசும்போர்க்களத்துவீழ்ந்தசேனையுமீளும்வெய்ய
நீசன்போர்வெல்வதுண்டோவென்றுளநிலையினின்றான். (௮)

உணர்வதன்முன்னமின்னையுற்றுழியுதவற்கொத்த
துணைவர்கடுஞ்சலில்லாருளரெனிற்றுருயித்தோன்றக்
கொணர்குவென்விரைவினென்னாக்கொள்ளியொன்றங்கைகொண்டான்
புணரியினுதிரவெள்ளக்கொள்ளத்துவிரைவிற்போனான். (௯)

வாய்மடித்திரண்டுகையுமுறுக்கித்தன்வயிரச்செங்கண்
தீயுகக்கனகக்குன்றிற்றிரண்டதோண்மழையைத்தீண்ட
ஆயிரகோடியானைப்பெரும்பிணத்தமளிமேலான்
காய்சினத்தனுமனென்னுங்கடல்கடந்தானைக்கண்டான். (௧௦)

---

6. அந்தணன் - பிரமன்.

கண்டுதன்கண்களூடுமழையெனக்கலுழிவார
உண்டுயிரென்பதுன்னியுடற்கணையொன்றொன்றாக
விண்டுதிர்புண்ணினின்றுமெல்லெனவிரைவின்வாங்கிக்
கொண்டனீர்கொணர்ந்துகோலமுகத்தினைக்குளிரச்செய்தான். ()

உயிர்ப்புமுன்னுதித்தபின்னருரோமங்கள்சிலிர்ப்பவூறி
வியர்ப்புளதாகக்கண்கள்விழித்தனமேனிமெல்லப்
பெயர்த்துவாய்புனல்வந்தூறவிக்கலும்பிறந்ததாக
அயர்த்திலனிராமனுமம்வாழ்த்தினனமரரார்த்தார். (கஉ)

அழுகையோடுவகையுற்றவீடணனார்வங்கூரத்
தழுவினனவனைத்தானுமன்பொடுதழுவித்தக்கோய்
வழுவிலனன்றேவள்ளலென்றனன்வலியனென்றான்
தொழுதனனுலகமூன்றுந்தலையின்மேற்கொள்ளுந்தூயான். (கங)

அன்புதன்றம்பிமேலாத்தறிவினைமயக்கவையன்
துன்பொடுந்துயிலனானுணர்வினித்தொடர்ந்தபின்னை
என்புகுந்தெய்துமென்பதறிகிலமென்றலோடும்
தன்பெருந்தன்மைக்கொத்தசாம்பனெத்தலையனென்றான். (கச)

அறிந்திலெனவனையாண்டுங்கண்டிலெனாவியாக்கை
பிறிந்திலனுளனென்றொன்றுந்தெரிந்திலென்பெயர்ந்தேனென்று
செறிந்ததார்நிருதர்வேந்தனுரைசெயக்காலின்செம்மல்
இறுந்திறமவனுக்கின்றானாடுதுமேகியென்றான். (கரு)

அன்னவன்றன்னைக்கண்டாலாணையேயரக்கர்க்கெல்லாம்
மன்னவவெம்மைமீட்டுவாழ்விக்குமுறுதிவல்லான்
என்னலுமுய்ந்தேமையவேகுதும்விரைவினென்னாச்
சின்னெறியிருளிற்சென்றார்சாம்பனைவிதியிற்சேர்ந்தார். (கசு)

எரிகின்றமூப்பினாலுமேவுண்டநோவினாலும்
அரிகின்றதுன்பத்தாலுமாருயிர்ப்படங்கியொன்றும்
தெரிகின்றதில்லாமம்மர்ச்சிந்தையனெனினுஞ்செல்வர்
வருகின்றசுவட்டையோர்ந்தான்செவிகளால்வயிரத்தோளான். ()

அரக்கனோவென்னையாளுமண்ணலோவனுமன்றானோ
இரக்கமுற்றருளவந்ததேவரோமுனிவரேயோ
வரக்கடவார்களல்லர்மாற்றலர்மலைந்துபோனார்
புரக்கவுள்ளாரோவென்னாக்கருதினன்பொருமறீர்ந்தான். (கஅ)

---

14. எத்தலை - எவ்விடம்.

வந்தயனின்றுகுன்றின்வார்ந்துவீழருவிமானச்
சிந்தியகண்ணினீரரேங்குவார்தம்மைத்தேற்றி
அந்தமில்குணத்தீர்யாவரனுகினிரென்றுனைய
உய்ந்தனமுய்ந்தேமென்றவீடணனுரையைக்கேட்டான். (௧௬)

மற்றயனின்றுன்யாவனென்னமாருதியும்வாழிக்
கொற்றவவனுமனின்றேனென்றெழுதனெனென்றுகூற
இற்றிலமையவெல்லேமெழுந்தனமெழுந்தேமென்று
உற்றபேருவகையாலேயோங்கினனாற்றமுற்றான். (௨௦)

விரிஞ்சன்வெம்படையென்றாலும்வேதத்தின்வேதமன்ன
அரிந்தமன்றன்னையொன்றுமாற்றிலதென்னுமாற்றல்
தெரிந்தனென்முன்னையன்னன்செய்ததென்றெரித்தியென்றான்
பெருந்தகைதுன்பவெள்ளத்துயிலுளான்பெருமவென்றான். (௨௧)

அன்னவன்றன்மைகண்டாலாற்றுமேயாக்கைவேறே
இன்னுயிரொன்றேமூலத்திருவருமொருவனேயால்
இந்நிலைகிடப்பத்தாழாதிங்கினியிமைப்பின்முன்னர்க்
கொன்னியல்வயிரத்தோளாய்மருந்துபோய்க்கொணர்தியென்றான்.

எழுபதுவெள்ளத்தோருமிராமனுமிளையகோவும்
முழுவதிவ்வுலகமூன்றுநல்லறமூர்த்திதானும்
வழுவலின்மறையுமுன்னால்வாழ்ந்தனவாகுமைந்த
பொழுதிறைதாழாதென்சொன்னெறிதரக்கடிதுபோதி. (௨௩)

வேறு.

பின்புளதிக்கடலென்னப்பெயர்ந்ததற்பின்யோசனைகள்பேசநின்ற
ஒன்பதினுயிரங்கடந்தாலிமயமெனுங்குலவரையையுறுதியுற்றால்
தன்பெருமையோரிரண்டாயிரமுளதியோசனைபின்றவிரப்போனல்
முன்புளயோசனையெல்லாமுற்றினைபொற்கூடஞ்சென்றுறுதிமொய்ம்ப. ()

இம்மலைக்குமொன்பதினுயிரமுளதால்யோசனையினிடதமென்னும்
செம்மலைக்குமுளவாயவத்தனையோசனைகடந்தாற்சென்றுகாண்டி
எம்மலைக்கும்பெரிதாயவடமலையையம்மலையினகலமெண்ணின்
மொய்ம்மலைந்ததிரடோளாய்முப்பத்திராயிரயோசனையின்முற்றும்.

மேருவினைக்கடந்தப்பாலொன்பதினுயிரமுளயோசனையைவிட்டால்
நேரனுகிநீலகிரிதானிரண்டாயிரமுளயோசனையினிற்கும்

24. பொற்கூடம் - ஏமகூடம்.
25. வடமலை - மகாமேரு.

மாருதிமற்றதற்கப்பால் யோசனைநாலாயிரத்துமருந்துவைகும்
கார்வரையைக்காணுதிமற்றதுகாணவித்துயர்க்குக்கரையுங்காண்டி.

மாண்டாரையுய்விக்குமருந்தொன்றுமுடல்வேறுவகிர்களாகக்,
கீண்டாலும்பொருந்துவிப்ப தொருமருந்தும்படைக்கலங்கள்கிளைப்
படுதொன்றும், மீண்டேயுந்தம்முருவேயருளுவதோர்மெய்ம்மருந்து
முளநீவிர, ஆண்டேகிக்கொணர்திரெனவுடையாளத்தொடுமுரை
த்தானறிவின்மிக்கான். (உஎ)

இன்னமருந் தொருநான்கும் பயோததியைக் கலக்கியஞான்
றெழுந்ததேவர், உன்னியமைத்தனர்மறைக்கு மெட்டாதபராஞ்சுட
ரிவ் வுலகமூன்றும், தன்னிருதாளுள்ளடக்கிப் பொலிபோழ்தின்யா
ன்முரசஞ் சாற்றும்வேலை, அன்னதுகண்டியாவுதலுந் தொன்முனி
வரவற்றியலெற் கரிவித்தாரால். (உஅ)

இம்மருந்துகாத்துறைவ வெண்ணிலவாற்றெய்வங்க ளிரங்கா
யார்க்கும், நெய்ம்மருங்குபடாகில்லா நெடுநேமிப்படையுமவற்றுட
னேநிற்கும், பொய்ம்மருங்கினில்லாதாய் புரிகின்றகாரியத்தின்பொ
துமைநோக்கிக், கைம்மருங்கு தொடர்ந்துன்னைக் காவாயென்றப்
புறம்போய்க் காக்குமென்றான். (உகூ)

ஈங்கிதுவேபணியாகி னிறந்தோரும்பிறந்தோரே யெங்கோற்
கியாதும், தீங்கிடையூறெய்தாமற் றெருட்டுதிர்போ யெனச்சொல்
லியவரைத்தீர்ந்தான், ஓங்கினன்வானெடுமுகட்டை யுற்றனன்பொ
ற்றோளிரண்டுந் திசையோடொக்க, வீங்கினவாகாயத்தை விழுங்கி
னனேயெனவளர்ந்தான் வேதம்போல்வான். (௩௦)

கோளோடுதாரகைகள்கோத்தமைத்த மணியாரக்கோவைபோன்ற
தோளோடுதோளகலமாயிரயோசனையளவுசொல்லவொண்ணு
தாளோடுதாள்பெயர்க்கவிடமிலதாயினவிலங்கைதடக்கைவீச
நீளோடுதிசைபோதாவிசைத்தெழுவானுருவத்தினிலையீதம்மா. ()

வால்விசைத்துக்கைந்நிமிர்த்து வாயினையுஞ்சிறிதகலம் வகுத்
துமானக், கானிலத்தினிடையூன்றி யுறநெருக்கிக் கழுத்தினையுஞ்
சுருக்கிக்காட்டித், தோன்மயிர்க்குந் தளஞ்சிலிர்ப்ப விசைத்தெழு

27. படைக்கலங்கள் கிளைப்படுதொன்றும் - உடலிற்பதிந்த ஆயுதங்களை வெளிப்படுத்துவ தொருமருந்தும். மீண்டேயும் - மறுபடியும், தம்முருவே- பழைய விரணத்தழும்புகளை நீக்கி முன்னையதன்மைத்தாகு முடலினை.

28. பயோததி - பயஉததி, பயம் - பால், உததி - கடல்,

வானவ்விலங்கை துளங்கிச்சூழ்ந்த, வேலையிற்புக் கழுந்தியதோர் மரக்கலம்போற் சுரித்துலையவிசையத்தோளான். (௩௨)

கிழிந்தனமாமழைக்குலங்கள் கீண்டதுநீண்டகல்வேலை கிழக்குமேற்கும், பொழிந்தனமீன் றொடர்ந்தெழுந்த பொருப்பினமுந் தருக்குலமும் பிறவும்பொங்கி, அழிந்தன்வானவர்மானமாகாயத்திடையனபே ரசனியென்ன, விழுந்தனநீர்க்கடலழுந்த வேறினமேற்கீறினபோய்த் திசைகளெல்லாம். (௩௩)

பாய்ந்தனனங்கப்பொழுதே பருவரைகளெனைப்பலவும் வடபாகத்துச், சாய்ந்தனபே ருடற்பிறந்த சண்டமாருதம்வீசத் தாதைசால, ஓய்ந்தனனென்றுரைசெய்ய விசும்பூடுபடர்கின்ற னுருவேகத்தால், காய்ந்தனவேலைகண் மேகங்கரிந்தனவெங் கெரிந்தபெருங் கானமெல்லாம். (௩௪)

கடன்முன்னேநிமிர்ந்தோடக் கால்பின்னே தொடர்ந்தோடக் கடிதிற்செல்வான், உடன்முன்னேசெலவுள்ளங் கடைக்குழைவால் செலச்செல்வா னுருவைநோ[illegible]கி, அடன்முன்னே தொடங்கியநாளாழ்கடல்சூ ழிலங்கையெனுமரக்கர்வைகும், திடர்முந்நீர்க்கிடையறிந்தான் முரிந்ததுநந்துயரென்றார் தேவரெல்லாம். (௩௫)

மேகத்தின் பதங்கடந்து வெங்கதிருந்தண்கதிரும் விரைவிற்செல்லும், மாகத்தினெறிக்கப்பால் வானமீன்குலம்வழங்கும் வரம்புநீங்கிப், போகத்தி னெறிகடந்தார் புகலிடங்கள் பிற்படப்போய்ப் பூவின்வந்த, ஏகத்தந்தணனிருக்கை யினிச்சேய்தன்றுமென்னவெழுந்துசென்றான். (௩௬)

வானநாட்டுறைகின்றார் வயக்கலுழன் வல்விசையான் மாயன்வைகும், தானநாட்டுறுகின்ற னென்றுரைத்தார் சிலர்சிலர்கள் விரிஞ்சன்றன்றன், ஏனநாட்டெழுகின்ற னென்றுரைத்தார்சிலர்சிலர்களீசனல்லார், போனநாட் டிடைபோக வல்லரோ விவன்முக்கட் புனிதனென்றார். (௩௭)

வேண்டுருவங்கொண்டெழுந்து விளையாடுகின்றான்மெய் வேதநான்கும், தீண்டுருவனல்லாத திருமாலேயிவனென்றார் தெரியநோக்கிக், காண்டுமெனவிமைப்பதன்முன் கட்புலத்தைக் கடந்தகலுமின்னுங்காண்மின், மீண்டுவருந்தரமல்லன் வீட்டுலகம் புகுமென்றார் மென்மேலுள்ளார். (௩௮)

உருவென்றார்சிலர்சிலர்க ளொளியென்றார் சிலர்சிலர்க ளொளிருமேனி, அருவென்றார்சிலர்சிலர்க ளண்டத்துக்கப்புறநின் றுலகமாக்கும், கருவென்றார்சிலர்சிலர்கள் காற்றென்றார்சிலர்சிலர்கள்கடலைத்தாவிச், செருவென்று னிலையொன்றுந் தெரியகிலா ருலகனைத்துந்தெரியுஞ்செல்வர். (௩௯)

வாசநாண்மலரோன்றனுலகளவுமிரிந்தனமேல்வானமான
காசமாயினவெல்லாங்கரந்துதனதுருவிடையேகனகத்தோள்கள்
வீசவான்முகடுரிஞ்சவிசைத்தெழுவா னுடற்பிறந்தமுழக்கம்விம்ம
ஆசைகாவலர்தலைகள்பொதிரெறிந்தார்விதிரெறிந்ததண்டகோளம். (௪௦)

வேறு.

தொடுத்தநாண்மாலைவானோர்முனிவரேமுதலதொல்லோர்
அடுத்தநாண்மறைகளோதியாய்ந்தநாளவுணர்வேந்தன்
கொடுத்தநாளளந்துகொண்டகுறளனார்குறியபாதம்
எடுத்தநாளொத்ததண்ணலெழுந்தநாளுலகுக்கெல்லாம். (௪௧)

தேவருமுனிவர்தாமுஞ்சித்தருந்தெரிவைமாரும்
மூவுலகிடையுளோருமுவகையாற்றொடர்ந்துமொய்த்தார்
தூவினமணியுஞ்சாந்துஞ்சுண்ணமுமலருந்தொக்குப்
பூவுடையமரர்தெய்வத்தருவெனவிசும்பிற்போனான். (௪௨)

இமையமால்வரையையுற்றானங்குளவிமைப்பிலோரும்
கமையுடைமுனிவர்மற்றுமறநெறிகலந்தோரெல்லாம்
அமைகநின்கருமமென்றுவாழ்த்தினரதனுக்கப்பால்
உமையொருபாகன்வைகுங்கயிலைகண்டுவகையுற்றான். (௪௩)

வடகுணதிசையிற்றோன்றுமழுவலானுண்டுவைகும்
தடவரையதனைநோக்கித்தாமரைச்செங்கைகூப்பிப்
படர்குவான்றன்னையன்னபரமனும்பரிவிற்பார்த்துத்
தடமுலையுமைக்குக்காட்டிவாயுவின்றனயனென்றான். (௪௪)

என்னவனெழுந்ததன்மையென்றுலகீன்றாள்கேட்ப
மன்னவனிராமன்றூதன்மருந்தின்மேல்வந்தான்வஞ்சர்
தென்னகரிலங்கைத்தீமைதீர்ப்பதுதிண்ணஞ்சேர்ந்து
நன்னுதனாமும்வெம்போர்காணுதுநாளையென்றான். (௪௫)

---

41. தொடுத்தநாண்மாலை - கட்டிய அன்றலர்ந்தமாலை, அண்ணலெழுந்தநாள் - அனுமான் மருந்துகொணர எழுந்தகாலத்து.

45. உலகீன்றாள் - உலகமாதா.

நாமயோசனைகள்கொண்டதாயிரநடுவுநீங்கி
ஏமகூடத்தினும்பரெய்தினின்றிறுதியில்லாக்
காமமேறுகருஞ்செல்வக்கடவுளரீட்டங்கண்டான்
நேமியின்னிசையிற்செல்வானிடதத்தினெற்றியுற்றான். (௪௯)

எண்ணுக்குமளவிலாதவறிவினோரிருந்துநோக்கும்
கண்ணுக்குங்கருணைத்தெய்வமனத்திற்குங்கடியனானான்
மண்ணுக்குந்திசைகள்வைத்தவரம்பிற்குமலரோன்வைகும்
விண்ணுக்குமளவையாயமேருவின்மீதுசென்றான். (௪௭)

யாவதுநிலைமைத்தன்மையின்னதென்றிமையநாட்டத்
தேவருந்தெரிக்கிலாதவடமலைக்கும்பர்சென்றான்
நாவலம்பெருந்தீவென்னுநளிர்கடல்வளாகவைப்பில்
காவன்மூன்றுலகமோதுங்கடவுண்மாமரத்தைக்கண்டான். (௪௮)

அன்னமாமலையினும்பருலகெலாமமைத்தவண்ணல்
நன்னகரதனைநோக்கியதனடுநாப்பணமைப்
பொன்மலர்ப்பீடந்தன்மேனான்முகன்பொலியத்தோன்றும்
தன்மையுங்கண்டுகையால்வணங்கினான்றருமம்போல்வான். (௪௯)

ஆயதன்வடகீழ்ப்பாகத்தாயிரமருக்கரான்ற
காய்கதிர்ப்பரப்பினையந்துகதிர்முகக்கமலங்காட்டித்
தூயபேருலகமூன்றுந்தூவியமலரிற்சூழ்ந்த
சேயிழைபாகத்தெண்டோளொருவனைவணக்கஞ்செய்தான். (௫௦)

தருவனமொன்றுவானோர்தலைத்தலைமயங்கித்தாழப்
பொருவருமுனிவர்வேதம்புகழ்ந்துரையோதைபொங்க
மருவிரிதுளவமோலிமாநிலக்கிழத்தியோடும்
திருவொடுமிருந்தமூலத்தேவையும்வணக்கஞ்செய்தான். (௫௧)

சந்திரனனையகொற்றத்தனிக்குடைதலையிற்றாகச்
சுந்தரமகளிரங்கைச்சாமரைதென்றறாவ
அந்தரவானநாடரடிதொழமுரசமார்ப்ப
இந்திரனிருந்ததன்மைகண்டுவந்திறைஞ்சிப்போனான். (௫௨)

பூவலர்மரத்தைப்போர்ப்பப்பொற்பகம்விரிந்துபொங்கும்
தேவர்தமிருக்கையானமேருவின்சிகரச்சேர்ப்பின்

---

48. கடவுள் மாமரத்தைக்கண்டான் - தெய்வத்தன்மைவாய்ந்த சம்புவிருக்கத்தினைத் தரிசித்தான். சம்பு - நாவல்.
50. தூவிய - அருச்சித்த.
51. மூலத்தேவையும் - உலககாரணனாகிய திருமாலையும்.

பூவகைபுலகுஞ்சூழ்ந்தமுரட்டிசைமுறையிற்றாங்கும்
காவலரெண்மர்நின்றதன்மையுந்தெரியக்கண்டான். (௫௩)

அத்தடங்கிரியைநீங்கியத்தலையடைந்தவள்ளல்
உத்தரகுருவையுற்றுனொளியவன்கதிர்களூன்றிச்
செற்றியவிருளின்றாக்கிவிளங்கியசெயலைநோக்கி
வித்தகன்விடிந்ததென்னமுடிந்ததென்வேகமென்றான். (௫௪)

ஆதியானுணராமுன்னமருமருந்துதவியல்விற்
பாதியாலனையதுன்பமகற்றுவான்பாவித்தேதற்குச்
சோதியானுதயஞ்செய்தானுற்றதோர்துணிதலாற்றேன்
ஏதியான்செய்வதென்னவிடருற்றானிணையிலாதான். (௫௫)

காற்றிசைசுருங்கச்செல்லுங்கடுமையான்கதிரின்செல்வன்
மேற்றிசையெழுவானல்லன்விடிந்ததுமன்றுமேரு
மாற்றினன்வடபாற்றேன்றுமென்பதுமறைகள்வல்லோர்
சாற்றினாரென்னத்துன்பந்தணிந்தனன்றவத்தின்மிக்கான். (௫௬)

இருவரேதோன்றியென்றுமீறிலாவாயுளெய்தி
ஒருவரோடொருவருள்ளமுயிரொடுமொன்றேயாகிப்
பொருவருமின்பந்துய்த்துப்புண்ணியப்புரிந்தோர்வைகும்
திருவுறைகமலமன்னநாட்டையுந்தெரியக்கண்டான். (௫௭)

வன்னிநாட்டியபொன்மௌலிவானவன்மலரின்மேலான்
கன்னிநாட்டிருவைச்சேருங்கண்ணனுமானுங்காணி
சென்னிநாட்டெரியல்வீரன்றியாகவிநோதன்றெய்வப்
பொன்னிநாட்டுவமைவைப்பைப்புலன்கொளநோக்கிப்போனான். ()

விரியவன்மேருவென்னும்வெற்பினின்மீதுசெல்லும்
பெரியவனயனார்செல்வம்பெற்றவன்பிறப்பிற்போந்தான்
அரியவனுலகமெல்லாம்மளந்தநாள்வளர்ந்துதோன்றும்
கரியவனென்னநின்றநீலமால்வரையைக்கண்டான். (௫௯)

அற்குன்றவலங்குசோதியம்மலையகலப்போனான்
பொற்குன்றமனையதோளாநேக்கினான்புலவன்சொன்ன
நற்குன்றமதனைக்கண்டானுணர்ந்தனனகைமுற்ற
எற்குன்றவெறியுந்தெய்வமருந்தடையாளமென்ன. (௬௦)

பாய்ந்தனன்பாய்தலோடுமம்மலைபாதலத்துச்
சாய்ந்ததுகாக்குந்தெய்வஞ்சலித்தனகடுத்துவந்து

54. செற்றிய - நெருங்கிய. 60. புலவன் - சாம்பவன்.

காய்ந்தனை நீ தான்யாவன்கருத்தென்சொல்கழறுகென்ன
ஆய்ந்தவனுற்றதன்மையவற்றினுக்கறியச்சொன்னான். (௬௧)

கேட்டனவுய்யவேண்டிற்றியற்றிப்பின்கெடாமலெம்பால்
காட்டெனவுணர்த்திவாழ்த்திக்கரந்தனகமலக்கண்ணன்
வாட்டலைநேமிதோன்றிமறைந்ததுமண்ணினின்றும்
தோட்டனனுமன்மற்றைக்குன்றினைவயிரத்தோளால். (௬௨)

வேறு.

இங்குநின்றின்னனமருந்தென்றெண்ணினால்
சிங்குமாற்காலமென்றுணர்ந்தசிந்தையான்
அங்கதுவேரொடுமங்கைதாங்கினான்
பொங்குநல்விசும்பிடைக்கடிதுபோகுவான். (௬௩)

ஆயிரயோசனையகலமீதுயர்ந்
தாயிரயோசனையாழ்ந்ததம்மலை
ஏயெனுமாத்திரத்தொருகையேந்தினான்
தாயினனுலகெலாந்தவழ்ந்தசீர்த்தியான். (௬௪)

அத்தலையன்னவனணையவாந்துணை
இத்தலையிருவருமிரைவினெய்தினார்
கைத்தலத்தாலடிவருடுங்காலையின்
உத்தமற்குற்றதையுணர்த்துவாமரோ. (௬௫)

வண்டனமடந்தையர்மனத்தைதவேரொடும்
கண்டனகொளவருங்கருணைத்தாமெனக்
கொண்டனகொடுப்பனவரங்கள்கோளிலாப்
புண்டரீகத்துணைதருமம்பூத்தன. (௬௬)

நோக்கினன்கரடிகட்கரசுநோன்புகழ்
ஆக்கியநிருதனுமழுதகண்ணினர்
தூக்கியதலையினர்தொழுதகையினர்
ஏக்கமுற்றருகிருந்திரங்குவார்களை. (௬௭)

ஏவியகாரியமியற்றியெய்தினை
கோவிலைவீடணனென்றுநோக்கிப்பின்

---

62. தோட்டனன் - எடுத்தான் இதுநீட்டுமிடத்துநீட்டல்.

66. வண்டன - வண்டையொப்ப. தருமம்பூத்தன - அறம்போலவலர்ந்தன.

தாவரும்பெரும்புகழ்சாம்பன் றன்னையும்
ஆவிவந் தனைகொலென் றருளி னானரோ. (௬௮)

ஐயன்மீர்நமக்குற்றவழிவி தாதலின்
செய்வகைபிறிதிலையுயிரிற் றீர்ந்தவர்
உய்கிலரினிச்செயற்குரியதுண்டெனின்
பொய்யிலிர்புகலுதிர்புலமையுள்ளத்தீர். (௬௯)

சீதையென்றொருத்தியாலுள்ளந்தேம்பிய
பேதையென்சிறுமையாலுற்றபெற்றியை
யாதெனவுணர்த்துகேனுலகொடேர்வுறுக்
காதைவன்பழியொடுந்திருத்திக்காட்டினேன். (௭௦)

மாயையின்மானெனவெம்பிவாய்மையால்
தூயனவுறுதிகள்சொன்னசொற்கொளேன்
போயினனென்பெண்ணுரைமறுதுபோகலால்
ஆயதிப்பழியுடையானியன்பினீர். (௭௧)

கண்டனனிராவணன் றன்னைக்கண்களால்
மண்டமர்புரிந்தனென்வலியினாலுயிர்
கொண்டிலெனுறவெலாங்கொடுத்துமாளநான்
பண்டுடைத்தீவினைபயந்தபண்பினால். (௭௨)

தேவர்தம்படைக்கலந்தொடுத்துத்தீயவன்
சாவதுகாண்டுமென்றிளவல்சாற்றலும்
ஆவதையுணர்ந்திலனழிவதென்வயின்
மேவுதலுறுவதோர்விதியின்வெம்மையால். (௭௩)

நின்றிலெனுடனெறிபடைக்குநீதியால்
ஒன்றியபூசனையமைக்கவுன்னினேன்
பொன்றினர்நமரெலாமிளவல்போயினான்
வென்றிலெனரக்கனைவினையின்மென்மையால். (௭௪)

ஈண்டிவணிருந்திவையியம்புமேழைமை
வேண்டுவதன்றினியமரின்வீடிய
ஆண்டகையன்பரையமரர்நாட்டிடைக்
காண்டலேநலம்பிறம்பிறகண்டதில்லையால். (௭௫)

எம்பியைத்துணைவரையிழந்தபாவினி
வெம்புபோரக்கரைமுறுக்கிவேரறுத்

---

73. வயின் - பக்கம்.

தம்பினினிராவணனுவிபாழ்படுத்
தும்பருக்குதவிமேலுறுவதென்னரோ. (எ௬)

இளையவனிறந்தபின்னெவருமென்னெனக்
களவறுசீர்த்தியென்னறிவென்னாண்மையென்
கிளையுறுசுற்றமென்னரசென்கேண்மையென்
விளைவுதானென்மறைவிதியென்மெய்ம்மையென். (எஎ)

இரக்கமும்பாழ்படவெம்பியீறுகண்
டரக்கரைவென்றுநின்றாண்மையாள்வெனேல்
மரக்கண்வன்கள்வனென்வஞ்சனேனினிக்
கரக்குமதல்லதோர்கடனுண்டாகுமோ. (எஅ)

தாதையையிழந்தபின்சடாயுவிற்றபின்
காதலின்றுணைவருமுடியக்காத்துழல்
கோதறுதம்பியும்விளியக்கோளிலன்
சீதையையுகந்துளனென்பர்சீரியோர். (எ௯)

வென்றனனரக்கரைவேரும்வீந்தறக்
கொன்றனனயோத்தியைக்குறுகினேன்குணத்
தின்றுணைத்தம்பியையின்றியானுளேன்
அன்றரசாளுமாசாலநன்றரோ. (அ௦)

படியினதாதலின்யாதும்பார்க்கிலென்
முடிகுவெனுடனெனமுடுகிக்கூறலும்
அடியிணைவணங்கியசாம்பனாழியாய்
நொடிகுவதுளதெனநுவல்வதாயினான். (அ௧)

உன்னைநீயுணர்கிலையடியனேனுனை
முன்னரேயறிகுவேன்மொழிதநீதிது
என்னெனினிமையவரெண்ணக்கீனமாம்
பின்னரேதெரிகுதிதெரிவில்பெற்றியாய். (அ௨)

அம்புயத்தவன்படையாதறேறினேன்
உம்பியையுலப்பருமுருவையூன்றிட
வெம்புவெங்களத்திடைவிழுந்தவென்றியால்
எம்பெருந்தலைவவிதெண்ணமுண்மையால். (அ௩)

அன்னவன்படைக்கலமமரர்தானவர்
தன்னையும்விடினுயிர்குடிக்குந்தற்பர

---

83. அம்புயத்தவன் - பிரமன், அம்புயம் - தாமரை.
84. தற்பர - அந்தமுதன்மையினையுடையாய்.

உன்னையொன்றிமைக்கிலதொழிந்துநீங்கிய
இன்னமுமுவமையொன்றெண்ணவேண்டுமோ. (௮௪)

பெருந்திறலனுமனீண்டுணர்வுபெற்றுளான்
அருந்துயர்முடிக்குறுமளவினாற்றலான்
மருந்திறைப்பொருதினிற்கொணரும்வாய்மொழி
பொருந்தினன்வடதிசைகடிதுபோயினான். (௮௫)

பனிவரைகடந்தனன்பருப்பதங்களின்
தனியரசதன்புறந்தவிர்ந்துசார்ந்துளான்
இனியொருகணத்தின்வந்தெய்துமீண்டுறு
துனிவருதுன்பநீதுடைத்திதொல்லையோய். (௮௬)

யானலாலெந்தையாயுலகையீன்றுளான்
தானலாற்சிவனலானேமிதாங்கிய
கோனலால்யாவருமுணருங்கோளிலா
வேனிலான்மேனியாய்மருந்தைமெய்யுற. (௮௭)

ஆர்கலிகடைந்தநாளமிழ்தின்வந்தன
கார்நிறத்தண்ணறன்னேமிகாப்பன
மேருவினுத்தரகுருவின்மேலுள
யாருமற்றுணர்கிலாவரணமெய்தின. (௮௮)

தோன்றியநாண்முதல்யாருந்தொட்டில
ஆன்றபேரண்ணலேயதனினாற்றல்கேள்
மூன்றெனவொன்றியவுலகமுன்னைநாள்
ஈன்றவனிறப்பினுமாவியீயுமால். (௮௯)

சல்லியமகற்றுவதொன்றுசந்துகள்
புல்லுறப்பொருத்துவதொன்றுபோயின
நல்லுயிர்நல்குவதொன்றுநன்னிறம்
தொல்லையதாக்குவதொன்றுதொல்லையோய். (௯0)

வருமதுதிண்ணநீவருந்தன்மாருதி
தருநெறிதருமமேகாட்டத்தாழ்கிலன்
அருமையதன்றெனாவடிவணங்கினான்
இருமையுந்துடைப்பவனேம்பலெய்தினான். (௯௧)

---

87. கோளிலா - கொள்கையில்லாதன. மருந்துமெய்யுற - மருந்துகள் உண்மையாக. மருந்தையென்றது ஐயீறுடைக்குற்றியலுகரம்.

88. அரணம் - காவல்.

பொன்மலைமீதுபோய்ப்போகபூமியின்
நன்மருந்துதவுமென்றுரைத்தநல்லுரைக்
கன்மயமில்லையென்றயிர்ப்புநீங்கினேன்
என்னலும்வடதிசையெழுந்ததங்கொலி. (௯௨)

கடல்கிளர்ந்தெழுந்துமேற்படரக்கார்வரை
இடையிடைபுறிந்துவிண்ணேறவிற்றிடை
தடையிலதுடற்றுறுசண்டமாருதம்
வடதிசைதோன்றியமயக்கம்வந்ததால். (௯௩)

மீன்குலங்குலைந்துகவெயிலின்மண்டிலம்
தான்குலைந்துயர்மதிதழுவத்தன்னுழை
மான்குலம்வெருக்கொளமயங்கிமண்டிவான்
தேன்குலங்கலங்கியநறவிற்சென்றவால். (௯௪)

வேர்த்துணர்தூரொடுவிசும்பைமீச்செலப்
போர்த்தனமலையொடுமரனுமுன்புபோல்
தூர்த்தனவேலையைக்காலின்றோன்றலும்
ஆர்த்தனனனையவரரந்தையாற்றுவான். (௯௫)

மழைகளுங்கடல்களுமற்றுமுற்றுமண்
உழையவும்விசும்பவுமொலித்தற்கொத்துள
குழைஇயினகுழுறினகொள்கைகொண்டதால்
உழுவையின்சினத்தவனார்த்தவோசையே. (௯௬)

எறிசுடர்ப்பெருங்கடல்கடையவேற்றநாள்
செறிசுடர்மந்தரந்தருதிசென்றென
வெறிதுகொலெனக்கொடுவிசும்பின்மீச்செலும்
உறுவலிக்கலுழனேயொத்துத்தோன்றினான். (௯௭)

பூதலத்தரவொடுமலைந்துபோனநாள்
ஓதியவென்றியனுடற்றுமூற்றத்தன்
ஏதமிலங்கையங்கிரிகொடெய்திய
தாதையுமொத்தனனுவமைதாழ்க்கிலான். (௯௮)

தோன்றினனென்னுமச்சொல்லின்முன்னம்வந்
தூன்றினனிலத்தடிகடவுளோங்கருன்
வான்றனிநின்றதுவஞ்சரூர்வர
ஏன்றிலதாகலினனுமனெய்தினான். (௯௯)

---

97. உறுவலி - வன்மைபொருந்திய. 98. தாதை - வாயுதேவன்.

வந்தனன் மருந்தினை மருத்துவானவன்
சிந்தையிற்பெருமகிழ்சிறப்பச்சேர்ந்துறீஇ
அந்தரத்தருக்கன்மாமகனொடாயவர்
வந்திரைத்தார்த்தெழும்வகைசெய்தானரோ. (௧௦௦)

காற்றுவந்தசைத்தலுங்கடவுணாட்டவர்
போற்றினர்விருந்துவந்திருந்தபுண்ணியர்
ஏற்றமும்பெருவலிபழகொடெய்தினார்
கூற்றினைவென்றுதம் முருவுங்கூடினார். (௧௦௧)

அரக்கர் தம்யாக்கைகளழிவிலாழியில்
கரக்கமற்றொழிந்தனவொழியக்கண்டன
மரக்கலமுதலவுமுய்ந்துவாழ்ந்தன
குரக்கினமுய்ந்ததுகூறல்வேண்டுமோ. (௧௦௨)

கழன்றனநெடுங்கணைகழன்றபுண்கடுத்
தழன்றனகுளிர்ந்தனவங்கஞ்செங்கண்கள்
சுழன்றனவுலகெலாந்தொழுவதொங்கலின்
குழன்றெழுங்குஞ்சியானுணர்வுங்கூடினான். (௧௦௩)

யாவருமெழுந்தனரார்த்தவேழ்கடற்
றூவரும்பேரொலிசெவியிற்சார்தலும்
தேவர்கள்வாழ்த்தொலிகேட்டசெங்கணான்
ஏவரீங்கினனெனவிளவலோங்கினான். (௧௦௪)

ஓங்கியதம்பியையுயிர்வந்துள்ளுற
வீங்கியதோள்களாற்றழுவிவெந்துயர்
நீங்கினனிராமனுமுலகினின்றில
தீங்குளதேவருமறுக்கஞ்சிந்தினார். (௧௦௫)

அரம்பையராதினரமிழ்தவேழிசை
நரம்பியல்கின்னரமுதலநன்மையே
நிரம்பினவுலகெலாமுவகைநெய்விழாப்
பரம்பினமுனிவரர்வேதம்பாடினார். (௧௦௬)

உந்தினபின்கொலையொழிவிலுண்மையும்
தந்தனைநீயதுநினக்குச்சான்றெனாச்
சுந்தரவில்லியைத்தொழுதுசூழவந்
தந்தணன்படையுநின்றகன்றுபோயதால். (௧௦௭)

---

102. மரக்கலமுதலவும் - கப்பல்முதலியனவும்.
107. சுந்தரவில்லியை - அழகியவிற்படையினையுடைய இராமனை.

வேதநின்றார்த்தனவேதவேதியர்
போதநின்றார்த்தனபுகழுமார்த்தன
ஓதநின்றார்த்தனவோதமுள்ளுறச்
சீதநின்றார்த்தனதேவர்சிந்தனை. (௧௦௮)

வேறு.

ஆயகாலையினமரரார்த்தெழத்
தாயினன்பனைத்தழுவினான்றனி
நாயகன்பெருந்துயராமறத்
தூயகாதனீர்துளங்குகண்ணினான். (௧௦௯)

எழுதுகுங்குமத்திருவினேந்துகோ
டுழுதமார்பினானுருகியுள்ளுறத்
தருவினிற்றலுந்தாழ்ந்துதாளுறத்
தொழுதமாருதிக்கிணையசொல்லினான். (௧௧௦)

முன்னிற்றோன்றினோர்முறையினீங்கலா
என்னிற்றோன்றியதுயரினீறுசேர்
மன்னிற்றோன்றினேமுன்னமாண்டுளேம்
நின்னிற்றோன்றினேநெறியிற்றோன்றினாய். (௧௧௧)

அழியுங்காற்றருமுதவியையனே
மொழியுங்காற்றருமுயிரின்முற்றுமே
பழியுங்காத்தரும்பகையுங்காத்தெமை
வழியுங்காத்தனைமறையுங்காத்தனை. (௧௧௨)

தாழ்விலங்கிறைப்பொழுதுதக்கதே
வாழியெம்பிமேலன்புமாட்டவான்
ஏழும்வீயுமென்பகர்வதெல்லைநாள்
ஊழிகாணுநீயுதவினாயரோ. (௧௧௩)

இன்றுவீகலாதெவருமெம்மொடு
நின்றுவாழுநாணெடிதுநல்கினாய்
ஒன்றுமின்னதோவுறுகிலாதுநீ
என்றும்வாழ்தியாலினிதேனைவலால். (௧௧௪)

---

111. நின்னிற்றோன்றினேம் - நின்னிடத்துப்பிறந்தேம்.

113. எல்லைநாள்ஊழிகாணுநீ - உலகமுடிவுகாலத்தழியாதிருந்து பிரளய தரிசனஞ்செய்யவேண்டியநீ.

மற்றையோர்களுமனுமன்வண்மையால்
பெற்றவாயுளர்பிறந்தகாதலார்
சுற்றுமேயினர்தொழுதுவாழ்த்தினர்
உற்றவாறெலாமுணரக்கூறினன். (௧௧௫)

உய்த்தமாமருந்துதவவொன்னலார்
பொய்த்தசிந்தையாரிறுதல்பொய்க்குமால்
மொய்த்தகுன்றையம்மூலவூழின்வாய்
வைத்துமீடியால்வரம்பிலாற்றலாய். (௧௧௬)

என்றுசாம்பவனியம்பவீதரோ
நன்றுசாலவென்றென்றுநாழிகை
சென்றுமீள்வனென்றுணர்ந்துதெய்வமாக்
குன்றுதாங்கியக்குரிசில்போயினன். (௧௧௭)

ஆ திருவிருத்தம் - ௨௭௭௨.

## ௨௪-வது, களியாட்டுப்படலம்.

இன்னதித்தலையதாகவிராவணனெழுந்துபொங்கித்
தன்னையுங்கடந்துநீண்டவுவகையன்சமைந்தகீதம்
கின்னரமுதல்வர்பாடமுகத்திடைக்கிடந்தகெண்டைக்
கன்னிநன்மயிலனுரைநெடுங்களியாட்டங்கண்டான். (௧)

அரம்பையர்விஞ்சைமாதரரக்கியரவுணர்மாதர்
குரும்பையங்கொங்கைநாகர்கோதையரியக்கர்கோதில்
கரும்பினுமினியசொல்லார்சித்தர்தங்கன்னிமார்கள்
வரம்பறுசும்மையோர்கண்மயிற்குலமருளவந்தார். (௨)

மேனகைவிசையவாட்கட்டிலோத்தமையரம்பைமெல்லென்
தேனகுமழலையின்சொலுருப்பசிமுதலதெய்வ
வானகமகளிர்வந்தார்சில்லரிச்சதங்கைமாழ்கி
ஆனகமுரசஞ்சங்கமுருட்டொடுமிரட்டவாடி. (௩)

தோடுண்டசுருளுந்தூங்குங்குழைகளுஞ்சுருளிற்றோன்றும்
ஏடுண்டபசும்பொற்பூவுந்திலதமுமிலவச்செவ்வாய்

115. வண்மையால் - வள்ளற்றன்மையால்.

116. உய்த்தமாமருந்துஉதவ - நீ கொண்டுவந்த இச்சஞ்சீவியான துயிர் கொடுக்க. 2. குரும்பை - தெங்கிளநீர்.

மூடுண்டமுறுவன்முத்துமுள்ளுண்டமுளரிச்செங்கட்
காடுண்டுபுகுந்தவென்னமுனிந்ததுகறைவெண்டிங்கள். (௪)

முளைக்கொழுங்கதிரின்கற்றைமுறுவல்வெண்ணிலவுமூரி
ஒளிப்பிழம்பொழுகும்பூணினுமிழிளவெயிலுமொண்பொன்
விளக்கையும்விளக்குமேனிமிளிர்கதிர்ப்பரப்பும்வீசி
வளைத்தபேரிருளுங்கண்டோரறிவெனமருளுமாதோ. (௫)

நற்பெருங்கல்விச்செல்வநவையறுநெறியைநண்ணி
முற்பயமுணர்ந்ததூயோர்மொழியொடும்பழகிமுற்றிப்
பிற்பயனுணர்தறேற்றுப்பேதைபோல்வஞ்சன்செய்த
கற்பனையென்னவோடிக்கலந்ததுகள்ளின்வேகம். (௬)

பலபடமுறுவல்வந்துபயந்தனபனித்தமெய்வேர்
இலவிதழ்துடித்தமுல்லையெயிறுவெண்ணிலவையீன்ற
கொலைபயினயனவேலின்கொழுங்கடைசிவந்தகொற்றச்
சிலைநிகர்புருவநெற்றிக்குனித்தனவிளர்த்தசெவ்வாய். (௭)

கூந்தலம்பாரக்கற்றைக்கொந்தளக்கோலக்கொண்டல்
ஏந்தகலல்குற்றேரையிகந்துபோயிறங்கயாணர்ப்
பூந்துகிலோடும்பூசன்மேகலைசிலம்புபூண்ட
மாந்தளிரெய்தநோய்தின்மயங்கினர்மழலைச்சொல்லார். (௮)

கோத்தமேகலையினோடுந்துகின்மணிக்குறங்கைக்கூடக்
காத்தனகூந்தற்கற்றையற்றவத்தன்மைகண்டு
வேத்தவைகீழுளோருங்கீழ்மையேவிளைத்தார்மேலோர்
சீர்த்தவர்செய்யத்தக்ககருமமேசெய்தாரென்ன. (௯)

பாணியிற்றள்ளிக்காலமாத்திரைபடாதுபட்ட
நாணினமுறையிற்செல்லாதொருவழிநடையிற்செல்லும்
ஆணியினழிந்தபாடனறவெனவனங்கவேடன்
தூணியினடைத்தவம்பிற்கொடுந்தொழிறுறந்தகண்ணார். (௧௦)

வங்கியம்வகுத்தகானமாறுகோண்மழலைமாறச்
சங்கையில்பெரும்பாணுற்றநிறத்துறைநிரம்பித்தள்ளச்
சிங்கலினமிழ்தினோடுமெளியளிதேறலன்ன
வெங்குரலெடுத்தபாடல்விளித்தனர்மயக்கம்வீங்க. (௧௧)

---

6. பிற்பயன் - பின்னரதன்பொருள்.
9. கீழுள்ளோரும் - ஈனர்களும்.
10. பாணி - தாளம்.

ஏனையபிறவுங்கண்டார்க்கிந்திரசாலமென்னத்
தானவையுருவிற்றோன்றும்பாவனைத்தகைமைசான்றோர்
மானமர்நோக்கிஞரைமைந்தரைக்காட்டிவாயால்
ஆனையைவிளம்பித்தேரையபிநயத்தியற்றியுற்றார். (௧௨)

அழுகுவார்நகுவார்பாடியாடுவாராயினரைத்
தொழுகுவார்துயில்வார்தள்ளித்தூங்குவார்துவர்வாயிற்றேன்
ஒழுகுவாரொல்கியொல்கியொருவர்மேலொருவர்புக்கு
முழுகுவார்மூரிவாட்கண்முகிழ்த்திடமூரிபோவார். (௧௩)

உயிர்ப்புறத்துற்றதன்மையுணர்த்தினருள்ளத்துள்ள
தயிர்ப்பினிலற்றதன்றேயதுகளியாட்டமாகச்
செயிர்ப்பறுசிந்தைத்தெய்வத்திருமறைமுனிவர்க்கேயும்
மயிர்ப்புறந்தோறும்வந்துபொடித்ததுகாமவாரி. (௧௪)

மாப்பிறழ்நோக்கினார்தம்மணிநெடுங்குவளைவாட்கண்
சேப்புறவரத்தச்செவ்வாய்ச்செங்கிடைவெண்மைசேரக்
காப்புறுபடைக்கைக்கள்வநிருதர்கோரிறுதிகாட்டிப்
பூப்பிறழ்ந்துருவம்வேறாய்ப்பொலிந்ததோர்தன்மைபோன்ற. (௧௫)

கயல்வருகாலன்கைவேல்காமவேள்கணையென்றாலும்
இயல்வருகிற்கிலாதநெடுங்கணாரிணைமென்கொங்கை
துயல்வருகனகநாணுங்காஞ்சியுந்துகிலும்வாங்கிப்
புயல்வருகூந்தற்பாரக்கற்றையிற்புனையலுற்றார். (௧௬)

முத்தன்மைமொழியலாகாமுகிழிளமுறுவனல்லார்
இத்தன்மையெய்தனோக்கியரசுவீற்றிருந்தவெல்லை
அத்தன்மெய்யரியின்சேனையார்கலியார்த்தவோதை
மத்தன்மெய்மயங்கவந்துசெவிதொறுமடுத்தமாதோ. (௧௭)

ஆடலுங்களியின்வந்தவமலையுமமிழ்தினன்ற
பாடலுமுழவின்றெய்வப்பாணியும்பவளவாயார்
ஊடலுங்கடைக்கணோக்குமழலைவெவ்வுரையுமெல்லாம்
வாடன்மென்மலரேயொத்தவார்ப்பொலிவருதலோடும். (௧௮)

தறிபொருகளிநல்யானைசேவகந்தள்ளியோங்கத்
துறுசுவற்புரவிதூங்கத்துணுக்குறவரக்கருட்கச்
செறிகழலிருவர்தெய்வச்சிலையொலிபிறந்ததன்றே
எறிகடல்கடைந்தமேனாளெழுந்தபேரோதையென்ன. (௧௯)

---

14. உணர்த்தினர் - அபிநயத்தால் விளக்கினர்.

முத்தவாணகையின்மூரன்முகத்தியர்முழுக்கண்மேவலால்
குத்துவார்கூட்டமெல்லாம்வானரக்குழுவிற்றோன்ற
மத்துவாழ்கடலினுள்ளமறுகுறவதனமென்னும்
பத்துவாழ்மதிக்குமங்காட்பகலொத்ததிரவுபண்பால். (௨௰)

ஈதிடையாகவந்தாரலங்கன்மீதேறினார்போய்
ஊதினார்வேய்கள்வண்டினுருவினாருற்றவெல்லாம்
தீதிலார்பகைஞரென்னத்திக்கென்றமனத்தன்றெய்வப்
போதுகுபந்தர்நின்றுமந்திரத்திருக்கைபுக்கான். (௨௧)

ஆக திருவிருத்தம் - ௨௭௧௩.

## ௨௫-வது, மாயாசீதைப்படலம்.

மைந்தனுமற்றுளோருமகோதரன்முதலோராய
தந்திரத்தலைமையோருமுதியருந்தழுவத்தக்க
பந்தியரெவரும்வந்துமருங்குறப்படர்ந்தார்பட்ட
அந்தரமுழுதுந்தானேயனையவர்க்கறியச்சொன்னான். (௧)

நங்கிளையுலர்ந்ததெல்லாமுய்ந்திடநணுகுமன்றே
வெங்கொடுந்தீமைதன்னால்வேலையிலிட்டிலேமேல்
இங்குளவெல்லாமாடற்கினிவருமிடையூறில்லைப்
பங்கயத்தண்ணன்மீளாப்படைபழுதுற்றபண்பால். (௨)

இலங்கையினின்றுமேருபிற்படவிமைப்பிற்பாய்ந்து
வலங்கிளர்மருந்துநின்றமலையொடுங்கொணரவல்லான்
அலங்கலந்தடந்தோளண்ணலனுமனேயாதல்வேண்டும்
கலங்கலினுலகுக்கெல்லாங்காரணங்கண்டவாற்றால். (௩)

நீரினைக்கடக்கவாங்கியிலங்கையாநின்றகுன்றைப்
பாரினிற்கிழியவீசினாருளர்பிழைக்கற்பாலார்
போரினிற்பொருவதெங்கேபோயினவனுமன்பொன்மா
மேருவைக்கொணர்ந்திவ்வூர்மேலிடுமெனின்விலக்கலாமோ. (௪)

முறைகெடவேண்டின்முன்புநினைந்ததேமுடிப்பன்முன்பின்
குறைவிலாக்குணங்கட்காங்கோர்கோதிலர்வேதங்கூறும்
இறைவர்கண்மூவரென்பதெண்ணிலாரெண்ணமேதான்
அறைகழலனுமனோடுநால்வரேமுதல்வரம்மா. (௫)

3. காரணங்கண்டவாற்றால் - அருள்செய்ததன்மையால்.

இறந்தவரிறந்துதீரவினியொருபிறவிவந்து
பிறந்தனமாகினுள்ளேமுய்ந்தனம்பிழைக்கும்பெற்றி
மறந்தனமெனினுமுன்னஞ்சனகியைமரபினீந்தவ்
வறந்தருசிந்தையோரையடைக்கலம்புகுதுமைய. (௬)

வாலியைவாளியொன்றால்வானிடைவைத்துவாரி
வேலையைவென்றுகும்பகருணனைவீட்டினானை
ஆலியின்மொக்குளன்னவரக்கரோவமரின்வெல்வார்
சூலியைப்பொருப்பினோடுந்துளக்கியவிசயத்தோளாய். (௭)

மறிகடல்குடித்துவானைமண்ணொடுமறிக்கவல்ல
எறிபடையரக்கரெல்லாமிறந்தனரிலங்கையூரும்
சிறுவனுநீயுமல்லாலாருளரொருவர்தீர்ந்தார்
வெறிதுநம்வென்றியென்றான்மாலிவேல்விளைவதோர்வான். (௮)

என்றுமாலியவான்கூறப்பிறையெயிற்றெழிலிநாப்பண்
மின்றெரிந்தென்னநக்குவெருவரவுரப்பிப்பேழ்வாய்
ஒன்றினென்றசனியென்னவுருத்துநீயுரைத்தமாற்றம்
நன்றுநன்றென்றுசீறியுரைத்தனனலத்தையோரான். (௯)

கட்டுரையதனைக்கேளாக்கண்ணெரிகதுவநோக்கிப்
பட்டனரரக்கரென்னிற்படைக்கலம்படைத்தவெல்லாம்
கெட்டனவெனினும்வாழ்க்கைகெடாதினிக்கிளியனானை
விட்டிடவெண்ணியோயான்பிடித்ததுவேட்கைவீய. (௧௦)

மைந்தரென்மற்றையோரெனஞ்சினிர்வாழ்க்கைவேட்டிர்
உய்ந்தனிர்போவிர்நாளையூழிவெந்தீயினோங்கிச்
சிந்தியமனித்தரோடக்குரங்கினைதீர்ப்பெனென்றான்
வெந்திறலரக்கர்வேந்தன்மகனிவைவிளம்பலுற்றான். (௧௧)

உளதுநானுணர்த்தற்பாலதுணர்ந்தனைகோடலுண்டேல்
தளமலர்க்கிழவன்றந்தபடைக்கலந்தழலிற்சாற்றி
அளவிலதமையவிட்டதிராமனையடையாவென்றால்
இளவல்தனையமேனித்தீண்டின்றிமீண்டதம்மா (௧௨)

மானுடனல்லன்றொல்லைவானவனல்லன்மற்று
மேனிவர்முனிவனல்லன்வீடணன்மெய்யிற்சொன்ன
ஏனவனெண்ணிற்றீர்ந்தாரெண்ணுறுமொருவனென்றே
தேனகுதெரியன்மன்னாசேகறத்தெரிந்ததன்றே. (௧௩)

---

6. சனகி - ஜானகி.

அனையதுபிறவுநிற்கவன்னதுபகர்தலாண்மை
வினையெனினன்றுநின்றுவீழ்ந்ததுவீழ்கவீர
இனையனீழுண்டியான்போய்நிகும்பலைவிரைவினெய்தித்
துனியறுவேள்விவல்லைத்தொடங்கினான்முடியுந்துன்பம். (௧௪)

அன்னதுநலத்ததேயாலமைதியென்றரக்கன்சொன்னான்
நன்மகனும்பிகூறநண்ணலார்கண்டுநண்ணி
முன்னியவேள்விமுற்றுவகைசெருமுயல்வரென்னா
என்னவரெய்தாவண்ணமியற்றலாமுறுதியென்றான். (௧௫)

சானகியுருவமாகச்சமைத்தவடன்மைகண்ட
வானுயரனுமன்முன்னேவாளினாற்கொன்றுமாற்றி
யானெடுஞ்சேனையோடுமயோத்திமேலெழுந்தேனென்னப்
போனபின்புரிவதொன்றுமிலாதவர்துயரம்பூண்பர். (௧௬)

இத்தலைச்சீதைமாண்டாள்பயனிவணில்லையென்பார்
அத்தலைத்தம்பிமாருந்தாயருமடுத்துளோரும்
உத்தமநகருமாளுமென்பதோர்வருத்தமூன்றப்
பொத்தியதுன்பமூளச்சேனையுந்தாமும்போவார். (௧௭)

போகலரென்றபோதுமனுமனையாண்டுப்போக்கி
ஆகியதறிந்தாலன்றியருந்துயராற்றலாற்றார்
ஏகியகருமமுற்றியானவண்விரைவினெய்தி
வேகம்வெம்படையிற்கொன்றுதருகுவென்வென்றியென்றான். ()

அன்னதுபுரிதனன்றென்றரக்கனுமமையவஞ்சொற்
பொன்னுருக்குவமைமாயமியற்றுவானமைந்துபோனான்
இன்னதித்தலையதாகவிராமனுக்கிரவிசெம்மல்
தொன்னகரதனைவல்லைக்கடிகெடச்சுடுதுமென்றான். (௧௯)

அத்தொழில்புரிதனன்றென்றண்ணலுமமையவெண்ணித்
தத்தினனிலங்கைமூதூர்க்கோபுரத்தும்பர்சார்ந்தான்
பத்துடையேழுசான்றவானரப்பரவைபற்றிக்
கைத்தலத்தோரோர்கொள்ளியெடுத்ததெவ்வுலகுங்காண. (௨௦)

வேறு.

எண்ணினகோடிப்பல்படையாவும்
மண்ணுறுகாவற்றிண்மதில்வாயில்
வெண்ணிறமேகமின்னினம்வீசி
நண்ணினபோல்வதொன்னகர்நாண. (௨௧)

ஆசைகடோறுமள்ளினகொள்ளி
மாசறுதானைமார்க்கடவெள்ளம்
நாசமிவ்வூருக்குண்டெனநள்ளின்
வீசினவானின்மீன்விழலன்ன. (உ௨)

வஞ்சனைமன்னன்வாழுமிலங்கைக்
குஞ்சரமன்னார்வீசியகொள்ளி
அஞ்சனவண்ணனாழியினேவும்
செஞ்சரமென்னச்சென்றனமென்மேல். (உ௩)

கையகலிஞ்சிக்காவலிலங்கைச்
செய்யகொளுந்திச்சென்றுநெருங்க
ஐயனெடுங்காராழியையம்பால்
எய்யவெரிந்தாலொத்ததிலங்கை. (உ௪)

பாற்றுறுபல்பழுவத்தெரிபற்ற
நிரற்றுறுபல்பறவைக்குலமீளம்
உரற்றினவிண்ணினொலித்தெழுவண்ணம்
அரற்றியெழுந்ததடங்கவிலங்கை. (உ௫)

மூவுலகத்தெவரும்முதலோரும்
மேவினவிற்றொழில்வீரனிராமன்
தீவமெனச்சிலவாளிசெலுத்தக்
கோவுரமுற்றும்விழுந்ததுகுன்றின். (உ௬)

இத்தலையின்னநிகழ்ந்திடுமெல்லைக்
கைத்தலையிற்கொடுகாலினெழுந்தான்
உய்த்தபெருங்கிரிமேருவினுப்பால்
வைத்தநெடுந்தகைமாருதிவந்தான். (உ௭)

அறையரவக்கழன்மாருதியார்த்தான்
உறையரவஞ்செவியுற்றுளதவ்வூர்
சிறையரவக்கலுழன்கொடுசீறும்
இறையரவக்குலமொத்ததிலங்கை. (உ௮)

மேற்றிசைவாயிலைமேவியவெங்கட்
காற்றின்மகன்றனைவந்துகலந்தான்
மாற்றலின்மாயைவகுக்கும்வலத்தான்
கூற்றையும்வென்றுயர்வட்டணைகொண்டான். (உ௯)

---

22. ஆசை - திசை, திக்கு. 27. இத்தலை - இங்கே.

சானகியாம்வகைகொண்டுசமைத்தோர்
மானனையாளைவடிக்குழல்பற்று
ஊனகுவாளொருகைக்கொடுருத்தான்
ஆனவனந்நிலையின்னவறைந்தான். (௩0)

வந்திவள்காரணமாகமலைந்தீர்
எந்தையிகழ்ந்தனன்யானிவளாவி
சிந்துவனென்றுசெறுத்துரைசெய்தான்
அந்தமின்மாருதியஞ்சியயர்ந்தான். (௩க)

கண்டவளேயிவளென்பதுகண்டான்
விண்டதுபோலும்நம்வாழ்வெனவெந்தான்
கொண்டிடைதீர்வதோர்கோளறிகில்லான்
உண்டுயிரோவெனவாயுமுலர்ந்தான். (௩உ)

யாதுமினிச்செயலில்லெனவென்னால்
நீதியுரைப்பதுநீரெனவோராக்
கோதில்குலத்தொருநீகுணமிக்காய்
மாதையொறுத்தல்வசைத்திறமன்றோ. (௩௩)

நான்முகனுக்கொருநால்வரின்வந்தாய்
நூன்முகமுற்றுநுணங்கவுணர்ந்தாய்
பான்முகமுற்றபெரும்பழியன்றோ
மான்முகமற்றொருமாதைவதைத்தால். (௩௪)

மண்குலைகின்றதுவானநடுங்கிக்
கண்குலைகின்றதுகாணுதிகண்ணால்
எண்குலைகின்றதிரங்கறுறந்தாய்
பெண்கொலைசெய்கைபெரும்பழியன்றோ. (௩௫)

என்வயினல்கினையேகுதியென்றால்
நின்வயமாமுலகியாவையுநீநின்
அன்வயமேதுமறிந்திலையையா
புன்மைதொடங்கல்புகழ்க்கழிவென்றான். (௩௬)

என்றனன்மாருதியிந்திரசித்தும்
ஒன்றுரைகேளெனதெந்தையுமூரும்
பொன்றுதறீருமிதிற்புகழுண்டே
நன்றுரையென்றுமினக்குரைசெய்தான். (௩௭)

---

32. கண்டவள் - முன்பார்த்தவள்.

எந்தையுமிந்தவிலங்கையுளோரும்
உய்ந்திடவானவர்யாவருமோடச்
சிந்துவென்வாளினிலென்றுசெறுத்தான்
இந்திரசித்தவனின்னவிசைத்தான். (௩௮)

போமினடாவினைபோயதுபோலாம்
ஆமெனினின்னுமயோத்தியையண்மிக்
காமினதின்றுகளங்கரியாக
வேமிதுசெய்தினிமீள்குவனென்றான். (௩௯)

தம்பியர்தம்மொடுதாயருமாயோர்
உம்பர்விலக்கிடினும்மினியுய்யார்
வெம்புகடுங்கனல்வீசிடுமென்கை
அம்புகளோடுமவிந்தனரம்மா. (௪0)

இப்பொழுதேகடிதேகுவென்யானிப்
புட்பகமானமதிற்புகநின்றேன்
தப்புவரேயவர்சங்கையிலாவென்
வெப்புறுவாளிகளின்றுவிரைந்தால். (௪௧)

ஆளுடையாயருளாயருளாயென்
றேழைவழங்குறுசொல்லினிரங்கான்
வாளினெறிந்தனன்மாகடல்போலும்
நீளுறுசேனையினூடுகிமிர்ந்தான். (௪௨)

தென்றிசைநின்றுவடாதுதிசைக்கட்
பொன்றிணிபுட்பகமேற்கொடுபோனான்
ஒன்றுமுணர்ந்திலன்மாருதியுக்கான்
வென்றிநெடுங்கிரிபோலவிழுந்தான். (௪௩)

போயவன்மாறிநிகும்பலைபுக்கான்
தூயவனெஞ்சுதுயர்ந்துசுருண்டான்
ஓய்வொடுநெஞ்சமொடுங்கவுலர்ந்தான்
ஏயனபன்னினனின்னனசொன்னான். (௪௪)

வேறு.

அன்னமேயென்னும்பெண்ணினருங்குலக்கலமேயென்னும்
என்னமேயென்னுந்தெய்வமில்லையோயாதுமென்னும்

சின்னமேசெய்யக்கண்டுந்தீவினைநெஞ்சமாவி
பின்னமேயாயதில்லையென்னும்போராற்றல்பேர்ந்தான். (௪௫)

எழுந்தவன்மேலேபாயவெண்ணும்பேரிடரைத்தள்ளி
விழுந்துவெந்துயிர்த்துவிம்மிவீங்கும்போய்மெலியும்வெந்தீக்
கொழுந்துகளுயிர்க்கும்யாக்கைகுலைவுறுந்தலைமேற்கொண்டுற்
றழுந்தரைதன்னைப்பின்னையினையனவுரைப்பதானான். (௪௬)

முடிந்ததுநந்தமெண்ணுமுழுவுலகிற்குங்கங்குல்
விடிந்ததென்றிருந்தேன்மீளவெந்துயரிருளின்வெள்ளம்
படிந்ததுவினையின்செய்கைபரந்ததுபாவிவாளால்
தடிந்தனன்றிருவையந்தோதவிர்ந்ததுதருமம்மா. (௪௭)

பெருஞ்சிறைக்கற்பினாளைப்பெண்ணினைக்கண்ணிற்கொல்ல
இருஞ்சிறகற்றபுட்போல்யாதுமொன்றியற்றலாற்றேன்
பருஞ்சிறையழுங்குகின்றேனெம்பிரான்றேவிபட்ட
அருஞ்சிறைமீட்டவண்ணமழகிதுபெரிதுமம்மா. (௪௮)

பாதகவரக்கன்றெய்வபத்தினித்தவத்துளாளைப்
பேதையைக்குலத்தின்வந்தபிழைப்பிலாதாளைப்பெண்ணைச்
சீதையைத்திருவைத்தீண்டிச்சிறைவைத்ததீயோன்சேயே
காதவுங்கண்டுநின்றகருமமேகருணைத்தம்மா. (௪௯)

கல்விக்குநிமிர்ந்தகீர்த்திக்காகுத்தன்றூதனுகிச்
சொல்விக்கவந்துபோனேனுயவித்துயர்செய்தாரை
வெல்விக்கவந்தேனுன்னைமீட்பிக்கவன்றுவெய்தின்
கொல்விக்கவந்தேனென்றோர்கொடும்பழிகூட்டிக்கொண்டேன். ()

வஞ்சியையெங்குங்காணாதுயிரினைமறந்தானென்னச்
செஞ்சிலையுரவோன்றேடித்திரிகின்றானுள்ளந்தேற
அஞ்சொலாளிருந்தாள்கண்டேனென்றயானரக்கன்கொல்லத்
துஞ்சினாளென்றுசொல்லத்தோன்றினேன்றோற்றமீதால். (௫௧)

அருங்கடல்கடந்திவ்வூரையள்ளெரிமடுத்துவெள்ளக்
கருங்கடல்கட்டிமேருக்கடந்தொருமருந்துகாட்டிக்
குரங்கினியுன்னோடொப்பதில்லெனக்களிப்புக்கொண்டேன்
பெருங்கடற்கோட்டந்தேய்வையாயதென்னடிமைப்பெற்றி. (௫௨)

விண்டுநின்றரக்கைசிந்தப்புல்லுயிர்விட்டிலாதேன்
கொண்டுநின்றானைக்கொல்லக்கூசினேனெதிரேகொல்லக்

45. ஆற்றல் - வல்லமை.
48. கண்ணிற்கொல்ல - கண்ணெதிரில்கொலைபுரிய. 50. கல்விக்கு - கல்வியில்.

கண்டுநின்றனென்றன்கையினிற்கலத்தின்வெண்சோ
றுண்டுநின்றுய்யவல்லேனெளியெனோவொருவனுள்ளேன். (௫௩)

என்னநின்றிரங்கிக்கள்வனயோத்திமேலெழுவெனென்று
சொன்னதுமுண்டுபோனசுவடுண்டுதொடர்ந்துசெல்லின்
மன்னனிங்குற்றதன்மையுணர்கிலன்வருவதோரேன
பின்னினிமுடிப்பதியாதென்றிரங்கினானுணர்வுபெற்றான். (௫௪)

உற்றதையுணர்த்திப்பின்னையுலகுடையொருவனோடும்
இற்றுறினிற்றுமாள்வெனன்றெனினெண்ணமெண்ணிச்
சொற்றதுசெய்வென்வேறோர்பிறிதிலென்றுணிவிற்றென்னாப்
பொற்றடந்தோளான்வீரன்பொன்னடிமருங்கிற்போனான். (௫௫)

சிங்கவேறனையவீரன்செறிகழற்பாதஞ்சேர்ந்தான்
அங்கமுமனமுங்கண்ணுமாவியுமலக்கணுற்றான்
பொங்கியபொருமல்வீங்கியுயிர்ப்பொடுபுரத்தைப்போர்ப்ப
வெங்கணீரருவிசோரமால்வரையென்னவீழ்ந்தான். (௫௬)

வீழ்ந்தவன்றன்னைவீரன்விளைந்ததுவிளம்புகென்னாத்
தாழ்ந்திருதடக்கைபற்றியெடுக்கவுந்தரிக்கிலாதான்
ஆழ்ந்தெழுதுன்பத்தாளையரக்கனின்றயில்கொள்வாளால்
போழ்ந்தனனென்னக்கூறிப்புரண்டனன்பொருமுகின்றான். (௫௭)

துடித்திலனுயிர்ப்புமில்லனிமைக்கிலன்றுள்ளிக்கண்ணீர்
பொடித்திலன்யாதுமொன்றும்புகன்றிலன்பொருமியுள்ளம்
வெடித்திலன்விம்மிப்பாரின்வீழ்ந்திலன்வியர்த்தானல்லன்
அடுத்துளதுன்பம்யாவுமறிந்திலரமரரேயும். (௫௮)

சொற்பதங்கேட்டலோடுந்துணுக்குறவுணர்வுசோர
நற்பெருவாடையுற்றமரங்களினடுக்கமெய்தாக்
கற்பகமனையவள்ளல்கருங்கழற்கமலக்கான்மேல்
வெற்பினமென்னவீழ்ந்தார்வானரவீரரெல்லாம். (௫௯)

சித்திரத்தன்மையுற்றசேவகனுணர்வுதீர்ந்தான்
மித்திரர்வதனநோக்கானிளையவன்வினவப்பேசான்
பித்தருமிறைபொருறுதபேரபிமானமென்னும்
சத்திரமார்பிற்றைக்கவுயிரிலனென்னச்சாய்ந்தான். (௬௰)

நாயகன்றன்மைகண்டுந்தமக்குற்றநாணம்பார்த்தும்
ஆயனகருமமீளவழிவுற்றவதனைப்பார்த்தும்

60. இவற்பொருத என்றும் பாடம்.

வாயொடுமனமுங்கண்ணும்யாக்கையுமயர்ந்துசாம்பித்
தாயினையிழந்தகன்றிற்றம்பியுந்தலத்தனானான். (௬௧)

தொல்லையதுணைரத்தக்கவீடணன்றுளக்கமுற்றான்
எல்லையிறுன்பமூன்றவிடையொன்றுந்தெரிக்கிலாதான்
வெல்லவுமரிதுநாசமிவடனுல்விளைந்ததென்னக்
கொல்வதுமடுக்குமென்றுமனத்திடைனையங்கொண்டான். (௬௨)

சீதநீர்முகத்தினப்பிச்சேவகன்மேனிதீண்டிப்
போதம்வந்தெய்தற்பாலயாவையும்புரிந்துபொற்பூம்
பாதமுங்கையுமெய்யும்பற்றினன்வருடலேசும்
வேதமுங்காணுவள்ளல்விழித்தனன்விழியைமெல்ல. (௬௩)

ஊற்றிவார்கண்ணீரோடுமுள்ளிழிந்துற்றதெண்ணி
ஆற்றுவானல்லனாகியயர்கின்றனெனிதுமையன்
மாற்றுவானல்லன்மானமுயிருகவருந்துமென்னாத்
தேற்றுவானினைந்துதம்பியிவையிவைசெப்பலுற்றான். (௬௪)

முடியுநாட்டானேவந்துமுற்றினான்றுன்பமுந்நீர்ப்
படியுமாஞ்சிறியோர்தன்மைநினக்கிதுபழியிற்றாமால்
குடியுமாசுண்டதென்னினறத்தொடுமுலகைக்கொன்று
கடியுமாறன்றிச்சோர்ந்துகழிதியோகருத்திலார்போல். (௬௫)

தையலைத்துணையிலாளைத்தவத்தியைத்தருமக்கற்பின்
தெய்வதந்தன்னைமற்றுன்றேவியைத்திருவைத்தீண்டி
வெய்யவன்கொன்றானென்றால்வேதனையுழப்பதின்னும்
உய்யவோகருணையாலோதருமத்தோடுறவுமுண்டோ. (௬௬)

அரக்கனென்னமரர்தாமென்னந்தணர்தாமென்னந்தக்
குருக்களென்முனிவர்தாமென்வேதத்தின்கொள்கைதானென்
செருக்கினர்வலியராகிநெறிநின்றார்சிதைவரென்னா
இருக்குமிதென்னாமிம்மூன்றுலகையுமெரிமடாதே. (௬௭)

முழுவதேழுலகமின்னமுறைமுறைசெய்கைமேன்மூண்
டெழுவதேயமரரின்னமிருப்பதேயறமுண்டென்று
தொழுவதேமேகமாரிசொரிவதேசொரிந்துநாம்வீழ்ந்
தழுவதேநன்றுநந்தம்விற்றொழிலாற்றலம்மா. (௬௮)

புக்கிவ்வூரிமைப்பின்முன்னம்பொடிபடுத்தரக்கன்போன
திக்கெலான்சுட்டுவானோருலகெலாந்தீத்துத்தீர்க்கத்

63. சீதநீர் - குளிர்ந்தநீர், தண்ணீர்.

தக்கராங்கண்ணீராற்றித்தலைசுமந்திருகைநாற்றித்
துக்கமேயுழப்பமென்றுற்சிறுமையாத்தோன்றுமன்றே. (சுசு)

அங்குமிவ்வறமேநோக்கியரசிழந்தடவியெய்தி
மங்கையைவஞ்சன்பற்றவரம்பழியாதுவாழ்ந்தேதம்
இங்குமித்துன்பமெய்தியிருத்துமேலெளிமைநோக்கிப்
பொங்குவான்றளையிற்பூட்டியாட்செயப்புகல்வனன்றே. (எ0)

மன்றலங்கோதையாளைத்தம்மெதிர்கொணர்ந்துவாளின்
கொன்றவர்தம்மைக்கொல்லுங்கோளிலாநாணங்கூரப்
பொன்றினரென்பராவிபோக்கினுற்பொதுமைபார்க்கின்
அன்றிதுகருமமென்னீயயர்கின்றதறிவிலார்போல். (எக)

அனையனவிளவல்கூறவருக்கன்சேயயர்கின்றனோர்
கனவுகண்டனனேயென்னக்கதுமெனவெழுந்துகாணும்
வினையினியுண்டேவல்லைவிளக்கின்வீழ்விட்டிலென்ன
மனையிடையரக்கன்மார்பிற்குதித்துநாம்வம்மினென்றான். (எஉ)

இலங்கையையிடந்துவெங்கணிராக்கதரென்கின்றுரைப்
பொலங்குழைமகளிரோடும்பானுகர்புதல்வரோடும்
குலங்களொடடங்கக்கொன்றுகொடுந்தொழில்குறித்துநம்மேல்
விலங்குவாரென்னிற்றேவர்விண்ணையுமண்ணில்வீழ்த்தும். (எங)

அறங்கெடச்செய்துமென்பதமைந்தனமாகினைய
புறங்கிடந்துழைப்பதென்னேபொருதினிப்புவனமூன்றும்
கறங்கெனதிரிந்துதேவர்குலங்களுங்கட்டுமென்று
மறங்கிளர்வயிரத்தோளானிலங்கைமேல்வாவலுற்றான். (எச)

மற்றையவீரரெல்லாமன்னனின்முன்னம்வாவி
எற்றுதுமரக்கர்தம்மையில்லொடுமெடுத்தென்றேகல்
உற்றனருறுதலோடுமுணர்த்துவதுளதென்றுன்னுச்
சொற்றனனனுமன்வஞ்சனயோத்திமேற்போனசூழ்ச்சி. (எரு)

தாயருந்தம்பிமாருந்தவம்புரிநகரஞ்சாரப்
போயினனென்றமாற்றஞ்செவித்தொளைபுகுதலோடும்
மேயினவடியினின்றவேதனைக்கனையவெந்த
தீயிடைத்தணிந்ததென்னச்சீதைபாற்றுன்பந்தீர்ந்தான். (எசு)

அழுந்தியபாலின்வெள்ளத்தாழிநின்றனந்தர்நீங்கி
எழுந்தனனென்னத்துன்பக்கடலினின்றேறியாறுக்

---

74. கறங்கு - பம்பரம்.

கொழுந்துறுகோபத்தீயுநடுக்கமுமனத்தைக்கூட
உழுந்துருள்பொழுதுந்தாழாவினையினான்மறுக்கமுற்றான். (௭௭)

திருமிச்சீதையோடுமென்கிலதன்றென்றீமை
வேரொடுமுடிப்பதாகவிளைந்ததும்வேறுமின்னும்
யாரொடுந்தொடருமென்பதறிகிலேனிதனையைய
பேரிடவதியுண்டோவெம்பியர்பிழைக்கின்றாரோ. (௭௮)

நினைவதன்முன்புசெல்லுமானத்தினெடிதுநின்றான்
வினையொருகணத்தின்முற்றிமீள்கின்றான்வினையேன்வந்த
மனைபொடிபட்டதங்குமாண்டதுதாரமீண்டும்
எனையனதொடருகின்றதுணர்கிலேனிறப்புங்காணேன். (௭௯)

தாதைக்குஞ்சடாயுவானதந்தைக்குந்தமியளாய
சீதைக்குங்கூற்றங்காட்டித்தவிர்ந்திலதொருவென்றீமை
பேதைப்பெண்பிறந்துபெற்றதாயர்க்கும்பிழைப்பிலாத
காதற்றம்பியர்க்குமூர்க்குநாட்டிற்குங்காட்டிற்றன்றே. (௮௦)

உற்றதொன்றுணரகில்லாருணர்ந்துவந்துருத்தாரேனும்
வெற்றிவெம்பாசம்வீசிவிசித்தவன்கொன்றுவீழ்த்தால்
மற்றைவெம்புள்ளின்வேந்தன்வருகிலன்மருந்துநல்கக்
கொற்றமாருதியாங்கில்லையாருயிர்கொடுக்கற்பாலார். (௮௧)

மாகவாகாயஞ்செல்லவல்லையின்வயிரத்தோளாய்
ஏகுவானுபாயமுண்டேலியம்புதிநின்றவெல்லாம்
சாகமற்றிலங்கைப்போருந்தவிர்கவச்சழக்கன்கண்கள்
காகமுண்டதற்பின்மீண்டுமுடிப்பனென்கருத்தையென்றான். (௮௨)

அவ்விடத்திளவலையபரதனையமரினார்க்க
எவ்விடற்குரியான்போனவிந்திரசித்தேயென்னு
தெவ்விடத்தமையின்மும்மையுலகமுந்தீர்ந்தருவோ
வெவ்விடர்க்கடலின்வைகல்கேளெனவிளம்பலுற்றான். (௮௩)

தீக்கொண்டவஞ்சன்வீசத்திசைமுகன்பாசந்தீண்ட
வீக்குண்டுவீழயானோபரதனும்வெய்யகூற்றை
கூய்க்கொண்டுகுத்துண்டன்னான்குலத்தொடுநிலத்தனாதல்
போய்க்கண்டுகோடியன்றேயென்றனன்புழுங்குகின்றான். (௮௪)

அக்கணத்தனுமனின்றானையவென்றோளினாதல்
கைத்துணைத்தலத்தேயாதலேறுதிர்காற்றுந்தாழ

81. விசித்தல் - கட்டுதல்.

இக்கணத்தயோத்திமூதூரெய்தினெனிடமுண்டெனின்
திக்கனைத்தினிலுஞ்செல்வேன்யானேபோய்ப்பகையுந்தீர்வென்.

எழுபதுவெள்ளத்தோடுமிலங்கையையிடந்தென்றோண்மேல்
தழுவுறவைத்தின்றேகென்றுரைத்தியேற்சமைவென்றக்கோய்
பொழுதிறைதாழ்ப்பதென்னோபுட்பகம்போதன்முன்னம்
குழூவொடுகொண்டுபோவென்கணத்தொடுகுதிப்பென்கூற்றின். ()

கொல்லவந்தானைநீதிகூறினென்விலக்கிக்கொள்வான்
சொல்லவுஞ்சொல்லிநின்றேன்கொன்றபின்றுன்பமென்னை
வெல்லவுந்தரையின்வீழ்வுற்றுணர்ந்திலென்விரைந்துபோனான்
இல்லையென்றுளனேற்றீயோன்பிழைக்குமோவிழுக்கமுற்றேன். ()

மனத்தின்முன்செல்லுமானம்போனதுவழியதாக
நினைப்பின்முன்னயோத்தியெய்திவருநெறிபார்த்துநிற்பென்
இனிச்சிலதாழ்ப்பதென்னோயேறுதிரிரண்டுதோளும்
புனத்துழாய்மாலைமார்பீர்புட்பகம்போதன்முன்னம். (அஅ)

ஏறுதுமென்னாவீரரெழுதலுமிறைஞ்சியீண்டுக்
கூறுவதுளதுதுன்பங்கோளுறக்குலுங்கியுள்ளம்
தேறுவதரிதுசெய்கைமயங்கினென்றிகைத்துநின்றேன்
ஆறினெனதனையையமாயமென்றயிர்க்கின்றேனால். (அகூ)

பத்தினிதன்னைத்தீண்டிப்பாதகன்படுத்தபோது
முத்திறத்துலகும்வெந்துசாம்பராய்முடியுமன்றே
அத்திறமானதேனுமயோத்திமேற்போனதன்மை
சித்திரமிதனையெல்லாந்தெரிகலாஞ்சிறிதுபோழ்தின். (கூ0)

இமையிடையாகயான்சென்றேந்திழையிருக்கையெய்தி
அமைவுறநோக்கியுற்றதறிந்துவந்தறைந்தபின்னர்ச்
சமைவதுசெய்வதென்றுவீடணன்விளம்பத்தக்க
தமைவதென்றிராமன்சொன்னானந்தரத்தவனுஞ்சென்றான். (கூக)

வண்டினதுருவங்கொண்டான்மானவன்மனத்திற்போனான்
தண்டலையிருக்கைதன்னைப்பொருக்கெனச்சார்ந்துதானே
கண்டனனென்பமன்னோகண்களாற்கருத்தாலாவி
உண்டிலையென்னச்செய்தவோவியமொக்கின்றாளை. (கூஉ)

தீர்ப்பதுதுன்பம்யானென்னுயிரொடென்றுணர்ந்துசிந்தை
பேர்ப்பதுமின்சொலன்னைதிரிசடைபேசப்போந்தாள்

---

91. அமைதல் - தாமதித்தல்.

கார்ப்பெருமேகம்வந்துகடையுகங்கலந்தவன்ன
ஆர்ப்பொலியமிழ்ந்தமாகவாருயிராற்றினுளே. (௬௩)

வஞ்சனையென்பதுன்னிவானுயருவகைவைகும்
நெஞ்சினனாகியுள்ளந்தள்ளுறலொழிந்துநின்றான்
வெஞ்சிலைமைந்தன்போனனிகும்பலைவேள்வியானென்
றெஞ்சலிலரக்கன்சேனையெழுந்தெழுந்தேகக்கண்டான். (௬௪)

வேள்விக்குவேண்டற்பாலகலப்பையும்விறகுநெய்யும்
வாழ்விக்குந்தாழ்விலென்னும்வானவர்மறுக்கங்கண்டான்
சூழ்வித்தவண்ணமீதேதாநன்றெனத்துணிவுகொண்டான்
தாழ்வித்தமுடியான்வீரன்றாமரைச்சரணந்தாழ்ந்தான். (௬௫)

இருந்தனதேவியானேயெதிர்ந்தனனென்கணூர
அருந்ததிகற்பினாளுக்கழிவுண்டோவரக்கனம்மை
வருந்திடமாயஞ்செய்துநிகும்பலைமருங்குபுக்கான்
முருங்கழல்வேள்விமுற்றிமுதலறமுடிக்கமூண்டான். (௬௬)

என்றலுமுலகமேழுமேழுமாத்தீவுமெல்லை
ஒன்றியகடல்களேழுமொருங்கெழுந்தார்க்குமோதை
அன்றெனவாகுமென்னவமரருமயிர்க்கவார்த்துக்
குன்றினமிடியத்துள்ளியாடினகுரக்கினீட்டம். (௬௭)

வீரனுமையந்தீர்ந்தான்வீடணன்றன்னைமெய்யோ
டார்வமுமுயிருமொன்றவழுந்துறத்தழுவியைய
தீர்வதுபொருளோதுன்பநீயுண்டுதெய்வமுண்டு
மாருதியுண்டுநாஞ்செய்தவமுண்டுமறையுமுண்டால். (௬௮)

என்றலுமிறைஞ்சியாகமுற்றுமேல்யாரும்வெல்லார்
வென்றியுமரக்கர்மாடேவிடையருளிளவலோடும்
சென்றவனவியுண்டுவேள்வியுஞ்சிதைப்பனென்றான்
நன்றதுபுரிதியென்றானாயகனவில்வதானான். (௬௯)

ஆ திருவிருத்தம் - உ௮௬உ.

---

*

## ௨௬-வது, நிகும்பலைப்படலம்.

தம்பியைத்தழுவியையன்றமரைத்தவிசின்மேலான்
வெம்படைதொடுக்குமாயின்விலக்குவான்பொருட்டாலந்த
அம்புநீதுரப்பாயல்லையனையதுதுரந்தகாலை
உம்பருமுலகுமெல்லாம்விளியுமஃதொழிதியென்றான். (௧)

முக்கணான்படையுமாழிமுதலவன்படையுமுன்னின்
றுக்கவேவிடுமேவிட்டாலவற்றையுமவற்றாலோயத்
தக்கவாறியற்றிமற்றுன்சிலைவலித்தருக்கினாலே
புக்கவனாவிகொண்டுபோதிபுகழின்மிக்கோய். (௨)

வல்லனமாயைவிஞ்சைவகுத்தனவறிந்துமாளக்
கல்லுதிதருமமென்னுங்கண்ணகன்கருத்தைக்கண்டு
பல்பெரும்போருஞ்செய்துவருந்தலையற்றம்பார்த்துக்
கொல்லுதியமரர்தங்கள்கூற்றினைக்கூற்றமொப்பாய். (௩)

பதைத்தவன்வெம்மையாடிப்பல்பெரும்பகழிமாரி
விதைத்தவன்விதையாநின்றுவிலக்கினுமெலிவுமிக்கால்
உதைத்தவன்சிலையின்வாளிமருமத்தைக்கருதியோடி
வதைத்தொழில்புரிதிசாபநூனெறிமறப்பிலாதாய். (௪)

தொடுப்பதன்முன்னம்வாளிதொடுத்தவைதுறைகடோறும்
தடுப்பனதடுத்தியெண்ணிக்குறிப்பினாலுணர்ந்துதக்க
கடுப்பினுமளவிலாதகதியினுங்கணைகள்காற்றின்
விடுப்பனவவற்றைநோக்கிவிடுதியால்விரைவிலாதாய். (௫)

என்பனமுதலயாவும்யாவையுமியம்பியேற்ற
முன்பனைநோக்கியையமூவகையுலகுந்தாஅய்த்
தன்பெருந்தன்மைதானுமறுகிலாவொருவன்றாங்கும்
வன்பெருஞ்சிலையீதாகும்வாங்குதிவலமுங்கொள்வாய். (௬)

இச்சிலையியற்கைமேனாட்டமிழ்முனியியம்பிற்றெல்லாம்
அச்செனக்கேட்டாயன்றேயாயிரமௌலியண்ணல்
மெய்ச்சிலைவிரிஞ்சன்மூட்டும்வேள்வியின்வேட்டுப்பெற்ற
கைச்சிலையொன்றுதானேகொடுத்தனன்கவசத்தோடும். (௭)

---

2. முக்கண் - சோமன் சூரியன் அக்கினி என மூன்று.
7. தமிழ்முனி - அகத்தியன்.

ஆணியிவ்வுலகுக்கானவாழியான்புறத்திருந்த
தூணியுங்கொடுத்துமற்றுமுறுதிகள்பலவுஞ்சொல்லித்
தாணுவின்றொற்றத்தானைத்தழுவினன்றழுவலோடும்
சேணுயர்விசும்பிற்றேவர்தீர்ந்ததெந்தஞ்சிறுமையென்றார். (அ)

மங்கலந்தேவர்கூறவானவர்மகளிர்வாழ்த்தப்
பங்கமிலாசிகூறப்பலாண்டிசைபரவப்பாகத்
திங்களின்மௌலியண்ணறிரிபுரந்தீக்கச்சீறிப்
பொங்கினனென்னத்தோன்றிப் பொலிந்தனன் போர்மேற்போவா
[ன். (௯)

மாருதிமுதல்வராயவானரத்தலைவரோடும்
வீரநீசேறியென்றுவிடைகொடுத்தருளும்வேலை
ஆரியன்கமலபாதமகத்தினும்புறத்துமாகச்
சீரியசென்னிசேர்த்துச்சென்றனன்றருமச்செல்வன். (௧0)

பொலங்கொண்டலனையமேனிப்புரவலன்பொருமிக்கண்ணீர்
நிலங்கொண்டுபடரநின்றுநெஞ்சழிவானைத்தம்பி
வலங்கொண்டுவயிரவல்வில்லிடங்கொண்டுவஞ்சன்மேலே
சலங்கொண்டுகடிதுசென்றான்றலைகொண்டுவருவேனென்றே. (௧௧)

தான்பிரிகின்றிலாததம்பிவெங்கடுப்பிற்செல்லா
ஊன்பிரிகின்றிலாதவுயிரெனமறைதலோடும்
வான்பெருவேள்விகாக்கவளர்கின்றபருவநாளில்
தான்பிரிந்தேகக்கண்டதயரதன்றன்னையொத்தான். (௧௨)

வேறு.

சேனுபதியேமுதல்சேவகர்தாம்
ஆனார்நிமிர்கொள்ளிகொளங்கையினார்
கானார்நெறியும்மலையுங்கழியப்
போனார்கணிகும்பலைபுக்கனரால். (௧௩)

உண்டாயதொராலுலகுள்ளொருவன்
கொண்டானுறைகின்றதுபோற்குலவி
விண்டானும்விழுங்கவிரிந்ததனைக்
கண்டாரவரக்கர்கருங்கடலே. (௧௪)

நேமிப்பெயர்யூகநிறைத்துநெடுஞ்
சேமத்ததுநின்றதுதீவினையோன்
ஓமத்தனல்வெவ்வடவைக்குடனே
பாமக்கடனின்றதொர்பான்மையதே. (௧௫)

காராயின காய்கரி தேர்பரிமாத்
தாராயிரகோடி தழீஇயது தான்
நீராழியொடாழிநிறீஇயதுபோல்
ஓராயிரம்யோசனையுள்ள தனை. (கசு)

பொற்றேர்பரிமாகரிமாபொருதார்
எற்றேறபடைவீரரையெண்ணிலமால்
உற்றேறவியயூகமுலோகமுடைச்
சுற்றுயிரமூடுசுலாயதனை. (கஎ)

வண்ணக்கருமேனியின்மேன்மழைவாழ்
விண்ணைத்தொடுசெம்மயிர் வீசுதலால்
அண்ணற்கரியானனலம்படைவெம்
பண்ணைக்கடல்போல்வதொர்பான்மையதே. (கஅ)

வழங்காசிலைநாணொலிவானின்வரும்
பழங்கார்முகமொத்தபணிக்குலமும்
தழங்காகடல்வாழ்வனபோற்றகைசால்
முழங்காமுகிலொத்தனமாமுரசே. (ககூ)

வலியானவிராகவன்வாய்மொழியால்
சலியாதநெடுங்கடலுன்னலாய்
ஒலியாதுறுசேனையையுற்றொருநாள்
மெலியாதவரார்த்தனர்விண்கிழிய. (உ௦)

ஆர்த்தாரெதிரார்த்தவரக்கர்குலம்
போர்த்தார்முரசங்கள்புடைத்தபுகத்
தூர்த்தாரிவர்கற்படைசூன்முகிலின்
நீர்த்தாரையினம்பவர்நீட்டினரால். (உக)

மின்னும்படைவீசலின்வெம்படைமேல்
பன்னுங்கவிமீதுபடிந்துளதால்
துன்னுந்துறைநீர்நிறைவாவிதொடர்ந்
தன்னங்கள்படிந்தனவாமெனலாய். (உஉ)

வில்லும்மழுவும்மெழுவும்மிடலோர்
பல்லுந்தலையும்முடலும்படியில்
செல்லும்படிசிந்தினசென்றனவால்
கல்லும்மரமுங்கரமுங்கதுவ. (உ௩)

19. பணிலம் - கடைக்குறை, பணையென்றும்பாடம்.

வாலுந்தலையும்முடலும்வயிறும்
காலுங்கரமுந்தரைகண்டனவால்
கோலும்மழுவும்மெழுவுங்கொழுவும்
வேலுங்கணையும்வளையும்விசிற. (உச)

வென்றிப்படைவீரனைவீடணனீ
நின்றிக்கடைதாழுதனீவியதோ
சென்றிக்கடிவேள்விசிதைத்திலையேல்
இன்றிக்கடல்வெல்கிலம்யாமெனலும். (உரு)

தேவாசுரருந்திசைநான்முகனும்
மூவாமுதலீசனுமூவுலகின்
கோவாகியகொற்றவனும்முதலோர்
மேவாதவரில்லைவிசும்புறைவோர். (உசு)

பல்லார்படைநின்றனபல்லணியால்
பல்லார்படைநின்றனபல்பிறைவெண்
பல்லார்படைநின்றனபல்லியமும்
பல்லார்படைநின்றனபல்படையே. (உஎ)

இ-ள். பல்படை - பலவகைப்பட்ட சேனைகளில், பல்லார் - பலவீரர்களேறிய, படைநின்றன - தேர்ப்படைநின்றன, பல்லணியா - பலவணியாக, பல் - கல்லணை, ஆர் - தயங்கிய, படைநின்றன குதிரைப்படைநின்றன, பல்பிறைவெண்பல்லார் - பலபிறைபோலும் வெண்மையாகிய பற்களையுடையராகிய, படைநின்றன - காலாட்படைநின்றன, பல்லியம் - பலவாச்சியமும், உம்பல் - யானைகளும், ஆர் - நிரம்பிய, படைநின்றன - படைகள்நின்றன. எ-று.

பல்லல் ஆகவென்பவற்றில் ஈறழிவும், உம் பல்லாரென்பதில் லகரவெழுத்துப்பேறும் செய்யுள் விகாரம். பிறைவெண் பல்லார் படை யென்றமையினதற்குக் காலாட்படையெனவும், பரிகளால் கரிகளைப்பின்னே கூறினமையின் முன்னே பொதுப்படநின்ற பல்லார்படையென்பதற்குத்தேர்ப்படையெனவும் பொருள்கூறினும். நால்வகைப்படையையு முறைபிறழக் கூறியது. வானரவீரர்களும் அப்படைத்தலைவர்களும்பொருத பூசலால் அவைகலங்கினதன்மை தோன்றற்கு. இச்செய்யுள் சொற்பின்வருநிலை.

அக்காலையிலக்குவனப்படையுள்
புக்கானயிலம்புபொழிந்தனனால்

உக்காரவரக்கர் தழுரொழியப்
புக்கார்நமனூருறைதென்புலமே. (உ௮)

தேருமதமாகரிதேர்பரிமா
நூறாயிரகோடியினூழில்படச்
சேறூர்குருதிக்கடலிற்றிடரிற்
கூறாயுகவாவிகுறைத்தனனால். (உ௯)

வாமக்கரிதானழிவார்குழிவன்
றீமொய்த்தவரக்கர்கள்செம்மயிரின்
தாமத்தலைபுக்கதழுங்கெரியின்
ஓமத்தைநிகர்த்தவுலப்பிலவால். (௩0)

சிலையின்கணையூடுதிறந்தனதிண்
கொலைவெங்களிமால்கரிசெம்புனல்கொண்
டலைவின்றுகிடந்தனவொத்தனவால்
மலையுஞ்சுனையும்வயிறும்முடலும். (௩௧)

விற்றொத்தியவெங்கணையெண்கின்வியன்
பற்றொத்தியபோற்படியப்பலவும்
முற்றச்சுடர்மின்மினிமொய்த்துளவன்
புற்றொத்தமுடித்தலைபூழியன. (௩௨)

படுமாரிநெடுங்கணைபாய்தலினால்
விடுமாறுதிரப்புனல்வீழ்வனவால்
தடுமாறுநெடுங்கொடிதாழ்கடல்வாய்
நெடுமாமுகில்வீழ்வநிகர்த்தனவால். (௩௩)

மின்னார்கணைதாளறவீசவிழுந்
தன்னாருதிரத்துளழுந்துதலால்
ஒன்னார்முழுவெண்குடையொத்தனவால்
சென்னாகம்விழுக்கியதிங்களினை. (௩௪)

கொடுநீள்கரிகையொடுதாள்குறையப்
படுநீள்குருதிப்படர்கின்றனவால்
அடுநீளுயிரின்மையினாழ்கிலவால்
நெடுநீரினிடங்கர்நிகர்த்தனவால். (௩௫)

கரியுண்டகளத்திடையுற்றனகார்
நரியுண்டியுகப்பனநட்டனவால்

31. மால் - பெரிய.

இரியுண்டவரின்னியம்விட்டிலதால்
வரியுண்டவுடற்பொறைமாளினவால். (௯௬)

வாயிற்கனல்வெங்கடுவாளியினம்
பாயப்பருமக்குலம்வேவுனவால்
வேயுற்றநெடுங்கிரிமீவெயிலாம்
தீயுற்றனபோன்றசினக்கரியே. (௯௭)

அலைவேலையரக்கரையெண்கினுகிர்த்
தலைமேன்முடியைத்தரைதள்ளுதலால்
மலைமேலுயர்புற்றினைவள்ளுகிரால்
நிலைபேரமறிப்பநிகர்த்தனவால். (௯௮)

மாவாளிகண்மாமழைபோல்வரலால்
மாவாளிகள்போர்செறுமாமறவோர்
மாவாளிகள்வன்றலையின்றலைவாம்
மாவாளிகளோடுமறிந்தனரால்.

இ-ள். மா - அழகிய, வாளிகள் - அம்புகள், மாமழைபோல் - பெருமழைபோல், வரலால் - வந்துபாய்வதினால், மா - பெரிய, ஆளிகள் - யாளிகளை, போர்செறும் - போரிற் கொல்லுகின்ற, மாமறவோர் - சிறந்தகாலாள் வீரர்களும், மாவாளிகள் - யானை வீரர்களுங் குதிரைவீரர்களும், வன்றலையின்தலை - திண்ணியதலை யில், வாம் - தாவிமொய்க்கின்ற, மாவாளிகளோடு - மாவாகிய வண்டுகளோடு, மறிந்தனர் - இறந்தொழிந்தனர்கள். எ-று.

அழகென்றது போரின்முறைமையிற் பிறழாமையை. ஆளி நீட்டல் அணி - ஆகுபெயர், அது தும்பையென்பது போரினிலை கூறலாற்பெற்றும். (௯௯)

அங்கங்கிழியத்துணிபட்டதனால்
அங்கங்கிழிகுற்றவமர்த்தலைவர்
அங்கங்கிழிசெம்புனல்பம்பவமைந்
தங்கங்கணிரம்பியலம்பியதால்.

இ-ள். அங்கங்கு - அவ்வப்போர்த்துறைகளில், இழிகுற்ற - வெற்றியின்மை யடைந்த, அமர்த்தலைவர் - போர்த் தலைவர்கள், அங்கம் - உறுப்புகள், கிழிய - பிளவுறும்படி, துணிபட்டதனால் - துணிபட்டமையால், அம் - அழகிய, கங்கு - பருந்துகள், இழி - அஞ்சாது உண்ண இழிகின்ற, செம்புனல் - உதிரமானது, பம்ப -

பரவ, அலைந்து - அலைகளெறிந்து சென்று, ஆம் - அவ்விடத்துக் கிடக்கின்ற, கங்கள் - சிரங்களை, நிரம்பி - முழுமை நிறைந்து, அலம்பியது - துகளொழியக் கழுவியது. எ-று.

போர்த்துறைகளென்றது வில்வாள் தண்டுமுதலிய படைக ளாற் செய்யும் போர்வகைகளையாகலின் அடுக்குப்பன்மைப் பொ ருட்டு இராவணனது முதற்போர் நிகழ்ந்தநாட்டொட்டு அரக்கரு டைய ஆனுண்டுடல் தசைந்தன வாகலின் அங்கங்கென்றார், ஆம் என்னும் பெயரெஞ்சுகிளவி அம்மெனத் தொகுத்தலாயிற்று. (௪௦)

வன்றானையைவார்கணைமாரியினால்
முன்றானதயோர்தேர்கொடுமொய்பலதேர்
பின்றாவெதிர் தானவர்பேரணியைக்
கொன்றானனவெய்துகுறைத்தனனால். (௪௧)

வேறு.

மலைகளுமழைகளும்வானமீன்களும்
அலையவெங்கால்பொரவழிந்தவாமென
உலைகொள்வெங்கனல்பொதியோமமுற்றவால்
தலைகளுமுடல்களுஞ்சரமுந்தாவுவ. (௪௨)

வாரணமனையவன்றுணிப்பவான்படர்
தாரணிமுடிப்பெருந்தலைகடாக்கலால்
ஆரணமந்திரமமையவோதிய
பூரணமணிக்குடமுடைந்துபோயதால். (௪௩)

தாறுகொண்மதகரிசுமந்துதாமரை
சீறியநெடுந்தலையுருட்டிச்செந்நிறத்
தாறுகள்செறிந்தபேருதிரத்தோங்கலை
ஆறுகளொழுங்கனலவியச்சென்றவால். (௪௪)

தெரிகணைவிசும்பிடைச்சுமந்துசெம்மயிர்
வரிகழலரக்கர்தந்தடக்கைவாளொடும்
உருமெனவிழுதலினனலுக்கோக்கிய
எருமைகண்மறிந்தனமறியுமீர்ந்தவால். (௪௫)

அங்கடங்கழிந்தபோருவிக்குன்றினின்
அங்கடங்கிழிந்திலரழிந்தவாடவர்

---

41. அன்றாயிரமோலியகந்தனமர்ப் என்றும் பாடம்.

அங்கடங்கலும்படர்குருதியாழியின்
அங்கடங்கினர்தொடர்பகழியஞ்சினார்.

இ-ள். அம் - (சித்திரத்தொழில்பெற்று) அழகாகிய, கடம்-கன்னத்தினின்றும், கழிந்த - நீங்கி ஒழுகுகின்ற, பேரருவி - மிக்கமதவருவியையுடைய, குன்றின் - யானையைப்போல, ஆம் - ஆகிய, கடம் - உடல், கிழிந்திலர் - பிளந்திலராகி, அழிந்த - ஊக்கமழிந்த, ஆடவர் - இராக்கத புருடர், தொடர் - மாலைபோல்வருகின்ற, பகழி - அம்புகளுக்கு, அஞ்சினார் - அஞ்சினவராகி, (வேறே ஒளிப்பிடமின்மையால்) அங்கடங்கலும் - அப்போர்க்கள முழுமையும், படர் - பரவியோடுகின்ற, குருதியாழின் - உதிரக்கடலாகிய, அங்கண் - அவ்விடத்து, தங்கினர் - மூழ்கியிருந்தனர். எ-று.

ஆமென்பது அம்மெனவும், அங்கடங்கினரென்பது அங்கடங்கினரெனவும் முறையேகுறுக்கலும்தொகுத்தலும்பெற்றன. கற்பினின்வழா அநற்பலவுதவி, பாம்பினிற்கடிது தேள்என்பனபோலக் குன்றி னெனவந்த இன்னுருபு ஆமென்னும்பெயரெச்சங்கொண்டது, இங்ஙனஞ் சாரியை பெற்றுவருதலை, இன் சாரியைமுழுவதுங் கெடுமிடனுணர்த்தும் "இன்னெனவரூஉம் வேற்றுமையுருபிற்கின்னென் சாரியையின்மை வேண்டும்" என்னுஞ் சூத்திரத்தை, இன் சாரியைமுதறிரியுமாறுகூறும், அவற்றுள் - இன்னினிகரமென்னுஞ்சூத்திரத்தோடு சாரவையாமையால், உரையாசிரியரும் இன்மை வேண்டுமென்னுமிடத்து உம்மை தொக்குநின்ற தாக்கியதனால், நச்சினார்க்கினியாரும் அமைத்தனர். கடங்கழிந்த பேரருவிக்குன்றினினென்னு முவமைமுகத்தானே இராமாநுஜரெய்த கணையால் தைப்புண்ட மத்தகத்தினின்று மிரண்டு பாரிசங்களிலும் பெருங்குருதி யொழுகலுற்றவுடலினராயின ராடவரென்பது. இதுமெய்யுவமை. (சகூ)

காறலத்தொடுதுணிந்தழியக்காய்நதிர்க்
கோறலைத்தலையுறமறுக்கங்கூடினார்
வேறலத்தூன்றினார்துளங்குமெய்யினார்
நாறலைக்குடரினார்பலருநண்ணினார். (சஎ)

பொங்குடறுணிந்ததம்புதல்வர்போக்கிலார்
தொங்குடற்றேண்மிசையிருந்துசோர்வுற
அங்குடற்றம்பியைத்தழுவியண்மினார்
தங்குடர்முதுகிடைச்சொரியத்தள்ளுவார். (சஅ)

மூடியநெய்யொடுநறவுமுற்றிய
சாடிகள்பொரியொடுதகர்ந்துதள்ளுறக்
கோடிகள்பலபலகுழாங்குழாங்களா
ஆடினவறுகுறையறுக்குமாக்கைகள். (௪௯)

காலெனக்கடுவெனக்கலிங்கக்கம்மியர்
நூலெனவுடற்பொறைதொடர்ந்தநோயெனப்
பாலுறுபிரையெனக்கலந்துபன்முறை
வேலுறுசேனையைத்துணித்துவீழ்த்தினான். (௫௦)

கண்டனன்றிசைதொறுநோக்கிக்கண்ணகன்
மண்டலமறிகடலன்னமாப்படை
விண்டெறிகால்பொரமறிந்துவீற்றுறும்
தண்டலையாமெனக்கிடந்ததன்மையே. (௫௧)

மிடலின்வெங்கடகரிப்பிணத்தின்விண்டொடும்
திடலும்வெம்புரவியுந்தேருஞ்சிந்திய
உடலும்வன்றலைகளுமுதிரத்தோங்கலைக்
கடலுமல்லாலிடையொன்றுங்கண்டிலன். (௫௨)

நூறுநூறாயிரகோடிநோன்கழல்
மாறுபோரரக்கரையொருவன்வாட்கணை
கூறுகூறாக்கியகுவையின்சோரியின்
ஆறுமேயன்றியோரரக்கைகண்டிலன். (௫௩)

நஞ்சினும்வெய்யவர்நடுங்கிநாவுலர்ந்
தஞ்சினர்சிலர்சிலரடைகின்றார்சிலர்
வெஞ்சினவீரர்கண்மீண்டிலாதவர்
துஞ்சினர்துணையிலரெனத்துளங்கினார். (௫௪)

ஓமவெங்கனலவிந்துழைக்கலப்பையும்
காமர்வண்டருப்பையும்பிறவுங்கட்டற
நாமமந்திரத்தொழின்மறந்துநந்துறு
தூமவெங்கனலெனப்பொலிந்துதோன்றினான். (௫௫)

அக்கணத்தடுகளத்தப்புமாரியால்
உக்கவரொழிதரவுயிருளோரெலாம்
தொக்கனரக்கனைச்சூழ்ந்துசுற்றுறப்
புக்கதுகவிப்பெருஞ்சேனைப்போர்க்கடல். (௫௬)

---

54. நஞ்சினும் - காளகூடவிடத்தினும்.

ஆயிரமாருடையாழிமாப்படை
ஏயெனுமளவினினழிந்தவென்பதும்
தூயவன்சிலைவலித்தொழிலுந்துன்பமும்
மேயினவெகுளியுங்கிளரவெம்பினான். (௫௭)

மெய்குலைந்திருநிலமடந்தைவிம்முறச்
செய்கொலைத்தொழிலையுஞ்சென்றறியவர்
மொய்குலத்திறுதியுமுனிவர்கண்டனர்
கைகுலைக்கின்றதுங்கண்ணினோக்கினான். (௫௮)

மானமும்பாழ்படவகுத்தவேள்வியின்
மோனமும்பாழ்படமுடிவிலாமுரட்
சேனையும்பாழ்படச்சிறந்தமந்திரத்
தேனையும்பாழ்படவினையசெப்பினான். (௫௯)

வெள்ளமையைந்துடன்விரிந்தசேனையின்
உள்ளதக்குரோணியீரைந்தொடோயுமால்
எள்ளருவேள்விநின்றினிதியற்றுதல்
பிள்ளைமையனையதுசிதைந்துபேர்ந்ததால். (௬௦)

தொடங்கியவேள்வியின்னீமவெங்கனல்
அடங்கியதவிந்துளதமையுமாமன்றே
இடங்கொடுவெஞ்செருவென்றியின்றெனக்
கடங்கியதென்பதற்கேதுவாகுமால். (௬௧)

ஆங்கதுகிடக்கநான்மனிசர்க்காற்றலென்
நீங்கினானென்பதோரிழிவுநேருற
ஈங்குநின்றியாவருமியம்பவென்குலத்
தோங்குபேராற்றலுமொளியுமொல்குமால். (௬௨)

மந்திரவேள்விபோய்மடிந்ததாமெனச்
சிந்தையினினைந்துநொந்திருந்துதெய்வுறல்
அந்தரத்தமரர்தாமனிசர்க்காற்றலன்
இந்திரற்கேயிவன்வலியென்றேசவோ. (௬௩)

என்றவன்பகர்கின்றவெல்லையின்னிருங்
குன்றொடுமரங்களும்பிணத்தின்கூட்டமும்
பொன்றினகரிகளுங்கவிகள்போக்கின
சென்றனபெரும்படையிரிந்துசிந்தின. (௬௪)

---

63. மந்திரவேள்வி-இரகசியமாகநடத்தும் யாகம், மந்திரம்-இரகசியம்.

ஒதுங்கினரொருவர்கீழொருவர்புக்குறப்
பதுங்கினர்நடுங்கினர்பகழிபாய்தலின்
பிதுங்கினர்குடருடல்பிளவுபட்டனர்
மதம்புலர்களிறெனச்சீற்றமாற்றினார். (௬௫)

வீரன்வெங்கணையொடுங்கவிகள்வீசிய
கார்வரையரக்கர்தங்கடலின்வீழ்ந்தன
போர்நெடுங்கால்பொரப்பொழியுமாமழைத்
தாரையுமேகமும்படிந்ததன்மைய. (௬௬)

திரைக்கடற்பெரும்படையிரிந்துசிந்திட
மரத்தினிற்புடைத்தரைத்துதிர்த்தமாருதி
அரக்கனுக்கணித்தெனவணுகியன்னவன்
உரைக்கதமுறுவதோர்மாற்றமோதினான். (௬௭)

வேறு.

நானுனையிரந்துகூறுநயமொழியொன்றுங்கேளாய்
சானகிதன்னைவாளாற்றடிந்ததோதனதன்றந்த
மானமேற்சேனையோடும்வடதிசைநோக்கிமீது
போனதோகோடிகோடிவஞ்சமும்பொய்யும்வல்லாய். (௬௮)

தடந்திரைப்பரவையன்னசக்கரயூகம்புக்குக்
கிடந்ததுகண்டதுண்டோநாணொலிகேட்டிலாயோ
தொடர்ந்துபோயயோத்திதன்னைக்கிளையொடுந்துணியநூறி
நடந்ததெப்பொழுதுவேள்விமுடிந்ததேதகருமநன்றே. (௬௯)

ஏந்தகன்ஞாலமெல்லாமினிதுறைந்தியற்கைதாங்கும்
பாந்தளிற்பெரியதிண்டோட்பாதகனைப்பழியிற்றீர்ந்த
வேந்தனைக்கண்டுநீநின்வில்வலங்காட்டிமீண்டு
போந்ததோவுயிருங்கொண்டேயாயினும்புதுமையன்றே. (௭௦)

அம்பரத்தமைந்தவல்விற்சம்பரனாவிவாங்கி
உம்பருக்குதவிசெய்தவொருவனுக்குதயஞ்செய்த
நம்பியைமுதல்வரானமூவர்க்குநால்வரான
தம்பியைக்கண்டுநின்றன்றனுவலங்காட்டிற்றுண்டோ. (௭௧)

தீயொத்தவயிரவாளியுடலுறச்சிவந்தசோரி
காயத்தின்செவியினூடும்வாயினுங்கண்களூடும்

---

71. அம்பரத்து - ஆகாயத்தில்.

பாயப்போயிலங்கைபுக்குவஞ்சனைபரப்பச்செய்யும்
மாயப்போராற்றலெல்லாமின்றொடுமடியுமன்றே. (எஉ)

பாசமோமலரின்மேலான்பெரும்படைக்கலமோபண்டை
ஈசனார்படையோமாயோனேமியோயாதோவின்னும்
வீசநீர்விரும்பிகின்றீரதற்குநாம்வெருவிச்சாலக்
கூசினேம்போதும்போதுங்கூற்றினார்குறுகவந்தார். (எ௩)

வரங்களீருடையவாறுமாயங்கள்வல்லவாறும்
பரங்கொள்வான்வரிவிற்றெய்வப்படைக்கலம்படைத்தவாறும்
உரங்களுநின்றதன்றேயும்மைநாமுயிரினோடும்
சிரங்களைத்துணித்துமென்னக்கண்டதுதிறம்பினோமோ. (எச)

விடந்துடிக்கின்றகண்டத்தண்ணலும்விரிஞ்சன்றானும்
படந்துடிக்கின்றநாகப்பாற்கடற்பள்ளியானும்
சடந்துடிக்கிலராய்வந்துதாங்கினுஞ்சாதறிண்ணம்
இடந்துடிக்கின்றதுண்டேயிருத்திரோவியம்புவீரே. (எரு)

கொல்வனென்றுன்னைத்தானேகுறித்தொருசூளுங்கொண்ட
வில்லிவந்தருகுசார்ந்துன்சேனையைமுழுதும்வீட்டி
வல்லைநீபொருவாயென்றுவிளிக்கின்றான்வரிவினாணின்
ஒல்லொலியையசெய்புமோமத்துக்குறப்பொன்றாமோ. (எசு)

மூவகையுலகுங்காக்குமுதலவன்றம்பிபூசல்
தேவர்கண்முனிவர்மற்றுந்திறத்துலகஞ்சேர்ந்தார்
யாவருங்காணநின்றானினியிறைதாழ்ப்பதென்னோ
சாவதுசரதமன்றோவென்றனன்றருமங்காப்பான். (எஎ)

அன்னவாசகங்கள்கேளாவனலுயிர்த்தலங்கற்பொற்றோள்
மின்னகுபகுவாயூடுவெயிலுகநகைபோய்வீங்க
முன்னரேவருதிம்மாற்றமொழிகின்றீர்மொழிந்தமாற்றம்
என்னதோநீயிரென்னையிகழ்ந்ததென்றினையசொன்னான். (எஅ)

மூண்டபோர்தோறும்பட்டுமுடிந்தனர்முறையிற்றீர்ந்து
மீண்டபோததனையெல்லாமறத்திரேவிளிதல்வேண்டி
ஈண்டவாவென்னாநின்றீரித்தனைபேரும்பட்டு
மாண்டபோதுயிர்தந்தீபுமருந்துவைத்தனிரோமான. (எகூ)

இலக்குவனாகமற்றையிராமனேயாகவீண்டு
விலக்குவரெல்லாம்வந்துவிலக்குககுரக்கின்வெள்ளம்

77. சரதம் - சத்தியம், உண்மை.

குலக்குலமாகமாளுங்கொற்றமுமனிசர்கொள்ளும்
அலக்கணுமுனிவர்தாமுமமரருங்காண்பரன்றே. (௮௦)

யானுடைவில்லுமென்பொற்றோள்களுமிருக்கவின்னும்
ஊனுடையுயிர்கள்யாவுமுய்யுமோவொளிப்பிலாமல்
கூனுடைக்குரங்கினோடுமனிசரைக்கொன்றுசென்றவ்
வானினுந்தொடர்ந்துகொல்வென்மருந்தினுமுய்யமாட்டீர். (௮௧)

வேட்கின்றவேள்வியின்றுபிழைத்ததுவென்றோமென்று
கேட்கின்றவீரமெல்லாங்கிளத்துவீர்கிளத்தல்வேண்டா
தாட்கின்றதில்லையும்மைத்தனித்தனிதலைகள்பாறச்
சூட்கின்றவீரமென்கைச்சரங்களாய்த்தோன்றுமன்றே. (௮௨)

மற்றெலாநும்மைப்போலவாயினாற்சொல்லமாட்டேன்
வெற்றிதான்மூன்றுதந்தீர்விரைவதுவெல்லற்கெல்லாம்
உற்றுநானுருத்தகாலத்தொருமுறையெதிரேநிற்கக்
கற்றிரோவின்னமாண்டுகிடத்திரோகடத்திரோதான். (௮௩)

நின்மின்கணின்மினென்றுநெருப்பெழவிழித்துநீண்ட
மின்மின்கொள்கவசமிட்டான்வீக்கினான்றூணிவீரப்
பொன்மின்கொள்கோதைகையிற்பூட்டினான்பொறுத்தான்போர்வில்
என்மின்கொள்வயிரத்திண்டேரேறினானெறிந்தாணி. (௮௪)

ஊதினான்சங்கம்வானத்தொண்டொடிமகளிரொண்கண்
மோதினார்கணத்தின்முன்னேமுழுவதுமுருங்கமுற்றிக்
காதினானென்னவானோர்கலங்கினார்கயிலையானும்
போதினான்றானுமின்றுபுகுந்ததுபெரும்போரென்றார். (௮௫)

இழைத்தபேர்யாகந்தானேயாஞ்செய்ததவத்தினாலே
பிழைத்ததுபிழைத்தலாலேயிவனினிப்பிழைக்கலாற்றான்
அழைத்ததுவிதியேயாகுமிலக்குவனம்பினாலே
உழைத்ததுகாண்கின்றோமென்றுணங்கினாரும்பரெல்லாம். (௮௬)

நாண்டொழிலோசைவீசிச்செவிதொறுநடத்தலோடும்
ஆண்டொழிலுடனேகையினடுக்கியமரனுங்கல்லும்
மீண்டனமறிந்துசோரவிழுந்தனவிழுந்தமெய்யே
மாண்டனமென்றேயுன்னியிரிந்ததுகுரங்கின்மாலை. (௮௭)

படைப்பெருந்தலைவர்நின்றாரல்லவரிறுதிபற்றும்
அடைப்பருங்காலக்காற்றாலாற்றலதாகிக்கீறிப்

85. முருங்க - அழிய.

புடைத்திரிந்தோடும்வேலைப்புனலெனவிரியலுற்றார்
கிடைத்தபேரனுமனாண்டோர்நெடுங்கிரிகிழித்துக்கொண்டான். ()

நில்லடாநில்லுநில்லுநீயடாவாசிபேசிக்
கல்லெடாநின்றதென்னைப்போர்க்களத்தமரர்காணக்
கொல்லலாமென்றோநன்றுகுரங்கென்றாற்கூடுமென்றே
நல்லைபோர்வாவாவென்றானமனுக்குநமனாய்நின்றான். (௮௯)

வில்லெடுத்துருத்துநின்றவீரருள்வீரனேரே
கல்லெடுத்தெறியவந்தவனுமனைக்கண்ணினோக்கி
மல்லெடுத்துயர்ந்ததோளார்க்கென்கொலோவலியதென்னாச்
சொல்லெடுத்தமரர்சொன்னார்தாதையுந்துணுக்கமுற்றான். (௯௦)

வீசினன்வயிரக்குன்றம்வெம்பொறிக்குலங்கள்விண்ணின்
ஆசையினிமிர்ந்துசெல்லவாயிரமுறுமொன்றாகப்
பூசினபிளப்பிதென்னாவருமதன்புரிவைநோக்கிக்
கூசினவுலகமெல்லாங்குலைந்ததவ்வரக்கர்கூட்டம். (௯௧)

குண்டலநெடுவில்வீசமேருவிற்குவிந்ததோளான்
அண்டமுங்குலுங்கவார்த்துமாருதியசனியஞ்ச
விண்டலத்தெறிந்தகுன்றம்வெறுந்துகளாகிவீழக்
கண்டனனெய்ததன்மைகண்டிலரிமைப்பில்கண்ணார். (௯௨)

மாறொருகுன்றம்வாங்கிமறுகுவான்மார்பிற்றோளில்
காறருகாலிற்கையிற்கழுத்தினினுதலிற்கண்ணில்
ஏறினவென்பமன்னோவெரிமுகக்கடவுள்வெம்மை
சீறினபகழிமாரிதிக்கடுவிடத்திற்றோய்ந்த. (௯௩)

வெதிரொத்தசிகரக்குன்றின்மருங்குறவிளங்கலானும்
எதிரொத்தவிருளைக்கீறியெழுகின்றவியற்கையானும்
கதிரொத்தபகழிக்கற்றைகதிரொளிகாட்டலானும்
உதிரத்தின்செம்மையானுமுதிக்கின்றகதிரோனொத்தான். (௯௪)

ஆயவனயர்தலோடுமங்கதன்முதல்வரானோர்
காய்சினந்திருகிவந்துகலந்தனர்கதிரோன்பெற்ற
தூயசுக்கிரீவன்வந்துதோன்றினன்றோன்றக்கண்டு
தீயவனவனைநோக்கிக்கனலெனச்சினத்துச்சொன்னான். (௯௫)

வெம்பினசெருவின்வந்துமேவினும்வெகுண்டுசீயம்
தும்பியைத்தொடர்வதல்லாற்குரங்கினைத்தொடர்வதுண்டோ

94. கற்றை - கூட்டம்.

அம்பினைமாட்டியென்னேசிறிதுபோராற்றவல்லான்
தம்பியைக்காட்டித்தாரீர்சாதிரோசலத்தினென்றான். (கூசு)

அனுமனைக்கண்டிலீரோவவனினும்வலியிரோவென்
தனுவுளதன்றோதோளினவ்வலிதவிர்ந்ததுண்டோ
இனுமுனைநீரலீரோவெவ்வலியீட்டிவந்தீர்
மனிசனைக்காட்டிநுந்தமலைதொறும்வழிக்கொளீரே. (கூஎ)

என்றுரைத்திளவறன்மேலெழுகின்றவியற்கைநோக்கிக்
குன்றமுமரமும்வீசிக்குறுகினார்குழாங்கடோறும்
சென்றனபகழிமாரிமேருவையுருவித்தீர்வ
ஒன்றலகோடிகோடியுளைந்தனவலியுமோய்ந்த. (கூஅ)

படுகின்றதன்றோவுன்றன்பெரும்படைபகழிமாரி
விடுகின்றதன்றோவென்றியரக்கனுங்காளமேகம்
இடுகின்றவேள்விமாண்டதினியவன்பிழைப்புறாமே
முடுகென்றானரக்கன்றம்பிநம்பியுஞ்சென்றுமூண்டான். (கூகூ)

வேறு.

வந்தானெடுந்தகைமாருதிமயங்காமுகமலர்ந்தான்
எந்தாய்கடிதேறாயெனதிருதோண்மிசையென்றான்
அந்தாகவென்றுவந்தையனுமமைவாயினனிமையோர்
சிந்தாகுலங்களைந்தானெனநெடுஞ்சாரிகைதிரிந்தான். (க00)

காராயிரமுடனாகியதெனலாகியகடியோன்
ஓராயிரம்பரிபூண்டதொருயர்தேர்மிசையுயர்ந்தான்
நெராயினரிருவோர்களுநெடுமாருதிநிமிரும்
பேராயிரமுடையானெனத்திசையெங்கணும்பெயர்ந்தான். (க0க)

தீயொப்பனவுருமொப்பனவுயிர்வேட்டனதிரியும்
பேயொப்பனபசியொப்பனபிணியொப்பனபிழையா
மாயக்கொடுவினையொப்பனமழுவொப்பனகழுகின்
தாயொப்பனசிலவாளிகடுரந்தான்றுயிறுறந்தான். (க0உ)

அவ்வம்பினையவ்வம்பினினறுத்தானிகலரக்கன்
எவ்வம்பினியுலகத்துளதென்னும்படியெய்தான்
எவ்வம்பரமெவ்வெண்டிசையெவ்வேலைகள்பிறவும்
வவ்வுங்கடையுகமாமழைபொழிகின்றதுமான. (க0ங)

ஆயோனெடுங்குருவிக்குலமெனலாஞ்சிலவம்பால்
போயோடிடத்துரந்தானவைபொறியோவெனமறியத்
தூயோனுமத்துணைவாளிகள்தொடுத்தானவை தடுத்தான்
தீயோனுமக்கணத்தாயிரநெடுஞ்சாரிகைதிரிந்தான். (௧௦௪)

கல்லுந்நெடுமலையும்பலமரனுங்கடைகாணும்
புல்லுஞ்சிறுபொடியும்மிடைதெரியாவகைபுரியச்
செல்லுந்நெறிதொறுஞ்சென்றனதேறுங்கால்புரைமறவோன்
மல்லின்முதிர்தேருஞ்சினவயமாருதிதாளும். (௧௦௫)

இருவீரருமிவனின்னவனிவனின்னவனென்னச்
செருவீரருமறியாவகைதிரிந்தார்கணைசொரிந்தார்
ஒருவீரருமிவரொக்கிலரெனவானவருவந்தார்
பொருவீரையும்பொருவீரையும்பொருதாலெனப்பொருதார். ()

விண்செல்கிலசெல்கின்றனவிசிகம்மெனவிமையோர்
கண்செல்கிலமனஞ்செல்கிலகணிதம்முறுமெனினோர்
எண்செல்கிலநெடுங்காலவனிடைசெல்கிலனுடன்மேல்
புண்செல்வனவல்லாலொருபொருள்செல்வனதெரியா. (௧௦௭)

எரிந்தேறினதிசையானையுமிடியாமெனப்பொடியாய்
நெரிந்தேறினநெடுநாணொலிபடர்வானிறையுருமின்
சொரிந்தேறினசுடுவெங்கணைதொடுந்தாரகைமுழுதும்
கரிந்தேறினவுலகியாவையுங்கனல்வெம்புகைகதுவ. (௧௦௮)

வெடிக்கின்றனதிசையானையும்விழுகின்றனவிடிவந்
திடிக்கின்றனசிறுநாணொலியிருவாய்களுமெதிராக்
கடிக்கின்றனகனல்வெங்கணைகலிவானுறவிசைமேல்
பொடிக்கின்றனபொறிவெங்கனலிவைகண்டனர்புலவோர். (௧௦௯)

கடல்வற்றினமலையுக்கனபருவக்கனல்பருகுற்
றுடல்வற்றினமரமுற்றினகனல்பற்றினவுதிரம்
சுடர்பற்றினசுறவுக்கனதுணிபட்டுதிர்கணையின்
திடருற்றதுபரவைக்குழிதிரிவுற்றதுபுவனம். (௧௧௦)

எரிகின்றனவயில்வெங்கணையிருசேனையுமிரியத்
திரிகின்றனபுடைநின்றிலதிசைசென்றனசிதறிக்
கரிபொன்றினபரிமங்கினகவிசிந்தினகடல்போல்
சொரிகின்றனபொருசெம்புனலுலைகின்றனர்கொலையால். (௧௧௧)

---

104. ஆயோன் - இந்திரசித்து.

புரிந்தோடினபுகைந்தோடினபொரிந்தோடினபுகைபோய்
எரிந்தோடினகரிந்தோடினவிட்டோடினவலமே
திரிந்தோடினவிரிந்தோடினசெறிந்தோடின திசைமேல்
சரிந்தோடினகருங்கோளரிக்கிளையான்விடுசரமே. (௧௧௨)

நீரொத்தனநெருப்பொத்தனபொருப்பொத்தனநிமிரும்
காரொத்தனவுருமொத்தனகடலொத்தனகதிரோன்
தேரொத்தனவிடைமேலவன்சிரிப்பொத்தனவுலகின்
வேரொத்தனவாயொத்தனநிருதன்விடுசரமே. (௧௧௩)

ஏமத்தடுகவசத்தனவொருவோரெனவிருவோர்
வாமப்பொருநதோண்மேலெனவதனத்தனவுயிர்த்த
தாமத்தனமார்பத்தனசரணத்தனதங்காக்
காமக்குலமடமங்கையர்கடைக்கண்ணெனக்கணைகள். (௧௧௪)

எந்நாளினினைத்தேவர்களைத்தானவரெவரே
அன்னார்செருவொத்தாரெனவிமையோரெடுத்தார்த்தார்
பொன்னார்சிலையிருகால்களுமொருகால்பொறையுயிரா
முன்னாளினிலிரண்டாம்பிறைமுளைத்தாலெனவளைத்தார். (௧௧௫)

வேகின்றனவுலகங்கிளர்விடுகின்றனவிசிகம்
போகின்றனசுடர்வெந்தனவிமையோர்களும்புலர்ந்தார்
ஆகின்றதெதாரழிகாலமிதாமன்றெனவயிர்த்தார்
நோகின்றன திசையானைகள்செவிநாணொலி நுழைய. (௧௧௬)

மீனுக்கதுநெடுவானகம்வெயிலுக்கதுசுடரும்
மானுக்கதுமுழுவெண்மதிமழையுக்கதுவானம்
தானுக்கதுகுலமால்வரை தலையுக்கது தகைசால்
ஊனுக்கவெவ்வுலகத்தினுமுளவாயினவுயிரும். (௧௧௭)

அக்காலையினயில்வெங்கணையையைந்துபுக்கழுந்தத்
திக்காசறவென்றான்மகனிளங்கோவுடல்செறித்தான்
கைக்கார்முகம்வளையச்சிலகனல்வெங்கணைகவசம்
புக்காகமுங்கழன்றோடிடவிளங்கோளரிபொழிந்தான். (௧௧௮)

தெரிந்தான்சிலசுடர்வெங்கணைதேர்பூண்டனசினமா
இரிந்தோடிடத்துரந்தோடினவிமையோரையுமுன்னாள்
அரிந்தோடினவெரிந்தோடினவவைகோத்தடலரக்கன்
சொரிந்தானுயர்நெடுமாருதிதோண்மேலினிற்றோன்ற. (௧௧௯)

112. புரிந்தோடின - சுழன்றோடின. 117. மீனுக்கது - நட்சத்திரம்உதிர்ந்தது.

குருதிப்புனல்சொரியும்முயர்குன்றென்னுமவனுமன்
பருதித்திறநிறமொத்தவைபிளங்கோளரிபார்த்தான்
ஒருதிக்கினுமுயராவகையவன்றேரினையுதிர்த்தான்
பொருதிக்கணம்வென்றானெனச்சரமாரிகள்பொழிந்தான். (கஉ0)

அத்தேதரழிந்ததுநோக்கியவிமையோரெடுத்தார்த்தார்
முத்தேவருமுவந்தாரவனுருமேறெனமுனிந்தான்
தத்தாவொருதடந்தேரினைத்தொடர்ந்தான்சரந்தலைமேல்
பத்தேவினனவைபாய்தலினிளங்கோளரிபதைத்தான். (கஉக)

பதைத்தானுடனிலைத்தான்சிலபகுவாயயிற்பகழி
விதைத்தானவன்விலக்காதமுன்விடைமேல்வருவிமலன்
மதத்தாலெதிர்வருகாலனையொருகாலுறமருமத்
துதைத்தாலெனத்தனித்தோர்கணையவன்மார்பிடைதைத்தான். ()

கவசத்தையுநெடுமார்பையுங்கழன்றக்கணைகழிய
அவசத்தொழிலடைந்தானதற்கிமையோரெடுத்தார்த்தார்
திவசத்தெழுகதிரோனெனத்திரிகின்றதொர்கணையால்
துவசத்தையுந்துணித்தேயவன்மணித்தோளையுந்தொளைத்தான். ()

உள்ளாடியவுதிரப்புனல்கொழுந்தீயெனவொழுகத்
தள்ளாடியவடமேருவிற்சலித்தானுடற்றரித்தான்
தொள்ளாயிரங்கடும்போர்க்கணைதுரந்தானவைதுறைபோய்
விள்ளாநெடுங்கவசத்திடைநுழையாதுகவெகுண்டான். (கஉச)

மறித்தாயிரம்வடிவெங்கணைமருமத்தினைமதியாக்
குறித்தாயிரம்பரித்தேரவன்விடுத்தானவைகுறிபார்த்
திறுத்தானெடுஞ்சரத்தாலொருதனிநாயகற்கிளையோன்
செறித்தானுடல்சிலபொற்கணைசிலைநாணறத்தெரித்தான். (கஉரு)

வில்லிங்கிதுநெடுமால்சிவனயன்மேலவர்தனுவே
கொல்லென்றுகொண்டயிர்த்தானெடுங்கவசத்தையுங்குலையாச்
செல்லுங்கொடுங்கணையாவையுந்திசையாவையுந்தெரிந்தான்
வெல்லுந்தரமில்லாமையுமறிந்தானறமெலிந்தான். (கஉசு)

அத்தன்மையையறிந்தானவன்சிறுதாதையுமனுகா
முத்தன்முகநோக்காவொருமொழிகேளெனமொழிவான்
எத்தன்மையுமிமையோர்களைவென்றானிகல்கண்டால்
பித்தன்மனந்தளர்ந்தானினிப்பிழையானெனப்பகர்ந்தான். (கஉஎ)

---

127. பித்தன் - பைத்தியக்காரனை இந்திரசித்து.

கூற்றின்படிகொடுத்தானறக்கொலைவாளெயிற்றரக்கன்
ஏற்றுஞ்சிலைநெடுநாணொலியுலகேழினுமெய்தச்
சீற்றந்தலைத்தலைகென்றுறவிதுதீரெனத்தெரியாக்
காற்றின்படைதொடுத்தானவனதுவேகொடுகாத்தான். (௧௨௮)

அனலின்படைதொடுத்தானவனதுவேகொடுகாத்தான்
புனலின்படைதொடுத்தானவனதுவேகொடுபொறுத்தான்
கனவெங்கதிரவன்வெம்படைதுரந்தானமனங்கரியான்
சினவெந்திறலிளங்கோளரியதுவேகொடுதீர்த்தான். (௧௨௯)

இதுகாத்திகொலென்றுவெடுத்திசிகப்படையெய்தான்
அதுகாப்பதற்கதுவேயுளதென்றுத்தொடுத்தமைத்தான்
செதுகாப்படைதொடுப்பேனெனநினைந்தான்றிசைமுகத்தான்
முதுமாப்படைதுரந்தாலினிமுடிந்தாயெனமொழிந்தான். (௧௩௦)

வானின்றலைநிலைநின்றவர்மழுவாளியுமலரோன்
தானும்முனிவரரும்பிறதவத்தோர்களுமறத்தோர்
கோனும்பிறபிறதேவர்கள்குழுவும்மனங்குலைந்தார்
ஊனம்மினியிலதாகுகவிளங்கோக்கெனவுரைத்தார். (௧௩௧)

ஊழிக்கடையிறுமத்தலையுலகியாவையுமுண்ணும்
ஆதிப்பெருங்கனறன்றொருசுடரென்னவுமாகாப்
பாழிச்சிகைவிரியத்தனிபடர்கின்றதுபார்த்தான்
ஆழித்தனிமுதனையகற்கிளையானதுமதித்தான். (௧௩௨)

மாட்டானினிமலரோன்படைமுதற்போதுதன்வலத்தால்
மீட்டானலன்றடுத்தானலன்முடிந்தானெனவிட்டான்
காட்டாதினிக்கரந்தாலதுகருமம்மலதென்றுத்
தாட்டாமரைமலரோன்படைதொடுப்பேனெனச்சமைந்தான். ()

நன்றாகுகவுலகுக்கெனமுதலோன்மொழிநவின்றான்
பின்றாதவனுயிர்மேற்கெலவொழிகென்பதுபிடித்தான்
ஒன்றாகவிம்முதலோன்படைதனைமாய்க்கவென்றுரைத்தான்
நின்றானதுதுரந்தானிவன்றனிவானவர்நினைந்தார். (௧௩௪)

தான்விட்டனமலரோன்படையெனின்மற்றிடைதருமே
வான்விட்டதுமண்விட்டதுமறவோனுடலறுமே

---

134. ஒன்றாகவிம்முதலோன்படை தீர்ப்பாயெனத் தெரிந்தான் என்றும்பாடம்.

தேன்விட்டுகுமலரோன்படைதீர்ப்பாயெனத்தெரிந்தான்
ஊன்விட்டவன்மறம்விட்டிலனெனவானவருவந்தார். (௧௩௫)

உருமேறுவந்தெதிர்த்தாலதனைதிரேநெருப்புய்த்தால்
வருமாங்கதுதவிர்ந்தாலெனமலரோன்படைமாயத்
திருமாறனக்கிளையான்படையுலகேழையுந்தீய்க்கும்
அருமாகனலெனநின்றதுவிசும்பெங்கணுமாகி. (௧௩௬)

படையங்கதுபடாவகைபகலோன்குலமருமான்
இடையொன்றதுதடுக்கும்படிசெந்தீயுகவெய்தான்
தொடையொன்றினைக்கணைமீமிசைத்தூறுவாயினியென்றான்
விடையொன்றொருவிடமுற்றனவிடுவித்ததுவேகம். (௧௩௭)

விண்ணோரதுகண்டார்வயவீரர்க்கினிமேன்மேல்
ஒண்ணாதனவுளவோவெனமனந்தேறினருவந்தார்
கண்ணாறுதற்பெருமானவர்க்கரிதோவெனக்கடைபார்த்
தெண்ணாதிவைபகர்ந்தீர்பொருள்கேணீரெனவிசைத்தான். (௧௩௮)

நாராயணநரரென்றிவருளராய்நமர்க்கெல்லாம்
வேராய்முழுமுதற்காரணப்பொருளாய்வினைகடந்தோர்
ஆராயினுந்தெரியாததொர்நெடுமாயையினகத்தார்
பாராயணமறைநான்கையுங்கடந்தார்சிலபழையோர். (௧௩௯)

அறத்தாறழிவுளதாமெனவறிவுந்தொடர்ந்தணுகாப்
புறத்தார்புகுந்தறத்தாரெனப்புகுந்தன்னதுபுரப்பார்
மறத்தார்முதற்குலம்வேரறமாய்ப்பானிவண்வந்தார்
திறத்தாலதுதெரிந்தியாவருந்தெரியாவகைதிரிவார். (௧௪௦)

உயிர்தோறுமுற்றுளன்றேத்திரத்தொருவன்னெனவுரைக்கும்
அயிராநிலையுடையானிவனவனிவ்வுலகனைத்தும்
தயிர்தோய்பிறையெனலாம்வகைகலந்தேறியதலைவன்
பயிராததொர்பொருளின்னதென்றுணரீரிதுபரமால். (௧௪௧)

நெடும்பாற்கடற்கிடந்தானும்பண்டிவர்நாங்குறைநேர
விடும்பாக்கியமுடையார்களைக்குலத்தோடறவீட்டி
இடும்பாக்கியத்தறங்காப்பதிற்கிசைந்தாரெனவிதெலாம்
அடும்பாக்கியத்துடைச்செஞ்சடைமுதலோன்பணித்தமைந்தான்.

அறிந்தேதயிருந்தறிவேயமவனெடுமாயையினயிர்ப்பேம்
பிறிந்தேதமினிமுழுதையமும்பெருமானுரைபிடித்தேம்

---

138. ஒண்ணாதன - செய்துமுடிக்கக்கூடாதன.

எறிந்தே தம்பகைமுழுதும்மினித்திர்ந்தே தமிடர்கடந்தே தம்
செறிந்தோர்வினைப்பகைவாவென த்தொழுதார்நெடுந்தேவர். ()

மாயோனெடும்படைவாங்கியவளைவாளெயிற்றரக்கன்
நீயோவிது தடுப்பாயெனினினக்காரெதிர்நிற்பார்
போயோவிசும்படைவாயிதுபிழையாதெனப்புகலாத்
தூயோன்மிசையுலகியாவையுந்தடுமாறிடத்துரந்தான். (கசச)

சேமித்தனரிமையோர்தமைச்சிரத்தேந்தியகரத்தார்
ஆமித்தொழில்பிறர்யாவருமடைந்தார்பழுதடையாக்
காமிப்பதுமுடிவிப்பதுபடிகின்றதுகண்டான்
நேமித்தனியரிதானெனனினைந்தானெதிர்நடந்தான். (கசரு)

தீக்கின்றதிவ்வுலகேகைழுயுமெனச்செல்வதுந்தெரிந்தான்
நீக்குந்தரமல்லாமுழுமுதலோனெனநினைந்தான்
வீக்கின்றிலதயல்சென்றதுவிலங்காவலங்கொடுமேல்
போய்த்தங்கதுகனன்மாண்டதுபுகைவீந்ததுபொதுவே. (கசசு)

ஏத்தாடினரிமையோர்களுங்கவியின்குலமெல்லாம்
கூத்தாடினரரமங்கையர்குனித்தாடினர்தவத்தோர்
காத்தாயுலகனைத்தும்மெனக்களித்தாடினர்கமலம்
பூத்தானுமம்மழுவாளியுமுழுவாய்கொடுபுகழ்ந்தார். (கசஎ)

அவனன்னதுகண்டானிவனோரோவெனவயிர்த்தான்
இவனன்னதுமுதலேயுடையிறையோனெனவியவா
எவனென்னினுநன்றுருகவினியெண்ணலெனென்றுச்
சிவனன்படைதொடுத்தாருயிர்முடிப்பேனெனத்தெரிந்தான். ()

பார்ப்பான்றருமுலகியாவையுமொருநாளொருபகலே
தீர்ப்பான்படைதொடுப்பேனெனத்தெரிந்தானதுதெரியா
மீப்பாவியவிமையோர்குலம்வெருவுற்றதிப்பொழுதே
மாய்ப்பானெனவுலகியாவையுமறுகுற்றனமயங்கா. (கசகூ)

நானேசிவன்றரப்பெற்றது தவநாள்பலவுழந்தே
தானேபிறரறியாததுதந்தேதெனனச்சமைந்தான்
ஆனுவிவனுயிர்கோடலுக்கையம்மிலையென்று
மேனுளுமிதனையேவிடினெதிர்நிற்பவரில்லை. (கருo)

145. எதிர்நடந்தான் - நேமியினெதிரே சென்றான்.
148. சிவனன்படை - பாசுபதாத்திரம்.

மனத்தான்மலர்புனல்சாந்தமொடவிதூபமும்வகுத்தான்
நினைத்தானிவனுயிர்கொண்டிவணிமிர்வாயெனநிமிர்த்தான்
சினத்தானெடுஞ்சிலைகாண்டடடங்தோண்மேலுறச்செலுத்தா
னனைத்தாயதொர்பொருளாலிடைதடையில்லதைவிட்டான். (௧௫௧)

சூலங்களுமழுவுஞ்சுடுகணையுங்கறைசுடரும்
ஆலங்களுமரவங்களுமசனிக்குலமெவையும்
காலன்றனதுருவங்களுங்கரும்பூதமும்பெரும்பேய்ச்
சாலங்களுநிமிர்கின்றனவுலகெங்கணுந்தாவ. (௧௫௨)

ஊழிக்கனலொருபாலதனுடனேதொடர்ந்துடற்றும்
சூழிக்கொடுங்கடுங்காற்றதனுடனேவரத்தூர்க்கும்
ஏழிற்குமப்புறத்தாயுளபெரும்போர்க்கடலிழிந்தாங்
காழித்தலைகிடந்தாலெனநெடுந்தூங்கிருளடைய. (௧௫௩)

இரிந்தார்குலநெடுந்தேவர்களிருடிக்குலத்தெவரும்
பரிந்தாரிதுபழுதாகிலதிறுவாயெனும்பயத்தால்
நெரித்தாங்கழிகுரங்குற்றதுபகருந்துணைநெடிதே
திரிந்தாரிருசுடரோடுலகொருமூன்றுடன்றிரிய. (௧௫௪)

பார்த்தானெடுந்தகைவீடணனுயிர்காலுறப்பயத்தால்
வேர்த்தானிதுவிலக்குந்துணையுளதோமுதல்வீரர்
தீர்த்தாவெனவழைத்தானதற்கிளங்கோளரிசிரித்தான்
போர்த்தாரடர்கவிவீரருமவன்றாணிழல்புகுந்தார். (௧௫௫)

அவையம்முனக்கவயம்மெனுமனைவோரையுமஞ்சேல்
அவையம்மும்மக்களித்தோமெனத்தன்கைத்தலத்தமைத்தான்
உவையம்முறுமுலகின்பயமுணர்ந்தேனினியொழியேன்
சிவையன்மனமுடையான்படைதொடுப்பேனெனத்தெளிந்தான். ()

அப்பொற்படைமனத்தானினைந்தர்ச்சித்ததையழிப்பாய்
இப்பொற்படைதனைமற்றொருதொழில்செய்கிலையென்னாத்
துப்பொப்பதொர்கணைகூட்டினன்றுரந்தானவைதொடரா
எப்பொற்படையெவையும்புகவிழுங்குற்றதொரிமைப்பின். (௧௫௭)

விண்ணார்த்ததுமண்ணார்த்ததுமேலோர்மணிமுரசின்
கண்ணார்த்ததுகடலார்த்ததுமழையார்த்ததுகலையோ
டெண்ணார்த்ததுகவியார்த்ததுவிசயம்மெனவிசயப்
பெண்ணார்த்தனளறமார்த்ததுபிறரார்த்ததுபெரிதால். (௧௫௮)

156. அவையம் - அது பயமின்மையைச் செய்யெனல்.

இறுகாலையினுலகியாவையுமவிப்பானிகற்படையை
மறுகாவகைவலித்தானதுவாங்கும்படிவல்லான்
தெறுகாலனிற்கொடியோனுமற்றதுகண்டகநிகைத்தான்
அறுகால்வயக்கவிவீரருமரியென்பதையறிந்தார். (௧௫௯)

தெய்வப்படைபழுதுற்றதுவெனக்கூசுதல்சிதையா
எய்வித்தகமுளதென்னிதுபிழையாதெனவிசையாக்
கைவித்தகமதனாற்சிலகணைவித்தினனவையும்
மொய்வித்தகன்றடந்தோளினுநுதற்சூட்டினுமுழுக. (௧௬௦)

வெய்யோன்மகன்முதலாகியவிறலோர்மிகுதிறலோர்
கையோய்விலர்மலைமாரியினிருதக்கடல்கடப்பார்
உய்யாரெனவடிவாளிகள்சதகோடிகளுய்த்தான்
வெய்யோனயறனிநின்றதன்சிறுதாதையைவெறுத்தான். (௧௬௧)

வேறு.

முரட்டடந்தண்டுமேந்திமணிசரைமுறையைக்குன்றிப்
பிரட்டரிற்புகழ்ந்துபேதையடியரினிரந்துபின்சென்
றிரட்டுறுமுரசமென்னவிசைத்ததேயிசைக்கின்றாயைப்
புரட்டுவன்றலையையின்றுபழியெனவொழிவென்போலாம். (௧௬௨)

விழிபடமுதல்வரெல்லாம்வெதும்பினரொதுங்கவீழ்ந்து
வழிபடவுலகமூன்றுமடிபடவந்ததேனும்
அழிபடைதாங்கலாற்றுமாடவர்யாண்டும்வெஃகாப்
பழிபடவந்தவாழ்வையாவரேபகரற்பாலார். (௧௬௩)

நீருளதனையுமுள்ளமீனெனநிருதரெல்லாம்
வேருளதனையும்வீவாரிராவணனோடுமீளார்
ஊருளதொருவனின்றாய்நீயுளையுறையநின்னோ
டாருளரரக்கர்நிற்பாரரசுவீற்றிருக்கவையா. (௧௬௪)

முந்தைநாளுலகந்தந்தமுத்தவானோர்கட்கெல்லாம்
தந்தையார்தந்தையாரைச்செருவிடைச்சாயத்தள்ளிக்
கந்தனார்தந்தையாரைக்கயிலையொடொருகைக்கொண்ட
எந்தையாரரசுசெய்வதிப்பெரும்பலங்கொண்டேயோ. (௧௬௫)

பணிமலர்த்தவிசின்மேலோன்பார்ப்பனகுலத்துக்கெல்லாம்
தனிமுதற்றலைவனனவுன்னைவந்தமரர்தாழ்வார்

165. தந்தையார்தந்தையார் - திருமால்.

மணிசருக்கடிமையாய்நீயிராவணன்செல்வமாள்வாய்
இனியுனக்கென்னோமானமெங்களோடடங்கிற்றன்றே. (கசுசு)

சொல்வித்தும்பழித்துநங்கைமூக்கினைத்துணிவித்தோரால்
எல்லித்தும்படைக்கையுங்கடமையனையெங்களோடும்
கொல்வித்துந்தோற்றுநின்றகூற்றினர்குலத்தையெல்லாம்
வெல்வித்தும்வாழும்வாழ்வின்பெருமையேவிழுமிதன்றே. (கசுஎ)

எழுதியேரணிநதிண்டோளிராவணனிராமனம்பால்
புழுதியேபாயலாகப்புரண்டநாள்புரண்டுமேல்வீழ்ந்
தழுதியோநீயுங்கூடவார்த்தியோவிவனைவாழ்த்தித்
தொழுதியோயாதோசெய்யத்துணிந்தனைவிசயத்தோளாய். ()

ஊனுடையுடம்பினீங்கிமருந்தினாலுயிர்வந்தெய்து
மானுடரிலங்கைவேந்தைக்கொல்வரேநீயுமன்னான்
தானுடைச்செல்வந்துய்க்கத்தகுதியேசரத்தினோடும்
வானிடைப்புகுதியன்றேயான்பழிமறுக்கினென்றான். (கசுகூ)

அவ்வுரையமையக்கேட்டவீடணனலங்கன்மோலி
செவ்விதிற்றுளக்கித்தன்பான்முறுவலுந்தெரிவதாக்கி
வெவ்விதுபாவஞ்சாலத்தருமமேவிழுமிதைய
இவ்வுரைகேட்டியென்னாவினையனவிளம்பலுற்றான். (கஎ0)

அறந்துணையாவதல்லாலருநரகமையநல்க
மறந்துணையாகமாயாப்பழியொடும்வாழமாட்டேன்
துறந்திலேன்மெய்ம்மையெய்தும்பொய்ம்மையேதுறப்பதல்லால்
பிறந்திலேனிலங்கைவேந்தன்பின்னவன்பிழைத்தபோதே. (கஎக)

உண்டிலெனறவம்பொய்ம்மையுரைத்திலென்வலியாலொன்றும்
கொண்டிலென்மாயவஞ்சங்குறித்திலென்யாருங்குற்றம்
கண்டிலரென்பாலுண்டேனீயிருங்காண்டிரன்றே
பெண்டிரிற்றிறம்பினாரைத்துறந்ததுபிழையிற்றாமோ. (கஎஉ)

மூவகையுலகமேத்துமுதலவனெவர்க்குமூத்த
தேவர்தந்தேவன்றேவிகற்பினிற்சிறந்துளாளை
நோவனசெய்தறீதென்றுரைப்பநன்றாதைசீறிப்
போவெனப்போந்தேனின்றுநரகதிற்பொருந்துவேனோ. (கஎங)

வெம்மையிற்றருமநேரக்காவேட்டதேவேட்டுவீயும்
உம்மையேபுகழும்பூண்கதுறக்கமுமுமக்கேயாக

செம்மையிற்பொருந்திமேலோரொழுக்கினோடறத்தைத்தேறும்
எம்மையேபழியும்பூண்கநரகமுமெமக்கேயாக. (௧எ௪)

அறத்தினைப்பாவம்வெல்லாதென்னுமதறிந்துஞானத்
திறத்தினதுறுமென்றெண்ணித் தேவர்க்குந்தேவைச் சேர்ந்தேன்
புறத்தினிற்புகழேயாகபழியொடும்புணர்கபோதச்
சிறப்பினிப்பெறுகதீர்கவென்றனன்சீற்றந்தீர்ந்தான். (௧எ௫)

பெறுஞ்சிறப்பெல்லாமென்கைப்பிறைமுகப்பகழிபெற்றால்
இறுஞ்சிறப்பில்லையையவெங்கினிப்போவையென்றுத்
தெறுஞ்சிறைக்கலுழனன்னவொருகணைதொடுத்துச்செம்பொன்
உறுஞ்சுடர்க்கழுத்தைநோக்கிநூக்கினனுருமின்வெய்யோன். ()

அக்கணையசனியென்னவன்றெனவாலமுண்ட
முக்கணான்சூலமென்னமுடுகியமுடிவைநோக்கி
இக்கணத்திற்றனிற்றனென்கின்றவிமையோர்காணக்
கைக்கணையொன்றால்வள்ளலக்கணைகண்டங்கண்டான். (௧எஎ)

கோலொன்றுதுணிதலோடுங்கூற்றுக்குங்கூற்றமன்னான்
வேலொன்றுவாங்கிவிட்டான்வெயிலொன்றுவிழுவதென்ன
நாலொன்றுமூன்றுமான்புவனங்கணடுங்கலோடும்
நூலொன்றுவிதிவலானுமதனையுநுறுக்கிவீழ்த்தான். (௧எஅ)

வேல்கொடுகொல்லலுற்றானென்றொருவெகுளிபொங்கக்
கால்கொடுகாலிற்கூடிக்கைதொடர்கனகத்தண்டால்
கோல்கொளுமொருவனோடுங்கொடித்தடந்தேரிற்பூண்ட
பால்கொளும்புரவியெல்லாம்படுத்தினன்றுடிப்புமாற. (௧எ௯)

அழிந்ததேர்மீதுநின்றனையிரகோடியம்பால்
பொழிந்தவன்றோளின்மேலுமிலக்குவன்புயத்தின்மேலும்
ஒழிந்தபேருரத்தின்மேலுமுதிரநீர்வாரியோதம்
அழிந்திழிந்தோடநோக்கியண்டமுமிரியவார்த்தான். (௧அ௦)

ஆர்த்தவனனையபோழ்தினழிவிலாத்தேர்கொண்டன்றிப்
போர்த்தொழில்புரியலாகாதென்பதோர்பொருளையுன்னிக்
காத்தவரிமையாமுன்னம்விசும்பிடைக்கரந்தானென்னும்
வார்த்தையைநிறுத்திப்போனனிராவணன்மருங்குசென்றான். ()

ஆக திருவிருத்தம் - ௩௦எ௩.

178. நூலொன்று வரிவிலானும் என்றும்பாடம்.

*

## உஎ-வது, இந்திரசித்துவதைப்படலம்.

விண்ணிடைக்கரந்தானென்பார்வஞ்சனைவிளைக்குமென்பார்
கண்ணிடைக்கலக்கநோக்கியையுறவுழக்குங்காலை
புண்ணிடையாக்கைச்செந்நீரிழிதரப்புக்குநின்ற
எண்ணுடைமகனைநோக்கியிராவணனினையசொன்னான். (க)

தொடங்கியவேள்விமுற்றுப்பெற்றிலாத்தொழினின்றாண்மேல்
அடங்கியவம்பேயென்னையறிவித்ததழிவில்யாக்கை
நடுங்கினைபோலச்சாலத்தளர்ந்தனைகலுழன்ணைப்
படங்குறையரவமொத்தாயுற்றதுபகர்தியென்றான். (உ)

சூழ்வினைமாயையெல்லாமும்பியேதுடைக்கச்சுற்றி
வேள்வியைசிதையநூறிவெகுளியாலெழுந்துவீங்கி
ஆழ்வினையாற்றலாற்றானமர்த்தொழிற்புக்குநின்றான்
தாழ்விலாப்படைகண்மூன்றுந்தொடுத்தனென்றடுத்துவிட்டான் ()

நிலஞ்செய்துவிசும்புஞ்செய்துநெடியவன்படைநின்றானை
வலஞ்செய்துபோவதானன்மற்றினிவலியதுண்டே
குலஞ்செய்தபாவத்தாலேகொடும்பழிதேடிக்கொண்டோம்
சலஞ்செயினுலகமூன்றுமிலக்குவன்முடிப்பன்றானே. (ச)

முட்டியசெருவின்முன்னமுதலவன்படையைமுன்பா
விட்டிலருலகையஞ்சியாதலால்வென்றுமீண்டேன்
கிட்டியபோதுங்காத்தாரின்னமுங்கிளரவல்லார்
சுட்டியவலியினாலேகோறலைத்துணிந்துநின்றார். (ரு)

ஆதலானஞ்சினேனென்றருளலையாசைதானச்
சீதைபால்விடுதியாயினனையவர்சீற்றந்தீர்வர்
போதலும்புரிவர்செய்ததீமையும்பொறுப்பருன்மேல்
காதலானுரைத்தேனென்றானுலகெலாங்கலக்கிவென்றான். (சு)

இயம்பலுமிலங்கைவேந்தனெயிற்றிளநிலவுமெய்தப்
புயங்களுங்குலுங்கநக்குப்போர்க்கினியொழிதிபோலாம்
மயங்கினைமனிசன்றன்னையஞ்சலைவருந்தலைய
சயங்கொடுதருவெனின்றேமனிசரைத்தனுவொன்றாலே. (எ)

முன்னையோரிறந்தாரெல்லாமிப்பகைமுடிப்பரென்றும்
பின்னையோர்நின்றாரெல்லாம்வென்றனர்பெயர்வரென்றும்

1. வஞ்சனை - மாயம்.

உன்னை நீயவரையென்று கருதியென்றுணர்ந்துமன்றால்
என்னையேநோக்கியானிந்நெடும்பகைதேடிக்கொண்டேன். (அ)

பேதைமையுரைத்தாய்மைந்தவுலகெலாம்பெயரப்போராக்
காதையென்புகழினோடுநிலைபெறவமரர்காண
மீதெழுமொக்குளன்னயாக்கையைவிடுவதல்லால்
சிந்தையைவிடுவதுண்டோவிருபதுதிண்டோளுண்டாய். (௯)

வென்றிலனென்றபோதும்வேதமுள்ளளவும்யானும்
நின்றனென்றேமற்றவ்விராமன்பேர்நிற்குமாயின்
பொன்றுதலொருகாலத்துந்தவிருமோபோதுமைத்தன்றே
இன்றுளார்நாளைமாள்வார்புகழுக்குமிறுதியுண்டோ. (௧௦)

விட்டனன்சீதைதன்னையென்னலும்விண்ணோர்நண்ணிக்
கட்டுவதல்லாற்பின்னையானெனக்கருதுவாரோ
பட்டனனென்றபோதுமெளிமையிற்படுகிலேன்யான்
எட்டினோடிரண்டுமாயதிசைகளையெறிந்துவென்றேன். (௧௧)

சொல்லியென்பலவுநீநின்னிருக்கையைத்தொடர்ந்துதோளில்
புல்லியபகழிவாங்கிப்போர்த்தொழிற்சிரமம்போக்கி
எல்லியுங்கழித்தியென்னாவெழுந்தனனெழுந்துபெய்வாழ்
வல்லியமுனிந்தாலன்னான்வருகதேர்தருகவென்றான். (௧௨)

எழுந்தவன்றனைநோக்கியிணையடியிறைஞ்சியெந்தாய்
ஒழிந்தருள்சிற்றஞ்சொன்னவுறுதியைப்பொறுத்தியானே
கழிந்தனனென்றபின்னர்நல்லவாக்காண்டியென்னா
மொழிந்தவன்றெய்வத்தேர்மேலேறினான்முடியலுற்றான். (௧௩)

படைக்கலவிஞ்சைமற்றும்படைத்தனபலவுந்தன்பால்
அடைக்கலமாகத்தேவரளித்தனவெல்லாம்வாங்கிக் [ன்றன்னைக்
கொடைத்தொழில்வேட்டோர்க்கெல்லாங்கொடுத்தனன்கொடியோ
கடைக்கணோக்கிநோக்கிநிருகணீர்கலுழப்போனான். (௧௪)

இலங்கையினிருதரெல்லாமழிந்தனர்விரைவினெய்தி
விலங்கலந்தோளநின்னைப்பிரிகலம்விளிதுமென்னா
வலங்கொடுதொடர்ந்தார்தம்மைமன்னனைக்காமின்யாதும்
கலங்கலிரினிமேற்சென்றுமணிசரைக்கடப்பலென்றான். (௧௫)

வணங்குவார்வாழ்த்துவார்தன்வடிவினைநோக்கித்தம்வாய்
உணங்குவாருயிர்ப்பாருள்ளமுருகுவார்வெருவலுற்றுக்

9. போராக்காதை - அழியாத கதை. 14. கொடியோன் - இராவணன்.

கணங்குழைமகளிரீண்டியிரைத்தவர்கடைக்கணென்னும்
அணங்குறைநெடுவேல்பாயுமமர்கடந்தரிதிற்போனான். (கசு)

ஏயினனின்னனகைவிலக்குவனெடுத்தவில்லான்
சேயிருவிசும்பைநோக்கிவீடணதீயோனப்பால்
போயினனுதல்வேண்டும்புரிந்திலனென்றுமென்பான்
ஆயிரம்புரவிபூண்டதேரின்பேரரவங்கேட்டான். (கஎ)

வேறு.

குன்றிடைநெறிதரவடவரையின் குவடுருள்குவதெனமுடுகு
தொறும், பொன்றிணிகொடியனதிடிபுருமி னதிர்குரன்முரல்லது
புனைமணியின், மின்றிரள்சுடரதுகடல்பருகும் வடவனல்வெளியுற
வருவதெனச், சென்றது திசைதிசையுலகிரியத் திரிபுவனமுமுறு
தனியிரதம். (கஅ)

கடன்மறுகிடநிலைகுலையநெடுங்கரியிரிதரவெதிர்கவிகுலமுங்
குடன்மறுகிடமலைகுலையநிலங்குழியொடிகிழிபடவழிபடரும்
இடமறுகியபொடிமுடுகிடலும்மிருளுளதெனவெழுமிகலரவின்
படமறுகிடவெதிர்பரவியவண்பகலிருள்வருவனபகையிரதம். (ககூ)

ஆர்த்தனநிருதர்தமனிகமுட னமரரும்வெருவினர் கவிகுல
மும், வேர்த்தனவெருவலொடலம்வரலால் விடுகணைசிதறினனடு
தொழிலோன், தீர்த்தனுமவனெதிர்முடுகிநெடுந திசைசெவிடெறி
தரவிசைகெழுதிண், போர்த்தொழில்புரிதலுமுலகுகடும் புகை
யொடுசிகையனல்பொதுளியதால். (உ௦)

வீடணனமலனைவிறல்கெழுபோர்விடலையையினியிடைவிடலுளதே
சூடலைதுறுமலர்வாகையெனத்தொழுதனனவளவிலழகனுமக் [ல்
கோடணைவரிசிலைபுலகுலயக்குலவரைபிதிர்படநிலவரையின் [னல்.
சேடனும்வெருவுறவுருமுறழ்திண்டெறுகணைமுறைமுறைசிதறின

ஆயினவளவையினனன்முகவா யடுகணையவன்விடவிவன்விட
லும், தீயினுமெரிவனவுயிர்பருகச் சிதறினகவிகளொடினநிருதர்,
போயினதிசைதிசையனனிறையப் புரள்பவர்முடிவிலர்பொருதிற
லோர், ஏயினவொருவரையொருவர்குறித்தெரிகணையிருமழைபொ
ழிவனபோல். (உக)

அற்றனவனல்விழிநிருதன்வழங்கடுகணையிடையிடையடலரியின்
கொற்றவன்விடுகணைமுடுகியவனுடல்பொதிகுருதிகள்பருகினகொ-

ண்டுற்றனவொளிகிளர்கவச நுழைந்து றுகிலதெறுகிலவனுமனுடல்
புற்றிடையரவென நுழையநெடும்பொருசரமவனவையுணர்கிலனால்.

ஆயிடையிளையவன்விடமனையானவுணிடுகவசமுமழிவுபடத்
தூயினனயின்முகவிசிகநெடுந்தொளை படவிழியனல்சொரியமுனிந்
தேயினனிருதனதெரிகணைதானிடனிலபடுவனவிடையிடைவந்
தோய்வுறுவனவதுதெரிவுறலாலுரறினரிமையவருகையினால். (௨௪)

வில்லினின் வலிதரவரிதெனலால் வெயிலினுமனலுமிழுயில்வி
ரைவில்,செல்லெனமிடல்கொடுகடவினன்மற்றது திசைமுகன்மகனு
தவியதால்,எல்லினும்வெளிபடவெதிர்வதுகண்டிளையவனெழுவகை
முனிவர்கடம், சொல்லினும்வலியதொர்சுடுகணையானடுவிருதுணிப
டவுரறினனால். (௨௫)

ஆணியினிலையெனவிசிகநுழைந்தாயிரமுடல்புகவழிபடுசெஞ்
சோணிதநிலமுறவுலறிடவுந்தொடுகணைவிடுவனமிடல்கெழுதிண்
பாணிகள்கடுகினமுடுகிடலும்பகலவன்மருமகனடுகணைவன்
தூணியைபுருமுறழ்பகழிகளாற்றுணிபடமுறைமுறைசிதறினனால்.

தேருளதெனினிவன்வலிதொலையாதெனுமதுதெரிவுறவுணருறுவா
போருறுபுரவிகள்படுகிலவாற்புணைபிணிதுணிகிலபொருகணையால்[ன்
சீரிதுபெரிதிதனிலைமையெனத்தெரிபவனொருசுடுதெறுகணையால்
சாரதிமலைபுரைதலையைநெடுந்தரையிடையிடுதலுநிலைதிரிய. (௨௭)

வேறு.

உய்விணையொருவன்றூண்டானுலத்தலிற்றவத்தைதநண்ணி
ஐவினைநலியநைவானறிவிற்குமுவமையாகி
மெய்வினையமைந்தகாமம்விற்கின்றவிரகிற்றேலாப்
பொய்வினைமகளிர்கற்பும்போன்றதப்பொலம்பொற்றிண்டேர். ()

துள்ளுபாய்புரவித்தேருமுறைமுறைதானேதூண்டி
அள்ளினன்பறிக்குந்தன்பேராகமேயாவமாக
வள்ளன்மேலனுமன்றன்மேன்மற்றையோர்மற்றிண்டோண்மேல்
உள்ளுறப்பகழிதூவியார்த்தனனெவருமுட்க. (௨௯)

வீரனென்பார்கட்கெல்லாமுன்னிற்கும்வீரர்வீரன்
பேரனென்பார்களாகும்பெற்றியிற்பெற்றித்தாமே

28. அய்வினை - ஐந்து ஆசையில் வரும்வினை.

சூரரென்றுரைக்கற்பாலார் துஞ்சும்போதுணர்விற்சோரார்
தீரரென்றமரர்செப்பிச்சிந்தினார்தெய்வப்பொற்பூ. (௩0)

எய்தவன்பகழியெல்லாம்பறித்தவனென்மேலெய்யும்
கைதடுமாறுதுள்ளமுயிரினங்கலங்காதியாக்கை
மொய்கணைகோடிகோடிமொய்க்கவுமிளைப்பொன்றில்லான்
ஐயனுமிவனோடெஞ்சுமாண்டொழிலாற்றலென்றான். (௩௧)

தேரினைக்கடாவிவானிற்செல்லினுஞ்செல்லுஞ்செய்யும்
போரினைக்கடந்துமாயம்புணர்க்கினும்புணர்க்கும்போயக்
காரினைக்கடந்துவஞ்சங்கருதினுங்கருதுங்காண்டி
வீரமெய்ப்பகலினல்லால்விளிகிலனிருளின்வெய்யோன். (௩௨)

என்றெடுத்திலங்கைவேந்தற்கிளையவனியம்பவின்னே
பொன்றுவதல்லாலப்பாலினியொருபோக்குமுண்டோ
சென்றுழிச்செல்லுமென்னேதெறுகணைவலியிற்றீர்ந்தால்
வென்றியிப்பொழுதேகோடுங்காணெனவிளம்புமெல்லே. (௩௩)

செம்புனற்சோரிச்செக்கர்திசையுறச்செறிகையாலும்
அம்பெனவுற்றகொற்றத்தாயிரங்கதிர்களாலும்
வெம்புபொற்றேரிற்றோன்றுஞ்சிறப்பினுமரக்கன்வெய்யோன்
உம்பரிற்சென்றானோடொத்துதித்தனனருக்கனுப்பால். (௩௪)

விடிந்ததுபொழுதும்வெய்யோன்விளங்கினனுலகமீதா
விடுஞ்சுடர்விளக்கமென்னவரக்கரினிருளும்வீயக்
கொடுஞ்சினமாயச்செய்கைவலியொடுங்குறைந்துகுன்ற
முடிந்தனரரக்கனென்னுமுழங்கினரும்பர்முற்றும். (௩௫)

ஆரழியாதசூலத்தண்ணறனருளினீந்த
தேரழியாதபோதுஞ்சிலைகரத்திருந்தபோதும்
போரழியானிவ்வெய்யோன்புகழழியாதபொற்றோள்
வீரவிதாணையென்றான்வீடணன்விளைவதோர்வான். (௩௬)

பச்சைவெம்புரவிவீயாபல்லியற்சில்லிபாரின்
நிச்சயமற்றுநீங்காவென்பதுநினைந்துவில்லின்
விச்சையின்கணவனானவின்மையால்வயிரமிட்ட
அச்சினோடாழிவெவ்வேறாக்கினானணிநீக்கி. (௩௭)

மணிநெடுந்தேரின்றட்டுவிட்டதுமறிதலோடும்
அணிநெடும்புரவியெல்லாமாற்றலவாயவன்றே

30. தெய்வப்பொற்பூ - கற்பகப்பூ.

திணிநெடுமரமொன்றூழிவாண்மழுத்தாக்கச்சிந்திப்
பணிநெடுமுதலுநீங்கிப்பாங்குறுபறவைபோல. (௩அ)

அழிந்ததேர்த்தட்டினின்றுமங்குள்ளபடையையள்ளிப்
பொழிந்தனனிளையவள்ளல்கணைகளாற்றுணித்துப்போக்க
மொழிந்திருவகையில்விண்ணைமூட்டினனுலகமூன்றும்
கிழிந்தனவென்னவார்த்தான்கண்டிலரோசைகேட்டார். (௩௯)

மல்லின்மாமாரியன்னதோளினான்மழையின்வாய்ந்த
கல்லின்மாமாரிபெற்றவரத்தினாற்சொரியுங்காலைச்
செல்லுவான்றிசைகளோராரர்சிரத்தினோடுடல்கள்சிந்தப்
புல்லினார்நிலத்தைநின்றவானரவீரர்போகார். (௪0)

காண்கிலன்கல்லின்மாரியல்லதுகாளைவீரன்
சேண்கலந்தொளித்துநின்றசெய்கையாற்றிசைகளெங்கும்
மாண்கலந்தளந்தமாயன்வடிவெனமுழுதும்வௌவ
ஏண்கலந்தமைந்தவாளியேவினனிடைவிடாமல். (௪௧)

மறைந்தனதிசைகளெங்குமாறுபோய்மலையுமாற்றல்
குறைந்தனவிருண்டமேகக்குழாத்திடைக்குருதிக்கொண்மூ
உறைந்துளதென்னநின்றானுருவினையுலகமெல்லாம்
நிறைந்தமன்கண்டான்காணாவினையதோர்நினைவதானான். (௪௨)

சிலையறுதெனினுமற்றத்திண்ணியோன்றிரண்டதோளாம்
மலையறுதொழியாதென்னுவரிசிலையொன்றுவாங்கிக்
கலையறுத்திங்களன்னவாளியாற்கையைக்கொய்தான்
விலையறுமணிப்பூணோடும்வில்லொடுநிலத்துவீழ. (௪௩)

பாகவான்பிறைபோல்வெவ்வாய்ச்சுடுகணைபடுதலோடும்
வேகவான்கடுங்காலெற்றமுற்றும்போய்விளிந்தநாளின்
மாகவான்றடக்கைமண்மேல்வீழ்ந்ததுமணிப்பூண்மின்ன
மேகமாகாயத்திட்டவில்லொடும்வீழ்ந்ததென்ன. (௪௪)

படித்தலஞ்சுமந்தநாகம்பாகவான்பிறையைப்பற்றிக்
கடித்ததுபோலக்கோலவிரல்களாலிறுகக்கட்டிப்
பிடித்தவெஞ்சிலையினோடும்பேரெழில்வீரன்பொற்றோள்
துடித்ததுமரமுங்கல்லுந்துகள்படக்குரங்குந்துஞ்ச. (௪௫)

அந்தரமதனினின்றவானவராருக்கன்வீழாச்
சந்திரன்வீழாமேருமால்வரைதகர்ந்துவீழா

42. கொண்மூ - மேகம்.

இந்திரசித்தன்பொற்றேளிற்றிடைவிழுந்ததென்றால்
எந்திரமனையவாழ்க்கையினிச்சிலருகந்ததென்றார். (சசு)

மெய்யறமூர்த்தியன்னமொய்ம்பினனம்பினாலப்
பொய்யறச்சிறிதென்றெண்ணும்பெருமையான்புதல்வன்பூத்த
மையறக்கரிதென்றெண்ணுமனத்தினன்வயிரமன்ன
கையறத்தலையற்றார்போற்கலங்கினார்நிருதர்கண்டார். (சஎ)

அன்னதுநிகழும்வேலையார்த்தெழுந்தரியின்வெள்ளம்
மின்னெயிற்றரக்கர்சேனையாவருமீளாவண்ணம்
கொன்னகக்கரத்தாற்பல்லான்மரங்களான்மலைக்குன்றால்
பொன்னெடுநாட்டையெல்லாம்புதுக்குடியேற்றிற்றன்றே. (சஅ)

காலங்கொண்டெழுந்தமேகக்கருமையான்செம்மைகாட்டும்
ஆலங்கொண்டிருண்டகண்டத்தமரர்கோனருளிற்பெற்ற
சூலங்கொண்டெறிவலென்றுதோன்றினான்பகையின்றேற்ற
மூலங்கொண்டுணராநின்னைமுடித்தன்றிமுடியேனென்றான். (சசு)

காற்றெனவுருமேறென்னக்கனலெனக்கடைநாளுற்ற
கூற்றெனவுருவுகொண்டுகுறுகியதென்னக்கொல்வான்
தோற்றினனதனைக்காளைவினித்தலைதுணிக்குங்காலம்
ஏற்றதென்றயோத்திவேந்தற்கிளையவனினையசெய்தான். (ருo)

மறைகளேதேறத்தக்கவேதியர்வணங்கற்பால
இறையவனிராமனென்னுநல்லறமூர்த்தியென்னின்
பிறையெயிற்றிவனைக்கோறியென்றொருபிறைவாய்வாளி
நிறையுறவாங்கிவிட்டானுலகெலாநிறுத்திநின்றான். (ருக)

நேமியுங்குலிசவேலுநெற்றியினெருப்புக்கண்ணான்
நாமவேறுமற்றைநான்முகன்படையுநாணத்
தீமுகங்கதுவவோடிச்சென்றவன்சிரத்தைத்தள்ளிப்
பூமழைமாரிசிந்தப்பொலிந்ததப்பகழிப்புத்தேள். (ருஉ)

அற்றவன்றலைமீதோங்கியண்டமுற்றணுகாமுன்னம்
பற்றியசூலத்தோடுமுடனிறைபகழியோடும்
எற்றியகாலக்காற்றன்மின்னெடுமிடியினோடும்
சுற்றியபுயல்வீழ்ந்தென்னவீழ்ந்ததுசோரன்யாக்கை. (ருங)

விண்டலத்திலங்குதிங்களிரண்டொடுமின்னுவீசும்
குண்டலத்துணைகளோடுங்கொந்தளக்குஞ்சிச்செங்கேழ்ச்

46. எந்திரமனையவாழ்க்கை - பிறந்துபிறந்து உழலும் வாழ்க்கை.

சண்டவெங்கதிரோன்செக்கர்த்தழலொடுமெருவித்தாம
மண்டலம்விழுந்ததென்னவிழுந்தது தலையுமண்மேல். (௫௪)

உயிரிறப்புக்ககாலையுண்ணின்றவுணர்வினோடும்
செயிரறுபொறியுமந்தக்கரணமுஞ்சிந்துமாபோல்
அயிலெயிற்றரக்கருள்ளாராற்றலராகியான்ற
எயிலுடையிலங்கைநோக்கியிரிந்தனர்படையும்விட்டார். (௫௫)

வில்லாளராஞர்க்கெல்லாமேலவன்விளிந்தலோடும்
செல்லாதவ்விலங்கைவேந்தற்கரசெனக்களித்ததேவர்
எல்லாருந்தூசுநீக்கியேறிடவார்த்தபோது
கொல்லாதவிரதத்தார்தங்கடவுளர்கூட்டமொத்தார். (௫௬)

வரந்தருமுதல்வன்மற்றைமான்மறிக்கரத்துவள்ளல்
புரந்தரன்முதல்வராயநான்மறைப்புலவர்பாரில்
நிரந்தரந்தோன்றிநின்றாரருளிஞனிறைந்தநெஞ்சர்
கரந்திலரவரையாக்கைகண்டனகுரங்குங்கண்ணால். (௫௭)

அறந்தலைநின்றார்க்கில்லையழிவெனுமறிஞர்வார்த்தை
சிறந்ததுசரங்கள்பாயச்சிந்தியசிரத்தவாகிப்
பறந்தலையதனின்மற்றைப்பாதகவரக்கன்கொல்ல
இறந்தனகவிகளெல்லாமெழுந்தனவிமையோரேத்த. (௫௮)

ஆக்கையினின்றுவீழ்ந்தவரக்கன்றன்றலையையங்கை
தூக்கினனுள்ளங்கூர்ந்தவாலிசேய்தூசுசெல்ல
மேக்குயர்ந்தமரர்வெள்ளமள்ளினர்தொடர்ந்துவீசும்
பூக்கிளர்பந்தர்நீழலனுமன்மேலிளவல்போனான். (௫௯)

வீங்கியதோளன்றேய்ந்துமெலிகின்றபழியன்மேன்மேல்
ஓங்கியவுவகையூறுமுள்ளத்தனும்பர்க்காகத்
தேங்கியகடலைமுன்னாட்டிரித்தவன்சேய்செங்கையால்
தாங்கியகுரிசில்பற்றிக்கொணர்ந்திடுந்தலையைக்கண்டான். (௬௦)

எல்லிவான்மதியினுற்றகறையெனவென்மேல்வந்து
புல்லியவடுவும்போகாதென்றகம்புலம்புகின்றேன்
சொல்லியதருமநல்கத்துவக்கற்றுத்துயரந்தீர்ந்தேன்
செல்வமும்பெறுதற்குண்டேகுறையினிச்சிறுமையாதோ. (௬௧)

தென்றலையாழிசூழ்ந்ததிண்மதிலிலங்கைகாக்கும்
புன்றலைக்கள்வன்பெற்றபுதல்வனையிளவல்வீழ்த்த

54. தாமமண்டலம் - ஒளிமண்டலம். 58. தூசுசெல்ல - முன்னணியிற்போக.

வன்றலையெடுத்துநீ முன்வருதலால்வானரேச
என்றலையெடுக்கலானேனினிக்குடையெடுப்பேனென்றான். (சுஉ)

வான்றலையெடுக்கவேலைமண்டலையெடுக்கவானோர்
கோன்றலையெடுக்கவேதக்குலந்தலையெடுக்கக்குன்றாத்
தேன்றலையெடுக்குந்தாராய்தேவரைவென்றான்றீய
ஊன்றலையெடுத்தாய்நீயென்றுரைத்தனருவகைமிக்கார். (சுங)

வரதன்போய்மறுகாநின்றமனத்தினன்மாயத்தோனைச்
சரதம்போர்வென்றுமீளுந்தருமமேதாங்குகென்பான்
விரதம்பூண்டுயிரினோடுந்தன்னுடைமீட்சிநோக்கும்
பரதன்போன்றிருந்தான்றம்பிவருகின்றபரிசைப்பார்த்தான். (சுச)

வன்புலங்கடந்துமீளுந்தம்பிமேல்வைத்தமாலைத்
தன்புலநயனமென்னுந்தாமரைசொரியுந்தாரை
அன்புகொலழுகணீர்கொலானந்தவாரியேகொல்
என்புகளுருகிச்சோருங்கருணைகொல்யாரதோர்வார். (சுரு)

விழுந்திழிகண்ணினீருமுவகையுங்களிப்பும்வீங்க
எழுந்தெதிர்வந்தவீரனிணையடிமுன்னரிட்டான்
கொழுந்தெழுஞ்செக்கர்க்கற்றைக்குழாங்கொளவெயிற்றினீட்டம்
அழுந்துறமடித்தபேழ்வாய்த்தலையடியுறையொன்றாக. (சுசு)

தலையினைநோக்குந்தம்பிகொற்றவைதழீஇயபொற்றோள்
மலையினைநோக்குகின்றமாருதிவலியைநோக்கும்
சிலையினைநோக்குந்தேவர்செய்கையைநோக்குஞ்செய்த
கொலையினைநோக்குமொன்றுமுரைத்திலன்களிப்புக்கொண்டான்.

காளமேகத்தைச்செக்கர்கலந்தெனக்கரியகுன்றம்
நாள்வெயிற்பரந்ததென்னநம்பிதன்றம்பிமார்பில்
தோளின்மேலுதிரச்செங்கேழ்ச்சுவடுதன்னுருவிற்றோன்றத்
தாளின்மேல்வணங்கினானைத்தழுவினன்றனித்தொன்றில்லான். ()

வேறு.

கம்பமதத்துக்களியானைக்காவற்சனகன்பெற்றெடுத்த
கொம்புமென்பாலினிவந்துகுறுகினாளென்றெனக்குளிர்ந்தேன்
வம்புசெறிந்தமலர்க்கோயின்மறையோன்படைத்தமாநிலத்தில்
தம்பியுடையான்பகையஞ்சானென்னுமாற்றந்தனையால். (சுகூ)

62. புன்றலைக்கள்வன் - இராவணன்.

வேறு.

வீக்கிய தூணிவாங்கித் தோளொடுமார்பைசுற்றித்
தூக்கியகவசபாசமொழித்ததுவிரைவினீக்கித்
தாக்கியபகழிக்கூர்வாய்தடிந்தபுண்டமூழ்புமின்றிப்
போக்கினன்றழுவிப்பல்காற்பொற்றடந்தோளிரெற்றி. (௭0)

ஆடவர்திலகநின்னாலன்றிகலனுமனென்னும்
சேடனாலன்றுவேறோர்தெய்வத்தின்சிறப்புமன்று
வீடணன்றந்தவெற்றியீதெனவிளம்பிமெய்ம்மை
ஏடவிழலங்கன்மார்பனிருந்தனனினிதினிப்பால். (௭௧)

ஆ திருவிருத்தம் - ௩௧௪௪.

---

## உஅ-வது, இராவணன்சோகப்படலம்.

ஓதரோதனவேலைகடந்துராய்ப்
பூதரோதரம்புக்கெனப்போர்த்திழி
சீதரோதக்குருதித்திரையொரீஇத்
தூதரோதவெங்காலிற்றுனைந்துளார்.

இ-ள். தூதர் - தூதுவர், ஓத - இந்திரசித்துக் கொலையுண்ட செய்தியைச்சொல்லும்படி, ஓதம்-கடலோசையையொத்த, ரோதனம் - (போரிற்பட்ட தமருக்காக ஒழிந்தோர்) அழுகையினது, வேலை-கரையை, கடந்து-தாவி, உராய் - (ஒருவரை யொருவர்) உராய்ந்து சென்று, போர்த்து-(அப்போர்க்களமெங்கும்) தவழ்ந்து, உறுசீதம் - மிகுதியுந்தண்மையாகிய, ரோதம்-கரையையுடைய, குருதித்திரை - இரத்தக்கடலை, ஒரீஇ - கடந்துநீங்கி, பூதரோதம்-பொன்மலையினது வயிற்றினுள், புக்கென - புகுந்தாற்போல (இலங்கையின் கோபுரவாயிலுள்,) வெங்காலின்-கடுங்காற்றைப்போல, துனைந்துளார் - விரைந்தோடினர். எ-று.

ஓதரோதனம் சீதரோதனமென்பன வடமொழிச்சந்தி. புகுந்தாலென தென்பதனீறுதொகுத்தல். இலங்கையின் கோபுரவாயிலென்பது பூதரோதரம் புக்கென என்பதற்கியைவந்த இசையெச்சம். புகழ்பொருள் இதுவே யென்பது "மேருவைநிறுத்தி வெளிசெய்தது கொல்" என்பதனாற்பெற்றும். உரோதனத்திற்கு ஓதத்தையுவமித்தமையான் அது நிகழுமிடத்தினெல்லையை வேலையென்

ரூர். பூதரம் காரணவிடுகுறியாயினும் ஈண்டு இடு குறிமாத்திறை யாய் மேருவுக்காயிற்று. பூதரோதரம் புக்கெனப்போர்த்தென்பத ற்கு - பூவாகிய தரையினது தரத்திலும் புகுந்ததென்னும்படி போ ர்க்களமுழுமையும் பரவியெனக் குருதித்திரையின் மேலேற்றிக்கூ றனுமொன்று, புக்கதென்பதனீறும் உம்மையுந்தொகுத்தல். (க)

அன்றிலங்கரும்பேடைகளாமென
முன்றிலெங்குமரக்கியர்மொய்த்தெழ
இன்றிலங்கையழிந்ததென்றேங்குவார்
சென்றிலங்கையிற்றூதையைச்சேர்ந்துளார். (உ)

பல்லும்வாயுமனமுந்தம்பாதமும்
நல்லுயிர்ப்பொறையோடுநடுங்குவார்
இல்லையாயினனுன்மகனின்றெனச்
சொல்லினார்பயஞ்சுற்றத்துளங்குவார். (ந)

மாடிருந்தவர்மாதவர்வானவர்
ஆடனுண்ணிடையார்மற்றும்யாவரும்
வீடுமின்றிவ்வுலகெனவிம்முவார்
ஓடியெங்கணுஞ்சிந்தியொளித்தனர். (ச)

சுடர்க்கொழும்புகைதீவிழிதூண்டிடத்
தடக்கைவாளுருவித்தருந்தூதரை
மிடற்றுவீசலுறுவிழுந்தானரோ
கடற்பெருந்திரைபோற்கரஞ்சோரவே. (ரு)

வாய்ப்பிறந்துமுயிர்ப்பின்வளர்ந்தும்வன்
காய்ப்புறுந்தொறுங்கண்ணிடைக்காந்தியும்
போய்ப்பிறந்திவ்வுலகைப்பொதியும்வெந்
தீய்ப்பிறந்துளதின்றெனச்செய்ததால். (சு)

படம்பிறங்கியபாந்தளும்பாரும்போர்ந்
திடம்பிறங்கிவலம்பெயர்ந்தீடுற
உடம்பிறங்கிக்கிடந்துழைத்தோங்குதீ
விடம்பிறந்தகடலெனவெம்பினன். (எ)

திருகுவெஞ்சினத்தீநிகர்சீற்றமும்
பெருகுகாதலுந்துன்பும்பிறழ்ந்திட

2. அன்றில் - கிரவுஞ்சபட்சி.

இருபதென்னுமெரிபுரைகண்களும்
உருகுசெம்பெனவோடியதாற்றுநீர். (அ)

கடித்தபற்குலங்கற்குலங்கண்ணற
இடித்தகாலத்துருமெனவெங்கணும்
அடித்தகைத்தலமம்மலையாழிநீர்
பொடித்தவாய்தொறும்பொங்கினமீச்செல. (௯)

மைந்தவோவெனுமாமகனேயெனும்
எந்தையோவெனுமென்னுயிரேயெனும்
முந்தினேனுனைநானுளேனெனும்
வெந்தபுண்ணிடைவேல்பட்டவெம்மையான். (௧௦)

புரந்தரன்பகைபோயிற்றன்றோவெனும்
அரந்தைவானவரார்த்தனரோவெனும்
கரந்தசூடியும்பாற்கடற்கள்வனும்
நிரந்தரம்பகைநீங்கினரோவெனும். (௧௧)

நீறுபூசியுநேமியுநீங்கினார்
மாறுகுன்றுடுவேலைமறைந்துளார்
ஊறுநீங்கினராயுவணத்தினோ
டேறுமேறியுலாவுவரென்னுமால். (௧௨)

வானமானமும்வானவரீட்டமும்
போனபோனதிசையிடைப்புக்கனர்
தானமானவைசார்கிலர்சார்குவ
தூனமானுடர்வென்றிகொண்டோவெனும். (௧௩)

கெட்டதாதர்கிளத்தினவாறொரு
கட்டமானுடன்கொல்லவென்காதலன்
பட்டொழிந்தனனேயெனும்பன்முறை
விட்டழைக்குமுழைக்கும்வெதும்புமால். (௧௪)

எழுமிருக்குமிரைக்குமிரக்குமுற்
றழுமாற்றுமயர்க்கும்வியர்க்கும்போய்
விழும்விழிக்குமுகிழ்க்குந்தன்மேனியால்
உழுநிலத்தையுருளும்புரளுமால். (௧௫)

ஐயனேயெனுமோர்சிரம்யானினம்
செய்வெனேயரசென்னுமங்கோர்சிரம்

11. புரந்தரன் - இந்திரன்.

கையனேயுனைக்காட்டிக்கொடுத்தநான்
உய்வெனேயென்றுரைக்குமங்கோர்சிரம். (௧௬)

எழுவிற்கோலமெழுதியதோள்களால்
தழுவிக்கொள்கலையென்னுமங்கோர்தலை
உழுவைப்போத்தையுழையுயிருண்டதே
செழுவிற்சேவகனேயெனுமோர்சிரம். (௧௭)

நீலங்காட்டியகண்டனுநேமியும்
மேலுங்காட்டினைறிந்தபடையெலாம்
தோலுங்காட்டித்தூரந்தனைமீண்டுநின்
ஓலங்காட்டிலையோவெனுமோர்தலை. (௧௮)

துஞ்சினய்கொறுணைபிரிந்தேனெனும்
வஞ்சமோவெனும்வாரலையோவெனும்
நெஞ்சுநோவநெடுந்தனியேகிடந்
தஞ்சினேனென்றரற்றுமங்கோர்தலை. (௧௯)

காகமாடுகளத்திடைக்காண்பெறு
பாகசாதன்மௌலியொடும்பறித்
தோகைமாதவருச்சியின்வைத்தநின்
வாகைநாண்மலரென்னுமற்றோர்தலை. (௨௦)

சேலியற்கணியக்கர்தந்தேவிமார்
மேலினித்தவிர்கிற்பர்கொல்வீரநின்
கோலவிற்குரல்கேட்டுக்குலுங்கித்தந்
தாலியைத்தொடலென்னுமற்றோர்தலை. (௨௧)

கூற்றமுன்னைதிர்வந்துயிர்கொள்வதோர்
ஊற்றந்தானுடைத்தன்றெனையும்மொளித்
தேற்றவெவ்வுலகுற்றனையெல்லையில்
ஆற்றலாயென்றழைக்குமங்கோர்தலை. (௨௨)

இன்னவாறழைத்தேங்குகின்றனெழுந்
துன்னுமாத்திரத்தோடினனூழிநாள்
பொன்னின்வானன்னபோர்க்களம்புக்கனன
நன்மகன்றனதாக்கையைநாடுவான். (௨௩)

தேவரேமுதலாகியசேவகர்
யாவரும்முடனேதொடர்ந்தேகினர்

மூவகைப்பேருலகுமுறைமையும்
ஏவதாகுமென்றெண்ணியிரங்குவார். (௨௪)

அழுதவாற்சிலவன்பினர்போன்றடி
தொழுதவாற்சிலதூங்கினவாற்சில
உழுதவானைப்பிணம்புக்கொளித்தவால்
கழுதும்புள்ளுமரக்கனைக்காண்டலும். (௨௫)

கோடிகோடிகுதிரையின்கூட்டமும்
ஆடல்வென்றியரக்கர்தமாக்கையும்
ஓடையானையுந்தேருமுருட்டினான்
நாடினான்றன்மகனுடனெல்லாம். (௨௬)

மெய்கிடந்தவிழிவழிநீர்விழ
நெய்கிடந்தகனல்புரைநெஞ்சினான்
மொய்கிடந்தசிலையொடுமூரிமாக்
கைகிடந்ததுகண்டனன்கண்களால். (௨௭)

பொங்குதோள்வளையும்பொழிபுட்டிலோ
டங்கதங்களுமம்புமலங்கிட
வெங்கணாகமெனப்பொலிமெய்யதைச்
செங்கையாலெடுத்தான்சிரஞ்சேர்த்தினான். (௨௮)

கற்றிண்மார்பிற்றழுவுங்கழுத்தினில்
சுற்றுஞ்சென்னியிற்சூட்டுஞ்சுழல்கணோ
டொற்றுமோர்ந்திட்டுருகுமுளைக்குமால்
முற்றுநாளின்விடுநெடுமூச்சினான். (௨௯)

கைகண்டான்பின்கருங்கடல்கண்டன
மெய்கண்டானதன்மேல்விழுந்தானரோ
பெய்கண்டாரையருவிப்பெருந்திரை
மொய்கண்டார்திரைவேலையைமூடவே. (௩௦)

அப்புமாரியழுந்தியமார்பைத்தன்
அப்புமாரியழுதிழியாக்கையின்
அப்புமாரினணைக்குமாற்றுமால்
அப்புமானுற்றதியாவருற்றாரோ. (௩௧)

இ-ள். அப்புமாரி - அம்பினது கொலை, அழுந்திய-நிலைத்த,மார்பை - இந்திரசித்துவினுடைய மார்பை, அழுது - அழுதலினால்,

---

25. அரக்கன் - இராவணன்.

அப்புமாரி - கண்கண்ணீர்மழை, இழி - ஒழுகுகின்ற, தன்யாக்கையின் - தனதுடலில், அப்பும் - (சிறிதுபொழுது) ஒற்றுவான், மாரின்-மார்பில், அணைக்கும் - (சிறிதுபொழுது) அணைப்பான், அரற்றும்-ஒழியாது கதறுவான், (அப்போது) அப்புமான் - அந்தவாண்மையிற்சிறந்த இராவணன், உற்றது - உற்றதுன்பத்தை, யாவருற்றார் - யாவரடைந்தனர், ஒருவருமிலர். எ-று.

அப்பு - வலித்தல். அழுதென்பது செயவெனெச்சத்திரிபு, மாரென்பதுகடைக்குறை,யாக்கை, ஆகுபெயர்,ஆல் அரோ அசை. அப்பும் அணைக்குமெனவினைமுற்றடுக்கி வந்தமையிற் சிறிது பொழுதென்பது ஆங்காங்குத்தந்துரைக்கப்பட்டது. அரற்றல் அவ்விரு தொழிலும் நிகழ்வழியும் நிகழ்ந்ததென்பதுதோன்ற அரற்றுமென இறுதியிற்கூறினர். (௩௧)

பறிக்குமார்பிற்பகழியைப்பன்முறை
முறிக்குமூர்ச்சிக்குமோக்குமுயங்குமால்
எறிக்கும்வெங்கதிரோடுலகேழையும்
கறிக்கும்வாயினிட்டின்றெனக்காந்துவான். (௩௨)

தேவரோடுமுனிவருஞ்சீரியோர்
ஏவரோடுமிடமின்றிநின்றவன்
மூவரோடுமுலகொருமூன்றுடன்
போவதேகொன்முனிவெனும்பொம்மலான். (௩௩)

கண்டிலன்றலைகாந்தியமானுடன்
கொண்டிறந்தனனென்பதுங்கொண்டவன்
புண்டிறந்தனநெஞ்சன்பொருமலன்
விண்டிறந்திடவிம்மியரற்றினன். (௩௪)

வேறு.

நிலையுமாதிரத்துநின்றயானையுநெற்றிக்கண்ணன்
மலையுமேயெளியவென்னன்மணிசர்க்குமறிந்தமைந்தன்
தலையுமாருயிருங்கொண்டாரவருடலோடுந்தங்கப்
புலையனேனின்னுமாவிசுமக்கின்றேன்போலும்போலும். (௩௫)

எரியுணவளகைமூதூரிந்திரனிருக்கையெல்லாம்
பொரியுணவுலகமூன்றும்பொதுவறப்புரந்தேன்போலாம்
அரியுனுமலங்கண்மௌலியிழந்தவென்மதலையாக்கை
நரியுணக்கண்டேனுணனியுமுணவுநன்றால். (௩௬)

35. மாதிரம் - திசை.

பூண்டொருபகைமேற்புக்கென்புத்திரரேறுமேபோனர்
மீண்டிலர்விளிந்துவீழ்ந்தார்விரதியரிருவரோடும்
ஆண்டுளகுரங்குமொன்றுமமர்க்களத்தருமின்னும்
மாண்டிலரினிமற்றுண்டோவிராவணன்வீரவாழ்க்கை. (௩௭)

கந்தர்ப்பரியக்கர்சித்தரரக்கர்தங்கன்னிமார்கள்
சிந்தொக்குஞ்சொல்லினருந்தேவியர்திருவினல்லார்
வந்துற்றெறங்கணவன்றன்னைக்காட்டென்றுமருங்குவீழ்ந்தால்
அந்தோக்கவரற்றவோநான்கூற்றையுமாடல்கொண்டேன். (௩௮)

சினத்தொடுங்கொற்றமுற்றியிந்திரன்செல்வமேவி
நினைத்ததுமுடித்துநின்றேனேரிழையொருத்திநீரால்
எனக்குநீசெய்யத்தக்கக்கடனெலாமேங்கியேங்கி
உனக்குநான்செய்வதானேனென்னின்யாருலகத்துள்ளார். (௩௯)

என்பனபலவும்பன்னியெடுத்தழைததிரங்கியேங்கி
அன்பினன்மகனைத்தாங்கியரக்கியராற்றிவீழப்
பொன்புனைநகரம்புக்கான்கண்டவர்புலம்பும்பூசல்
ஒன்பதுதிக்குமற்றையொருதிக்குமுற்றதன்றே. (௪௦)

கண்களைச்சூல்கின்றுருங்கழுத்தினைத்தடிகின்றுரும்
புண்கொளத்திறந்துமார்பினீருளைப்போக்குவாரும்
பண்கள்புக்கலம்புநாவையுயிரொடும்பறிக்கின்றுரும்
எண்களிற்பெரியவாற்றரிருந்துயர்பொறுக்கலாற்றர். (௪௧)

மாதிரங்கடந்ததிண்டோண்மைந்தன்றன்மகுடச்சென்னி
போதலைபுரிந்தயாக்கைபொறுத்தனன்புகுதக்கண்டார்
ஓதநீர்வேலையன்னகண்களாலுகுத்தவெள்ளக்
காதனீரோடியாடற்கருங்கடன்மடுத்ததன்றே. (௪௨)

ஆவியினினியகாதலரக்கியர்முதல்வராய
தேவியர்குழாங்கள்சுற்றிச்சிரத்தின்மேற்றளிர்க்கைசேர்த்தி
ஓவியம்வீழ்ந்துவீழ்ந்துபுரள்வனவொப்பவொல்லை
கோவியல்கோயிற்புக்கான்குருதிநீர்க்குமிழிக்கண்ணன். (௪௩)

கருங்குழற்கற்றைப்பாரங்காலுறடக்கமலப்பூவால்
குரும்பையைப்புடைக்கின்றுள்போற்கைகளான்முலைமேற்கொட்டி
அருங்கலச்சும்மைதாங்கவகலல்குலன்றிச்சற்றே
மருங்குலுமுண்டுண்டென்னமயன்மகண்மறுகிவந்தாள். (௪௪)

---

43. ஆவி - உயிர்.

தலையின்மேற்சுமந்தகையடழலின்மேன்மிதிக்கின்றாள்போல்
நிலையின்மேன்மிதிக்குந்தாளணேசத்தானிறைந்தநெஞ்சள்
கொலையின்மேற்குறித்தவேடன்கூர்ங்கணையுயிரைக்கொள்ள
மலையின்மேன்மயில்வீழ்ந்தென்னமைந்தன்மேன் மறுகிவீழ்ந்தாள்.

உயிர்த்திலளுணர்வுமில்லளுயிரிலள்கொல்லோவென்னப்
பெயர்த்திலள்யாக்கையொன்றும்பேசலள்விம்மியாதும்
வியர்த்திலணெடிதுபோதுவிம்மலண்மெல்லமெல்ல
அயர்த்திலளரிதிற்றேறிவாய்திறந்தரற்றலுற்றாள். (௪௬)

கலையினாற்றிங்களென்னவள்ர்கின்றகாலத்தேயுன்
சிலையினாலரியைவெல்லக்காண்பதோர்தவமுஞ்செய்தேன்
தலையிலாவாக்கைகாணவெத்தவஞ்செய்தேனந்தோ
நிலையிலாவாழ்வைபின்னுநினைவெனோநினைவிலாதேன். (௪௭)

ஐயனேயழகனேயென்னரும்பெறலமிழ்தேயாழிக்
கையனேமழுவனேயென்றவர்வலிகடந்தகால
மொய்யனேமுளரியன்னநின்முகங்கண்டிலாதேன்
உய்வனேயுலகமூன்றுக்கொருவனேசெருவலோனே. (௪௮)

தாளரிச்சதங்கையார்ப்பத்தவழ்கின்றபருவந்தன்னில்
கோளரியிரண்டுபற்றிக்கொணர்ந்தனைகொணர்ந்துகோபம்
மூளுறப்பொருத்திமாடமுன்றிலின்முறையினோடி
மீளருவிளையாட்டின்னுங்காண்பெனோவிதியிலாதேன். (௪௯)

அம்புலியம்மவாவென்றழைத்தலுமவிர்வெண்டிங்கள்
இம்பர்வந்தானையஞ்சலெனவிருகரத்தினேந்தி
வம்புறுமறுவைப்பற்றிமுயலெனவாங்கும்வண்ணம்
எம்பெருங்களிறேகாணவேசற்றேனெழுந்திராயோ. (௫௦)

இயக்கியரரக்கிமார்கள்விஞ்சையரேழைமாதர்
முயற்கறைபயிலாத்திங்கண்முகத்தியர்முருகநின்னை
மயக்கியமுயக்கந்தன்னான்மலரணையமளிமீதே
அயர்த்தனையுறங்குவாயோவமர்பொருதலசினையோ. (௫௧)

முக்கணான்முதலினோரையுலகொருமூன்றினோடும்
புக்கபோரெல்லாம்வென்றுநின்றவென்புதல்வன்போலாம்
மக்களிலொருவன்கொல்லமாள்பவன்வானமேரு
உக்கிடவணுவொன்றோடியுதைத்ததுபோலுமம்மா. (௫௨)

---

51. முருகு - இளமை, இங்கே உபசாரம்.

பஞ்செரியுற்றதென்னவரக்கர்தம்பரவையெல்லாம்
வெஞ்சினமனிசர்கொல்லவிளிந்ததேதமீண்டதில்லை
அஞ்சினேனஞ்சினேனிச்சீதையென்றமிழ்தாற்செய்த
நஞ்சினாலிலங்கைவேந்தனாளையித்தகையனன்றோ. (௫௩)

என்றழைத்திரங்கியேங்கவித்துயர்நமர்கட்கெல்லாம்
பொன்றழைத்தனையவல்குற்சீதையாற்புகுந்ததென்ன
வன்றழைக்கல்வினெஞ்சின்வஞ்சகத்தாளைவாளால்
கொன்றிழைத்திடுவெனென்னாவோடினானரக்கர்கோமான். (௫௪)

ஓடுகின்றானைநோக்கியுயர்பெரும்பழியினுச்சி
சூடுகின்றாயென்றஞ்சிமகோதரன்றுணிந்தநெஞ்சன்
மாடுசென்றடியின்வீழ்ந்துவணங்கிநின்புகழ்க் தமன்னா
கேடுவந்தடுத்ததென்னாவினையனகிளத்தலுற்றான். (௫௫)

நீருளதனையுஞ்சூழ்ந்தநெருப்புளதனையுநீண்ட
பாருளதனையும்வானப்பரப்புளதனையுங்காலின்
பேருளதனையும்பேராப்பெரும்பழிபிடித்திபோலாம்
போருளதனையும்வென்றுபுகழுளதனையுமுள்ளாய். (௫௬)

தெள்ளருங்காலகேயர்சிரத்தொடுந்திசைக்கையானை
வெள்ளியமருப்புச்சிந்தவீசியவிசயத்தோள்வாள்
வள்ளியமருங்குற்செவ்வாய்மாதர்மேல்வைத்தபோது
கொள்ளுமேயாவிதானேநாணத்தாற்குறைவதல்லால். (௫௭)

மங்கையர்க்குலத்துளாளைத்தவத்தியைமுனிந்துவாளால்
சங்கையொன்றின்றிக்கொன்றான்குலத்துக்கேதக்கானென்று
கங்கையஞ்சென்னியானுங்கண்ணனுங்கமலத்தோனும்
செங்கையுங்கொட்டியுன்னைச்சிரிப்பராற்சிறியனென்னா. (௫௮)

நிலத்தியல்பன்றுவானினெறியன்றுநீதியன்று
தலத்தியல்பன்றுமேலோர்தருமமேலதுவுமன்று
புலத்தியன்மரபின்வந்துபுண்ணியமரபுபூண்டாய்
வலத்தியல்பன்றுமாயாப்பழிகொளமறுகுவாயோ. (௫௯)

இன்றுநீயிவளைவாளாலெறிந்துபோயிராமன்றன்னை
வென்றுமீண்டிலங்கைமூதூரெய்தினைவெதும்புவாயோ
பொன்றினள்சீதையென்றேபோவர்களவர்தாமல்லால்
வென்றிடமுடியாதென்னும்வீரமோவிளம்பவென்றான். (௬௰)

என்னலுமெடுத்தகூர்வாளிருநிலத்திட்டுமீண்டு
மன்னவன்மைந்தன்றன்னைமாற்றலார்வலியாற்கொண்ட
சின்னமுமவர்கடங்கள்சிரமுங்கொண்டன்றிச்சேர்கேன்
றுன்னருந்தயிலத்தோணிவளர்த்துமினென்னச்சொன்னான். (௯௧)

அத்தொழிலவருஞ்செய்தாராயிடையனைத்துத்திக்கும்
பொத்தியநிருதர்தானைகொணரியபோயதூதர்
ஒத்தனராணுகிவந்துவணங்கினரிலங்கையுன்னார்
பத்தியினமைந்ததானைக்கிடமிலைபணியிதென்றார். (௯௨)

ஆ திருவிருத்தம் - ௩௨0௯.

---

## உ௯-வது, படைக்காட்சிப்படலம்.

---

எம்பலுற்றெழுந்தமன்னனெவ்வழியெய்திற்றென்றான்
கூம்பலுற்றுயர்ந்தகையரொருவழிகூறலாமோ
வாம்புனற்பரவையேழுமிறுதியின்வளர்ந்ததென்னத்
தாம்பொடித்தெழுந்ததானைக்குலகிடந்தானில்லென்றார். (௧)

மண்ணுறநடந்ததானைவளர்ந்தமாத்தூளிமண்ட
விண்ணுறநடக்கின்றருமிதித்தனரேக்மேன்மேல்
கண்ணுறவருமைகாணுக்கற்பத்தின்முடிவிற்கார்போல்
எண்ணுறவரியசேனையெய்தியதிலங்கைநோக்கி. (௨)

வாட்டனின்வபங்கமின்னுமழையதினிருளமாட்டா
ஈட்டியமுரசினார்ப்பையிடிப்பொடுமுழக்கமாட்டா
மீட்டினியுவமையில்லைவேலைமீச்சென்றவென்னின்
தீட்டியபடையுமாவும்யானையுந்தேருஞ்செல்லா. (௩)

உலகினுக்குலகுபோய்ப்போயொன்றினொன்றொதுங்கலுற்ற
தொலைவருந்தானைமேன்மேலெழுந்தது தொடர்ந்துசுற்ற
நிலவினுக்கிறையுமீனுநீங்கினநிமிரநின்றான்
அலரியுமுந்துசெல்லுமாறுநீத்தஞ்சியப்பால். (௪)

மேற்படவிசும்பைமுட்டிமேருவின்விலங்கிவிண்ட
நாற்பெருவாயிலூடுமிலங்கையூர்நடக்குந்தானை

---

3. வாட்டனின்வயங்கமின்னுமழை - வாளாயுதங்களையொப்ப விளக்கமாவொளிரமின்னுமேகங்கள்.

கார்க்கருங்கடலைமற்றோரிடைக்கிடைகாலன்றானே
சேர்ப்பதுபோன்றதியாண்டுஞ்சுவைபொருதுலகமென்ன. (௫)

நெருக்குடைவாயிலூடுபுகுமெனிநெடிதுகாலம்
இருக்குமித்தன்மையென்னுமதிலினுக்கும்பரெய்தி
அரக்கனதிலங்கையுற்றவண்டங்களனைத்தினுள்ள
கருக்குலமேகமெல்லாமொருங்குடன்கலந்ததென்ன. (௬)

அதுபொழுதரக்கர்கோனுமணிகொள்கோபுரத்தினெய்திப்
பொதுவுறநோக்கலுற்றானொருநெறிபோகப்போக
விதிமுறைகாண்பனென்னும்வேட்கையான்வேலையேழும்
கதுமெனவொருங்குநோக்கும்பேதையிற்காதல்கொண்டான். (௭)

மாதிரமொன்றினின்றுமாறொருதிசைமேன்மண்டி
ஓதநீர்செல்வதென்னதானையையுணர்வுகூட்டி
வேதவேதாந்தங்கூறும்பொருளினைவிரிக்கின்றார்போல்
தூதுவரணிகடோறும்வரன்முறைகாட்டிச்சொன்னார். (௮)

வேறு.

சாகத்தீவினினுறைபவர்தானவர்சமைத்த
யாகத்திற்பிறந்தியைந்தவர்றேவரையெல்லாம்
மோகத்திற்படமுடித்தவர்மாயையின்முதல்வர்
மேகத்தைத்தொடுமெய்யினரிவரெனவிரித்தார். (௯)

குசையின்றீவினினுறைபவர்கூற்றுக்கும்விதிக்கும்
வசையும்வன்மையும்வளர்த்தவர்வானநாட்டுறைவார்
இசையுஞ்செல்வமுமிருக்கையுமிழந்ததிங்கிவரால்
விசையந்தோளனநிற்பவரிவர்நெடுவிறலோய். (௧௦)

இலவத்தீவினினுறைபவரிவர்கள்பண்டிமையாப்
புலவர்க்கிந்திரன்பொன்னகரழிதரப்பொருதார்
நிலவைச்செஞ்சடைவைத்தவன்வரந்தரநிமிர்ந்தார்
உலவைக்காட்டுறுதீயெனவெகுளிபெற்றுடையார். (௧௧)

அன்றிற்றீவினினுறைபவரிவர்பண்டையமரர்க்
கென்றைக்குமிருந்துறைவிடமென்றிடமேருக்
குன்றைக்கொண்டுபோய்க்குரைகடலிடவறக்குலைந்தோர்
சென்றித்தன்மையைத்தவிருமென்றிரந்திடத்தீர்ந்தோர். (௧௨)

பவளத்தீவினினுறைபவர்வெள்ளிபண்பழிந்தோர்
குவளைக்கண்ணியங்கிராக்கதக்கன்னியைக்கூட

அவளிற்றோன்றினரையிருகோடியர்நொய்தின்
இவளப்பாற்கடல்வறள்படத்தேக்கினர்சிலநாள். (௧௩)

கந்தமாதனமென்பதிக்கருங்கடற்கப்பால்
மந்தமாருதமூர்வதோர்கிரியினில்வாழ்வோர்
அந்தக்காலத்தவ்வாலகாலத்துடன்பிறந்தோர்
இந்தவாளெயிற்றரக்கரெண்ணிறந்தவரிறைவ. (௧௪)

மலையமென்பதும்பொதியமாமலையதின்மறவோர்
நிலையமன்னதுசாகரத்தீவிடைநிற்கும்
குலையுமெவ்வுலகெனக்கொண்டுநான்முகன் கூறி
உலைவிலீரிதிலுறையுமென்றிரந்திடவுறைந்தார். (௧௫)

முக்கரக்கையர்மூவிலைவேலினர்முசுண்டி
சக்கரத்தினர்சாபத்தரிந்திரன்றலைவர்
நக்கரக்கடனுலொருமூன்றுக்குநாதர்
புக்கரப்பெருந்தீவிடையுறைபவர்ப்புகழோய். (௧௬)

மறலியைப்பண்டுதம்பெருந்தாய்சொலவலியால்
புறநிலைப்பெருஞ்சக்கரமால்வரைப்பொருப்பின்
விறல்கெடச்சிறையிட்டயனிரந்திடவிட்டோர்
இறலியப்பெருந்தீவிடையுறைபவரிவர்கள். (௧௭)

வேதாளக்கரத்திவர்பண்டுபுவியிடம்விரிவு
போதாதுந்தமக்கெழுவகையாய்நின்றபுவன
பாதாளத்துறைவீரெனநான்முகன்பணிப்ப
நாதாபுக்கிருந்துனக்கன்பிஞலிவணடைந்தார். (௧௮)

நிருதிதன்குலப்புதல்வர்நின்குலத்துக்குநேரே
பருதிதேவர்களெனத்தக்கபண்பினர்பானக்
குருதிபெற்றிலரேற்கடலேழையுங்குடிப்பார்
இருணிறத்தவரொருத்தரேழ்மலையையுமெடுப்பார். (௧௯)

பாரணைத்தவெம்பன்றியையன்பிஞற்பார்த்த
காரணத்தினனுதியிற்பயந்தபைங்கழலோர்
பூரணத்தடந்திசைதொறுமிந்திரன்புலரா
வாரணத்தினைநிறுத்தியேசூடினர்வாகை. (௨௦)

மறக்கண்வெஞ்சினமலையெனவிந்நின்றவயவர்
இறக்கங்கீழிலாப்பாதலத்துறைகின்றவிகலோர்

15. மறவோர் - மறவர்.

அறக்கண்டுஞ்சிலனுயிரம்பணந்தலையநந்தன்
உறக்கந்தீர்ந்தனனுறைகின்றதிவர்தொடர்ந்தொறுக்க. (௨௧)

காளியைப்பண்டுகண்ணுதல்காட்டியகாலை
மூளமுற்றியசினக்கடுந்தீயிடைமுளைத்தோர்
கூளிகட்குநல்லுடன்பிறந்தார்பெருங்குழுவாய்
வாளிமைக்கவும்வாளெயிறிமைக்கவும்வருவார். (௨௨)

பாவந்தோன்றியகாலமேதோன்றியபழையோர்
தீவந்தோன்றியமுழைத்துணையெனத்தறுகண்ணர்
கோவந்தோன்றிடிற்றாயையுமுயிருணுங்கொடியோர்
சாவந்தோன்றிடவடதிசைமேல்வந்துசார்வார். (௨௩)

சீற்றமாகியவைம்முகனுலகெலாந்தீப்பான்
ஏற்றமாநுதல்விழியிடைத்தோன்றினரிவரால்
கூற்றமாகியகொம்பினம்பாலுடைக்கொடுமை
ஊற்றமாகிப்பண்டுதித்தனரென்பவருவரால். (௨௪)

காலன்மார்புழைச்சிவன்கழல்படவன்றுகான்ற
வேலையேழன்னகுருதியிற்றோன்றியவீரர்
சூலமேந்திமுன்னின்றவரிந்நின்றதொகையார்
ஆலகாலத்தினமிழ்தின்முன்பிறந்தபோரரக்கர். (௨௫)

வடவைத்தீயினைவாசுகிகான்றமாகடுவை
இடவத்தீயிடையெழுந்தவரிவரினமழையைத்
தடவத்தீநிமிர்குஞ்சியரிவருவர்தனித்தேர்
கடவத்தீந்தவெம்புரத்திடைத்தோன்றியகழலோர். (௨௬)

எனையரின்னவரென்பதோரளவிலரைய
நினையவுங்குறித்துரைக்கவுமரிதிவர்நினைந்த
வினையமும்பெருவரங்களுந்தவங்களும்விளம்பின்
அனையபேருகமாயிரத்தளவினுமடங்கா. (௨௭)

ஒருவரேசென்றவ்வுறுதிறற்குரங்கையுமுரவோர்
இருவரென்றவர்தம்மையுமொருகைகொண்டெற்றி
வருவர்மாறினிப்பகர்வதென்வானவர்க்கரிய
திருவவென்றனர்தூதுவரிராவணன்செப்பும். (௨௮)

எத்திறத்திதற்கெண்ணெனத்தொகைவகுத்தியன்ற
அத்திறத்தினையறைதிரென்றுரைசெயவவர்கள்

---

23. தீவம் - விளக்கு.

ஒத்தவெள்ளமோராயிரமுளதெனவுரைத்தார்
பித்தரிப்படைக்கெண்சிறிதென்றனர்பெயர்ந்தார். (௨௯)

படைப்பெருங்குலத்தலைவரைக்கொணருதிரென்பால்
கிடைத்துநானவர்க்குற்றுளபொருளெலாங்கிளத்தி
அடைத்தநல்லுரைவிளம்பினனளவளாயமைவுற்
றுடைத்தபூசனைவரன்முறையியற்றுவென்றுரைத்தான். (௩௦)

தூதர்கூறிடத்திசைதொறுந்திசைதொறுந்தொடர்ந்த
ஓதவேலையினுயகரேவரும்வந்துற்றார்
போதுதூவினர்வணங்கினரிராவணன்பொலன்றாள்
மோதுமோலியின்பேரொலிவானினைமுட்ட. (௩௧)

அனையர்யாவருமருகுசென்றடிமுறைவணங்கி
வினையமேவினரினிதினங்கிருந்தோர்வேலை
நினையுநல்வரவாகநும்வரவெனநிரம்பி
மனையுமக்களும்வலியரேயென்றனன்மறவோன். (௩௨)

பெரியதிண்புயனீயுளைதவவரம்பெரிதால்
உரியவேண்டியபொருளெலாமுடிப்பதற்கொன்றோ
இரியத்தேவரைக்கண்டனம்பகைபிறிதில்லை
அரியதென்னெமக்கென்றனரவன்கருத்தறிவார். (௩௩)

மாதரார்களுமைந்தருநின்மருங்கிருந்தார்
பேதுறுதவரில்லைநீவருந்தினைபெரிதும்
யாதுகாரணமருளெனவனையவரிசைத்தார்
சீதைகாதலிற்பிறந்துளபரிசெலாந்தெரித்தான். (௩௪)

கும்பகன்னனோடிந்திரசித்தையுங்குலத்தின்
வெம்புவெஞ்சினத்தரக்கர்தங்குழுவையும்வென்றோர்
அம்பினாற்சிறுமனிசரேநன்றுநம்மாற்றல்
நம்பசேனையும்வானரமேயெனநக்கார். (௩௫)

உலகைச்சேடன்றனுச்சிநின்றெடுக்கவன்றோரேழ்
மலையைவேரொடும்வாங்கவன்றங்கையால்வாங்கி
அலைகொள்வேலையைக்குடிக்கவன்றழைத்ததுமலரோ
டிலைகள்கோதுமக்குரங்கின்மேலேவக்கொலெம்மை. (௩௬)

என்னக்கையெறிந்திடியுருமேறெனநக்க
மின்னும்வெள்ளெயிற்றரக்கரையங்கையால்விலக்கி

30. அளவளாய் - கலந்து சந்தோஷித்தல். 36. ஊழிக்கால் - பிரளயகாற்று.

ன்பவன்புட்கரத்தீவுக்குமன்னன்
அன்னமானுடரார்வலியாவதென்றறைந்தான். (௩௭)

மற்றவாசகங்கேட்டலுமாலியவான்வந்
துற்றதன்மையுமணிசரதூற்றமுமுடனும்
கொற்றவானரத்தலைவர்தந்தகைமையுங்கூறிக்
கிற்றுங்கேட்டிராலென்றவன்கிளத்துவான்கிளர்ந்தான். (௩௮)

ஆழியன்னநீரறிதிரண்டேறகடலனைத்தும்
ஊழிக்காலெனக்கடப்பவன்வாலியென்பேரனை
ஏழுகுன்றமுமெடுக்குறுமிடுக்கனையிந்நாள்
பாழிமார்பகம்பிளந்துயிர்குடித்ததோர்பகழி. (௩௯)

பரியதோளுடைவிராதன்மாரீசனும்பட்டார்
கரியமால்வரைநிகர்கரதூடணர்கதிர்வேல்
திரிசிராவவர்திரைக்கடலனபெருஞ்சேனை
ஒருவிலாலொருநாழிகைப்பொழுதினிலுலந்தார். (௪௦)

இங்குவந்துநீர்விஞயதென்னெறிதிரைப்பரவை
அங்குவெந்திலதோசிறிதறிந்ததுமிலிரோ
கங்கைசூடினன்கடுஞ்சிலையொடித்தவக்காலம்
உங்கள்வான்செவிபுகுந்திலதோமுழங்கோதை. (௪௧)

ஆயிரம்பெருவெள்ளமுண்டிலங்கையினளவில்
தீயின்வெய்யபோரரக்கர்தஞ்சேனையச்சேனை
போயதந்தகன்புரம்புகநிறைந்ததுபோலாம்
ஏயுமும்மைநூன்மார்பினரெய்தவிலிரண்டால். (௪௨)

குற்றவெஞ்சிலைக்கும்பகன்னனுநுங்கள்கோமான்
பெற்றமக்களும்பிரகத்தன்முதலியபிறரும்
மற்றைவீரருமிந்திரசித்தொடுமடிந்தார்
இற்றைநாள்வரையானுமற்றிவனுமேயிருந்தேம். (௪௩)

மூலத்தானையென்றுண்டதுமும்மைநூறமைந்த
கூலச்சேனையிவ்வெள்ளமற்றதற்கின்றுகுறித்த
காலச்செய்கையானீர்வந்திராயினக்கழலோர்
சீலச்செய்கையுங்கவிப்பெருசேனையுந்தெரிக்கின். (௪௪)

ஒருகுரங்குவந்திலங்கையைமலங்கெரியூட்டித்
திருகுவெஞ்சினத்தக்கனைநிலத்தொடுத்தேய்த்துப்

பொருதுதூதுரைத்தேகியதரக்கியர்புலம்பக்
கருதுசேனையாங்கடலையுங்கடலையுங்கடந்து. (௪௫)

கண்டிலீர்கொலாங்கடலினைமலைகொண்டுகட்டி
மண்டுபோர்செயவானரரியற்றியமார்க்கம்
உண்டுவெள்ளமோரெழுபதுமருந்தொருநொடியின்
கொண்டுவந்ததுமேருவிற்கப்புறங்குதித்து. (௪௬)

இதுவியற்கையோர்சீதையென்றிருந்தவத்திலையந்தாள்
பொதுவியற்கைதீர்கற்புடைப்பத்தினிபொருட்டால்
விதிவிளைத்தவாவில்லியர்வெல்கநீர்வெல்க
முதுமொழிப்பதஞ்சொல்லினனென்றுரைமுடித்தான். (௪௭)

வன்னிமன்னனைநோக்கிநீயிவரெல்லாமடிய
என்னகாரணமிகல்செயாதிருந்ததென்றிசைத்தான்
புன்மைநோக்கினேணினேற்பொருந்திலேனென்றான்
அன்னதேலினியமையுமெங்கடனஃதென்றான். (௪௮)

மூதுணர்ந்தவிம்முதுமகன்கூறியமுயற்சி
சீதையென்பவடனைவிட்டம்மனிசரைத்திருத்தல்
ஆதியின்றலைசெயத்தக்கதினிச்செயலழிவால்
காதலிந்திரசித்தையாம்யாண்டினிக்காண்டும். (௪௯)

விட்டமாயினுமாதினைவெஞ்சமம்விரும்பிப்
பட்டவீரரைப்பெறுகிலம்பெறுவதுபழிப்பால்
முட்டிமற்றவர்குலத்தொடுமுடிக்குவதல்லால்
கட்டமத்தொழிற்செருத்தொழிலினிச்செயுங்கடமை. (௫௦)

என்றெழுந்தனனிராக்கதரிருத்திநீயாமே
சென்றுமற்றவர்சில்லுடற்குருதிநீர்தேக்கி
வென்றுமீளுதும்வெள்குதுமேன்மிடலில்லாப்
புன்றொழிற்குலமாதுமென்றுரைத்தனர்போனார். (௫௧)

ஆ திருவிருத்தம் - ௩௨௫௭.

---

47. முதுமொழி - பழமொழி, முடிந்தசொல்.

*

## ௩௦-வது, மூலபலவதைப்படலம்.

வானரப்பெருஞ்சேனையையாறொருவழிசென்
றானறக்குறைத்துயிருண்பனீயிர்போயொருங்கே
ஆனமற்றவரிருவரைக்கோறிரென்றமைந்தான்
தானவப்பெருங்கிரிகளைவாள்கொண்டுதடிந்தான். (௧)

எனவுரைத்தலுமெழுந்துதம்மூர்திமேலேறிக்
கனைகடற்பெருஞ்சேனையைக்கலந்ததுகாணு
வினையமற்றிலைமூலமாத்தானையைவிரவோ
டினையமுற்செலவேவுகென்றிராவணனிசைத்தான். (௨)

ஏவியப்பெருந்தானையைத்தானும்விட்டெழுந்தான்
தேவர்மெய்ப்புகழ்தேய்த்தவன்சில்லியந்தேர்மேல்
காவன்மூவகையுலகமுமுனிவருங்கலங்கப்
பூவைவண்ணத்தன்சேனைமேலொருபுறம்போனான். (௩)

எழுகசேனையென்றியானைமேலணிமுரசெற்றி
வழுவில்வள்ளுவர்துறைதொறும்விளித்தலும்வல்லைக்
குழுவியீண்டியதென்பராற்குவலயமுழுதும்
தழுவிவிண்ணையுந்திசையையுந்தடவுமாத்தானை. (௪)

அடங்கும்வேலைகளண்டத்தினகத்தகன்மலையும்
அடங்குமன்னுயிரனைத்துமவ்வரைப்பிடையவைபோல்
அடங்குமேமற்றப்பெரும்படையிரும்படையாக்கை
அடங்குமாயவன்குறளுருத்தன்மையினவரால். (௫)

அறத்தைத்தின்றருங்கருணையைப்பருகிவேறமைந்த
மறத்தைப்பூண்டுவெம்பாவத்தைமணம்புணர்மணாளர்
நிறத்துக்காரன்னநெஞ்சினர்நெருப்புக்குநெருப்பாப்
புறத்துப்பொங்கியபங்கியர்காலனும்புகழ்வார். (௬)

நீண்டதோள்களால்வேலையைப்புறஞ்செலநீக்கி
வேண்டுமீனொடுமகரங்கள்வாயிட்டுவிழுங்கித்
தூண்டுவானுருமேற்றினைச்செவிதொறுந்தூக்கி
மூண்டவான்மழையுரித்துடுத்துலாவருமூர்க்கர். (௭)

---

4. எற்றி - அடித்து.

மால்வரைக்குலம்பரலெனமழைக்குலஞ்சிலம்பக்
கால்வரைக்குலஞ்சிலம்புகொண்டசைத்தபைங்கழலார்
மேல்வரைப்படர்கலுழன்வன்காற்றெனும்விசையோர்
நால்வரைக்கொணர்ந்துடன்பிணித்தாலன்னநடையார். (அ)

உண்ணுந்தன்மையினூண்முறைதப்பினவ்வுடனே
பண்ணினின்றமால்யானையைவாயிடும்பசியார்
தண்ணினீர்முறைதப்பிடிற்றடக்கையாற்றடவி
விண்ணின்மேகத்தைவாரிவாய்ப்பிழிந்திடும்விடாயார். (கூ)

உறைந்தமந்தரமுதலியகிரிகளையுருவ
வெறிந்துவேணிலைகாண்பவரிந்துவால்யாக்கை
சொறிந்துதீர்வுறுதினவினர்மலைகளைச்சுற்றி
அறைந்துகற்றமாத்தண்டினரசனியினார்ப்பார். (க0)

சூலம்வாங்கிடிற்சுடர்மழுவெறிந்திடிற்சுடர்வாள்
கோலவெஞ்சிலைபிடித்திடிற்கொற்றவேல்கொள்ளின்
சாலவன்றண்டுதரித்திடிற்சக்கரந்தாங்கின்
காலன்மால்சிவன்குமரனென்றிவரையுங்கடப்பார். (கக)

ஒருவரேவல்லோருலகத்தினைவெல்ல
இருவர்வேண்டிவரேழுலகத்தையுமிறுக்கத்
திரிவரேவுடன்றிரிதருநெடுநிலஞ்செவ்வே
வருவரேவுடன்கடல்களுந்தொடர்ந்துபின்வருமால். (கஉ)

மேகமெத்தனையத்தனைமால்கரிவிரிந்த
நாகமெத்தனையத்தனைதேர்நனிநாளாப்
போகமுற்றினவெத்தனையத்தனைபுரவி
ஆகமேலனவெத்தனையத்தனையணிகம். (கங)

இன்னதன்மையயானைதேரிவுளியென்றிவற்றின்
பன்னுபல்லணம்பருமமற்றுறுப்பொடுபலவும்
பொன்னுநன்னெடுமணியுங்கொண்டல்லதுபுனைந்த
சின்னமுள்ளனவில்லனமெய்ம்முற்றுந்தெரிந்தால். (கச)

இப்பெரும்படையெழுந்திரைத்தேகமேலெழுந்த
துப்புதிர்ந்தனதூளியின்படலமீத்தூர்ப்பத்
தப்பில்கார்நிறந்தவிர்ந்ததுகரிமதந்தழுவ
உப்புநீங்கியதோங்குநீர்வீங்கலையுவரி. (கரு)

---

11. பிரமன் என்றும்பாடம்.

மலையும்வேலையுமற்றுளபொருள்களும்வானோர்
நிலையுமப்புறத்துலகங்கள்யாவையுநிரம்ப
உலைவுறுவகையுண்டுபண்டுமிழ்ந்தபேரொருமைத்
தலைவன்வாயொத்ததிலங்கையின்வாயில்கடருவ. (கசு)

கடம்பொறுமதக்களிறுதேர்பரிமிடைகடல்கள்
படம்பொறுமையினனந்தலையனந்தனும்பதைத்தான்
விடம்பொறுதிரியமரர்போற்குரக்கினமிரிக்கும்
இடம்பொறுமையினிரிந்துபோய்வடதிசையிறுத்த. (கஎ)

ஆழிமால்வரைவேலிசுற்றிடைவகுத்தமைத்த
ஏழுவேலையுமிடுவேலையரக்கரேயினமா
வாழிகாலனும்விதியும்வெவ்வினையுமேமள்ளர்
தோழமாமதிலிலங்கைமால்வேட்டமேற்றொடர்ந்தான். (கஅ)

ஆர்த்தவோசையோவலங்குதேராழியினதிர்ப்போ
கார்த்திண்மால்கரிமுழக்கமோவாசியின்கலிப்போ
போர்த்தபல்லியத்தாவமோநெருக்கினிற்புழுங்கி
வேர்த்தவண்டத்தைவெடித்திடப்பொடித்ததுமேன்மேல். (கசு)

வழங்குபல்படைமீனதுமதகரிமகரம்
முழங்குகின்றதுமுரிதிரைப்பரியதுமுரசம்
தழங்குபோரொலிகளிப்புறுந்தறுகண்மாநிருதப்
புழுங்குவெஞ்சினச்சுறவதுநிறைபடைப்புணரி. (உ0)

தசும்பிற்பொங்கியதிரள்புயத்தரக்கர்தந்தானை
பசும்பொற்றிண்டலமிதித்தலிற்கரிபடுமதத்தின்
அசும்பிற்சேறுபட்டளறுபட்டமிழுமாலடங்க
விசும்பிற்சேறலிற்கிடந்தவ்விலங்கன்மேலிலங்கை. (உக)

படியைப்பார்த்தனர்பரவையைப்பார்த்தனர்படர்வான்
முடியைப்பார்த்தனர்பார்த்தனர்நெடுந்திசைமுழுதும்
விடியப்பார்ப்பதோர்வெள்ளிடைகண்டிலர்மிடைந்த
கொடியைப்பார்த்தனர்வேர்த்தனர்வானவர்குலைந்தார். (உஉ)

உலகினுமலாவுருவெலாமிராக்கதவுருவா
அலகில்பல்படைபிடித்தமர்க்கெழுந்தவோவன்றேல்
விலகினீர்த்திரைவேலையோரேழும்போய்விதியால்,
புலைகள்வல்லுறப்பொடித்தனவோவென்றுபுகன்றார். (உங)

17. கடம் - மதம்.

நடுங்கிநஞ்சடைகண்டனைவானவர்நம்ப
ஒடுங்கியாங்கரந்துறைவிடமறிகிலமுயிரைப்
பிடுங்கியுண்குவர்யாரிவர்பெருமைபண்டறிவார்
முடிந்ததெம்வலியென்றவரோடுவான்முயன்றார். (உச)

ஒருவரைக்கொல்லவாயிரமிராமர்வந்தொருங்கே
இருபதிற்றிரண்டாண்டுநின்றமர்செய்தாலென்னும்
நிருதரைக்கொல்வதிடம்பெற்றரிடையினின்றன்றே
பொருவதிப்படைகண்டுதன்னுயிர்பொருத்தன்றே. (உரு)

என்றிறைஞ்சலுமிருண்மிடற்றிறைவனுமினிநீர்
ஒன்றுமஞ்சலிர்வஞ்சனையரக்கரையொருங்கே
கொன்றுநீக்குமக்கொற்றவனிக்குலமெல்லாம்
பொன்றுவிப்பதோர்விதிதந்ததாமெனப்புகன்றான். (உசு)

புற்றினின்றுவல்லரவினம்புறப்படப்பொருமி
இற்றதெம்வலியெனவிரைந்திரிதருமெலிபோல்
மற்றவானரப்பெருங்கடல்பயங்கொண்டுமறுகிக்
கொற்றவீரரைப்பார்த்திலதிரிந்ததுகுலைவால். (உஎ)

அணையின்மேற்சென்றசிலசிலவாழியைநீந்தப்
புணைகடேடினசிலசிலநீந்தினபோன
துணைகளோடும்புக்கழுந்தினசிலசிலதோன்றாப்
பணைகளேறினமலைமுழைபுக்கனபலவால். (உஅ)

அடைத்தபேரணையளித்ததுநமக்குயிரழிவான்
உடைத்துப்போதுமாலவர்தொடராமலென்றுரைத்த
படைத்துச்செல்குவர்விசும்பினுமென்றனபோதோன்
படைத்ததிக்கெலாம்பாய்ந்தனரென்றனபயத்தால். (உகூ)

அரியின்வேந்தனுமனுமனுங்கதனவனும்
பிரியகிற்றிலரிறைவரைநின்றனர்பின்றார்
இரியலுற்றனர்மற்றையோர்யாவருமெறிநீர்
விரியும்வேலையைக்கடந்தனர்நோக்கினன்வீரன். (நூ0)

இக்கொடும்படையெங்குளதியம்புதியென்றான்
மெய்க்கடுந்திறல்வீடணன்விளம்புவான்வீர
திக்கனைத்தினுமேழுமாத்தீவினுந்தீயோர்
புக்கழைத்திடப்புகுந்துளதிராக்கதப்புணரி. (நூக)

---

29. அடைத்த - கட்டிய. 31. புக்கு - புகுந்து.

ஏழெனப்படுங்கீழுளதலத்தினின்றேறி
ஊழிமுற்றியகடலெனப்புகுந்ததுமுளதால்
வாழிமற்றிவண்மூலமாத்தானைமுன்வருவ
ஆழிவேறினியப்புறத்தில்லைவாளரக்கர். (௩௨)

ஈண்டிவ்வண்டத்துளிராக்கதரெனும்பெயரெல்லாம்
மூண்டுவந்ததுதீவினைமுன்னின்றுமுடுக
மாண்டுவீழுமின்றென்கின்றதென்மதிவலியூழ்
தூண்டுகின்றதென்றடிமலர்தொழுதவன்சொன்னான். (௩௩)

கேட்டவண்ணலுமுறுவலுஞ்சீற்றமுங்கிளரக்
காட்டுகின்றனென்காணுதியொருகணத்தென்னா
ஒட்டின்மேற்கொண்டதானையைப்பயந்துடைத்துரவோய்
மீட்டிகொல்லெனவங்கதனோடினன்விரைந்தான். (௩௪)

சென்றுதானையையுற்றனன்சிறிதிறைகெடுவீர்
நின்றுகேட்டபினீங்குமினெனச்சொல்லிநேர்வான்
ஒன்றுங்கேட்கிலமென்றனர்குராக்கினமுறையால்
வென்றிவெந்திறற்படைப்பெருந்தலைவர்கண்மீண்டார். (௩௫)

மீண்டுவேலையின்வடகரையாண்டொருவெற்பின்
ஈண்டினார்களையென்குறித்திரிவுற்றதென்றான்
ஆண்டநாயககண்டிலைபோலுநீயவரை
மாண்டுசெய்வதெனென்றுரைகூறினர்மறுப்பார். (௩௬)

ஒருவனிந்திரசித்தெனவுள்ளவனுளநாள்
செருவினுற்றவைகொற்றவமறத்தியோதெரியின்
பொருவின்மற்றவரிற்றிலர்யாரொடும்பொருவார்
இருவர்விற்பிடித்தியாவரைத்தடுத்துநின்றெய்வார். (௩௭)

புரங்கடந்தவப்புனிதனைமுதலியபுலவோர்
வரங்கடந்துலகளிப்பவர்யாவருமாட்டார்
கரந்தடங்கினரினிமற்றவ்வரக்கரைக்கடப்பார்
குரங்குகொண்டுவந்தமர்செயுமானுடர்கொல்லாம். (௩௮)

ஊழியாயிரகோடிநின்றுருத்திரனோடும்
ஆழியானுமற்றயனொடுபுரந்தரனவனும்
சூழுமோடினரொருவரைக்கொன்றுதந்தோளால்
வீழுமாசெய்யவல்லரேல்வென்றியினன்றே. (௩௯)

---

38. புரம் - திரிபுரம்.

என்னப்பாமற்றிவ்வெழுபதுவெள்ளமுமொருவன்
இன்னப்போதுமோதேவரின்வலியமோசிறியேம்
முன்னிப்பாரெலாம்படைத்தவனுளெலாமுறைநின்
றுன்னிப்பார்த்துநின்றுறையிடக்குறையுமிவ்வூகம். (சம)

நாயகன்றலைபத்துளகையுநாலைந்தென்
றேயுமுள்ளதேயொருவன்மற்றவன்வந்திங்குற்றூர்
ஆயிரந்தலையதற்கிரட்டிக்கையரையா
பாயும்வேலையிற்கூலத்துமணலினும்பலரால். (சக)

கும்பகன்னனென்றுளன்மற்றிங்கொருவன்கைக்கொண்ட
அம்புதாங்கவுமிடுக்கிலனவன்செய்ததறிதி
உம்பரன்றியேயுணர்வுடையார்பிறருளரோ
நம்பிநீயுமுன்றனிமையையறிந்திலைநடந்தாய். (சஉ)

அனுமனாற்றலுமரசனதாற்றலுமிருவர்
தனுவினாற்றலுநதம்முயிர்தாங்கவுஞ்சாலா
கனியுங்காய்களுமுணவுளமுழையுளகரக்க
மணிசராளினென்னிராக்கதராளினென்வையம். (சங)

தாமுளாரன்றேபுகழினைத்திருவொடுந்தரிப்பார்
யாமுளோமெனினெங்கிளையுள்ளதெம்பெரும
போமினீரென்றுவிடைதரத்தக்கனைபுரம்போய்ச்
சாமினீரென்றறருமமன்றென்றனர்தளர்ந்தார். (சச)

வேறு.

சாம்பனைவதனநோக்கிவாலிசேயறிவுசான்றோய்
பாம்பணையமலன்மற்றிவ்விராமனென்றெமக்குப்பண்டே
ஏம்பல்வந்துற்றகாலத்தியம்பினையல்லையோநீ
ஆம்பலம்பகைஞன்றன்றேடையிந்திரமமைந்தோனன்னாய். (சரு)

தேற்றுவாய்தெரிந்தசொல்லாற்றெருட்டுவாய்தெளிவிலோரை
ஆற்றுவாயல்லைநீயுமஞ்சினைபோலுமாவி
போற்றுவாயென்றபோதுபுகழென்னும்புலமையென்னும்
கூற்றின்வாயுற்றல்வீரங்குறைவரோயிறைமைகொண்டார். (சசு)

அஞ்சினும்பழியும்பூண்டாமம்புவியாண்டுமாவி
துஞ்சுமாறன்றிவாழவொண்ணுமோநாண்மேற்றோன்றின்
நஞ்சினைபிட்டாலன்னவமிழ்தின்றேநம்மையம்மா
தஞ்சமென்றுணர்ந்தவீரர்தனிமையிற்சாதனன்றே. (சஎ)

தானவரோடுமற்றைச்சக்கரத்தலைவரோடும்
வானவர்கடையமாட்டாமறிகடல்கடைந்தவாலி
ஆனவனம்பொன்றாலேயயர்ந்தமையயர்த்ததென்னீ
மீனலர்வேலைபட்டதுணர்ந்திலைபோலுமேலோய். (௪௮)

எத்தனையரக்கரேனுந்தருமமாண்டில்லையன்றே
அத்தனையறத்தைவெல்லும்பாவமென்றறிந்ததுண்டோ
பித்தரைப்போலநீயுமிவரொடும்பெயர்ந்ததன்மை
ஒத்திலதென்னச்சொன்னானவனிவையுரைப்பானானான். (௪௯)

நாணத்தாற்சிறிதுபோழ்துநல்கினனிருந்துபின்னும்
தூணொத்ததிரடோள்வீரதோன்றியவரக்கர்வீரம்
காணத்தானிற்கத்தானக்கறைமிடற்றவற்குமாமே
கோணற்பூவுண்ணும்வாழ்க்கைக்குரங்கின்மேற்குற்றமுண்டோ. ()

தேவருமவுணர்தாமுஞ்செருப்பண்டுசெய்தகாலை
ஏவரேயென்னாற்காணப்பட்டிலரிருக்கையான்ற
மூவகையுலகினுள்ளாரிவர்துணையாற்றன்முற்றும்
பாவகருளரேகூற்றுமிவருடன்பகைக்கவற்றோ. (௫௧)

மாலியைக்கண்டேன்பண்டைமாலியவானைக்கண்டேன்
காலநேமியையுங்கண்டேனிரணியன்றனையுங்கண்டேன்
ஆலமாவிடமுங்கண்டேன்மதுவினையனுசனோடு
வேலையைக்கலக்கக்கண்டேனிவர்க்குளமிடுக்குமுண்டோ, (௫௨)

வலியிதன்மேலேபெற்றவரத்தினர்மாயம்வல்லர்
ஒலிகடன்மணலின்மிக்ககணக்கினருள்ளர்நோக்கின்
கலியினுங்கொடியர்கற்றபடைக்கலக்கரத்தரென்றால்
மெலிகுவதன்றியுண்டோவிண்ணுறவெருவல்கண்டால். (௫௩)

ஆகினுமையவுண்டாலார்க்கேனுமமரினஞ்சிச்
சாகினும்பெயர்ந்ததன்மைபழிதருநரகிற்றள்ளும்
ஏகுதுமீளவின்னுமியம்புவதுளதாலெய்தி
மேகமேயனையான்கண்முனெங்ஙனம்விழித்துநிற்றும். (௫௪)

என்றெடுத்தெண்கின்றானைக்கிறையவனியம்பலோடும்
வன்றிறற்குலிசமோச்சிவரைசிறகரிந்துவெள்ளிக்
குன்றிடைநீலக்கொண்மூவமர்ந்தெனமதத்தின்குன்றம்
நின்றவனருளுமைந்தன்மகனிவைநிகழ்த்தலுற்றான். (௫௫)

---

48. சக்கரத்தலைவர் - விஷ்ணு.

எடுத்தலுஞ்சாய்த்தருனுமெதிர்த்தலுமெதிர்ந்தோர்தம்மைப்
படுத்தலும்வீரவாழ்க்கைபற்றினர்க்குற்றமேனுள்
அடுத்ததேயமஃதுநிற்பவன்றியுமொன்றுகூறக்
கடுத்ததுகேட்டீர்நீருங்கருத்துளீர்கருதிநோக்கின். (௫௬)

ஒன்றுநீயஞ்சலையாமெலாமொருங்குசென்று
நின்றுமொன்றியற்றலாற்றுநேமியான்றனைநேர்ந்து
கொன்றுபோர்கடக்குமாயிற்கொள்ளுதும்வென்றியன்றேல்
பொன்றுதுமவனொடென்றான்போதலோபுகழன்றென்றான். (௫௭)

ஈண்டியதானைநீங்கநிற்பதென்யாமேசென்று
பூண்டவெம்பழியினோடும்போந்தநாம்போவதென்னே
மீண்டனர்தலைவரெல்லாமங்கதனோடும்வீரன்
மூண்டவெம்படையைநோக்கித்தம்பிக்குமொழிவதானான். (௫௮)

அத்தநீயுணர்தியன்றேயரக்கர்தானவுணரேதான்
எத்தனையுளரென்றாலும்யான்சிலையெடுத்தபோது
தொத்துறுகனலின்வீழ்ந்தபஞ்செனத்தொலையுந்தன்மை
ஒத்ததோரிடையூறுண்டென்றுணர்விடையுதிப்பதன்றால். (௫௯)

காக்குநரின்மைகண்டகலக்கத்தாற்கவியின்சேனை
போக்கறப்போகித்தத்தமுறைவிடம்புகுந்ததுண்டேல்
தாக்கியபடையைமுற்றுந்தலைதுமிப்பளவுந்தாங்கி
நீக்குதிநிருதராங்குநெருக்குவார்நெருக்காவண்ணம். (௬௦)

இப்புறத்தினையசேனையேவியாண்டிருந்ததீயோன்
அப்புறத்தமைந்தசூழ்ச்சியறிந்தவனயலேவந்தால்
தப்பறக்கொன்றுநீக்குமவனையார்தடுக்கத்தக்கார்
வெப்புறுகின்றதுள்ளம்வீரநீயலதுவில்லோர். (௬௧)

மாருதியோடுநீயும்வானரக்கோனும்வல்லே
பேருதிர்சேனைகாக்கவென்னுடைத்தனிமைபேணிச்
சோருதிரென்னின்வெம்போர்தோற்றுநாமென்னச்சொன்னான்
வீரன்மற்றிதனைக்கேட்டவிளையவன்விளம்பலுற்றான். (௬௨)

அன்னதேகருமமையவன்றியுமனைவேநின்றால்
என்னுனக்குதவிசெய்வதிதுபடையென்றபோது
சென்னியிற்சுமந்தகையர்தேவரேபோலயாமும்
பொன்னுடைவரிவிலாற்றல்புறனின்றுகாண்டுமென்றான். (௬௩)

---

61. வெப்பு - வெம்மை.

என்றவனேகலுற்றகாலையினநுமனெந்தாய்
புன்றொழிற்குரங்கெனுதென்றோளின்மேலேறிப்புக்கால்
நன்றெனக்கருதாநின்றேனல்லதுநாயினேனுன்
பின்றனிநிற்றுமாயினடிமையிற்பிழைப்பிலென்றான். (௬௪)

ஐயநிற்கியலாதுண்டேயிராவணனயலேவந்துற்
றெய்யும்விற்கரத்துவீரனிலக்குவன்றன்னோடேற்றால்
மொய்யமர்க்களத்தினுன்னைத்துணைபெறுதொழியின்முன்பு
செய்யுமாவெற்றியுண்டோசேனையுஞ்சிதையுமன்றே. (௬௫)

ஏரைக்கொண்டமைந்தகுஞ்சியிந்திரசித்தென்பான்றன்
போரைக்கொண்டிருந்துமேனாளிளையவன்றன்னைப்போக்கின்
ஆரைக்கொண்டுன்னலன்றேவென்றதங்கவனையின்னும்
வீரற்கும்வீரநின்னைப்பிரிகிலன்வெல்லுமென்பேன். (௬௬)

சேனையைக்காத்தென்பின்னேதிருநகர்தீர்ந்துபோந்த
யானையைக்காத்துமற்றையிறைவனைக்காத்தெண்டீர்ந்த
வானையித்தலத்தினோடுமறையொடும்வளர்த்தியென்றான்
ஏனைமற்றுரைக்கிலாதானிளவல்பினெழுந்துசென்றான். (௬௭)

வீடணநீயுமற்றுன்றம்பியோடேகிவெம்மை
கூடினர்செய்யுமாயந்தெரிந்தனகுறிக்கொண்டேகி
நீடுறுதானைதன்னைத்தாங்கினைநில்லாயென்னின்
கேடுளதாகுமென்றானவனதுகேட்பதானான். (௬௮)

சூரியன்சேயுஞ்செல்வன்சொற்றதேயென்னுஞ்சொல்லன்
ஆரியன்பின்புபோனவனைவருமதுவேநல்ல
காரியமென்னக்கொண்டார்கடற்படைகாத்துநின்றார்
வீரியன்பின்னர்செய்தசெயலெலாம்விரிக்கலுற்றாம். (௬௯)

வில்லினைத்தொழுதுவாங்கியேற்றினான்மெய்ந்நாண்மேருக்
கல்லெனச்சிறந்ததேனுங்கருணையங்கடலேயன்ன
எல்லொளிமார்பிற்றீராக்கவசமிட்டிழையாவேதச்
சொல்லெனத்தகையவாளித்தூணியும்புறத்துத்தூக்கி. (௭௦)

யோசனைநூற்றின்வட்டமிடைவிடாதுறைந்தசேனைத்
தூசிவந்தண்ணறன்னைப்போக்கறவளைந்துசுற்றி

---

67, யானையை - இலக்குமணனை. இறைவன் - சுக்கிரீவன்
68. உன்றம்பியென்றது - இலக்குமணனை.
70. சொல்லெனத்தொலைவிலாததூணியும் என்றும் பாடம்.

வீசினபடையுமம்புமிடைதலின்விண்ணோர்யாக்கை
கூசினபொடியாலெங்குங்குமிழ்ந்தனவியோமகூடம். (எக)

கண்ணனேயெளியேமிட்டகவசமேகடலேயன்ன
வண்ணனேயறத்தின்வாழ்வேமறையவர்வலியேமாறு
தொண்ணுமேநீயலாதோரொருவர்க்கிப்படைமேலூன்ற
எண்ணமேமுடித்தியென்றுவேத்தினரிமையோரெல்லாம். (எஉ)

முனிவரேமுதல்வராயவறத்துறைமுற்றினோர்கள்
தனிமையுமரக்கர்தானைப்பெருமையுந்தரிக்கலாதார்
பனிவருகண்ணர்விம்மிப்பதைக்கின்றநெஞ்சர்பாவத்
தனைவருந்தோற்கவண்ணல்வெல்கவென்றுசிசொன்னார். (எங)

வேறு.

மற்றும்வேறறத்துணின்றவானநாடனைத்துளோர்
கொற்றவில்லிவெல்கவஞ்சமாயர்வீகருவலயத்
துற்றதீமைதீர்கவின்றெடென்றுகூறினார்நிலம்
துற்றவெம்படைக்கைநீசரின்னவின்னசொல்லினர். (எச)

இரிந்தசேனைசிந்தியாருமின்றியேயுநின்றுநம்
விரிந்தசேனைகண்டியாதுமஞ்சலின்றிவெஞ்சரம்
தெரிந்துசேவகன்றிறம்பலின்றியெய்துசெய்கையான்
புரிந்ததன்மைவென்றிமேலுநன்றுமாலிபொய்க்குமோ. (எரு)

புரங்களெய்தபுங்கவற்குமுண்டுதேர்பொருந்தினார்
பரந்ததேவர்மாயனம்மைவேராறுத்தபண்டைநாள்
விரைந்துபுள்ளின்மீதுவிண்ணுளோர்களோடுமேவினான்
கரந்திலன்றனித்தொருத்தனேரும்வந்துகாலினான். (எசு)

தேருமாவும்யானையோடுசீயம்யாளியாதியா
மேருமானுமெய்யநின்றவேலையேழின்மேலவா
வாரும்வாருமென்றழைக்குமானுடற்கிம்மண்ணிடைப்
பேருமாறுநம்முழைப்பிழைக்குமாறுமெங்ஙனே. (எஎ)

என்றுசென்றடர்த்திரைத்தொர்சியவேறடர்ந்ததைக்
குன்றுசூழ்வளைந்தபோற்றொடர்ந்தசேனைகூடலும்
நன்றிதென்றுஞாலமேழுநாகமேழுமானுதன்
வென்றிவில்லைவேதநாதனுணெறிந்தவேலைவாய். (எஅ)

கதம்புலர்ந்தசிந்தைவந்தகாவல்யானைமாலொடு
மதம்புலர்ந்தநின்றவீரர்வாய்புலர்ந்தமாவெலாம்

மதம்புலர்ந்தவேகமாகவாளரக்கர்பண்புசால்
விதம்புலர்நதவெதன்னின்வென்றவென்றிசொல்லவேண்டுமோ. ()

வெறிந்திரிந்துவாசியோடுசியமாவுமீளியும்
செறிந்தமைந்தமூந்தசில்லிபுல்லுமாழிகூடுதேர்
முறிந்தெழுந்தமுற்கையானைவீசுமூசுபாகரைப்
பிறிந்திரிந்துசிந்தவந்தொராகுலம்பிறந்ததால். (அ0)

இந்நிமித்தமிப்படைக்கிடந்துடித்தடித்ததேர்
துந்நிமித்தமென்றுகொண்டுவானுளோர்கடுள்ளினார்
அந்நிமித்தமுற்றபோதரக்கர்கண்ணரங்கமேல்
மின்னிமிர்த்ததன்னவாளிவேதநாதன்வீசினான். (அக)

யாளிமேலுமாளின்மேலுமானைமேலுமாடன்மா
மீளிமேலும்வீரர்மேலும்வீரர்தேரின்மேலும்வெவ்
வாளிமேலும்வில்லின்மேலுமண்ணின்மேல்வளர்ந்தமாத்
தூளிமேலுமேறவேறவீரன்வாளிதூவினான். (அஉ)

மலைவிழுந்தவாவிழுந்தமானயானைமள்ளர்செந்
தலைவிழுந்தவாவிழுந்ததாயவாசிதாளிறும்
சிலைவிழுந்தவாவிழுந்ததிண்பதாகைதிங்களின்
கலைவிழுந்தவாவிழுந்தவெள்ளெயிற்றகாடெலாம். (அரு)

வாடைநாலுபாலும்வீசமாகமேகமாலைவெங்
கோடைமாரிபோலவாளிகூடவோடையானையும்
ஆடன்மாவும்வீரர்தேருமாளுமாள்வதாயவால்
பாடுபேருமாறுகண்டுகண்செல்பண்புமில்லையால். (அச)

விழித்தகண்கள்கைகள்விற்கள்வேல்கள்வாள்கள்விண்ணினுள்
தெழித்தவாய்கள்செல்லலுற்றதாள்கடோள்கள்செல்லினைப்
பழித்தவாளிசிந்தநின்றுபட்டதன்றிவிட்டகோல்
கழித்தவாயுதங்களொன்றுசெய்ததில்லைகண்டதே. (அரு)

தொடுத்தவாளியோடுவிற்றுணிந்துவீழுமுன்றுணிந்
தெடுத்தவாள்களோடுதோள்களிற்றுவீழுமற்றுடன்
கடுத்ததாள்கள்மண்டமாகுமெங்ஙனேகலந்துநேர்
தடுத்தவீரர்தாமுமொன்றுசெய்யுமாசலத்தினால். (அசு)

குரந்துணிந்தகண்சிதைந்தபல்லணங்குலைந்தபேர்
உரந்துணிந்தவீழ்வதன்றியாவியோடவொண்ணுமே

80. ஆகுலம் - துன்பம். 84. கோடைமாரி - வெயிற்காலமழை.

சரந்துணிந்தவொன்றைநூறுசென்றுசென்றுதள்ளலால்
வரந்துணிந்தவீரர்போரின்முந்தவுந்துவாசியே. (௮௭)

ஊரவுன்னின்முன்புபட்டுயர்ந்தவெம்பிணங்களால்
பேரவொல்வதன்றுபேரினாயிரம்பெருஞ்சரம்
தூரவொன்றுநூறுகூறுபட்டுகுந்துயக்கலால்
தேர்கவென்றுவந்தபாவியென்னசெய்கைசெய்யுமே. (௮௮)

எட்டுவன்றிசைக்கணின்றயாவும்வல்லயாவரும்
கிட்டினுய்ந்துபோகிலார்களென்னநின்றகேள்வியால்
முட்டும்வெங்கண்மானயானையம்புராயமுன்னமே
பட்டுவந்தபோல்விழுந்ததென்னதன்மைபண்ணுமே. (௮௯)

வாவிகொண்டபுண்டரீகமன்னகண்ணவாலியோன்
றேவினுண்டைநூறுகோடிகொல்லுமென்னவெண்ணுவான்
பூவினண்டர்கோனுமெண்மயங்குமன்னபோரின்வந்
தாவிகொண்டகாலனார்கடுப்புமன்னதாகுமே. (௯௰)

கொடிக்குலங்கடேரின்மேலயானைமேலகோடைநாள்
இடிக்குலங்கள்வீழவெந்தகாடுபோலெரிந்தவால்
முடிக்குலங்கள்கோடிகோடிசிந்தவேகமுற்றுரு
வடிக்குலங்கள்வாளியோடவாயினாடுதீயினால். (௯௧)

அற்றவேலும்வாளுமாகியாயுதங்கண்மீதெழுந்
தற்றவேகமுந்தவோடியோதவேலையூடுறத்
துற்றவெம்மைகைம்மிகச்சுருக்கொளச்சுவைத்ததால்
வற்றிநீர்வறந்துமீன்மறிந்துமண்செறிந்தவால். (௯௨

போரரிந்தமன்றுரந்தபுங்கவாளிபொங்கினார்
ஊரெழிந்தநாடுரந்ததென்னமின்னியோடலால்
நீரெரிந்தவண்ணமேநெருப்பெரிந்தநீணெடுந்
தேரெரிந்தவீரர்தஞ்சிரம்பொடிந்துசிந்துமே. (௯௩)

பிடித்தவாள்கள்வேல்களோடுதோள்கள்போரராவெனத்
துடித்தயானைமீதிருந்துபோர்தொடங்குசூரர்தம்
மடித்தவாய்கள்செந்தலைக்குலம்புரண்டவானின்மின்
இடித்தவாயினிற்றமாமலைக்குலங்களென்னவே. (௯௪)

கோரவாளிசீயமீளிகூளியோடுஞாளியும்
போரவாளினோடுதேர்கணூறுகோடிபொன்றுமால்

நீர்வாளிஞாலவாளிஞானவாளிநாந்தகப்
பாரவாளிவீரவாளியேகவாளிபாயவே. (௯௫)

ஆழிபெற்றதேரழுந்துமாளழுந்துமாளொடச்
சூழிபெற்றமாவழுந்தும்வாசியுஞ்சுரிக்குமால்
பூழிபெற்றவெங்களங்குளம்படப்பொழிந்துபேர்
ஊழிபெற்றவாழியன்னசோரிநீரினுள்ளரோ. (௯௬)

அற்றுமேலெழுந்தவன்சிரங்கடம்மையண்மிமேல்
ஒற்றுமென்னவங்குமிங்கும்விண்ணுளோரொதுங்குவார்
சுற்றும்வீழ்தலைக்குலங்கள்சொல்லுகல்லின்மாரிபோல்
எற்றுமென்றுபாரினெங்கும்வாழுவாரிரங்குவார். (௯௭)

மழைத்தமேகம்வீழ்வதென்னவானமானவாடையில்
சுழித்துவர்ந்துவீழ்வதென்னமண்ணின்மீதுதுன்னுமால்
அழித்தொடுங்குகாலமாரியன்னவாளியோளியால்
விழித்தெழுந்துவானினூடுமொய்யபொய்யர்மெய்யெலாம். (௯௮)

வேறு.

தெய்வநெடும்படைக்கலங்கள்விடுவர்சிலர் சுடுகணைகள்சிலையிற்
கோலி, எய்வர்சிலரெறிவாசிலரெற்றுவர் சுற்றுவர்மலைகள்பலவுமே
ந்திப், பெய்வர்சிலர்பிடித்துமெனக்கடுத்துறுவர் படைக்கலங்கள்
பெருதுவாயால், வைவர்சிலர்தெழிப்பர்சிலர்வருவர்சிலர் திரிவர்சி
லர்வயவர்மன்னோ. (௯௯)

ஆர்ப்பர்பலரடர்ப்பர்பலரடுத்தடுத்தேபடைக்கலங்களள்ளியள்ளித்
தூர்ப்பர்பலர்மூவிலைவேறுரப்பர்பலர்கரப்பர்பலர்சுடுதீத்தோன்றப்
பார்ப்பர்பலர்நெடுவரையைப்பறிப்பர்பலர்பகலோனைப்பற்றிச்சுற்று
கார்ப்பருவமேகமெனவேகநெடும்படையரக்கர்கணிப்பிலாதார். [ம்

எறிந்தனவுமெய்தனவு மெடுத்தனவும்பிடித்தனவும் படைக
ளெல்லாம், முறிந்தனவெங்கணைகள்பட முற்றினசுற்றினதேரு
மூரிமாவும், நெறிந்தனகுஞ்சிகளோடு நெடுந்தலைகளுருண்டனபே
ரிருளினீங்கிப், பிறிந்தனவெய்யவனென்னப் பெயர்ந்தனன்மீதுயர்
ந்ததடம் பெரியதோளான். (௧௦௧)

சொல்லறுக்கும்வலியரக்கர்தொடுகவசந்துகள்படுக்குந்துணிக்கும்யாக்கை
வில்லறுக்குந்தலையறுக்குமிடலறுக்குமுடலறுக்குமேன்மேல்வீசும்

97. கல்லின்மாரி - கல்மழை.

கல்லறுக்குமரமறுக்குங்கையறுக்குஞ்செய்யமள்ளர்கமலத்தோடு
நெல்லறுக்குந்திருநாடனெடுஞ்சரமென்றாலெவர்க்குநிற்கலாமே. ()

காலிழந்தும்வாலிழந்துங் கையிழந்துங்கழுத்திழந்தும் பருமக்கட்டின், மேலிழந்துமருப்பிழந்தும் விழுந்தனவென்றாநவல்லால் வேலையென்ன, மாலிழந்துமழையனைய மதமிழந்தும்வலியிழந்தும் மலைபோல்வந்த, தோலிழந்ததொழிலொன்றுஞ் சொன்னார்களில்லை நெடுஞ் சுரர்களெல்லாம். (௧௦௩)

வேறு.

வேல்செல்வனசதகோடிகள்விண்மேனிமிர்விசிகக்
கோல்செல்வனசதகோடிகள்கொலைசெய்வனமலையைத்
தோல்செல்வனசதகோடிகடுரகந்தொடரிரதக்
கால்செல்வனசதகோடிகளொருவன்னவைகடிவான். (௧௦௪)

ஒருவில்லியையொருகாலையினுலகேழையுமுடற்றும்
பெருவில்லிகண்முடிவில்லவர்சரமாமழைபெய்வார்
பொருவில்லவர்கணைமாரிகள்பொடியாம்வகைபொழியத்
திருவில்லிகடலைபோய்நெடுமலைபோலுடல்சிதைவார். (௧௦௫)

நூறாயிரமதயானையின்வலியோரெனநுவல்வோர்
மாறாயினரொருகோல்படமலைபோலுடன்மறிவார்
ஆறாயிரமுளதாகுதலழிசெம்புனலவைபுக்
கேறாதெறிகடல்பாய்வனசினமால்கரியினமால். (௧௦௬)

மழுவற்றுகுமலையற்றுகும்வளையற்றுகும்வயிரத்
தெழுவற்றுகுமிலையற்றுகுமயிலற்றுகுமெழுவேல்
பழுவற்றுகுமதவெங்கரிபரியற்றுகுமிரதக்
குழுவற்றுகுமொருவெங்கணைதொடைபெற்றதொர்குறியால். ()

ஒருகாலையினுலகத்துறுமுயிர்யாவையுமுண்ணும்
வருகாலனுமவன்றாதருநமன்றானுமவ்வரைப்பின்
இருகாலுடையவர்யாவருமிரிந்தாரினைத்திருந்தார்
அருகாயிரமுயிர்கொண்டுதமரேறகலரயர்த்தார். (௧௦௮)

அடுக்குற்றனமதயானையுமழிதேர்களும்பரியும்
தொடுக்குற்றனவிசும்பூடுறச்சுமந்தோங்கினவெனினும்

---

104. தோல் - தொளை.

மிடுக்குற்றனகவந்தக்குலமெழுந்தாடலினெல்லாம்
நடுக்குற்றனபிணக்குன்றுகளுயிர்நண்ணினவென்ன. (க0கூ)

பட்டாருடல்படுசெம்புனறிருமேனியிற்படலால்
கட்டார்சிலைக்கருஞாயிறுபுரைவான்கடையுகநாள்
சுட்டாசறுத்துலகுண்ணுமச்சுடரோனெனப்பொலிந்தான்
ஒட்டாருடற்குருதிக்குளித்தெழுந்தானையுமொத்தான். (கக0)

தீயொத்தனவுருமொத்தனசரஞ்சிந்திடச்சிரம்போய்
மாயத்தவர்படுகின்றனரெனவும்மறங்குறையார்
காயத்திடையுயிருண்டிடவுடன்மொய்த்தனகளியால்
ஈயொத்ததுநிருதக்குலநறவொத்தனனிறைவன். (ககக)

மொய்த்தாரையொரிமைப்பின்றலைமுடுகத்தொடுசிலையால்
தைத்தானவர்கழற்றிண்பசுங்காயொத்தனர்சரத்தால்
கைத்தார்நெடுந்தேருங்கடுங்களிறுங்களத்தழுந்தக்
குய்த்தாரழிகுழம்பாம்வகைவழுவாசரக்குழுவால். (ககஉ)

பிரிந்தார்பலரிரிந்தார்பலர்பிழைத்தார்பலருழைத்தார்
புரிந்தார்பலர்நெரிந்தார்பலர்புரண்டார்பலருருண்டார்
எரிந்தார்பலர்கரிந்தார்பலரெழுந்தார்பலர்விழுந்தார்
சொரிந்தார்குடறுமிந்தார்தலைதொலைந்தாரெதிர்தொடர்ந்தார். ()

மணிகுண்டலம்வலயங்குழைமகரஞ்சுடர்மகுடம்
அணிகண்டிகைகவசங்கழறிலகம்முதலகலம்
துணிவுண்டவருடல்சிந்தினதொடர்கின்றனசுடரும்
திணிகொண்டலினிடைமின்குலமிளிர்கின்றனசிவண. (ககச)

முன்னேயுளன்பின்னேயுளன்முகத்தேயுளனகத்தின்
தன்னேயுளன்மருங்கேயுளன்றலைமேலுளன்மலைமேல்
கொன்னேயுளனிலத்தேயுளன்விசும்பேயுளன்கொடியோர்
என்னேயொருகடுப்பென்றிடவிருஞ்சாரிகைதிரிந்தான். (ககரு)

என்னேரினனென்னேரினனென்றியாவருமெண்ணப்
பொன்னேர்வருவரிவிற்கரத்தொருகோளரிபொருவான்
ஒன்னார்பெரும்படைப்போர்க்கடலுறையன்றுளதெனினும்
அன்னேரவருடனேதிரிநிழலேயெனலானான். (ககசு)

பள்ளம்படுகடலேழினும்படியேழினும்பகையின்
வெள்ளம்பலவுளவென்னினும்வினையம்பலதெரியாக்

116. என்னேரினன் - என்னெதிரேயுளன்.

கள்ளம்படர்பெருமாயையிற்கரந்தாருருப்பிறந்தார்
உள்ளன்றியும்புறத்தேயுமுற்றுளனுமெனவுற்றான். (௧௧௭)

நானாவிதப்பெருஞ்சாரிகை திரிகின்றதுநவிலார்
போனானிடைபுகுந்தானெனப்புலன்கொள்கிலர்மறந்தார்
தானாவதுமுணர்ந்தானுணர்ந்துலகெங்கணுந்தானே
ஆனான்வினைதுறந்தானெனவிமையோர்களுமயிர்த்தார். (௧௧௮)

சண்டக்கடுநெடுங்காற்றிடைதுணிந்தெற்றிடத்தரைமேல்
கண்டப்படுமலைபோனெடுமரம்போற்கடுந்தொழிலோர்
துண்டப்படுகடுஞ்சாரிகைதிரிந்தான்சரஞ்சொரிந்தான்
அண்டத்தினையளந்தானெனக்கிளர்ந்தானிமிர்ந்தகன்றான். (௧௧௯)

களியானையுநெடுந்தேர்களுங்கடும்பாய்பரிக்கணனும்
தெளியாளியுமுரட்சீயமுஞ்சினவீரர்தநிறமும்
வெளிவானகமிலதாம்வகைவிழுந்தோங்கியபிழம்பால்
நளிமாமலைமலைதாவினனடந்தான்கடற்கிடந்தான். (௧௨0)

## வேறு.

அம்பரங்கடொடுங்கொடியாடையும்
அம்பரங்களொடுங்களியானையும்
அம்பரங்கவழுந்தினசோரியின்
அம்பரங்கமருங்கலமாழ்ந்தென.

இ-ள். அம்பு - (இராமபிரானெய்த) வாளி, அரங்க - அழுந்தலால், அம்பரங்கள் - ஆகாயத்தை, தொடும் - தீண்டுகின்ற, கொடியாடையும் - கொடிச்சீலையும், அம்பரங்களொடும் - அழகிய மேற்றவிசின் பாரத்தோடும், களியானையும் - மதத்த யானைகளும், அம்பரம் - கடலினது, கம் - நீரில், (பிரசண்டமாருதம் மோதலால்) அருங்கலம் - அரிய சரக்கேற்றிய மரக்கலங்கள், ஆழ்ந்தென-மூழ்கினதுபோல, சோரியின் - இரத்தவெள்ளத்தில், அழுந்தின-அமிழ்ந்தன. எ-று.

பரம் - ஆகுபெயர். ஆகாயம் மற்றைப்பூதங்களுக்கு முதன்மைத்தாகலின் அம்பரங்கள் என்பதும், மேற்றவிசு யானைகட்குப் போரணிகளினு மின்றியமையாச் சிறப்பிற்றாகலாற் பரங்கள் என்பதும் உயர்வுபற்றிவந்த பால்வழுவமைதி. அம்பரங்கம் - மெலித்தல். இது தொழிலும் உருவமும் பற்றிவந்த வுவமை. (௧௨௧)

தம்மனத்திற்சலத்தர்மலைத்தலை
வெம்மையுற்றெழுந்தேறுவமீளுவ
தெம்முனைச்செருமங்கைதன்செங்கையால்
அம்மனைக்குலமாடுவபோன்றவே. (௧௨௨)

கேடகங்கணவங்கையொடுங்கிளர்
கேடகங்கடுணிந்துகிடந்தன
கேடகங்கிளர்கின்றகளத்தநன்
கேடகங்கண்மறிந்துகிடந்தவே.

இ-ள். கேடு - அழிதல், அகம் - தன்னுள், கிளர்கின்ற - எழுகின்ற, களத்த - களத்தின்கணின்ற சேனைகள், கிளர் - விளங்குகின்ற, கேடகங்களொடும் - பல கைகளோடு, கேடகம் - கோள்களினது மாலையையொத்த, கங்கணம் - மணிக்கடகமணிந்த, வன்கை - வலிமையாகிய கைகள், துணிந்து கிடந்தன - அறுந்துகிடந்தன, நன்கு - நறுமணமைந்த, ஏட - தும்பைமாலையைத்தரித்த, கங்கள் - தலைகள், மறிந்து கிடந்தன - உருண்டுகிடந்தன. எ-று.

களத்த என்றது - சேனைகளை, இது வினையால் விளக்கிற்று கேடம், ஏடு இவ்விரண்டும் ஆகுபெயர். (௧௨௩)

அங்கதங்களத்தற்றழிதாரொடும்
அங்கதங்களத்தற்றழிவுற்றவால்
புங்கவன்கணைப்புட்டில்பொருந்திய
புங்கவன்கணைப்புற்றரவம்பொர.

இ-ள். புங்கவன் - யாரினும் உயர்ந்தோனாகிய ஸ்ரீராமபிரானுடைய, கணை - திரண்டவடிவினதாகிய, புட்டில் - தூணியில், பொருந்திய - தங்கியிருந்த, புங்கம்-குதையையுடைய, வன்கணை-வலிய கணையாகிய, புற்றரவம் - புற்றிற்பொருந்திய பாம்பானது, பொர - பொருதலினால், அங்கதம் - (அச்சேனைவீரர்களின்) தோளணிகள், களத்தற்று - கழுத்துகள்துணிந்ததுபோலத் துணிந்தன, அழிதாரொடும் - (தேரொழுகலால்) அழிந்த தும்பைமலர்மாலையும், அம் - அழகிய, கதமொடும் - கோபம், களத்து - போர்க்களத்தில், அற்று - நிலைமைகெட்டு, அழிவுற்ற - அழிவையடைந்தன. எ-று.

124. அங்கவெங்களத்தற்றழிதேரொடும் என்றும், அங்கவெங்களத்தற்றழிவுற்றவால் என்றும்பாடம்,

ஒடு - எண்ணிடைச்சொல், உம் - சாரியை, இது முற்றுருவகம். (௧௨௪)

கயிறுசேர்கழற்கார்நிறக்கண்டகர்
எயிறுவாளிபடத்துணிந்தியானையின்
வயிறுதோறுமறைவனவானிடைப்
புயறொறும்புகுவெண்பிறைபோன்றவே. (௧௨௫)

வென்றிவீரரெயிறும்விடாமதக்
குன்றின்வெள்ளைமருப்புங்குவிந்தன
என்றுமென்றுமமைந்தவிளம்பிறை
ஒன்றிமாநிலத்துக்கவுமொத்தவால். (௧௨௬)

ஓவிலாருடலுந்துதிரப்புனல்
பாவிவேலையுலகுபரத்தலால்
தீவுதோறுமினிதுறைசெய்கையர்
ஈவிலாதநெடுமலையேறினர். (௧௨௭)

விண்ணிறைந்தனமெய்யுயிர்வேலையும்
புண்ணிறைந்தபுனலினிறைந்தன
மண்ணிறைந்தனபேருடல்வானவர்
கண்ணிறைந்தனவிற்றொழிற்கல்வியே. (௧௨௮)

செறுத்தவீரர்பெரும்படைசிந்தின
பொறுத்தசோரிபுகக்கடல்புக்கன
இறுத்தநீரிற்செறிந்தனவெங்கணும்
அறுத்துமீனமுலந்தவனந்தமே. (௧௨௯)

ஆயிரம்பெருவெள்ளமரைபடத்
தேயநிற்பதுபின்பினியென்செயப்
பாயுமுற்றுடனேயெனப்பன்னினன்
நாயகற்கொருதவியைநல்குவான். (௧௩௦)

கோல்விழுந்தழுந்தாமுனங்கூடியாம்
மேல்விழுந்திடினும்மிவன்வீயுமால்
கால்விழுந்தமழையன்னகாட்சியீர்
மால்விழுந்தளிபோலமயங்கினீர். (௧௩௧)

ஒல்வதேயிவ்வொருவனிவ்வூகத்தைக்
கொல்வதேதநின்றுகுன்றெனயாமெலாம்

127. பாவி - பரவி.

வெல்வதே தனுமிலாமையின் வெண்பலை
மெல்வதே யெனவன்னிவிளம்பினன். (கரு௨)

உற்றுருத் தெழுவெள்ளமுடன்றெழாச்
சுற்றுமுற்றும் வளைந்தன தூவின
ஒற்றைமால்வரைமேலுயர் தாரைகள்
பற்றிமேகம்பொழிந்தெனப்பல்படை. (கருரு)

குறித்தெறிந்தனவெய்தனகூறறத்
தறித்ததேருங்களிறுந்தரைப்பட
மறித்தவாசிதுணித்தவர்மாப்படை
தெறித்துச்சிந்தச்சரமழைசிந்தினன். (கருச)

வாய்விளித்தெழுபஃறலைவாளியில்
போய்விளித்தகுருதிகள்பொங்குவ
பேய்விளிப்பநடிப்பனபெட்புறும்
தீய்விளிப்புறுதீபநிகர்த்தவால். (கரு௫)

நெய்கொள்சோரிநிறைந்தநெடுங்கடல்
ஐயவாடையளன்னசெந்தாளினள்
வையமங்கைபொலிந்தனண்மங்கலச்
செய்யகோலம்புனைந்தன்னசெய்கையாள். (கருசா)

உப்புத்தேனுநெய்யொண்டயிர்பால்கரும்
பப்புத்தானென்றுரைப்பனவாழிகள்
துப்புப்போற்குருதிப்புனல்சுற்றலால்
தப்பிற்றவ்வுரையின்றோர் தனுவினே. (கருஎ)

ஒன்றுமேதொடைகோலொருகோடிகள்
சென்றிபாய்வனதிங்களிளம்பிறை
அன்றுபோலெனவாகியதச்சிலை
என்றுமாள்வரெதிர்த்தவிராக்கதர். (கருஅ)

வேறு.

எடுத்தவரிரைத்தவரெதிர்ந்தவரெதிர்ந்தவர்மறங்கொடேதிரே
தடுத்தவர்சலித்தவர்சரிந்தவரிருந்தவர்தனிக்களிறுபோல்
கடுத்தவர்கலித்தவர்கறுத்தவர்செறுத்தவர்கலந்துசரமேல் [ல்.
தொடுத்தவர்துணிந்தவர்தொடர்ந்தனர்கிடந்தனர்துரந்தகணையா

137. சப்த சமுத்திரம்.

தொடுப்பதுசுடர்ப்பகழியாயிரநிரைத்தவைதூரந்துதுறைபோய்ப்
படுப்பதுவயப்பகழியாயிரரையன்றுபதிஞயிரவரைக்
கடுப்பதுகருத்துமதுகட்புலன்மனங்கருதல்கையினயில்வேல்
எடுப்பதுபடப்பொருலதன்றியவர்செய்வதொருநன்றியுளதோ. ()

தூசியொடுநெற்றியிருகையிறுடுபோரணிகடைக்குழைதொகுத்
தூசிநுழையாவகைசரத்தணிவகுக்குமவையுண்ணுமுயிரை
ஆசைகளையுற்றுருவுமப்புறமுமோடுமதனிப்புறமுளார்
ஈசனெதிருற்றுகுவதல்லதிகன்முற்றுவதொர்கொற்றமெவனே. ()

ஊனகுவடிக்கணைகளுழியனலொத்தனவுலந்தவுலவைக்
கானகநிகர்த்தனயரக்கர்மலையொத்தனகளித்தமதமா
மானவன்வயப்பகழிவீசுவலையொத்தனவளைப்புனலுள்வாழ்
மீனகுலமொத்தனகடற்படையினத்தொடும்விளிந்துறுதலால். ()

ஊழியிறுதிக்கடுகுமாருதமுமொத்தனனிராமனுடனே
பூழியெனவுக்குதிருமால்வரைகளொத்தனரரக்கர்பொருதார்
ஏழுலகுமுற்றுயிர்கள்யாவையுமுருக்கியிறுதிக்கணின்வரும்
ஆழியையுமொத்தனனம்மன்னுயிருமொத்தனரலைக்குநிருதர். ()

மூலமுதலாயிடையுமாயிறுதியாயெவையுமுற்றுமுறலும்
காலமெனலாயினனிராமனவ்வரக்கர்கடைநாளில்விளியும்
கூலமில்சராசரமளைத்திளையுமொத்தனர்குரைக்கடலெழும்
ஆலமெனலாயினனினிராமனவர்மீனமெனலாயினர்களால். (௧௪௪)

வஞ்சவினைசெய்துநெடுமன்றில்வளனுண்டுகரிபொய்க்குமறமார்
நெஞ்சமுடையோர்கள்குலமொத்தனரரக்கரறனுக்குநெடியோன்
நஞ்சநெடுநீரினையுமொத்தனனடுத்ததனைநக்குநரையும்
பஞ்சமுறுநாளில்வறியோர்களையுமொத்தனரக்கர்படுவார். (௧௪௫)

வெள்ளமொருநூறொருடிருநூறுபடும்வேலையினிலங்கைவெளியும்
பள்ளமொடுமேடுதெரியாதவகைசோர்குருதிபம்பியெழலும்
உள்ளுமதிலும்புறமுமொன்றுமறியாதலறியோடினர்களால்
கள்ளநெடுமான்விழியரக்கியர்கலக்கமொடுகால்கள்குலைவார். (௧௪௬)

நீங்கினர்நெருங்கினர்முருங்கினருலைந்துலகினீளுமலைபோல்
வீங்கினர்பெரும்பிணம்விசும்புறவசும்புபடுசோரிவிரிவுற்
றோங்கினனெடும்பரவையொத்துயரவெத்திசையுமுற்றெதிருறத்
தாங்கினபடைத்தலைவர்நூறுசதகோடியர்தடுத்தலரியார். (௧௪௭)

தேருமதமாவும்வரையாளியொடுவாசிமிகுசியமுதலா
ஊருமவையாவையுநடாயினர்கடாயினர்களுந்தினர்களால்
காருமுருமேறுமெரியேறுநிகர்வெம்படையொடம்புகடிதின்
தூரும்வகைதூயினர்துரந்தனர்களெய்தனர்தொடர்ந்தனர்களால்.

வம்மினடவம்மினெதிர்வந்துநுமதாருயிர்வரங்கள்பிறவும்
தம்மினெனவின்னனமொழிந்தெதிர்பொழிந்தனதடுப்பரியவாம்
வெம்மினெனவெம்பகழிவேலையெனவேயினனவ்வெய்யவினையோர்
தம்மினமனைத்தையுமுனைக்கெதிர்தடுத்தனதனித்தனியரோ. ()

அக்கணையையக்கணமறுத்தனர்செறுத்திகலரக்கரடரப்
புக்கணையலுற்றனர்மறைத்தனர்புயற்கதிகம்வாளிபொழிவார்
திக்கணைவகுத்தனரெனச்செலநெருக்கினர்செருக்கின்மிகையால்
முக்கணனையுற்றடிவணங்கியிமையோரிவைமொழிந்தனர்களால். ()

படைத்தலைவருற்றொருவர்மும்மடியிராவணனெனும்படிமையோர்
கிடைத்தனரவர்க்கொருகணக்கிலைவளைத்தனர்கிளர்ந்துலகெலாம்
அடைத்தனர்தெழித்தனரழித்தனர்தனித்துளனிராமனவரே
துடைத்தனரெம்வெற்றியெனவுற்றனரினிச்செயல்பணித்திசுடரோய். (கருக)

எய்தகணையெய்துவதன்முன்பிடையறுத்தினர்களேழுலகமும்
பெய்தகணைமாமுகிலெனப்புடைவளைத்தலர்பிடித்தனர்கள்போல்
வைதகலினல்லதுமறப்படைகொடிப்படைகடக்கும்வலிதான்
செய்ததிருமாலுடனுனக்குமரிதென்றனர்திகைத்துவிழுவார். ()

அஞ்சியயரன்மினவரெத்தனையராயிடினுமத்தனைவரும்
பஞ்சியெரியுற்றதெனவெந்தழிவரிந்தவுரைபண்டுமுளதால்
நஞ்சமமிழ்தத்தைநனிவென்றிடினுநல்லறநடக்குமதனை
வஞ்சவினைபொய்க்கருமம்வெல்லினுமிராமனையம்மாயர்கடவார். ()

அரக்கருளரார்சிலரவ்வீடணனலாதுலகிஞவியுடையார்
இரக்கமுளதாகினதுநல்லறமெழுந்துவளர்கின்றதினிநீர்
கரக்கமுழைதேடியுழல்கின்றிலிர்களின்றொருகடும்பகலிலே
குரக்கின்முதனாயகனையாளுடையகோளுழைவைகொல்லுமிவரை. ()

என்றுபரமன்பகரநான்முகனுமன்னபொருளேயிசைதலும்
நின்றுநிலையாறினர்கள்வானவருமானவனுமேநமியெனலாத்
துன்றுநெடுவாளிமழைமாரியினுமேலனதுரந்துவிரைவில்
குன்றுகுலமால்வரைகண்மானுதலைமாமலைகுவித்தனனரோ. ()

## வேறு.

மகரமறிகடலின்வளையும்வயநிருதர்
சிகரமனையவுடல்சிதறியிறுவருயிர்
பகரவரியபதம்விரவவமரர்பழ
நகரமிடமருகநவையர்நலிவுபட. (௧௫௬)

உகளுமிவுளிதலைதுமியவுறுகழல்கள்
தகளியுறவலியதலைகளறுதலைவர்
துகளினுடல்கள்விழவுயிர்கள்சுரருலகின்
மகளிர்வனமுலைகடழுவியகமகிழ. (௧௫௭)

மலையுமறிகடலும்வனமுமுறுநிலமும்
உலைவிலமரருறைபுலகுமுயிர்களொடு
தலையுமுடலுமிடைதழுவுதவழ்குருதி
அலையுமரியதொருதிரையுமிலதருகு. (௧௫௮)

இனையசெருநிகழுமளவினெதிர்பொருத
வினையமுடைமுதல்வரெவருமுடன்விளிய
அனையபடைநெளியவமரர்சொரிமலர்கள்
நனையவிசையினெழுதுவலைமழைநலிய. (௧௫௯)

இரியலுறுபடையைநிருதரிடைவிலகி
எரிகள்சொரியுநெடுவிழியரிழுதையர்கள்
திரிகதிரிகவெனவுரறுதெழிகுரலர்
கரிகளரிகள்பரிகடிதினெதிர்கடவ. (௧௬௦)

உலகுசெவிடுபடமழைகளுதிரவுயர்
அலகின்மலைகுலையவமரர்தலையதிர
இலகுதொடுபடைகளிடியொடுருமனைய
விலகியதுதிமிரம்வளையும்வகைவிளைய. (௧௬௧)

அழுகிதழுகிதெனவழுகனுவகையொடு
பழகுமதிதியரையெதிர்கொள்பரிசுபட
விழைகுமெதிரவெதிரெதிர்கொள்விரிபகழி
மழைகண்மழைசொரியவமரர்மலர்சொரிய. (௧௬௨)

தினகரனையனையகொடிகடிசையடைவ
சினவுபொருபரிகள்செறிவவனுகவுயர்

---

161. அலகின் - அளவில்லாத.

அனகனொடுமமரின்முடுகியெதிரவெழு
கனகவரைபொருவுகதிர்கொண்மணியிரதம். (ககூங)

பாறுபடுசிறகுகழுகுபகழிபட
நீறுபடுமிரதநிரையினுடறவிர
வேறுபடர்படரவிரவிசுடர்மலைய
மாறுபடவுலகின்மலைகளளறுபட. (ககூச)

அருகுகடறிரியவலகின்மலைகுலைய
உருகுசுடர்களிடைதிரியவுரனுடைய
இருகையொருகளிறுதிரியவிடுகுயவர்
திரிகையெனவுலகுமுழுதுமுறைதிரிய. (ககூரு)

சிவனுமயனுமெழுதிகிரியமரர்பதி
அவனுமமரர்குலமெவருமுனிவரொடு
கவனமுறுகரணமிடுவர்கழுகினமும்
நமனும்வரிசிலையுமறனுநடனவில. (ககூசு)

தேவர்திரிபுவனநிலையர்செருவிறலை
ஏவரறிவுறுவரிறுதிமுதலறிவின்
மூவர்தலைகள்பொதிசெறிவரறமுதல்வ
பூவைநிறவவெனவேதமுறைபுகழ. (ககூஎ)

எய்யுமொருபகழியேழுகடலுமிடு
வெய்யகளிறுபரியாளொடிரதம்விழ
ஒய்யவொருகதியினோடவுணரமரர்
கைகளெனவவுணர்கால்கள்கதிகுலைய. (ககூஅ)

அண்ணல்விடுபகழியானையிரதமயல்
பண்ணுபுரவிபடைவீரர்தொகுபகுதி
புண்ணினிடுகுறிகள்புள்ளியெனவிரைவின்
எண்ணுவனவனையவெல்லையினினுழைய. (ககூகூ)

வேறு.

சுருக்கமுற்றதுபடைசுருக்கத்தாலினிக்
கரக்கமுற்றொருபுறத்தென்னுங்கண்ணினால்
அரக்கருக்கன்றுசெல்வரியதாம்வகை
சரக்கொடுநெடுமதில்சமைத்திட்டானரோ. (கஎ0)

மாலியைமாலியவானைமால்வரை
போலுயிர்கயிடனைமதுவைப்போன்றுளார்

சாலிகையாக்கையர் தணிப்பில்வெஞ்சர
வேலியைக்கடந்திலருலகைவென்றுளார். (கஎக)

மாண்டனர்மாண்டனர்மற்றுளோரெலாம்
மீண்டனரொருதிசையேழுவேலையும்
மூண்டறமுருங்கியவூழிக்காலத்தில்
தூண்டுறுசுடர்சுடச்சுருங்கித்தொக்கபோல். (கஎஉ)

புரஞ்சுடுகடவுளும்புள்ளின்பாகனும்
அரஞ்சுடுகுலிசவேலமரர்வேந்தனும்
உறஞ்சுடுகிற்கிலரொருவனுமுடை
வரஞ்சுடும்வலிசுடும்வாழுநாள்சுடும். (கஎ௩)

ஆயிரவெள்ளமுண்டொருவராழிசூழ்
மாயிருஞாலத்தைமறிக்கும்வன்மையோர்
மேயினபெரும்படையதனையோர்விலால்
ஏயெனுமாத்திரத்தெய்துகொன்றனன். (கஎச)

இடைபடும்படாதனவிமைப்பிலோர்படை
புடைபடுவலங்கொடுவிலங்கிப்போகுமால்
படைபடுங்கோடியோர்சரத்திறப்பழிக்
கடைபடுமரக்கர்தம்பிறவிக்கட்டமால். (கஎரு)

பண்டுலகுய்த்தவனேடும்பண்ணமை
குண்டையின்பாகனும்பிறருங்கூடினர்
அண்டர்கள்விசும்பினினின்றூர்க்கின்றருழைக்
கண்டிலமிவனெடுமாயக்கள்வனால். (கஎசா)

கொன்றனனினியொருகோடிகோடிமற்
றன்றெனிற்பதுமமென்றுயின்வெள்ளமா
நின்றதுநின்றினிநினைவதென்பிற
தொன்றெனநினைகெனவன்னியோதினன். (கஎஎ)

விழித்துமோவிராவணன்முகத்துமீண்டியாம்
பழித்துமோநம்மைநாம்படுத்தலஞ்சினும்
அழித்துமோர்பிறப்புறுநெறிசென்றண்மயாம்
கழித்துமிவ்யாக்கையைப்புகழைக்கண்ணுற. (கஎஅ)

இடுக்கினிப்பெயர்ந்துரையெண்ணுவேமெனின்
அடுத்தகூர்வாளியினரணநீங்கலோம்

---

173. புரஞ்சுடுகடவுள் - உருத்திரன்.

எடுத்தொருமுகத்திருலெய்தியாமினிக்
கொடுத்துநம்முயிரெனவொருமைகூறினான். (௧௭௯)

இளக்கருநெடுவரையீர்க்குமாறெலாம்
அளக்கரிற்பாய்ந்தெனப்பதங்கமாரழல்
விளக்கினில்வீழ்ந்தெனவிதிகொண்டுந்தலால்
வளைத்திரைத்தடர்த்தனர்மலையின்மேனியார். (௧௮௦)

மழுவெழுத்தண்டுகோல்வலையநாஞ்சில்வாள்
எழுவயிற்குலிசவேலீட்டிதோமரம்
கழுமுதற்கப்பணமுதலகைப்படை
தொழுவினிற்புலியனுடலிற்றாவினர். (௧௮௧)

காந்தருப்பம்மெனுங்கடவுண்மாப்படை
வேந்தருக்கரசனும்வில்லினாக்கினான்
பாந்தளுக்கரசெனப்பறவைக்கேறெனப்
போந்துருத்தனநெருப்பனையபோர்க்கணே. (௧௮௨)

மூன்றுகண்ணமைந்தனவைம்முகத்தன
ஆன்றருநெய்கனல்புனலுமாடின
வான்றொடநிமிர்வனவாளிமாமழை
தோன்றினபுரஞ்சுடுமொருவன்றோற்றத்த. (௧௮௩)

ஐயிருகோடியரரக்கர்வேந்தர்கள்
மொய்வலிவீரர்களொழியமுற்றுற
எய்யெனுமாத்திரத்தவிந்ததென்பரால்
செய்தவத்திராவணன்மூலச்சேனையே. (௧௮௪)

மாப்பெருந்தீவுகளேழுமாதிரம்
பாப்பரும்பாதலத்துள்ளும்பல்வகைக்
காப்பருமலைகளும்பிறவுங்காப்பவர்
யாப்புறுகாதலிராவணற்கவர். (௧௮௫)

மாத்தடமேருவைவளைந்தவான்சுடர்
கோத்தகன்மார்பிடையணியுங்கொள்கையார்
பூத்தவிசுகந்தவன்புகன்றுபொய்யறு
நாத்தழும்பேறியவரத்தர்நண்ணினார். (௧௮௬)

நம்முளீண்டொருவனைவெல்லுநன்கெனின்
வெம்முனையிராவணன்றனையும்வெல்லுமால்

182. வேந்தருக்கரசன் - சக்கரவர்த்தி இராமன்.

இம்மெனவுடனெடுத்தெழுந்துசேறுமோ
செம்மையிற்றனித்தனிச்செய்துமோசெரு. (௧அஎ)

வேறு.

எல்லோமெல்லாமொன்றிவளைத்திங்கொடியோனை
வல்லோம்வல்லபோர்வளமுற்றிம்மலையோமேல்
வெல்லோம்வெல்லோமென்றனன்வன்னிமிடலோரும்
தொல்லோர்சொல்லேநன்றெனவஃதேதுணிவுற்றார். (௧அஅ)

அன்னார்தாமுமார்கலியேழுமெனவார்த்தார்
மின்னார்வானமிற்றுறுமொன்றேனிசங்கம்
கொன்னேயூதித்தோள்புடைகொட்டிக்கொடுசேர்ந்தால்
என்னும்வையமென்படும்வானந்திசையெல்லாம். (௧அகூ)

ஆர்த்தாரன்னாரன்னகணத்தேயவராற்றல்
தீர்த்தானுந்தன்வெஞ்சிலைநாணைத்தெரிவுற்றான்
பேர்த்தான்போர்த்தான்முற்றுமளந்தான்பிறழ்சங்கம்
ஆர்த்தாலொத்ததவ்வொலியெல்லாவுலகுக்கும். (௧கூ௦)

வேறு.

பல்லாயிரகோடியர்பல்கலைநூல்
வல்லாரவர்மெய்ம்மைவழங்கவலார்
எல்லாவுலகங்களுமேறியபோர்
வில்லாளரரக்கரின்மேதகையார். (௧கூ௧)

வென்றாருலகங்களைவிண்ணவரோ
டொன்றாவுயர்தானவர்யூகமெலாம்
கொன்றார்நிமிர்கூற்றெனவெவ்வுயிர்க்கும்
தின்றாரெதிர்சென்றுசெறிந்தனரால். (௧கூ௨)

வளைத்தார்மதயானையைவன்றொழில்
தளைத்தாரெனவந்துதனித்தனியே
உளைத்தாருருமேறெனவொன்னலர்போர்
விளைத்தாரிமையோர்கள்வெதும்பினரால். (௧கூ௩)

விட்டியவழங்கியவெம்படையில்
சுட்டியநிமிர்ந்தசுடர்ச்சுடரும்
கட்டியுமொருங்குகலந்தெழலால்
உட்டியுறவெந்தனவேழுலகும். (௧கூ௪)

2. எவ்வுயிரும் எனவும் பாடம். 193. ஒன்னலர் - பகைவர்.

தேரார்ப்பொலிவீரர்செழிப்பொலியும்
தாரார்ப்பொலியுங்கழலுக்கொலியும்
போராற்சிலைநாணிபுடைப்பொலியும்
காரார்ப்பொலியுங்களிறார்ப்பொலியும். (கசுரு)

எல்லாருமிராவணனேயனையார்
வெல்லாவுலகில்லவர்மெய்வலியார்
தொல்லார்படைவந்துதொடர்ந்ததென
நல்லானுமுருத்தெதிர்நண்ணினனால். (கசுசு)

ஊழிக்கனல்போல்பவருந்தினபோர்
ஆழிப்படையம்பொடுமற்றகலப்
பாழிக்கடைநாள்விடுபன்மழைபோல்
வாழிச்சுடர்வாளிவழங்கினனால். (கசுஎ)

சூரோடுதொடர்ந்தசுடர்க்கணைதான்
தாரோடகலங்கடடிந்திடலும்
தேரோடுமடிந்தனர்செங்கதிரோன்
ஊரோடுமடிந்தனனொத்துரவோர். (கசுஅ)

கொல்லோடுசுடர்க்கணைகூற்றிணைப்
பல்லோடுதொடர்ந்தனபாய்தலினால்
செல்லோடெழுமாமுகில்சிந்தினபோல்
வில்லோடும்விழுந்தமிடற்கரமே. (கசுகூ)

செம்போடுதிரத்திரையாழியின்வாய்
வெம்போடரவக்குலமேனிமிரும்
கொம்போடும்விழுந்தனவொத்தகுறைந்
தம்போடுவிழுந்தவடற்கரமே. (உ00)

முன்னோடுதிரப்புனன்மூதுலகைப்
பின்னோடிவளைந்தபெருங்கடல்வாய்
மின்னோடும்விழுந்தனமேகமெனப்
பொன்னோடைநெடுங்கிரிபுக்கனவால். (உ0க)

மறவெற்றியரக்கர்வலக்கையொடும்
நறவக்குருதிக்கடல்வீழ்நகைவாள்
சுறவொத்தனமீதுதுடித்தெழலால்
இறவொத்தனவாவுமினப்பரியே. (உ0உ)

202. சுறவு - சுறுமீன்.

தாமச்சுடர்வாளிதடிந்தகலப்
பாமக்குருதிப்படிகின்றபடைச்
சேமப்படர்கேடகமால்கடல்சேர்
ஆமைக்குலமொத்தனவத்தனையால். (௨௦௩)

காம்போடுபதாகைகள்காருதிரப்
பாம்போடுகடற்படிவுற்றனவால்
வாம்போர்நெடுவாடைமலைந்தகலக்
கூம்போடுயர்பாய்கள்குறைந்தனபோல். (௨௦௪)

மண்டப்படுசோரியின்வாரியின்வீழ்
கண்டத்தொகைகவ்வியகாலொடுதோள்
முண்டத்திரிதண்டின்முரட்டொருவன்
துண்டச்சுறவொத்ததுடித்தனவால். (௨௦௫)

தெளிவுற்றபளிங்குறுசில்லிகொடேர்
விளிவுற்றுறவேறுறவீழ்வனதாம்
அளிமுற்றியசோரியின்வாரியினும்
ஒளிமுற்றியதிங்களையொத்துளவால். (௨௦௬)

நிலைகோடலின்வென்றியரக்கரைநேர்
கொலைகோடலின்மன்குறிகோளுறுமேல்
சிலைகோடியதோறுசிரத்திரள்வன்
மலைகோடியின்மேலுமறிந்திடுமால். (௨௦௭)

திண்மார்பின்மிசைச்செறிசாலிகையின்
கண்வாளிகடைச்செறிகானநுழைந்
தெண்வாயுறமொய்த்தனவின்னறையுற்
றுண்வாய்வரிவண்டினமொத்தனவால். (௨௦௮)

பாறாடுகளத்தொருவன்பகலின்
கூறாகியநாலிலொர்கூறிடையே
நூறாயினயோசனைநூழில்களம்
மாறாதுழல்சாரிகைவந்தனனால். (௨௦௯)

நின்றாருடனின்றுநிமிர்ந்தயலே
சென்றாரெதிர்சென்றுசிதைத்திடலால்
தன்றாதையையோர்வுறுதன்மகனோர்
கொன்றானிவனென்பதெனென்றுகொள்வார். (௨௧௦)

இங்கேயுளனிங்குளனிங்குளனென்
றங்கேயுணர்கின்றவலந்தலைவாய்
வெங்கோபநெடும்படைவெஞ்சரம்விட்
டெங்கேனும்வழங்குவரேகுவரால். (உகக)

ஒருவன்னெனவுன்னுமுணர்ச்சியிலார்
இரவன்றிதுவோர்பகலென்பர்களால்
கரவன்றிதிராமர்கணக்கிலரால்
பரவைம்மணலிற்பலரென்பர்களால். (உகஉ)

ஒருவன்னொருவன்மலைபோலுயர்வோன்
ஒருவன்படைவெள்ளமோராயிரமே
ஒருவன்னொருவன்னுயிருண்டதலால்
ஒருவன்னுயிருண்டதுமுள்ளதுவே. (உகங)

தேர்மேலுளர்மாவொடுசெந்தறுகட்
கார்மேலுளர்மாகடன்மேலுளரிப்
பார்மேலுளரும்பர்பரந்துளரால்
போர்மேலரிராமர்புகுந்தடர்வார். (உகச)

என்னும்படியெங்கணுமெங்கணுமாய்த்
துன்னுஞ்சுழலுந்திரியுஞ்சுடரும்
பின்னரும்மருகும்முடலும்பிரியான்
மன்னன்மகன்வீரர்மயங்கினரால். (உகரு)

வேறு.

படுமதகரிபரிசிந்தினபணிவரையிரதமவிந்தன
விடுதிசைசெவிடுபிளந்தனவிரிகடலளறெழுந்தன
அடுபுலியவுணர்தமங்கையரலர்விழியருவிகள்சிந்தின
கடுமணிநெடியவெனுஞ்சிலைகணகணகணகணெனுந்தொறும். (உகசு)

வேறு.

ஊனேறுபடக்கைவீரரெதிரெதிருருவந்தோறும்
கூனேறுசிலையுந்தானுங்குதிக்கின்றகடுப்பின்கொட்பால்
வானேறினார்கடேருமலைகின்றவயவர்தேரும்
தானேறிவந்ததேரேயாக்கினான்றனியேதன்னான். (உகஎ)

காயிருஞ்சிலையொன்றேனுங்கணைப்புட்டிலொன்றதேனும்
தூயெழுபகழிமாரிமழைத்துளித்தொகையின்மேல

217. தானேறிவந்ததேர் - தரை.

ஆயிரங்கைகள்செய்தசெய்தனவமலன்செங்கை
ஆயிரங்கையுங்கூடியிரண்டுகையாயவன்றே. (௨௧௮)

பொய்யொருமுகத்தனாகிமனிசனாம்புணர்ப்பிதன்றால்
மெய்யுறவுணர்ந்தோம்வெள்ளமாயிரமிடைந்தசேனை
செய்யுறுவினையமெல்லாமொருமுகந்தெரிவதுண்டே
ஐயிறுநூறுமல்லவனந்தமாமுகங்களம்மா. (௨௧௯)

கண்ணுதன்மூர்த்திதானுநான்முகக்கடவுடானும்
எண்ணுதுந்தொடரவெய்தகோலெனவெண்ணலுற்றார்
பண்ணையால்வகுக்கமாட்டார்தனித்தனிப்பார்க்கலுற்றால்
ஒண்ணுமோகணிக்கவென்பாருவகையினுயர்ந்ததோளார். (௨௨௦)

வெள்ளமீரைந்துநூறேவிடுகணையவற்றின்மெய்யே
உள்ளவாறுளவாமென்றோருரைக்கணக்குணர்துமேனும்
கொள்ளையோருருவைநூறுகொண்டனபலவாற்கொற்ற
வள்ளலேவழங்கினானோவென்றனர்மற்றைவானோர். (௨௨௧)

குடைக்கெலாங்கொடிகட்கெல்லாங்கொண்டனகுவிந்தகொற்றப்
படைக்கெலாம்பகழிக்கெல்லாம்யானைதேர்பரிமாவாதிக்
கடைக்கெலாந்துரந்தவாளிக்கணித்ததிற்களவைகாட்டி
அடைக்கலாமறிஞர்யாரேயென்றனர்முனிவரப்பால். (௨௨௨)

கண்டத்துங்கழுத்துமீதாய்க்கபாலத்துங்கடக்கலுற்ற
சண்டப்போரரக்கர்தம்மைத்தொடர்ந்துகோல்புணருந்தன்மை
பிண்டத்திற்கருவாந்தன்பேருருக்களைப்பிரமன்றந்த
அண்டத்தைநிறையப்பெய்துகுலுக்கியதனையவான. (௨௨௩)

கோடியையிரண்டுதொக்கபடைக்கலமள்ளர்கூவி
ஓடியோர்பக்கமாகவுயிரிழந்துலத்தலோடும்
வீடிநின்றழிவதென்னேவிண்ணவர்படைகள்வீசி
மூடுதுமிவனையென்றியாவருமூண்டுமொய்த்தார். (௨௨௪)

விண்டுவின்படையேயாதிமேவயன்படையீறாகக்
கொண்டொருங்குடனேவிட்டார்குலுங்கியதமரர்கூட்டம்
அண்டமுங்கீழமேலாவாகியததனையண்ணல்
கண்டொருமுறுவல்காட்டியவற்றினையவற்றாற்காத்தான். (௨௨௫)

தானவைதொடுத்தபோதுதடுப்பரிதுலகந்தானே
பூநனிவடவைத்தீயிற்புக்கெனப்பொரிந்துபோமென்

---

224. மூடுதல் - அழித்தல்.

றானதுதெரிந்தவள்ளலளப்பருங்கோடியம்பால்
ஏனையர்தலைகளெல்லாமிடியுண்டமலையினிட்டான். (உஉ௬)

ஆயிரவெள்ளத்தோருமடிகளத்தவிந்துவீழ்ந்தார்
மாயிருஞாலத்தாடன்வன்பொறைப்பாரநீங்கி
மீயுயர்ந்தெழுந்தானன்றேவீங்கொலிவேலைநின்றும்
போயொருங்கண்டத்தோடுங்கோடியோசனைகள்பொங்கி. (உஉ௭)

வேறு.

ஆனையாயிரந்தேர்பதினாயிரமடர்பரியொருகோடி
சேனைகாவலராயிரம்பேர்படிற்செழுமணிக்கவந்தமொன்றாடும்
கானமாயிரமாயிரகோடிக்குக்கவின்மணிகணிலென்னும்
ஏனவம்மணியேழரைநாழிகையாடியதினிதன்றே. (உஉ௮)

வேறு.

நினைந்ததுமுடித்தேதமென்னுவானவர்துயரநீத்தார்
புனைந்தனென்வாகையென்னுவிந்திரனுவகைபூத்தான்
வனைந்தனவல்லவேதம்வரம்புபெற்றுயர்ந்தமாதோ
அனந்தனுந்தலைகளேந்தியயர்வுயிர்த்தவலநதீர்ந்தான். (உஉ௯)

தாய்படைத்துடையசெல்வமீகெனத்தம்பிக்கீந்து
வேய்படைத்துடையகானம்விண்ணவர்தவத்தின்மேவி
தோய்படைத்தொழிலால்யார்க்குந்துயர்துடைத்தானைநோக்கி
வாய்படைத்துடையாரெல்லாம்வாழ்த்தினார்வணக்கஞ்செய்தார். ()

தீமொய்த்தவனையசெங்கணரக்கரைமுழுதுஞ்சிந்திப்
பூமொய்த்தகரத்தராகிவிண்ணவர்போற்றநின்றான்
பேய்மொய்த்தநரிகளீண்டிப்பெரும்பிணம்பிறங்கித்தோன்றும்
ஈமத்துட்டமியனின்றகரைமிடற்றிறைவனொத்தான். (உ௩க)

அண்டமர்க்களமும்வீந்தவரக்கரெவ்வுயிருமாகக்
கொண்டதோருருவந்தன்னுலிறுதிநாள்வந்துகூட
மண்டுநாண்மறித்துங்காட்டமன்னுயிரனைத்தும்வாரி
உண்டவன்றனேபானதன்னொருமூர்த்தியொத்தான். (உ௩உ)

ஆகுலந்துறந்ததேவரள்ளினர்சொரிந்தவெள்ளச்
சேகறுமலருஞ்சாந்துஞ்செருத்தொழில்வருத்தந்தீர்க்க
மாகொலைசெய்தவள்ளல்வாளமர்க்களத்தைதக்கைவிட்
டேகினனிளவலோடுமிராவணனேற்றகைம்மேல். (உ௩௩)

---

232. அண்டமதளவவீந்த என்றும் பாடம்.

இவ்வழியியன்றவெல்லாமியம்பினுமிரிந்துபோன
தெவ்வழியாற்றல்வெற்றிச்சேனையின்செலவுஞ்சென்ற
வெவ்வழியரக்கர்கோமான்செய்கையுமிளையவீரன்
எவ்வமிலாற்றற்போருமுற்றுநாமியம்பலுற்றும். (உகச)

பெரும்படைத்தலைவர்யாரும்பெயர்ந்திலர்பெயர்ந்துபோய்நாம்
விரும்பினம்வாழ்க்கையென்றால்யாரிடைவிலக்கற்பாலார்
வரும்பழிதுடைத்தும்வானின்வைகுதும்யாமுமென்று
இருங்கடல்பெயர்ந்ததென்னத்தானையுமீண்டதிப்பால். (உகரு)

ஆக திருவிருத்தம் - கசகூஉ.

## கக-வது, வேலேற்றப்படலம்.

சில்லியாயிரஞ்சில்லுளைப்பரியொடுஞ்செறிந்த
எல்லவாங்கதிர்மண்டிலமாறுகொண்டிமைக்கும்
செல்லுந்தேர்மிசைச்சென்றனன்றேவரைத்தொலைத்த
வில்லும்வெங்கணைப்புட்டிலுங்கொற்றமும்விளங்க. (க)

அரக்கர்சேனையோராயிரவெள்ளத்தையமரில்
துரக்கமானுடர்தம்மையென்றொருபுடைதுரந்து
வெருக்கொள்வானரச்சேனைமேற்றான்செல்வான்விரும்பி
இருக்குந்தேரொடும்போயவனிராவணனெதிர்ந்தான். (உ)

நூறுகோடிதேர்நொறிற்பரிநூறிருகோடி
யாறுபோன்மதமாகளிறையிருகோடி
ஏறுகோளுறுபதாதியுமிவற்றிவற்றிரட்டி
சீறுகோளரியேறனானுடனன்றுசென்ற. (ங)

மூன்றுவைப்பினுமம்புறத்துலகினுமுனையின்
ஏன்றுகோளுறும்வீரர்கள்வம்மினென்றிசைக்கும்
ஆன்றபேரியுமதிர்குரற்சங்கமுமசனி
ஈன்றகாளமுமேழொடேழுலகமுமிசைப்ப. (ச)

அனையவாகியவரக்கர்க்குமரக்கனையவுணர்
வினையைவானவர்வெல்வினைப்பயத்தினைவீரர்
கினையுநெஞ்சினைச்சுடுவதோர்நெருப்பினைநிமிர்ந்து
கனையுமெண்ணையுங்கடப்பதோர்கடலினைக்கண்டார். (ரு)

கண்டுகைகளோடணிவகுத்துருமுறழ்கற்கள்
கொண்டுகூற்றமுநடுக்குறத்தோள்புடைகொட்டி
அண்டகோளங்களடுக்கழிந்துலைவுறவார்த்தார்
மண்டுபோரிடைமடிவதேநலனெனமதித்தார். (௬)

அரக்கர்சேனையுமாருயிர்வழங்குவானமைந்த
குரக்குவேலையுமொன்றொடொன்றெதிரெதிர்கோத்த
நெருக்கிநேர்ந்தனநெருப்பிடைபொடித்தனநெருப்பின்
உருக்குசெம்பெனவம்பரத்தோடினதுதிரம். (௭)

அற்றவன்றலையறுகுறையெழுந்தெழுந்தண்டத்
தொற்றவானகமுதயமண்டிலமெனவொளிரச்
சுற்றுமேகத்தைத்தோற்றியகுருதிநீர்துளிப்ப
முற்றும்வையகம்போர்க்களமாமெனமுயல. (௮)

தூவியம்பெடையரியினமறிதரச்சூழி
தூவியம்படைசோர்ந்தனசொரியுடல்சுரிப்ப
மேவியம்படைபடப்படர்குருதியின்வீழ்ந்த
மேவியம்படைக்கடலிடைக்குடரொடுமிதப்ப. (௯)

இ-ள். (யானைகள்) அம் - அழகிய, படைக்கடலிடை - சேனைக்கடலினடுவே, மேவி - சேர்ந்து, (சீராமபிரான்) அம்பு - அம்புகளை, எடை - (தொடுக்க) எடுக்கையில், (மதநீருண்ணவரும்) தூவி சிறகுவளத்தையுடைய, பெடையினம் - பெண்வண்டுகூட்டமும், அரியினம் - ஆண்வண்டுக்கூட்டமும், மறிதர - மீண்டுபோக, சூழி முகபடாத்தை, தூவி - சின்னப்படுத்தியெறிந்து, சோர்ந்தன - சோர்வடைந்து, மேவியம் - பெருமைமேவிய, படை - அந்த அம்புகள், பட - பட்டதனுல், படர்குருதியின் - பரவியோடுகின்ற உதிரத்தில், சொரியுடல் - இரத்தத்தைச்சொரிகின்ற தம்முடல், சுரிப்ப - சுழன்றமிழும்படி, வீழ்ந்த - வீழ்ந்து, குடரொடு - (வயிற்றினின்றும் வெளிப்பட்ட) குடரோடு, மிதப்ப - மிதப்பன—எ-று.

இனமென்பதைப் பெடையென்பதனோடுங் கூட்டுக, யானைகள் - சொல்லெச்சம், இது சூழி தூவியென்றமையால் பெறப்பட்டது ஒழிந்தவகலம் இசையெச்சம், மேவி என்னும் வினையெஞ்சுகிளவி தூவியென்னும் வினைகொண்டது. அம் - சாரியை. (௯)

கண்டிறந்தனகணவர்தம்முகத்தவர்முறுவல்
கண்டிறந்தனமடந்தையருயிரொடுங்கலந்தார்

பண்டிறந்தனபழம்புணர்க்கன்புகப்பன்னிப்
பண்டிறந்தனபுலம்பொலிசிலம்பொலிபணிப்ப. (௰)

இ-ள். பண்டு - முன்னாட்களில், இறந்தன - உண்டுகழிந்தனவாகிய, பழம்புணர்க்கு - பழமையாகிய சுரதநூலிற்கூறும் புணர்ச்சிகள் காரணமாக, அன்புக - அன்பின்கண்ணீர்சிந்த, பன்னி - அப்புணர்ச்சிகளைப் பலவாறிகூறி, பண் - நிறைநரம்பியாழினிசையையும், திறம் - குறைநரம்பியாழினிசையையும், தனபுலம்பொலி - தமது அழுகையொலியும், சிலம்பொலி - சிலம்பினொலியும், பணிப்ப - இயம்பும்படி, (அழுதுகொண்டோடி) கண்வர்தம் - நாயகருடைய, கண் - கண்கள், திறந்தன - விழித்தவாகிய, முகத்து - முகங்களில், அவர் முறுவல் - அவர்களுடைய நகையை, கண்டு - பார்த்து மகிழ்ந்து, இறந்து - உடலைவிட்டு, அனமடந்தையர் - அக்கற்புடைய மகளிர்கள், உயிரொடும் - கணவருடைய உயிரோடும், கலந்தார் - சேர்ந்தனர்கள். எ-று. (௧௧)

பண் - ஏழ்நரம்புமுள்ளது. திறம் - ஏழிற்குறைநரம்புள்ளது. இவ்விரண்டுந்தம்மகத்தெழுமோசைக் கானமையினிமையும் அன்பும் ஆகுபெயர். அழுதுகொண்டோடி - இசையெச்சம். புணர்-முதனிலைத்தொழிற்பெயர். புணர்க்கு - உருபுமயக்கம். பணிப்ப - உபசாரவழக்கு. நூலினதுபழமையை அதனாலுணர்த்தப்படும் பொருண்மேலேற்றிப் பழம்புணர்க்கெனக்கூறினார். அன்னமடந்தையர், சிராமபிரானுடைய அம்பு தம்முரத்தையுருவிச் செல்லாநிற்கையில் வேல்கொண்டெறிய விழித்தகணிமைத்தலு மோட்டாமெனக் கருதுமியல்பினராகலின் விழித்துநின்று, விண்ணவர்முதலியோரையும் வெற்றிகொண்ட நம்மருமத்தை யுருவிற்றன்றோ இம்மனிசன் வாளியென வியந்து நகைத்துடலைநீத்து விண்ணடைந்த கணவரோடு கலந்தனரென்பது கருத்து, இது தன்னைவேட்டல். (௧௨)

ஏழுமேழுமென்றுரைக்கின்றவுலகங்கள்யாவும்
ஊழிபோவதேயொப்பதோருலைவுறவுடற்ற
நாழில்வெஞ்சமநோக்கியவிராவணனுவன்றான்
தாழிலென்படைதருக்கறுமென்பதோர்தன்மை. (௧௧)

மரமுங்கல்லுமேவில்லொடுவாண்மழுச்சூலம்
அரமுங்கல்லும்வேன்முதலியவயிற்படையடுக்கிச்
சிரமுங்கல்லெனச்சிந்தலிற்சிதைந்தசெந்தசேனை
உரமுங்கல்வியுமுடையவன்செருநின்றதொருபால். (௧௨)

அழலுங்கட்களிறணியொடுந்துணிபடுமாவி
சுழலும்பல்பரித்தேரொடுபுரவியுஞ்சுற்றக்
கழலுஞ்சோரிநீராற்றொடுங்கடலிடைக்கலக்கும்
குழலுநூலும்போன்மனுமனுந்தானுமக்குமரன். (கங)

வில்லுங்கூற்றுவற்குண்டெனத்திரிகின்றவீரன்
கொல்லுங்கூற்றெனக்குறைக்குமிந்நிறைப்பெருங்குழுவை
ஒல்லுங்கோளரியுருமன்னகுரங்கினதுகிரும்
பல்லுங்கூர்க்கின்றகூர்க்கிலவரக்கர்தம்படைகள். (கச)

கண்டுநின்றிறைப்பொழுதினிக்காலத்தைக்கழிப்பின்
உண்டுகைவிடுங்கூற்றுவனிருதர்பேருயிரை
மண்டுவெஞ்செருநாளொருகளத்திடைமடித்தே
கொண்டுமீள்கவென்கொற்றமென்றிராவணன்கொதித்தான். (கரு)

ஊதைபோல்வனவுருமுறழ்திறலனவுருவிப்
பூதரங்களைப்பிளப்பனவண்டத்தைப்பொதுப்ப
மாதிரங்களையளப்பனமாற்றருங்கூற்றின்
தூதுபோல்வனசுடுகணைமுறைமுறைதுரந்தான் (கசு)

ஆளிபோன்றுளனெதிர்ந்தபோதமர்க்களத்தடைந்த
ஞாளிபோன்றுளவென்படைதென்னனள்ளிருளடைந்த
காளிபோன்றனனிராவணன்வெள்ளிடைக்கரந்த
பூளைபோன்றதப்பொருசினத்தரிகடம்புணரி. (கஎ)

இரியல்போகின்றசேனையையிலக்குவன்விலக்கி
அரிகளஞ்சன்மினஞ்சன்மினென்றருள்வழங்கித்
திரியுமாருதிதோளினுந்தேர்மிசைச்சென்றான்.
எரியும்வெஞ்சினத்திராவணனெதிர்புகுந்தேற்றான். (கஅ)

ஏற்றுக்கோடலுமிராவணனெரிமுகப்பகழி
நூற்றுக்கோடியின்மேற்செலச்சிலைகொடுநூக்கக்
காற்றுக்கோடியபஞ்செனத்திசைதொறுங்கரக்க
வேற்றுக்கோல்கொடுவிலக்கினனிலக்குவன்விசையால். (ககூ)

விலக்கினான்றடந்தோளினுமார்பினும்விசிகம்
உலக்கவுய்த்தனனிராவணனைந்தொடைந்துருவக்
கலக்கமுற்றிலனிளவலுமுள்ளத்திற்கனன்றான்
அலக்கணெய்துவித்தானடலரக்கனையும்பால், (உ0)

காக்கலாகலாக்கடுப்பினிற்றொடுப்பனகணைகள்
னூக்கினான்கணைநுறுக்கினானரக்கனுநூழில்
ஆக்கும்வெஞ்சமத்தரிதிவன்றனைவெல்வதம்பால்
நீக்கியென்னினிச்செய்வதென்றிராவணனினைந்தான். (உக)

கடவுண்மாப்படைதொடுக்கின்மற்றவைமுற்றுங்கடக்க
விடவுமாற்றவும்வல்லனேல்யாரையும்வெல்லும்
தடவுமாற்றலைக்கூற்றையுந்தமையனைப்போலச்
சுடவுமாற்றுமெவ்வுலகையுமெவனுக்குந்தேறலான். (உஉ)

மோகமொன்றுண்டுமுதலவன்வகுத்ததுமுன்னாள்
ஆகமற்றதுகொற்றமுஞ்சிவன்றனையழிப்ப
தேகமுற்றியவிஞ்சையையிவன்வயினேவிக்
காகமுற்றுழல்களத்தினிற்கிடத்துவென்கடிதின். (உ௩)

என்பதுன்னியவ்விஞ்சையைமனத்திடையெண்ணி
முன்பன்மேல்வரத்துரந்தனனதுகண்டுமுடுகி
அன்பின்வீடணனாழியான்படையினினறுத்தி
என்பதோதினனிலக்குவனதுதொடுத்தெய்தான். (உ௪)

வீடணன்சொலவிண்டுவின்படைக்கலம்விட்டான்
மூடுவெஞ்சினமோகத்தைநீக்கலுமுனிந்தான்
மாடுநின்றவனுபாயங்கண்மதித்திடவந்த
நேடுநந்தமக்கென்பதுமனங்கொண்டுகிளர்ந்தான். (உ௫)

மயன்கொடுத்ததுமகளொடுவெயங்கனல்வேள்வி
அயன்படைத்துளதாழியுங்குலிசமுமனைய
துயர்ந்தகொற்றமுமூழியுங்கடந்துளதுருமிற்
சயந்தனைப்பொருந்தம்பியையுயிர்கொளச்சமைந்தான். (உ௬)

விட்டபோதினிலொருவனைவீட்டியேமீளும்
பட்டபோதவனான்முகனாயினும்படுக்கும்
வட்டவேலதுவலங்கொண்டுவாங்கினன்வணங்கி
எட்டநிற்கலாத்தம்பிமேல்வல்விசைத்தெறிந்தான். (உ௭)

எறிந்தகாலையில்வீடணனதனிலையெல்லாம்
அறிந்தசிந்தையனையவீதென்னுயிரழிக்கும்
பிறிந்துசெய்யலாம்பொருளிலையென்றனும்பெரியோன்
அறிந்துபோக்குவலஞ்சனீயென்றிடையணைந்தான். (உ௮)

ஏய்தவாளியுமேயினபடைக்கலம்யாவும்
செய்தமாதவத்தொருவனைச்சிறுதொழிற்றீயோன்
வைத்தவைவினிலொழிந்தனவீடணன்மாண்டான்
உய்தலில்லையென்றும்பரும்பெருமனமுலைந்தார். (௨௯)

தோற்பனென்னினும்புகழ்நிற்குந்தருமமுந்தொடரும்
ஆர்ப்பநல்லவரடைக்கலம்புகுந்தவனழியப்
பார்ப்பதென்னெடும்பழிவந்துதொடர்வதன்முன்னம்
ஏற்பெனென்றனிமார்பினென்றிலக்குவனெதிர்ந்தான். (௩௦)

இலக்குவற்குமுன்வீடணன்புகுமிருவரையும்
விலககியங்கதன்மேற்செலுமவனையும்விலக்கிக்
கலக்கும்வானரக்காவலனுமன்முன்கடுக
அலக்கணன்னதையின்னதென்றுரைசெயலாமே. (௩௧)

முன்னின்றாரெலாம்பின்னுறக்காலினின்முடுகி
நின்மின்யானிதுவிலக்குவனென்றுரைநேரா
மின்னும்வேலினைவிண்ணவர்கண்புடைத்திரங்கப்
பொன்னின்மார்பிடையேற்றனன்முதுகிடைப்போன. (௩௨)

எங்குநீங்குதிநீயெனவீடணனெழுந்தான்
சிங்கவேறன்னசீற்றத்தானிராவணன்றேரில்
பொங்குபாய்பரிசாரதியொடுமபடைப்புடைத்தான்
சங்கவானவர்தலையெடுத்திடநெடுந்தண்டால். (௩௩)

சேய்விசும்பினினிமிர்ந்துநின்றிராவணன்சீறிப்
பாய்கடுங்கணைபத்தவனுடல்புகப்பாய்ச்சி
ஆயிரஞ்சரமனுமன்றனுடலிடையழுத்திப்
போயினன்செருமுடிந்ததென்றிலங்கையூர்புகுவான். (௩௪)

தேடிச்சேர்ந்தவென்பொருட்டினுலகுடைச்செல்வன்
வாடிப்போயினனீயினிவஞ்சனைமதியால்
ஓடிப்போகுவதெங்கடாவுன்னொடுமுடனே
வீடிப்போவெனென்றரக்கன்மேல்வீடணன்வெகுண்டான். (௩௫)

வென்றியென்வயமானதுவீடணப்பசுவைக்
கொன்றினிப்பயனில்லையென்றிராவணன்கொண்டான
நின்றிலனொன்றுநோக்கிலன்முனிவெலாநீத்தான்
பொன்றிணிந்தனமதிலுடையிலங்கையூர்புகுந்தான். (௩௬)

அரக்கனேகினன்வீடணன்வாய்திறந்தரற்றி
இரக்கந்தானெனவிலக்குவனிணையடித்தலத்தில்
கரக்கலாகலாக்காதலன்வீழ்ந்தனன்கலுழ்ந்தான்
குரக்குவெள்ளமுந்தலைவருந்துயரிடைக்குளித்தார். (௩௭)

பொன்னிரும்புறுங்காளிமைப்பொருப்பினிற்பொன்ற
என்னிருந்துநானிறப்பெனிக்கணத்தெனையாளும்
மன்னிருந்தினிவாழ்கிலனென்றனன்மறுக
நின்னிலென்றிறைசாம்பவனுரையொன்றுநிகழ்த்தும். (௩௮)

அனுமனிற்கநாமாருயிர்க்கிரங்குவதறிவோ
நினையுமத்துணைமாதிரத்துலகெலாநிமிர்வான்
வினையினன்மருந்தளிக்கின்றான்வீரர்க்குவீரன்
தினையுமல்லலுற்றழுங்கன்மினென்றிடர்தீர்த்தான். (௩௯)

மருத்தின்காதலன்மார்பிடையமபெலாம்வாங்கி
இருத்தியோகடிதேகலையிளவலையிங்ஙன்
வருத்தங்காணுமோமன்னவனென்னனுமன்னன்
கருத்தையுன்னியம்மாருதியுலகெலாங்கடந்தான். (௪௦)

வேறு.

உய்த்தொருதிசைமேலோடியுலகெலாங்கடக்கப்பாய்ந்து
மெய்த்தகுமருந்துதன்னைவெற்பொடுங்கொணர்ந்தவீரன்
பொய்த்தலில்குறிகடானேபொதுவறநோக்கிப்பொன்போல்
வைத்ததுவாங்கிக்கொண்டுவருதலில்வருத்தமுண்டோ. (௪௧)

தந்தனன்மருந்துதன்னைத்தாக்குதன்முன்னேயோகம்
வந்ததுமாண்டார்க்கெல்லாமுயிர்தரும்வலத்ததென்றால்
நொந்தவர்நோய்வுதீர்க்கச்சிறிதன்றேநொடிதன்முன்னே
இந்திரனுலகமார்க்கவெழுந்தனனிளையவீரன். (௪௨)

எழுந்துநின்றனுமன்றன்னையிருகையாற்றழுவியெந்தாய்
விழுந்திலனன்றேமற்றவ்வீடணனென்னவிம்மித்
தொழுந்துணையவனைநோக்கித்துணுக்கமுந்துயருநீங்கிக்
கொழுந்தியுமீண்டாள்பட்டானரக்கனென்றுவகைகொண்டான். ()

தருமமென்றறிஞர்சொல்லுந்தனிப்பொருடன்னையின்னே
கருமமென்றனுமனுக்கிக்காட்டியதன்மைகண்டால்
அருமையென்னிராமற்கம்மாவறம்வெல்லும்பாவந்தோற்கும்
இருமையுநோக்கினென்னுவிராமன்பாலெழுந்துசென்றார். (௪௪)

ஒன்றலபலவென்றோங்குமுயர்பிணத்தும்பரோடும்
குன்றுகள்பலவுஞ்சோரிக்குரைகடலனைத்துந்தாவிச்
சென்றடைந்திராமன்றன்னைத்திருவடிவணக்கஞ்செய்தார்
வென்றியின்றலைவர்கண்டவிராமனென்விளைந்ததென்றான். (௪௫)

உற்றதுமுழுதுநோக்கியொழிவறவுணர்வுளூறச்
சொற்றனன்சாம்பன்வீரனனுமனைத்தொடரப்புல்லிப்
பெற்றனெனுன்னையென்னைபெறாதனபெரியோயொன்று
மற்றிடையீறுசெல்லாவாயுளையாகவென்றான். (௪௬)

புயல்பொழியருவிக்கண்ணன்பொருமலன்பொங்குகின்றான்
உயிர்புறத்தொழியநின்றவுடலன்னவுருவத்தம்பி
துயர்தமக்குதவிமீளாத்துறக்கம்பெற்றுயர்ந்ததொல்லைத்
தயரதற்கண்டாலொத்தான்றம்முனைத்தொழுதுசார்வான். (௪௭)

இளவலைநோக்கியையவிராகவகுலத்துக்கேற்ற
வளவினமடைந்தோர்க்காகிமன்னுயிர்கொடுத்தவண்மைத்
துளவியறோங்கலாய்நீயன்னதுதுணிந்தாயென்றால்
அளவியலன்றுசெய்தற்கடுப்பதேயாகுமன்றே. (௪௮)

புறவொன்றின்பொருட்டினயாக்கைபுண்ணுறவரிந்தபுத்தேள்
அறவனுமையநின்னைநிகர்க்கிலனப்பாணின்ற
பிறவினையுரைப்பதென்னேபேரருளாளரென்பார்
கறவையுங்கன்றுமொப்பார்தமக்கிடர்காண்கினென்றான். (௪௯)

சாலிகைமுதலவானபோர்ப்பரந்தாங்கிற்றெல்லாம்
நீல்நிறஞாயிறன்னநெடியவன்முறையினீக்கிக்
கோல்சொரிதனுவுங்கொற்றவனுமன்கைக்கொடுத்துக்கொண்டல்
மேல்நிறைகுன்றமொன்றின்மெய்ம்மெலிவாற்றலுற்றான். (௫௦)

ஆக திருவிருத்தம் - ௩௫௪௨.

---

46. ஈறுசெல்லாஆயுள் - என்றும் உள்ள உயிர்.
49. யாக்கைபுண்ணுற அரிந்தோன் - சிபிச்சக்கரவர்த்தி.

*

## ௩௨-வது, களங்காண்படலம்.

ஆயபின்கவிதன்வேந்துமளப்பருந்தானையோடும்
மேயினனிராமன்பாதம்விதிமுறைவணங்கிவீந்த
தீயவர்பெருமைநோக்கிநடுக்கமுந்திகைப்புமுற்றார்
ஓய்வுறுமனத்தாரொன்றுமுணர்ந்திலர்நாணமுற்றார். (௧)

மூண்டெழுசேனைவெள்ளமுலகொருமூன்றின்மேலும்
நீண்டுளவதனையையவெங்கனனிமிர்ந்ததென்னத்
தூண்டிரண்டனையதிண்டோட்சூரியன்சிறுவன்சொல்லக்
காண்டிநீயரக்கர்வேந்தன்றன்னொடுங்களத்தையென்றான். (௨)

தொழுதனர்தலைவரெல்லாந்தோன்றியகாதறூண்ட
எழுகெனவிரைவிற்சென்றாரிராவணற்கிளவலோடும்
கழுகொடுபருந்தும்பாறும்பேய்களுங்கணங்கண்மற்றும்
குழுவியகளத்தைக்கண்ணினோக்கினர்துணுக்கங்கொண்டார். (௩)

ஏங்கினார்நடுக்கமுற்றாரிரைத்திரைத்துள்ளமேற
வீங்கினார்வெருவலுற்றார்விம்மினாருள்ளம்வெம்ப
ஓங்கினார்மெள்ளமெள்ளவுயிர்நிலைத்துவகையூற
ஆங்கவருற்றதன்மையாரறிந்தறையகிற்பார். (௪)

ஆயிரம்பருவங்கண்டாற்காட்சிக்கோர்கரையிற்றன்றால்
மேயினதுறைகடோறும்விம்மினார்நிற்பதல்லால்
பாய்திரைப்பரவையேழுங்காண்குறுபதகரென்ன
நீயிருந்துரைத்தியென்றார்வீடணனறியிற்சொன்னான். (௫)

வேறு.

காகபந்தர்ச்செங்களமெங்குஞ்செறிகால
யோகத்தம்பிற்பொன்றினவேனுமுடலொன்றி
மேகச்சங்கந்தொக்கனவேழம்வெளியின்மை
நாகக்குன்றினின்றனகாண்மினமரங்காள். (௬)

வென்றிச்செங்கண்வெம்மையரக்கர்விசையூர்வ
ஒன்றிற்கொன்றுற்றம்புதலைப்பட்டுயிர்றுங்கப்
பொன்றிச்சிங்கநாகவடுக்கிற்பொலிகின்ற
குன்றிற்றுஞ்சுந்தன்மைநிகர்க்குங்குறிகாணீர். (௭)

5. ஆயிரம் பருவம் - ஓராயிரம் திங்கள்.

அளியிற்பொங்குமங்கணனேவுமயில்வாளிக்
களியிற்பட்டார்வாண்முகமின்னுங்கரையில்ல
புளினத்திட்டிற்கண்ணகன்வாரிக்கடல்பூத்த
நளினக்காடேயொப்பனகாண்மினமரங்காள். (௮)

பூவாய்வாளிச்செல்லெறிகாலைப்பரிபொன்றக்
கோவாய்வன்பாய்வெண்கொடிதிண்பாயொடுகூட
மாவாய்திண்டேர்மண்டுதலானீர்மறுவேலை
நாவாய்மானச்செல்வனகாண்மினமரங்காள். (௯)

ஒழுகிப்பாயுமும்மதவேழமுயிரோடும்
பழகிற்கில்லாப்பஃறிரைதூங்கும்படர்வேலை
எழுகிற்கில்லாசெம்புனல்வெள்ளத்திடையிற்ற
முழுகித்தோன்றுமீனரசொக்கும்முறைநோக்கீர். (௧௦)

கடக்காரென்னப்பொங்குகவந்தத்தொடுகைகள்
தொடக்காநிற்கும்பேயிலயத்தின்றொழில்பூண்ட
மடக்கோவில்லாவார்படிமக்கூத்தமைவிப்பான்
நடக்கால்காட்டுங்கண்ணுளரொக்குந்நமரங்காள். (௧௧)

மழுவிற்கூர்வாள்வன்பலிடுக்கின்வயவீரர்
குழுவிற்கொண்டார்நாடிதொடக்கப்பொறிகூட்டித்
தழுவிக்கொள்ளக்கள்ளமனப்பேயவைதள்ளி
நழுவிச்செல்லும்மியல்பினகாண்மின்னமரங்காள். (௧௨)

பொன்னின்றோடைமின்பிறழ்நெற்றிப்புகர்வேழம்
பின்னும்முன்னும்மாறினவீழ்விற்பிணைவுற்ற
தன்னின்னேராமெய்யிருபாலுந்தலைபெற்ற
என்னுந்தன்மைக்கேய்வனபல்வேறிவைகாணீர். (௧௩)

நாமத்திண்போர்முற்றியகோபந்நகைநாறும்
பாமத்தொன்னீரன்னநிறத்தோர்பகுவாய்கள்
தூமத்தோடும்வெங்கனலின்னுஞ்சுடர்கின்ற
ஓமக்குண்டமொப்பனபல்வேறிவைகாணீர். (௧௪)

பின்னும்மோடையாடல்வயப்போர்மிடல்வேழக்
கன்னம்மூலத்துற்றனவெண்சாமரைகாணீர்
மன்னும்மாநீர்த்தாமரைமானும்வதனத்த
அன்னம்மெல்லத்துஞ்சுவவொக்கின்றவைகாணீர். (௧௫)

---

11. மடக்கோவில்லா - முடக்குதல்நீங்காத. 12. தொடக்க - சுற்றிக்கொள்ள.

ஓளிம்முற்றாதற்றுயர்வேழத்தொளிர்வெண்கோ
டாளின்முற்றாச்செம்புனல்வெள்ளத்தவைகாணீர்
கோளின்முற்றாச்செருக்கண்மேகக்குழுவின்கண்
நாளின்முற்றாவெண்பிறைபோலுந்நமரங்காள். (௧௬)

கொடியும்வில்லுங்கோலொடுவேலுங்குவிதேரும்
துடியின்பாதக்குன்றின்மிசைத்தோல்விசியின்கட்
டொடியும்வெய்யோர்கண்ணெரிசெல்லவுடன்வெந்த
தடியுண்டாடிக்கூளிதடிக்கின்றனகாணீர். (௧௭)

சகரம்முந்நீர்செம்புனல்வெள்ளந்தடுமாறி
மகரந்தம்மின்வந்தனகாணுமனமுட்கிச்
சிகரம்மன்னயானைகொலென்னச்சிலநாணி
நகரந்நோக்கிச்செல்வனகாண்மின்னமரங்காள். (௧௮)

விண்ணிற்பட்டார்வெற்புறழ்காயம்பலமென்மேல்
மண்ணிற்செல்வார்மேனியின்வீழமடிவுற்றார்
எண்ணிற்றீராவன்னவைதீருமிடவில்லாக்
கண்ணிற்றோன்றார்விம்மியிளைக்கும்படிகாணீர். (௧௯)

அச்சிற்றிண்டேரானையின்மாமேற்காலாளின்
மொய்ச்சுச்சென்றார்மொய்குருதித்தாரைகண்முட்ட
உச்சிச்சென்றாயினும்வெய்யோனுதயத்தின்
குச்சிச்சென்றொத்துளதுகுங்குறிகாணீர். (௨௦)

காறாய்மேனிக்கண்டகர்கண்டப்படுகாலை
ஆறாவென்னவிண்படர்செஞ்சோரியதாகி
வேறோர்நின்றவெண்மதிசெங்கேழ்நிறம்விம்மி
மாறோர்வெய்யோன்மண்டிலமொக்கின்றதுகாணீர். (௨௧)

வேறு.

வானையமண்ணையவலைந்தெழுந்த கொழுங்குருதிமகரவே லை, தானைவற்றெழும்பறவைச்சிறைதெளித்த புதுமழையின்று ள்ளிதாங்கி, மீனையநறும்போதும்விரையருந்துஞ் சிறைவண்டுநி றம்வேறெய்திக், கானனமுங்கடிபொழிலுமுறியீன்றபோன் றொ ளிர்வகாண்மின்காண்மின். (௨௨)

வரைபொருதமதயானைத்துணைமருப்புங் கிளைமுத்துமணியும் வாரித், திரைபொருதுபுறங்குவிப்பத்திறங்கொள்பணை மாமுருட்

22. முறியீன்ற - தவிர்த்தன.

டிச்சிறைப்புள்ளார்ப்ப, நுரைகொடியும்வெண்குடையுஞ் சாமரையு மெனச்சுமந்துபிணத்திரேன்மைக், கரைபொருதுகடன்மடுக்குங் கடுங்குருதிப்பேர்யாறு காண்மின்காண்மின். (உரு)

கைக்குன்றப்பெருங்கரையநிருதர்புயக்கற்செறிந்தகதலிக்கானம் மொய்க்கின்றபரித்திரையமுரட்கரியின்கோண்மாவமுளரிக்கானின் மெய்க்கின்றமாண்முகத்தவிழுக்குடரின்பாசடையநிணமேற்செற்ற உய்க்கின்றவுதிரநிறக்களங்குளங்களுலப்பிறந்தவுவையுங்காண்மின்.

நெடும்படைவாளுஞ்சிலுமுநிணச்சேற்றினுதிரநீர்நிரைந்தகாப்பின் கடும்பகடுபடிகிடந்தகரும்பாம்பினினமள்ளர்பரந்தகையில் படுங்கமலமலர்நாறுமுடிபரந்தபெருங்கிடக்கைபரந்தபண்ணை தடம்பணையினறம்பழனந்தழுவியதேயெனப்பொலியுந்தகையுங்காண்மின். ()

வெளிறீர்த்தவரைபுரையுமிடலரக்கருடல்விழவும்வீரன்வில்லின் ஒளிறீர்த்தமுழுநெடுநாணுருமேறுபலபடவுமுலகங்கீண்டு நளிறீர்த்தநாகபுரம்புக்கிழிந்தபகழிவழிநதியிரேடிக் [மின். களிறீர்த்துப்புகமண்டுங்கருங்குருதித்தடஞ்சுழிகள்காண்மின்காண்

கைத்தலமுங்காத்திரமுங்கருங்கழுத்து நெடும்புயமுமுரமுங் கண்டித், தெய்த்திலபோய்த்திசைகடொறு மிருநிலத்தைக்கிழித் திழிந்ததென்னினல்லா, மத்தகரிவயமாவின்வாணிருதர் பெருங்க டலின்மற்றிவ்வாளி, தைத்துளவாய்நின்றதெனவென்றேறயுங் காண் பரியதகையுங்காண்மின். (உஎ)

வேறு.

குமுதநாறுமுகத்தனகூற்றன
சமுதரோடுமடிந்தனசார்தரும்
திமிதமாலன்னவின்னனவித்திறம்
அமுதின்வந்தனவையிருகோடியால். (உஅ)

ஏறுநான்முகன்வேள்வியெழுந்தன
ஊறுமாரியுமோங்கலேயோதமும்
மாறுமாயினுமாமதமாய்வரும்
ஆறுமாறிலவாறிருகோடியால். (உகூ)

உயிர்வறந்துமுதிரம்வறந்துதம்
மயர்வறந்துமதமறவாதன
புயலவன்றிசைப்போர்மதயானையின்
இயல்பரம்பரையேழிருகோடியால், (௩௦)

கொடாதுநிற்றலிற்கொற்றநெடுந்திசை
எடாதுநிற்பனநாட்டமிமைப்பில
வடாதுதிக்கின்மதவரையின்வழிக்
கடாமுகத்தமுளரிக்கணக்கவால். (௩௧)

வானவர்க்கிறைவன்றிறைதந்தன
ஆனவர்க்கமோராயிரகோடியும்
தானவர்க்கிறைவன்றிறைதந்தன
ஏனவர்க்கங்கணக்கிலவிவ்வெலாம். (௩௨)

பாற்கடல்பண்டமிழ்தம்பயந்தநாள்
ஆர்த்தெழுந்தனவாயிரமாயிரம்
மாற்கணப்பரியிங்கிவைமாறுவை
மேற்கின்வேலைவருணனையென்றவால். (௩௩)

இருநிதிக்கிழவன்னிழந்தேகின
அரிவயப்பரியாயிரமாயிரம்
விரிசினத்திகல்விஞ்சையர்வேந்தனைப்
பொருதுபற்றியதாமரைபோலுமால். (௩௪)

என்றுகாணினுங்காட்டினுமீதிறைக்
குன்றுகாணினுங்கோளிலதாதலான்
நின்றுகாணுதுநேமியினுனுழைச்
சென்றுகாண்டுமென்றேகினர்செவ்வியோர். (௩௫)

ஆரியற்றொழுதாங்கவன்பாங்கரும்
போரியற்கைநினைந்தெழும்பொம்மலார்
பேருயிர்ப்பொடிருந்தனர்பின்புறும்
காரியத்தினிலைமைகழறுவாம். (௩௬)

அலக்கணெய்தியமாராழிந்திட
உலக்கவானரவீரரையோட்டியவ்
விலக்குவன்றனைவீட்டியிராவணன்
துலக்கமெய்தினன்றொமில்களிப்பினே. (௩௭)

பொருந்துபொற்பெருங்கோயிலுட்போர்த்தொழில்
வருந்தினார்க்குத்தம்மன்பினின்வந்தவர்க்
கருந்துதற்கமைவாயினவாக்குவான்
விருந்தமைக்கவமைக்கின்றவேட்கையான். (௩௮)

---

31. நாட்டம் இமைப்பில - கண்கள் இமைப்புற்றன. 37. அலக்கண்-துன்பம்.

வானநாட்டைவருகெனவல்விரைந்
தேனைநாட்டவரோடும்வந்தெய்தலும்
மானநாட்டந்தபோகமமைத்திர்மற்
றானநாட்டினிழத்திருயிரென்றான். (௩௯)

நறவுமூனுநவையறநல்லன
பிறவுமாடையுஞ்சாந்தமும்பெய்மலர்த்
திறமுநானப்புனலொடுசேக்கையும்
புறமுமுள்ளுநிறையப்புகுந்தவால். (௪௦)

நானநெய்ந்நன்குரைத்துநறும்புனல்
ஆனகோதறவாட்டியமுதொடும்
பானமூட்டிச்சயனம்பரப்பவும்
வானநாட்டியர்யாவரும்வந்தரால். (௪௧)

பாடுவார்கள்பயினடம்பாவகத்
தாடுவார்களமளியினன்புறக்
கூடுவார்கண்முதலுங்குறைவறத்
தேடிஞனெனப்பண்ணையிற்சேர்ந்ததால். (௪௨)

அரைசராதியடியவரந்தமா
வரைசெய்மேனியிராக்கதர்வந்துளார்
விரைவினிந்திரபோகம்விழைதரக்
கரைசெலாதபேருவளங்கண்ணினார். (௪௩)

இன்னதன்மையமைந்தவிராக்கதர்
மன்னன்மாடுவந்தெய்திவணங்கினார்
அன்னசேனைகளகப்பட்டவாறெலாம்
துன்னுதூதர்செவியிடைச்சொல்லுவார். (௪௪)

நடுங்குகின்றவுடலினர்நாவுலர்ந்
தொடுங்குகின்றவுயிர்ப்பினருள்ளழிந்
திடுங்குகின்றவிழியினரேங்கிமேல்
பிடுங்குகின்றவுரையினர்பேசுவார். (௪௫)

வேறு.

இன்றியார்விருந்திங்குண்பாரிகன்முகத்திமையோர்தந்த
வென்றியாயேவச்சென்றவாயிரவெள்ளச்சேனை
நின்றதுபுறத்ததாகவிராமன்கைநிமிர்ந்தசாபம்
ஒன்றிஞலிரண்டுமூன்றுகடிகையிலுலந்ததென்றார், (௪௬)

---

46. சாபம் - வில்.

வலிக்கடன்வானுளோரைக்கொண்டுநீ வகுத்தபோகம்
கலிக்கடனளிப்பலென்றுநிருதர்க்குக்கருதிஞயேல்
பலிக்கடனளிக்கற்பாலேயல்லதுன்குலத்தின்பாலோர்
ஒலிக்கடலுலகத்தில்லையுருளாருளரேயுள்ளார். (சஎ)

ஈட்டருமுவகையீட்டியிருந்தவனிசைத்தமாற்றம்
கேட்டலும்வெகுளியோடுதுணுக்கமுமிழிவுங்கிட்ட
ஊட்டரக்கனையடுசெங்கணெருப்புகவுயிர்ப்புவீங்கத்
தீட்டியபடிவமென்னத்தோன்றினன்றிகைத்தநெஞ்சன். (சஅ)

என்னினும்வலியரானவிராக்கதர்யாண்டுவீயார்
உன்னினுமுலப்பிலாதாருவரியின்மணலினீள்வார்
பின்னொருபெயருமின்றிமாண்டனரென்றுபேசும்
வின்னிலையிதுவோபொய்ம்மைவிளம்பினர்போலுமென்றான். (சகூ)

கேட்டயலிருந்தமாலியீதொருகிழமைத்தாமோ
ஓட்டுறுதூதர்பொய்யேயுரைப்பரோவுலகம்யாவும்
வீட்டுவதிமைப்பினன்றேவீங்கெரிவிரிந்தவெல்லாம்
மாட்டுவானொருவனன்றேயிறுதியின்மனத்தாலென்றான். (ருo)

அளப்பருமுலகம்யாவுமமைத்துகாத்தழிக்கின்றான்றன்
உளப்பருந்தகைமைதன்னொலொருவனென்றுண்மைவேதம்
கிளப்பதுங்கேட்டுமன்றேயரவின்மேற்கிடந்துமேனான்
முளைத்தபேரிராமனென்றவீடணன்மொழிபொய்த்தாமோ. (ருக)

ஒன்றிடினுலகையுண்ணுமுலகத்தினுயிர்க்கொன்றாக
நின்றனவெல்லாம்பெய்தாலுடனுங்குநெருப்புங்காண்டும்
குன்றொடுமரனும்புல்லும்பல்லுயிர்க்குழுவுங்கொல்லும்
வன்றிறற்காற்றுங்காண்டும்வலிக்கொருவரம்புமுண்டோ. (ருஉ)

பட்டதுமுண்டேயுன்னையிந்திரச்செல்வம்பற்று
விட்டதுமெய்யேயையமீண்டொருவினையுமில்லைக்
கெட்டதுன்பொருட்டினாலேநின்னுடைக்கேளிரெல்லாம்
சிட்டதுசெய்தியென்றானதற்கவன்சீற்றஞ்செய்தான். (ருங)

இலக்குவன்றன்னைவேலாலெறிந்துயிர்கூற்றுக்கீந்தேதன்
அலக்கணிற்றலைவரெல்லாமழுந்தினாதனைக்கண்டால்
உலக்குமாலிராமன்பின்னேயுயிர்ப்பொறையுகவானுற்ற
மலக்கமுண்டாகினுகவாகையென்வயத்ததென்றான். (ருச)

---

52. ஒன்றிடினதனையுண்ணுமுலகத்தை விறகென்றே தளனவும் பாடம்.

ஆண்டதுகேட்டுநின்றதூதுவரையமெய்யே
மீண்டதவ்விளவலாவிமாருதிமருந்துமெய்யில்
தீண்டவுந்தாழ்ந்ததில்லையாருமச்செங்கணானைப்
பூண்டனர்மருந்துவெற்பைவீசினான்புக்கதென்றார். (௫௫)

தேறிலனாதலானேமறுகுறுசிந்தைதேற
ஏறினன்கனகத்தாரைக்கோபுரத்தும்பரெய்தி
ஊறினசேனைவெள்ளமுலந்தபெருண்மையெல்லாம்
காறினவுள்ளநோவக்கண்களாற்றெரியக்கண்டான். (௫௬)

கொய்தலைப்பூசற்பட்டோர்குலத்தியர்குவளைதோற்று
நெய்தலைவென்றவாட்கண்குமுதத்தினீர்மைகாட்டக்
கைதலையுற்றபூசல்கடலொடுநிமிருங்காலைச்
செய்தலையுற்றவோசைச்செயலதுசெவியிற்கேட்டான். (௫௭)

எண்ணினீர்கடந்தயானைப்பெரும்பிணமேந்தியாணர்
மண்ணினீரளவுங்கல்லிநெடுமலைமறித்துமண்டும்
புண்ணினீராறுபல்பேய்ப்புதுப்புனலாடும்பொம்மற்
கண்ணினீராறுமாறக்கருங்கடன்மடுப்பக்கண்டான். (௫௮)

முற்றியற்சிலைவலாளன்மொய்க்கணைதுமிப்பவாவி
பெற்றியல்பெற்றிபெற்றுமென்னவாளரக்கர்யாக்கை
சிற்றியற்குறுங்காலோரிக்குரல்கொளையிசையாப்பல்பேய்
கற்றியல்பாணிகொட்டக்களிநடம்பயிலக்கண்டான். (௫௯)

விண்களிற்சென்றவன்றோட்கணவரையலகைவெய்ய
புண்களிற்கைகணீட்டிப்புதுநிணங்கவர்வநோக்கி
மண்களிற்றொடர்ந்துவானிற்பிடித்துவள்ளுகிரின்மானக்
கண்களைச்சூன்றுநீக்குமரக்கியர்குழாமுங்கண்டான். (௬௦)

குமிழிநீரோடுஞ்சோரிக்கனலொடுங்கொழிக்குங்கண்ணான்
தமிழ்நெறிவழக்கமன்னதனிச்சிலைவழக்கிற்சாய்ந்தார்
அமிழ்பெருங்குருதிவெள்ளமாற்றுவாய்முகற்றிற்றேக்கி
உமிழ்வதேயொக்கும்வேலையோதம்வந்துடற்றக்கண்டான். (௬௧)

விண்பிளந்தேங்கவார்க்கும்வானரவீக்கங்கண்டான்
மண்பிளந்தழுந்தவாடுங்கவந்தத்தின்வருக்கங்கண்டான்
கண்பிளந்தகலநோக்கும்வானவர்களிப்புக்கண்டான்
புண்பிளந்தனையனெஞ்சன்கோபுரத்திழிந்துபோந்தான். (௬௨)

---

55. தாழ்த்தல் - தாமதித்தல்.

நகைபிறக்கின்றவாயனுக்கொடுகடைவாய்நக்கிப்
புகைபிறக்கின்றமூக்கன்பொறிபிறக்கின்றகண்ணன்
மிகைபிறக்கின்றநெஞ்சன்வெஞ்சினத்தீமேல்வீங்கிச்
சிகைபிறக்கின்றசொல்லனரசியலிருக்கைசேர்ந்தான். (௬௩)

ஆ திருவிருத்தம் - ௩௬௦௫.

## ௩௩-வது, தேரேறுபடலம்.

பூதரமனையமேனிப்புகைநிறப்புருவச்செந்தீ
மோதரனென்னுநாமத்தொருவனைமுகத்துநோக்கி
ஏதுளதிறந்திலாததிலங்கையுளிருந்தசேனை
யாதையுமெழுகென்றானைமணிமுரசெற்றுகென்றான். (௧)

எற்றியமுரசினோடுமேழிருநூறுகோடி
கொற்றவாணிருதர்சேனைசூழ்இயதுகொடித்திண்டேரும்
சுற்றுறுதொளேக்கைமாவுந்துரகமும்பிறவுந்தொக்க
வற்றியவேலையென்னவிலங்கையூர்வறளிற்றாக. (௨)

ஈசனையிமையாமுக்கணிறைவனையிருமைக்கேற்ற
பூசனைமுறையிற்செய்துதிருமறைபுகன்றதானம்
வீசினனியற்றிமற்றும்வேட்டனவேட்டோர்க்கெல்லாம்
ஆசறநல்கியொல்காப்போர்த்தொழிற்கமைவதானான். (௩)

வேறு.

அருவியஞ்சனக்குன்றிடையாயிரமருக்கர்
உருமினோடும்வந்துதித்தனராமெனவொளிரக்
கருவிநான்முகன்வேள்வியிற்படைத்ததுங்கட்டிச்
செருவிலிந்திரன்றந்தபொற்கவசமுஞ்சேர்த்தான். (௪)

வாள்வலம்படமந்தரஞ்சுழன்றமாசுணத்தின்
தாள்வலந்தொளிர்தமனியக்கச்சொடுஞ்சார்த்திக்
கோள்வலந்தனகுவிந்தனவாமெனுங்கொள்கை
மீள்வில்கிம்புரிமணிக்கடிசூத்திரம்வீக்கி. (௫)

மறைவிரித்தன்னமாடுறுமானமாக்கலுழன்
சிறைவிரித்தன்னகொய்சகமருங்குறச்சேர்த்தி

1. பூதரம் - மலை. பூ - பூமி, தரம் - தரித்தல்.
6. மாடுறு - பக்கத்தினையுடைய.

முறைவிரித்தன்னமுறுக்கியகோசிகமுறையே
பிறைவிரித்தன்னவெள்ளெயிற்றரவமும்பிணித்து. (சு)

மழைக்குலத்தொடுவானுருமேமெறலாம்வாரி
இழைத்தொடுத்தனவனையவாளிடைமணியார்த்து
முழைக்கிடந்தவல்லரியினமுழங்குவபோல்வ
தழைக்குமின்னொளிப்பொன்மலர்ச்சதங்கையுஞ்சார்த்தி. (எ)

உருமிடித்துழியரவெனக்கரக்கமாவுலகின்
இருநிலத்திடையெவ்வுலகத்திடையாரும்
புரிதரப்படும்பொலங்கழலிலங்குறப்பூட்டிச்
சரியுடைச்சுடர்சாய்நலஞ்சார்வுறச்சார்த்தி. (அ)

நாலைஞ்சாகியகரங்களினனந்தலையனந்தன்
ஆலஞ்சார்மிடற்றருங்கறைகிடந்தெனவிலங்கும்
கோலஞ்சார்நெடுங்கோதையும்புட்டிலுங்கட்டித்
தாலஞ்சார்ந்தமாசுணமெனக்கங்கணந்தழுவ. (கூ)

கடல்கடைந்தமால்வரையினைச்சுற்றியகயிற்றின்
அடல்கடந்ததோளலங்குபோர்வலயங்களிலங்க
உடல்கடந்தநாளொளியவனுதிர்த்தபொற்கதிரின்
சுடர்தயங்குறக்குண்டலஞ்செவியிடைத்தூக்கி. (கo)

உதையக்குன்றத்தோடத்தத்தினுலாவுறுகதிரின்
துதையுங்குங்குமத்தோளொடுதோளிடைதொடரப்
புதையிருட்பகைக்குண்டலமனையவைபொலியச்
சிதைவிறிங்களுமீனும்போன்முத்தினந்திகழ. (கக)

வேலைவாய்வந்துவெய்யவரனைவரும்வெய்ய
காலையுற்றனராமெனக்கதிர்க்குலங்காலும்
மாலைபத்தின்மேன்மதியமுநாளிடைப்பலவாய்
மூலைமுற்றியவனையமுத்தக்குடையிமைப்ப. (கஉ)

பகுத்தபல்வளக்குன்றினினின்முழையன்னபகுவாய்
வகுத்தவான்கடைகடைதொறும்வளையெயிற்றீட்டம்
மிகுத்தநீலவான்மேகஞ்சூழ்விசும்பிடைத்தசும்பூ
டுகுத்தசெக்கரிற்பிறைக்குலமுளைத்தனவொக்க. (கங)

ஒத்ததன்மையிலொளிர்வனதரளத்திரேதம்
தத்துகின்றனவீரபட்டத்தொகைதயங்க

முத்தவோடையின்முரட்டிசைமுழுமதயானை
பத்துநெற்றியுஞ்சுற்றியபேரெழில்படைக்க. (கச)

புலவிமங்கையர் பூஞ்சிலம்பரற்றடிபோக்கித்
தலைமைகண்ணினர் தாழ்கிலர்மணிமுடித்தலங்கள்
உலகமொன்றினைவிளக்குறுங்கதிரினையோட்டி
அலகிலெவ்வுலகத்தினும்வயங்கிருளகற்ற. (கரு)

நாகர்நானிலநான்முகனுடெனநயந்த
பாகமூன்றையும்வென்றுகொண்டமரர்முன்பணிந்த
வாகைமாலையுமருங்குறவரிவண்டோடளவித்
தோகையன்னவர்விழிதொடர்தும்பையுஞ்சூட்டி. (கசு)

அகழிவேலையைக்காலத்தையளக்கர் நுண்மணலை
நிகழுமீன்களைவிஞ்சையைநினைப்பதைனின்ற
இகழ்வில்பூதங்களிறப்பினுமிறுதிசெல்லாத
புகழெனச்சரந்தொலைவிலாத்தூணியும்பூட்டி. (கஎ)

வருகதேரெனவந்ததுவையமும்வானும்
உரகதேயமுமொருங்குடனிவரினுமுச்சிச்
சொருகுபூவன்னசுமையதுதுரகமின்றெனினும்
நிருதர்கோமகனினைந்துழிச்செல்வதோர்நினைப்பில். (கஅ)

ஆயிரம்பரியமுதத்தின்வந்தவுமருக்கன்
பாய்வயப்பசுங்குதிரையின்வழியவும்படர்நீர்
வாய்மடுக்குமாவடவையின்வயிற்றின்வன்காற்றின்
நாயகற்குவந்துதித்தவும்பூண்டதோர்நலத்தின். (ககூ)

பாரிற்செல்வதுவிசும்பிடைப்படர்வதுபரந்த
நீரிற்செல்வதுநெருப்பினுஞ்செல்வதுநிமிர்ந்த
போரிற்செல்வதுபொன்னெடுமுகட்டிடைவிரிஞ்சன்
ஊரிற்செல்வதெவ்வுலகத்துஞ்செல்வதோரிமைப்பின். (உ0)

எண்டிசைப்பெருங்களிற்றிடைமணியெனவிசைக்கும்
கண்டையாயிரகோடியின்றொகையதுகதிரோன்
மண்டிலங்களைமேருவிற்குவித்தெனவயங்கும்
அண்டம்விற்குநன்காசினங்குயிற்றியதடங்க. (உக)

முனைவர்வானவர்முதலினரண்டத்துமுதல்வர்
எனைவரீந்தவுமிகலினிலிட்டவுமியம்பா

14. முழுமதம் - மூன்றுமதம். கன்ன கபோல பீஜ மதமாம்.

வினையினமவயயனபடைக்கலவேலையென்றிசைக்கும்
சுனையினுண்மணற்றொகையனசுமந்தனதொக்க. (௨௨)

கண்ணனேமியுங்கண்ணுதல்கணிச்சியுங்கமலத்
தண்ணல்குண்டிகைக்கலசமுமழியினுமழியாத்
திண்மைசான்றதுதேவருமுணர்வருஞ்செய்கை
உண்மையாமெனப்பெரியதுவென்றியினுறையுள். (௨௩)

அனையதேரினையருச்சனைவரன்முறையாற்றி
எனையரென்பதோர்கணக்கிலாமறையவரெவர்க்கும்
வினையினன்னிதிமுதலியவளப்பரும்வெறுக்கை
நினையினீண்டதோர்பெருங்கொடையருங்கடனேர்ந்தான். (௨௪)

ஏறினான்றொழுதிந்திரன்முதலியவிமையோர்
தேறினார்களுந்தியங்கினார்மயங்கினார்திகைத்தார்
வேறுநாஞ்சொலும்வினையிலைமெய்யினைம்புலனும்
ஆறினார்களுமஞ்சினாருலகெலாமனுங்க. (௨௫)

மன்றலங்குழற்சனகிதன்மலர்க்கையான்வயிறு
கொன்றலந்தலைக்கொடுநெடுந்துயரிடைகுளித்தல்
அன்றிதென்றிடின்மயன்மகளத்தொழிலுறுதல்
இன்றிரண்டினொன்றாக்குவென்றலைப்படினென்றான். (௨௬)

பலகளந்தலைமௌலியோடிலங்கலிற்பஃறோள்
அலகளந்தறியாநெடுப்படைகளோடலங்க
விலகளந்தருகடற்றரைவிசும்பொடுவியப்ப
உலகளந்தவன்வளர்ந்தனனாமெனவுயர்ந்தான். (௨௭)

விசும்புவிண்டிருகூறுறக்கற்குலம்வெடிப்பப்
பசும்புண்விண்டெனப்புவிபடப்பகலவன்பசும்பொற்
றசும்பினின்றிடைந்திரிந்திடமதிதகையமிழ்தின்
அசும்புசிந்திநொந்துலைவுறத்தோள்புடைத்தார்த்தான். (௨௮)

நணித்துவெஞ்சமமென்பதோருவகையினலத்தால்
திணித்தடங்கிரிவெடித்துகச்சிலையைநாண்டெறித்தான்
மணிக்கொடுங்குழைவானவர்தானவர்மகளிர்
துணுக்கமெய்தினர்மங்கலநாண்களைத்தொட்டார். (௨௯)

சுரிக்குமண்டலந்தூங்குநீர்சுரிப்புறவீங்க
விரைக்கும்பல்லுயிர்யாவையுநடுக்கமுற்றிரியப்

---

28. தசும்பினின்று - தசும்பைப்போலநின்று, தசும்பு - குடம்.

பரித்திலன்புவிபடர்சுடர்மணித்தலைபலவும்
விரித்தெழுந்தனனனந்தன்மீதெனப்படுந்தார்மெய்யான். (௩௦)

தோன்றினான்வந்துசுரர்களோடசுரரேதொடங்கி
மூன்றுநாட்டினுமுள்ளவர்யாவருமுடிய
ஊன்றினான்செருவென்றுயிருமிழ்தரவுதிரம்
கான்றுநாட்டங்கள்வடவனற்கிருமடிகனல. (௩௧)

உலகிற்றோன்றியமறுக்கமுமிமைப்பிலருலைவும்
மலையும்வானமும்வையமுமறுகுறுமறுக்கும்
அலைகொள்வேலைகளஞ்சினசலிக்கின்றவயர்வும்
தலைவனேமுதற்றண்டலிலோரெலாங்கண்டார். (௩௨)

பிறிற்றுமண்டமென்படுந்தாராகுலம்பிறக்க
வேறிட்டோர்பெருங்கம்பலைபம்பிமேல்வீங்க
மாறிப்பல்பொருள்வகுக்குறுங்காலத்துண்மறுக்கம்
ஏறிற்றுற்றுளதென்னைகொலோவெனவெழுந்தார். (௩௩)

கடர்கள்யானையுங்கன்மலைக்குலங்களுங்காரும்
திடர்கொண்மேருவும்விசும்பிடைச்செல்வனசிவண
அடர்கொள்சேனையுமரக்கனுந்தேரும்வந்தார்க்கும்
குடர்கள்பேரொலிக்கம்பலையென்பதுங்கொண்டான். (௩௪)

எழுந்துவந்தனனிராவணனிராக்கதத்தானைக்
கொழுந்துமுற்றியதுற்றதுகொற்றவகுலுங்குற்
றழுந்துகின்றதுநம்பலமமராருமஞ்சி
விழுந்துசிந்தினரென்றனன்வீடணன்விரைந்தான். (௩௫)

வேறு.

தொழுங்கையொடுவாய்குழறிமெய்ம்முறைதுளங்க
விழுந்துகவிசேனையிடுபூசன்மிகவிண்ணோர்
அழுந்துபடுபாலமளிதுஞ்சியெழுமந்நாள்
எழுந்தபடியேகடிதெழுந்தனனிராமன். (௩௬)

கடக்களிறெனத்தகைபகண்ணனொருகாலன்
விடக்கயிறெனப்பிறழும்வாள்வலன்விசித்தான்
மடக்கொடிதுயர்க்குநெடுவானினுறைவோர்தம்
இடர்க்கடலினுக்குமுடிவின்றெனவிசைத்தான். (௩௭)

34. சிவண - ஒப்ப.

தன்னக்வசத்துருவுதங்கவொருதன்னின்
பின்னகவசத்தபொருளில்லைபெரியோனை
மன்னகவசத்துறவரிந்ததெனவென்கோ
இன்னகவசத்தையுமொரீசனெனலாமால். (௩௮)

புட்டிலொடுகோதைகள்புழுங்கியெரிகூற்றின்
அட்டிலெனலாயமலரங்கையினடக்கிக்
கட்டிபுலகிற்பொருளெனக்கரையில்வாளி
வட்டில்புறம்வைத்தவைபொருந்திடவரிந்தான். (௩௯)

மூண்டசெருவின்றனவின்முற்றுமினிவெற்றி
ஆண்டகையதுண்மையினியச்சமகல்வுற்றீர்
பூண்டமணியாழிவயமாநிமிர்பொலந்தேர்
ஈண்டவிடுவீரமரரென்றரனிசைத்தான். (௪௦)

தேவரதுகேட்டிதுசெயற்குரியதென்றார்
ஏவல்புரியிந்திரவெனத்தொழுதிசைத்தார்.
மூவுலகுமின்றொருகணத்தின்முறைமுற்றிக்
காவல்புரிதன்பொருவிறோர்கவர்தியென்றான். (௪௧)

மாதலிகொணர்ந்தனன்மகோததிவளாவும்
பூதலமெழுந்துபடர்தன்மையபொலன்றேர்
சீதமதிமண்டிலமுமேனையுளவுந்திண்
பாதமெனநின்றதுபடர்ந்ததுவிசும்பின். (௪௨)

குலக்கிரிகளேழின்வலிகொண்டுயர்கொடிஞ்சும்
அலக்குரியபாரின்வலிபாழியினினச்சும்
கலக்கறவகுத்ததுகதத்தரவமெட்டும்
வலக்கயிறுகட்டியதுமுட்டியதுவானே. (௪௩)

ஆண்டினொடுநாளிருதுதிங்களிவையென்று
மீண்டனவுமேலனவும்விட்டுவிரிதட்டின்
பூண்டுளதுதாரகைமணிப்பொருவில்கோவை
நீண்டபுனைதாரினதுநின்றுலவுகுன்றின். (௪௪)

மாதிரமனைத்தையுமணிச்சுவர்களாகக்
கோதறவகுத்ததுமழைக்குழுவையெல்லாம்
மீதுறுபதாகையெனவீசியதுமெய்ம்மைப்
பூதமவையைந்தின்வலியிற்பொலிவதம்மா. (௪௫)

---

44. மீண்டனவும் - ஒருங்குசேர்ந்தனவும்.

மரத்தொடுமருந்துலகில்யாவுமுளவாரித்
தரத்தொடுதொடுத்தகொடிதங்கியதுசங்கக்
கரத்தொடுதொடுத்தகடன்மீதுநிமிர்காலத்
துரத்தொடுகடுத்தகதழோதையதனோதை. (சசு)

பண்டரிதனுந்தியயன்வந்தபழமுந்தை
புண்டரிகமொட்டனையமொட்டினதுபூதம்
உண்டவைவயிற்றிடையொடுக்கியுமிழ்கின்றோன்
அண்டசமணிச்சயனமொப்பதகலத்தின். (சஎ)

வேதமொருநாலுநிறைவேள்விகளும்வெவ்வே
றோதமவையேழுமலையேழுமுலகேழும்
பூதமவையைந்துமெரிமூன்றுநனிபொய்தீர்
மாதவமுமாவுதியுமைம்புலனுமற்றும். (சஅ)

அருங்கரணமைந்துசுடரைந்துதிசைநாலும்
ஒருங்கரணமூன்றுமுழல்வாயுவொருபத்தும்
பெரும்பகலுநீளிரவுமென்றிவைபிணிக்கும்
பொரும்பரிகளாகநனிபூண்டதுபொலந்தே. (சகூ)

வந்ததனைவானவர்வணங்கிவலியோய்நீ
எந்தைதரவந்தனையெமக்குதவுகிற்பாய்
தந்துதவுவென்றியெனநின்றுதகைமென்பூச்
சிந்தினர்கள்மாதலிகடாவிநனிசென்றான். (௫௦)

வினைப்பகைவிசைக்கொடுவிசும்புருவிமான
மனத்தின்விசைபெற்றுளதுவந்ததெனவானோ
டனைத்துலகமுந்தொழவடைந்ததமலன்பால்
நினைப்புமிடைபிற்பிடநிமிர்ந்துயர்நெடுந்தேர். (௫க)

அலரிதனியாழிபுனைதேரிதெனினன்றால்
உலகின்முடிவிற்பெரியவூழொளியிதன்றால்
நிலைகொணெடுமேருகிரியன்றுநெடிதம்மா
தலைவரொருமூவர்தனிமானமிதுதானோ. (௫உ)

என்னையிதுதம்மையிடையெய்தலெனவெண்ணா
மன்னவர்தமன்னன்மகன்மாதலியைவந்தாய்
பொன்னினொளிர்தேரிதுகொடார்புகறியென்றான்
அன்னவனுமன்னதனையாகவுரைசெய்தான். (௫௩)

---

47. அண்டசமணிச்சயனம் - முட்டையிற்பிறந்த ஆதிசேடனாகிய படுக்கை.

மூப்புரமெரித்தவனுநான்முகனுமுன்னாள்
அப்பகலியற்றியுளதாயிரமருக்கர்க்
கொப்புடையதூழிதிரிகாலுமுலைவில்லா
இப்பொருவிறேர்வருவதிந்திரனதெந்தாய். (௫௪)

அண்டமிதுபோல்வனவளப்பிலவடுக்கிக்
கொண்டுபெருங்குறுகுநீளுமவைகோளுற்
றுண்டவன்வயிற்றினையுமொக்குமுவமைக்குப்
புண்டரிகநின்சரமெனக்கடிதுபோமால். (௫௫)

கண்ணுமனமுந்நெடியகாலுமிவைகண்டால்
உண்ணும்விசையாலுணர்வுபிற்படரவோடும்
விண்ணுநிலனும்மெனவிசேடமிலதஃதே
எண்ணுநெடுநீரினுநெருப்பிடையுமெந்தாய். (௫௬)

நீருமுளதேயிதனினீரிலெழுகிற்கும்
பாருமுளதேயிதனிரட்டியவைபண்பின்
பேருமொருகாலையிருகாலையிடைபோராத்
தேருமுளதேயிதுவலாலுலகுசெய்தோய். (௫௭)

தேவருமுனித்தலைவருஞ்சிவனுமுன்னாள்
மூவுலகளித்தமுதலும்முதல்வமுன்னின்
றேவினர்சுரர்க்கிறைவனீந்துளவனென்றான்
மாவின்மனமொப்பவுணர்மாதலிவலித்தான். (௫௮)

ஐயனிதுகேட்டிகலரக்கரகன்மாயச்
செய்கைகொலெனச்சிறிதுசிந்தையினினைந்தான்
மெய்யவனுரைத்ததெனவேண்டியிடைபூண்ட
மொய்யரிவயப்பரிமொழிந்தமுதுவேதம். (௫௯)

இல்லையினியையமெனவெண்ணியவிராமன்
நல்லவினைநீயுனதுநாமநவில்கென்ன
வல்லதனையூர்வதொருமாதலியெனப்பேர்
சொல்லுவரெனத்தொழுதுநெஞ்சினொடுசொன்னான். (௬௦)

மாருதியைநோக்கியிளவாளரியைநோக்கி
நீர்கருதுகின்றதைநிகழ்த்துமெனநின்றான்
ஆரியன்வணங்கியவரையமிலைமெய்யே
தேரிதுபுரந்தரனதென்றனர்தெளிந்தார். (௬௧)

---

56. இவைகண்டால் - இவைகளையுற்றுப்பார்க்கின்.

விழுந்துபுரமடவினைநிலத்தொடுவெதும்பத்
தொழுந்தகையநல்வினைகளிப்பிறொடுந்துள்ள
அழுந்துதுயரத்தமரரந்தணர்கைமுந்துற்
றெழுந்துதலையேறவினிதேறினனிராமன். (௬௨)

ஆ_ திருவிருத்தம் - ௩௬௬௭.

## ௩௫-வது, இராவணன்வதைப்படலம்.

ஆழியந்தடந்தேர்வீரனேறலுமாசிகூறிப்
பூழியிற்சுரித்ததன்மைநோக்கியபுலவர்போத
ஊழிவெங்காற்றின்வெய்யகலுழனையொன்றுஞ்சொல்லார்
வாழியவனுமன்றோளேயேத்தினார்மலர்கடூவி. (௧)

எழுகதேர்சுமக்கவெல்லோம்வலியும்புக்கின்றேபொன்றி
விழுகபோயரக்கன்வெல்கவேந்தர்க்குவேந்தன்விம்மி
அழுகபோரரக்கிமாரென்றூர்த்தனரமரராழி
முழுகிமீதெழுந்ததென்னச்சென்றதுமூரித்திண்டேர். (௨)

அன்னதுகண்ணிற்கண்டவரக்கனுமமரர்ந்தார்
மன்னெடுந்தேரென்றுன்னிவாய்மடித்தெயிறுதின்றான்
பின்னதுகிடக்கவென்னாத்தன்னுடைப்பெருந்திண்டேரை
மின்னகுவரிவிற்செங்கையிராமன்மேல்விடுதியென்றான். (௩)

இரிந்தனகவிகளெல்லாமிமையவரிரதமீந்தார்
அரிந்தமன்வெல்லுமென்றற்கையுறவில்லென்றஞ்சார்
திரிந்தனமரமுங்கல்லுஞ்சிந்தினர்திசையோடண்டம்
பிரிந்தனகொல்லென்றெண்ணப்பிறந்தனமுழக்கின்பெற்றி. (௪)

வார்ப்பொலிமுரசினோதைவயவர்வாய்ப்புடைப்பினோதை
போர்த்தொழிற்களத்தைமுற்றுஞ்சுற்றியபொம்மலோதை
ஆர்த்தலின்யாரும்பார்வீழ்ந்தடங்கினரிருவராடற்
றேர்க்குரலோதைபொங்கச்செவிமுற்றுஞ்செவிடுசெய்ய. (௫)

மாதலிவதனநோக்கிமன்னர்தமன்னன்மைந்தன்
காதலாற்கருமமொன்றுகேட்டியாற்களித்தசிந்தை
ஏதிலன்மிகுதியெல்லாமிடையிற்றபின்றையென்றன்
சோதனைநோக்கிச்செய்திதுடிப்பிலையென்னச்சொன்னான். (௬)

2. மூரி - வன்மை. 4. அரிந்தமன் - பகைவரை அடக்குபவன். இங்கே, இராமன். 6. எதிலன் - பகைவன்.

வள்ளனின்கருத்துமாவின்சிந்தையுமாற்றலார்தம்
உள்ளமுமிகையுமுற்றகுற்றமுமுறுதிதானும்
கள்ளமில்காலப்பாடுங்கருமமுங்கருதேதனுகின்
தெள்ளிதென்விஞ்சையென்றனமலனுஞ்சீரிதென்றான். (எ)

தோன்றினனிராமனீதாற்புரந்தரன்றூரந்ததேர்மேல்
ஏன்றிருவருக்கும்வெம்போரெய்தியதிடையேயானோர்
சான்றெனநிற்றல்குற்றந்தருதியால்விடையீண்டென்றான்
வான்றொடர்குன்றமன்னமகோதரனிலங்கைமன்னை. (அ)

அம்புயமனையகண்ணன்றன்னையாளரியிலேன்று
தும்பியைத்தொலைத்ததென்னத்தொலைக்குவென்றொடர்ந்துநின்ற
தம்பியைத்தடுத்தியாயிற்றந்தனைகொற்றமென்றான்
வெம்பிகலரக்கனஃதேசெய்வெனென்றவனின்மீண்டான். (௯)

மீண்டவனிளவனின்றபாணியின்விளங்காமுன்னம்
ஆண்டகைதெய்வத்திண்டேரணுகியதணுகுங்காலை
மூண்டெழுவெகுளியோடுமகோதரன்வெகுண்டுமுட்டத்
தூண்டுதிதேரையென்றான்சாரதிதொழுதுசொன்னான். (க0)

எண்ணருங்கோடிவெங்கணிராவணரேயுமின்று
நண்ணியபொழுதுமீண்டுநடப்பரோகிடப்பதல்லால்
அண்ணறன்றேற்றங்கண்டாலையநீகமலமன்ன
கண்ணனையொழியவிப்பாற்சேறலேகருமமென்றான். (கக)

என்றறுமெயிற்றுப்பேழ்வாய்மடித்தடாவெடுத்துநின்னைத்
தின்றெனனெனினுமுண்டாம்பழுதெனச்சீற்றஞ்சிந்தும்
குன்றனதோற்றத்தான்றன்கொடிநெடுந்தேரினேரே
சென்றதவ்விராமன்றிண்டேர்விளைந்ததுதிமிலத்திண்போர். (கஉ)

பொற்றடந்தேருமாவும்பூட்கையுமிலங்குவாட்கைக்
கற்றடந்திண்டோளாளுநெருங்கியகடல்களெல்லாம்
வற்றியவிராமன்வாளிவடவனல்பருகவென்றான்
ஒற்றைவன்றடந்தேரோடுமகோதரனொருவன்சென்றான். (கங)

அசனியேறிருந்தகொற்றக்கொடியின்மேலரவத்தேர்மேல்
குசையுறுபாகன்றன்மேற்கொற்றவன்குவவுத்தோண்மேல்
விசையுறுபகழிமாரிவித்தினான்விண்ணினோடும்
திசைகளுங்கிழியவார்த்தான்றீர்த்தனுமுறுவல்செய்தான். (கச)

---

7. வள்ளல் - வரையாது கொடுப்போன். 10. பாணி - பக்கம்.
14. அசனியேறு - இடி.

வில்லொன்றற்கவசமொன்றல்விறலுடைக்கரமோரொன்றல்
கல்லொன்றுதோளுமொன்றற்கழுத்தொன்றற்கடிதின்வாங்கி
செல்லொன்றுங்கணையாலையன்சிந்தினான்செப்பிவந்த
சொல்லொன்றாய்ச்செய்கையொன்றாய்த்துணிந்தனனரக்கன்றுஞ்சி

மோதரன்முடிந்தவண்ணமூவகையுலகத்தோடும்
மாதிரமெவையும்வென்றவன்றொழிலரக்கன்கண்டான்
சேதனையுண்ணக்கண்டான்செலவிடுசெலவிடென்றான்
சூதனுமுடுகத்தூண்டச்சென்றதுதுரகத்திண்டேர். (௧௬)

பனிப்படாநின்றதென்னப்பரக்கின்றசேனைபாறித்
தனிப்படாவாகினின்னுந்தாழ்கிலனென்னுந்தன்மை
நுனிப்படாநின்றவீரனவனென்றுநோக்காவண்ணம்
குனிப்படாநின்றவில்லாலொல்லையினூறிக்கொன்றான். (௧௭)

அடல்வலியரக்கர்க்கப்போழ்தண்டங்களெழுந்துமண்டும்
கடல்களும்வற்றவெற்றிக்கால்கிளர்ந்துடற்றுங்காலை
வடவரைமுதலவானமலைக்குலஞ்சலிப்பபோன்று
சுடர்மணிவலயஞ்சிந்தத்துடித்தனவிடத்தபொற்றோள். (௧௮)

வேறு.

உதிரமாரிசொரிந்ததுலகெலாம்
அதிரவானமிடித்ததருவரை
பிதிரவீழ்ந்ததசனியொளிபெறாக்
கதிரவன்றனையூருங்கலந்ததால். (௧௯)

வாவும்வாசிநடுங்கினவாங்கலில்
ஏவும்வெஞ்சிலைநாணிடையிற்றன
நாவும்வாயுமுலர்ந்தனநாண்மலர்ப்
பூவின்மாலைபுலால்வெறிபூத்தலால். (௨௦)

எழுதுவீணைகொடேந்துபதாகைமேல்
கழுதுங்காகமுமொய்த்தனகண்கணீர்
ஒழுகுகின்றனவோடிகலாடன்மாத்
தொழுவினின்றனபோன்றனசூழிமா. (௨௧)

இன்னவாகியிமையவர்க்கின்பஞ்செய்
துன்னிமித்தங்கடோன்றினதோன்றவும்

16. மோதரன் - மகோதரன்.
18. இடத்தோள்-இடது தோள்கள்.

அன்னதொன்றுமறிந்திலனுற்றுமோ
என்னைவெல்லமனித்தனென்றெண்ணுவான். (௨௨)

வீங்குதேர்செலும்வேகத்துவேலைநீர்
ஓங்குநாளினொதுங்குமுலகுபோல்
தாங்களாற்றகிலார்தடுமாறித்தாம்
நீங்கினாரிருபாலுநெருங்கினார். (௨௩)

கருமமுங்கடைக்கண்ணுறுஞானமும்
அருமைசேருமவிஞ்சையும்விஞ்சையும்
பெருமைசால்கொடும்பாவமும்பேர்கலாத்
தருமமும்மெனச்சென்றெதிர்தாக்கினார். (௨௪)

சிரமொராயிரந்தாங்கியசேடனும்
உரவுகொற்றத்துவணத்தரசனும்
பொரவுடன்றனர்போலப்பொருந்தினர்
இரவுநண்பகலும்மெனவேற்றனர். (௨௫)

வென்றியந்திசையானைவெகுண்டன
ஒன்றையொன்றுமுனிந்தவுமொத்தனர்
அன்றியுந்நரசிங்கமுமாடகக்
குன்றமன்னவனும்பொருங்கொள்கையார். (௨௬)

துவனவில்லின்பொருட்டொருதொல்லைநாள்
எவனவீசனென்பார்பொரவேற்றெதிர்
புவனமூன்றும்பொலங்கழலாற்றொடும்
அவனுமச்சிவனும்மெனலாயினார். (௨௭)

கண்டசங்கரநான்முகர்கைத்தலம்
விண்டசங்கத்தொல்லண்டம்வெடிபட
அண்டசங்கத்தமரர்தமார்ப்பெலாம்
உண்டசங்கமிராவணனூதினான்.

இ-ள். கண்ட - ஸ்ரீராமபிரானைத் தரிசித்துநின்ற, சங்கரநான் முகர் - சிவனும் பிரமனும், கைத்தலம் - கூப்பியகைகள், விண்டு - அத்தொழிலில் நின்றும் நீங்கும்படி, அசங்க - நடுங்கவும், தொல் லண்டம் - பிரமனண்டத்தில், வெடிபட - மாறொலியுண்டாகவும், அண்டம் - விண்ணுலகத்தில், சங்கத்தமரர்தம் - தேவர்கூட்டத்தி

25. உவணத்து அரசன் - பட்சிராஜன், கருடன்.
26. ஆடகக்குன்றம் அன்னவன் - இரணியகசிபு.

னது, ஆர்ப்பெலாம் (களிப்பினாரவாரத்தை யெல்லாம்) உண்டொலைத்த, சங்கம் - சங்கை, இராவணனூதினான் - இராவணன் முழக்கினான். எ-று.

விண்டு - செயவெனச்சத்திரிபு, இத்தொழிலானே கூப்பல் பெற்றும் எல்லாப்படைப்புக்களினும் பிரமனண்டம் முற்பட்டதாகவின் அதனை தொல்லண்டமென்றார். அசங்கவெடிபட வென்னுங் காரியப்பொருளாகிய வினையெச்சம் இரண்டடுக்கி ஊதினானென்னும் வினைகொண்டன. சங்கத்தமரர்தம் என்பதை அமரர்தஞ் சங்கமெனக்கூட்டுக. சங்கரநான்முகர் கைத்தலம் விண்டசங்கமெனவே ஏனையோரது கண்கலக்கம் சொல்லவேண்டுவ தின்றாயிற்று. (உஅ)

சொன்னசங்கினதோசைதுளங்குற
என்னசங்கென்றிமையவரேங்குற
அன்னசங்கைப்பொறுமையினாரியன்
தன்னவெண்சங்கந்தானுமுழங்கிற்றால். (உகூ)

ஐயனைம்படைதானுமடித்தொழில்
செய்யவந்தயல்நின்றனதேவரில்
மெய்யனன்னவைகண்டிலன்வேதங்கள்
பொய்யிறன்னைப்புலன்றெரியாமைபோல். (௩௦)

ஆசையும்விசும்பும்மலையாழியும்
தேசமும்மலையுந்நெடுந்தேவரும்
கூசவண்டங்குலுங்கக்குலங்கொடார்
வாசவன்சங்கைமாதலிவாய்வைத்தான். (௩க)

துமிலவாளியரக்கன்றுரப்பன
விமலன்மேனியின்வீழ்வதன்முன்னமே
கமலவான்முகநாடியர்கட்கடை
அமலமேனியிற்றைத்தவநந்தமால். (௩உ)

சென்றதேரோரிரண்டொடுஞ்சேர்த்திய
குன்றின்வெங்கட்குதிரைகுதிப்பன
ஒன்றையொன்றுற்றெறியுகநோக்கின
தின்றுதீர்வனபோலுஞ்சினத்தன. (௩௩)

32. கமலமுகவானநாடியர் என்றும்பாடம்.

கொடியின்மேலுறைவீணையுங்கொற்றமா
இடியினேறுமுறையுனிடித்தன
படியும்விண்ணும்பரவையும்பன்முறை
முடியுமென்பதோர்மூரிமுழக்கினால். (ரு௪)

ஏழுவேலையுமார்ப்பெடுத்தென்னலாம்
வீழிவெங்கணிராவணன்வில்லொலி
ஆழிநாதன்சிலையொலியண்டம்விண்
டூழிபேர்வுழிமாமழையொத்ததால். (ருரு)

ஆங்குநின்றவனுமனையாதியாம்
வீங்குவெஞ்சினவீரர்விழுந்தனர்
ஏங்கிநின்றதலாலொன்றிழைத்திலர்
வாங்குசிந்தையர்செய்கைமறந்துளார். (ருசு)

ஆவதென்னைகொலாமென்றறிகிலார்
ஏவர்வெல்வரென்றெண்ணலரேங்குவா
போவர்மீள்வர்பதைப்பர்பொருமலால்
தேவருந்தங்கள்செய்கைமறந்துளார். (ருஎ)

சேணவந்தரநோக்கலுந்திண்சரம்
பூணமுந்தினசிந்தினபூமழை
காணவந்தகடவுளர்கையெலாம்
ஆணவந்துணையாருளராவரே. (ருஅ)

நீண்டமின்னெடுவானெடுநீலவில்
பூண்டிரண்டெதிர்நின்றவும்போன்றன
ஆண்டவில்லிதன்வில்லுமரக்கன்றன்
தீண்டவல்லரில்லாதசிலையுமே. (ருகூ)

அரக்கனன்றெடுத்தார்க்கின்றவார்ப்பும்போர்
பொருப்புமெய்விற்றெழிப்புமுண்டேகொலாம்
குரைக்கும்வேலையுமேகக்குழாங்களும்
இரைத்திடிக்கின்றதின்றுமொரீறில. (௪௦)

மண்ணிற்செல்வனசெல்வினுமாசற
எண்ணிற்சூன்மழையல்லவிராவணன்
கண்ணிற்சிந்தியதீக்கடுவேகத்த
விண்ணிற்செல்வனவிண்ணின்றுவீழ்வன. (௪க)

---

35. வீழிவெங்கண் - வீழிக்கனிபோலச் செவந்தகண்.

மால்கலங்கலில்சிந்தையன்மாதிரம்
நால்கலங்கநகுந்தொறுநாவொடும்
கால்கலங்குவரீதவர்கணைமழைச்
சூல்கலங்குமிலங்கைதுளங்குமால். (௪௨)

இக்கணத்துமெறிப்பதடித்தெனச்
நெக்கமேகத்துதிர்க்குநெருப்பெனப்
பக்கம்வீசும்படர்சுடர்பஃறிசை
புக்கபோதப்பொடிப்பனபோக்கில. (௪௩)

கொற்றம்பிற்கொடுகொள்ளுதல்கோளிலாச்
சிற்றையாளனைத்தேவர்தந்தேரொடும்
பற்றிவானிற்சுழற்றிப்படியின்மேல்
எற்றுவேனென்றுரைக்குமிரைக்குமால். (௪௪)

தடித்துவைத்தன்னவெங்கணைதாக்கற
வடித்துவைத்ததுமானுடற்கேவலி
ஒடித்துத்தேரையுதிர்த்தொருவில்லொடும்
பிடித்துக்கொள்வென்சிறையெனப்பெருமால். (௪௫)

வேறு.

பதைக்கின்றதொர்மனமும்மிடைபடர்கின்றதொர்சினமும்
விதைக்கின்றனபொறிபொங்கினவிழியும்முடைவெய்யோன்
குதைக்கின்றனநிமிர்வெஞ்சிலைகுழையக்கொடுங்கடுங்கால்
உதைக்கின்றனசுடர்வெங்கணையுருமேறெனவெய்தான். (௪௬)

உருமொப்பனகனலொப்பனவூற்றந்தருகூற்றின்
மருமத்தினுநுழைகிற்பனமழையொப்பனவானோர்
நிருமித்தனபடைபற்றறநிமிர்வுற்றனவமிழ்தப்
பெருமத்தினைமுறைசுற்றியபெரும்பாம்பினும்பெரிய. (௪௭)

துண்டப்படுநெடுமேருவைத்தொளைத்துள்ளுறைதொங்கா
தண்டத்தையும்பொதுத்தேகுமென்றிமையோர்களுமயிர்த்தார்
கண்டத்தெறுகணைக்காற்றினைக்கருணைக்கடல்கனகச்
சண்டச்சரமழைகொண்டவையிடையேயறத்தடுத்தான். (௪௮)

உடையான்முயன்றருகாரியமுறுதீவினையுடற்ற
இடையூறுறச்சிதைத்தாங்கெனச்சரஞ்சிந்தினவிறலும்

---

48. கருணைக்கடல் - இராமன். பொதுத்து - துவாரஞ்செய்து.

தொடையூறினகணைமாரிகடொகைதீர்த்தனதுரந்தான்
கடையூறுறுகணைமாரிகள்கால்வீழ்ந்தெனக்கடியான். (சகூ)

விண்போர்த்தனதிசைபோர்த்தனமலைபோர்த்தனவிமையோர்
கண்போர்த்தனகடல்போர்த்தனபடிபோர்த்தனகலையோர்
எண்போர்த்தனவெறிபோர்த்தனவிருள்போர்த்தனவென்னே
திண்போர்த்தொழிலென்றானையினுரிபோர்த்தவன்றிகைத்தான்.()

அல்லானொடுபெருந்தேவருமறைவாணருமஞ்சி
எல்லாருந்தங்கரங்கொண்டிருவிழிபொத்தினரிருந்தார்
செல்லாயிரம்விழுங்காலுகும்விலங்கொத்ததுசேனை
வில்லாளனுமதுகண்டவைவிலக்குந்தொழில்வேட்டான். (ருக)

செந்தீவினைமறைவாணனுக்கொருவன்சிறுவிலைநாள்
முந்தீந்ததொருணவின்பயனெனலாயினமுதல்வன்
வந்தீந்தனவடிவெங்கணையனையான்வகுத்தமைந்த
வெந்தீவினைப்பயனொத்தனவரக்கன்சொரிவிசிகம். (ருஉ)

நூறாயிரவடிவெங்கணைநொடியொன்றினின்விடுவான்
ஆறாவிறன்மறவோனவைதனிநாயகனறுப்பான்
கூறாயினகனல்சிந்தினகுடிக்கப்புனல்குறுகிச்
சேறாயினபொடியாயினதிடராயினகடலும். (ருங)

வில்லாற்சரந்துறக்கின்றவற்குடனேமிடல்வெம்போர்
வல்லானெழுமழுத்தோமரமணித்தண்டிருப்புலக்கை
தொல்லார்மிடல்வளைசக்கரஞ்சூலம்மிவைதொடக்கத்
தெல்லாநெடுங்கரத்தாலெடுத்தெறிந்தான்செருவறிந்தான். (ருச)

வேலாயிரமழுவாயிரமெழுவாயிரம்விசிகக்
கோலாயிரம்பிறவாயிரமொருகோல்படக்குறைவ
காலாயினகனலாயினவுருமாயினகதிய
சூலாயினமழையன்னவன்றொடைபல்வகைதொடுக்க. (ருரு)

ஒத்துச்செருவிளைக்கின்றதொராளின்றலையுடனே
பத்துச்சிலையெடுத்தான்கணைதொடுத்தான்பலமுகிலாத்
தொத்துப்படநெடுந்தாரைகள்சொரிந்தாலெனத்துரந்தான்
குத்துக்கொடுநெடுங்கோல்படுகளிறுமெனக்கொதித்தான். (ருசூ)

---

50. திடர் - மணல்மேடு, திட்டு.

51. ஆனையின் உரிபோர்த்தவன் - உருத்திரன்.

ஈசன்விடுசரமாரியுமெரிசிந்துறுதறுகண்
நீசனவிடுசரமாரியுமிடையெங்கணுநெருங்கத்
தேசம்முதலைம்பூதமுஞ்செருக்கண்டனசெருக்கிக்
கூசம்மயிர்பொடிப்புற்றனவனலாயினகொடிய. (௫௭)

வேறு.

மந்தரக்கிரியெனமருந்துமாருதி
தந்தவப்பொருப்பெனபுரங்கண்டாமெனக்
கந்தருப்பநகர்விசும்பிற்கண்டென
அந்தரத்தெழுந்தவவ்வரக்கன்றேரரோ. (௫௮)

எழுந்துயர்தேர்மிசையிலங்கைக்காவலன்
பொழிந்தனசரமழையுருவிப்போதலால்
ஒழிந்ததுமொழிகிலதென்னவொல்லெனக்
கழிந்ததுகவிக்குலமிராமன்காணவே. (௫௯)

முழுவிடுதோளொடுமுடியும்பஃறலை
விழுவிடுவேனினிவிசும்புசேமமா
மழுவிடையனையநம்படைஞர்மாண்டனர்
எழுவிடுதேரையென்றிராமன்கூறினன். (௬௰)

அந்துசெய்குவனெனவறிந்தமாதலி
உந்தினன்றேரொனுமுழிக்காற்றினை
இந்துமண்டிலத்தின்மேலிரவிமண்டிலம்
வந்தெனவந்ததம்மானத்தேரரோ. (௬௧)

இரிந்தனமழைக்குலமிழுகித்திக்கெலாம்
முரிந்தனவுடுக்குலமுதிர்ந்துசிந்தின
நெரிந்தனநெடுவரைக்குடுமிநேர்முறை
திரிந்தனசாரிகைதேருந்தேருமே. (௬௨)

வலம்வருமிடம்வருமறுகிவாளொடு
நிலம்வருமிடம்வலநிமிரும்வேலையும்
அலம்வருங்குலவரையனைத்துமண்டமும்
சலம்வருங்குயவனதிகிரித்தன்மைபோல். (௬௩)

எழும்புகழிறைவன்றேரரக்கன்றேரிதென்
றழுந்துருள்பொழிதினெவ்வுலகுஞ்சேர்வன

57. தேசம்முதல் - - தேசு (தீ) அம் (நீர்) முதலிய.
61 - அந்து - அது (விகாரம்)

தழும்பியதேவருந்தெரிவுதந்திலர்
பிழும்பினதிரிவனவென்னும்பெற்றியார். (சுச)

உக்கிலாவுடுக்களுமுருள்கடாக்கலின்
நெக்கிலாமலைகளுநெருப்புச்சிந்தலின்
வக்கிலாத்திசைகளுமுதிரம்வாய்வழிக்
கக்கிலாவுயிர்களுமில்லைக்காண்பன. (சுரு)

இந்திரனுலகத்தாரென்பரென்றவர்
சந்திரனுலகத்தாரென்பர்தாமரை
அந்தணனுலகத்தாரென்பரல்லரால்
மந்தரமலையினரென்பர்வானவர். (சுசு)

பாற்கடனடுவணரென்பர்பல்வகை
மாக்கடலினுக்குமவ்வரம்பினரென்பர்
மேற்கடலாரென்பர்கிழக்குளாரென்பர்
ஆர்க்கடையுருமென்பரறிந்தவானவர். (சுஎ)

மீண்டனவோவென்பர்விசும்புவிண்டுகக்
கீண்டனவோவென்பர்கீழவோவென்பர்
பூண்டனபுரவியோபுதியகாற்றென்பர்
மாண்டனவுலகமென்றணங்கும்வாயினர். (சுஅ)

ஏழுடைக்கடலினுந்தீவொரேழினும்
ஏழுடைமலையினுமுலகோரேழினும்
சூழுடையண்டத்தின்சுவர்களெல்லையா
ஊழியகாற்றெனத்திரிந்தவோவில. (சுகூ)

உடைக்கடலேழினுமுலகமேழினும்
இடைப்படுந்தீவினுமலையொரேழினும்
அடைக்கலப்பொருளெனவரக்கன்வீசிய
படைக்கலமழைபடுதுளியின்பான்மைய. (எ0)

ஒறுத்துலகனைத்தையுமுழலுமோட்டிடை
இறுத்திலவிராவணனெறிந்தவெய்தன
அறுத்ததுந்தடுத்ததுமன்றியாரியன்
செறுத்தொருதொழிலிடைசெய்ததில்லையால். (எக)

விலங்கலும்வேலையுமேலுங்கீழரும்
அலங்கொளிதிரிதருமுலகனைத்தையும்

65. வக்கிலா - வெந்துபோகாத.

கலங்குறத் திரிந்த தோளூழிக்காலக்காற்
றிலங்கையையெய்தினவிமைப்பின்வந்தரோ. (எஉ)

உய்த்துலகனைத்தினுமுழன்றசாரிகை
மொய்த்ததுகடலிடைமணலின்மும்மையால்
வித்தகர்கடவியவிசயத்தேர்ப்பரி
எய்த்திலவியர்த்திலவிரண்டுபாலவும். (எங)

இந்திரன்றேரின்மேலுயர்ந்தவெங்தொழில்
உந்தரும்பெருவலியுருமினேற்றினைச்,
சந்திரனனையதோர்சரத்தினற்றரை
சிந்தினனிராவணனெரியுஞ்செங்கணான். (எச)

சாய்ந்தவல்லுருமுபோயரவத்தாழ்கடல்
பாய்ந்தவல்லுருமெனமுழங்கிப்பாய்தலும்
காய்ந்தபேரிரும்பின்வன்கட்டிகாலுறத்
தோய்ந்தநீராமெனச்சுருங்கிற்றூழியே. (எரு)

எழுத்தெனச்சிதைவிலாவிராமன்றேர்ப்பரிக்
குழுக்களைக்கூர்ங்கணைக்குப்பையாக்கிநேர்
வழுத்தருமாதலிவயிரமார்பிடை
அழுத்தினன்கொடுஞ்சரமாறொடாறரோ. (எசு)

மண்டிலவரிசிலைவானவில்லொடும்
துண்டவெண்பிறையெனத்தோன்றத்தூவிய
உண்டைவெங்கடுங்கணையொருங்குமூடலால்
கண்டிலரிராமனையிமைப்பில்கண்ணினார். (எஎ)

தோற்றனனேயினியென்னுந்தோற்றத்தால்
ஆற்றல்சாலமரருமச்சமெய்தினார்
வேற்றவராரத்தனர்மேலுங்கீழரும்
காற்றியக்கற்றதுகலங்கிற்றண்டமே. (எஅ)

அங்கியுந்தன்னொளியடங்கிற்றூர்கலி
பொங்கலதிமிர்த்தனவிசும்பிற்போக்கில
வெங்கதிர்தண்கதிர்விலங்கிமீண்டன
மங்குலினெடும்புனன்மழைவறந்ததால். (எகூ)

---

73. பாலவும் - பக்கமும்.
78. காற்று இயக்கற்றது.
79. மங்குல் - மேகம்.

திசைநிலைக்கடகரிசெருக்குச்சிந்தின
அசைவில்வேலைகளார்க்கவஞ்சின
விசைகொடுவிசாகத்தைநெருக்கியேறினன்
குசனெனமேருவுங்குலுக்கமுற்றதே. (அ௦)

வானரத்தலைவருமிளையமைந்தனும்
ஏனையத்தலைவனைக்காண்கிலேமெனக்
கானகக்கரியெனக்கலங்கினார்கடல்
மீனெனக்கலங்கினார்வீரர்வேறுளார். (அக)

நீல்நிறநிருதர்கோனெய்தநீதியிற்
சால்புடைமாதலிமார்பிற்றைத்தன
கோலினுமிலக்குவன்கோலமார்பின
வேலினும்வெம்மையேவிளைந்தவீரற்கும். (அஉ)

எய்தனசரமெலாமிமைப்பின்முந்துறக்
கொய்தனகற்றிவெங்கோலின்கோவையால்
நொய்தெனவரக்கனைநெருங்கநொந்தன
செய்தனனிராகவனமரர்தேறினார். (அங)

வேறு.

தானுடைநிரைபுரைகரமவைதொறுமக்
கோனுடைமலைநிகர்சிலையிடைகுறையச்
சேனுடைநிகர்கணைசிதறினனுணர்வோ
டூனுடையுயிர்தொறுமுறைவுறுமொருவன். (அச)

படையுகவிமையவர்பருவரல்கெடவந்
திடையுறுதிசைதிசையிறுகுறவிறைவன்
அடையுறுகொடிமிசையனுகினனளவில்
கடையுகமுடிவெழுகடல்புரைகலுழன். (அரு)

கயில்விரிவுறவருகவசமுமுருவிப்
பயில்விரிகுருதிகள்பருகிடவெயிலோ
டயில்விரிசுடுகணைகடவினனறிவின்
துயில்வுழியுணர்தருசுடரொளியொருவன். (அசா)

80. விசாகம் - காற்று குசன் - தீ.

83. கோவை - கோர்வை, வரிசை.

86. அறிவின் துயில்வுழி - அறியும் உணர்ச்சியுமொடுங்கிய சுழுத்தி நிலையில்.

திசையுறுதுகிலதுசெறிமழைசிதறும்
விசையுறுமுகிழதுவிரிதருசிரனே
டிசையுறுகருவியினினிதுறுகொடியைத்
தசையுறுகணைகொடுதரையுறவிடலும். (அஎ)

பண்ணவனுயர்கொடியெனவொருபரவைக்
கண்ணகனுலகினைவலம்வருகலுழன்
நண்ணலுமிமையவர்நமதுறுகருமம்
எண்ணலமுனிவினினிவறினெனவே, (அஅ)

ஆயதொரமைதியினறிவினினறிவான்
நாயகனொருவனைநலிகிலதுணர்வான்
ஏயினனிருளுறுதாமதமெனுமத்
தீய்வினைதருபடைதெறுதொழின்மறவோன். (அகூ)

தீமுகமுடையனசிலமுகமுதிரம்
தோய்முகமுடையனசுரர்முகமுடைய
பேய்முகமுடையனபிலமுகநுழையும்
வாய்முகம்வரியரவனையனவருவ. (கூ0)

ஒருதிசைமுதல்கடையொருதிசையளவும்
இருதிசையெயிறுறவருவனபெரிய
கருதியகருதியபுரிவனகனலும்
பருதியைமதியொடுபருகுவபகழி. (கூக)

இருளொருதிசையொருதிசைவெயில்விரியும்
சுருளொருதிசையொருதிசைமழைதொடரும்
உருளொருதிசையொருதிசையுருமுரலும்
மருளொருதிசையொருதிசைசிலைவருடம். (கூஉ)

இனையனநிகழ்வுறவெழுவகையுலகும்
கனையிருள்கதுவிடவமரர்கள்கதற
வினையுறுதொழிலிடைவிரவலும்விமலன்
நினையுறுதகைமையினெறியுறுமுறையின். (கூங)

கண்ணுதலொருவனதடுபடைகருதிப்
பண்ணவன்விடுதலுமதுநனிபருக
எண்ணுறுகனவினெடுணர்வெனவிமையில்
துண்ணெனுநிலையினினெறிபடைதொலைய. (கூச)

89. தாமதம் - இருள்வடிவமான ஓரத்திர விசேஷம்,

வேறு.

விரிந்ததன்படைமெய்கண்டபொய்யெனவீய
எரிந்தகண்ணினனெயிற்றிடைமடித்தவாயினன்றன்
றெரிந்தவெங்கணைகங்கவெஞ்சிறையன்னதிறத்த
அரிந்தமன்றிருமேனிமேலழுத்திநின்றார்த்தான். (௯௫)

ஆர்த்துவெஞ்சினத்தாசுரப்படைக்கலமமரர்
வார்த்தையுண்டதின்னுயிர்களான்மறலிதன்வயிற்றைத்
தூர்த்ததிந்திரன்றனுக்குறுதொழிலதுதொடுத்துத்
தீர்த்தன்மேல்வரத்துரந்தனனுலகெலாந்தெரிய. (௯௬)

ஆசுரப்பெரும்படைக்கலமமரரையமரின்
ஏசுவிப்பதெவ்வுலகமுமெவரையும்வென்று
வீசுவெற்பிறத்துரந்தவெங்கணையதுவிசையின்
பூசுரர்க்கொருகடவுண்மேற்சென்றதுபோலாம். (௯௭)

நுங்குகின்றதிவ்வுலகையோர்நொடிவரையென்ன
எங்குநின்றுநின்றலமருமமரர்கண்டிரைப்ப
மங்குல்வல்லுருமேற்றின்மேலெரிமடுத்தென்ன
அங்கிதன்னெடும்படைதொடுத்திராகவனறுத்தான். (௯௮)

கூற்றுக்கோடினுங்கோடலகடலெலாங்குடிப்ப
நீற்றுக்குப்பையின்மேருவைநூறுவநெடிய
காற்றுப்பின்செலச்செல்வனவுலகெலாங்கடப்ப
நூற்றுக்கோடியம்பெய்தனனிராவணனொடியின். (௯௯)

என்னகைக்கடுப்போவென்பர்சிலர்சிலரிவையும்
அன்னமாயமேயம்பலவென்பரவ்வம்புக்
கின்னமுண்டுகொலிடமென்பர்சிலசிலரிகற்போர்
முன்னமித்தனைமுயன்றிலனுமென்பர்முனிவர். (௧௦௦)

மறைமுதற்றனிநாயகன்வானினைமறைத்த
சிறையுடைக்கொடுஞ்சரமெலாமிமைப்பொன்றிற்றிரியப்
பொறைசிகைப்பொருந்தலைநின்றும்புங்கத்தினளவும்
பிறைமுகத்தடங்கடுங்கொடுஞ்சரங்கொண்டுபிளந்தான். (௧௦௧)

அயன்படைத்தபேரண்டத்தினருந்தவமாற்றிப்
பயன்படைத்தவர்யாரினும்படைத்தவன்பல்போர்
வியன்படைக்கலந்தொடுப்பெனினியெனவிரைந்தான்
மயன்படைக்கலந்துரந்தனன்றயரதன்மகன்மேல். (௧௦௨)

98. அங்கிதனெடும்படை - தீப்பகழி.

விட்டனன்விடுபடைக்கலம்வேறொடுமுலகைச்
சுட்டனன்றெனத்தூணுக்கமுற்றமரருஞ்சுருண்டார்
கெட்டனம்மெனவானரத்தலைவருங்கிழிந்தார்
சிட்டர்தந்தனித்தேவனுமதனிலைதெரிந்தான். (௧0௩)

பாந்தட்பஃறலைப்பரந்தகன்புவியிடைப்பயிலும்
மாந்தர்க்கில்லையால்வாழ்வெனவருகின்றவதனைக்
காந்தர்ப்பம்மெனுங்கடுங்கொடும்படையினுற்கடந்தான்
ஏந்தற்பன்மணியெறும்வலித்திறள்புயத்திராமன். (௧0௪)

தாருகன்பண்டுதேவரைத்தகர்த்ததுதனிமா
மேருகந்தரம்புனைவதுவெயிலன்னவொளிய
தோருகந்தனினுலகநின்றுருட்டினுமுருளாச்
சீருகந்ததுமுகந்ததுவானவர்சிரங்கள். (௧0௫)

பண்டுநான்முகன்படைத்ததுகனகனிப்பாரைத்
தொண்டுகொண்டதுமதுவெனுமவுணன்முன்றொட்ட
துண்டதென்வயினதுதாரந்துயிருண்பெனென்றோர்
தண்டுகொண்டெறிந்தானைநதொடைந்துடைத்தலையான். (௧0௬)

பசும்புனற்பெரும்பரவைபண்டுண்டவன்பணிப்புற்
றசும்புபாய்கின்றதருக்கனிறெளிர்கின்றதண்டம்
தசும்புபோலுடைந்தொழியுமென்றனைவருநதளர
விசும்புபாழ்படவந்ததுமந்தரம்வெருவ. (௧0௭)

கண்டதாமரைக்கண்ணனக்கடவுண்மாக்கதைதான்
அண்டர்நாயகனுயிரங்கண்ணினுமடங்காப்
புண்டரீகத்தின்முகையன்னபுகர்முகம்விட்டான்
உண்டைநூறுடைநூறுபட்டுளதெனவுதிர்த்தான். (௧0௮)

சேயைநின்றவன்சிலைவலங்காட்டினன்றீராப்
பேயையென்பலதுரப்பதிங்கிவன்பிழையாமல்
ஆயதன்பெரும்படையொடுமடுகளத்தவிய
மாயையின்படைதொடுப்பெனென்றிராவணன்மதித்தான். (௧0௯)

பூதனைத்தொழில்புரிந்துதான்முறைமையிற்போற்றும்
ஈசனைத்தொழுதிருடியுஞ்சந்தமுமெண்ணி
ஆசைபத்தினுமந்தரப்பரப்பினுமடங்கா
வீசினன்செலவில்லிடைத்தொடைகொடுவிட்டான். (௧௧0)

---

103. சிட்டர் - சிரேஷ்டர்.

மாயைபொத்தியவயப்படைவிடுதலும்வரம்பில்
காயமெத்தனையுளநெடுங்காயங்கள்கதுவ
ஆயமுற்றெழுந்தாரெனவார்த்தனரமரில்
தூயகொற்றவர்சுடுசரத்தான்முன்புதுணிந்தார். (௧௧௧)

இந்திரற்கொருபகைஞனுமவற்கிளையோனும்
தந்திரப்பெருந்தலைவருந்தலைத்தலையோரும்
மந்திரச்சுற்றத்தவர்களும்வரம்பிலர்பிறரும்
அந்தரத்தினைமறைத்தனர்மழைபுகவார்ப்பார். (௧௧௨)

குடப்பெருஞ்செவிக்குன்றமுமற்றுளகுழுவும்
படைத்தமூலமாத்தானையுமுதலியபட்ட
விடைத்தெழுந்தனயானைதேர்பரிமுதல்வெவ்வே
றடைத்தவூர்திகளனைத்தும்வந்தவ்வழியடைய. (௧௧௩)

ஆசிலப்பெருவெள்ளமென்றறிஞரேயறைந்த
காய்சினப்பெருங்கடற்படைகளப்பட்டவெல்லாம்
ஈசனிற்பெற்றவரத்தினாலெய்தியவென்னத்
தேசமுற்றவுஞ்செறிந்தனதிசைகளுந்திகைப்ப. (௧௧௪)

சென்றவெங்கணுந்தேவருமுனிவருஞ்சிந்த
வென்றதெங்களைப்போலும்யாம்விளிவதுமுளதே
இன்றுகாட்டுதுமெய்துமினெய்துமினென்னாக்
கொன்றகொற்றவர்தம்பெயர்குறித்தறைகூவ. (௧௧௫)

பாரிடந்துகொண்டெழுந்தனபாம்பெனும்படியப்
பாரிடந்துணைந்தெழுந்தனமலையன்னபடிய
பேரிடங்கதுவரிதினிவிசும்பெனப்பிறந்த
பேரிடங்கரிற்கொடுங்குழையணிந்தனபேய்கள். (௧௧௬)

இ-ள். பாம்பு - வாசுகி முதலியபாம்புகள், பார் - பூமியை, இடந்துகொண்டு (தாங்குதலையொழிந்து) பிளந்துகொண்டு, எழுந்தனவெனும்படி - புறத்தேசீறியெழுந்தனவென்று கண்டோர்சொல்லும்படி, அப்பாரிடம் - அப்பூதங்கள், மலையன்ன-மலையையொத்த, படிய - உருவினவாகி, துணைந்தெழுந்தன - விரைந்தெழுந்தன, பேர் (நீரில்) உலாவுகின்ற, இடங்கரின் - முதலையைப்போன்ற, கொடுங்குழை - வளைந்தவடிவனவாகியகுழைகளை, அணிந்தனபேய்கள் - அணிந்தனவாகியபேய்கள், பேரிடம் - பூமியில், கதுவரிது - நாம்

111. இருடியும்சந்தமும் - அப்படையைவிடும் மந்திரத்துக்குரிய இருஷியும் சந்தஸும்.

தங்குதலரிது, இனி - இனித்தங்குதல், விசும்பென - ஆகாயத்தின் கணுமென்று, பிறந்த - பிறந்தன. எ-று.

பேரிடம் - அன்மொழித்தொகை கதுவு - முதனிலைத்தொழிற்பெயர். பகைவராயினோர் கண்டமாத்திரையில் ஊக்கமழியுந்தோற்றத்தின் பெருமையுடையனவாகலின் அப்பாரிடமென்றார். மலை, இடங்கர், மெய்யுவமம். (கககூ)

> தாமசத்தினிற்பிறந்தவரறநதெறுநதகையர்
> தாமசத்தினிற்செல்கிலாச்சதுமுகத்தவற்குத்
> தாமசத்திரஞ்செய்பவர்பரிந்தனர்தளரத்
> தாமசத்திரஞ்சித்திரம்பொருந்தினர்தயங்க.

இ-ள். தாமசத்தினில் (பிரமனது) தாமசகுணத்தில், பிறந்தவர் பிறந்தவர்களும், அறம் - அறங்களை, தெறுந்தகையர் - அழிக்குந்தன்மையுடையார்களுமாகிய அரக்கர்கள், தாம் - தாங்கள், அசத்தினில் - பொய்ந்நெறியில், செல்கிலா - ஒழுகுதலில்லாமல். சதுமுகத்தவற்கு - பிரமனுக்கு, உத்தமம் - சிறந்ததாகிய, சத்திரம் - யாகத்தை, செய்பவர் - செய்யுமுனிவர்கள், பரிந்தனர் - துன்புற்றவர்களாகி, தளர - ஊக்கமழிய, தாமம் - ஒளிபெற்ற, சத்திரம் - வாள்முதலிய கைவிடாப்படைகள். தயங்க - பிரகாசிக்க, சித்திரம் பொருந்தினர் - நானுவகையமைந்தனர். எ-று.

உத்தாமம் நீட்டல். சத்திரஞ்சித்திரம் பொருந்தினர் என்பதில் இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது. ()

> தாமவிந்துமீதெழுநதவர்க்கிரட்டியின்றகையார்
> தாமவிந்துவின்பிளவெனத்தயங்கும்வாளெயிற்றர்
> தாமவிஞ்சையர்கடற்பெருநதகையினர்தரளத்
> தாமவிஞ்சையர்துவன்றினர்திசைதொறுந்தருக்கி.

இ-ள். தாம் அவிந்து (முன்னடந்தபோரிலெல்லாம்) தாங்கள் இறந்து, மீது - விண்ணுலகத்தில், எழுநதவர்க்கு - உயர்நத அரக்கர்களிலும், இரட்டியின்றகையர் - இருபங்காயின பெருமையுடையார்களும், தாமம் - ஒளியுள்ள, இந்துவின்பிளவென - சந்திரனது பிளவுபோல, தயங்கும் - விளங்கும், வாளெயிற்றர் - கூரியபல்லையுடையார்களும், தாம் - பரவுகின்ற, அவிஞ்சையர் - மாயையுடையார்களும், கடல் - கடலைப்போலும், பெருந்தகையினர் - மிக்கவழகுடையார்களுமாகிய அசுரர்களும், தரளத்தாமம்-முத்துமாலையை

யணிந்த, விஞ்சையர் - வித்தியாதரர்களும், திசைதொறும் - (போர்க்களத்தில்) எல்லாத்திக்குகளிலும், தருக்கி - செருக்குக்கொண்டு, துவன்றினர் - நிறைந்தனர். எ-று.

மீது - ஆகுபெயர். எழுந்தவர்க்கு - உருபுமயக்கம். (ககஅ)

தாமடங்கலுமுடங்குளையாளியுந்தகுவார்
தாமடங்கலுநெடுந்திசையுலகொடுதகைவார்
தாமடங்கலுங்கடலுமொத்தார்தருந்தகையார்
தாமடங்கலுங்கொடுஞ்சுடர்ப்படைகளுந்தரித்தார்.

இ-ள். தாம் - தாவுகின்ற, மடங்கலும் - சிங்கத்தையும், முடங்கு - மடங்கிய, உளை - பிடரின்கண் மிக்கமயிரையுடைய, யாளியும் - யாளியையும், தகுவார் - ஒப்பாரும், தாம்தாங்கள் நெடுந்திசையுலகொடு - நெடியதிக்குப்பாலகர்களையும்.

உலகத்துள்ள வீரர்களையும், அடங்கலும் - முழுமையும், தகைவார் - போரில் தடுக்கவல்லாரும், தா - வலியையுடைய, மடங்கலும் - வடவைத்தீயையும், கடலும் - கடலையும், ஒத்து - உருவத்தாலொப்பாகி, ஆர்தரும் - (சமர்க்களமெங்கும்) நிறைகின்ற, தகையார் - பெருமையுடையாருமாகிய அரக்கர்கள், தாம் - விளக்கமாகிய, மடங்கலும் - இடிகளையும், கொடுஞ்சுடர்ப் படைகளும் - சுடருள்ள கொடிய படைகளையும், தரித்தார் - தாங்கிநின்றார். எ-று.

தாமமென்பதனீறுதொகுத்தல். ஒடு இசைநிறை. (ககக)

இனையதன்மையைநோக்கியவிந்திரைகொழுநன்
வினையமற்றிதுமாயமோவிதியதுவிளைவோ
வனையும்வன்கழலரக்கர்தம்வரத்தினோமற்றோ
நினைதியாமெனிற்பகரெனமாதலிநிகழ்த்தும். (கஉ0)

இருப்புக்கம்மியற்கிழைநுழையூசியொன்றியற்றி
விருப்பிற்கோடியால்விலைக்கெனும்பதடியின்விட்டான்
கருப்புக்கார்மழைவண்ணவக்கடுந்திசைக்களிற்றின்
மருப்புக்கல்லியதோளவன்மீளருமாயம். (கஉக)

வீக்குவாயயில்வெள்ளெயிற்றரவின்வெவ்விடத்தை
மாய்க்குமாநெடுமந்திரந்தந்தோர்வலியின்

120. இந்திரை - இலக்குமி, சீதை.
121. பதடி - அறிவிலி, மூடன்.

நோய்க்குநோய் தருவினைக்கு நின்பெரும்பெயர்நொடியின்
நீக்குவாய்நினைநினைக்குவார்பிறப்பென்னநீங்கும். (கஉஉ)

வரத்தினுயினுமாயையினுயினும்வலியோன்
உரத்தினுயினுமுண்மையினுயினுமோடத்
தூரத்தியாலெனஞானமாக்கடுங்கணைதுரந்தான்
சிரத்தினுன்மறையிறைஞ்சவுந்தொடரவுஞ்சேயோன். (கஉஙு)

துறத்தலாற்றுறுஞானமாக்கடுங்கணைதொடர
அறத்தலாதுசெல்லாதுநல்லறிவுவந்தணுகப்
பிறத்தலாற்றுறுபேதமைபிணிப்புறத்தம்மை
மறத்தலாற்றந்தமாயையின்மாய்ந்ததம்மாயம். (கஉச)

வே று.

நீலங்கொண்டார்கண்டனுநேமிப்படையோனும்
மூலங்கொண்டார்கண்டகராவிமுடிவிப்பான்
காலங்கொண்டார்கண்டனமுன்னேனகழிவிப்பான்
சூலங்கொண்டானண்டரையெல்லாந்தொழில்கொண்டான். (கஉரு)

கண்டாகுலமுற்றுயிரமார்க்கின்றதுகண்ணின்
கண்டாகுலமுற்றும்பரயிர்க்கின்றதுவீரர்
கண்டாகுலமுற்றுஞ்சுடுமென்றக்கழல்வெய்யோன்
கண்டாகுதன்முன்செல்லவிசைத்துள்ளதுகண்டான்.

இ-ள். கண்டாகுலம் -சிறந்தமணிகள், முற்று - சூழ, ஆயிர மார்க்கின்றது - பலவொலிப்பதும், கண்ணின்- தங்கள்கண்களாலே, கண்டு - பார்த்து, ஆகுலம் - துன்பத்தை, உற்று - அடைந்து, உம்பர் - தேவர்களார், அயிர்க்கின்றது-யாதாய்முடியுமோவென்று ஐயப்படுவதும், வீரர்கண் - இங்குநின்ற வீரர்களிடத்துள்ள, தா- வலியும், குலம் - ஊக்கமும் மேம்பாடுமாகிய திரணக்கூட்டத்தை, முற்றும் - பற்றற. சுடுமென்று - எரிக்குமென்று கருதி, அக்கழல் வெய்யோன் - வெவ்விய வீரக்கழலை யணிந்த அவ்விராவணன், கண் - நோக்குவோருடைய கண்கள், தாகுதன்முன் - தாவுத லுக்குமுன்னே, செல்ல-செல்லும்படி, விசைத்துள்ளது-விரைந்து விட்டதுமாகிய சூலமென்னுந்தீயை, கண்டான் - சீராமபிரான்கண் டான். 'எ-று.

123. சேயோன் - எட்டாத்தூரத்தே யிருப்பவன்.

வலியை யுணர்த்திநின்றதாவென்பதைச் சாரநின்றமையிற் குலமென்பதற்கு அஃதொழிந்த ஊக்கமும் மேம்பாடுமென்றும், சுடுமென்றமையால் - வலி ஊக்கமுதலியவற்றைத் திரணமென்றும், சூலத்தைத் தீயென்றுங் கூறினும். கழல்வெய்யோன் - குணந்தீயோரென்றாற்போலவந்த திணைவழுவமைதி. கழற்குவெம்மையாவது தன்னொலியால் அமரர் முதலிய பகைஞரை அச்சுறுத்தல் குலம் - ஆகுபெயர். தாகுதலில் - கு - சாரியை. (கஉசு)

எரியாநிற்கும்பஃறலைமூன்றும்மெரியஞ்சத்
திரியாநிற்கத்தேவர்களோடத்திரளோட
இரியாநிற்கும்மெவ்வுலகுந்தன்னொளியேயாய்
விரியாநிற்குந்நிற்கிலதார்க்கும்விழிசெல்லா. (கஉஎ)

செல்வாயென்னச்செல்லவிடுத்தானிதுதீர்த்தற்
கொல்வாய்நீயேவேறொருவர்க்கும்முடையாதால்
வல்வாய்வெங்கட்சூலமெனுங்காலனைவள்ளால்
வெல்வாய்வெல்வாயென்றனர்வானோர்மெலிகின்றார். (கஉஅ)

துணையும்வேகத்தாலுருமேறுந்துண்ணென்ன
வணையுங்காலிற்செல்வனதன்னைமறவாதே
நினையுஞ்ஞானக்கண்ணுடையார்மேனினையாதார்
வினையம்போலச்சிந்தினன்வீரன்சரம்வெய்ய. (கஉகூ)

எய்யும்மெய்புந்தேவருடைத்திண்படையெல்லாம்
பொய்புந்துய்யும்மொத்தவைசிந்தும்புவிதந்தான்
வையுஞ்சாபமொப்பெனவெப்பின்வலிகண்டான்
ஐயன்னின்றான்செய்வகையெல்லாமறிகில்லான். (கஙo)

மறந்தான்செய்கைமற்றெதிர்செய்யும்வகையெல்லாம்
துறந்தானென்றும்பர்துணுக்கந்தொடர்வுற்றார்
அறந்தானஞ்சிக்கால்குலையத்தானறியாதே
பிறந்தானின்றான்வந்ததுசூலம்பிறரஞ்ச. (கஙக)

சங்காரத்தார்கண்டையொலிப்பத்தழல்சிந்தப்
பொங்காரத்தான்மார்பெதிரோடிப்புகலோடும்
வெங்காரத்தான்முற்றுமுனிந்தான்வெகுளிப்பேர்
உங்காரத்தானுக்கதுபன்னூறுதிராகி (கஙஉ)

---

130. மொய்யென எனவும் பாடம்.

ஆர்ப்பாரானாரச்சமுமற்றாரலர்மாரி
தூர்ப்பாரானார்துள்ளல்புரிந்தார்தொழுகின்றார்
தீர்ப்பாய்நீயேதீயெனவேறாய்வருதீமை
பேர்ப்பாய்போலாமென்றனர்வானோருயிர்பெற்றார். (கருங)

வென்றானென்றேயுள்ளம்வியந்தான்விடுசூலம்
பொன்றானென்னிற்போகலதென்னும்பொருள்கொண்டான்
ஒன்றாமுங்காரத்திடையுக்கோடுதல்காணா
நின்றானந்நாள்வீடணனார்சொன்னினைவுற்றான். (கருச)

சிவனோவல்லனான்முகனல்லன்றிருமாலாம்,
அவனோவல்லன்மெய்வரமெல்லாமடுகின்றான்
தவனோவென்னிற்செய்துமுடிக்குந்தரனல்லன்
இவனோதானவ்வேதமுதற்காரணனென்றான். (கருரு)

யாரேனுந்தானாகுகயானென்றனியாண்மை
பேரேனின்றேவென்றிமுடிப்பென்புகழ்பெற்றேன்
நேரேசெல்லுங்கொல்லுமெனிற்றானிமிர்வென்றி
வேரேநிற்கும்மீள்கிலனென்னாவிடலுற்றான். (கருசு)

நிருதித்திக்கின்னின்றவன்வென்றிப்படைநெஞ்சில்
கருதித்தன்பால்வந்ததவன்கைக்கொடுகாலன்
விருதிற்சிந்தும்வில்லின்வலித்துச்செலவிட்டான்
குருதிச்செங்கண்டீயுகஞாலங்குலைவெய்த. (கருஎ)

வையந்துஞ்சும்வன்பிடர்நாகமனமஞ்சப்
பையுங்கோடிப்பஃறலையோடுமளவில்லா
மெய்யும்வாயும்பெற்றனமேருக்கிரிசால
நொய்தென்றோதுந்தன்மையவானநுழைகின்ற. (கருஅ)

வாய்வாய்தோறுமாகடல்போலும்விடவாரி
போய்வார்கின்றபொங்கனல்கண்ணிற்பொழிகின்ற
மீய்வாயெங்கும்வெள்ளிடையின்றிமிடைகின்ற
பேய்வாயெங்கும்வெள்ளெயிறெங்கும்பிறழ்கின்ற. (கருகூ)

கடித்தேதீருங்கண்ணகன்ஞாலங்கடலோடும்
குடித்தேதீரும்மென்றுலகெல்லாங்குலைகின்ற
முடித்தானன்றேவெங்கணரக்கன்முழுமுற்றும்
பொடித்தானாகும்மிப்பொழுதென்னப்புகைகின்ற. (கசO)

137. நிருதித்திக்கில்நின்றவன் - சங்கபாலனென்னுநாகன்.

அவ்வாறுற்றவாடரவந்தானகல்வாயால்
கவ்வாநின்றமால்வரைமுற்றும்மவைகண்டான்
எவ்வாய்தோறும்மெய்தினவென்னாவெதிரெய்தான்
தவ்வாமெய்ம்மைக்காருடமென்னும்படைதன்னால். (௧௪௧)

எவணத்தன்மைத்தேதகினநாகத்தினமென்னப்
பவணத்தன்னவெஞ்சிறைவேகத்தொழில்பம்பச்
சுவணக்கோலத்துண்டநகந்தொல்சிறைவேல்போல்
உவணப்புள்ளேயாயினவெல்லாமுலகெல்லாம். (௧௪௨)

வேறு.

அளக்கரும்புள்ளினமாயவாரழல்
துளக்கரும்வாய்தொறுமெரியத்தொட்டன
இளக்கருமிலங்கைதீயிடுதுமீண்டன
விளக்கினமெடுத்தனபோன்றவிண்ணின. (௧௪௩)

குயின்றனசுடர்மணிக்கனலின்குப்பையின்
பயின்றனகுடர்சுடர்ப்பதுமநாளங்கள்
வயின்றெறுழுங்கவர்ந்தெனத்துண்டவாள்களால்
அயின்றனபுள்ளினமுகிரினள்ளின. (௧௪௪)

எவ்வகையுரகமுமிரியல்போயின
நொவ்வியலுற்றெனநொடிப்பதென்னினி
அவ்வயினரணியடலராவுமே
கவ்வையினுழந்தனசிறையின்காற்றினே. (௧௪௫)

ஆயிடையரக்கனுமழன்றநெஞ்சினன்
தீயிடைப்பொடிந்தெழுமுயிர்ப்பன்சீற்றத்தன்
மாயிருஞாலமும்விசும்பும்வைப்பறத்
தூயினன்சுடுசரமுருமின்றோற்றத்த. (௧௪௬)

அங்கவெங்கடுங்கணையயிலின்வாய்தொறும்
வெங்கணைபடப்படவிசையின்வீழ்ந்தன
புங்கமேதலையெனப்புக்கபோலுமால்
துங்கவாளரக்கனதுரத்திற்றோன்றல. (௧௪௭)

ஒக்கநின்றெதிரமருழக்குங்காலையில்
முக்கணான்றடவரையெடுத்தமொய்ம்பற்கு

145. அரா - அரவு, பாம்பு. 148. தடவரை - கைலை.

நெக்கனவிஞ்சைகணிலையிற்றீர்ந்தன
மிக்கனவிராமற்குவலியும்வீரமும். (௧௪௮)

வேதியர்வேதத்துமெய்யன்வெய்யவர்க்
காதியனனுகியவற்றநோக்கினன்
சாதியினிமிர்ந்ததோர்தலையைத்தள்ளினன்
பாதியின்மதிமுகப்பகழியொன்றினல். (௧௪௯)

மேருவின்கொடுமுடிவீசுகாலெறி
போரிடையொடிந்துபோப்புணரிபுக்கென
ஆரியன்சரம்படவரக்கன்வன்றலை
நீரிடைவிழுந்ததுநெருப்பொடன்றுபோய். (௧௫௦)

குதித்தனர்பாரிடைக்குன்றுகூட்டற
மிதித்தனர்வடகமுந்தூசும்வீசினர்
துதித்தனர்பாடினராடித்துள்ளினர்
மதித்தனரிராமனைவானுளோரெலாம். (௧௫௧)

இறந்ததோருயிருடன்றருமத்தீட்டினல்
பிறந்துளதாமெனப்பெயர்த்துமோர்தலை
மறந்திலதெழுந்ததுமடித்தவாயது
சிறந்ததுதவமலாற்செயலுண்டாகுமோ. (௧௫௨)

கொய்ததுகொய்திலதென்னுங்கொள்கையின்
எய்தவந்தக்கணத்தெழுந்ததோர்சிரம்
செய்தவெஞ்சினத்துடன்சிறக்குஞ்செல்வனை
வைததுதெழித்ததுமழையினார்ப்பது. (௧௫௩)

இடந்ததுகிரிக்குவட்டென்னவெங்கணும்
படர்ந்ததுகுரைகடல்பருகும்பண்பது
விடந்தருவிழியதுமுடுகிவேலையில்
கிடந்ததுமார்த்ததுமழையின்கேழது. (௧௫௪)

விழுத்தினன்சிரமெனும்வெகுளிமீக்கொள
வழுத்தினவுயிர்களின்முதலின்வைத்ததோர்
எழுத்தின்வன்றோள்களினெமொடேழுகோல்
அழுத்தினனசனியேறயிர்க்குமார்ப்பினன். (௧௫௫)

149. அற்றம் - சோர்வு, தளர்ச்சி. 151. வடகம் - மேலாடை, உத்தரீயம்.
155. முதலின்வைத்ததோர் எழுத்து - ஓம்என்னும் பிரணவஸ்ரூபியான இராமன்.

தலையறிற்றருவதோர்தவமுமுண்டென
நிலையுறுநேமியானறிந்துநீசனைக்
கலையுறுதிங்களின்வடிவுகாட்டிய
சிலையுருகையையுந்தலத்திற்சேர்த்தினான். (௧௫௬)

கொற்றவெஞ்சரம்படக்குறைந்துபோனகை
பற்றியகிடந்ததுசிலையைப்பாங்குற
மற்றொர்கைப்பிடித்ததுபோலவவ்விய
தற்றகைப்பிறந்தகைதயாரதோர்குவார். (௧௫௭)

பொன்கையிற்றார்தியான்வலியைப்போக்குவான்
முன்கையிற்றுறுமயிர்முழ்ளிற்றுள்ளுற
மின்கையிற்கொண்டனவில்லைவிட்டிலா
வன்கையைத்தன்கையின்வலியின்வாங்கினான். (௧௫௮)

விளங்கொளிவயிரவாளரக்கன்வீசிய
தளங்கிளர்தடக்கைதன்மார்பிற்றாக்கலும்
உளங்கிளர்பெருவலியுலைவின்மாதலி
துளங்கினன்வாய்வழியுதிரந்தூவுவான். (௧௫௯)

மாமரத்தார்கையால்வருந்துவானையோர்
தோமரத்தாலுயிர்தொலைப்பத்தூண்டினான்
தாமரத்தாற்பொராத்தகைகொள்வாட்படை
காமரத்தாற்சிவன்கரத்துவாங்கினான். (௧௬௦)

வேறு.

மாண்டதின்றெனுமாதலிவாழ்வென
மூண்டவெம்படைசிந்தமுடிக்கினான்
ஆண்டவில்லியோரைம்முகவெங்கணை
தூண்டினான்றுகளானதுதோமரம். (௧௬௧)

ஓய்வகன்றதொருதலைநூறுறப்
போயகன்றுபுரளப்பொருகணை
ஆயிரந்தொடுத்தானறிவின்றனி
நாயகன்கைக்கடுமைநடத்துவான். (௧௬௨)

நீர்த்தரங்கங்கடோறுநிலந்தொறும
சீர்த்தமால்வரைதொறுந்திசைதொறும்

---

156. கலையுறுதிங்கள் - பூரணத்திங்கள்.
158. பொன்கயிற்றார்தியான் - மாதலி.
161. காமரம் - ஒருபண், இங்கு. சாமகானம்,

பார்த்தபார்த்தவிடந்தொறும்பஃறலை
ஆர்த்துவீழ்ந்ததசனிகள்வீழ்ந்தென. (௧௬௩)

தகர்ந்துமால்வரைசாய்வுறத்தாக்கின
மிகுந்தவான்மிசைமீனமலைந்தன
புகுந்தமாமகரக்குலம்போக்கற
முகந்தவாயிற்புணரியையுற்றுற. (௧௬௪)

பொழுதுநீட்டியபுண்ணியம்போனபின்
பழுதுசெல்லுமன்றேமற்றைப்பண்பெலாம்
தொழுதுசூழ்வனமுன்னின்றுதோன்றவே
கழுதுசூழ்ந்தவிராவணன்கண்ணெலாம். (௧௬௫)

வாளும்வேலுமுலக்கையும்வச்சிரக்
கோளுந்தண்டுமழுவெனுங்கூற்றமும்
தோளின்பத்திகடோறுஞ்சுமந்தன
மீளிமொய்ம்பனுருமெனவீசினான். (௧௬௬)

அனையசிந்திடவாண்டகைவீரனும்
வினையமென்னினியாதுகொல்வெல்லுமா
நினைவெனென்னநிசாசரன்மேனியைப்
புனைவன்வாளியினாலென்றுபொங்கினான். (௧௬௭)

மஞ்சரங்கியமார்பினுந்தோளினும்
நஞ்சரங்கியகண்ணினுநாவினும்
வஞ்சன்மேனியைவார்கணையட்டிய
பஞ்சரம்மெனலாம்வகைபண்ணினான். (௧௬௮)

வாய்நிறைந்தனகண்கண்மறைந்தன
மீய்நிறங்களினெங்குமிடைந்தன
தோய்வுறுங்கணைசெம்புனறோய்ந்தில
போய்நிறைந்தனவண்டப்புறமெலாம். (௧௬௯)

மயிரின்கால்தொறும்வார்கணைமாரிபுக்
குயிருந்தீரவுருவினவோடலும்
செயிருஞ்சீற்றமுநிற்கத்திறறிரிந்
தயர்வுதோன்றத்துளங்கியழுங்கினான். (௧௭௦)

வாரிநீர்நின்றெதிர்மகரம்படச்
சோரிசோரவுணர்வுதுளங்கினான்

---

165. கழுது - கழுகு. 168. பஞ்சரம் - கூடு, தூணீரம்.

தேரின்மேலிருந்தான்பண்டுதேவர்தம்
ஊரின்மேலும்பவனியுலாவுவான். (கஎக)

ஆர்த்துக்கொண்டெழுந்தும்பர்களாடினார்
வேர்த்துத்தீவினைவெம்பிவிழுந்தது
போர்த்துப்பொய்த்தனனென்றுபொலன்கொடேர்
பேர்த்துச்சாரதிபோயினன்பின்றுவான். (கஎஉ)

கைதுறந்தபடையினன்கண்ணகன்
மெய்துறந்தவுணர்வினன்வீழ்தலும்
எய்திறந்தவிர்ந்தானிமையோர்களை
உய்திறந்துணிந்தானறமுன்னுவான். (கஎ௩)

தேறினாற்பின்னையாருஞ்செயற்கரி
ஊறுதானுற்றபோதேயுயாதவன்
நாறுவாயெனமாதலிநூக்கினான்
ஏறுசேவகனும்மிதியம்பினான். (கஎ௪)

படைதுரந்துமயங்கியபண்பினான்
இடைதெறும்படிபார்த்திகனீதிபின்
நடைதுறந்துயிர்கோடலுநன்மையோ
கடைதுறந்ததுபோரென்கருததென்றான். (கஎரு)

கூவிரஞ்செறிபொற்கொடித்தேரொடும்
போவரஞ்சினரன்னதொர்போழ்தினின்
ஏவரஞ்சலியாதவரெண்ணுடைத்
தேவரஞ்சவிராவணன்றேறினான். (கஎ௬)

உறக்கநீங்கியுணர்ச்சியுற்றானென
மறக்கண்வஞ்சனிராமனைவான்றிசைச்
சிறக்குந்தேரொடுங்கண்டிலன்சீற்றத்தீப்
பிறக்கநோக்கினன்பின்னுறநோக்கினான். (கஎஎ)

தேர்திரித்தனைதேவருங்காணவே
வீரவிற்கையிராமற்குவெண்ணகை
போரவுய்த்தனையேபிழைத்தாயெனாச்
சாரதிப்பெயரோனைச்சலிப்புறா. (கஎஅ)

---

176. ஏவர் - எவர், அஞ்சலியாதவர்.

178. தேர்திரித்தனை - தேரைத்திருப்பிப் பின்னோட்டினாய்.

தஞ்சனானுனைத்தேற்றத்தரிக்கிலா
வஞ்சநீபெருஞ்செல்வத்துவைகினை
அஞ்சினானெனச்செய்தனையாதலான்
உஞ்சுபோதிகொலாமென்றுருத்தெழா. (௧௭௯)

வாள்கடைக்கணித்தோச்சலும்வந்தவன்
தாள்கடைக்கணியாத்தலைதாழ்வுற
மூள்கடைக்கடுந்தீயின்முனிவொழி
கோள்கடைக்கணித்தென்றவன்கூறுவான். (௧௮௦)

ஆண்டொழிற்றுணிவோய்ந்தனையாண்டிறை
ஈண்டநிற்றிடினையனேநின்னுயிர்
மாண்டதிக்கணமென்றிடர்மாற்றுவான்
மீண்டதித்தொழிலெம்வினைமெய்ம்மையால். (௧௮௧)

ஓய்வுமூற்றமுநோக்கியுயிர்ப்பொறைச்
சாய்வுநீக்குதல்சாரதிதன்மைத்தால்
மாய்வுநிச்சயம்வந்துழிவாளினால்
காய்வுதக்கதன்றாற்கடைகாண்டியால். (௧௮௨)

என்றிறைஞ்சலுமெண்ணியிரங்கினான்
வென்றியந்தடந்தேரினைமீட்டெனச்
சென்றெதிர்ந்ததுதேருமத்தேர்த்திசை
நின்றவஞ்சனிராமனைநேர்வுறா. (௧௮௩)

கூற்றின்வெங்கணைகோடியின்கோடிகள்
தூற்றினான்வலிமும்முறைதோற்றினான்
வேற்றோர்வாளரக்கன்னெனவெம்மையால்
ஆற்றினான்செருக்கண்டவாஞ்சினார். (௧௮௪)

எல்லுண்டாகினெருப்புண்டெனுமிதச்
சொல்லுண்டாயதுபோலவன்றோளிடை
வில்லுண்டாகின்வெலற்கரிதாமெனாச்
செல்லுண்டாலன்னதோர்கணைசிந்தினான். (௧௮௫)

நாரணன்படையாகியவப்புறப்
பாரணங்கினைத்தாங்குறுபல்வகை
வாரணங்களைவென்றவன்வார்சிலை
ஆரணங்கையிருதுணியாக்கினான். (௧௮௬)

---

180. முனிவு - கோபம், வெப்பம்.. 182. காய்வு - கோபித்தல்.

அயன்படைத்தவில்லாயிரம்பேரினன்
வியன்படைக்கலத்தாலற்றுவீழ்தலும்
உயர்ந்துயர்ந்துகுதித்தனரும்பரார்
பயன்படைத்தனம்பஃறவத்தாலென்றார். (கஅஎ)

மாறிமாறிவரிசிலைவாங்கினன்
நூறினூறிறொடையிருநூறவை
வேறுவேறுதிசையுறவெங்கணை
நூறிநூறியிராமனுறுக்கினன். (கஅஅ)

இருப்புலக்கைவேறண்டுகோலீட்டிவாள்
நெருப்புலக்கவருநெடுங்கற்பணம்
திருப்புலக்கவுய்த்தான்றிசையானையின்
மருப்புலக்கவழுங்கியமார்பினன். (கஅகூ)

அவையனைத்துமறுத்தகன்வேலையிற்
குவையனைத்துமெனக்குறித்தான்குறித்
திவையனைத்துமிவனைவெல்லாவெனு
நவையனைத்துந்துறந்தவனுடினன். (ககூ0)

கண்ணினுண்மணியூடுகழிந்தன
எண்ணினுண்மணலிற்பலவெங்கணை
புண்ணினுண்ணுழைந்தோடியபுந்தியோர்
எண்ணினுண்ணியவென்செயற்பாற்றெனு. (ககூக)

நாரணன்றிருவுந்தியினன்முகன்
பாரவெம்படைவாங்கியிப்பாதகன்
மாரினெய்வெனென்றெண்ணிவலித்தனன்
ஆரியன்னவனுவியகற்றுவான். (ககூஉ)

மூந்திவந்துலகின்றமுதற்பெயர்
அந்தணன்படைவாங்கியருச்சியாச்
சுந்தரன்சிலைநாணிற்றொடுப்புறு
மந்தரம்புரைதோளுறவாங்கினன். (ககூ௩)

புரஞ்சுடப்பண்டமைத்ததுபொற்பணை
மரந்தொளைத்ததுவாலியைமாய்த்துள

187. வியன் - அதியசம்.

193. மந்தரம் - மலை.

194. சுடரோன்மகன் - சூரியன் குலத்துவந்தஇராமன்.

தரஞ்சுடச்சுடர்நெஞ்சினரக்கர்கோன்
உரஞ்சுடச்சுடரோன்மகனுந்தினான். (கககூச)

காலும்வெங்கனலுங்கடைகாண்கிலா
மாலுங்கொண்டவடிக்கணைமாமுக
நாலுங்கொண்டுநடந்ததுநான்முகன்
மூலமந்திரந்தன்னொடுமூட்டலால். (கககூரு)

ஆழிமால்வரைக்கப்புறத்தப்புறம்
பாழிமாகடலும்வெளிபாய்ந்ததால்
ஊழிஞாயிறுமின்மினியொப்புற
வாழிவெஞ்சுடர்பேரிருள்வாரவே. (கககூசு)

அக்கணத்தினயன்படையாண்டகைச்
சக்கரப்படையோடுந்தழீஇச்சென்று
புக்கதக்கொடியோனுரம்பூமியும்
திக்கனைத்தும்விசும்புந்திரிந்தவே. (கககூஎ)

வேறு.

முக்கோடிவாழ்நாளுமுயன்றுடையபெருந்தவமு முதல்வன்முன்னா
எக்கோடியாராலும்வெலப்படாயெனக்கொடுத்தவரமுமேனைத் [ள்
திக்கோடுமுலகனைத்துஞ்செருக்கடந்தபுயவலியுந்தின்றுமார்பிற்
புக்கோடியுயிர்பருகிப்புறம்போயிற்றிராகவன்றன்புனிதவாளி. ()

ஆர்க்கின்றவானவருமந்தணருமுனிவர்களுமாசிகூறித், தூர்க்கின்றவலர்மாரிதொடரப்போய்ப்பாற்கடலிற்றாய்நீராடித்,தேர்க்குன்ற விராவணன்றன் செழுங்குருதிப் பெரும்பரவைத் திரைமேற்சென்று, கார்க்குன்றமனையான்றன் கடுங்கணைப்புட்டிலினடுவட் கரந்ததம்மா. (கககூகூ)

கார்நின்றமழைநின்று முருமுதிர்வவெனத்திணிதோட் காட்டினின்றும், தார்நின்றமலைநின்றும் பணிக்குலமுமணிக்குலமுந் தகர்ந்துசிந்தப், போர்நின்றவிழிநின்றும் பொறிநின்றுபுகையோடுங்குருதிபொங்கத், தேர்நின்றுநெடுநிலத்துச் சிரமுங்கீழ்ப்படவிழுந்தான் சிகரம்போல்வான். (உ00)

வெம்மடங்கல்வெகுண்டனையசினமடங்கமனமடங்கவினையம்வீயத்
தெம்மடங்கப்பொருதடக்கைச்செயலடங்கமயலடங்கவாற்றறேயத்

201. தெம்மடங்க - தெவ் பகைவர்கள், மடங்க - பின்னிட,

தம்மடங்குமுனிவரையுந் தலையடங்கநிலையடங்கச்சாய்த்தநாளின்
மும்மடங்குபொலிந்தனவம்முறைதுறந்தானுயிர்துறந்தமுகங்களம்மா. (உ0க)

பூதலத்தாக்குவாயாகவினிப்பொலந்தேரையென்றபோதின்
மாதலிப்பேரவன்கடவமண்டலத்தினப்பொழுதேவருதலோடும்
மீநிலத்தபெருந்தாரைவிசும்பளப்பக்கிடந்தான்றன்மேனிமுற்றும்
காதலித்தவுருவாகியறம்வளர்க்குங்கண்ணாளன்றெரியக்கண்டான்.

தேரினைநீகொடுவிசும்பிற் செல்கென்னமாதலியைச் செலுத்திப்பின்னர்ப், பாரிடமீதினினணுகித் தம்பியொடும்படைத்தலைவர் பலருஞ்சுற்றப், போரிடைமீண்டொருவருக்கும் புறங்கொடாப் போர்வீரன் பொருதுவீழ்ந்த, சீரினையேமனமுவப்ப வுருமுற்றுந் திருவாளன்றெரியக்கண்டான். (உ0ங)

புலைமேலுஞ்செலற்கொத்துப் பொதுநின்றசெல்வத்தின் புன்மைத்தன்மை, நிலைமேலுமினியுண்டோ நீர்மேலக்கோலமெனுநிலைமைத்தன்றே, தலைமேலுந்தோண்மேலுந் தடமுதுகிற்படர்புயத்துந்தாவியேறி, மலைமேனின்றாடினபோ லாடினவால்வானரங்கள் வரம்பிலாத. (உ0ச)

தோடுழுதநறுந்தொடையற்றொகையுழுதகிளைவண்டின்சுழியத்தொங்கல், பாடுழுதபடர்வெரிநின்பணியுழுதவணிநிகர்ப்பப்பணைக்கையானைக், கோடுழுதநெடுந்தழும்பின் குவைதழுவியெழுமேகக்குழுவின்கோவைக், காடுழுதகொழும்பிறையிற் கறைகழன்றுகிடந்தனபோற்கிடக்கக்கண்டான். (உ0ரு)

வேறு.

தளிரியல்பொருட்டின்வந்தசீற்றமுந்தருக்கினேன்றன்
கிளரியலுருவினேடுங்குழிப்புறக்கிளர்ந்துதோன்றும்
வளரியல்வடிவிற்செம்மைத்தன்மையுமருவநின்ற
முளரியங்கண்ணன்மூரன்முறுவலன்மொழிவதானான். (உ0சு)

வென்றியானுலகமூன்றுமெய்ம்மையான்மேவினாலும்
பொன்றியார்கின்றதோளைப்பொதுவறநோக்கும்பொற்பும்

---

202. மண்மண்டலத்தின் - மண்தலத்தில், புவிமீது.

204. அலைமேவுங்கடல்புடைசூழவனியெலாங்காத்தளிக்குமடற்கைவீரன் எனவும்.

204. சிலைமேவுங் கடுங்கணையாற் படுகளத்தேமனத்தீமை சிதைந்துவீழ்ந்தோன் எனவும் பாடம். 206. தளிரியல் - சீதை.

குன்றியாசுற்றதன்றேயிவனெதிர்குறித்தபோரில்
பின்றியான்முதுகிற்பட்டபிழம்புளதழும்பினம்மா. (௨0௭)

கார்த்தவீரியனெனன்பானுற்கட்டுண்டானெனனக்கற்கும்
வார்த்தையுண்டதனைக்கேட்டுநாணுறும்மனத்தினேற்குப்
போர்த்தலைப்பிறகிட்டேற்றபுண்ணுடைத்தழும்புபோலாம்
நேர்த்ததுங்காணலுற்றவீசனுரிருக்கைநிற்க. (௨0௮)

மாண்டொழிந்துலகினிற்கும்வயங்கிசைமுயங்கமாட்டா
தூண்டொழிலுகந்துதெவவர்முறுவலென்புகழையுண்ண
பூண்டொழிலுடையமார்பாபோர்புறங்கொடுத்தோர்போன்ற
ஆண்டொழிலோரிற்பெற்றவெற்றியுமவத்தமென்றான். (௨0௯)

அவ்வுரைக்கிறுதிநோக்கிவீடணனருவிக்கண்ணன்
வெவ்வுயிர்ப்போடுநீண்டவிம்மலன்வெதுப்புநெஞ்சன்
செவ்வியிற்றொடர்ந்தவல்லசெப்பலைசெல்வவென்று
எவ்வுயிர்ப்பொறையுநல்கியிரங்கிநின்றினையசொன்னான். (௨௧0)

ஆயிரந்தோளினானும்வாலியுமரிதினைய
மேயினவென்றிவிண்ணோசாபத்தின்விளைந்தமெய்ம்மை
தாயினுந்தொழத்தக்காண்மேற்றங்கியகாதற்றன்மை
நோயுநின்முனிவுமல்லாலவெல்வரோநுவலற்பாலார். (௨௧௧)

நாடுளதனையுமோடிநண்ணலார்காண்கிலாமல்
பீடுளகுன்றம்போலும்பெருந்திசையெல்லையானைக்
கோடுளதனையும்புக்குக்கொடும்புறத்தழுந்துபுண்ணின்
பாடுளதன்றித்தெவ்வர்படைக்கலம்பட்டதென்செய்யும். (௨௧௨)

அப்பணையனைத்துமார்புக்கணியெனக்கிடந்தவீரக்
கைப்பணைமுழங்கமேனுளமரிடைக்கிடைத்தகாலத்
துப்பணைவயிரவாளிவிசையினுங்காலின்றோன்றல்
வெப்பணைகுத்தினாலும்வெரிநிடைப்போயவன்றே. (௨௧௩)

அவ்வடுவென்றியிந்தவண்டத்தும்புறத்தும்மான்ற
தெவ்வடுபடைகளஞ்சாதிவன்வயிற்செல்லிற்றேவ
வெவ்விடமீசன்றன்னைவிழுங்கினும்பறவைவேந்தை
அவ்விடநாகமெல்லாமணுகினுமணுகலாற்றா. (௨௧௪)

வென்றியாய்பிறிதுமுண்டேவேலைசூழ்ஞாலமாண்டோர்
பன்றியாயெயிற்றுக்கொண்டபராபரன்முதலபல்லோர்

209. தெவ்வர் - பகைவர்.

ஏன்றியாமிடுக்கண்டீர்வதென்கின்றாரிவனினுன்னால்
பொன்றியானென்றபோதும்புலப்படார்பொய்கொலென்பார். ()

அன்னதோவென்றுவிசனையமுநாணுநீங்கித்
தன்னதோளிணையைநோக்கிவீடணாதக்கதன்றால்
என்னதோவிறந்துளார்மேல்வயிர்ததனீயிவனுக்கீண்டு
சொன்னதோர்விதியினாலேகடன்செயத்துணிதியென்றான். (உகசு)

அவ்வகையருளிவள்ளலனைத்துலகங்களோடும்
எவ்வகையுள்ளதேவர்யாவருமிரைத்துப்பொங்கிக்
கவ்வையிற்றீர்ந்தார்வந்துவீழ்கின்றார்தம்மைக்காணச்
செவ்வையினவர்முன்சென்றான்வீடணனிதனைச்செய்தான். ()

போழ்ந்தெழவரக்கன்செய்தபுன்றொழில்பொறையிற்றாமால்
வாழ்ந்தநீயிவனுக்கேற்றவரன்முறைவகுத்தியென்னத்
தாழ்ந்ததோர்கருணைதன்னாற்றலைமகனருளத்தள்ளி
வீழ்ந்தனனவன்மேல்வீழ்ந்தமலையின்மேன்மலைவீழ்ந்தென்ன. ()

மூவருமுலகத்தெல்லாவுயிர்களுமெரியினெஞ்சின்
தேவருமுனிவர்தாமுஞ்சிந்தையினிரக்கஞ்சேரத்
தாவரும்பொறையினான்றனறிவினாற்றகைக்கநின்ற
யாவருந்துயரந்தீரவரற்றினான்பகுவாயார. (உகசு)

வேறு.

உண்ணாதேயுயிருண்ணாதொருநஞ்சு சனகியெனும்பெருநஞ்சு ன்னைக், கண்ணாலேநோக்கவேபோக்கியதே யுயிர்நீயுங்களப்பட்டாயே, எண்ணாதேனெண்ணியசொலின்றினித்தா னெண்ணுதியோ வெண்ணிலாற்றல், அண்ணாவோவண்ணாவோவசுரர்கடம்பிரளயமே யமரர்கூற்றே. (உஉ௦)

ஓராசையொருவன்மேலுயிராசைக்குலமகண்மேலுடையகாதல், தீராசைபழியென்றேனெனைமுனிந்தமுனிவாறித்தேறினையோ, போராசைப்பட்டெழுந்தகுலமுற்றும் பொன்றவுந்தான்பொங்கிநின்ற, பேராசைபேர்ந்ததோபேர்ந்தாசைக் கரியிரியப்புருவம்பேர்த்தோய். (உஉக)

அன்றெரியின்விழுவேதவதியிவள்காணுலகுக்கோரன்னையென்று
குன்றனையநெடுந்தோளாய்கூறினேனதுமனத்துட்கொள்ளாதேயே

216. கடன் - ஈமக்கிரியை.

உன்றனது குலமடங்கவுருத்தமரிற்படக்கண்டுமுறவாகாதே [யே.
பொன்றினையேயிராகவன்றன்புபவலியின்றறிந்துதான்போகின்று

மன்றன்மாமலரானும்வடிமழுவாட்படையானும்வரங்களீந்த
ஒன்றலாதனவுடையமுடியோடும்பொடியாகியுதிர்ந்துபோன
அன்றுதானுணர்ந்திலையேயானுலுமவனுட்டையனுகிநின்ற
இன்றுதான்றெரிந்ததேயிராமனூர்யாவர்க்குமிறைவராதல். (௨௨௫)

வீரநாடுற்றுபோவிரிஞ்சனும்யாவருக்குமேலாமுன்பன்
பேரநாடுற்றுபோபிறைசூடிபிஞ்ஞகன்றன்புரம்பெற்றுபோ
ஆரணுவுன்னுயிரையஞ்சாதேகொண்டகன்றூரதெலாநிற்க
மாரனூர்வலியாட்டந்தவிர்ந்தாரேகுளிந்தானேமதியமென்பான். ()

கொல்லாதமைத்துனனைக்கொன்றுயென்றதுகுறித்துக்கொடுமைசூழ்ந்து
பல்லாலேயிதழதுக்குங்கொடும்பாவிநெடும்பாரப்பழிதீர்ந்தாளே
நல்லாருந்தியாருநரகத்தார்துறக்கத்தார்நம்பிநம்மோ
டெல்லாரும்பகைஞரேயார்முகத்தேவிழிக்கின்றுயெளியையானுய்.

போர்மகளைக்கலைமகளைப்புகழ்மகளைத்தழுவியகைபொறுமைகூரச்
சீர்மகளைத்திருமகளைத்தேவர்க்குந்தெரிவரியதெய்வக்கற்பின் [ப்
பேர்மகளைத்தழுவுவானுயிர்கொடுத்துப்பழிகொண்டபித்தாபின்னை
பார்மகளைத்தழுவினையேதிசையானைப்பணையிறுத்தபணைத்தமார்பால். (௨௨௬)

என்றேங்கியரற்றுவான்றனையெடுத்துச் சாம்பவனுமெண்கின்வேந்தன், குன்றேங்குநெடுந்தோளாய் விதிநிலையைமதியாதகொள்கைத்தாகிச், சென்றேங்குமுணர்வினையோதேறுதே யழுந்துதியோவென்னத்தேறி, நின்றனப்புறத்தரக்கனிலைகேட்டாண் மயன்பயந்தநெடுங்கட்பாவை. (௨௨௭)

வேறு.

அனந்தநூறுயிரமரக்கர்மங்கைமார்
புனைந்தபூங்குழல்விரித்தரற்றும்பூசலார்
இனந்தொடர்ந்துடன்வரவெய்தினளென்ப
நினைந்ததுமறந்ததுமிலாதநெஞ்சினுள். (௨௨௮)

இரக்கமுந்தருமமுந்துணைக்கொண்டின்னுயிர்
புரக்குநன்குலத்துவந்தொருவன்பூண்டதோர்
பரக்கழியாமெனப்பரந்துநீண்டதால்
அரக்கியர்வாய்திறந்தரற்றுமோதையே. (௨௨௯)

---

226. நம்மோயைத்தெய்வக்கற்பின் எனவும்பாடம்.
229. பரக்கழி - அபகீர்த்தி. நீந்தை

நூபுரம்புலம்பிடச்சிலம்புநொந்தழக்
கோபுரந்தொறும்புறங்குறுகிஞர்சிலர்
ஆபுரந்தரன்பகையற்றதாமெனு
மாபுரந்தவிரவிண்வழிச்சென்ருர்சிலர். (உகூ0)

அழைப்பொலிமுழக்கெனவலங்கமின்னிடை
குழைப்பொலிநல்லணிக்குலங்கள்வில்விட
உழைப்பொலியுண்கணீர்த்தாரைமீதுக
மழைப்பொருங்குலமெனவீழ்ந்துமாழ்கிஞர். (உகூக)

தலைமிசைத்தாங்கியகரத்தர்தாரைநீர்
முலைமிசைத்தூங்கியமுகத்தர்மொய்த்துவந்
தலைமிசைக்கடலின்வீழன்னம்போலவன்
மலைமிசைத்தோள்கண்மேல்வீழ்ந்துமாழ்கிஞர். (உகூஉ)

தழுவினர்தழுவினர்தலையுந்தாள்களும்
எழுவியபுயங்களுமார்புமெங்கணும்
குழுவினர்முறைமுறைக்கூறுகூறுகொண்
டழுதனரயர்த்தனரரக்கிமார்களே. (உகூஙூ)

வருத்தமேதெனினதுபுலவிவைகனும்
பொருத்தமேவாழ்வெனப்பொழுதுபோக்குவார்
ஒருத்தர்மேலொருத்தர்வீழ்ந்துயிர்ப்புல்லிஞர்
திருத்தமேயெனவவன்சிகரத்தோள்கண்மேல். (உகூச)

இயக்கியரக்கியருரகரேழையர்
மயக்கவில்சித்தியர்விஞ்சைமங்கையர்
முயக்கினர்முறைகெடமுயங்கிஞர்கடந்
தூயக்கிலாவன்புழுண்டெவருஞ்சோரவே. (உகூரு)

அறந்தொலைவுறமனத்தடைத்தசீதையை
மறந்திலையோவினுமெமக்குன்வாய்மலர்
திறந்திலைவிழித்திலையருளுஞ்செய்கிலை
இறந்தனையோவெனவிரங்கியேங்கிஞர். (உகூகூ)

தரங்கநீர்வேலையிற்றடித்துவீழ்ந்தென
உரங்கிளர்மதுகையாளுருவினுற்றனள்
மரங்களுமலைகளுமுருகவாய்திறந்
திரங்கினண்மயன்மகளிளையபன்னிஞள். (உகூஎ)

230. ஆ - இரக்கக்குறிப்பு.

### வேறு.

அன்னேயோவன்னேயோ வாகொடியேற்கடுத்தவா ளரக்கர் வேந்தன், பின்னேயோவிறப்பதுமுன் பிடித்திருந்தகருத்ததுவும் பிடித்திலேனே, முன்னேயோவிழுந்ததுவு முடித்தலையோபடித்தலைய முகங்காட்டாயோ, என்னேயோவென்னேயோ விராவணனார் முடிந்தபரி சிதுவோபாவம். (௨௩௮)

வெள்ளெருக்கஞ்சடைமுடியான் வெற்பெடுத்ததிருமேனி மேலுங்கீழும், எள்ளிருக்குமிடனின்றி யுயிருக்குமிடனாடி யிழைத்தவாறோ, கள்ளிருக்குமலர்க்கூந்தற் சானகியைமனச்சிறையிற் கரந்தகாதல், உள்ளிருக்குமெனக்கருதி யுடல்புகுந்து தடவியதோ வொருவன்வாளி. (௨௩௯)

ஆரம்போர்திருமார்பை யகன்முழைகளெனத்திறந்திவ் வுலகுக்கப்பால், தூரம்போயினவொருவன் சிலைதுரந்தசரங்களே போரிற்றோற்றும், வீரம்போயுரங்குறைந்து வரங்குறைந்துவீழ்ந்தானே வேறேகெட்டேன், ஓரம்போவுயிர்பருகிற் றிராவணனைமானுடனோ ரூற்றமீதோ. (௨௪௦)

காந்தையருக்கணியனைய சானகியார்பேரழகு மவர்தங்கற்பும், ஏந்துபுயத்திராவணனார் காதலுமச்சூர்ப்பனகை யிழந்தமூக்கும், வேந்தர்பிரான்றபரதனார் பணியினால்வெங்கானில் விரதம்பூண்டு, போந்ததுவுங்கடைமுறையே புரந்தரனார்பெருந்தவமாய்ப் போயிற்றம்மா. (௨௪௧)

தேவர்க்குந்திசைக்கரிக்குஞ் சிவனார்க்குமயனார்க்குஞ் செங்கண்மாற்கும், ஏவர்க்கும்வலியானுக் கென்றுண்டாமிறுதியென வேமாப்புற்றேன், ஆவற்கணீயுழன்ற வருந்தவத்தின்பெருங்கடற்கும் வரமென்றூன்ற, காவற்கும்வலியானோர் மானுடனாருளரென்னக் கருதினேனே. (௨௪௨)

அரைகடையிட்டமைவுற்ற முக்கோடியாயுவமுன் னறிஞர்க்கேயும், உரைகடையிட்டளப்பரிய பேராற்றற்றோளாற்றற் குலப்போவில்லைத், திரைகடையிட்டளப்பரிய வரமென்னும்பாற்கடலைச் சீதையென்னும், பிரைகடையிட்டழிப்பதனை யறிந்தேனோதவப் பயனின் பெருமைபார்ப்பேன். (௨௪௩)

---

239. கள் - தேன்.

241. காந்தையர் - பெண்கள்.

ஆரனுருலகியற்கையறிதற்காரவையேயுழுமேழுமஞ்சும்
வீரனுருடறுறந்துவிண்புக்கார்கண்புக்கவேழவில்லால்
நாரநாண்மலர்க்கணை பானுளெல்லாந்தோளெல்லாநையவெய்யும்
மாரனூர்தனியிலக்கைமனித்தனுரழித்தனரேவாத்தினுலே. (உசச)

வேறு.

ஆராவமுதாயலைகடலிற்கண்வளரும்
நாராயணனென்றிருப்பேனிராமனைநான்
ஓராதேகொண்டகன்றாயுத்தமனூர்தேவிதனைப்
பாராயோநின்னுடையமார்பகலம்பட்டவெலாம். (உசரு)

வேறு.

என்றழைத்தனளெங்கியெழுந்தவன்
பொன்றழைத்தபொருவருமார்பினைத்
தன்றழைக்கைகளாற்றழுவித்தனி
நின்றழைத்துயிர்த்தாளுயிர்நீங்கினாள். (உசகூ)

வானமங்கையரும்மற்றுமற்றுமெத்
தானமங்கையருந்தவப்பாலவர்
ஆனமங்கையரும்மருங்கற்புடை
மானமங்கையர்தாமும்வழுத்தினர். (உசஎ)

பின்னைவீடணன்பேரெழிற்றம்முனை
வன்னிகூவிவரன்முறையான்மறை
சொன்னவீமம்விதிமுறையாற்றெருகுத்
தின்னனெஞ்சினெடுஞ்சலித்தேற்றினன். (உசஅ)

இந்தனத்தகில்சந்தனமிட்டுமேல்
அந்தமானத்தழுகுறத்தானமைத்
தெந்தவோசையுங்கீழுறவார்த்திடை
முந்துசங்கொலியெங்குமுழங்குற. (உசகூ)

கொற்றவெண்குடையோடுகொடியிடைந்
துற்றவீமவிதியினுடம்படஇச்
சுற்றுமாதர்தொடர்ந்துடன்சூழ்வர
மற்றவீரன்விதியின்வழங்கினன். (உருo)

கடன்கள்செய்துமுடித்துக்கணவனே
டைடைந்துபோனமயன்மகளோடுடன்

248. வன்னி - தீ.

அடங்கவெங்கனலுக்கவியாக்கினுன்
குடங்கொணீரினுங்கண்சோர்குமிழியான். (உருக)

மற்றையோர்க்கும்வரன்முறையால்வருத்
துற்றநீக்கொடுத்துண்குறுநீருகுத்
தெற்றையோர்க்குமிவனலதில்லெனு
வெற்றிவீரன்குரைகழன்மேவினுன். (உருஉ)

வந்துதாழ்ந்ததுணைவனைவள்ளலும்
சிந்தைவெந்துயர்தீருதிதெள்ளியோய்
முந்தையெய்துமுறைமையிதாமெனு
அந்தமில்விடர்ப்பாசமகற்றினுன். (உருங)

ஆ திருவிருத்தம் - ஙசஉ௦.

---

## ங௫-வது, மீட்சிப்படலம்.

வருந்தனீதிமனுநெறியாவையும்
பொருந்துகேள்விப்புலமையினேயெனு
அருந்தவப்பயனுலடைந்தாற்கறைந்
திருந்தவத்தினேயோர்க்கியம்பினுன். (க)

சோதியான்மகன்வாயுவின்ருேன்றன்மற்
றேதில்வானரவீரரொடேகிநீ
ஆதிநாயகனுக்கியநூன்முறை
நீதியானெடுமுடிசூட்டுவாய். (உ)

என்றுகூறியிளவலோடாரையும்
வென்றிவீரன்விடையருள்வேலையின்
நின்றதேவர்நெடுந்திசையோரொடும்
சென்றுதத்தமசெய்கைபுரிந்தனர். (ங)

சூழ்கடற்புனலும்பலதோயமும்
நீள்முடித்தொகையும்பிறநீர்மையும்
பாழிதுற்றரிபற்றியபீடமும்
தாழ்வில்கொற்றத்தமரர்கடந்தனர். (ச)

வாசநாண்மலரோன்சொலமான்முகன்
காசுமாநிதியுங்கொடுகங்கைகூ

---

251. அவி - உணவு. 253. முந்தை - மூத்தோன். 4. தோயம் - நீர்.

டீசனைமுதலோர்வியந்தேத்திடத்
தேசுலாமணிமண்டபஞ்செய்தனன். (௫)

மெய்கொள்வேதவிதிமுறையின்னுளோர்
தெய்வநீள்புனலாடறிருத்திட
ஐயனுணையினுலிளங்கோளரி
கையினுன்மகுடங்கவித்தானரோ. (௬)

கரியகுன்றுகதிரினைச்சூடியோர்
எரிமணித்தவிசிற்பொலிந்தென்னவே
விரியும்வெற்றியிலங்கையர்வேந்தனீ
டரியணைப்பொலிந்தான்றமரார்த்தெழ. (௭)

தேவர்பூமழைசித்தர்முதலினோர்
மேவுகாதல்விரைமலர்வேறிலர்
மூவரோடுமுனிவர்மற்றியாவரும்
நாவிலாசிநறைமலர்தூவினர். (௮)

முடிபுனைந்தநிருதர்முதலவன்
அடிவணங்கியிளவலையாண்டையந்
நெடியகாதலினேற்குபர்நீர்மைசெய்
திடிகொள்சொல்லனலற்கியம்பினுன். (௯)

விலங்கனுணமிடைதருதோளினுய்
இலங்கைமாநகர்யான்வருமெல்லைநீ
கலங்கலாநெடுங்காவலியற்றெறு
அலங்கல்வீரனடியிணையெய்தினுன். (௧௦)

குரக்குவீரனரசிளங்கோளரி
அரக்கர்கோமகனேடிதாழ்தலும்
பொருக்கெனப்புகல்புக்கவற்புல்லியத்
திருக்கொண்மார்பணிணையன்செப்பினுன். (௧௧)

உரிமைமூவுலகுந்தொழவும்பர்தம்
பெருமைதீதியறன்வழிபேர்கிலா
திருமையேயரசாளுதியீறிலாத்
தருமசீலவென்றான்மறைதந்துளான். (௧௨)

---

12. இருமை - இம்மை, அம்மை.

11. குரக்கு வீரனுகிய அனுமான். குரக்கரசாகிய சுக்கிரீவன், இளங்கோளரியாக இலக்குமணன். பொருக்கெனபுகல்புக்கவன் - விபீஷணன்.

பன்னுநீதிகள்பற்பலகூறிமற்
றுன்னுடைத்தமரோடுயர்கீர்த்தியோய்
மன்னிவாழ்கென்றுரைத்தடன்மாருதி
தன்னைநோக்கினன்றுயர்சொனேக்கினுன். (௧௩)

இப்புறத்தினவெய்துறுகாலையில்
அப்புறத்தனையன்னியனுமனைத்
துப்புறச்செய்யவாய்மணித்தோகைபால்
செப்புறிப்படிபோயெனச்செப்பினுன். (௧௪)

வணங்கியந்தமின்மாருதிவாரணம்
அணங்குதன்கடிகாவுசென்றண்மினுன்
உணங்குகொம்புக்குயிர்வருநீரெனச்
சுணங்குதோய்முலையாட்கிவைசொல்லினுன். (௧௫)

பாடிநான்றிருநாமங்கள்பன்முறை
கூடுசாரியிற்குப்புற்றுக்கூத்துநின்
றூடியங்கையிரண்டுமலங்குறச்
சூடிநின்றனன்குன்றன்னதோளினுன். (௧௬)

ஏழைசோபனமேந்திழைசோபனம்
வாழிசோபனமங்கலசோபனம்
ஆழியானவரக்கனையாரியச்
சூழியானைதுகைத்ததுசோபனம். (௧௭)

தலைகிடந்தனதாரணிதாங்கிய
மலைகிடந்தனபோன்மணித்தோளெனும்
அலைகிடந்தனவாழிகிடந்தன
நிலைகிடந்தவுடனிலத்தேயென்றான். (௧௮)

அண்ணலாணையின்வீடணனுமறக்
கண்ணிலாதவன்காதறுேடர்தலால்
பெண்ணலாதுபிழைத்துளதாகுமென்
றெண்ணலாவதோர்பேரிலராலென்றான். (௧௯)

ஒருகலைத்தனிவெண்மதிநாளொடும்
வருகலைக்குவருமறுமாறுறப்

---

14. துப்பு - பவளம்.

17. ஆழியான - ஆளிபோன்ற.

19. அறக்கண் - அறத்தைக்குக்கைகண், பற்றுக்கோடு.

பொருகலைக்குலம்பூத்தனபோன்றன
பருகலுற்றவமுதுபயந்தநாள். (உ௦)

ஆம்பல்வாயுமுகமுமலர்ந்திடத்
தேம்புநுண்ணிடைநோவத்திரண்முலை
ஏம்பலாசைக்கிரட்டிவந்தெய்தினாள்
பாம்புகானற்பனிவதிப்பான்மையாள். (உக)

புந்தியோபேருவகைப்பொருமலோ
உந்தியோங்குமொளிவளைத்தோள்களோ
சிந்தியோடுகலையுடைத்தேர்கொலோ
முந்தியோங்கினயாவைமுலைகொலோ. (உஉ)

குனித்தகோலப்புருவங்கள்கொம்மைவேர்
பனித்தகொங்கைமழலைப்பனிமொழி
நுனிப்பதொன்றுநுவல்லதொன்றுயினாள்
கனித்தவின்களிகள்ளினிற்காட்டுமோ. (உரு)

அனையளாகியநுமனைநோக்கினாள்
இனையதின்னதியம்புவதென்பதோர்
நினைவிலாதுநெடிதிருந்தானெடு
மனையின்மாசுதுடைத்தமனத்தினாள். (உச)

யாதிதற்கொன்றியம்புவலென்பது
மீதுயர்ந்தவுவகையின்விம்மலோ
தூதுபொய்க்குமென்றேவெனச்சொல்லினான்
நீதிவித்தகனங்கைநிகழ்த்தினாள். (உரு)

மேக்குநீங்கியவெள்ளவுவகையால்
ஏக்கமுற்றொன்றியம்புவதியாதென
நோக்கிநோக்கியரிதெனநொந்துளேன்
பாக்கியம்பெரும்பித்தும்பயக்குமோ. (உசு)

முன்னைநீக்குவென்மொய்சிறையென்றநீ
பின்னைநீக்கியுவகையும்பேசினை
என்னபேற்றினையீகுவதென்பதை
உன்னிநோக்கியுரைமறந்தோவினேன். (உஎ)

---

21. பாம்புகால் - இராகுவிழுங்கியபின் னுமிழ்ந்த.
23. குனித்த - வளைந்த.

உலகமூன்றுமுதவற்கொருதனி
விலையிலாமையுமுன்னினென்மேலவை
நிலையிலாமைநினைந்தனனின்னையென்
தலையினாற்றொழுவுந்தகுந்தன்மையோய். (௨அ)

ஆதலாலொன்றுதவுதலாற்றலேன்
யாதுசெய்வதென்றெண்ணியிருந்தனென்
வேதநன்மணிவேகடஞ்செய்தன்ன
தூதவென்னினிச்செய்திறஞ்சொல்லென்றாள். (௨௯)

எனக்களிக்கும்வரமெம்பிராட்டிநின்
மனக்களிக்குமற்றுன்னையம்மானவன்
தனக்களிக்கும்பணியினுந்தக்கதோ
புனக்களிக்குலமாமயில்போன்றுளாய். (௩௦)

எனவுரைத்துத்திரிசடையாளெம்மோய்
மனையினிற்சுடர்மாமுகமாட்சியாள்
தனையொழித்திவ்வரக்கியர்தங்களை
வினையினிற்சுடவேண்டுவென்யானென்றான். (௩௧)

உரையிலாவுரையுன்னையுரைத்துராய்
விரையவோடிவிழுங்குவமென்றுளார்
வரைசெய்மேனியைவள்ளுகிராற்பிளந்
திரைசெய்வேன்மறலிக்கினியென்னுமால். (௩௨)

குடல்குறைத்துக்குருதிகுடித்தவர்
உடன்முருக்கியிட்டுண்குவனென்றலும்
அடலரக்கியரன்னைநின்பாதமே
விடலமெய்ச்சரணென்றுவிளம்பலும். (௩௩)

அன்னையஞ்சன்மினஞ்சன்மினீரென
மன்னுமாருதிமாமுகநோக்கிநீவ
றென்னதீமையிவரிழைத்தாரவன்
சொன்னசொல்லினதல்லது தூய்மையோய். (௩௪)

யானிழைத்தவினையினிவ்விடர்
தானடுத்ததாயினுமன்பினோய்
கூனியிற்கொடியாரலரேயிவர்
போனவப்பொருள்போற்றலைபுக்தியோய். (௩௫)

34. மன்னன் மாருதி எனவும் பாடம்.

எனக்குநீயருளிவ்வரந்தீவினை
தனக்குவாழ்விடமாயசமுக்கியர்
மனக்குநோய்செயலென்றனண்மாமதி
தனக்குமாமறுத்தந்தமுகத்தினள். (கசு)

என்றபோதினிறைஞ்சினனெம்பிரான்
தன்றுணைப்பெருந்தேவிதயாவென
நின்றகாலைநெடியவன்வீடண
சென்றுதாநமதேவியைச்சீரொடும். (கஎ)

என்னுங்காலையிருளும்வெயிலுங்கார்
மின்னுங்காலையியற்கையவீடணன்
உன்னுங்காலக்கொணர்தியென்றோதவப்
பொன்னின்காற்றளிர்சூடினன்போந்துளான். (கஅ)

வேறு.

வேண்டிற்றுமுடிந்ததன்றேவேதியர்வேதனின்னைக்
காண்டற்குவிரும்புகின்றுனும்பருங்காணவந்தார்
பூண்டகக்கோலம்வல்லைபுனைந்தனைவருத்தம்போக்கி
ஈண்டுக்கொண்டணைதியென்றுனெமுந்தருளிறைவியென்றான். ()

யாணிவணிருந்ததன்மையிமையவர்குழுவுமெங்கள்
கோனுமம்முனிவர்தங்கள்கூட்டமுங்குலத்துக்கேற்ற
வானுயர்கற்பின்மாதரீட்டமுங்காண்டன்மாட்சி
மேனினைகோலங்கோடல்விழுமியதன்றுவீர. (சo)

என்றனளிறைவிகேட்டவிராக்கதர்க்கிறைவனீலக்
குன்றனதோளினன்றன்பணியினிற்குறிப்பிதென்றான்
நன்றெனநங்கைநேர்ந்தாளுயகக்கோலங்கொள்ளச்
சென்றனர்வானநாட்டுத்திலோத்தமைமுதலோர்சேர. (சக)

மேனகையரம்பைமற்றையுருப்பசிவேறுமுள்ள
வானகநாட்டுமாதர்யாருமஞ்சனத்துக்கேற்ற
நானநெய்யூட்டப்பட்டநவையிலகலவைதாங்கிப்
போனகந்துறந்தையன்மருங்குறநெருங்கிப்புக்கார். (சஉ)

காணியைப்பெண்மைக்கெல்லாங்கற்பினுக்கணியைப்பொற்பின்
ஆணியையமிழ்தின்வந்தவமிழ்தினையறத்தின்றாயைச்

42. போனகம் - உணவு.

சேனுயர்மறையையெல்லாமுறைசெய்தசெல்வனென்ன
வேணியையரம்பையெல்லவரன்முறைசுருக்கவிட்டாள். (சகூ)

பாகடர்ந்தமுதுபில்கும்பவளவாய்த்தரளப்பத்தி
சேகறவிளக்கினானந்தீட்டிமண்சேர்ந்தகாசை
வேகடஞ்செய்யுமாபோன்மஞ்சனவிதியின்வேதத்
தோகைமங்கலங்கள்பாடவாட்டினரும்பர்மாதர். (சச)

உருவிளைபவளவல்லிபானுரையுண்டதென்ன
மருவிளைகலவையூட்டிக்குங்குமமுலையினூட்டிக்
கருவிளைமலரின்காட்சிக்காசறுதூசுகாமன்
திருவிளையல்குற்கேற்பமேகலைதழுவச்சேர்த்தார். (சரு)

சந்திரன்றேவிமாரிற்றகையுறுதரளப்பைம்பூண்
இந்திரன்றேவிக்கேற்பவியைவனபூட்டியாணர்
சிந்துரப்பவளச்செவ்வாய்த்தேம்பசும்பாகுந்தீற்றி
மந்திரத்தயினிநீரால்வலஞ்செய்துகாப்புமிட்டார். (சசு)

மண்டிலமதியிஞெப்பண்மானிருந்தென்னமானம்
கொண்டனரேற்றிவானமடந்தையர்தொடர்ந்துகூட
மண்டிவானரருமோடவரக்கரும்புறஞ்சூழ்ந்தோட
அண்டர்நாயகன்பாலண்ணல்வீடணனருளிற்சென்றான். (சஎ)

வேறு.

இப்புறத்திமையவர்முனிவரேழையர்
துப்புறச்சிவந்தவாய்விஞ்சைத்தோகையர்
முப்புறத்துலகினுமெண்ணின்முற்றினோர்
ஒப்புறக்குவிந்தனரோகைகூறுவார். (சஅ)

அருங்குலக்கற்பினுக்கணியையண்மினார்
மருங்குபின்முன்செலவழியின்றென்னலாய்
நெருங்கினர்நெருங்குழிநிருதரோச்சலால்
கருங்கடன்முழக்கெனப்பிறந்தகம்பலை. (சகூ)

அவ்வழியிராமனுமலர்ந்ததாமரைச்
செவ்விவாண்முகங்கொடுசெயிர்த்துநோக்குறா
இவ்வொலியாவதென்றியம்பவிற்றெறுக்
கவ்வையின்முனிவரர்கழறினாரரோ. (ருo)

43. முறைசெய்தசெல்வன் - வேதவியாஸன். வரன்முறை சுகிர்த்து விட்டாள் என்றும் பாடம்.

46. சந்திரன் தேவியார் - நக்ஷத்திரங்கள்.

முனிவரர்வாசகங்கேட்புறுதமுன்
நனியிதழ்துடித்திடநகைத்துவீடணன்
தனையெழநோக்கிநீதகாதசெய்தியோ
புனிதநூல்கற்றுணர்புந்தியோவென்றான். (ருக)

கடுந்திறலமர்க்களங்காணுமாசையால்
நெடுந்திசைத்தேவருநின்றயாவரும்
அடைந்தனருவகையினடைகின்றார்களைக்
கடிந்திடயார்சொனார்கருதுநூல்வலாய். (ருஉ)

வேறு.

பரசுடைக்கடவுணேமிப்பண்ணவன்பதுமத்தண்ணல்
அரசுடைத்தெரிவைமாரையின்றியேயமைவதுண்டோ
கரைசெயற்கரியதேவரேனையோர்கரந்துகாண்பான்
விரசுறின்விலக்குவாரோவேறுளார்க்கென்கொல்வீர. (ருங)

ஆதலானரக்கர்கோவேயடுப்பதன்றுனக்குமின்னே
சாதுகைமாந்தர்தம்மைத்தடுப்பதென்றருளிச்செங்கண்
வேதநாயகன்றனிற்பவெய்துயிர்த்தலக்கணெய்திக்
கோதிலாமனனுமெய்புங்குலைந்தனன்குணங்கடேயோன். (ருச)

அருந்ததியனையநங்கையமர்க்களமணுகியாடற்
பருந்தொடுகழுகும்பேயும்பசிப்பிணிதீருமாறு
விருந்திடுவில்லின்செல்வன்விழாவணிவிரும்பிநோக்கிக்
கருந்தடங்கண்ணுநெஞ்சுங்களித்திடவினையசொன்னாள். (ருரு)

வேறு.

சீலமுங்காட்டியென்கணவன்சேவகக்
கோலமுங்காட்டியென்குலமுங்காட்டியிஞ்
ஞாலமுங்காட்டியகவிக்குநாளறுக்
காலமுங்காட்டுமேகொல்லென்கற்பென்றாள். (ருசு)

எச்சிலென்னுடலுயிரேகிற்றேயினி
நச்சிலையென்பதோர்நவையிலாளெதிர்
பச்சிலைவண்ணமும்பவளவாயுமாய்க்
கைச்சிலையேந்திநின்றதனைக்கண்ணுற்றாள். (ருஎ)

மானமீதரம்பையர்சூழவந்துளாள்
போனபேருயிரினைக்கண்டபொய்யுடல்

57. நவை - குற்றம்.

நானதுகவர்வுறுந்தன்மைத்தாமென
ஆனனங்காட்டுறவவனியெய்தினாள். (௫௮)

பிறப்பினுந்துணைவனைப்பிறவிப்பேரிடர்
துறப்பினுந்துணைவனைத்தொழுதுநானினி
மறப்பினுநன்றிதுமாறுவேறுவீழ்ந்
திறப்பினுநன்றெனவேக்கநீங்கினாள். (௫௯)

கற்பினுக்கரசினைப்பெண்மைக்காப்பினைப்
பொற்பினுக்கழகினைப்புகழின்வாழ்க்கையைத்
தற்பிரிந்தருள்புரிதருமம்போலியை
அற்பினத்தலைவனுமமையநோக்கினான். (௬௦)

சுணங்குறுதுணைமுலைமுன்பிற்றாங்கிய
அணங்குறுநெடுங்கணீராறுவார்வுற
வணங்கியமயிலினைக்கற்பின்வாழ்வினைப்
பணங்கிளரரவெனவெழுந்துபார்ப்புறா. (௬௧)

ஊண்டிறமுவந்தனையொழுக்கம்பாழ்பட
மாண்டிலைமுறைதிறம்பரக்கன்மாநகர்
ஆண்டுறைந்தடங்கினையச்சந்தீர்ந்திவண்
மீண்டதென்னினைவெனைவிரும்புமென்பதோ. (௬௨)

உன்னைமீட்பான்பொருட்டுவரிதூர்த்தொளிர்
மின்னைமீட்டுறுபடையரக்கர்வேரறப்
பின்னைமீட்டுறுபகைகடந்திலேன்பிழை
என்னைமீட்பான்பொருட்டிலங்கையெய்தினேன். (௬௩)

மருந்தினுமரியமன்னுயிரின்வான்றசை
அருந்தினையேநறவமையவுண்டியே
இருந்தனையேயினியெமக்குமேற்பன
விருந்துளவோவுரைவெம்மைநீங்கினாய். (௬௪)

கலத்தினிற்பிறந்தமாமணியிற்காந்துறு
நலத்தினிற்பிறந்ததுநடந்தநன்மைசால்
குலத்தினிற்பிறந்திலைகோளில்கீடம்போல்
நிலத்தினிற்பிறந்தமைநிரப்பினாயரோ. (௬௫)

---

58. ஆனனம் - முகம்.
65, கீடம் - புழு.

பெண்மையும்பெருமையும்பிறப்புங்கற்கெனும்
திண்மையுமொழுக்கமுந்தெளிவுஞ்சீர்மையும்
உண்மையுநீயெனுமொருத்திதோன்றலால்
வண்மையின்மன்னவன்புகழின்மாய்ந்ததால். (௬௬)

அடைப்பரைம்புலன்களையொழுக்கமாணியாய்ச்
சடைப்பராநதகைந்தோர்தகைவின்மாதவம்
படைப்பர்வந்திடையொருபழிவந்தாலது
துடைப்பர்தம்முயிரொடுங்குலத்திற்றோகைமார். (௬௭)

யாதியானியப்புவதுணர்வையீடறச்
சேதியாநின்றதுன்னொழுக்கஞ்செய்வது
சாதியாலன்றெனிற்றக்கதோர்நெறி
போதியாலென்றனன்புலவர்புந்தியான். (௬௮)

முனைவருமமரருமற்றுமுற்றிய
நினைவருமகளிருநிருதரென்றுளார்
எனைவரும்வானரத்தெவரும்வேறுளார்
அனைவரும்வாய்திறந்தரற்றினாரரோ. (௬௯)

கண்ணினையுதிரமும்புனலுங்கான்றுக
மண்ணினைநோக்கியமலரின்வைகுவாள்
புண்ணினைக்கோலுறுத்தனையபொம்மலால்
உண்ணினைனைப்போவிநின்றுயிர்ப்புவீங்கினாள். (௭௦)

பருந்தடர்சுரத்திடைப்பருகுநீர்நசை
வருந்தருந்துயரினன்மாளலுற்றமான்
இருந்தடங்கண்டதினெய்துறுவகைப்
பெருந்தடையுற்றெனப்பேதுற்றாளரோ. (௭௧)

உற்றுநின்றுலகினைநோக்கியோரடி
முற்றுறுநெடுங்கணீராலிமொய்த்துக
இற்றதுபோலும்யானிருந்துபெற்றபே
றுற்றதாலென்றவயின்றென்றோதுவாள். (௭௨)

மாருதிவந்தெனைக்கண்டுவள்ளனீ
சாருதியீண்டெனச்சமையச்சொல்லினான்
யாரினுமேன்மையானிசைத்ததில்லையோ
சோருமென்னிலையவன்றூதுமல்லனோ. (௭௩)

67. துடைப்பர் - போக்குவர். 68. சாதி - சாகக்கடவாய்.

எத்தவமென்னலமென்றன்கற்புநான்
இத்தனைகாலமுமுழந்தவிவ்வெலாம்
பித்தெனலாயவம்பிழைத்ததாலன்றே
உத்தமநீமனத்துணர்ந்திலாமையால். (எச)

பார்க்கெலாம்பத்தினிபதுமத்தானுக்கும்
பேர்க்கலாஞ்சிந்தையளல்லள்பேதையேன்
ஆர்க்கெலாங்கண்ணவனன்றென்றாலது
தீர்க்கலாந்தகையதுதெய்வந்தேறுமோ. (எரு)

பங்கயத்தொருவனும்விடையின்பாகனும்
சங்குகைத்தாங்கியதருமமூர்த்தியும்
அங்கையினெல்லிபோலனைத்துநோக்கினும்
மங்கையர்மனநிலையுணரவல்லரோ. (எசு)

ஆதலிற்புறத்தினியாருக்காகவென்
கோதறுதவத்தினைக்கூறிக்காட்டுகேன்
சாதலிற்சிறந்ததொன்றில்லைத்தக்கதே
வேதநின்பணியதுவிதியுமென்றனன். (எஎ)

இளையவன்றனையழைத்திடுதீயென
வளையொலிமுன்கையாள்வாயிற்கூறினாள்
உளைவுறுமனத்தவனிலகம்யாவுக்கும்
களைகணைத்தொழுதவன்கண்ணிற்கூறினான். (எஅ)

ஏங்கியபொருமலினிழிகணீரினன்
வாங்கியவுயிரினனனையமைந்தனும்
ஆங்கெரிவிதிமுறையமைவித்தானதன்
பாங்குறநடந்தனள்பதுமப்போதினாள். (எகூ)

தீயிடையருகுறச்சென்றுதேவர்க்கும்
தாய்தனிகுறுகலுந்தரிக்கிலாமையால்
வாய்திறந்தரற்றினமறைகணான்கொடும்
ஓய்வினல்லறமுமற்றுயிர்கள்யாவையும். (அ0)

வலம்வருமளவையின்மறுகிவான்முதல்
உலகமுமுயிர்களுமோலமிட்டன
அலம்வராவுற்றனவலறியையவிச்
சலமிதுதக்கிலதென்னச்சாற்றின. (அக)

---

75. ஆர்க்கெலாம் கண்ணவன - எல்லார்க்குங் கண்ணானவன்.
77. பணி - கட்டளை. 79. பதுமம் - தாமரை.

இந்திரன்றேவியர்முதலவேழையர்
அந்தரவானினின்றரற்றுகின்றனர்
செந்தளிர்க்கைகளாற்சேயரிப்பெருஞ்
சுந்தரக்கண்களையெற்றித்துள்ளினார். (௮௨)

நடுங்கினர்நான்முகன்முதலநாயகர்
படங்குறைந்ததுபடிசுமந்தபாம்புவாய்
விடம்பிறந்துளதெனவெதும்பிற்றாலுல
கிடந்திரிந்தனசுடர்க்கடல்களேங்கின. (௮௩)

கனத்தினாற்கடந்தபூண்முலையகைவளை
மனத்தினால்வாக்கினான்மறுவுற்றேனெனின்
சினத்தினாற்சுடுதியாற்றீச்செல்வாவென்றாள்
வனத்துழாய்க்கணவற்கும்வணக்கம்போக்கினாள். (௮௪)

நீந்தரும்புனலிடைநிவந்ததாமரை
ஏய்ந்ததன்கோயிலையெய்துவாளெனப்
பாய்ந்தனள்பாய்தலும்பாலின்பஞ்செனத்
தீய்ந்ததவ்வெரியவள்கற்பின்றீயினால். (௮௫)

அழுந்தினணங்கைமற்றங்கையாற்சுமந்
தெழுந்தனனங்கிவெந்தெரிபுமேனியான்
தொழுங்கரத்துணையினன்சுருதிஞானத்தின்
கொழுந்திணைப்பூசலிட்டரற்றுங்கொள்கையான். (௮௬)

ஊடினசீற்றத்தாலுதித்தவேர்களும்
வாடினவில்லையாலுணர்த்துமாறுண்டோ
பாடியவண்டொடும்பனித்ததேனொடும்
சூடினமலர்கணீர்தோய்ந்தபோன்றவால். (௮௭)

திரிந்தனவுலகமுஞ்செவ்வைநின்றன
பரிந்தவருயிரெலாம்பயந்தவிர்ந்தன
அருந்ததிமுதலியமகளிராடுதல்
புரிந்தனர்நாணமும்பொறையுநீங்கினார். (௮௮)

கனிந்துயர்கற்பெனுங்கடவுட்டீயினால்
நினைந்திலையென்வலிநீக்கினாயென
அனிந்தனையங்கிநீயயர்கிலென்னையும்
முனிந்தனையாமெனமுறையிட்டானரோ. (௮௯)

---

82. ஏழையர் - பெண்கள். 84. வனம் - காடு. 89. அநிந்தன் - நிந்திக்கப் படாதவன்.

இன்னதோர்காலையினிராமன்யாரையீ
என்னைநீயியம்பியதெரியுட்டோன்றியிப்
புன்மைசாலொருத்தியைச்சுடாதுபோற்றினுய்
அன்னதார்சொல்லவீதறைதியாலென்றான். (௯௦)

அங்கியானென்னையிவ்வன்னைகற்பெனும்
பொங்குவெந்தீச்சுடப்பொறுக்கிலாமையால்
இங்கணைந்தேனுறுமியற்கைநோக்கியும்
சங்கியாநிற்றியோவெவர்க்குஞ்சான்றுளாய். (௯௧)

வேட்பதுமங்கையர்விலங்கினுரெனின்
கேட்பதும்பல்பொருட்கையங்கேடற
மீட்பதுமென்வயினென்னுமெய்ப்பொருள்
வாட்பெருந்தோளினுய்மறைகள்சொல்லுமால். (௯௨)

ஐயுறுபொருள்களையாசின்மாசொரீஇக்
கையுறுநெல்லியின்கனியிற்காட்டுமென்
மெய்யுறுகட்டுரைகேட்டுமீட்டியோ
பொய்யறுமாருதியுரையும்போற்றலாய். (௯௩)

தேவருமுனிவருந்திரிவநிற்பவும்
மூவகையுலகமுங்கண்கண்மோதிநின்
றேவெனல்கேட்கிலையறத்தைநீக்கிவே
றேவமென்றொருபொருள்யாண்டுக்கொண்டியோ. (௯௪)

பெய்யுமேமழைபுவிபிளப்பதன்றியே
செய்யுமேபொறையறநெறியிற்செல்லுமே
உய்யுமேயுலகிவளுணர்வுசீறினல்
வையுமேன்மலர்மிசையயனுமாயுமே. (௯௫)

பாடுறுபன்மொழியினையபண்ணிநின்
றாடுறுதேவரோடுலகமார்த்தெழச்
சூடுறுமேனியவவரிதோகையை
மாடுறக்கொணர்ந்தனன்வள்ளல்கூறுவான். (௯௬)

அழிப்பிலசான்றுநீயுலகுக்காதலான்
இழிப்பிலசொல்லிநீயிவளையாதுமோர்

90. புன்மை - அற்பம்.
93. கட்டுரை - சத்தியமொழி.
96. அரி - அந்த அக்னிதேவன்.

பழிப்பிலனென்றனைபழியுமின்றினிக்
கழிப்பிலனென்றனன்கருணையுள்ளத்தான். (௯௭)

வேறு.

உணர்த்துவாயுண்மையொழிவின்றுகாலம்வந்துளதால்
புணர்த்துமாயையிற்பொதுவுறநின்றவைபுணரா
இணர்த்துழாய்த்தொங்கலிராமற்கென்றிமையவரிசைப்பத்
தணப்பிருமறைச்சதுமுகனுரைசெயச்சமைந்தான். (௯௮)

மன்னர்தொல்குலத்தவரினத்துணையொருமனிதன்
என்னவுன்னலையுன்னைநீயிராமகேளிதனைச்
சொன்னநான்மறைத்துணிவினிற்றுணிந்தமெய்த்துணிவு
நின்னலாதில்லைநின்னில்வேறுளதிலைநெடியோய். (௯௯)

பகுதியென்றுளதியாதினும்பழைபதுபயந்த
விகுதியால்வந்தவிளைவுமற்றதற்குமேனின்ற
புகுதியாவர்க்குமரியவப்புருடனுநீயிம்
மிகுதியுன்பெருமாயையினால்வந்தவீக்கம். (௧௦௦)

முன்புபின்பிருபுடையெனுங்குணிப்பருமுறைமைத்
தன்பெருந்தன்மைதான்றெரிமறைகளின்றலைகள்
மன்பெரும்பரமார்த்தமென்றுரைக்கின்றமாற்றம்
அன்பநின்னையல்லான்மற்றிங்கியாரையுமறையா. (௧௦௧)

எனக்குமெண்வகையொருவற்குமிமையவர்க்கிறைவன்
தனக்கும்பல்பெருமுனிவர்க்குமுயிருடன்றழீஇய
அனைத்தினுக்குநீயேபரமென்பதையறிந்தார்
வினைத்துவக்குடைவீட்டருந்தனைநின்றுமீள்வார். (௧௦௨)

என்னைத்தான்முதலாகியவுருவங்களெவையும்
முன்னைத்தாய்தந்தையெனும்பெருமாயையின்மூழ்கித்
தன்னைத்தானறியாமையிற்சலிப்பவச்சலந்தீர்ந்
துன்னைத்தாதையென்றுணர்குவமுத்திவீடுறுவ. (௧௦௩)

ஐயஞ்சாகியதத்துவந்தெரிந்தறிந்தவற்றின்
மெய்யெஞ்சாவகைமேனின்றநினக்குமேல்யாதும்
பொய்யெஞ்சாவிலதென்னுமீதருமறைபுகலும்
வையஞ்சான்றினிச்சான்றுக்குஞ்சான்றிலைவழக்கால். (௧௦௪)

---

97. கழிப்பிலன் - நீக்கத்தக்கவன் அல்லன்.

அளவையாலளந் தாமன்றென்றறிவுறுமமைதி
உளவையாவையுமுனக்கில்லையுபநிடத்துனது
களவையாய்ந்துறத்தெளிந்திலதாயினுங்கண்ணால்
துளவையாய்முடியாயுளைநீயெனத்துணியும். (௧0௫)

கரணமொன்றுளதுன்னைவந்தறிவுகாணுமே
அரணமல்லவர்க்கிவைகடந்தறிவரிதாக
மரணந்தோற்றமென்றிவற்றிடைமயங்குபவவற்றுன்
சரணமல்லதோர்சரணில்லையன்னவைதவிர்ப்பான். (௧0௬)

தோற்றமென்பதொன்றுனக்கில்லைநின்கணேதோற்றும்
ஆற்றல்சான்முதற்பகுதிமற்றதனுளாம்பண்பால்
காற்றைமுன்னுடைப்பூதங்களவைசென்றுகடைக்கால்
வீற்றுவீற்றுற்றுவீவுறுநீயென்றும்விளிவாய். (௧0௭)

மின்னைக்காட்டுதல்போல்வந்துவிளியுமெய்புலகம்
தன்னைக்காட்டவுந்தருமத்தைநாட்டவுந்தனியே
என்னைக்காட்டுதியிறுதியுங்காட்டுதியெனக்கு
முன்னைக்காட்டிலையொளிக்கினுமிலைமறையுரையால். (௧0௮)

என்னுருக்கொடிவ்வுலகினையீனுதியிடையே
உன்னுருக்கொடுபுகுந்துநின்றோம்புதியுமையோன்
தன்னுருக்கொடுதுடைத்திமற்றிதுதனியருக்கன்
முன்னுருக்கொடுபகற்செய்யுந்தாத்ததுமுதலோய். (௧0௯)

திருக்குவான்மலிசெல்வத்துச்செருக்குவேந்திறத்துத்
தருக்குமாய்வறத்தானவரரக்கர்வெஞ்சமரில்
இரிக்கமாழ்கிநொந்துனைப்புகல்யாம்புகவியையாக்
கருக்குளாய்வந்துதோற்றுதியீங்கிதுகடனே. (௧௧0)

ஓங்காரப்பொருடேருவோர்தாமுன்னையுணர்வோர்
ஓங்காரப்பொருளொன்றுணர்ந்திருவினையுகுப்போர்
ஓங்காரப்பொருளாமன்றென்றூழிசென்றுலும்
ஓங்காரப்பொருளேபொருளென்கிலாவுறவோர். (௧௧௧)

இனையதாகவினெம்மைமூன்றுலகையுமீன்றிம்
மனையின்மாட்சியைவளர்த்தவெம்மோயினைவாளா
முனையலென்றதுமுடித்தனன்முந்துநீர்முளைத்த
சினையின்பந்தமும்பகுதிகளனைத்தையுஞ்செய்தோன். (௧௧௨)

---

107. விளியாய் - அழியாய்.
112. முனையல் - முனியாதே. சினையின் பந்தம் - அண்டத்தொகுதி.

என்னுமாத்திரத்தேறமர்கடவுளுமிசைத்தான்
உன்னைநீயொன்றுமுணர்ந்திலைபோலுமாலுரவோய்
முன்னையாதியாமூர்த்திநீமூவகையுலகின்
அன்னைசீதையாமாதுநின்மார்பின்வந்தமைந்தாள். (௧௧௩)

துறக்குந்தன்மையளல்லளாற்றொல்லையெவ்வுலகம்
பிறக்கும்பொன்வயிற்றன்னையிப்பெய்வளைபிழைக்கின்
இறக்கும்பல்லுயிரிராமனீயிவடிறத்திகழ்ச்சி
மறக்குந்தன்மையதென்றனன்வரதற்கும்வரதன். (௧௧௪)

பின்னுநோக்கினன்பெருந்தகைமுன்புதற்பிரிந்த
இன்னலாலுயிர்துறந்திருந்துறக்கத்துளிருந்த
மன்னனாங்குவற்சென்றுநீகண்டனைவணங்க
முன்னைவான்றுயர்நீக்குதிமொய்ம்பினோயென்றான். (௧௧௫)

ஆதியான்பணியருள்பெற்றவரசருக்கரசன்
காதல்மைந்தனைக்காணியவுவந்ததோர்கருத்தால்
பூதலத்திடைப்புக்கனன்புகுதலும்பொருவில்
வேதவேத்தனுமவன்மலர்த்தாண்மிசைவீழ்ந்தான். (௧௧௬)

வீழ்ந்தமைந்தனையெடுத்துத்தன்விலங்கலாகத்தின்
ஆழ்ந்தழுந்திடத்தழுவித்தன்கண்ணினீராட்டி
வாழ்ந்தசிந்தையின்மனங்களுங்களிப்புறமன்னன்
போழ்ந்ததுன்பங்கள்புறப்படநின்றிவைபுகன்றான். (௧௧௭)

அன்றுகேகயன்மகள்கொண்டவரமென்னுமயில்வேல்
இன்றுகாறுமென்னிதயத்தினிடைநின்றதென்னைக்
கொன்றுநீங்கலதிப்பொழுதகன்றதுன்குலப்பூண்
மன்றலாகமாங்காந்தமாமணியின்றுவாங்க. (௧௧௮)

மைந்தரைப்பெற்றுவானுயர்தோற்றத்துமலர்ந்தார்
சுந்தரப்பெருந்தோளிறையென்றுனைத்தாளின்
பைந்துகட்களுமொக்கிலராமெனப்படைத்தாய்
உய்ந்தவர்க்கருந்துறக்கமும்புகழும்பெற்றுயர்ந்தேன். (௧௧௯)

---

113. ஏறமர்கடவுள் - சிவன்.
114. வரதற்கும்வரதன் - சிவபெருமான்.
116. வேதவேத்தன் - இராமன்.

பண்டுநான்மறைமுழுங்கேதவருமுனிவரும்பாராய்
கண்டுகண்டெனைக்கைத்தலங்குவிக்கின்றகாட்சி
புண்டரீகத்துப்புராதனன்றன்னொடும்பொருந்தி
அண்டமூலத்தொராசனத்திருத்தினையழக. (௧௨௦)

என்றுமைந்தனையெடுத்தெடுத்திறுகுறத்தழுவிக்
குன்றுபோன்றுளதோளிருன்சீதையைக்குறுகத்
தன்றனைக்கழல்வணங்கலுங்கருணையாற்றழுவி
நின்றுமற்றிவைநிகழ்த்தினனிகழ்த்தரும்புகழோன். (௧௨௧)

நங்கைமற்றுநின்கற்பினையுலகுக்குநாட்ட
அங்கிபுக்கிடென்றுணர்த்திபவதுமனத்தடையேல்
சங்கையுற்றவர்பெறுவதுமுண்டதுசாதம்
கங்கைநாடுடைக்கணவனைமுனிவுறக்கருதேல். (௧௨௨)

பொன்னைத்தீயிடைப்பெய்தலப்பொன்னுடைத்தூய்மை
தன்னைக்காட்டுதற்கென்பதுமனக்கொளதகுதி
உன்னைக்காட்டினன்கற்பினுக்கரசியென்றுலகில்
பின்னைக்காட்டுதற்கரியதென்றெண்ணியிப்பெரியோன். (௧௨௩)

பெண்பிறந்தவாருந்ததியேமுதற்பெருமைப்
பண்பிறந்தவர்க்கருங்கலமாகியபாவாய்
மண்பிறந்தகமுனக்குநீவானின்றும்வந்தாய்
எண்பிறந்தநின்குணங்களுக்கினியிழுக்கிலையால். (௧௨௪)

என்னச்சொல்லியவ்வேந்திழைதிருமனத்தியாதும்
உன்னச்செய்யலோர்முனிவின்மைமனக்கொளாவுவந்தான்
பின்னைச்செம்மலவ்விளவலையுள்ளன்புபிணிப்பத்
தன்னைத்தானெனத்தழுவினன்கண்கணீர்ததும்ப. (௧௨௫)

கண்ணீர்ப்பெருந்தாரைமற்றவன்சடைக்கற்றை
மண்ணீத்தமொத்திழிதரத்தழீஇநின்றுமைந்த
எண்ணினீக்கரும்பிறவியுமென்னெஞ்சினிறந்த
புண்ணுநீக்கினையுமையனைத்தொடர்ந்துடன்போந்தாய். (௧௨௬)

புரந்தரன்பெரும்பகைஞனைப்பொராவென்றவுன்றன்
பரம்புயர்ந்ததோளாற்றலேதேவரும்பலரும்
நிரந்தரம்புகல்கின்றதுநீயிந்தவுலகின்
அரந்தையாம்பகைதுடைத்தறநிறுத்தினையைய (௧௨௭)

122. சாதம் - சத்தியம்.

ஒன்றுபின்னருமிராமனையானுனக்கீவ
தொன்றுகூறுதிரியர்குணத்தோயெனவுனையான்
சென்றுவானிடைக்கண்டிடர்தீர்வனென்றிருந்தேன்
இன்றுகாணப்பெற்றேனினிப்பெறுவதென்னென்றான். (கஉஅ)

ஆயினுமுனக்கமைந்ததொன்றுரையெனவழகன்
தீயளென்றுநீதுறந்தவென்றெய்வமுமகனும்
தாயுந்தம்பியுமாம்வரந்தருகெனத்தாழ்ந்தான்
வாய்திறந்தெழுந்தார்த்தனவுயிரெலாம்வழுத்தி. (கஉகூ)

வரதகேளெனத்தயரதனுரைசெய்வான்மறுவில்
பரதனன்னதுபெறுகதான்முடியினைப்பறித்திவ்
விரதவேடமற்றுதவியபாவிமேல்விளிவு
சரதநீங்கலதாமென்றான்றழீஇயகைதளர. (கஙo)

ஊன்பிழைக்கிலாவுயிர்நெடிதளிக்குநீளரசை
வான்பிழைக்கிதுமுதலெனுதாள்வுறமதித்து
யான்பிழைத்ததல்லாலென்னையீன்றவெம்பிராட்டி
தான்பிழைத்ததுண்டோவென்றானவன்சலந்தவிர்ந்தான். (கஙக)

எவ்வரங்களுங்கடந்தவனப்பொருளிசைப்பத்
தெவ்வரம்பறுகானிடைச்செலுத்தினுட்கீந்த
அவ்வரங்களுமிரண்டவையாற்றினுற்கீந்த
இவ்வரங்களுமிரண்டென்றார்தேவருமிரங்கி. (கஙஉ)

வரமிரண்டளித்தழகனையிளவலைமலர்மேல்
விரவுபொன்னினைமண்ணிடைநிறுத்திவிண்ணிடையே
உரவுமானமீதேகினனும்பருமுலகும்
பரவுமெய்யினுக்குயிரளித்துறுபுகழ்படைத்தோன். (கஙங)

கோட்டுவார்சிலைக்குரிசிலையமரர்தங்குழாங்கல்
மீட்டுநோக்குறுவீரநீவேண்டுவவரங்கள்
கேட்டியாலெனவர்க்கர்கள்கிளப்பருஞ்செருவில்
வீட்டமாண்டுளகுரங்கெலாமெழுகெனவிளம்பி. (கஙச)

பின்னுமோர்வரம்வானரப்பெருங்கடல்பெயர்ந்து
மன்னுபல்வனமால்வரைக்குலங்கள்மற்றின்ன

---

130. விளிவு - கோபம்.
131. சலம் - கோபம்.
133. உரவுமானம் - உலவும்விமானம்.

துன்னிடங்கள்காய்கனிகிழங்கோடுதேன்றுற்ற
இன்னுணீருளவாகெனவிளம்பிடுகென்றான். (௧௩௫)

வரந்தரும்முதன்மழுவலான்முனிவரர்வானோர்
புரந்தராதிமற்றேனையோர்தனித்தனிப்புகழ்ந்தாங்
கரந்தைவெம்பிறப்பறுக்குநாயகநினதருளால்
குரங்கினம்பெறுகென்றெனருள்ளமுங்குளிர்ப்பார். (௧௩௬)

முந்தைநாண்முதற்கடைமுறையளவவயுமுடிந்த
அந்தவானரமடங்கலுமெழுந்துடனார்த்துச்
சிந்தையோடுகண்களிப்புறச்செருவெலாநினையா
வந்துதாமரைக்கண்ணனைவணங்கினமகிழ்ந்து. (௧௩௭)

கும்பகன்னனேடிந்திரசித்துவெங்குலப்போர்
வெம்புவெஞ்சினத்திராவணன்முதலியவீரர்
அம்பின்மாண்டுளவானரமங்குவந்தார்ப்ப
உம்பர்யாவருமிராமனைப்பார்த்திவையுரைத்தார். (௧௩௮)

இடையுவாவினிற்சுவேலம்வந்திறுத்தெயிலிலங்கைப்
புடையவாவுறச்சேனையைவளைப்புறப்போக்கிப்
படையவாவுறுமரக்கர்தங்குலமுற்றும்படுத்துக்
கடையுவாவினிலிராவணன்றன்னையுங்கட்டு. (௧௩௯)

வஞ்சரில்லையிவ்வண்டத்தினெனும்படிமடித்த
கஞ்சநாண்மலர்க்கையினுயன்னைசொற்காரும்
அஞ்சொடைஞ்சுநான்கென்றெனுமாண்டுபோய்முடிந்த
பஞ்சமிப்பெயர்படைத்துளதிதியின்றுபயந்த. (௧௪௦)

இன்றுசென்றுநீபரதனையெய்தலையென்னின்
பொன்றுமாலவனெரியிடையன்னதுபோக்க
வென்றிவீரநீபோதியாலென்பதுவிளம்பா
நின்றதேவர்கணீங்கினரிராகவனினைந்தான். (௧௪௧)

ஆண்டுபத்தொருநாலுமின்றோடுமாயின்
மாண்டதாமினியென்குலம்பரதனேமாயின்
ஈண்டுபோகவோரூர்தியுண்டோவென்னவின்றே
தூண்டுமானமுண்டென்றடல்வீடணன்றொழுதான். (௧௪௨)

---

139. இடையுவா - பூரணை.
142. தனதனில் - குபேரனிடமிருந்து.

வாங்கினானிருநிதியொடுதனதனில்வள்ளால்
ஓங்குமால்வெள்ளமெழுபஃதேறினுமொல்கா
தீங்குளாரெலாமிவருவதிவரிநீயினிது
பூங்குலாநகர்புகுதியிஞ்ஞான்றெனப்புகலா. (கசங)

இயக்கர்வேந்தனுக்கருமறைக்கிழவனன்றீந்த
துயக்கிலாதவர்மனமெனத்தூயதுசுரர்கள்
வியக்கவான்செலும்புட்பகவிமானமுண்டென்றே
மயக்கிலான்சொலக்கொணருதிவல்லையினென்றான். (கசச)

அண்டகோடிகளநந்தமொத்தாயிரமருக்கர்
விண்டதாமெனவிசும்பிடைத்திசையெலாம்விளங்கக்
கண்டையாயிரகோடிகளொலிப்புறக்கஞலக்
கொண்டணைந்தனனொடியினிலரக்கர்தங்கோமான். (கசரு)

அனையபுட்பகவிமானம்வந்தவனியையணுக
இனியசிந்தனையிராகவனுவகையோடினிநம்
வினையமுற்றியதென்றுகொண்டெழுந்தனன்விண்ணோர்
புனைமலர்ச்சொரிந்தார்த்தனராசிகள்புகன்றே. (கசசு)

வணங்குநுண்ணிடைத்திரிசடைவணங்கவான்கற்பிற்
கிணங்கரின்மையாளேக்கியோரிடரின்றியிலங்கைக்
கணங்குதானெனவிருத்தியென்றையன்மாடணைநதாள்
மணங்கொள்வேலிளங்கோளரிமானமீப்படர்ந்தான். (கசஎ)

அண்டமுண்டவன்மணியணியுதரமொத்தனிலன்
சண்டவேகமுங்குறைதரநினைவெனுந்தரத்தாய்
விண்டலந்திகழ்விமானப்புட்பகமெனுமதின்மேற்
கொண்டகொண்டறன்றுணைவரைப்பார்த்திவைகுணித்தான். ()

வீடணன்றனையன்புறநோக்குறுவிமலன்
தோடணைந்ததார்மவுலியாய்சொல்வதொன்றுளதுன்
மாடணைந்தவர்க்கின்பமேவழங்கிநீளரசின்
நாடணைந்தவர்புகழ்ந்திடவீற்றிருநலத்தால். (கசகூ)

நீதியாறெனத்தெரிவுறுநிலைமைபெற்றுடையாய்
ஆதிநான்மறைக்கிழவனின்குலமெனவமைந்தாய்

144. மறைக்கிழவன் - பிரமன். இயக்கர்வேந்தன் - குபேரன்.
148. அனிலன் - வாயுதேவன்.

ஏதிலார்தொழுமிலங்கைமாநகரினுள்ளினிநீ
போதியாலெனப்புகன்றனனுன்மறைபுகன்றான். (௧௫௦)

சுக்கிரீவநின்றோளுடைவன்மையாற்றசந்தொ
கக்கிரீவனைத்தடிந்துவெம்படையினாலசந்த
மிக்கவானரச்சேனையினிளைப்பறமீண்டோர்ப்
புக்குவாழ்கெனப்புகன்றனனீறிலாப்புகழோன். (௧௫௧)

வாலிசேயினைச்சாம்பனைப்பனசனைவயப்போர்
நீலனாதியநெடும்படைத்தலைவரைநெடிய
காலின்வேலையைத்தாவிமீண்டருளியகருணை
போலும்வீரனைநோக்கிமற்றிம்மொழிபுகன்றான். (௧௫௨)

ஐயனிம்மொழிபுகன்றிடத்துணுக்கமோடவர்கள்
மெய்யுமாவியுங்குலைதரவிழிகணீர்ததும்பச்
செய்யதாமரைத்தாளிணைமுடியுறச்சேர்த்தி
உய்கிலேநின்னைநீங்கிெனன்றினையனவுரைத்தார். (௧௫௩)

பாரமாமதிதயோத்தியினெய்திநின்பைம்பொன்
ஆரமாமுடிக்கோலமுஞ்செவ்வியுமழகும்
சோர்விலாதியாங்காண்குறுமளவையுந்தொடர்ந்து
பேரவேயருளென்றனருள்ளன்புபிணிப்பார். (௧௫௪)

அன்பினாலவர்மொழிந்தவாசகங்களுமவர்கள்
துன்பமெய்தியநடுக்கமுநோக்கிநீர்துளங்கல்
முன்புநானினைந்திருந்தசப்பரிசுநும்முயற்சி
பின்புகாணுமாறுரைத்ததென்றுரைத்தனன்பெரியோன். (௧௫௫)

ஐயன்வாசகங்கேட்டலுமரிகுலத்தரசும்
மொய்கொள்சேனையுமிலங்கையர்வேந்தனுமுதலோர்
வையமாளுடைநாயகன்மலர்ச்சரண்வணங்கி
மெய்யினோடுருந்துறக்கமுற்றாரெனவியந்தார். (௧௫௬)

அனையதாகியசேனையோடரசனையனிலன்
தனையனாதியாம்படைப்பெருந்தலைவர்கடம்மை
வனையும்வார்கழலிலங்கையர்மன்னனைவந்திங்
கினிதினேறுமின்விமானமென்றிராகவனிசைந்தான். (௧௫௭)

சொன்னவாசகம்பிற்படச்சூரியன்மகனும்
மன்னுவீரருமெழுபதுவெள்ளவானரரும்

151. சக்தொகக்கிரீவன் - இராவணன்.

கன்னிமாமதிவிலங்கைமன்ருேடுகடற்படையும
துன்னிஞர்நெடும்புட்பகமிசையொருசூழல். (கருஅ)

பத்துநாலெனவடுக்கியவுலகங்கள்பலவின்
மெத்தியோனிகளேறினும்வெளியிடமிகுமால்
முத்தரானவரிதனிலேமொழிகுவதல்லால்
இத்தராதலத்தியம்புதற்குரியவர்யாரே. (கருகூ)

வேறு.

எழுபதுவெள்ளத்தோருமிரவிகான்முளையுமெண்ணின்
வழுவிலாவிலங்கைவேந்தும்வான்பெரும்படையுஞ்சூழத்
தழுவுசீரிளையகோவுஞ்சனகன்மாமயிலும்போற்ற
விழுமியகுணத்துவீரன்விளங்கினன்விமானத்தும்பர். (கசுO)

அண்டமேபோன்றதையன்புட்பகமண்டத்தும்பர்
எண்டருங்குணங்களின்றிமுதலிடையீறின்றுகிப்
பண்டைநான்மறைக்குமெட்டாப்பரஞ்சுடர்பொலிவதேபோல்
புண்டரீகக்கண்வென்றிப்புரவலன்பொலிந்தான்மன்ளே. (கசுக)

தேனுடையலங்கன்மோலிச்செங்கதிர்ச்செல்வன்சேயும்
மீனுடையகழிவேலையிலங்கையர்வேந்தும்வெற்றித்
தானையும்பிறருமற்றைப்படைப்பெருந்தலைவர்தாமும்
மானுடவடிவங்கொண்டார்வள்ளறன்வாய்மைதன்ஞல். (கசுஉ)

குடதிசைமறைந்தபின்னர்க்குணதிசையுதயஞ்செய்வான்
வடதிசையயனமுன்னிவருவதேகடுப்பமானம்
தடையொருசிறிதின்றுகித்தாவிவான்படரும்வேலே
படையமைவிழியாட்கையணிளையனபகரலுற்றுன். (கசுங)

இலங்கையைவலஞ்செய்தேகவெனநினைந்திடுமுன்மானம்
வலங்கிளர்கீழைவாயில்வரப்பிரகத்தனீலன்
நலங்கிளர்கையின்மாண்டதிவணெனநமன்றன்வாயில்
கலந்திடவீங்குக்கண்டாய்சுபாரிசற்கட்டதென்றுன். (கசுச)

குடதிசைவாயில்வேகக்குன்றரிந்தவனைவென்ற
விடநிகர்மேகநாதனிளவலால்வீழ்ந்ததென்முன்

---

159. மெத்துயோனிகள் - மிகுதியாயுள்ள ஜீவராசிகள் முத்தர் - வால்மீகிமுன்வரைப்போன்றமகா, ஞானிகள்.

163. வடதிசை அயனம் - உத்தராயணம்.

164. நமன்றன்வாயில் - தெற்குவாயில்,

வடதிசைவாயின்மேலவ்விராவணன்மவுலிபத்தும்
உடலமுமிழந்ததிங்கென்றுணர்த்திவேறுரைக்கலுற்றான். (௧௬௫)

நன்னுதனின்னைநீங்கிநாள்பலகழிந்தபின்றை
மன்னவனிரவிமைந்தன்வான்றுணையாகநட்ட
பின்னைமாருதிவந்துன்னைப்பேதமுத்துனதுபெற்றி
சொன்னபின்வானரேசர்தொகுத்ததிச்சேதுகண்டாய். (௧௬௬)

மற்றிதன்றூய்மையெண்ணின்மலரயன்றனக்குமெட்டா
பொற்றொடித்தெரிவையாளேனன்புகலுகேன்கேட்டியன்பால்
பெற்றதாய்தந்தையோடுதேசிகர்ப்பிழைத்துச்சூழ்ந்த
சுற்றமுங்கெடுத்துளோருமெதிர்தரிற்சுரர்களாவார். (௧௬௭)

இந்திரற்கஞ்சிமேனாளிருங்கடல்புக்குநீங்காக்
கந்தரசயிலந்தன்னுட்கண்டவர்வினைகடீர்க்கும்
கந்தமாதனமென்றோதுங்கிரியிவண்கிடப்பகண்டாய்
பைந்தொடியடைத்தசேதுப்பாவனமாவதென்றான். (௧௬௮)

கங்கையோடியமுனைகோதாவிரியொடுகளிந்தைசூழ்ந்த
பொங்குநீர்நதிகள்யாவும்படிதலாற்புன்மைபோகா
சங்கெறிதரங்கவேலைதட்டவிச்சேதுவென்னும்
இங்கிதினெதிர்ந்தோர்புன்மையாவையுநீங்குமன்றே. (௧௬௯)

ஆவினைக்குரவரோடுமருமறைமுனிவர்தம்மைப்
பாவையர்குழுவையின்சொற்பாலரைப்பயந்துதம்மின்
மேவினவவரைச்செற்றோர்விரிகடற்சேதுவந்து
தோய்வரேலவர்கள்கண்டாய்சுரர்தொழுஞ்சுரர்களாவார். (௧௭௦)

மரக்கலமியங்கவேண்டிவரிசிலைக்குதையாற்கீறித்
தருக்கியவிடத்துப்பஞ்சபாதகரேனுஞ்சாரின்
பெருக்கியவேழுமூன்றுபிறவியும்பிணிகணீங்கி
நெருக்கியவமரர்க்கெல்லாநீணிதியாவரன்றே. (௧௭௧)

நெற்றியினழலுஞ்செங்கணீறணிகடவுணீடு
கற்றையின்சடையின்மேவுங்கங்கையுஞ்சேதுவாகப்
பெற்றிலமென்றுகொண்டுபெருந்தவம்புரிகின்றாளால்
மற்றிதன்றூய்மையெவ்வாறுரைப்பதுமலர்க்கண்வந்தாய். (௧௭௨)

தெவ்வடுஞ்சிலைக்கைவீரன்சேதுவின்பெருமையாவும்
வெவ்விடம்பொருதுமீண்டுமிளிர்தருங்கருங்கட்செவ்வாய்

---

169. களிந்தை - காளிந்தி, யமுனை வருணன் ரோஜுது - வருணன் (இராமன்விட்ட நீக்கணையை) பொறுக்கமாட்டாது. 173. தெவ்வு - பகை.

நொவ்விடைக்குயிலனாட்குறுவன்றுழிவருணனேனு
திவ்விடைவந்துகண்டாய்சரணெனவியம்பிற்றென்றான். (கஎரு)

இதுதமிழ்முனிவன்வைகுமியறருகுன்றுமுன்னும்
அதுவளர்மணிமேலோங்கலப்புறத்துயர்ந்துதோன்றும்
அதுதிகழநந்தவெற்பென்றருடாரவனுமன்றோன்றிற்
றெதுவெனவணங்கைநோங்கியிற்றெனவிராமன்சொன்னான்.(கஎச)

வாலியென்றளவிலாற்றல்வன்மையான்மகரநீர்சூழ்
வேலையைக்கடத்தலாயும்விறலுடையவனைவீட்டி
நூலியற்றருமநீதிநுணித்தறங்குணித்தமேலோர்
போலியற்றபனன்மைந்தனுறைதரும்பொறையீதென்றான். (கஎரு)

கிட்கிந்தையிதுவேலையகேட்டியாலெனதுபெண்மை
மட்குந்தாருபைவெள்ளமகளிரின்றுகிவாரேனுர்
உட்கும்போர்ச்சேனைசூழவொருத்தியேயயோத்தியெய்தின்
கட்கொந்தார்குழலினாரையேற்றுதல்கடன்மைத்தென்றாள். (கஎசு)

அம்மொழியிரவிமைந்தற்கண்ணாறுனுரைப்பவன்னான்
மெய்ம்மைசேரனுமன்றன்னைநோக்கிநீவிரைவின்வீர
மைம்மலிகுழலினாரைமரபினாற்கொணர்தியென்னாச்
செம்மைசேருள்ளத்தண்ணல்கொணர்ந்தனன்சென்றுமன்னோ. ()

வரிசையின்வழாமைநோக்கிமாருதிமாதர்வெள்ளம்
கரைசெயலரியவண்ணங்கொணர்ந்தனன்கணத்தின்முன்னம்
விரைசெறிகுழலினார்தம்வேந்தனைவணங்கிப்பெண்மைக்
கரசியையயனோடுமடியினைதொழுதுநின்றார். (கஎஅ)

மங்கலமுதலவாயமரபினிற்கலப்பையாவும்
அங்கவர்கொணர்ந்துபெண்மைக்கரசியைத்தொழுதுசூழ
நங்கையுமுவந்துவேறோர்நவையிலையினிமற்றென்றாள்
பொங்கியவிமானந்தானுமனமெனவெழுந்துபோன. (கஎகூ)

வேறு.

போதாவிசும்பிற்றிகழ்புட்பகம்போதலோடும்
சூதார்முலைத்தோகையைநோக்கிமுன்றோன்றுசூழல்

174. அநந்தர - சொல்லியருள.

175. தபனன் - சூரியன். பொறை - மலை

179. மங்கலம் - எட்டுவகைமங்கலப்பொருள்கள் கலப்பை - மற்றையஉப சாதனமான பொருள்கள். போன - போனது. (ஈறுதொக்கது)

கோதாவிரிமற்றதன்மாடயர்குன்றுநின்னைப்
பேதாய்பிரிவித்துயர்பீழைபிணித்ததென்றான். (கஅ௦)

வேறு.

சிரத்துவாசவண்டலம்பிடுதெரிவைகேளிதுநீள்
தரத்துவாசவர்வேள்வியர்தண்டகமதுதான்
வரத்துவாசவன்வணங்குறுசித்திரகூடம்
பரத்துவாசவனுறைவிடமிதுவெனப்பகர்ந்தான்.

இ-ள். சிரத்து - தலையில், வாசவண்டு - மணமமைந்தவண்டுகள், அலம்பிடு - தேனுண்டொலிக்கின்ற, தெரிவைகேள் - நல்லறிவுடையாளே கேள், இது - இந்த இடம், நீள் - மிகுந்த, தரத்து - சலியாது நிற்றலாகிய வலியமைந்த, உவாசவர் - உபவாசமிருப்பவர்களும், வேள்வியர் - யாகங்களைச்செய்பவர்களும் வசிக்கின்ற, தண்டகம் - தண்டகாரணியமாகும், அது - அந்த இடம், வரத்து - சிறப்பையுடைய, வாசவன் - இந்திரன், வணங்குறு - வணங்குகின்ற, சித்திரகூடம் - சித்திரகூடமலையாகும், இது - இவ்விடம், பரத்துவாசவன் - பரத்துவாசமுனிவன், உறைவிடமென - வசிக்குமிடமென்று, பகர்ந்தான் - சொல்லியருளினான். எ-று.

உபவாசம் - உண்ணாதிருத்தல். (கஅக)

மின்னைநோக்கியவீரனிதியம்பிடும்வேலை
தன்னைநேறிலாமுனிவரனுணர்ந்துதன்னகத்தின்
என்னையாளுடையநாயகனெய்தினனென்றுத்
துன்னுமாதவர்சூழ்தரவெதிர்கொள்வான்றொடர்ந்தான். (கஅஉ)

ஆதபத்திரங்குண்டிகையொருகையினணைத்துப்
போதமுற்றியதண்டொருகையினிற்பொலிய
மாதவப்பயனுருவுகொண்டெதிர்வருமாபோல்
நீதிவித்தகனடைந்தமைநோக்கினனெடியோன். (கஅங)

எட்பகத்தினையளவையுங்கருணையோடிசைந்த
நட்பகத்திலாவரக்கரைநருக்கிமாமேரு
விட்பகத்துறைகோளரியெனப்பொலிவீரன்
புட்பகத்தினைவதிகெனநினைந்தனன்புவியில்.

இ-ள். எண் - மற்றையோருடைய எண்ணங்கள், பக - பகுலைய, தினையளவையும் - தினையளவும், கருணையோடு - கருணையு

183. ஆதபத்திரம் - குடை.

டனே, இசைந்த - பிறவுயிர்களிடத்துப் பொருந்திய, நட்பு-அன்பு, அகத்திலா - உள்ளத்திலில்லாத, அரக்கரை - இராவணன் முதலிய அரக்கர்களை, நருக்கி - சின்னபின்னஞ்செய்து, மாமேரு-பெரியமேருமலையினது, விட்பகத்து - குகையினிடத்தில், உறை-வசிக்கின்ற, கோளரியென - வலியமைந்த சிங்கம்போல, பொலிவீரன் - பொலிகின்ற சிராகவபிரான், புட்பகத்தினை - புட்பகவிமானத்தை, புவியில் - அப்பூமியின்கண், வதிகென நினைந்தனன்-தங்குகவென்று திருவுளங்கொண்டனன். எ-று.

விட்பு - விள்ளெனும் பகுதியும் புவ்விகுதியும்பெற்று விட்டெனுறுகிவிண்ட இடத்தைை யுணர்த்தினமையின் ஆகுபெயர். (கஅச)

உன்னுமாத்திரத்துலகினையெடுத்தும்பரோங்கும்
பொன்னினுடுவந்திழிந்தெனப்புட்பகந்தாழ
என்னையாளுடைநாயகன்வல்லையினெதிர்போய்ப்
பன்னுமாமறைத்தபோதனன்றுண்மிசைப்பணிந்தான். (கஅரு)

அடியின்வீழ்தலுமெடுத்துநல்லாசியோடணைத்து
முடியைமோயினனின்றுழிமுளரியங்கண்ணன்
சடிலநீடுகளொழிதரத்தனதுகண்ணருவி
நெடியகாதலங்கலசமதாட்டினனெடியோன். (கஅசு)

கருகும்வார்குழற்சனகியோடிளவல்கைதொழுதே
அருகுசார்தரவருந்தவனுசிகள்வழங்கி
உருகுகாதலினொழுகுகண்ணீரினுவகை
பருகுமாரமிழ்தொத்துளங்களித்தனன்பரிவால். (கஅஎ)

வானரேசனும்வீடணக்குரிசிலுமற்றை
வனைவீரருந்தொழுதொறுமாசிகளியம்பி
ஞானநாதனைத்திருவொடுநன்மனைகொணர்ந்தான்
ஆனமாதவர்குழாத்தொடுமருமறைபுகன்றே. (கஅஅ)

பன்னசாலையுட்புகுந்துநீடருச்சனைபலவும்
சொன்னநீதியிற்புரிந்துபின்சூரியன்மருமான்
தன்னைநோக்கினன்பன்முறைகண்கணீர்த்ததும்பப்
பின்னொர்வாசகமுரைத்தனன்றபோதரிற்பெரியோன். (கஅகூ)

முனிவர்வானுளோர்மூவுலகத்துளோர்யாரும்
துனியுழந்திடத்துயர்தருகொடுமனத்தொழிலோர்

189. பன்னசாலை - இலைகளாற் சமைத்த சிறுகுடில்.

நனிமடிந்திடவலகைகளுடைகநடிப்பக்
குனியும்வார்சிலைக்குரிசிலேயென்னினிக்குணிப்பாம். (௧௯௦)

வேறு.

விராதனுங்கரனுமானும்விறல்கெழுகவந்தன்றானும்
மராமரமேழும்வாலிமார்பமுமகரநீரும்
இராவணனுராமுங்கும்பகருணன்றேற்றந்தானும்
அராவரும்பகழியொன்றாலழித்துலகளித்தாயைய. (௧௯௧)

சித்திரகூடந்தீர்ந்துதென்றிசைத்தீமைதீர்த்திட்
டித்திசையடைந்தெம்மில்லினிறுத்தமையிறுதியாக
வித்தகமறந்திலேன்யான்விருந்தினையாகியெம்மோ
டித்தினமிருத்தியென்றான்மறைகளினிறுதிகண்டான். (௧௯௨)

கரதலமதனினீடுகார்முகம்வளையவாங்கிச்
சரதம்வானவர்கடுன்பந்தனித்துலகங்கடாங்கும்
மரகதமேனிச்செங்கண்வள்ளலேவழுவாநீதிப்
பரதனதியல்புமின்றேபணிக்குவென்கேண்மினென்றான். (௧௯௩)

வேறு.

வெயர்த்தமேனியன்விழிபொழிமழையன்மூவினையைச்
செயிர்த்தசிந்தையன்றெருமரலுழந்துழந்தழிவான்
அயர்த்துநோக்கினுந்தென்றிசையன்றிவேறறியான்
பயத்ததுன்பமேவுருவுகொண்டென்னலாம்படியான். (௧௯௪)

இந்தியங்களைந்திருங்கனிகாய்நுகர்ந்திவுளிப்
பந்திவந்தபுற்பாயவான்பழம்பதிபுகாது
நந்தியம்பதியிருந்தனன்பரதனின்றுமம்
அந்தியும்பகலதனினுமறப்பிலனாகி. (௧௯௫)

வேறு.

என்றுரைத்தரக்கர்வேந்தனிருபதென்றுரைக்குநீலக்
குன்றுரைத்தனையதோளுங்குலவரைக்குவடுமேய்க்கும்
என்றுரைத்தனையமௌலித்தலைபத்துமிறுத்தவீர
நின்றனைப்பிரிந்ததுண்டேயானெனநிகழ்த்தினானல். (௧௯௬)

மின்னையேருழையினானும்விரைமலர்த்தவிசினானும்
நின்னையேபுகழ்தற்கொத்தநீதிமாதவத்தின்மிக்கோய்
உன்னையேவணங்கியுன்றனருள்கூமக்குயர்ந்தேதன்மற்றிங்
கென்னையேபொருவுமைந்தர்யானலாதில்லையென்றான். (௧௯௭)

195. பழம்பதி - அயோத்தி.

அவ்வுரைப்புகல்க்கேட்டவறிவனுமருளினோக்கி
வெவ்வரம்பொருதவேலோய்விளம்புகேன்கேட்டிவேண்டிற்
றெவ்வரமெனினுந்தந்தேனியம்புதியெனலுமையன்
கவ்வையின்றாகிவென்றிக்கவிக்குலம்பெற்றுவாழ்க. (௧௯௮)

அரியினஞ்சென்றசென்றவடவிகளனைத்தும்வானம்
சொரிதருபருவம்போன்றுகிழங்கொடுகனிகாய்துன்றி
விரிபுனல்செழுந்தேன்மிக்குவிளங்கெனவிளம்புகென்றான்
புரியுமாதவனுமஃதேயாகெனப்புகன்றிட்டானால். (௧௯௯)

அருந்தவனையநின்னோடனிகவெஞ்சேனைக்கெல்லாம்
விருந்தினிதமைப்பெனென்னாவிளங்குமுத்தீயினாப்பண்
புரிந்தொராகுதியையீந்துபுறப்படுமளவிற்போகம்
திருந்தியவானநாடுசேரவந்திறுத்ததன்றே. (௨௦௦)

அரசரேயாதியாகவடியவரந்தமாகக்
கரைசெயலரியபோகந்துய்க்குமாகண்டிராமற்
கரசியல்வழாமைநோக்கியறுசுவையமைக்கும்வேலை
விரைசெறிகமலக்கண்ணனுமனைவிளித்துச்சொன்னான். (௨௦௧)

வேறு.

இன்றுநம்பதிவருதுமுன்மாருதியீண்டச்
சென்றுதீதின்மைசெப்பியத்தீயவித்திளையோன்
நின்றநீர்மையுநினைவுநீதேர்ந்தெம்மினோர்தல்
நன்றெனாவவன்மோதிரங்கைக்கொடுநடந்தான். (௨௦௨)

தந்தைவேகமுந்தனதுநாயகன்றனிச்சிலையின்
முந்துசாயகக்கடுமையும்பிற்படமுடுகிச்
சிந்தைபின்வரச்செல்பவன்குகற்குமச்சேயோன்
வந்தவாசகங்கூறிமேல்வான்வழிபோனான். (௨௦௩)

வேறு.

இன்றிசைக்கிடமாயவிராகவன்
தென்றிசைக்கருமச்செயல்செப்பினும்
அன்றிசைக்குமரியவயோத்தியின்
நின்றிசைத்துளதன்மைநிகழ்த்துவாம். (௨௦௪)

---

199. அரியினம் - குரங்கினம்.
203. சாயகம் - அம்பு.

நந்தியின்பதியின்றலைநாடொறும்
சந்தியின்றிகிரந்தரந்தம்முனூர்
பந்தியங்கழற்பாதமருச்சியா
இந்தியங்களைவென்றிருந்தானரோ. (உ0௫)

துன்புறுக்கவுஞ்சுற்றியுருக்கொணா
என்புருக்குந்தகைமையதிட்டதாய்
முன்புருக்கொண்டொருவழிமுற்றுறா
அன்புருக்கொண்டதாமெனலாகுவான். (உ0௬)

நினைக்கவுநதடங்கண்ணிணைநீர்வர
இனத்ததண்டலைநாட்டிருந்தேயுமக்
கனத்தகந்தமுங்காயுங்கனிகளும்
வனத்தவல்லவருந்தலில்வாழ்க்கையான். (உ0௭)

நோக்கிற்றென்றிசையல்லதுநோக்குறான்
ஏக்குற்றேக்குற்றிரவிகுலத்துளான்
வாக்கிற்பொய்யான்வரும்வருமென்றுயிர்
போக்கிப்போக்கியுழக்கும்பொருமலான். (உ0௮)

உண்ணுநீர்க்குமுயிர்க்குமுயிரவன்
எண்ணுங்கீர்த்தியிராமன்றிருமுடி
மண்ணுநீர்க்குவரம்புகண்டாலன்றிக்
கண்ணினீர்க்கொர்கரையெங்குங்காண்கிலான். (உ0௯)

அனையனுயுபரதனலங்கலிற்
புனையுந்தம்முனார்பாதுகைப்பூசனை
நினையுங்காலநினைத்தனனுமரோ
மனையின்வந்தவனெய்தமதித்தநாள். (உ௧0)

யாண்டுவந்திங்கிறுக்குமென்றெண்ணினான்
மாண்டசோதிடவாய்மைப்புலவரை
ஈண்டுகூய்த்தருகென்னவந்தெய்தினார்
ஆண்டகைக்கின்றறுதியென்றாரரோ. (உ௧௧)

என்றபோதத்திராமன்வனத்திடைச்
சென்றபோதத்தவ்வுரைசெல்வத்தை

---

205. பாதம் - பாதுகை.

211. யாண்டு - எப்பொழுது, என்றைக்கு.

211. அறுதி - மீண்டுவருவதற்கு அறுதியிட்டநாள்.

வென்றபோதத்தவீரனும்வீழ்ந்தனன்
கொன்றபோதத்துயிர்ப்புக்குறைந்துளான். (உ௧உ)

மீட்டெழுந்துவிரிந்தசெந்தாமரைக்
காட்டைவென்றெழுகண்கனுழிப்புனல்
ஓட்டவுள்ளவுயிரினையூசனின்
ருட்டவும்மவலத்தழிந்தானரோ. (உ௧௩)

எனக்கியம்பியநாளுமெனின்னலும்
தனைப்பயந்தவனேயமுந்தாங்கியவ்
வனத்துவைகல்செய்யான்வந்தடுத்ததோர்
வினைக்கொடும்பகையுண்டெனவிம்மினான். (உ௧௪)

மூவகைத்திருமூர்த்தியராயினும்
பூவகத்தில்விசும்பிற்புறத்தினில்
ஏவர்கிற்பரெதிர்நிற்கவென்னுடைச்
சேவகற்கெனவையமுந்தேறினான். (உ௧௫)

என்னையின்னுமரசியலிச்சையான்
அன்னனாகினவனதுகொள்கவென்
றுன்னினான்கொலுறுவதுநோக்கினான்
இன்னதேநலனென்றிருந்தானரோ. (உ௧௬)

அனைத்திலங்கொன்றுமாயினுமாருக
வனத்திருக்கவிவ்வயம்புகுறுக
நினைத்திருந்துதுயரமுழக்கிலேன்
மனத்துமாசென்னுயிரொடும்வாங்குவேன். (உ௧எ)

என்னப்பன்னியிளவலையென்னுழைத்
துன்னச்சொல்லுதிரென்றலுந்தூதர்போய்
உன்னைக்கூயினனும்முனெனாமுனம்
முன்னர்ச்சென்றனன்மூவர்க்கும்பின்னுளான். (உ௧அ)

தொழுதுநின்றதன்றம்பியைத்தோய்கணீர்
எழுதுமார்பத்திறுகத்தழுவினான்
அழுதுவேண்டுவதுண்டையவவ்வரம்
பழுதிலாமையினாற்றரற்பாற்றென்றான். (உ௧௯)

---

212. போதத்து - போது (அத்துசாரியை) போதத்தவீரன் - ஞானத்தையுடைய பரதன். போதம் - ஞானம்.

214. இன்னல் - துன்பம். தாங்கி - நினைந்து.

215. கிற்பர் எதிர் நிற்க - எதிர் நிற்ககிற்பர் வல்லவர்.

என்னதாகுங்கொலவ்வரமென்றியேல்
சொன்னநாளிலிராகவன்றோன்றிலன்
மின்னுதீயிடையானினிவீடுவென்
மன்னனாதியென்சொல்லைமறாதென்றான். (௨௨௦)

கேட்டதோன்றல்கிளர்தடக்கைகளால்
தோட்டதன்செவிபொத்தித்துணுக்குறா
வூட்டுநஞ்சமுண்டானெனத்துயங்கினான்
நாட்டமும்மனமுந்நடுங்காநின்றான். (௨௨௧)

விழுந்துமேக்குயர்விம்மலன்வெய்துயிர்த்
தெழுந்துநானுனக்கென்னபிழைத்துள
தழுந்துதுன்பத்தினையெனச்சாற்றினான்
கொழுந்துவிட்டுநிமிர்கின்றகோபத்தான். (௨௨௨)

வேறு.

கானாளநிலமகளைக்கைவிட்டுப்போவானைக்காத்துப்பின்பு
போனானுமொருதம்பிபோனவர்கள்வருமவதிபோயிற்றென்னா
ஆனாதவுயிர்விடவின்றமைவானுமொருதம்பியயலேநானா
தியானுமிவ்வரசாள்வெனென்னேயிவ்வரசாட்சியினிதேயம்மா. ()

மன்னிற்பின்வளநகரம்புக்கிருந்துவாழ்ந்தானேபரதனென்னு
ம், சொன்னிற்குமென்றஞ்சிப்புறத்திருந்துமருந்தவமேதொடங்கி
னாயே, என்னிற்பின்னிவனுளனாமென்றேபின்னடிமையுனக்கிருந்த
தேனும், உன்னிற்பின்னிருந்ததுவு மொருகுடைக்கீழிருப்பதுவு
மொக்குமென்றான். (௨௨௪)

முத்துருக்கொண்டமைந்தனைய முழுவெள்ளிக்கொழுநிறத்து
முளரிச்செங்கட், சத்துருக்கனஃதுரைப்பவவனிங்குத்தாழ்கின்ற
தன்மையானிங், கொத்திருக்கலாலன்றேயுலந்தாற்பினிவ்வுலகையு
லையவொட்டான், அத்திருக்குங்கெடுமுடனே புகுந்தானுமரசெரி
போயமைக்கவென்றான். (௨௨௫)

அப்பொழுதினிவ்வுரைசென் றயோத்தியினிசைத்தலுமே
யரியையீன்ற, ஒப்பெழுதவொண்ணாதகற்புடையாள்வயிறுபுடைத்
தலமந்தேங்கி, இப்பொழுதேயுலகிறக்கும்யாக்கையினைமுடித்தொ

---

221. தோடு - குண்டலம்.

225. அவனிங்குத்தாழ்கின்றதன்மை - இராமன் இங்குவரத்தாமதிக்கின்றது. உலந்தால் - யானிறந்தால்.

ழிந்தான்மகனேயென்று, வெப்பெழுதினலன்னமெலிவுடையாள்கடிதோடிவிலக்கவந்தாள். (உஉ௬)

மந்திரியர்தந்திரியர்வளநகரத்தவர்மறையோர்மற்றுஞ்சுற்றச், சுந்தரியரெனைப்பலருங்கைதலையிற் பெய்திரங்கித்தொடர்ந்துசெல்ல, இந்திரனேமுதலாயவிமையவருமுனிவருமிறைஞ்சியேத்த, அந்தரமங்கையர்வணங்கவழுதாற்றிப்பரதனைவந்தடைந்தாளன்றே. (உஉ௭)

எரியமைக்குமயானத்தை யெய்துகின்றகாதலனை யிடையேவந்து, விரியன்மத்தநெடுவேணிபுறத்தைசந்துவீழ்ந்தொசியமேனிதள்ளச், சொரியமைப்பதரிதாயமழைக்கண்ணொடொடருதலுந்துணுக்கமெய்தாப், பரிவமைந்ததிருமனத்தானடிதொழுதானவள்புகுந்துபற்றிக்கொண்டாள். (உஉ௮)

வேறு.

மன்னிழைத்ததுமைந்தனிழைத்ததும்
முன்னிழைத்தவிதியின்முயற்சியால்
பின்னிழைத்ததுமெண்ணிலப்பெற்றியால்
என்னிழைத்தனையென்மகனேயென்றாள். (உஉ௯)

நீயிதெண்ணினையேனெடுநாடெரி
பாயுமன்னருஞ்சேனையும்பாயுமால்
தாயரெம்மளவன்று தனியறம்
தீயின்வீழுமுலகுந்திரியுமால். (உ௩௦)

தருமநீதியின்றற்பயனுவதன்
கருமமேயன்றிக்கண்டிலங்கண்களால்
அருமையொன்றுமுணர்ந்திலையையநின்
பெருமையூழிதிரியினும்பேருமோ. (உ௩௧)

எண்ணில்கோடியிராமர்களென்னினும்
அண்ணனின்னருளுக்கருகாவரோ
புண்ணியம்மெனுநின்னுயிர்போயினால்
மண்ணும்வானுமுயிர்களும்வாழுமோ. (உ௩௨)

இன்றுவந்திலனேயெனினீயே
ஒன்றும்வந்துனையுன்னியுரைத்தசொல்
பின்றுமென்றுணரேற்பிழைத்தானெனின்
பொன்றுந்தன்மைபுகுந்ததுபோயென்றாள். (உ௩௩)

228. பரிவு - ஆசை. 233. சொல்பின்றும் - சொல்பிறழும், பொய்க்கும்.

ஒருவன்மாண்டனனென்றுகொண்டூழிவாழ்
பெருநிலத்துப்பெறலருமின்னுயிர்க்
கருவுமாண்டறக்காணுதியோகலைத்
தருமநீயலதில்லெனுந்தன்மையாய். (உ௩௪)

இறக்கையுஞ்சிலரோகனுமோகத்தால்
பிறக்கையுங்கடனென்றுபின்பாசத்தை
மறக்கைகாண்மகனேவலியாவது
துறக்கைதானுமென்றூண்மனந்தூய்மையாள். (உ௩௫)

மைந்தனென்னைமறுத்துரைத்தானெனல்
எந்தைமெய்ம்மையுமிக்குலச்செய்கையும்
நைந்துபோகவுயிர்நிலைநச்சிலேன்
முந்துசெய்தசபதமுடிப்பனால். (உ௩௬)

யானுமெய்யினுக்கின்னுயிரீந்துபோய்
வானுளெய்தியமன்னவன்மைந்தனால்
கானுளெய்தியகாகுத்தற்கேகடன்
ஏனையோர்க்கிதிழுக்கில்வழக்கன்றே. (உ௩௭)

தாய்சொற்கேட்டலுந்தந்தைசொற்கேட்டலும்
பாசத்தன்பினைப்பற்றறநீக்கலும்
ஈசற்கேகடன்யானஃதிழைக்கிலென்
மாசற்றேனிதுகாட்டுவென்மாண்டென்றான். (உ௩௮)

என்றுதீயினையெய்தியிரைத்தெழுந்
தொன்றுபூசலிடுமுலகோருடன்
நின்றுபூசனைசெய்கின்றநேசற்குக்
குன்றுபோனெடுமாருதிகூடினான். (உ௩௯)

ஐயன்வந்தனனாரியன்வந்தனன்
மெய்யின்மெய்யனெனின்னுயிர்வீடினால்
உய்யுமேயவனென்றுரைத்துட்புகாக்
கையினாலெரியைக்கரியாக்கினான். (உ௪௦)

234. காணுதியோ - செய்வாயோ.
235. பாசம் - ஆசை, அன்பு.
236. எனல் - என்றுநினையாதே.
238. ஈசன் - இராமன்.
239. பூசல் - சண்டை.

தூக்கிமற்றவனும்மலர்த்தாள்களைத்
தாக்கத்தன்றலைதாழ்ந்துவணங்கிக்கை
வாக்கிற்கூடப்புதைத்தொருமாற்றநீ
தூக்கிக்கொள்ளத்தகுமெனச்சொல்லினான். (௨௪௧)

இன்னநாழிகையெண்ணைந்துளதைய
உன்னைமுன்னும்வந்தெய்தவுரைத்தநாள்
அன்னதில்லையெனினடிநாயினேன்
முன்னம்வீழ்ந்திவ்வெரியின்முடிவெனால். (௨௪௨)

ஒன்றுதானுளதுன்னடியேன்சொலால்
நின்றுதாழ்ந்துளநேமிச்சுடர்குணக்
குன்றுதோன்றளவும்மிதுகுன்றுமேல்
பொன்றுநீயுமுலகமும்பொய்யிலாய். (௨௪௩)

எங்கணாயகற்கின்னமுதீகுவான்
பங்கயத்துபரத்துவன்வேண்டலால்
அங்குவைகினனல்லதுதாழ்க்குமோ
இங்கணல்லதொன்றின்னமுங்கோட்டியால். (௩௪௪)

அண்டர்நாதனருளியளித்துள
துண்டொர்பேரடையாளமுனக்கது
கொண்டுவந்தனென்கோதற்றசிந்தையாய்
கண்டுகொண்டருள்வாயெனக்காட்டினான். (௨௪௫)

வேறு.

காட்டியமோதிரங்கண்ணிற்கண்டலும்
ஊட்டியவல்விடமுற்றுமுற்றுவார்க்
கூட்டியநன்மருந்தொத்ததாமரோ
ஈட்டியவுலகுக்குமிளையவேந்தற்கும். (௨௪௬)

அழுகின்றவாயெலாமார்த்தெழுந்தன
விழுகின்றகண்ணெலாம்வெள்ளமாறிமுன்
உழுகின்றதலையெலாமுயர்ந்தெழுந்தன
தொழுகின்றகையவாய்க்காலின்றோன்றலை. (௨௪௭)

மோதிரம்வாங்கித்தன்முகத்தின்மேலணைத்
தாதரம்பெறுவதற்காக்கையோவெனா

243. தாழ்ந்துள - தோன்றளவும்நின்று சாய்ந்துள்ள சூரியன் அஸ்தமித்
ப் பின்னுதிக்கும்வரைப் பொறுத்திருந்து.

ஓதினர்நானுறவோங்கினுன்றொழும்
தூதனைமுறைமுறைதொழுதுதுள்ளுவான். (௨௪அ)

ஆதிவெந்துயரலாலருந்தனின்மையால்
ஊதுறப்பறப்பதாயுலர்ந்தயாக்கைபோய்
ஏதிலனொருவன்கொலென்னலாயது
மாதிரம்வளர்ந்தனவயிரத்தோள்களே. (௨௪௯)

அழுநகுமனுமனையாழிக்கைகளால்
தொழுமெழுந்துள்ளும்வெங்களிதுளக்களால்
விழுமழிந்தேங்கும்போய்வீங்கும்வேர்க்குமக்
குழுவொடுங்குனிக்குந்தன்றடக்கைகொட்டுமால். (௨௫௦)

ஆடுமினுடுமினென்னுமையன்பால்
ஓடுமினேடுமினென்னுமோங்கிசை
பாடுமின்பாடுமினென்றும்பாவிகாள்
சூடுமின்சூடுமின்றாதன்றாளெனும். (௨௫௧)

வஞ்சனையியற்றியமாயக்கையார்
துஞ்சுவரினியெனத்தோளைக்கொட்டுமால்
குஞ்சிதவடிகண்மண்டிலத்திற்கூட்டுற
அஞ்சனக்குன்றுநின்றும்பாடுமால். (௨௫௨)

வேதியர்தமைத்தொழும்வேந்தரைத்தொழும்
தாதியர்தமைத்தொழுந்தன்னைத்தான்றொழும்
ஏதுமொன்றுணர்குறுதிருக்குநிற்குமால்
காதலென்றதுவுமோர்கள்ளிற்றோற்றிற்றே. (௨௫௩)

அத்திறத்தாண்டகையனுமன்றன்னைநீ
எத்திறத்தாயெமக்கியம்பியீதியால்
முத்திறத்தவருளையொருவன்மூர்த்திவே
றொத்திருந்தாயெனவுணர்கின்றேனென்றான். (௨௫௪)

மறையவர்வடிவுகொண்டனுகவந்தனை
இறைவரினொருவனெண்ணெண்ணுகின்றனென்
துறையெனக்கியாதெனச்சொல்லுசொல்லென்றான்
அறைகழலனுமனுமறியக்கூறுவான். (௨௫௫)

249. ஏதிலன் - வேறொருவன், அன்னியன்.
252. குஞ்சிதஅடி - வளைந்தகால்.
254. முத்திறத்தவர் - திருமூர்த்திகள். இயம்புதி (ஈதி - ஒருமுன்னிலை அசை)

காற்றினுக்கயல்வந்தகவிக்குலத்துளான்
நோற்றனள்வயிற்றின்வந்துதித்துநும்முனுற்
கேற்றிலாவடித்தொழிலேவலாளனேன்
மாற்றினனுருவொருகுரங்குமன்னயான். (உருசு)

அடித்தொழினுயினேனற்பயாக்கையைக்
கடித்தடந்தாமரைக்கண்ணினேனுக்கெனுப்
பிடித்தபொய்யுருவினைப்பெயர்த்துநீக்கினன்
முடித்தலம்வானவர்நோக்கின்முன்னுவான். (உருஎ)

வெஞ்சிலையிருவரும்விரிஞ்சன்மைந்தனும்
எஞ்சலிலதிசயமிதுவென்றெண்ணினார்
துஞ்சிலதாயினுஞ்சேனைதுண்ணென
அஞ்சினதஞ்சனைசிறுவனுக்கையால். (உருஅ)

ஈங்குநின்றியாமுனக்கிசைத்தமாற்றமத்
தூங்கிருங்குண்டலச்செவியின்சூழ்வர
ஓங்கலவாதலினுலப்பில்யாக்கையை
வாங்குதிவிரைந்தெனமன்னன்வேண்டினான். (உருகூ)

சுருக்கியவுருவனுத்தொழுதுமுன்னின்ற
அருக்கன்மாணவகனுக்கையனன்பினால்
பொருக்கெனநிதியமும்புனைபொற்பூண்களின்
வருக்கமும்வரம்பிலநனிவழங்கினான். (உகூ0)

கோவொடுதூசுநற்குலமணிக்குலம்
மாவொடுபரிக்குலம்வாவுதேரினம்
தாவுநீருடுத்தநற்றரணிதன்னுடன்
ஏவருஞ்சிலைவலான்யாவுநல்கினான். (உகூக)

இளவலையண்ணலுக்கெதிர்கொளென்றுநம்
வளமதிலயோத்தியில்வாழுமாக்களைக்
கிளையொடுமேமெனக்கிளத்தியெங்கணும்
அளையொலிமுரசினமறைவிப்பாயென்றான். (உகூஉ)

தோரணநட்டுமேற்றுகில்பொதிந்துநற்
பூரணப்பொற்குடம்பொலியவைத்துநீள்

---

258. விரிஞ்சன் மைந்தன் - பிரமன் புத்திரராகிய வசிஷ்டர்.

260. அருக்கன்மாணவன் - சூரியனிடத்தில் வேதத்தோடு சகல சாஸ்திரங்களையுங்கற்ற அனுமான்.

வாரணமிவுளிதேர்வரிசைதான்வழாச்
சேரணியணிகெனச்செப்புவாயென்றான். (உ௬௩)

பரத்துவனுறைவிடத்தளவும்பைம்பொனீள்
சிரத்தொகைமதிற்புறத்திறுதிசேர்தர
வரத்தருதரளமென்பந்தர்வைத்துவான்
புரத்தையும்புதுக்குகபுகறிபோயென்றான். (உ௬௪)

என்றலுமவனடியிறைஞ்சியெய்தியக்
குன்றுறழ்வரிசிலைக்குவவுத்தோளினன்
நன்றுணர்கேள்வியனவையில்செய்கையன்
தன்றுணைச்சுமந்திரற்கரியச்சாற்றினன். (உ௬௫)

அவ்வுரைகேட்டலுமறிவின்வேலையான்
கவ்வையிலன்பினிற்களிக்குஞ்சிந்தையான்
வெவ்வெயிலெறிமணிவீதியெங்கணும்
எவ்வமின்றறைபறைமெற்றுகென்றிட. (உ௬௬)

வானையுந்திசையையுங்கடந்துவான்புகழ்க்
கோனையின்றெதிர்கொள்வான்கோலமாநகர்த்
தானையுமரசருமெழுகதானென
யானையின்வள்ளுவன்முரசமெற்றினன். (உ௬௭)

முரசொலிகேட்டலுமுழங்குமாநகர்
அரசருமாந்தருமந்தணாளரும்
கரைசெயலரியதோருவகைகைதரத்
திரைசெறிகடலெனவெழுந்துசென்றதால். (உ௬௮)

அனகனையெதிர்கொளென்றறைந்தபேரிநற்
கனகநல்கூர்ந்தவன்கைப்பட்டென்னவும்
சனகனதூர்க்கெனமுன்னஞ்சாற்றிய
வனைகடிப்பேரியுமொத்தவாமரோ (உ௬௯)

அறுபதினாயிரமக்குரோணியென்
றிறுதிசெய்சேனையுமேனைவேந்தரும்
செறிநகர்மாந்தருந்தெரிவைமார்களும்
உறுபொருளெதிர்ந்தெனவுவந்துபோயினர். (உ௭௦)

அன்னையர்மூவருமமரர்போற்றிடப்
பொன்னினற்சிவிகையினெழுந்துபோயபின்

264. வானபுரம் - அயோத்தி.

தன்னிகர்முனிவருந் தமருஞ்சூழ்தர
மன்னவன்மாருதிமலர்க்கைபற்றுரு. (உஎக)

திருவடியிரண்டுமேசெம்பொன்மௌலியா
இருபுறஞ்சாமரையிரட்டவேழ்கடல்
வெருவருமுழக்கெனவேழமார்த்தெழப்
பொருவருவெண்குடைநிழற்றப்போயினுன். (உஎஉ)

எல்லவன்மறைந்தனனென்னையாளுடை
வில்லியையெதிர்கொளப்பரதன்மீச்செல்வான்
அல்லியங்கமலமேயனைய தாள்களில்
கல்லதர்சுடுந்தனகதிரினென்னவே. (உஎங)

அவ்வழிமாருதியங்கைபற்றிய
செவ்வழியுள்ளத்தான்றிருவினுயகன்
எவ்வழியுறைநததச்செயலெல்லாம்விரித்
திவ்வழியெமக்குநீயியம்புவாயென்றுன். (உஎச)

என்றலுமாருதிதொழுதிங்கெம்பிரான்
மன்றலந்தொடையினுயயோத்திமாநகர்
நின்றதுமணவினைநிரப்பிமீண்டுதான்
சென்றதுநாயினேன்செப்பல்வேண்டுமோ. (உஎரு)

சித்திரகூடத்தைத்தீர்ந்தபின்சிரம்
பத்துடையவனுடன்விளைந்தபண்புந்தான்
இத்தலையடைந்ததுமிறுதியாமென
வித்தகத்தூதனும்விரிக்குஞ்சிந்தையான். (உஎசு)

குன்றுறழ்வரிசிலைக்குரிசிலெம்பிரான்
தென்றிசைச்சித்திரகூடந்தீர்ந்தபின்
வன்றிறல்விராதனைமடித்துமாதவர்
துன்றியதண்டகவனத்துட்டுன்னினுன். (உஎஎ)

ஆங்குறைதபோதனராரக்கர்க்காற்றலேம்
நீங்கினந்தவத்துறைநீதியோவெனத்
தீங்குசெய்தவர்களைச்செகுத்தறிண்ணநீர்
வாங்குமின்மனத்துயர்வாய்மையாலென்றுன். (உஎஅ)

ஆறுநாலாண்டவண்வைகியப்புறத்
தீறிலாமுனிவரரேயவாணையால்

273. எல்லவன் - சூரியன்.

மாறிலாத்தமிழ்முனிவனைத்தைதகண்ணினன்
ஊறிலாமுனிவரானுவந்துமுன்வர. (உ௭௯)

குடங்கையில்வாரிதியனைத்துங்கொண்டவன்
தடங்கணான்றனையெதிர்தழுவிச்சாபமும்
கடுங்கணைப்புட்டிலுங்கவசந்தானுமற்
றிடம்படுசுரிகையுஞ்சேரவீந்தனன். (உ௮௦)

அப்புரத்தெருவையினரசைக்கண்ணுறாத்
துப்புறச்சிவந்தவாய்த்தோகைதன்னுடன்
மெய்ப்புகழ்த்தம்பியும்வீரன்றானும்போய்
மைப்பொழிறுறுபஞ்சவடியின்வைகினான். (உ௮௧)

வேறு.

பல்பகலிறந்தபின்றைப்பாதகவரக்கிதோன்றி
மெல்லியலிடையினாளைவெகுண்டுழியிளையவீரன்
அல்கியதிருவைத்தேற்றியவளுடைச்செவியுமூக்கும்
மல்கியமுலையுங்கொய்தான்மறித்திவள்கரற்குச்சொன்னான். ()

கரனொடுதிரிசிராவுங்கரியதூடணனுங்காந்தி
எரியுமூன்றனலேயொப்பாரெழுந்துவெஞ்சேனையோடும்
விரவினரையன்செங்கைவில்லினைநோக்குமுன்போர்
எரிதழற்பஞ்சியொத்தாரரக்கியுமிலங்கைபுக்காள். (உ௮௩)

இருபதுதடக்கையான்மாட்டிசைத்தலுமெழுந்துபொங்கி
ஒருபதுதிசையுமுட்கவஞ்சகவுழையொன்றேவித்
தருபதஞ்சமைந்தமுக்கோற்றாபதர்வடிவங்கொள்ளாத்
திருவினைநிலத்தோடேந்தித்தென்றிசையிலங்கைபுக்கான். (உ௮௪)

போகின்றகாலேயேற்றசடாயுவைப்பொருதுவீட்டி
வேகின்றவுள்ளத்தாளைவெஞ்சிறையதனின்வைத்தான்
ஏகின்றவஞ்சமாமாரீசற்கொன்றிளவலோடு
பாகின்றகீர்த்தியண்ணறந்தையைப்பரிவிற்கண்டான். (உ௮௫)

அன்னவன்றனக்குவேண்டுமருங்கடன்முறையுமாற்றி
நன்னுதறன்னைத்தேடித்தென்றிசைநடக்குமையன்

---

280. சாபம் - வில், குடங்கை - உள்ளங்கை.

282. பாதக அரக்கி - சூர்ப்பணகை,

283. மூன்றனல் - ஆகவனீயம் காருகபத்தியம், தசதிணாக்கியமாகிய மூன்று வேள்வித்தீ.

285. பாகின்ற - பாவுகின்ற, பரவுகின்ற தந்தை சடாயு.

மன்னியகவர்தன்றன்னையுயிரொடுசாபமாற்றித்
தன்னையேமறப்பிலாதசவரிபூசனையுங்கொண்டான். (உஅசு)

ஆங்கவடனதுசொல்லாலருக்கன்மாமகனையெய்திப்
பாங்குறநட்டுவாலிபெருவரல்கெடுப்பேனென்று
ஓங்கியமரமும்வாலியுரமுமூடுருவவெய்திட்
டாங்கவன்றனக்குச்செல்வமரசொடுமருளினீந்தான். (உஅஎ)

காலமாமாரிநீங்கக்கவயனோடிடபன்காந்து
நீலன்மாம்யிந்தன்சாம்பன்சதவலிபனசனீடும்
வாலிமாமைந்தனென்றிவ்வானரத்தலைவராய
கூலவான்சேனைசூழவடைந்தனனங்கள்கோமான். (உஅஅ)

எழுபதுவெள்ளத்துற்றகுரங்கினமெழுந்துபொங்கி
அழுவநீர்வேலையென்னவடைந்துழியருக்கன்மைந்தன்
தழுவியதிசைகடோறுந்தனித்தனியிரண்டுவெள்ளம்
பொழுதிறைதடாதுமீளப்போக்கினன்றிருவைநாடி. (உஅகூ)

தென்றிசையிரண்டுவெள்ளஞ்சேனையும்வாலிசேயும்
வன்றிறற்சாம்பனோடுவாயினரேவநாயேன்
குன்றிடையிலங்கைபுக்குத்திருவினைக்குறித்துமீண்ட
பின்றைவந்தளக்கர்வேலைபெரும்படையிறுத்ததன்றே. (உகூ0)

அறிவினுக்கறிவுபோல்வான்வீடணனலங்கற்றோளான்
செறிபுயத்தரக்கன்றம்பிதிருவினைவிடுதியன்றேல்
இறுதியுற்றனைநின்வாழ்நாளெனவவனுரைப்பச்சீறிக்
கறுவுறப்பெயர்ந்துபோந்துகருணையான்சரணம்பூண்டான். (உகூக)

ஆங்கவற்கபயநல்கியரசொடுமுடியுமீந்து
பாங்கினால்வருணன்றன்னையழைத்திடப்பரிவிலாமை
தாங்கினன்சிறிதுபோதுதாமரைநயனஞ்சேப்ப
ஓங்கிநீரேழுமன்றனுடலமும்வெந்தவன்றே. (உகூஉ)

மற்றவனபயமென்னமலர்ச்சரணடைந்தவேலை
வெற்றிவானரர்கள்பொங்கிவெற்பினால்வேலைதட்டல்
முற்றுறநன்கியற்றிமொய்யொளியிலங்கைபுக்குப்
பற்றினர்சுற்றியார்த்தார்வானவர்பயங்கடீர்ந்தார். (உகூ௩)

மலையினையெடுத்தசேனைமதமலைதிளைத்தமார்பும்
தலையொருபத்துஞ்சிந்தித்தம்பிதன்றோளுந்தாளும்

287. ஓங்கியமரம் - மராமரம்.

கொலைதொழிலரக்-...யோர்குலத்தொடுந்தலத்துவீழச்
சிலையினைவளைவித்தையன்றேவர்களிடுக்கண்டீர்த்தான். (௨௯௪)

இலக்குவன்பகழியொன்றாலிந்திரசித்தென்றோதும்
விலக்கருவலத்தினானுமிளைஞருங்கிளையும்வீழ்ந்தார்
அலக்கணுண்டுழலுந்தேவரலர்மழைதூவியார்த்தன்
றுலக்குநர்குழுக்கடோறுமுடற்குறையாடல்கண்டார். (௨௯௫)

தேவருமுனிவர்தாமுஞ்சித்தருந்தெரிவைமாரும்
மூவகையுலகுளோருந்தனித்தனிப்புகழ்ந்துமொய்ப்பப்
பூவைபோனிறத்தினானும்வீடணப்புலவர்கோமாற்
கியாவையுமியம்பிமாண்டோர்க்கியற்றுதிகடன்களென்றான். (௨௯௬)

நான்முகன்விடையையூருநாரியோர்பாகத்தண்ணல்
மான்முகன்முதலாயுள்ளவானவர்தொழுதுபோற்ற
ஊன்முகங்கெழுவுவேலாயும்பர்நாயகியைச்சீறித்
தேன்முகமலருந்தாரானரிசொலச்சீற்றந்தீர்ந்தான். (௨௯௭)

மெய்யினுக்குயிரையீந்தவேந்தர்கோன்விமானத்தெய்த
ஐயனுமிளையகோவுமன்னமுமடியில்வீழக்
கையினாற்பொருந்தப்புல்லிக்கண்ணினீர்க்கலசமாட்டிச்
செய்வரமருளுகென்றான்றிருவினாயகனுங்கொண்டான். (௨௯௮)

என்னைநன்கருணைதன்னாலீன்றெடுத்தினிதுபேணும்
அன்னையுமகனுமுன்போலாகெனவருளினீந்து
மன்னவன்போயபின்றைவானரம்வாழ்வுகூறப்
பொன்னெடுநாட்டிலுள்ளார்வரம்பலவழங்கிப்போனார். (௨௯௯)

வெள்ளமோரேழுபத்துவிலங்கரும்வீரராகி
உள்ளவராறுபத்தேழுகோடியுமொற்றையாழி
வள்ளறன்மகனுமுள்ளமகிழ்வுறவிமானமீந்தான்
எள்ளலிலாதகீர்த்திவீடணனிலங்கைவேந்தன். (௩௦௦

ஆரியன்பின்னைநின்னையன்பினாலினைந்துகாதற்
சூரியன்மகனுந்தொல்லைத்துணைவருமிலங்கைவேந்தும்

---

296. பூவைபோல்நிறம் - காசாம்பூவர்ணம்.

297. சீற்றம் - கோபம்.

299. அரிசொல - அக்னிதேவனும், பிரமதேவருஞ்சொல்ல.

300. விலங்கரும் - வானரர்களும், விலங்கு - விலங்கர், வீரராகிஉள்ளவர்- வானரப்படைத்தலைவர்,

பேரியற்படையுஞ்சூழப்பெண்ணினுக்கரசியோடும்
சீரியவிமானத்தேறிப்பரத்துவனிருக்கைசேர்ந்தான். (௩௦௧)

அன்பினாலென்னைநின்பாலாழியுங்காட்டியான்ற
துன்பெலாந்துடைத்தியென்றேதுரந்தனன்றோன்றலென்று
முன்பினாலியன்றவெல்லாமொழிந்தனன்முதுநீர்தாவி
வன்பினாலிலங்கைமுற்றுமெரிக்குணாவாகவைத்தோன். (௩௦௨)

காலின்மாமதலைசொல்லப்பரதனுங்கண்ணீர்சோர
வேலிமாமதில்கள்சூழுமிலங்கையில்வேட்டங்கொண்ட
நீலமாமுகில்பின்போனானொருவனானின்றுணைவேன்
போலுமாலிவைகள்கேட்பேன்புகழுடைத்தடிமைமன்னோ. (௩௦௩)

என்றவனிரங்கியேங்கியிருகணுமருவிசோர
வன்றிறலனுமன்செங்கைவலக்கையாற்பற்றிக்காலிற்
சென்றனனிருளினூடுசெறிபுனற்கங்கைசேர்ந்தான்
குன்றினைவலஞ்செய்தேரோன்குணகடற்றோன்றுமுன்னர். (௩௦௪)

இராவணன்வேட்டம்போய்மீண்டெம்பிரானயோத்தியெய்தித்
தராதலமகளும்பூவிற்றையலுமகிழச்சூடும்
அராவுபொன்மௌலிக்கேய்ந்தசிகாமணிகுணபாலண்ணல்
விராவுறவெடுத்தாலென்னவெய்யவனுதயஞ்செய்தான். (௩௦௫)

காலைவந்திறுத்தபின்னர்க்கடன்முறைகமலக்கண்ணன்
கோலநீள்கழல்களேத்திக்குரக்கினத்தரசைநோக்கிச்
சாலவுங்கலைகள்வல்லோய்தவறுண்டுபோலும்வாய்மை
மூலமேயுணரினுன்றன்மொழிக்கெதிர்மொழியுமுண்டோ. (௩௦௬)

எழுபதுவெள்ளஞ்சேனைவானரரிலங்கைவேந்தன்
முழுமுதற்சேனைவெள்ளங்கணக்கிலமொய்த்தவென்றால்
அழுவநீர்ளேலைசுற்றுமரவமின்றாகவற்றோ
விழுமிதெம்பிரான்வந்தானென்றுரைத்ததுவீரவென்றான். (௩௦௭)

ஓசனையிரண்டுண்டன்றேபரத்துவனுறையுஞ்சோலை
வீசுதெண்டிரையிற்றூயவெள்ளமோரேழுபத்தும்
மூசியபழுவமிங்ஙன்கிடப்பதோமுரற்றலின்றிப்
பேசியதமையுநங்கோனெங்குளன்பெருமவென்றான் (௩௦௮)

---

302. முன்பினால் - முன்னால்பின்னால், முந்தியும், பிந்தியும்.
305. வெய்யவன் - சூரியன்.

பரதனஃதுரைத்தலோடும்பணிந்துமாருதியுஞ்சீர்சால்
விரதமாதவன்மற்றோரைவிண்ணவர்தலைமையும்வேண்டி
வரதனுண்டளிப்பவந்தவரத்தினான்மலருந்தேனும்
சுரதமேமாந்திமாந்தித்துயின்றதுபோலுந்தானை. (௩௦௯)

வானவர்கொடுக்கவந்தவரத்தினான்மதுபமூசும்
தேனொடுகிழங்குங்காயுங்கனிகளும்பிறவுஞ்சேர்த்துக்
கானகம்பொலிதலாலேகவிக்குலமவற்றைமாந்தி
ஆனனமலர்ந்ததில்லையாருநீதுயரலெந்தாய். (௩௧௦)

இனியொருகணத்தினங்கோனெழுந்தருடன்மையீண்டுப்
பனிவருங்கண்ணினீயேபார்த்தியென்றுரைத்தானிப்பால்
முனிதனதிடத்துவந்தமுளரியங்கண்ணன்வண்ணக்
குனிசிலைக்குரிசில்செய்ததிற்றெனக்குணிக்கலுற்றும். (௩௧௧)

அருந்தவன்சுவைகளாறோடமுதினிதளிப்பவையன்
கருந்தடங்கண்ணியோடுங்கனைகழுந்துணைவரோடும்
விருந்தினிதருந்திநின்றவேலையின்வேலைபோலும்
பெருந்தடந்தானையோடுங்கிராதர்கோன்பெயர்ந்துவந்தான். ()

தொழுதனன்மனமுங்கண்ணுந்துளங்கினன்சூழவோடி
அழுதனன்கமலமன்னவடித்தலமதனின்வீழ்ந்தான்
தழுவினனெடுத்துமார்பிற்றம்பியைத்தழுவுமாபோல்
வழுவிலாவலியரன்றேமக்களுமனையுமென்றான். (௩௧௩)

அருளுனதுளதுநாயேற்கவரெலாமரியவாய
பொருளலர்நின்னைநீங்காப்புணர்ப்பினாற்றொடர்ந்துபோந்து
தெருடருமிளையவீரன்செய்வனசெய்கலாதேன்
மருடருமனத்தினேனுக்கினிதன்றோவாழ்வுமன்றே (௩௧௪)

ஆயனபிறவும்பன்னியழுங்குவான்றன்னையைய
நீயிவையுரைப்பதென்னோபரதனினீவேறுண்டோ
போயினிதிருத்தியென்னப்புளிஞர்கோனிளவல்பொற்றாள்
மேயினன்வணங்கியன்னைவிரைமலர்த்தாளின்வீழ்ந்தான். (௩௧௫)

தொழுதுநின்றவனைநோக்கித்துணைவர்கடமையுநோக்கி
முழுதுணர்கேள்விமேலோன்மொழிகுவான்முழுநீர்க்கங்கை

---

309. சுரதம் - நல்ல (கனிகளின்) ரசம்.
310. மதுபம் - வண்டு - ஆனனமலர்ந்ததில்லை - துயிலெழவில்லை.
312. கிராதர்கோன் - குகன்.
315. புளிஞர் - வேடர்.

தழுவிருகரைக்குநா தன்றுயினுமுயிர்க்குநல்லன்
வழுவிலாவெயினர்வேந்தன்குகனெனும்வள்ளலென்பான். (நககசு)

அண்ணலஃதுரைத்தலோடுமரிகுலத்தரசனாதி
நண்ணியதுணைவர்யாருமினிதுறத்தழுவிநட்டார்
கண்ணகன்ஞாலமெல்லாங்கங்குலாற்பொதிவான்போல
வண்ணமால்வரைக்குமப்பான்மறைந்தனனிரவியென்பான். (நகஎ)

அலங்கலந்தொடையினானுமந்தியின்கடன்களாற்றிப்
பொலங்குழைமயிலினோடுதுயிலுறப்புணரிபோலும்
இலங்கியசேனைசூழவிளவலுமெயினர்கோனும்
கலங்கலர்காத்துநின்றார்கதிரவனுதயஞ்செய்தான். (நகஅ)

கதிரவனுதயகாலைக்கடன்கழித்திளவலோடும்
அதிர்பொலங்கழலினானவ்வருந்தவன்றன்னையேத்தி
விதிதருவிமானமேவிவிளங்கிழையோடுங்கொற்றம்
முதிர்தருகருணையோடுமுனிமனந்தொடரப்போனான். (நககசு)

தாவிவான்படர்ந்துமானந்தடையிலதேகும்வேலைத்
தீவியகன்னியாகிச்செருக்கியகாமச்செவ்வி
ஓவியமுயிர்பெற்றென்னவும்பர்கோனகருமொவ்வா
மாவியலயோத்திசூழமதிற்புறந்தோன்றிற்றன்றே. (நஉ0)

பொன்மதிற்கிடக்கைசூழப்பொலிவுடைநகரந்தோன்ற
நன்மதிக்கிழவர்தம்மைநோக்கியஞானமூர்த்தி
சொன்மதித்தொருவராலுஞ்சொலப்படாவயோத்திதோன்றிற்
றென்னலுங்கரங்கள்கூப்பியெழுந்தனரிறைஞ்சிநின்றார். (நஉக)

வேறு.

அன்னதோரளவையின்விசும்பினூயிரம்
துன்னிருங்கதிரவர்தோன்றினாலெனப்
பொன்னணிபுட்பகப்பொருவின்மானமும்
மன்னவர்க்கரசனுந்தானுந்தோன்றிற்றால். (நஉஉ)

அண்ணலேகாண்டியாலலர்ந்ததாமரைக்
கண்ணனும்வானரக்கடலுங்கற்புடைப்
பெண்ணருங்கலமுநின்பின்புதோன்றிய
வண்ணவிற்குமரனும்வருகின்றார்களே. (நஉந)

---

319. விதிதரு - பிரமன்தந்த.
320. தீவிய - இனிய.

ஏழிரண்டாகியவுலகமேறினும்
பாழ்புறங்கிடக்குறுபடியதாயதோர்
சூழொளிமானத்துத்தோன்றுகின்றனன்
ஊழியோனென்றுகொண்டுணர்த்துங்காலையே. (௩௨௪)

பொன்னொளிமேருவின்பொதும்பிற்புக்கதோர்
மின்னொளிமேகம்போல்வீரனேன்றலும்
மன்னெதிர்வருநர்களார்ப்பிராவணன்
தென்னகர்க்கப்புறத்தளவுஞ்சென்றதால். (௩௨௫)

ஊனுடையாக்கைவிட்டுண்மைவேண்டிய
வானுடைத்தந்தையார்வரவுகண்டெனக்
கானிடைப்போகியகமலக்கண்ணனைத்
தானுடையுயிரினைத்தம்பிநோக்கினான். (௩௨௬)

கெட்டவான்பொருள்வந்துகிடைப்பமுன்புதாம்
பட்டவான்படரொழிந்தவரிற்பையுணோய்
சுட்டவான்மானவற்றொழுதலுன்னியே
விட்டனன்மாருதிகரத்தைமேன்மையான். (௩௨௭)

அக்கணத்தனுமனுமவணின்றேகியத்
திக்குறுமானத்தைச்செவ்வனெய்தியச்
சக்கரத்தண்ணலைத்தாழ்ந்துமுன்னின்றான்
உக்குறுகண்ணநீரொழுகுமார்பினான். (௩௨௮)

உருப்பவிர்கனலிடையொளிக்கனுற்றவப்
பொருப்பவிர்தோளனைப்பொருந்திநாயினேன்
திருப்பொலிமார்பநின்வரவுசெப்பினேன்
இருப்பனவாயனவுலகம்யாவையும். (௩௨௯)

தீவினையாம்பலசெய்யத்தீர்விலா
வீவினைமுறைமுறைவிளையமெய்ம்மையாய்
நீயிவைதுடைத்துநின்றளிக்கநேர்ந்ததால்
ஆயினுமன்பினாயான்செய்மாதவம். (௩௩௦)

என்றுரைத்தனுமனையிறுகப்புல்லினான்
ஒன்றுரைத்திருப்பதென்னுனக்குமெந்தைக்கும்

---

324. பாழ்புறம் - வெற்றிடம்.
326. கமலக்கண்ணனை - இராமனை.
330. ஆயினும் அன்பினாய் - தாயைக்காட்டிலும் அன்புடையவனே.

இன்றுணைத்தம்பிக்கும்யார்க்குமென்றனன்
குன்றிணைத்தனவுயர்குவவுத்தோளினான். (௩௩௧)

ஈடுறுவான்றுணையிராமன்சேவடி
சூடியசென்னியன்றொழுதகையினன்
வீடுபெருண்டெனவுலர்ந்தயாக்கையன்
பாடுறுபெரும்புகழ்ப்பரதன்றோன்றினான். (௩௩௨)

தோன்றியபரதனைத்தொழுதுதொல்லறச்
சான்றெனநின்றவனிவனையதம்பியை
வான்றொடர்பேரரசாண்டமன்னனை
ஈன்றவள்பகைஞனைக்காண்டியீண்டென்றான். (௩௩௩)

காட்டினன்மாருதிகண்ணிற்கண்டவத்
தோட்டலர்தெரியலானிலைமைசொல்லுங்கால்
ஓட்டியமானத்துளுயிரிற்றந்தையர்
கூட்டுருக்கண்டன்னதன்மைகூடினான். (௩௩௪)

வேறு.

அவ்வயினயோத்திவைகுஞ்சனமொடுமக்குரோணி
தவ்வலிலாறுபத்தாயிரமொடுந்தாயரோடும்
இவ்வயினடைந்துளோரைக்காண்பனென்றிராமனுன்னச்
செவ்வையினிலத்தைவந்துசேர்ந்ததுவிமானந்தானும். (௩௩௫)

வேறு.

எவ்வயினுயிர்கட்குமிராமனேறிய
செவ்வியபுட்பகநிலத்தைச்சேர்தலும்
அவ்வவர்க்கணுகியவமரர்நாடுய்க்கும்
எவ்வமின்மானமென்றிசைக்கலாயதால். (௩௩௬)

வேறு.

தாயருக்கன்றுசார்ந்தகன்றெனுந்தகையனானன்
மாயையிற்பிரிந்தோர்க்கெல்லாமறுலையம்வந்ததொத்தான்
ஆயிளையர்க்குக்கண்ணுளாடிரும்பாவையானான்
நோய்வறுத்துலந்தயாக்கைக்குயிர்புகுந்தானுமொத்தான். (௩௩௭)

எளிவருமுயிர்கட்கெல்லாமீன்றதாயெதிர்ந்ததொத்தான்
அளிவருமனத்தோர்க்கெல்லாமரும்பதவமுதமானான்
ஒளிவரப்பிறந்ததொத்தானுலகினுக்கொண்கணோர்க்குத்
தெளிவருகளிப்புச்செய்புந்தேம்பிழிதேறலொத்தான். (௩௩௮)

ஆவியங்கவனலான்மற்றின்மையாலனையனீங்கக்
காவியங்கழனிநாடுநகரமுங்கவன்றுவாழும்
மாவியலொண்கணாருமைந்தரும்வள்ளலெய்த
ஓவியமுயிர்பெற்றாலேயொத்தனருணர்வுபெற்றார். (௩௩௯)

சுண்ணமுஞ்சாந்துநெய்யுஞ்சுரிவளைமுத்தும்பூவும்
எண்ணெயுங்கலினமாவிலாழியுமெண்ணில்யானை
வண்ணவார்மதமுந்நீருமான்மதந்தழுவுமாதர்
கண்ணவாம்புனலுமோடிக்கடலையுங்கடந்தவன்றே. (௩௪௦)

அனைவருமனையராகியடைந்துழியருளின்வேலை
தனையினிதளித்ததாயர்மூவருந்தம்பிமாரும்
புனையுநூன்முனிவன்றானும்பொன்னணிவிமானத்தேற
வனைகழற்குரிசின்முந்திமாதவன்றாளில்வீழ்ந்தான். (௩௪௧)

எடுத்தனன்முனிவன்மற்றவ்விராமனையாசிகூறி
அடுத்தனதுன்பநீங்கவணைத்தணைத்தன்புகூர்ந்து
விடுத்துழியிளையவீரன்வேதியன்றாளில்வீழ
வடித்தநூன்முனியுமுன்போல்வாழ்த்தினனாசிகூறி. (௩௪௨)

கைகயன்றனையைமுந்தக்காலுறப்பணிந்துமற்றை
மொய்குழலிருவர்தாளுமுறைமையின்வணங்குஞ்செங்கண்
ஐயனையவர்கடாமுமன்புறத்தழுவித்தத்தம்
செய்யதாமரைக்கணீரான்மஞ்சனத்தொழிலுஞ்செய்தார். (௩௪௩)

அன்னமுமுன்னர்ச்சொன்னமுறைமையினடியில்வீழ்ந்தாள்
தன்னிகரிலாதவென்றித்தம்பியுந்தாயர்தங்கள்
பொன்னடித்தலத்தில்வீழத்தாயரும்பொருந்தப்புல்லி
மன்னவற்கிளவனீயேவாழியென்றாசிசொன்னார். (௩௪௪)

சேவடியிரண்டுமன்பினடியுறையாகச்சேர்த்திப்
பூவடிபணிந்துவீழ்ந்தபரதனைப்பொருமிவிம்மி
நாவிடைபெயர்ப்பதொன்றுமுணர்ந்திலனின்றநம்பி
ஆவியுமுடலுமொன்றத்தழுவினனழுதுசோர்வான். (௩௪௫)

தழுவினனின்றகாலைத்தத்திவீழருவிகாலும்
விழுமலர்க்கண்ணீர்மாரிவெள்ளத்தான்முழுகிற்செவ்வி
வழுவுறப்பின்னிமூசுமாசுண்டசடையின்மாலை
கழுவினனுச்சிமோந்துகன்றுகாண்கறவையன்னான். (௩௪௬)

---

340. மான்மதம் - கத்தூரி.

அனையதோர்காலத்தம்பொற்சடைமுடியடியதாகக்
கனைகழலமரர்கோமாற்கட்டவற்படுத்தகாளை
துனைபரிகரிதேரூர்தியென்றிவைபிறவுந்தோலின்
வினையுறுசெருப்புக்கீந்தான்விரைமலர்த்தாளின்வீழ்ந்தான். ()

ஊடுறுகமலக்கண்ணீர்திசைதொறுஞ்சிவிறியோடத்
தாடொடுதடக்கையாரத்தழுவினன்றனிமைநீங்கிக்
காடுறைந்துலைந்தமெய்யோகையறுகவலையூர
நாடுறைந்துலைந்தமெய்யோனைந்ததென்றுலகனைய. (௩௪௮)

மூவர்க்குமிளையவள்ளன்முடிமிசைமுகிழ்த்தகையன்
தேவர்க்குந்தேவன்றாளுஞ்செறிகழலிளவறாளும்
பூவர்க்கம்பொழிந்துவீழ்ந்தானெடுத்தனர்பொருந்தப்புல்லி
வாவிக்குளன்னமன்னூண்மலரடித்தலத்துவீழ்ந்தான். (௩௪௯)

பின்னிணைக்குரிசிறனைப்பெருங்கையால்வாங்கிவீங்கும்
தன்னிணைத்தோள்களாரத்தழுவியதம்பிமாருக்
கின்னுயிர்த்துணைவர்தம்மைக்காட்டினனிருவர்தாளும்
மன்னுயிர்க்குவகைகூரவந்தவர்வணக்கஞ்செய்தார். (௩௫௦)

குரக்கினத்தரசைச்சேயைக்குமுதனைச்சாம்பன்றன்னைச்
செருக்கிளர்நீலன்றன்னைமற்றுமத்திறத்திறேனை
அரக்கருக்கரசைவெவ்வேறடைவினின்முதன்மைகூறி
மருக்கமழ்தொடையன்மாலைமார்பினன்பரதனின்றான். (௩௫௧)

மந்திரச்சுற்றத்துள்ளார்தம்மொடும்வயங்குதானைத்
தந்திரத்தலைவரோடுந்தமரொடுந்தரணியாளும்
சிந்துரக்களிறுபோல்வாரெவரொடுஞ்சேனையோடும்
சுந்தரத்தடந்தோள்வெற்றிச்சுமந்திரன்றோன்றினானல். (௩௫௨)

அழுகையுமுவகைதானுந்தனித்தனியமர்செய்தேறத்
தொழுதனனெழுந்துவிம்மிச்சுமந்திரனிற்றலோடும்
தழுவினனிராமன்மற்றைத்தம்பியுமனையனீராண்
வழுவினியுளதின்றிந்தமாநிலக்கிழத்திக்கென்றான். (௩௫௩)

ஏறுகசேனையெல்லாம்விமானமீதென்றுதன்போல்
மாறிலாவீரன்கூறவந்துளவனிகவெள்ளம்

347. அமரர்கோமான் - காளை - இந்திரனைவென்றஇந்திரசித்தைக்கொன்ற இலக்குமணன்.

351. சேயை - அங்கதனை.

ஊறிரும்பரவைவானத்தெழிலியுளொடுங்குமாபோல்
ஏறிமற்றிணையவீரனிணையடிதொழுதன்றே. (௩௫௪)

உரைசெயினுலகமுண்டான்மணியணியுதரமோவ்வா
கரைசெயலரியவேதக்குறுமுனிகையுமோவ்வா
விரைசெறியலங்கன்மாலைப்புட்பகவிமானமென்றென்
றுரைசெய்துவானுளோர்களொண்மலர்தூவியார்த்தார். (௩௫௫)

அசனியின்குழுவுமாழியேழுமொத்தார்த்தகென்ன
விசையுறுமுரசும்வேதத்தோதையும்விளிகொள்சங்கும்
இசையுறுகுரலுமேற்றினரவமுமெழுந்துபொங்கித்
திசையுறச்சென்றுவானோரந்தரத்தொலியிற்றீர்ந்த. (௩௫௬)

அவ்வயின்விமானந்தாவியந்தரத்தயோத்திநோக்கிச்
செவ்வையிற்படரலுற்றசெகதலமடந்தையோடும்
இவ்வுலகத்துளோர்களிந்திரற்குவகைகூறக்
கவ்வையினேகுமென்றநீர்மையைக்கடுக்குமன்றே. (௩௫௭)

வேறு.

ஆனதோரளவையினமரர்கோனொடும்
வானவர்திருநகர்வருவதாமென
மேனிறைவானவர்வீசும்பூவொடும்
தானுயர்புட்பகநிலத்தைச்சார்ந்ததால். (௩௫௮)

ஆ திருவிருத்தம் - ௪௩௭௮.

## ௩௬, திருமுடிசூட்டுப்படலம்.

நம்பியப்பரதனொடுநந்தியம்பதியைநண்ணி
வம்பலர்சடையுமாற்றிமயிர்வினைமுற்றிமற்றத்
தம்பியரோடுந்தானுந்தண்புனல்படிந்தபின்னர்
உம்பருமுவகைகூரவொப்பனையொப்பச்செய்தார். (௧)

நிருதியின்றிசையிற்றேன்றுநந்தியம்பதியைநீங்கிக்
குருதிகொப்புளிக்கும்வேலோன்கொடிமதிலயோத்திமேவச்
சுருதியொத்தனையவெள்ளைத்துரகதக்குலங்கள்பூண்டு
பருதியொத்திலங்கும்பைம்பொற்பருமணித்தேரானொன். (௨)

1. வம்பு - வாசனை.
2. நிருதியின்திசை - தென்மேற்குத்திசை

ஊழியினிறுதிகாணும்வலியினதுயர்பொற்றேரின்
ஏழுயர்மதமாவன்னவிலக்குவன்கவிகையேந்தப்
பாழியமற்றைத்தம்பிபாணிறக்கவரிபற்றப்
பூழியையடக்குங்கண்ணீர்ப்பரதன்கோல்கொள்ளப்போனான். (௩)

வீடணக்குரிசின்மற்றைவெங்கதிர்ச்செல்வன்வெற்றிக்
கோடணைகுன்றமேறிக்கொண்டறேர்மருங்குபோதத்
தோடணைமவுலிச்செங்கண்வாலிசேய்தூசுசெல்லச்
சேடனைப்பொருவும்வீரமாருதிபின்புசென்றான். (௪)

அறுபத்தேழமைந்தகோடியானைமேல்வரிசைக்கான்ற
திறமுற்றசிறப்பராகிமானுடச்செவ்விவீரம்
பெறுகுற்றவனப்பருச்சிபிறங்குவெண்குடையர்செச்சை
மறுவற்றவலங்கன்மார்பர்வானரத்தலைவர்போனார். (௫)

எட்டமையிறுத்தபத்தினேழ்பெருவளாகவேந்தர்
பட்டம்வைத்தமைந்தநெற்றிப்பகட்டினர்பைம்பொற்றேரர்
வட்டவெண்குடையர்வீசுசாமரைமருங்கர்வானைத்
தொட்டவெஞ்சோதிமோலிசசென்னியர்தொழுதுசூழ்ந்தார். (௬)

வானரமகளிரெல்லாம்வானவர்மகளிராய்வந்
தானமில்பிடியுமொண்டார்ப்புரவியும்பிறவுமூர்ந்து
மீனினமதியைச்சூழ்ந்ததன்மையின்விரிந்துசுற்றப்
பூநிறவிமானந்தன்மேன்மிதிலைநாட்டன்னம்போனாள். (௭)

தேவருமுனிவர்தாமுந்திசைதொறுமுறையிற்சிந்த
ஓவலின்மாரியேய்ப்பவெங்கணுமுதிர்ந்துவீங்கிக்
கேவலமலரால்வேறோரிடமின்றிக்கிடந்தவாற்றால்
பூவெனுநாமமன்றிவ்வுலகிற்கும்பொருந்திற்றன்றே. (௮)

கோடையில்வறந்தமேகக்குலமெனப்பதினாலாண்டு
பாடுறுமதஞ்செலாதபணைமுகப்பருமயானை
காடுறைந்தண்ணலெய்தக்கடாந்திறந்துகுத்துவாரி
ஓடினவோடிற்றுள்ளங்களிதிறந்துடைந்ததேபோல். (௯)

---

3. கோல் - குதிரைச்சவுக்கு.

4. கொண்டல்தேர் - இராமனதுதேர், கொண்டல் - மேகம், இராமனுக்கு ஆகுபெயர், சேடன் - ஆதிசேஷன்.

8. பூ - 1. பூமி 2. புஷ்பம்.

9. கோடை - வெயிற்காலம்.

துரகத்தார்ப்புரவியெல்லாமுங்கையர்சொற்பெற்றென்ன
அரவப்போர்மேகமென்னவாலித்தமரங்களான்று
பருவத்தாற்பூத்தவென்னப்பூத்தனபகையிற்சீறும்
புருவத்தார்மேனியெல்லாம்பொன்னிறப்பசலைபூத்த. (௧௦)

ஆயதோரளவில்செல்வத்தண்ணலுமயோத்திநண்ணி
தாயரைவணங்கித்தங்களிறையொடுமுனியைத்தாழ்ந்து
நாயகக்கோயிலெய்திநானிலக்கிழத்தியோடும்
சேயொளிக்கமலத்தாளுந்திருநடஞ்செய்யக்கண்டான். (௧௧)

வாங்குதுந்துகில்களென்றுமனமிலரெனினும்பல்கால்
தாங்கினரென்றபோதுமைந்தருந்தையலாரும்
வீங்கியவுவகைமேனிசிறக்கவுமேன்மேற்றுள்ளி
ஓங்கவுங்களியாற்சோர்ந்தவுடையிலாதாரையொத்தார். (௧௨)

வேசியருடுத்தகூறைவேதியர்சுற்றமேவறப்
பாசிழைமகளிரன்னராடையைப்பரிந்துசுற்ற
வாசமென்கலவைசாந்தென்றிணையனமயக்கத்தன்னார்
பூசினர்க்கிரட்டியானார்பூசலார்புகுநதுளோரும். (௧௩)

இறைப்பெருஞ்செல்வநீத்தவேழிரண்டாண்டும்யாரும்
உறைப்பிலராதலானேவேறிருந்தொழிநதமின்னார்
பிறைக்கொழுந்தனையநெற்றிப்பெய்வளைமகளிர்மெய்யை
மறைத்தனர்பூணின்மைந்தருயிர்களுமறுக்கந்தோன்ற. (௧௪)

விண்ணுறைவோர்தந்தெய்வவெறியொடுவேறுளோர்தந்
தண்ணறுநாற்றந்தம்மிற்றலைதடுமாறுநீரால்
மண்ணுறைமாதரார்க்கும்வானுறைமடந்தைமார்க்கும்
உண்ணிறைந்துயிர்ப்புவீங்கியூடலுண்டாயிற்றன்றே. (௧௫)

ஆயதோரளவிலையன்பரதனையருளினோக்கித்
தூயவீடணற்குமற்றைச்சூரியன்மகற்குந்தொல்லை
மேயவாளிர்ங்களாயவீரற்கும்பிறர்க்குநந்தம்
நாயகக்கோயிலுள்ளநலமெலாந்தெரிதியென்றான். (௧௬)

என்றலுமிறைஞ்சிமற்றைத்துணைவர்கள்யாவரோடும்
சென்றனனெழுந்துமாடம்பலவொரீஇயுலகிற்றெய்வப்
பொன்றிணிந்தமரரோடும்பூமகளுறைந்துவாழும்
குன்றெனவிளங்கித்தோன்றுநாயகக்கோயில்புக்கான். (௧௭)

வயிரமாணிக்கநீலமரகதமுதலாயுள்ள
செயிரறுமணிகளீன்றசெழுஞ்சுடர்க்கற்றைசுற்ற
உயிர்துணுக்குற்றுநெஞ்சுமுள்ளமுமுசலாட
மயர்வறுமனத்தின்வீரரிமைப்பிலர்மயங்கிநின்றார். (கஅ)

விண்டுவின்மார்பிற்காந்துமணியெனவிளங்குமாடம்
கண்டனர்பரதன்றன்னைவினவினரவர்க்குக்காதற்
புண்டரீகத்துவைகும்புராதனன்கன்னற்றோளான்
கொண்டநற்றவந்தன்னாலேயுவந்துமுன்கொடுத்ததென்றான். (கசு)

பங்கயத்தொருவனிக்குவாகுவிற்களித்தபான்மைத்
திங்கிதுமலராள்வைகுமாடமென்றிசைத்தபோதின்
எங்களாற்றுதிக்கலாகுமியல்பதோவென்றுகூறிச்
செங்கைகள்கூப்பிவேறோர்மண்டபமதனிற்சேர்ந்தார். (உ௦)

இருந்தனரினையமாடத்தியல்பெலாமெண்ணியெண்ணிப்
பரிந்தனனிரவிமைந்தன்பரதனைவணங்கித்தூயோய்
கருந்தடமுகிலினாற்குக்காப்புநாணணியுநன்னாள்
தெரிந்திடாதிருத்தலென்னோவென்றலுமண்ணல்செப்பும். (உக)

ஏழ்கடலதனின்றோயமிருநதிபிறவிற்றோயம்
தாழ்விலாதிவண்வந்தெய்தற்கருமைத்தோர்தன்மைத்தென்ன
ஆழியொன்றுடையோன்மைந்தனுமனைக்கடிதினோக்கச்
சூழ்புவியதனையெல்லாங்கடந்தனன்காலின்றோன்றல். (உஉ)

கோமுனியோடுமற்றைக்கணிதரைக்கொணர்கவென்னா
ஏவினன்றேர்வலான்சென்றிசைத்தலுமுலகமீன்ற
பூமகன்றந்தவந்தப்புனிதமாதவன்வந்தெய்த
யாவருமெழுந்துபோற்றியிணையடிதொழுதுநின்றார். (உ௩)

அரியணைபரதனீயவதன்கணாண்டிருந்தவந்தப்
பெரியவனவனைநோக்கிப்பெருநிலக்கிழத்தியோடும்
உரியமாமகளிரோடுமுகந்தனரொருவில்செல்வம்
கரியவன்றுய்த்தற்கேய்ந்தகாப்புநாணாளையென்றான். (உச)

இந்திரன்குருவுமன்னாற்கேனையரெனவுநின்ற
மந்திரவிதியினார்க்குமயர்வறவரைந்துவிட்டார்

---

19. கனனற்றோளான் - இக்ஷுவாகு. இக்ஷு - கரும்பு, வாகு - தோள்.
22. ஆழி ஒன்றுடையோன் - ஒற்றையாழித்தேரோன், சூரியன.
23. தேர்வலான் - சுமந்திரன்.
25. இந்திரன்குரு - பிரகஸ்பதி. அன்னாற்கேனை - விதியினார் - அசுர குருவாகிய சுக்கிராசாரி.

சந்திரகவிகையோங்குந்தயரதராமன்றமச்
சுந்தரமவுலிசூடும்வாரமுநாளுந்தூற்றி. (உ௫)

அடுக்கியவுலகமூன்றுமாதாரத்துதர்கூவ
இடுக்கொருபேருமின்றியயோத்திவந்திறுத்ததென்றால்
தொடுக்குறுகவியான்மற்றத்துழனியையிறுதிதோன்ற
ஒடுக்குறுத்துரைக்குந்தன்மைநான்முகத்தொருவற்குண்டோ. ()

அவ்வயின்முனிவனோடும்பரதனுமரியின்சேயும்
செவ்வியினிருதர்கோனுஞ்சாம்பனும்வாலிசேயும்
எவ்வமிலாற்றல்வீரர்யாவருமெழுந்துசென்றாங்
கவ்வியமவித்தசிந்தையண்ணலைத்தொழுதுசொன்னார். (உ௭)

நாளைநீமவுலிசூடுநலந்திகழ்பெரியநன்னாள்
காளைநீகிரிச்சமெல்லாங்கழித்தியென்றுரைத்துக்கன்னல்
வேளையேபொடியதாகவிழிக்குநீணுதலின்வெண்பூம்
பூளையேசூடுவானைப்பொருவுமாமுனியும்போனான். (உ௮)

நான்முகத்தொருவனைவநயனறிமயனென்றோதும்
நூன்முகத்தோங்குகேள்விநுணங்கியோன்வணங்குநெஞ்சன்
கோன்முகத்துகந்துகுற்றஞ்செற்றுலகெல்லாங்கொள்ளு
மான்முகத்தொருவனன்றுண்மண்டபம்வயங்கக்கண்டான். (உ௯)

சூழ்கடனுன்கிற்றோயமெழுவகைத்தாகச்சொன்ன
ஆழ்திரையாற்றினீரோடனைமந்தனவென்னவாமென்
றாழியினிறுதிசெல்லுந்தாதையினுலாவியொன்றாய்
ஏழ்கடனீருந்தந்தானிருந்துய்யமருந்துதந்தான். (௩0)

எரிமணிக்குடங்கள்பன்னூற்றியானைமேல்வரிசைக்கான்ற
விரிமதிக்குடையினீழல்வேந்தர்கள்பலருமேந்திப்
புரைமணிக்காளமார்ப்பப்பல்லியந்துவைப்பப்பொங்கும்
சரயுவிற்புனலுந்தந்தார்சங்கினமார்ப்பமன்னோ. (௩௧)

மாணிக்கப்பலகைதைத்தவயிரத்தின்கால்கள்சேர்த்தி
ஆணிப்பொன்சுற்றுமுச்சியழகுறச்சமைத்தபீடம்
ஏணுற்றபணிக்குமாடத்திட்டனரதனின்மீது
சேணுற்றதிரடோள்வீரன்றிருவொடும்பொலிந்தான்மன்னோ. ()

30. தோயம் - ஜலம்.

மங்கலகீதம்பாடமறையொலிமுழங்கவல்வாய்ச்
சங்கினங்குமுறப்பாண்டிறண்ணுமையொலிப்பத்தாவில்
பொங்குபல்லியங்களார்ப்பப்பூமழைபொழியவிண்ணோர்
எங்கணாயகனைவெவ்வேறெதிரபிடேகஞ்செய்தார். (௩௩)

மாதவர்மறைவலாளர்மந்திரக்கிழவர்மற்றும்
மூதறிவாளருள்ளஞ்சான்றவர்முதனீராட்டச்
சோதியான்மகனுமற்றைத்துணைவருமனுமன்றானும்
தீதிலாவிலங்கைவேந்தும்பின்னபிடேகஞ்செய்தார். (௩௪)

அங்கண்வானுலகந்தாயவடிமலர்த்தவிசோனாட்டும்
கங்கைவார்சடையினேற்றான்கண்ணுதலொருவனிந்நாள்
சிங்கவேறனையான்செய்யதிருமுடியாட்டுநன்னீர்
எங்கணேற்றன்னோன்வாழுமென்றனர்புலவரெல்லாம். (௩௫)

மரகதசயிலஞ்செந்தாமரைமலர்க்காடுபூத்துத்
திரைகெழுகங்கைவீசுந்திவலையானனைந்துசெய்ய
இருகுழைதொடரும்வேற்கண்மயிலொடுமிருந்ததேய்ப்பப்
பெருகியசெல்விகண்டார்பிறப்பெனும்பிணிகடீர்ந்தார். (௩௬)

தெய்வநீராடற்கொத்தசெய்வினைவசிட்டன்செய்ய
ஐயமில்சிந்தையானைச்சுமந்திரவமைச்சனோடு
நொய்தினினியற்றிநோன்பின்மாதவனுனித்துக்காட்ட
வெய்தினினியன்றபல்வேறிந்திரற்கேயவென்ன. (௩௭)

அரியணையனுமன்றாங்கவங்கதனுடைவாளேந்தப்
பரதன்வெண்குடைகவிக்கவிருவருங்கவரிவீச
விரைசெறிகுழலியோங்கவெண்ணெயூர்ச்சடையான்றங்கண்
மரபுளோர்கொடுக்கவாங்கிவசிட்டனேபுனைந்தான்மௌலி. (௩௮)

வெள்ளியும்பொன்னுமென்போர்விதிமுறைமெய்யிற்கொண்ட
ஒள்ளியநாளினல்லவோரையினுலகமூன்றும்
துள்ளினகுனிப்பமௌலிசூடினான்கடலின்வந்த
தெள்ளியதிருவுந்தெய்வப்பூமியுஞ்சேருந்தோளான். (௩௯)

சித்தழொத்தனனென்றோதுந்திருநகர்ச்செல்வமென்ன
உத்தமத்தொருவன்சென்னிவிளங்கியவுயர்பொன்மௌலி
ஒத்துமெய்க்குவமைகூரவோங்குமூவுலகத்தோர்க்கும்
தத்தமுச்சியின்மேல்வைத்ததொத்தெனதளர்வுதீர்ந்தார். (௪௦)

---

33. தண்ணுமை - மத்தளம். 35. இதனைவெள்ளிபாட்டென்ப.

பன்னெடுங்காலநோற்றுத் தன்னுடைப்பண்பிற்கேற்ற
பின்னெடுங்கணவன் றன்னைப்பெற்றிடைபிரிந்துமுற்றும்
தன்னெடும்பீழைநீங்கத் தழுவினுடளிர்க்கைநீட்டி
நன்னெடும்பூமியென்னுநங்கை தன்கொங்கையார. (௪௧)

விரதநூன்முனிவன்சொன்ன விதிநெறிவழாமைநோக்கி
வரதனும்பிளைஞர்க்காங்கண் மாமணிமகுடஞ்சூட்டிப்
பரதனைத் தனதுசெங்கோ னடாவுறப்பணித்துநாளும்
கரைதெரிவிலாதபோகக் களிப்பினுளிருந்தகாலை. (௪௨)

௩௯. திருவிருத்தம் - ௪௩௨௦.

# ௩௭-வது, விடைகொடுத்தபடலம்.

பூமகட்கணியதென்னப் பொலிபசும்பூரிசேர்த்தி
மாமணித் தூணிற்செய்தமண்டபமதனினுப்பண்
கோமணிச்சிவிகைமீதே கொண்டனுமின்னும்போலத்
தாமரைக்கிழத்தியோடுந் தயரதராமன்சார்ந்தான். (௧)

விரிகடனடுவட்பூத்த மின்னெனவாரம்வீங்க
எரிகதிர்க்கடவுடன்னையினமணிமகுடமேய்ப்பக்
கருமுகிற்கரசுசெந்தாமரைமலர்க்காடுபூத்தோர்
அரியணைப்பொலிந்ததென்னவிருந்தனனயோத்திவேந்தன். (௨)

மரகதசயிலமீது வானிலாப்பாய்வதென்ன
இருகுழையிடறும்வேற்கணிளமுலையிளநலார்தம்
கரகமலங்கள்பூத்தகற்றையங்கவரிதெற்ற
உரகருநரரும்வானத் தும்பரும்பரவியேத்த. (௩)

உலகமீரேழுந்தன்னவொளிநிழல்பரப்பவானில்
திலகவாணுதல்வெண்டிங்கள் சிந்தைநொந்தெளிதிற்றேயக்
கலகவாணிருதர்கோனைக்கட்டழித்திட்டகீர்த்தி
இலகிமேனிவர்ந்ததென்னவெழுதனிக்குடைநின்றேப. (௪)

மங்கலகீதம்பாடமறையவராசிகூறச்
சங்கினங்குமுறப்பாண்டிறண்ணுமைதுவைப்பத்தாவில்
பொங்குபல்லியங்களார்ப்பப்பொருங்கயற்கருங்கட்செவ்வாய்ப்
பங்கயமுகத்தினார்கண்மயிலனடம்பயிலமாதோ. (௫)

---

42. இப்பாடல் சில பிரதிகளிற்காணப்படவில்லை.

1. பூரி - பொன்.

திரைகடற்கதிருநாணச்செழுமணிமகுடகோடி
கரைதெரிவிலாதசோதிக்கதிரொளிபரப்பநாளும்
வரைபொருமாடவாயினெருக்குறவந்துமன்னர்
பரசியேவணங்குந்தோறும்பதயுகஞ்சேப்பமன்னோ. (௬)

மந்திரக்கிழவர்சுற்றமறையவர்வழுத்தியேத்தத்
தந்திரத்தலைவர்போற்றத்தம்பியர்மருங்குசூழச்
சிந்துரப்பவளச்செவ்வாய்த்தெரிவையர்பலாண்டுகூற
இந்திரற்குவமையேய்ப்பவெம்பிரானிருந்தகாலை. (௭)

மயிந்தன்மாதுமிந்தன்கும்பன்கம்பன்மற்றனுமன்மாறில்
சயந்தருகுமுதக்கண்ணன்சதவலிகுமுதன்றண்டார்
நயந்தெரிததிமுகன்கோதசமுகன்முதலநண்ணார்
வியந்தெழுமறுபத்தேழுகோடியாம்வீரரோடும். (௮)

ஏனையர்பிறருஞ்சுற்றவெழுபதுவெள்ளத்திற்ற
வானரரோடும்வெய்யோன்மகன்வந்துவணங்கிச்சூழத்
தேனிமிரலங்கற்பைந்தார்வீடணக்குரிசில்செய்ய
மானவாளரக்கரோடுவந்தடிவணங்கிச்சூழ்ந்தான். (௯)

வெற்றிவெஞ்சேனையோடும்வெறிப்பொறிப்புலியின்வெவ்வால்
சுற்றுறத்தொடுத்துவீக்குமரையினன்சுழல்செங்கண்ணன்
கற்றிரள்வயிரத்திண்டோட்கடுந்திறன்மடங்கலன்னான்
எற்றுநீர்க்கங்கைநாவாய்க்கிறைகுகன்றொழுதுசூழ்ந்தான். (க௦)

வள்ளலுமவர்கடம்மேல்வரம்பின்றிவளர்ந்தகாதல்
உள்ளுறப்பிணித்தசெய்கையொளிமுகக்கமலங்காட்டி
அள்ளுறத்தழுவினன்போலகமகிழ்ந்தினிதினோக்கி
எள்ளலிலாதமொய்ம்பிரீண்டினிதிருத்திரென்றான். (கக)

நன்னெறியறிவுசான்றோர்நான்மறைக்கிழவர்மற்றைச்
சொன்னெறியறிவுநீரார்தோமறுபுலமைச்செல்வர்
பன்னெறித்தொன்றுதோன்றும்பருணிதர்பண்பின்கேளார்
மன்னவர்க்கரசன்பாங்கர்மரபினிற்சுற்றமன்னோ. (கஉ)

தேம்புனற்படப்பைமூதூர்த்திருநகரயோத்திசேர்ந்த
பாம்பணையமலன்றன்னைப்பழிச்சொடும்வணக்கம்பேணி
வாம்புனற்பரவைஞாலத்தரசருமற்றுளோரும்
ஏம்பலுற்றிருந்தார்நொய்தினிருமதியிறந்ததன்றே. (கங)

10. நாவாய் - மரக்கலம். 13. இருமதி - இரண்டுமாதம்.

நெருக்கியவமரரெல்லாநெடுங்கடற்கிறைநின்றேத்தப்
பொருக்கெனவயோத்தியெய்திமற்றவர்பொருமநீர
வருக்கமோடரக்கர்யாருமடிதரவரிவிற்கொண்ட
திருக்கிளர்மார்பினுன்பிற்செய்ததுசெப்பலுற்றும். (கச)

மறையவர்தங்கட்கெல்லாமணியொடுமுத்தும்பொன்னும்
நிறைவளம்பெருகுபூவுஞ்சுரபியுநிரைத்துமேன்மேல் [ர்
குறைபிதென்றிரந்தோர்க்கெல்லாங் குறைவறக்கொடுத்துப்பின்ன
அறைகழலரசர்தம்மைவருகெனவருளவந்தார். (கரு)

ஐயனுமவர்கடம்மையகமகிழ்ந்தருளிநோக்கி
வையகஞ்சிவிகைதொங்கன்மாமணிமகுடம்பொற்பூண்
கொய்யுளைப்புரவிதிண்டேர்குஞ்சரமாடையின்சொல்
மெய்யுறக்கொடுத்தபின்னர்க்கொடுத்தனன்விடையுமன்றே. (கசு)

சம்பரன்றன்னைவென்றுதயரதனின்றகாலத்
தும்பர்தம்பெருமானீந்தவொளிமணிக்கடகத்தோடும்
கொம்புடைமலையுந்தேருங்குரகதக்குழுவுந்தூசும்
அம்பரத்தனந்தரீத்தானலரிகாதலனுக்கீந்தான். (கஎ)

அங்கதமிலாதகொற்றத்தண்ணலுமகிலமெல்லாம்
அங்கதனென்னுநாமமழகுறத்திருத்துமாபோல்
அங்கதங்கன்னற்றேளாற்கயன்கொடுத்ததனையீந்தான்
அங்கதன்பெருமைமண்மேலாரறிந்தறையகிற்பார். (கஅ)

(இ-ள்.) அங்கதமிலாத - வசையில்லாத, கொற்றத்தண்ணலும் - வெற்றியையுடைய சிராமபிரானும், அகிலமெல்லாம் - பூமியிலெங்கும், அங்கதனென்னுநாமம் - அங்கதனெனனும்பெயர், அழகுற - (காரணக்குறியென) அழகைப்பெற, திருத்துமாபோல்- அப்பெயரைத் திருந்தச்செய்வதுபோல, கன்னற்றேளாற்கு- இட்சுவாகுமகாராசனுக்கு, அயன் - பிரமன், அங்கதங்கொடுத்ததனை - கொடுத்ததாகிய தோளணியை, அங்கு - அத்திருவோலக்கத்தில், ஈநதான் - அங்கதனுக்கு ஈந்தான்; அதன் பெருமை- அதனது பெருமையை, மண்மேல் - பூமியில், ஆரறிந்து - எவர்கள் அறிந்து, அறையகிற்பார் சொல்லமாட்டுவார். எ-று.

---

15. சுரபி - பசு.
17. அம்பரம் - கடல். அலரி - சூரியன்.
18. அங்கமில்லாத - வசையற்ற.

பின்னருமவனுக்கையன்பெருவிலையாரத்தோடும்
வன்னறுண்டீசுமாவுமதடலைக்கரசுமீயா
உன்னைநீயன்றியிந்தவுலகினிலொப்பிலாதாய்
மன்னுககதிரோன்மைந்தன்றன்னொடுமருவியென்றான். (கக)

மாருதவிமலசேனையமகிழ்ந்தினிதருளிநோக்கி
ஆருதவிடுதற்கொத்தார்நீயலாலன்றுசெய்த
பேருதவிக்கியான்செய்செயல்பிறிதில்லைமெய்ப்பூண்
போருதவியதிண்டோளாய்பொருந்துறப்புல்லுகென்றான். (உ0)

என்றலும்வணங்கிநாணிவாப்புதைத்திலங்குதானை
முன்றலையொதுக்கிநின்றமொய்ம்பனைமுழுதுநோக்கி
பொன்றிணிவயிரப்பைம்பூணாரமும்புனைமென்றூசும்
வன்றிறற்கயமுமாவும்வழங்கினன்வழங்குசீரான். (உக)

பூமலர்த்தவிசைநீத்துப்பொன்மதின்மிதிலைபூத்த
தேமொழித்திருவையன்றிருவருண்முகந்துநோக்கப்
பாமறைக்கிழத்தியீந்தபருமுத்தமாலைகைக்கொண்
டேமுறக்கொடுத்தாளன்னுளிடரறிந்துதவினாற்கே. (உஉ)

சந்திரற்குவமைசான்றதாரகைக்குழுவைவென்ற
இந்திரற்கேய்ந்ததாருமென்னுமுத்தாரத்தோடு
கந்தடுகளிறுவாசிதூசணிகலன்கண்மற்றும்
உந்தினனெண்கின்வேந்தற்குலகமுந்துதவினானே. (உ௩)

நவமணிக்காசுமுத்துமாலையுநலங்கொடீசும்
உவமைமற்றிலாதபொற்பூணுலப்பிலபிறவுமொண்டார்க்
கவனவெம்பரியும்வேகக்கதமலைக்கரசுங்காதற்
பவனனுக்கினியநண்பன்பயந்தெடுத்தவனுக்கீந்தான். (உச)

பதவலிச்சதங்கைப்பைந்தார்ப்பாய்பரிபணைத்திண்கோட்டு
மதவலிச்சைலம்பொற்பூண்மாமணிக்கோவைமற்றும்
உதவலிற்றனைகவ'ன்றியில்லனவுள்ளவெல்லாம்
சதவலிதனக்குத்தந்தான்சதுமுகத்தவனைத்தந்தான்.

(இ-ள்.) சதுமுகத்தவனைத்தந்தான் - பிரமனைத்தந்த இறைவனாகிய ஸ்ரீராமபிரான், பதம் - காலில், வலி - பூங்கொடியையொத்த, சதங்கைப் பைந்தார் - பசும்பொற் சதங்கைமாலையணிந்த, பாய் பரி - பாய்ந்தோடுங் குதிரைகளையும், பணை - பெருமையாகிய,

21. தானை - வஸ்திரம்.
24. பவனனுக்கினியநண்பன் - வாயுவின்மித்திரனான அக்கினிதேவன்.

திண்கோட்டு - திண்ணிய தந்தங்களையும், மதம் - மதவளத்தையு முடைய, வலிச்சைலம் - வலியயானைகளையும், பொற்பூண் - பொன்னாற்செய்த பூண்களையும், மாமணிக்கோவை - மாணிக்கமணிமாலைகளையும், மற்றும் - பிறவற்றையும், உதவலில் - ஈகையில், தகைவவன்றி - நடைசெய்வன அல்லாமல், இல்லன - தனதில் வினிடத்தனவாகி, உள்ளவெல்லாம் - உள்ளபொருள்களெல்லாவற்றையும், சதவலிதனக்குத்தான் - சதவலிக்குக்கொடுத்தான். எ-று.

உதவலிற்றகைவன, தொன்றுதொட்டு வருமரசுக்குரிய முடிகொடி முதலியன.

பேசரிதொருவர்க்கேயும்பெருவிலையிதனுக்கீதுக்
கோசரியிலதென்றெண்ணுமொளிமணிப்பூணுந்தூசும்
மூசரிக்குவமைமும்மைமும்மதக்களிறுமாவும்
கேசரிதனக்குமீந்தான்கிளர்மணிமுழவுத்தோளான்.

(இ-ள்.) கிளர் - விளங்குகின்ற, மணி - மணிகளழுந்திய, முழவுத்தோளான் - முழவுபோன்ற சுந்தரத்தோளையுடைய சீராமபிரான், இதனுக்கு - இதற்கு, பெருவிலை - மிக்கவிலையை, ஒருவர்க்கேயும் - ஒருவராலும், பேசரிது - சொல்லுதலரிது, ஈதுக்கோ - இதனுக்கோ, சரியிலதென்று - ஒப்பில்லதென்று, எண்ணும் - மதிக்கின்ற, ஒளிமணிப்பூணும் - ஒளியமைந்த மணிப்பூணும், தூசும் - பொற்றுகிலும், மூசு - உலகெங்கும் மொய்த்துக்கொள்ளும், அரிக்கு - வடவைத்தீயினும், உவமைமும்மை- (சினத்தினால்) ஒப்புமும்மடங்கமைந்த, மும்மதக்களிறும் - மும்மதங்களையுடைய யானைகளையும், மாவும் - குதிரைகளையும், கேசரிதனக்குமீந்தான் - கேசரியென்னும் படைத்தலைவனுக்குங் கொடுத்தான். எ-று.

வளனணிகலனுந்தூசுமாமதக்களிறுமாவும்
நளனெடுகுமுதன்றூரனவையறுபனசன்மற்றோர்
உளமகிழ்வெய்தும்வண்ணமுலப்பிலப்பிறவுமீந்தான்
களனமர்கமலவேலிக்கோசலக்காவலோனே. (உஎ)

அவ்வகையறுபத்தேழுகோடியாமரியின்வேந்தர்க்
கெவ்வகைத்திறனுநல்கியினியனபிறவுங்கூறிப்
பவ்வமொத்துலகிற்பல்குமெழுபதுவெள்ளம்பார்மேல்
கவ்வையற்றினிதுவாழக்கொடுத்தனன்கடைக்கணோக்கம். (உஅ)

---

28. கவலை - வருத்தம்.

மின்னையோர்மௌலிச்செங்கண் வீடணப்புலவர்கோமான்
தன்னையேயினிதுநோக்கிச்சராசரஞ்சுமந்தசால்பின்
நின்னையேயொப்பார்நின்னையலதிலருளரேலைய
பொன்னையேயிரும்புநேருமாயினும்பொருவன்றென்றான். (௨௯)

என்றுரைத்தமரரீந்தவெரிமணிக்கடகத்தோடு
வன்றிறற்களிறுந்தேரும்வாசியுமணிப்பொற்பூணும்
பொன்றிணிதூசும்வாசக்கலவையும்புதுமென்சாந்தும்
நன்றுறவவனுக்கீந்தானாகணைத்துயிலைத்தீர்ந்தான். (௩௦)

சிருங்கபேரியமென்றோதுஞ்செழுநகர்க்கிறையைநோக்கி
மருங்கினியுரைப்பதென்னோமறுவறுதுணைவற்கென்னாக்
கருங்கைம்மாக்களிறுமாவுங்கனகமுந்தூசும்பூணும்
ஒருங்கறவுதவிப்பின்னருதவினன்விடையுமன்றே. (௩௧)

அனுமனைவாலிசேயைச்சாம்பனையருக்கன்றந்த
கனைகழற்காலினானைக்கருணையங்கடவுணோக்கி
நினைவதற்கரிதுநும்மைப்பிரிவென்றனீவிர்வைப்பும்
எனததுகாவற்கின்றென்னேவலினேகுமென்றான். (௩௨)

இலங்கைவேந்தனுக்குமிவ்வாறினியனயாவுங்கூறி
அலங்கல்வேன்மதுகையண்ணல்விடைகொடுத்தருளலோடும்
நலங்கொள்பேருணர்வுமிக்கோர்நலனுறுநெஞ்சர்பின்னர்
கலங்கலரேயசெய்தல்கடனெனக்கருதிச்சூழ்ந்தார். (௩௩)

பரதனையிளையகோவைச்சத்துருக்கனனைப்பண்டை
விரதமாதவனைத்தாயர்மூவரைமிதுலைப்பொன்னை
வரதனைவலங்கொண்டேத்திவணங்கினர்விடையுங்கொண்டே
சரதமாநெறியும்வல்லோர்தத்தமபதியைச்சார்ந்தார். (௩௪)

குகனைத்தன்பதியினுய்த்துக்குன்றினைவலஞ்செய்தேரோன்
மகனைத்தன்புரத்தில்விட்டுவாளெயிற்றரக்கர்சூழக்
ககனத்தின்மிசையேயெய்திக்கனைகடலிலங்கைபுக்கான்
அகனுற்றகாதலண்ணலலங்கல்வீடணன்சென்றன்றே. (௩௫)

ஐயனுமவரைநீக்கியருள்செறிதுணைவரோடும்
வையகமுழுதுஞ்செங்கோன்மனுநெறிமுறையிற்செல்லச்
செய்யமாமகளுமற்றைச்செகதலமகளுமற்றும்
நையுமாறின்றிக்காத்தானிலம்பொறைகடீர்த்தே. (௩௬)

உம்பரோடிம்பர்காறுமுலகமோரேழுமேழும்
எம்பெருமானென்றேத்தியிறைஞ்சிநின்றேவல்செய்யத்
தம்பியரோடுந்தானுந்தருமமுந்தரணிகாத்தான்
அம்பரத்தனந்தர்நீங்கியயோத்திவந்திறுத்தகாளை. (௩௭)

வேறு.

இராமரூய்வந்துதோன்றியிராவணன்றன்னைவீட்டித்
தராதலமுழுதுங்காத்துத்தம்பியுந்தானுமாகப்
பராபரமாகிநின்றபண்பினைப்பகருவார்கள்
நராபதியாகிப்பின்னுநமனையும்வெல்லுவாரே. (௩௮)

ஆக படலம் ௩௭-க்கு திருவிருத்தம் - ௪௩௫௮.

---

உயுத்தகாண்டம் முற்றிற்று.

---

ஸ்ரீ

ஸ்ரீராமஜயம்.

மகாகவி

ஒட்டக்கூத்தர்செய்தருளிய

இராமாயண

# உத்தரகாண்டம்.



இஃது

க. இராமரத்நம் ஐயரவர்களைக்கொண்டு

நன்குபரிசோதித்துத் திருத்தி



பி. நா. சிதம்பரமுதலியார் பிரதர்ஸ்

அவர்களது

சென்னை:

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1926.

*

# உத்தரகாண்டம்.

## படலங்களின் அட்டவணை.



*

*

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

    

ஹரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

## ஏழாவது,

# உத்தரகாண்டம்.

### கடவுள் வணக்கம்.

வெள்ளியங்கிரியைமீதேவெரொடுமெடுத்தவீரக்
கள்ளவன்புயநாலைந்துங்கனகமாமவுலிபத்தும்
துள்ளியம்புவிமேல்வீழவொருகணைதொடுத்துவிட்ட
வள்ளலம்புயமேயன்னமலரடிவணக்கஞ்செய்வாம்.

### வேறு.

ஒன்றாய்ப்பலவாயுளவாயிலவாயுரைப்போர்க்
கன்றாகியாமாயருவாயுருவாகிமெய்ம்மை
குன்றாதஞானக்கொழுந்தாய்க்குணமூன்றிறந்து
நின்றானியாவனனிள்கழனெஞ்சில்வைப்பாம்.

புன்சொற்களேனும்புதல்வன்குதலைச்சொறந்தை
இன்சொற்களாகக்கொளலான்முனியீங்குரைத்த
தென்சொற்றமிழும்வடசொற்றுறையுந்தெரிந்தோர்
என்சொற்கள்பொல்லாதெனினும்மிகழார்களன்றே.

இதுக்குத்தரமில்லையிராமகதைப்பரப்பை
நதிக்குத்தரமன்னதைநன்னெறியுய்ப்பதொன்றை
அதுக்குத்தரமில்லதையாய்பொருளாயவாய
மதிக்குத்தரமன்னதைவாக்கினிற்கூறலுற்றேன்.

கால்காட்டவேகுநெறிகண்ணுடையோர்கண்முன்னே
கோல்காட்டமெல்லக்குருடர்நடக்கலாமால்
பால்காட்டுமின்சொன்முனிபாவழிகாட்டவேத
நூல்காட்டிராமன்கதைமேற்றமிழ்நூற்கலுற்றேன்.

---

## க-வது, திருவோலக்கப்படலம்.

கண்ணாருலகிற்கருதார்குலக்கட்டைவாங்கித்
தண்ணார்தருமந்தழைக்கத்தனிக்காவல்பூண்டு
மண்ணோர்வணங்கமதிவெண்குடைமேனிழற்ற
விண்ணோர்குலம்வாழவிராகவன்வீற்றிருந்தான். (க)

கண்கால்கரஞ்செங்கமலத்தடங்காடுகாட்டத்
திண்கார்வரைபோற்றிருமேனிதிகழ்ந்துகாட்ட
தண்காறடவத்தடம்பூண்முலைத்தையலார்கள்
வெண்சாமரைவீசிடவேதியராசிகூற. (உ)

சீரார்மணிச்சோதிதிரண்டெழுஞ்செம்பொன்மௌலி
காரார்வரைமேற்கதிரோனெழுங்காட்சிகாட்ட
வாரார்தடங்கொங்கைமடந்தையர்வாட்கண்மொய்ப்ப
ஏரார்திருமேனியவ்விந்திரன்மேனியேய்ப்ப. (ஙு)

சீரொத்தமுத்தந்திகழ்நீள்வடஞ்சேர்ந்தசன்ன
வீரத்தொளியாகியவெள்ளைநிலாவையோட்டி
ஆரத்தெழுஞ்செம்மணிக்கோவையலம்பிடத்தண்
காரொத்தமேனிகருஞாயிறுபோன்றுகாட்ட. (ச)

தடஞ்சேர்வலயந்தழுவுந்திருத்தோள்களூக
வடஞ்சேர்வடமந்தரமாமலைதன்னைமானப்
படஞ்சேரரிமாமணிப்பஃறலைக்கோவைகோத்த
புடஞ்சேரெழிற்பொன்னிறவாடைபொலிந்திலங்க. (ரு)

கொடிமன்னுமாடக்குலமென்னுமயோத்தியெய்திக்
கடிமன்னுவாயிற்கடைநின்றருள்காலநோக்கிப்
படிமன்னிவாழும்பலமன்னியர்மண்டலீகர்
முடிமன்னரெல்லாமுறையேபுகுந்தேவல்கேட்ப. (சு)

---

5. நூற்கலுற்றேன - செய்யத்தொடங்கினேன்.

மூவாமுனிக்கூட்டமுமுன்புமுப்பத்துமூவர்
தேவாதிபருந்திருப்பாற்கடலெய்தியெம்மைக்
காவாயெனப்போற்றிடக்கண்டுயினீங்கியின்பம்
ஓவாதுதான்வீற்றிருக்கும்படியொத்திருந்தான். (எ)

வேறு.

அந்தவேலையதனுளடங்கிய
குந்தவேலையில்வாட்கைக்கொடியவர்
நந்தவேலையடங்கலுநக்கினான்
சந்தவேலையைச்சார்சமதக்கினி. (அ)

சிரத்துவாசவிதழிசசிவனைநேர்
பரத்துவாசன்வசிட்டன்பகைகெடத்
துரத்துவாசவன்மெய்க்குறிதூக்கினான்
சுரத்துவாசச்சுகம்புரிகோசிகன். (கூ)

காயுந்தீவினைக்காசிபனத்திரி
தாயின்மன்னுயிர்க்கன்புடைத்தௌமியன்
தூயஞானச்சுகத்திமுதலினோர்
நாயகன்றிருவாயிலைநண்ணினார். (க0)

வாயிலோயெம்வரவுரையென்றலும்
கோயிலெய்தியவனடிகூறலும்
தூயவன்புகுத்தீகெனச்சொல்லலும்
போயவன்புகுத்தப்புகுந்தாரரோ. (கக)

புக்கவந்தப்புராணமுனிவரை
மிக்கெழுந்தவுவகையின்மேதினித்
தொக்கபன்மணிச்சோதிமுடியுறத்
தக்கவாறடிதாழ்ந்துதராபதி. (கஉ)

ஈசனங்கமெரித்திடுநாண்முதல்
கூசனங்கன்குறுகாவருந்தவ
மாசனங்கண்மகிழ்ந்தினிதேறிட
ஆசனங்கள்வழங்கியருளினான். (கங)

---

9. அந்தவேலை - அப்பொழுது, குந்தவேல்அயில்வேலைடங்கலும் கடல் முழுவதையும் சந்தவேலை - வேதத்தையோதுதலாகியதொழில்.

10. வாசவன் - தூக்கினான் கௌதமர்,

பொருந்துமாமணிபோர்த்தபொன்னாசனத்
திருந்தவந்தவிருந்தவத்தோர்களைத்
திருந்துதாமரைச்செங்கணினோக்கிநும்
அருந்தவங்கட்கழிவிலையேயென்றான். (கச)

எங்களுக்குயிராயவிருந்தவத்
துங்களுக்கும்புத்திரபௌத்திரர்
தங்களுக்குமைச்சார்ந்தவர்தங்கட்கும்
அங்கெவர்க்குமருந்துயரில்லையே. (கரு)

சுந்தரச்சிலையோன்சுவைதயூறிய
அந்தவச்சொலைக்கேட்டவருந்தவர்
தந்தமுள்ளத்துவகைதழைப்புற
இந்தவார்த்தையிராமற்கியம்பினார். (கசு)

வேறு.

புலத்தியன்றன்வழிப்போந்துபொல்லாவொழுக்கமில்லாத
குலத்துமுனிவிச்சிரவாவுக்கரக்கிவயிற்றினிடைத்தோன்றிக்
கொலைக்கையரக்கர்முதலாயகோடாகோடிபடைகொன்ற
சலத்தின்வலியாய்நீயிருப்பவுண்டோவெமக்குத்தவறென்றார். ()

கும்பனிகும்பனகம்பன்மனங்கும்புவெம்போரதிகாயன்
உம்பருலகுகம்பஞ்செய்கும்பகன்னனுலகனைத்தும்
தம்பமாயநம்பன்வரைசாய்த்தமொய்ம்பன்றசுக்கிரீவன்
இம்பருலகுதென்புலமேற்றம்பன்விகடனென்றிவரும். (கஅ)

தீயராயகராதியருந்தேவாந்தகனுநராந்தகனும்
மாயைவல்லமகோதரனுமற்றுள்ளோருங்களத்தவியப்
பேயுநாயுமவருடலம்பிச்சுத்தின்னச்சரந்தொட்ட
தூயவில்லிநீயிருக்கத்துயரமுண்டோவெமக்கினியே. (ககூ)

மூவராலுமற்றெழிந்தமுனிவராலுமூவுலகத்
தியாவராலும்வெலற்கரியவெல்லாமாயைகளும்வல்ல
தேவராசன்றனைப்பற்றிச்சிறையிலிட்டவிராவணியாம்
பாவகாரிசிரமறுத்தோனிருக்கவெமக்குப்பயமுண்டோ. (உ0)

என்றுமுனிவர்தாங்கூறவிராமன்கூறுமோரிரண்டு
குன்றமனையதிரள்புயத்துக்கும்பகன்னன்முதலாயோர்
வென்றிகூரிராவணிதன்வீரநீர்கூறியவாறே
அன்றுசிவன்பாலவன்பெற்றவரமும்வலியுமவன்பிறப்பும். (உக)

இரக்கமில்லாவன்னெஞ்சத்தெல்லாமாயைகளும்வல்ல
அரக்கர்பிறப்புமவர்பெற்றவரமும்வலியுமவர்செயலும்
பரக்கவுரைமினெனவமரிற்பண்டிந்திரனுக்குடைந்தசுரர்
கரக்குங்கடலேலழையும்வாங்கிக்கையாற்குடித்தமுனிகழறும். (உஉ)

ஆக திருவிருத்தம் - உங.

---

## 2-வது, புலத்தியப்படலம்.

அண்டர்நாயகனணிதிகழுந்தியாமடுவில்
புண்டரீகநான்முகன்மகன்புலத்தியனென்போன்
மண்டலந்திகழ்திவாகரன்றேரதுவலஞ்சூழ்
விண்டலந்திகழ்மேருவாம்வெற்பினைச்சேர்ந்தான். (க)

அந்தமாமலைச்சாரலிலருவினையகல
இந்தமாநிலத்தியாவருமருந்தவமியற்றும்
சந்தவார்பொழிற்றடவனஞ்சார்ந்துசார்வினைகள்
சிந்தமற்றவனருந்தவஞ்செய்கின்றவேலை. (உ)

நாககன்னியர்நான்மறைமுனிவர்கன்னியர்கள்
போகமேவியபொன்னுலகத்துமங்கையர்கள்
பாகுபோன்மொழிப்பங்கயமுகத்தியரந்தப்
பூகநீடியபொழில்வனநாடொறும்புகுந்து. (ங)

பாடுவார்புனலாடுவார்பன்மலர்பறித்துச்
சூடுவார்மலர்நாடுவார்தோழியர்தம்மைத்
தேடுவாரவர்கூடுவார்தேவருந்திகைப்ப
ஆடுவார்விளையாடுவாராயினரடங்க. (ச)

இந்தவண்ணம்வந்தேந்திழையார்விளையாடச்
சிந்தையானதுகலங்கிடச்செய்தவஞ்சிதய
அந்தமாமுனியாரழலாமெனச்சீறி
வந்துதோன்றினன்மங்கையர்யாவருமருள. (ரு)

எரியுநெஞ்சினனென்னிடையிற்றைநாடொடங்கி
மருவினீரெனின்மங்கைமீருங்களுக்கடாத
கருவுண்டாகெனச்சவிப்பவக்கன்னியர்கலங்கி
வெருவியோடினர்திசைதொறும்வேறுவேறாகி (சு)

---

1. திவாகரன் - சூரியன்.

அரியநான்மறைப்பொருளினையங்கையிற்கனிபோல்
தெரியுமாமுனி திரணவிந்துவின்மடக்கன்னி
புரியுமாதவப்புலத்தியன்சாபமதறியாள்
கரியவார்குழற்கன்னியர் தங்களைத்தேடி. (எ)

பண்டுபோல்விளையாடிடப்பயமிலளெய்தி
வண்டுசேர்மலர்க்குழலினாண்மறையொலிகேட்டுத்
தண்டுகுண்டிகைதாங்குகைத்தவமுனி தன்னைக்
கண்டதும்மவள்வயிற்றினுண்டாயதுகருப்பம். (அ)

மேனியானதுவெளுத்துத்தன்விழிகளும்பசப்ப
மானினோக்கினாண்மற்றதன்காரணமறியாள்
தான்விரைந்துபோய்த்தந்தையைவணங்கவத்தன்மை
ஆனகாரணமாங்கவளென்னெனவறைவாள். (கூ)

பாங்கிமார்களைத்தேடியான்படர்வனமெய்தி
ஓங்குமாதவப்புலத்தியனுறைவிடமுற்றேன்
ஈங்கென்மேனிபோயிவ்வண்ணமாயினதென்ன
ஆங்கியோகத்தினிருந்தவன்புகுந்தவாறறிந்தான். (கo)

அறிந்தமாமுனியரும்பெறற்கன்னியையுடன்கொண்
டிறந்தமாதவப்புலத்தியனிருப்பிடமெய்தி
நிறைந்தகேள்வியாய்நினக்கிவடாரமாகுகைக்குச்
சிறந்துளாள்குணவதியெனச்செப்பினன்கொடுத்தான். (கக)

கொடுத்தநாண்முதற்கொம்பனாள்கோதறுமுனிவற்
கடுத்தவேவல்செய்தாங்கினிதொழுகிடவந்தக்
கடுத்தவெவ்வினைகடிந்தவன்காதலி தன்மேல்
எடுத்தபேரருளுடையனாயிவ்வுரையியம்பும். (கஉ)

காதன்மேவுநின்றோழியராயகன்னியரைச்
சூதநீடுபூஞ்சோலையிற்றேடியான்சொல்லும்
வேதவோசைநீகேட்டலின்விச்சிரவாவென்
றோதுநீதியானொருவனைப்பெறுதியாலென்றான். (கங)

அந்தவாசகமருண்முனிகூறலுமுவந்த
சிந்தையாடிருவயிற்றினிற்றிசைமுகன்றனக்குத்
தந்தைதோன்றியதொன்மைபோற்றவநெறிதழைப்ப
வந்துதோன்றினன்விச்சிரவாமறைவிளங்க. (கச)

---

18. சூதம் - வண்டு.

தன்னினேர்பிறரில்லவன்றனக்கருந்தந்தை
அன்னமாமுனியறம்புரிந்தொழுகலினவற்குப்
பன்னுமாமறைபகருமப்பரத்துவன்றேவ
வன்னியேயெனுங்கன்னியைக்கொடுத்தனன்மகிழ்ந்து. (கரு)

தேவவன்னியச்செய்தவமுனிவனுங்குரைத்த
ஏவல்செய்தவணினிதிருந்தொழுகிடவந்தப்
பாவைதன்வயிற்றோன்றினன்பல்லுலகுள்ளோர்
யாவரும்மனமகிழ்ந்திடவெழின்மணிப்புதல்வன். (கசு)

விரிஞ்சனேமுதலாகியவேதியருவகை
புரிந்தநெஞ்சினர்புரந்தரனதியர்புகுந்து
தெரிந்துநோக்கிவைச்சிரவணனெனப்பெயர்செப்பித்
திரிந்துபோயினர்திசைதொறுஞ்சேயினைவாழ்த்தி. (கஎ)

விரிந்தவேதங்கள்விளம்பியபொருள்களின்முடிவைத்
தெரிந்துகண்டவைச்சிரவணன்செய்தவந்தன்னில்
புரிந்தநெஞ்சினன்புரையறுமுனிவனம்புக்கான்
சரிந்துதீவினையோடிடத்தருமமுந்தழைப்ப. (கஅ)

தோயமேதனக்காகரமாகவுந்துரக்கும்
வாயுவேயுணவாகவுமன்னுபேறத்தை
நேயமாகியுநிராசனனாகியுநியமம்
சாய்விலாதுபல்லாண்டுநின்றருந்தவஞ்சரித்தான். (ககூ)

அன்னதன்மைவைச்சிரவணனருந்தவஞ்செய்ய
முன்னைநான்முகன்றோன்றியிம்மூவுலகத்தில்
உன்னையொப்பவர்யாவருமில்லையென்றுரைத்துச்
சொன்னயாவையுந்தருகுவென்சொல்லுதியென்றான். (உ0)

இலகுமாமணியெழின்முடியிந்திரனியமன்
அலகிலாவலிவருணனுங்கவர்களோடொப்ப
உலகபாலகனாகவுமொண்ணிதிதனக்குத்
தலைவனாகவும்வேண்டுமென்றுவெனத்தந்தான். (உக)

வரவுபோக்கினன்மனோகதியுடையதுவானத்
திரவிதேரினுங்கடியதீரேழுலகுள்ளோர்

---

19. தோயம் - நீர். ஆகரம் - இருக்குமிடம். சரித்தான் - இயற்றினன்.
22. வரவுபோக்கினல் - வருதல்போதல்களாலே.

விரவியேறினும்வெளியிடமிகுவதுவேகப்
புரவியில்லதுபுட்பகவிமானமுங்கொடுத்தான். (உஉ)

கொடுத்துமைந்தநீபோகெனவாசிகள்கூறி
விடுத்துவிண்ணவர்சூழ்தரவிரிஞ்சனேகியபின்
தடுக்கவொண்கலாவருளுடைத்தனபதிதனைப்பெற்
றெடுத்ததாதைக்குப்பெற்றனயாவையுமியம்பி. (உந)

பின்னுங்கூறுவான்பிதாமகன்பெருவரந்தந்தான்
இன்னதானத்திலிருத்தியென்றியம்பலனெனக்குத்
துன்னலார்களாற்றுன்னுறாதகரியதாய்த்துறக்கம்
அன்னதானநீயருள்கெனவருண்முனிகூறும். (உச)

இலங்கைமாநகரிராக்கதரிருப்பிடமுன்னாள்
வலங்கொளாழிமாமாயனோடெதிர்மலைந்தமரில்
கலங்கியோடியநிருதர்கீழுலகிடைக்கரந்தார்
அலங்கன்மொய்ம்பினேயந்நகரிருத்திநீயென்றான். (உரு)

என்றுகூறியதந்தையைபிணையடியிறைஞ்சி
நன்றுநன்றெனமகிழ்ந்தெழிலிலங்கைமாநகரில்
சென்றுமேவினன்சித்தர்வித்தியாதரரியக்கர்
தன்றுணைப்பெருங்கிளைதனைச்சூழ்தரத்தனதன். (உசு)

அலங்கன்மோலியானச்சுதற்கமரழிந்தரக்கர்
கலங்கியோடியநாண்முதற்கவினழியிலங்கை
துலங்கியோங்கிடயாவருந்தொழுதடிபோற்ற
இலங்குநீண்முடியிந்திரனெனன்னவீற்றிருந்தான். (உஎ)

தெண்டிரைக்கடலேழையுஞ்செங்கையால்வாங்கி
உண்டமாமுனியிவ்வகையுரைத்திடக்கேட்டு
வண்டலம்பியதண்டுழாய்மணிமுடிதுளக்கிப்
புண்டரீகமேயனையகட்புரவலன்புகல்வான். (உஅ)

இந்தமாநிலத்திராவணனாதியாமரக்கர்
முந்தையோரெலாம்புலத்தியன்வழியெனமொழிந்தாய்
அந்தவண்ணமேயன்றியேவேறொருவழியால்
வந்துளோர்களார்மாமுனியுரைத்தருளென்றான். (உகூ)

---

24. தானம் - ஸ்தானம் - வசிக்குமிடம்.

26. தனதன் - குபேரன்.

ஏயுநீள்வலியிராக்கதர்தோற்றமுமிலங்கை
ஆயவாறுமந்நகரவர்க்காயகாரணமும்
மாயனுக்கவரோடியவண்ணமுமற்றும்
தூயமாமுனிகூறெனக்குறுமுனிகூறும். (௩௦)

ஆக திருவிருத்தம் - ௫௬.

---

# ௩-வது, அரக்கர்பிறப்புப்படலம்.

---

ஆதிதன்பாலனைத்துலகங்களும்
பேதமாயவுயிரும்பிறந்தநாள்
ஓதுபல்லுயிரிற்சிலவுத்தமம்
ஏதுசெய்வேமெனவிறைகூறுவான். (௧)

பாக்குமிந்தப்பலபுவனங்களை
இரக்கியுங்கோளெனவிரங்காமலேன்
றுரைத்தலாலேன்றுரைத்தவுயிரெலாம்
அரக்கராயினரந்தவரக்கரில். (௨)

ஏதியும்பிரகேதியுமென்றுல
கோதுபேர்களுடன்பிறந்தோர்களில்
நீதியோன்பிரகேதிநெறிதவச்
சாதுமார்க்கநதனினின்றுசார்ந்தனன். (௩)

மற்றையேதிமருவலரோடிடச்
செற்றகாலற்கிளையவடீவிழிக்
கற்றைவார்குழற்கன்னிபிரபைமுன்
பெற்றபேருடையாள்கைபிடித்தனன். (௪)

எத்திக்குந்திறலெய்தியவேதிக்குப்
பத்திச்செம்மயிராள்பயைபாருற
அத்திக்குங்கொடியாடன்வயிற்றிடை
வித்துக்கேசன்பிறந்தனன்வீரனே. (௫)

இந்திரற்குச்சசிபோலெழிலுடை
அந்தவீரற்கணிமணிப்பூண்முலைக்

---

2. இரக்கியுங்கோள் - இரட்சியுங்கள் - காத்தோம்புங்கள்.
5. அத்தி - நெருப்பு.

கந்தவார்குழற்சாலகடங்கரிற்
சந்திதன்மகடாரமதாயினாள். (௬)

நீடுவார்குழனேரிழையாளும்வண்
டாடுதார்திகழந்தவரக்கனும்
கூடுமாவியுங்கூடியவன்றிலும்
பேடுமென்னப்பிரியலராயினார். (௭)

பெருகுகாதலினாள்பெருத்தோங்கிய
ஒருவன்வீரியமுற்றது தாங்கினாள்
விரியும்வெண்டிரைமேவியவேலைவாய்க்
கரியமேகங்கருத்தரித்தெனவே. (௮)

ஆயபேதையரிதினியீன்றதன்
சேயைநீத்துச்சிறந்ததொர்காதலன்
போயதெவ்விடமவ்விடம்புக்கனள்
நேயமோரிடத்தேயன்றிநிற்குமோ. (௯)

சேமமில்லாச்சிறுவனைப்போகட்டுப்
போமடந்தைபுரிந்துபின்பார்த்திலள்
வாமமேகலைமாதர்க்குமைந்தர்க்கும்
காமமிக்கதன்பின்புகண்டோற்றுமோ. (௧௦)

போயபின்பவன்பொற்கரமுட்டிதன்
வாயில்வைத்துமழையிடிப்பொத்திட
ஆயமைந்தன்வந்தஞ்சலென்பாரின்றித்
தாயிழந்துதனியேகதறினான். (௧௧)

இந்திராதியிமையவர்யாவரும்
வந்துகூடிமகிழ்ந்துமலர்மழை
சிந்தியீசன்றிருவுளமென்கொலென்
றந்தரத்திடைநின்றடிபோற்றிட. (௧௨)

ஊறுநீங்கியுலகோருருவினை
பாறியோடப்பவனியுலாவுவான்
நாறுபூங்குழனாயகிதன்னொடும்
ஏறதேறியிறைவனங்கெய்தினான். ௧௩)

இரக்கமின்றியேயீன்றதாய்போகிடத்
தரிக்கிலாதழுஞ்சேயைச்சகத்துழை

7. கூடும் ஆவியும் - உடலும் உயிரும். 10, போகட்டு - போகவிட்டு.

அருட்கணேக்கிடுமொளுடைநாயகி
திருக்கணேக்கிச்சிவறகிவைசெப்புவாள். (௧௪)

தாயைவிட்டுத்தனியேகதறுமிச்
சேயினுக்கருள்செய்யத்தகுமென்
நாயகற்கந்தநாயகிகூறலும்
பாய்புனற்சடைதாழும்பரமனும். (௧௫)

ஒல்லையீன்றவளொத்தபிராயமும்
எல்லையில்பரமாயுவுமிங்கமும்
நல்லமைந்தன்பெறுகெனநல்கிவிண்
செல்லுஞ்சீரிற்றிகழ்புரநல்கினன். (௧௬)

மேயகற்பமிறைவர்தம்மெய்யுமத்
தாயொடொக்கும்பிராயமுந்தாள்சடைத்
தூயநக்கன்றுணேவியராகத்தன்
ஆயவர்க்கமுண்டாகவருளினன். (௧௭)

எக்கணக்குமிறந்தபெருமையன்
பொக்கணத்தன்புலியதளாடையன்
முக்கணத்தன்மொழிபெற்றழுபவன்
அக்கணத்திலவனடிதாழ்ந்தனன். (௧௮)

சுந்தரத்தோட்சுகேசனெனச்சிவன்
தந்தபேரும்வலியுந்தழைத்திட
அந்தரத்தோரரும்பதிசெய்ததில்
இந்திரன்போலினிதிருந்தானரோ. (௧௯)

கொங்கடங்கலர்கொன்றையெருக்கராத்
திங்கடங்கியசெஞ்சடையானிடைப்
பங்கடங்கியபார்ப்பதியோனருள்
அங்கடலும்பெற்றவரக்கர்கோன். (௨௦)

பாடுகந்தருவக்குலப்பாவையைக்
கேடில்கீர்த்திக்கிராமணிபெற்றிடும்
தேடுமாமணித்தெய்வவதியினே
நாடிமற்றவனன்மணஞ்செய்தனன். (௨௧)

---

17. நக்கன் - உடையில்லாதிருப்பன், சிவபெருமான்.
18. பொக்கணத்தன் - பிச்சைவாங்கும் பையையுடையவன.
20. கொங்கடங்கு - வாசனைதங்கிய.

சோதிமாமணிமௌலிச்சுகேசனும்
தீதிற்றெய்வவதியெனுந்தெய்வமா
மாதராளுமயங்கிவளர்பெருங்
காதலென்னுங்கடல்கரைகண்டிலர். (உ௨)

மாலைதாழும்வரைத்தோட்சுகேசனுக்
கேலவார்குழல்வல்லிவயிற்றிடை
மால்கொண்மாலியவானுஞ்சுமாலியும்
மாலியும்மெனுமைந்தர்பிறந்தனர். (உ௩)

தூயதெய்வவதிவயிற்றோன்றிய
ஆயமூவருமாகுதிபொங்குமுத்
தீய்வளாநதெனச்செய்மருநதொன்றுமில்
நோய்வளர்ந்தெனநொய்தின்வளர்ந்தனர். (உ௪)

அந்தமூவருமன்றரன்றன்னிடைத்
தந்தைபெற்றவரமும்வலியுந்தஞ்
சிந்தையொன்றித்திகழ்வடமேருவாம்
சந்தநீடுதவவனஞ்சார்ந்தனர். (உ௫)

இஞ்சைபொய்களவேதம்வந்தெய்திடும்
வஞ்சபாவம்வரும்வழிமாற்றிநல்
தஞ்சநெஞ்சர்தயாவினர்தம்புலன்
அஞ்சும்வென்றங்கருந்தவஞ்செய்தனர். (உ௬)

முன்னைவானவர்தானவர்முற்றுநூல்
மன்னுதாபதர்மானுடர்முற்றுளோர்
அன்னமூவருந்தவங்கண்டில
தென்னதாகுமோவென்னநடுங்கினர். (உ௭)

ஆயகாலத்தவர்கண்முனந்தணன்
தூயமாமணித்தேர்மிசைத்தோன்றினன்
ஏயுமாதவத்தீர்நும்மனத்திடை
மேயயாவையும்வேண்டுதிர்நீரென்றான். (உ௮)

பூவயன்புகலப்புகல்வாரவர்
தேவராதிதிரிபுவனத்துளோர்

---

25. சந்தம்நீடு - சந்தனமரங்க ளடர்ந்த.

26. இஞ்சை - ஹிம்ஸை; பிற வுயிர்களுக்குத் துன்பஞ்செய்தல்.

28. அந்தணன் - பிரமதேவர்.

யவரேனுமெமக்கமர்தோற்கவும்
தேய்வில்காலங்கள்செல்லவுஞ்செய்குவாய். (உகூ)

சிந்தையெண்ணிநீர்செப்பினயாவையும்
தந்தனனெனத்தாமரையாசனத்
தந்தணனருளவவர்கடோள்
வந்துபூரித்ததுமால்வரையென்னவே. (௩0)

ஆதிதன்னிடைப்பெற்றவரத்தினால்
பீதியின்றிப்பெரும்புவனங்களை
வாதபித்தகபமெனவன்றிறல்
ஓதுமூவருமொத்துநலிந்தனர். (௩க)

காசில்பன்னகநாடுகலங்கிட
நாசமெய்திடநாணிலமானது
வாசவன்முதல்வானவரோடிட
ஆசைபத்துமடிப்படுத்தாரரோ. (௩உ)

மாவலிப்புயமாலியவான்முதல்
மூவர்முப்புவனங்களைவென்றுளோர்
தேவர்தச்சன்வருகெனச்செவ்விதின்
கூவிமற்றவனுக்கிவைகூறினர். (௩௩)

வேறு.

நீடுபுவனமொருமூன்றுமயனுஞ்சிவனுநெடுமாலும்
கூடியமரின்முயன்றாலுங்குறுகவரியவரணினதாய்
ஆடலமரர்பதியினழகழிக்குநகரியமைக்கவுடன்
நாடுநல்லோயெனவுரைப்பநன்றென்றவன்போய்நாடுவான். (௩ச)

முன்னாள்காற்றும்வாசுகியுந்தந்தம்வலியினிலைமொழிந்து
பொன்னார்வரையைவாசுகிதன்பணத்தாற்பொத்திப்புறங்காப்பத்
தன்னார்விசையின்பெருங்காற்றுத்தாக்கச்சற்றுஞ்சலியாது
விண்ணோர்முனிவர்வேண்டியிடவீரன்சற்றேமுடிசாய்த்தான். ()

வாயுவியக்கமில்லாமல்வானோருலகுமண்ணுலகும்
காயுங்கனலிலிட்டதுபோற்கலங்கிப்புழுங்கிக்கசிந்துற்று

---

32. ஆசைபத்தும் - பூமியந்தரங்களுஞ் சேர்ந்த பத்துத்திசையும்.

34. ஆடல் - வெற்றி.

35. பணம் - படம். வீரன் - வாசுகி.

வேயின்பணத்தாயிரவரவைவிண்ணோர்முனிவர்வேண்டியிடச்
சாயும்படிசற்றறியாதான்சற்றேதன்றாண்முடிசாய்த்தான். (௩௬)

குலையாநிலத்தின்வடமேருக்குலையமோதியதன்றிகழ்முத்
தலையார்சிகரந்தனைமுறித்துத்தடங்காலதனைக்கொண்டுபோய்
அலையார்கடலின்முன்பிட்டவந்தவிடமிம்மூவருக்கு
நிலையாம்பதியாமெனத்தக்ஷசனினைத்தங்கதனைநிகழ்த்துவான். ()

மூலதனத்தேதகனகமலைமுறிந்தசிகரமுக்குடுமிக்
கோலவரையாங்கதுபிறராற்குறுகவரியகொள்கைத்தால்
சால்பினமைந்ததேவராலிலங்கையெனும்பேர்தரத்தக்க
தாலமனையகடுந்திறலோர்க்கதுவேநகரமாமென்று. (௩௮)

தாழ்வின்மதியுங்கதிரோனுந்தாராகணமுந்தண்முகிலும்
கீழவாகிமேலோங்கிக்கிளர்ந்துபரந்தநகரியினைச்
சூழுமதிலும்மம்மதிலைச்சூழ்ந்தகிடங்கும்புவிசூழ்ந்த
ஆழிவரையுமவ்வரைசூழகல்வேலையையுமொத்துளவால். (௩௯)

குலையும்வண்ணநமையெல்லாங்குலிசத்தாலேசிறகறுக்கும்
இலகுமவுலியிமையவர்கோனின்னுஞ்சீறவடுக்குமென
அலைகொள்பெருநீர்க்கடல்சூழ்ந்தவழியாவிலங்கையரண்டேடி
மலைகளெல்லாமவ்விடத்தேதிரண்டதொக்குமணிமாடம். (௪0)

ஆக்குமூலமுகாந்தத்திலழிக்கும்வெள்ளமதுதனக்குப்
போக்குவேண்டுமெனவகுத்தபோன்றபெருங்கோபுரவாயில்
காக்குமொருநாற்றிசைமுடிவுகாணப்போந்தகாரிருளை
நீக்குமணிவேதிகையிருபானிறைத்துவிளங்குநெடுவீதி. (௪௧)

சகரரகழ்ந்தநீள்வேலைதழுவுமிலங்காபுரிதன்னில்
நிகரில்கூடகோபுரநீண்டரரங்கசாலைநிலைநீண்ட
சிகரமாடமணிச்சோதிதிரண்டொன்றாகச்சிவந்தெழலால்
மகரவேலைபுட்டிகழும்வடவாமுகத்தைபொத்துளதால். (௪௨)

இன்னதாயவிலங்கையெனதெழிலைநோக்கியெதிரில்லா
மன்னுவீரமாலியவான்சுமாலிமாலியென்றுரைக்கும்
மன்னர்மூவர்மகிழ்ந்ததவாசாரியற்குப்பூசனைசெய்
தொன்னலார்களிடந்துடிப்பவொலிநீரிலங்கையுட்புகுந்தார். (௪௩)

யாவராலுங்கண்களினலெட்டிப்பார்க்கவொண்ணாத
காவலிலங்கைவீற்றிருந்தகாலைக்கானகந்திருவப்

---

41. வேதிகை - மேடை.

பாவையான தருமதைதான்பயந்தமூவர்மங்கையரில்
மூவராயவாங்கவர்க்குமூத்தவடைவின்முறைகொடுத்தார். (சச)

சிறந்தகாதன்மாலியவான்றனக்குஞ்சீரார்சவுந்தரிக்கும்
பிறந்தார்பெருவச்சிரமுட்டிபெரும்பாக்கன்றுன்முகப்பெயரான்
மறந்தான்பெருகுஞ்சுதகத்தனியாயகோபன்மத்தன்மனத்
தறந்தானில்லாவுன்மத்தனென்னுமெழுவானலையொடும். (சரு)

பாதிமதிக்கும்படர்செய்நுதல்பணியாமணியார்கலையல்குல்
சூதுமதிக்குமிளங்கொங்கைத்துணைக்கைகசியுந்தாமலர்மேல்
மாதுமதிக்கும்வடிவுடையமங்கைவனசவிலோசனையும்
கேதுமதிக்குஞ்சுமாலிக்கும்பிறந்தாரறந்தான்கெட்டோட. (சசு)

கிளையார்வெம்போரனலன்சீர்திகழுமனிலனரனென்போன்
வளையாவலியான்சம்பாதிமன்னுமுலகின்மைந்தர்மனத்
தளையாம்விழியாடருமதைதான்றந்தமூவர்மங்கையரில்
இளையாடனக்குமாலிக்குமிவர்கள்பிறந்தாரீரிருவர். (சஎ)

கூற்றமென்னக்கனலென்னக்கொதிக்குமாலமெனக்கொடியோர்
சீற்றமென்னவறிவில்லோர்செல்வமென்னத்திகழறத்தின்
ஆற்றினிற்றலதுநீக்கியாறிலொன்றுகொள்ளாதே
ஏற்றமானவிறைகொள்ளுமிறைவன்பாவமெனவளர்ந்தார். (சஅ)

ஏழிற்புவனம்படைத்தோன்பாலெய்தும்வரத்தின்வலியாலே
பாழித்திரடோண்மாலியவான்சுமாலிமாலியெனும்பாலர்
ஆழித்தேராடற்சிலைபாளவிலாதபெரும்படையர்
ஊழிக்காற்றுந்தீயும்போலுலகையழிக்கத்தொடங்கினர். (சகூ)

மேவிநாகர்கருவறுத்துவேலையுலகம்பொடிசெய்து
தேவர்கோமான்றனைத்துரந்துசெம்பொனுலகங்கைக்கொண்டு
பாவுமிந்தப்பல்லுலகம்படைத்துக்காத்துத்துடைக்கிற்போர்
மூவராவாரெவர்களுக்குமூவரின்றியெனமொழிந்தார். (ருo)

ஆ_ திருவிருத்தம் - கoகூ.

---

*

## ௪-வது, தோத்திரப்படலம்.

பரவைப்புவியிலுள்ளோரும்பதிவிட்டோடிந்திரனாதி
சுரர்கோத்துள்ளோர்யாவர்களுந்துணையில்லாதமுனிவர்களும்
உரகப்புவனத்துள்ளோருமொருபற்றின்றியுறுதுயரால்
நரகத்துள்ளேகிடந்தழுந்திநடுங்குமுயிர்போனடுங்கினார். (௧)

கோலகாலமாயுலகங்குலையநடுங்கிக்கொதித்துவரும்
ஆலகாலமமிழ்தாகவடக்கிவைத்தமணிமிடற்றன்
பாலகாலமுண்பலெனப்பற்றிப்பற்றியிழுத்திடுமக்
காலகாலன்வீற்றிருந்தகயிலைமலையைக்கண்ணுற்றார். (௨)

குவளைவிழிப்பூணிளங்கொங்கைக்கொடிமென்னுசப்பிற்குபின்மென்
அவளையிடத்துமுடியிடத்துமாறுந்தரித்தவரும்பொருளைத் [சொல்
தவளநிறத்துத்தடங்கிரிமேற்றவமாமுனிவர்தற்சூழப்
பவளவரைபோற்பொலிந்திலங்கும்பரசுபாணிதனைக்கண்டார். (௩)

எந்தாய்போற்றியேறேறுமிறைவாபோற்றியோழுலகும்
தந்தாய்போற்றியணிகொன்றைத்தாராய்போற்றிசகமுய்ய
வந்தாய்போற்றிவஞ்சகர்முன்வாராய்போற்றிமலரோனும்
செந்தாமரைக்கட்டிருமாலுமாணாய்போற்றிசிவபோற்றி (௪)

என்றுபலவும்போற்றித்தன்னிணைத்தாமரைத்தாடாழ்ந்திறைஞ்சி
நின்றுபரவுமவர்தம்மைநீலகண்டன்முகநோக்கி
இன்றுதேவாசுராதிகளுமிருடிகளுமங்கல்லீரும்
ஒன்றிவந்தகாரணமென்னுரைமினென்னவவருரைப்பார். (௫)

வன்றிண்புயத்துமாலியவான்முதலாயுள்ளவாளரக்கர்
சென்றிந்திரனைச்செருவழித்துத்தேவருலகங்கைக்கொண்ட
வென்றிவீரர்தங்குலத்தைவேரோடறுத்துவிடுதியேல்
இன்றுநாளையுலகங்களெல்லாமழிப்பரெனவுரைத்தார். (௬)

மல்லார்புயத்துச்சுகேசன்றன்வழியிலுள்ளவாளரக்கர்
எல்லாப்பிழையுஞ்செய்தாலுமென்னையடைந்தோராதலினால்
கொல்லேலனவரையென்கையாற்கொல்லுமுபாயங்களுமெல்லாம்
வல்லோன்மாயனென்றவர்க்குமங்கைபாகன்விடைகொடுத்தான். ()

---

2. பாலகாலம் - பாலன்காலம், மார்க்கண்டன் வாழ்நாளை.

வேறு.

தூயவன்றன்பொற்றுணையடிபணியார்தொகுபுரமெரித்தவன்றரித்த
தேயவன்விடுப்பத்தேவர்தானவர்கள்சித்தவித்தியாதரரியக்கர்
மேயகந்திருவர்விளங்குமாமுனிவர்மேதினியுள்ளவர்நாகர்
ஆயவர்முதலோரச்சுதன்றுயிலுமணிதிருப்பாற்கடலடைந்தார். ()

தீங்குடையரக்கர்செல்வமுஞ்செருக்குந்திறலுடனுயுவுஞ்சிதைந்து
நீங்கினவெங்குநிலையிலாவெவையுநிலையினைப்பெற்றதுமறைகள்
ஓங்கினவுலகம்பிழைத்தனவென்னுமுவகையானதுதழைத்தோங்க
ஆங்கவர்தம்மைக்கண்டெழுந்தாடியார்ப்பதுபோன்றதவ்வாழி. (கூ)

முந்தைமாலியவான் சுமாலிமாலியெனும்பேரிவர் மூவருமவர்கள், தந்தைகாளையருந்தடமணித்தேருந்தானையுந் தறைப்படுமுபாயம், சிந்தையாலெண்ணித்தேவர்கோன் முதலோர்திருமகள்காதலன்றன்பால், வந்தனரென்றுமகிழ்ந்தெதிர்கோடல் போன்றனவரும்பெருந்திரைகள். (கo)

நீடியவரக்கர் நெடும்படைக்குடைந்துநிலையருந் தொருவழிநில்லா, தோடியகாலருடைந்தமேனியர்களுறுவிடாய் தணிப்பலென்றவர்கள், வாடியமுகத்துமார்பினும்புயத்தும் வளரிளம்புன்னையின்வாசம், கூடியசீதம்பூசுவண்டிவலைகொடுப்பதொப்பதுகுளிர்தென்றல்.

ஆயபாற்கடலையடைந்தவாங்கவர்க ளதுவிதென்னையுறுமவர்க்கும், காயமதுலர்த்தித்தவம்புரிவார்க்குங் கமலவாசனன்முதலாய, தூயயோகியர்க்குஞ்சொல்லுமேதுவுக்குஞ சுருதிக்குந்தோன்ற நில்லாது, சேயனுயடைந்தோர்க்கணியனுமாதி தேவனைத்தெரிவுறக்கண்டார். (கஉ)

ஒருங்கியமனத்தின்யோகியருண்மை யுணர்ந்தவருறுபெருந்தவத்தால், நெருங்கியெம்மருங்குமிருந்து சேவிப்பநாரதர்நின்றுகூத்தாடப், பெருங்கரமெடுத்துமாகதரேத்தப் பிறழ்திருப்பாற்கடன்மேலோர், கருங்கடல்பரந்துகிடந்தது போலக்கிடந்துதன்கண்டுயில்வானை. (கங)

தெரிவையரிருவர்செங்கையால்வருடச்சிவந்தசேவடிமலரானைக்
கருவரைசூழ்ந்துநின்றபின்னெளியைக்கட்டியபீதகவாடைத்

---

8. தரித்த தேயவன் - நெருப்பைத்தரித்தவன், தேயு நெருப்பு தேய் எனக்குறைந்தது.

12. சேயன் - கிட்டாதவன். அணியன் - கிட்டியவன்.

14. பீதகவாடை - பீதாம்பரம். பீதம், பீதகம் - பொன்.

திருவரையானைத்திசைமுகனுதிதேவருமுனிவருமுற்றும்
ஒருவருமொழியாதுலகங்களெல்லாமுள்ளடங்குதரத்தினனை. (கச)

வண்டெனவிரிஞ்சன்மாமறைபாட வடவரைகொட்டையாய்ச் சூழ்ந்த, திண்டடங்கிரிகளல்லியாய்த்திசைக ளிதழ்களாய்த்திகழு மிவ்வண்டப், புண்டரீகத்தைப்புறப்படவிட்ட வுந்தியாம்பொற்ற டத்தானை, தெண்டிரைக்கடலிலெழுந் தினகரன்போற்றிகழொளி யாரமார்பினனை. (கரு)

வண்டடங்கிரிபூண்கட்டியதொப்பலையங்கடழூவுதோளானைத்
தண்டரளத்தினகையொளிதருளம்புபவளமுந்தாமரையிரண்டும்
குண்டலமிரண்டுங்குனிசிலையிரண்டுங்கூடியகுளிர்மதிவதன
மண்டலத்தானைவலக்கைகீழ்க்கொடுத்துவளரொளிமணிமுடியானை.

ஆழியுஞ்சங்குஞ்சாபமும்வாளுமடற்பெருந்தண்டுமிவ்வைந்தும்
சூழவும்வந்துநின்றுமெய்காப்பச்சுவணனுஞ்சுற்றும்வந்துலாவப்
பாழியாவனந்தன்போகத்திலவன்றன்பணங்களாயிரங்கொடுகவிப்ப
ஊழியாயிரங்களொருகணமாகயோகநித்திரையுகந்தானை. (கஎ)

இன்னதன்மையனுயிந்திரைகொழுநன் யோகநித்திரைசெயுங் காலை, முன்னைவானவர்கடானவர்முனிவர் முதலினோர்மூண்டெழு பயத்தால், என்னதாகுங்கொலிவன்றிருவுள்ளமெனநினைந்தியாவரு நிற்ப, அன்னவன்குணந்தானறிந்தன வெல்லாமமரர்கோனறைய லுற்றனனால். (கஅ)

உலகினையெல்லாம்படைத்தளித்தழித்து முண்டுமிழ்ந்தளந்தி டந்தாண்டும், நிலையுடைவானுய்வாயுவாய்க்கனலாய் நீருடனிலனு மாயெண்ணில், தொலைவிலாவுயிராய்ச்சுடர்களாய்த் தோன்றுச்சுரு தியாய்ச்சிவனயனுகி, அலகிலாவிளையாட்டாடுவாயகண்ட மாயினு யாருனையறிவார். (கக)

பிறிவிலாவுயிருமுடலும்வாசகத்துப் பேர்கலாப்பொருளுமாங் கெனவும், வெறியுநன்மலருமெள்ளுமெண்ணெயும் போல்விரிந்தவ ப்பொருள்களின்மேவிக், கறுவிமேன்முயலுங்காரியமாகிக் கண்ணு மாய்க்கருத்ததுவாகி, அறிவுமாயறியப்படுவதாயறிவா ராயினுயாரு னையறிவார். (உ௦)

---

15. அல்லி - அகவிதழ். ஆரம் - கௌத்துவமணி.
17. போகம் - பாம்பினுடல்.

பொன்னிடைப்பிறந்தமுடி பலபணியாய்ப்பூண்பனபோலவும்புணரி
தன்னிடைப்பிறந்ததடநிரையெனவுந் தரையினின்றெழுதுகளெ
நின்னிடைப்பிறந்தசுரர்மனுசாதிமுதலபல்லுயிர்களுநீயும் [னவும்
அன்னியமாகியாயினென்று தியாழியாயாருனையறிவார். (உக)

உறப்பெரிதுணரினுருவமாயருவாயுளவுமாயில்லையுமாகிப் [தாய்
பிறப்பிலியாகிப்பிறத்திநீயாண்பெண் ணலியெனப்பேசவும்படைத்
மறப்பகையொன்றுமன்றியேயென்றும் வலிகொள்பஞ்சாயுதமெடுத்
அறச்சிலு தடைத்துநின்றிறமுரைக்கினச்சுதாயாருனையறிவார் [தி

பவக்கடல்கடக்கும்படியறியாதுபலபெருஞ்சமயத்தின்மயங்கி
அவத்தமேபிறந்துநசிப்பவரெல்லாமகண்டமாய்வரவுபோக்கற்றுச்
சுவத்தனுய்நின்றநின்னிலையறியார்நின்னுளேதோன்றியவுலகம்
அவற்றினாதாரமாதியாந்தெய்வமாயினையாருனையறிவார். (உங)

தெவ்வடலவுணவடவியையெறியத் திகிரிசங்கங்கையிற்றரித்
தாய், செவ்வடங்கோத்தமணியெனக் கோத்துத்திரிபவுஞ்சிதறு
வையுலகை, மொய்வடமேருவோடுமூன்றுலகை முற்றுமுண்டாலி
லைத்துயின்றோய், அவ்வடநின்றதெவ்விடமறியே னமலனேயாரு
னையறிவார். (உச)

கனற்றுறைநிற்றியந்தணர்க்குள்ளங்கசிந்துகண்ணீர்சொரிபத்தர்
இனத்தொடுநிற்றியேவல்செய்தொழிந் தோர்யாவர்க்குமாசையினி
மனத்துறைநிற்றியோகியருக்குமாசறுதூயஞானிகட்கும் [ற்றி
அனைத்தினுநிற்றியொருவழிப்படாதவநந்தனேயாருனையறிவார். ()

ஒருமுதலாகிக்கவடுமூன்றாகியுயர்பெருஞ்சாகைகள்பலவாம்
தருவெனநின்றாய்தலைபுலைதெரியாச்சமயநூல்யாவையுந்தந்தாய்
அருவினையாகியருவினைப்பயனுயருவினையனுபவிப்பவனாய்
அருவினையாக்கியருவினையறுக்குமற்புதயாருனையறிவார். (உரு)

என்பனசொல்லியிந்திரனேத்துமேத்தொலியிருசெவியெய்த
இன்பநித்திரையைவிட்டுணர்ந்தருளியேமூலகுடையவனவரை
அன்புறநோக்கியனைவரும்வந்தகாரணமென்னெனவகத்தில்
துன்பமதொழித்துத்தொழுதகையினராய்ச்சுராதிபரிவையிவைசொனனர். ()

வரப்பெருவலியான்மாலியவானுஞ்சுமாலியுமாலியுமென்னும்
இரக்கமிலரக்கரெதிரிலாப்படையரெவ்வுலகங்களுமழி

---

23. சுவத்தன் - சுவஸ்தன; சுகமாயிருப்பவன்.

26. அருவினையாகி - உருவமில்லாதவனாகி.

நெருப்பெனவழிக்குநிருதர்வேரறுத்துநீடுலகங்களைநீயே
பரித்திலையாகினினியடிதொட்டுப்படைக்கவேண்டும்படிபடுமே. ()

நஞ்சினுங்கொடிய வெஞ்சினவரக்கர்நாடொறுங்கோறலாலே,
எஞ்சினேஞ் செக்கிலெட்பிழைத்தாற்போ லிங்குவந்தேங்களேபி
ழைத்தேம், அஞ்சனமேனிக்கஞ்சநாண்மலர்க்கண் ணமலமற்றொரு
கதியிலேம், அஞ்சினேம்வந்துன்னடியிணையடைந்தேமாழியாயப
யமுன்னபயம். (உகூ)

ஆங்கவரபயமென்றலுமஞ்சலஞ்சனீரென்றுகையமைத்துத்
தீங்குடையரக்கர்குலத்தைவேரறுத்துஞ்சிந்தைநோய்தீர்க்குவென்றிண்ணம்
நீங்கள்போயுங்கணிலைகளினின்மினெனவடனேமியோன்விடுப்ப
ஓங்கியவமரர்போயபினரக்கர்க்குற்றனவொழிவின்றிமொழிவாம்.()

ஆ திருவிருத்தம் - கஙகூ.

## ரு-வது, இலங்கையழித்தபடலம்.

வேறு.

இமையவரரக்கராலேயுற்றதம்மிடும்பையெல்லாம்
உமையொருபாகத்தானுக்கோடியேயுரைத்தவாறும்
நமையடைந்தவரைநாமேவெல்கைநன்றன்றுநாகத்
தமைதுயிலரிபாற்சென்மினென்றவனறைந்தவாறும். (க)

அந்தமந்திரத்தைநெஞ்சிற்கொண்டனரமரரெல்லாம்
செந்திருமகள்கோனுக்குத்தேவர்கோன்செப்பவுங்கள்
சிந்தைநோய்தீர்ப்பென்றிண்ணமென்றருள்செய்தவாறும்
வந்துசாரணர்தாங்கூறமாலியவானுட்கொண்டான். (உ)

தம்பியர்க்குற்றவெல்லாந்தானுரைத்தவருந்தானும்
வெம்பியமனத்தராகிமேற்செயும்வினைகடேர்வார்
அம்புயக்கண்ணன்றன்மேலாயிலோர்குற்றமில்லை
உம்பர்களவனதுள்ளந்திருத்தியுட்படுத்துக்கொண்டார். (௩)

ஆதலானம்மையெல்லாமடியறவெண்ணுமந்தப்
போதமிலாததேவர்பொன்னகர்பொடியதாக்கிக்

28. அடிதொட்டு - அடியிலிருந்து.
2. சாரணர் - ஒற்றர்.

காதிமற்றவரையெல்லாங்களப்படக்கொன்றுமீடும்
தீதினஞ்சேனைமுன்னேசெல்கதேர்வருகவென்றான். (௪)

வீரராயுள்ளோர்மண்ணில்விண்ணுலகத்தில்யாரும்
நேரெதிர்போரையின்றிச்செப்பியநிருதர்சேனை
போரெனும்வார்த்தைகேட்டுப்பொங்கியவுவகைதூண்டி
ஆர்கலியுவாவுற்றென்னவாவிமிக்கெழுந்ததன்றே. (௫)

எறிபடைவீரர்பாய்மாவிருண்மதக்களிறுதிண்டேர்
செறிதலிற்பக்கம்பேரவிடம்பெறாதுள்ளேதேங்கி
மறிகடன்மோழைபட்டதாமெனவாயிறோறும்
உறுபடைவெள்ளந்தள்ளிப்பரந்தவெவ்வுலகுமுட்க. (௬)

இடருறுகருமம்பார்த்தோமென்னகாரியஞ்செய்தோமென்
றுடனடுங்கும்பரெல்லாமொளிப்பிடந்தேடியோடப்
புடைபரந்துயர்ந்தவாயிற்போக்கிடம்பெறாதுவானில்
தடமுகில்பரந்ததென்னப்பரந்ததுதானைவெள்ளம். (௭)

காலிடையணிந்தவீரக்கழலினர்கவசமிட்ட
கோலநீண்மார்பர்பட்டங்குலவியநுதலர்கொற்ற
மாலியவானுமற்றைச்சுமாலியுமாலிதானும்
நீலமால்வரைபோன்மெய்யரேறினார்நெடும்பொற்றிண்டேர். (௮)

தேரொலிகொம்புகாளஞ்செறிவளைசின்னமூதும்
பேரொலிமுழங்குபேரிமுரசொலிபெருங்கைவேழக்
காரொலிகவனமாவாங்காற்றொலியெல்லாங்கூடி
ஓரொலியாகியெங்கும்பரந்ததெவ்வுலகுமோட. (௯)

பண்ணுறுபாய்மாவேழம்படர்கொடிநெடுந்தேர்காலாள்
எண்ணுறுசேனைபார்கீழிருந்திடவெழுந்துபொங்கி
விண்ணுலகாயதெல்லாம்வெளியிடமின்றிவிம்மி
மண்ணுலகாகும்வண்ணஞ்சேர்ந்ததுவளர்ந்ததூளி. (௧௦)

உதிரமுமென்புமேகம்பொழிந்திடவோங்கல்கம்பித்
ததிர்படக்காகமேங்கவன்னதுன்னிமித்தங்கண்டு
மதியினிற்கொண்டுமீளார்வாளெயிற்றரக்கருந்தும்
விதியினைவெல்லவல்லார்யாவரேவினையமெண்ணி. (௧௧)

அரக்கராரம்பமெல்லாமமரர்கள்விடுத்ததூதர்
உரைத்தலுமுறக்கநீங்கிபுணர்ந்தெழுந்துவணப்புள்ளின்

---

4. மீடும் - மீள்தும், திரும்புவோம்.

வரைத்தடந்தோளிலேறிவானவர்வாழ்த்தவந்தச்
செருக்கிளர்படையைச்சென்றுதாக்கினான்றிருவின்கேள்வன். (கஉ)

துன்னணிகலப்பொற்சோதிச்சுடரொளிமறைத்துத்தோன்றத்
தன்னெதிரில்லான்றோளிற்றோன்றியசார்ங்கபாணி
பொன்னெடுமேருவுச்சிப்பொருசிலையோடுங்கூட
மின்னொடுந்தழுவிநின்றுவீங்குகார்மேகம்போன்றான். (கங)

வெற்றிசேர்வயினதேயன்விரிசிறைவேகவாயு
உற்றிடமுறிந்ததிண்டேருலைந்ததோலுருண்டபாய்மா
கொற்றவாளரக்கரெல்லாங்குன்றெனக்குலைந்துவீழ்ந்தார்
பற்றுறுபதாகையெல்லாம்பஞ்சுபோற்பறந்துபோன. (கச)

ஆயவைநிகழுங்காலையஞ்சனக்கிரியைமூடித்
தோயகமெல்லாம்வாரிச்சொரிவதோர்தோற்றங்காட்டித்
தீயவர்வளைந்தசெமபொற்சிலையினர்செறுத்துநோக்கி
மாயவன்றன்னைச்சூழ்ந்துவடிக்கணைத்தூவியார்த்தார். (கரு)

ஒண்டிறலரக்கர்வேலையுவாக்கிளர்ந்தென்னப்பொங்கித்
திண்டடந்தேருமாவுஞ்சினமுகக்கரியுந்தூண்டித்
தண்டுவாள்முசலங்கூர்வேல்சக்கரஞ்சூலம்பாசம்
பிண்டிபாலங்களாதிப்பெரும்படைக்கலங்கள்விட்டார். (கசு)

வேறு.

தேவர்தேவனவ் வரக்கர்செய்தசெயல் கண்டுதன்னுணகை
செய்துதன், சாவமேருவை வளைத்துவிட்டசத கோடிகோடிதழல்
வாளியால், பாவகாரிகள் விடுத்தபல்படை யனைத்தையும்பொடி
படுத்தியம், மூவரேவிவிடு முன்பெரும்படையை மூடவாளிமழை
தூவினான். (கஎ)

தேர்துணிந்ததிகழ் தேர்கடாவினர் சிரந்துணிந்தனதுணிந்த
மாத், தார்துணிந்தசமுகந்துணிந்ததட வெண்மருப்புடையசெம்
முகக், கார்துணிந்த மருமந்துணிந்தகவ சந்துணிந்தனதுணிந்த
விற், போர்துணிந்தவடல வீரர்கால்கையுடல பொன்முடித்தொ
கைதுணிந்தவே. (கஅ)

கொள்ளைவார்கணை துணித்தபேருடல் குரத்தினிற்பரிமிதித்
தலும், அள்ளலாயுதிர வாறுமண்டியவ மர்க்களத்துநிலையற்றிரும்,
பள்ளமோடுபெருவெள்ளமாமென வடைந்துபோன படைவெள்ள
முட், கள்ளமேவியசுமாலிவில்லினணை கட்டிமாயவனை முட்டினான்.

14. வயினதேயன் - கருடன். தோல் - யானை.

எடுத்தவில்லின னெறிந்தநாணினனிடித்துரப்பிய கடுஞ்சொலன், மடித்தவாயினன் மதித்தநெஞ்சினனிம் மாயன்வெங்குருதி யங்கையிற், குடிப்பெனென்றுசினம் வந்துமுந்தவுயர் குன்றுபோற் புரவியொன்றுதேர், முடுக்கிவந்து சரமாரியாலரியை மூடினனமரரோடினர். (உ௦)

நல்லைநல்லைவலிநன்றுநன்றுயிர்நடுங்குபோர்செயுமுபாயநீ
வல்லைவல்லையுனையொக்கும்வில்லிகளிம்மாநிலத்தினிலையென்றுமால்
வில்லினுந்துசரமாரியாலவன்விடுத்தவெஞ்சரம்விலக்கிவெம்
பல்லவங்கள்கொடுபாகனோடுபரிகொன்றுதேர்பொடிபடுத்தினான். ()

நேரழிந்தமரரோடுதானவர்களோடவோடவிடுநீள்கொடித்
தேரழிந்துதமயன்றளர்ந்துவினைசெய்வதொன்றுமறியாதிடக்
காரழிந்திடவிடித்தடர்ந்துவருகாலனென்னவிடமென்னவும்
வாரழிந்ததிருமேனியானவயமாலிவந்திடைவிலக்கினான். (உஉ)

ஆனைபாய்புரவிதேர்நெருங்கியவளப்பிலாவடலரக்கர்வெஞ்
சேனைசூழவுயர்தேர்கடாவிவரைமேல்கொள்சீயமெனமாலிபோர்
வானைநீள்வயினதேயன்மாலியொடுமண்ணுவிண்ணுமறையப்பெருஞ்
சோனைமாரியெனவோய்விலாதசுடர்வாயவாளிமழைதாவினான். ()

அந்தவார்கணையையாதிநாயகனனைத்தையுந்துணியவெய்துநீள்
கந்தநாறுகுழன்மங்கைமாருடையகண்கணேர்கொடியவம்பினால்
மந்தராசலமெனத்திரண்டபுயமாலிமார்புருவவெய்துதேர்
உந்துபாகனொடுவாசிநாசமுறவொன்றலாதசரமுந்தினான். (உச)

மார்பினின்றுதிரவாறுமண்டிடமயங்கியொல்லையினுணர்ந்துதன்
தேரினின்றுமிழியக்குதித்துவெகுள்சிங்கமாமெனமுழங்கிவெங்
காரினின்றிடிவிழுந்தெனச்சுரர்கலங்கிடக்கலுழனெற்றிமேல்
மூரிநின்றதொருதண்டுகொண்டதிரமோதினனசுபமோதினான். ()

நெற்றிமேலடிபடத்தளர்ந்துநிலைநின்றவீரனிலைகண்டுமால்
வெற்றிநேமியைவிடுப்பமற்றதுவிளங்குமாறிருவரன்றியும்
மற்றுமோரிரவியுண்டெனக்கதுவமாலிதன்சிரமடிக்கழுத்
தற்றுவீழவதுகண்டுவானவர்களாடினார்நிருதர்வாடினார். (உ௬)

மண்டலங்கிழியவாளரக்கர்கண்மயங்கிவீழவடவெற்பொடும்
திண்டடங்கிரிகள்விண்டிடத்திகழ்திசைத்தடங்கிரிதிகைத்திட

---

21. பல்லவம் - அம்பு.
22. வார் - நீர், ஆகுபெயராய்க் கடலுக்காயிற்று.
26. விளங்கும் ஆறிருவர் - பன்னிரண்டு சூரியர்கள்; துவாதசாதித்தர்.

அண்டம்விண்டதெனவஞ்சிவானவரலந்தலைப்படவகண்டமும்
உண்டசெம்பவளவாயில்வைத்துவளையூதினான்மறைகளோதினான்.

மாவிபட்டுவிழமற்றவன்றமயன்மார்கள்சோகமுறமாயவன்
கோலிவிட்டசுடர்நேமியாலுமிருகூரயிற்கணைகளாலுமா
ஆலமொத்தகதையாலும்வாளினுமரக்கர்தம்படையவிந்தவால்
வேலியுற்றபயிர்காலியுற்றெனவும்வேந்தரில்லுலகுமென்னவே. ()

வெற்றிமேவுதிகழ்சக்கரத்தின்மிசைவிண்ணிலேலறுவனவீழ்பவாய்
அற்றைபைந்தலைகளுற்றவீரமகளாடுமம்மனையையொத்தவால்
கொற்றவெண்குடையினற்றதிண்கையவைசென்றுவீழ்வகுளிர்திங்
பற்றிராகுவினையொத்தபாறுகள்பரந்தகூளிகணிரந்தவே. [களைப்

வெஞ்சுடர்க்கணைதுணித்தசெந்தலைகண்மீளவவ்வழிமுளைத்தபோ
லுஞ்சடக்கெனவெழுந்தசெங்குருதியோதவேலையினையுற்றதால்
மஞ்சடக்கியநிறத்தனேமிபதம்வன்கரஞ்சிரமறுப்பவுள்
அஞ்சடக்கியகிடக்குநீலநிறவாமையொத்தனரரக்கரே. (௩௦)

கால்களற்றவுரமொத்தலிற்சுளகுகன்னமொத்தலினுரோமநீள் [ல்
வால்களற்றனதுடைப்பமொத்தலின்மருப்புலக்கையினையொத்ததா
மாலையொத்தநிறமால்செயக்கொடிமலர்க்கைபற்றுவதுவைக்குமுன்
கோலிநெற்குறுமிடத்தையொத்தமதகும்பிபட்டுவிழுசூழலே. ()

குன்றின்மேலிடிவிழுநதெனக்கதைகொதித்துமோதவுயர்கொ
ற்றவம, பொன்றுதேர்களவைதூளியாயினவுலந்ததானைகண்மலைந்
துபோர், வென்றிவீரர்கள்கரும்புபோலுடனெரிந்துபோயினர்விள
ங்குசீர்க், கன்றுவாளிலொருகண்டநூறுபலகண்டமாயினர்கள்கண்
டரே. (௩௨)

வேறு.

அடுமாலியவானீங்கிடவடையாருயிர்கவரும்
கடுமாலியவானவ்வழிகடிதேதாடியகாலைக்
கொடுமாலியவான்சேனையுங்குலைந்தோடிடக்குலையா
நெடுமாலியவானின்றெனநின்றான்பகைவென்றான். (௩௩)

கட்டோய்கமழ்கண்ணித்திகழ்கண்ணன்றனைக்கனலாக்
கெட்டோடியபடைகொன்றனேகிளர்வீரிலெண்ணப்

---

28. காலி - பசுக்கூட்டம். 29. பாறுகள் - பருந்துகள்.
31. செயக்கொடி - ஜயலட்சுமி, வெற்றித்திரு.
32. கண்டா - கண்டகர் முட்போன்றவர்.

பட்டோயலையுலகிற்பெரும்பழி பூண்டறநெறியை
விட்டோர்செயல்செய்தாயிது கேண்மியெனவிளம்பும். (௩௪)

பொரவிட்டமிலாதோரமர்புறகிட்டவர்புகுந்தோர்
கரம்விட்டவெம்படையோரமர்கைவிட்டவர்தூதாய்
வரவிட்டவரலிமங்கையர்வன்றேயருன்னுறவென்
றுரம்விட்டவரிவர்வெங்கொலைக்குரியோரலருரவோய். (௩௫)

தடநதோணிருதன்கூறிடத்தாமோதரன்மொழிவான்
உடைந்தோடியுமக்கஞ்சியொளித்தும்பர்களொன்முன்
படைந்தோர்களுக்கமரஞ்சியழிந்தோடினுமுமைநான்
தொடர்ந்தேகொலமுன்னேவரங்கொடுத்தேனெனச்சொன்னான்.()

தன்னேடிணையில்லாதவன்றனிங்கிவைகூற
நின்னேடெதிர்பொருவான்றனிநின்றேனிலைபேரேன்
என்னேடெதிர்பொரவாவெனநிருதன்னிடித்துரப்பா
மின்னேடிகலொளிவேலினைவிடுத்தானறங்கெடுத்தான். (௩௭)

வெவ்வேலையில்லிடருங்கியவிமலன்றருகுமரன்
கைவ்வேலொடுவலியொப்பதுகனலாமெனக்கனலாச்
செவ்வேதிகழ்திருமார்பிடைச்சென்றங்கெதிர்தைப்ப
அவ்வேலினைப்பிடித்தச்சுதனவன்மார்பிடையெறிந்தான். (௩௮)

அஞ்சத்தியழைப்பக்கடிதணுகாரருளுடையான்
கஞ்சத்திருநயனன்றிகழ்கரியோன்விடுகனல்கால்
வெஞ்சத்தியரம்பைக்கனிமேவூசியின்வெய்யோன்
நெஞ்சத்தினுழைந்தோடநெடுஞ்சத்திதளர்ந்தான். (௩௯)

இறந்தானவனெனவானவரெழுந்தாடுமளவில்
உறங்காவுணர்ந்தனன்போலவுமுணர்ந்தானொருசூலம்
அறங்காவலன்மிசையேவினனதுசென்றவன்மணிமார்
பிறங்காதெதிர்தைத்தோடவிகலோனிதுசெய்தான். (௪௦)

கருவிற்கிடைகடியுங்கனைகழலான்கருமுகிறன்
உருவிற்கிடையொருவன்றனதுதரத்துமுகத்தும்

35. பொரஇஷ்டம் (விருப்பு) இல்லாதவர்.

39. அஞ்சத்தி - அஞ்சுஅத்தி (யானை) கஜேந்திரன் அரம்பைக்கனி-வாழைப்பழம்.

41. கருவிற்கிடை - கருப்பத்திற் பொருந்திக் கிடத்தல். உருவிற்கு-நிறத்துக்கு.

செருவிற்கிடையாதோன்வலிசெறிமுட்டியிற்சாடி
ஒருவிற்கிடைபாய்ந்தவ்வழியுயர்வெற்பெனநின்ருன். (சக)

உடையான்வலியினனச்சுதனு நசிமெறனவுரப்ப
இடையாதெனநிர்நின்ருனெறிகடல்வாய்விழவிற்கால்
புடையாவுறுபெருங்காற்றினிற்பொருதேர்கரிபரியாட்
படையானதுபஞ்சாமெனப்பறந்தோடிடவறைந்தான். (சஉ)

மறிந்தார்சிலர்மலைபோற்பெருவாடைச்சருகிலைபோல்
செறிந்தார்சிலர்பிறிந்தார்சிலர் திகைத்தார்சிலராயுப்
பறிந்தார்சிலர்பதைத்தார்சிலர்பகைத்தார்சிலர்பணைத்தோள்
முறிந்தார்சிலர்தெரிந்தார்சிலர்சொரிந்தார்தலைமுளை. (சங)

கழிந்தார்சிலர்கடலேழையுங்கலுழன்சிறைக்காற்ருல்
எழுந்தார்சிலர்விழுந்தார்சிலரிளைத்தார்சிலரிழிபா
அழிந்தார்சிலர்புரண்டார்சிலரரண்டார்சிலர்மிகையற்
ருழிந்தார்சிலரிரிந்தார்சிலருலைந்தாரடலரக்கர். (சச)

பாழிப்புயத்தரக்கன்பழியொடுதம்பியுந்தானும்
ஆழித்துயினெடுமால்படையைந்தாலுமக்கருளன்
ஊழிப்பெருக்காற்ருலுமிவ்வுலகிற்பிழைப்பரிதென்
ரேழிற்பெரும்பாதாளமதடைந்தாரிகலிடைந்தார். (சரு)

முன்னைமுழுவலிமாலியவானைமுதலானோர்
தந்நேர்வலிபிறரில்லவர்தாஞ்சாலகடங்கர்
உன்னேடெதிர்மலைந்தார்புலத்திபனூர்வழியுள்ளோர்
என்ருவிவைமுனிபின்னுமிராமற்கிவையியம்பும். (சசு)

ஓராவறநிருதக்குலமொழியாமலறுக்கக்
கூராழியினுற்கல்லதுகூடாததிறுணத்தோய்
நேரேதிருநெடுமாலவனீயாதலினவர்தம்
வேரோடறவறுத்தாய்பிறர்வேருரிதுசெய்வார். (சஎ)

ஆ திருவிருத்தம் - கஅகூ.

---

46. ஓரா அறநிருதர் - அறத்தையோராத நிருதர்.

## ௬-வது, இராவணன் பிறப்புப்படலம்.

வேலையுண்டமாமுனிவன்விரித்துவிளம்புங்கதைகேட்டுக்
கோலமணிநீண்முடிதுளக்கிக்கொண்டல்வண்ணன்வியப்பெய்தி
ஆலமனையவிராவணன்றனவதாரமுமாங்கவன்செயலும்
சாலவிருப்புற்றனன்கேட்கச்சாற்றுகென்னமுனிசாற்றும். (௧)

பெருநாளரக்கர்பாதாளம்போராதுறையுங்காலத்தில்
ஒருநாள்சுமாலிதன்மகளுக்கொத்தவரனைத்தேடுவான்
குருநாண்மதிபோன்முகத்தவளைக்கூடக்கொண்டிக்குவலயத்தில்
வருநாளம்பொன்மதிலிலங்கைமன்னன்குபேரன்வரக்கண்டான். ( )

காதற்குருசொல்வழிகாட்டக்கற்குந்தோறுமிகப்பெருகும்
போதத்தளவும்பெருகியிடும்புட்பகத்துமிசையேறி
வேதத்தலைவரியக்கர்திகழ்விண்ணோர்சூழவருவானைக்
கோதற்றகுணத்தாதையிடங்கூடுமாசையுடையானை. (௩)

திக்குநிகழிந்திரனியமன்சீரார்வருணன்குபேரனென
ஒக்கவெண்ணுந்தரத்தானையொளிசேர்சங்கபதுமநிதி
பக்கம்வந்துசேவிப்பப்பண்டுசெய்ததவத்தானைத்
தொக்கமணிநீண்முடியானைச்சுமாலிகண்டிங்கிவைநினைந்தான். (௪)

வலியாரெல்லாங்கீழ்ப்படுமற்றையவரேமேற்பட்டுப்
புலிவாழிடத்தேபசுவுறைந்துபோராராழித்தேராராய்
அலியாமிவனேயாணாகியஞ்சாதிலங்கையுட்புகுந்து
நலிவாரின்றியரசாளக்கண்டோநாராயணனாலே. (௫)

என்றுநினைந்துதன்மனத்திலெழுந்தவெறுப்பன்பாதாளம்
சென்றுபுகுந்துதமையனுடன்செய்யுங்கருமந்தெரிந்தெண்ணி
வென்றிவேல்வில்பிறைபவளம்விளங்குந்தரளம்விளைவதனத
துன்றுகுழறன்மகடன்னைச்சுமாலிநோக்கியிவைசொன்னான். (௬)

தக்ககுணத்தோய்பெண்பிறக்கத்தந்தைகுலமுந்தாய்குலமும்
புக்ககுலமுமிவைவிளங்கும்பூமேலிருந்தபொற்பாவை
ஒக்குமுருவமுடையாயிங்குன்னாலேநங்குலம்விளங்கும்
மக்களுண்டாம்புலத்தியன்றன்மகனைவரனாய்வரியென்றான். (௭)

---

2. வரனை - கணவனை.

6. வேல் - கண், வில் - புருவம், பிறை - நெற்றி, பவளம்—உதடுகள், **தரளம்** - பல்வரிசை.

தந்தையுரைத் தவம்மாற்றந் தலைமேற்கொண்ட தடங்கண்ணாள்
எந்தைகுறையையான்முடிப்பலிதுநன்றாகதீதாக
வந்தவண்ணம்வருகவெனமனத்திற்கொண்டுமாமறைதேர்
சந்தமலரோன்மகன்மகன்சேர் தானமதனைத்தானுற்றாள். (அ)

சுத்தமுனிநீத்தொழின்முடித்துச்சுடர்நீராழுண்டெனத்தோன்ற
வைத்தகலசவனமுலையாண் மருங்குவளைத்துமலர்க்கமலம்
ஒத்தசரணப்பெருவிரலாலொல்கிநின்றுநிலங்கீறி
மைத்தகுழலாண்மற்றவன்முன் மலர்மேன்மடந்தையெனநின்றான்.

அன்னவவளையருமறையோனருளினோக்கியார்மகணீ
என்னகருமம்போந்ததுபேரென்னென்றுரைப்பச்சுமாலிதரு
கன்னிபெயர்கைகசிவந்தகருமங்கண்டுகொள்ளென்ன
மின்னினிடைதன்கருத்தறிந்துவேதமுனிவன்விளம்புவான். (௧௦)

மைந்தர்ப்பெறநீகாதலித்துவந்தாய்வந்தகாரியத்தைச்
சிந்தைபெண்ணினீயென்னைச்சேர்ந்தகாலந்தீதுன்கண்
வந்தகுமரர்குணத்தாலும்வரத்தினாலுங்கொடியோராய்
இந்தவுலகையிடர்செய்வாரென்னமின்னேரிடைவிளம்பும். (௧௧)

உன்னையடைந்துன்னருள்பெற்றேற் குன்றன்குணத்துக்கொவ்வாத
அன்னகுமரருண்டாகலாமோவென்றாயிழைகூற
வன்னியனையசீற்றத்துன்வயிற்றிற்பிறந்தமைந்தர்களில்
பின்னையவன்பேரறிவுடையானாகுமென்றான்பெருந்தவத்தோன். ()

இந்தத்துவங்களுரைத்தமுனியிரவிகுடபாற்றிசைவீழும்
அந்தப்பொழுதிலாங்கவளையன்பாணினைவின்படியணையப்
பத்துத்தலையும்பத்திரட்டிதோளுமாகப்பாரொடுக்கும்
சத்திக்கிரியான்றசக்கிரிவன்றான்வந்துதித்தான்றரைநடுங்க. (௧௩)

நறையார்குழலாடன்வயிற்றின்ஞாலமடங்கவிழுங்கிடினும்
நிறையாவயிற்றினெடுவரைபோனீண்டவுருவனிமிர்கையன்
பிறையாரெயிற்றுப்பிலவாயன்பெருத்தவிழியனொருக்காலும்
குறையாதெழுவெம்பசியினொடுகும்பகருணன்பிறந்தனனால். (௧௪)

பண்ணார்மொழியாளவள்வயிற்றிற்பருத்தவிடையும்பருங்கழுத்தும்
விண்ணார்மேகத்திடியென்னவெடித்தகுரலுமுடையாளாய்க்

8. சந்தமலரோன்மகன்மகன் - பிரமபுத்திரராகிய புலஸ்தியரின் புதல்வராகிய விச்சிரவஸ்.

கண்ணார்கனலும்புகையுமெழக்கனன்றுகாலன்கருக்குலையப்
பெண்ணாப்பிறந்தாளெனவந்துபிறந்தாள்பெரியசூர்ப்பணகை. ()

மன்னுதவத்துப்புலத்தியன்றன்மரபுவிளங்கமறைவிளங்கத்
தன்னேரில்லாத்தந்தைக்குத்தக்கமகவாய்ச்சண்டாளர்
அன்னோர்முன்னோரவருதித்தவந்தவயிறுசுத்தமுற
மின்னேரிடையாடன்வயிற்றில்விளங்கும்புகழ்வீடணன்பிறந்தான்.

பாதமறைவெவ்வரவினுக்குப்பாலுநெய்யும்புகட்டினும்
வாதைசெய்யும்வல்விடமேவளருமாபோன்மனுநூலும்
வேதமவையோராயிரமும்விளங்குங்கலையுந்தசக்கிரிவன்
ஓதவோதப்போதங்கெட்டபோதமானதோங்கியதே. (௧௭)

ஒத்தகுலத்துக்குடிப்பிறந்தோரொழுக்கங்கெடவிவ்வுலகத்து
வத்தியாமைபுலத்தியன்றன்வழிவந்தோற்பாற்கைகண்டோம்
குத்துவாதைமிகநலிந்துகும்பகருணன்குவலயத்தில்
சுத்தராயமுனிவரையேகொன்றுதின்னத்தொடங்கினான். (௧௮)

வசையின்மறையோர்குடிப்பிறந்துமாதாகுலத்தின்வழிநின்றும்
அசைவிலாற்றற்சூர்ப்பணகையாணாப்பிறந்தார்பின்றொடர்ந்து
பசையினெஞ்சர்தமையெல்லாம்பத்தாவாகவசிகரித்தும
இசையிலாதார்தமையெல்லாமெடுத்துப்புடைத்துந்தின்னுமால். ()

பொய்யுங்களவும்பாதகமும்பொல்லாவொழுக்குமவைகடிந்து
மெய்யுந்தயாவுந்தருமமுடன்விளங்கும்பொறையுமிவைபூண்டு
செய்யுஞ்செயல்களவையெல்லாஞ்சிட்டர்செய்யுஞ்செயலாகி
ஐயன்புகழ்வீடணன்மறைகளறைந்தவறத்தின்வழிநின்றான். (௨௦)

அந்தவனத்திலந்நால்வரந்தவழியேயொழுகுநாள்
எந்தைசரணவிணைபணிவேனென்னுமாசைதனையுந்த
வந்தவவனைக்கைகசிதன்மலர்க்கணாலேநோக்கித்தான்
தந்தகிரித்தோட்டசக்கிரிவன்றனக்குக்காட்டியிவைசொன்னாள். ()

நலஞ்சார்தெய்வப்புட்பகமுநாடற்கரியநிதியிரண்டும்
சலஞ்சாரில்லாத்தவத்தாலேசாதித்துடையோனின்றமையன்
வலஞ்சார்திரடோண்மைந்தாநின்வழியிலுள்ளோர்முன்பாண்ட
இலங்காபுரியையாளகின்றானிவன்காண்குபேரனெனவுரைத்தாள்.

---

17. போதங்கெட்டு அபோதமானதோங்கியது.
18. குத்துவாதை - க்ஷுத்பாதை, பசி.
19. பத்தா - பர்த்தா, கணவன்.

என்றுதாய்தானிவைகூறவெயிற்றிறலேலியிதழுதக்கி
ஒன்றுதவத்தாலிவனோடேயொத்தன்மிகுத்தல்செய்வெனெனக்
கன்றுமனத்தாய்தனைத்தேற்றிக்கறுவுமனத்தரிளேறெரொடும்
குன்றுபுரைதிண்புயத்தரக்கன்கொன்றைவனத்தைதக்குறுகினான்.()

கும்பகன்னனைந்தீயுட்கொதிக்குங்காலத்திடைநின்றும்
உம்பர்நடுங்கக்கார்காலத்தொவ்வாமழையினுடனைந்தும்
தம்பம்பொருநாராசத்துச்சலியாதிருந்துஞ்சயித்தியத்தில்
அம்பின்முழுகிக்கிடந்துழந்துமாண்டுபதினாயிரங்கழித்தான். (உச)

திரிகாலமுணர்செய்தவத்தோர்திகைப்பவையாயிரத்தாண்டங்
கொருகால்போலவொருகான்மண்ணூன்றியொருகாலெடுத்துயர
எரிகாலிரவிமண்டிலமேனோக்கியிருகைகளுமெடுத்து
வருகாலக்கால்வீடணனும்வருடமையாயிரங்கழித்தான். (உரு)

ஓராயிரமாண்டுபவசித்துக்கழிந்தாலோரோர்தலையாகச்
சீரார்சிரமொன்பதுந்தடிந்துசெந்தீயிடையோமம்புரிந்து
பேராவுபவாசத்தினனுப்பின்புமோராயிரத்தாண்டில்
தாரார்மற்றைத்தலைதடியலுற்றான்பற்றித்தசக்கிரிவன். (உசு)

அன்னகாலையயன்றோன்றியவனைநோக்கியருந்தவத்தின்
நின்னையொப்பார்நீயன்றியொருவரில்லைநின்கரத்தால்
முன்னமரிந்ததலையெல்லாமுன்புபோலமுளைத்திடுக
என்னவவைதாம்பண்டையினுமெழிலுண்டாகவெழுந்தனவால். ()

பின்னுஞ்சொல்லும்பிதாமகன்றன்பெருகுதவத்துநீயிங்குச் [கில்
சொன்னசொன்னவரந்தருவேன்சொல்லென்றுரைக்கத்தொல்லுல
மன்னுமனிதர்தமைப்பொருளாமனத்தினினையாவாளரக்கன்
உன்னுபொருளொன்றொழியாமல்வேண்டவிரிஞ்சனுவந்தளித்தான்.

தருமசீலன்வீடணன்மெய்தழுவிநின்றுதவஞ்செய்த
அருமைகண்டுவியப்பெய்தியாதிமூர்த்திவெளிப்பட்டுன்
இருமைசேர்ந்தவுள்ளத்தினியைந்தவரம்வேண்டுதியென்னக்
கருமைசேராவருந்தவத்தோன்கருதியினையகட்டுரைத்தான். (உகூ)

நல்லாயறத்தைக்கைவிட்டுநடுங்குமிடும்பைவரினுநான்
பொல்லாதனசெய்யாதொழிகபோரிற்பிரமாதிகளென்னை
வெல்லாதொழிகவிவ்வரங்கள்வேண்டுமென்னவிரிஞ்சனவை
எல்லாம்பெறுதிநீயென்றுமிறவாதிருத்தியெனவுரைத்தான். (௩௰)

கும்பகன்னன்றவங்கண்டுகுலைந்திங்கிவனைவரங்கொள்ளின்
தம்பமில்லைநமக்கென்றுதடுமாறியசிந்தையராகி
உம்பரோடுதானவருமுயர்மாதவருமொத்தீண்டி
எம்பிரானைக்கேட்டருளென்றிறைஞ்சியயனுக்கிவையுரைத்தார். ()

படைத்தாயாதிபல்லுலகம்பறிப்பான்கையிற்சிற்றரிவாள்
கொடுத்தாயாதிமுன்னமேகொடியகும்பகன்னனுக்கு
வடுத்தானில்லாவினியவரம்வழங்கினையேலெங்களையும்
கெடுத்தாயாதியெனத்தேவர்கிளத்தவயனிங்கிதுசெய்தான். (௩௨)

சொல்லார்கலைக்குநாயகிதன்றுய்யகமலமுகநோக்கிப்
பொல்லாவொழுக்கமிவைபூண்டுபுவனமூன்றும்பொடிசெய்து
வல்லான்கும்பகன்னனெனைவரம்வேண்டுங்காலவன்வாய்நின்
றெல்லாம்பிழைப்பத்துயில்வேண்டுமென்னும்படிநீயியற்றென்றான்.

இந்தப்படிக்குநாமகளையிசைவித்தடவியிருந்தவஞ்செய்
அந்தக்கும்பகன்னனிடையமரர்சூழவயன்வந்துன்
சிந்தைக்கினியவரந்தருவென்செப்பென்றுரைப்பநாமகளு
வுந்தத்துயில்வேண்டுவெனென்னவுற்றாயென்றாங்கயனுரைத்தான்.

அள்ளன்மடுவின்மூழ்கித்தாமரும்பட்டினிபட்டலம்வந்தும்
உள்ளந்துய்யரல்லாருக்கொருகாரியமும்பலமாகா
கள்ளமனச்செய்தவக்கும்பகன்னன்கருதும்வரங்கொடுக்கும்
வள்ளன்மலரோனிடைப்பெற்றவ்வரத்தான்மாறாத்துயில்பெற்றான்.

சந்தமலரோன்போனதற்பின்றடந்தோட்கும்பகன்னன்றன்
சிந்தைதெளிந்திங்கிவையெல்லாந்தேவர்செய்தமாயையென
நொந்தமனத்தன்முன்றோற்றநுண்ணூலுணர்ந்தபின்னவற்கும்
வந்ததுரைத்தபின்னவர்கள்வளர்சீர்த்தொல்லைவனமடைந்தார். ()

வேறு.

ஆங்கவர்கள்பெற்றுடையவரமுமாண்மையும்வலியுமடங்கக்கேட்டுப்
பூங்கமலக்கண்ணனுக்குப்போர்தோற்றுப்பாதாளம்புக்குவீழ்ந்த
ஓங்குபுயமாலியவான்சுமாலியெனப்பேர்பெற்றோருள்ளிட்டார்கள்
தாங்கரியபேருவகைதள்ளப்போய்த்தசக்கிரிவன்றன்னைச்சார்ந்தார்

கொலைபடுத்தகுன்றென்னக்குவவுத்தோட்டசக்கிரிவன்கும்ப
கன்னன், கலைபடித்துவளர்ந்தோங்குவீடணனென்றிங்கிவரைக்க

31. தம்பம் - பற்றுக்கோடு.
33. சொல்லார்கலைக்கு நாயகி - சரஸ்வதி.

ண்ணினோக்கி, அலையடுத்தகடற்றுயிலுமச்சுதனுக்கமரழிந்தவரக்க
ரெல்லாம், தலையெடுக்கப்பிறந்தீர்கள்வருகவெனவுயிர்பொருந்தத்த
ழுவிக்கொண்டார். (௩௮)

அன்னவர்களினிதிருந்தவக்காலத்ததசமுகனைச்சுமாலிநோக்கி
முன்னமரிற்றுமெல்லாமுகில்வண்ணன்றனக்கஞ்சிமுதுகிட்டோடிப்
பன்னகர்நாடதுவாயபாதாளம்புக்கமையும்பண்டுதாமாள் [ன்னுன்.
பொன்னகரத்திடைதனதன்புக்குவீற்றிருந்தமையும்பொருதுசொ

தண்ணுக்குந்தடமலரோன்வழிவந்தசக்கிரிவன்றன்முன்பாண்
ட, மண்ணுக்கும்பலரறியமணம்புகுந்துமனையாளாய்வகுக்கப்பட்ட,
பெண்ணுக்கும்படாதார்தம் பெருவாழ்விற்பிச்சையே நன்றுகாண்
போம், கண்ணுக்கும்பொறிபறக்கக்கடலிலங்கையாள்கின்றன்குபே
ரன்காண்டி. (௪௦)

தேனத்தார்திகழ்மார்பன் றென்னிலங்கையாள்கின்றகுபேரன்சேர்
மானத்தாலுனக்கந்தவளநகரிவிடுகிலான்சாமபேத [ந்த
தானத்தாற்றானேற்றண்டத்தாற்கொள்ளுதிநீகொள்ளாயாகில்
வானத்தார்நகைசெய்வர்மாசுண்ணுநின்வலியும்வரமுமென்றான். ()

என்றுதாய்தந்தைதனக்கியம்பியசொற்கேட்டதசக்கிரிவனேரே
இன்றெனக்குழுத்தானைக்கன்றுமாறெங்ஙனென்றுகூறத்
துன்றுபுயப்பிரகத்தன்சூரதுபார்ப்பாரோதூரந்தபோரில்
அன்றுபிராதாக்களாமசுரர்குலமறுத்திலரோவமரரென்றான். (௪௨)

என்றுதனக்கவனியம்பக்கேட்டதசக்கிரிவனதற்கிசைந்துநீயே
சென்றுதனபதிக்கிதனைச்செப்பிவாவெனவிடுப்பவவனுஞ்சென்று
குன்றுபுரைமணிமாடகூடகோபுரவிலங்கைகுறுகிச்சீரின்
தன்றுணையிலான்றனக்குச்சமரவாசகங்களையேதழுவிச்சொன்னான்

உன்னுடையதம்பியாமுயர்வரைத்தோட்டசக்கிரிவனுரைத்த
கேட்டி, முன்னிலங்கைநகராண்டோர்மாலியவான்முதலாயமூவர்மூ
த்தோர், பின்னதனுக்குரியார்கள்யானன்றிப்பிறரில்லைப்பேசிப்பே
ணி, என்னுறவுவேண்டுமே லிலங்கைநகர்தருகவென வியம்பச்சொ
ன்னான். (௪௪)

அன்னவாசகங்கேட்ட வருநிதிக்கோன்வருங்கருமமனத்திறை
ராய்ந், தென்னரசுமென்பதியுமென்றம்பியினதன்றேயெனக்கென்
றம்பி, சொன்னபடிசெய்வனெனச் சொல்லிவிடுத்தவன்றனக்குச்

42. தாய்தந்தை - தாயின்தந்தை, பாட்டனாகியசுமாலி.

சொன்னவெல்லாம், தன்னுடைய தாதைக்குத் தான் கூறக்கேட்டந் தத்தவத்தோன் கூறும். (சரு)

முன்னாளிலென்னுடையமூதாதையாண்டநகரிலங்கையென்று
பன்னாளுமெனக்குரைப்பப்பழியானகாரியநீபகர்தியென்று [ன்
சொன்னாலுமவன்கேளான் றன்மதியான் றசக்கிரிவனவனுக்கானே
என்னானைமைந்தவுனக்கிதமானகாரியங்கேளென்றுசொன்னான். ()

வேறு.

திசைமுகன்வரமெனும்வலிகொடுதிசைதொறும்
வசைமுகம்வளர்தரமகிதலநலிதரு
தசமுகன்வழிநகர்தனைவிடுதரணியில்
இசைமுகம்வளர்தரவெனமுனியிவைசொலும். (சஎ)

குடதிசைகுணதிசைதழுவியகுரைகடல்
இடைநுழையிருதலையிமையமதெனுமலை
வடதிசையுளததுமலையரசிதுவென
இடமுடையுலகவரிடுபெயருடையது. (சஅ)

மயிலியலுமையினைமகளெனவுடையது
குயின்மொழியவளொடுகுளிர்சடையரனுறை
கயிலையையொருபுடையடையதுகதிரவன்
வெயினுரைவருமரமிடைதடமுடையது. (சகூ)

பகுமுகமொடுதிகழ்பகிரதியிழிதரு
மொகுமொகுமெனுமொலிமுழவொலியதுவர
அகமகிழுறபதவளியிசைமுரறர
மிகமயினடமுறுவிரிபொழிலுடையது. (ரு௦)

எறிகதிர்மணிமுடியிமையவர்பொழிலிடை
வெறிமலர்மதுநுகர்விரிசிறைமதுகரம்
உறுதலுமதுநுகரிவரெனவுவகையொ
டுறுபதமெதிர்கொளுமரவமதுடையது. (ருக)

மலைதலின்மனமெனவரியரவெழுமதி
குலைகுலைகுலைதருகுடுமியதுடையது
கலகலவெனவெழுகழையொலியொடுபுனல்
சலசலவெனவிழுதடவொலியுடையது. (ருஉ)

இனையனவெழிலுடையிமையமதெனுமலை
தனையுறுகிளையொடுதழுவுதிதழுவிய

பிணைய தனிடைவளர்பெருநிதியொடமிரு
எனமுனியிவைசொலவிசைமனமுடையவன். (௫௩)

வேறு.

எந்தையுரைத்ததுசெய்வெனெனத்தனதனிருங்கிளையோடி
லங்கைவிட்டு, சிந்தையினுங்கடுந்தெய்வத்தேரேறித்திகழிடயஞ்
சென்றுசேரத், தந்திரமாகடறழுவத்தசக்கிரிவன்றன்னகரிவந்து
சார்ந்து, மந்திரிகண்முடிசூட்டமாமணிமண்டபத்தின்மிசைமகிழ்ந்
திருந்தான். (௫௪)

உழந்ததுயரும்பர்க்காயுலகனைத்துமுண்டுமிழ்ந்தவொருவன்
முன்னாள், அழன்றிலங்கைபாழாக்கவன்றுமுதற்பாதாளமடைந்து
ளோர்கள், இழந்ததனம்பெற்றவர்போலிராக்கதர்களிரைத்தீண்டி
யிழந்ததங்கள், பழம்பதியிற்குடிபுகுந்துபண்டுபோற்குடியிருப்ப
விலங்கைவேந்தன். (௫௫)

தடையில்லாவலியில்லையரம்பையர்க்குத்தம்முலைகடம்மைத்
தாங்க, இடையில்லையென்னைப்போலிமைப்பளவிலெவ்வுலகுமுட்டி
மீளும், நடையில்லையெனப்பழிக்குநங்கையடற்சூர்ப்பணகைநலத்
தைக்கண்டு, விடைவல்லோனெனவிரும்பும்வித்துருசிங்கவனுக்கு
விரும்பியீந்தான். (௫௬)

ஆங்கொருநாட்டசக்கிரிவனடவியிடைவேட்டைபோமளவிலா
ங்கோர், தேங்கமழ்பூங்குழலியொடுதிகழ்மணிப்பூண்மயனவனைச்
சென்றுசேர, ஈங்கிவளையுடனேகொண்டியாவருமில்லாவனத்துவந்
தோயாவன், பாங்குபெறவுரையென்றுதசக்கிரிவன்பகரமயன்பகர
லுற்றான். (௫௭)

தாமநெடும்புயத்தோயான்றயித்தியர்கோன்மகனென்னத்த
குவேன்பண்டு, மாமலர்மேற்றிருவொக்கும்வடிவுடையதருச்சனை
யைவானோரீய, ஏமபுரியென்பதெனக்கிருப்பாகயானிருமித்தவளு
நானும், காமமெனும்பெருங்கடற்கோர்கரைகாணுதைஞ்ஞூறுண்
டிருந்தகாலை. (௫௮)

அங்கவடன்மணிவயிற்றில்வந்துபிறந்தவண்மண்டோதரியெ
ன்பாளிம், மங்கையுடன்பிறந்தோர்கண்மாயாவிதுந்துபிவில்வலியின்
மிக்கார், இங்கிவடன்குணத்துக்குமெழிலுக்குநிகரொக்கும்வரனைக்
காணு, தெங்குமுழன்றிவ்வனத்தினிடைப்புகுந்தேனென்றுரைத்
திங்கிவைபின்சொல்லும். (௫௯)

குலம்வேண்டுமென்றிருப்பார்குலத்துளார்கல்வியிளுற்குறை யாளுஞன, பலம்வேண்டுமென்றிருப்பார்தந்தைமார்பரந்தபெருஞ் செல்வமுள்ள, தலம்வேண்டுமெனறிருப்பார்தாய்மார்கள்யவ்வனமு மழகுஞ்சாாந்த, நலம்வேண்டுமெனறிருப்பார்நாறுகுழற்கன்னிமார் நலத்தினமிககாா. (கூ0)

பண்புடையகுடிப்பிறப்பும்பழிப்பில்லாப்பேரழகும்பரந்தகேள்வி நுண்பொருளாீரொழியப்பாணுகருமன்னம்போஞெக்கித்தீரும் ஒண்பொருளுமிகநான்குமுடையாரைக்கிடையாதிவ்வுலகந்தன்னில் பெண்பெறுகைபோலிந்தப்பெரியதுயர்தாணுண்டோபேசுங்காலே.

பின்னுமபன்கூறுவணின்பேரெழிலும்யவ்வனமும்பேசவேண் டாம், உன்வழியுமுன்பதியுமுன்பெயருமுன்னலமுமுரைத்தியென் ன, அன்னவனுமயன்மைந்தன்மகன்மைந்தனணியிலங்காபுரியை யாளும், மன்னவன்பேர்தசக்கிரிவன்மறைகளோராயிரம்யான்வல் லேனென்ருன். (கூஉ)

திண்டடந்தோட்ட சக்கிரிவனிவைசெப்பச் சேயிழையைவளா ர்த்துவைததுக், கொண்டிருந்தபயன்பெற்றேனெனமகிழ்ந்துகுண் டிகைநீருதகஞ்செய்ய, எண்டிசையும்போற்றுதிறலிராவணன்ரு னெழிலரக்கரெவரும்போற்ற, வண்டமருங்குழனமண்டோதரியை மணஞ்செய்ததற்பின்மகிழ்நதுமாமன். (கூங)

தாளார்தண்டாமரையோன்றன்மேலே விடினுமவனுயிர்கொண்டன் மீளாவேலுங்கொடுத்துமயன்போகமெல்லியலையுடனேகொண்டு[றி தோளாறுமேழிரண்டுஞ்சுடர்முடிகளீரைந்தும்பொலிந்துதோன்ற வாளார்திண்படைசூழமதிலிலங்கைவளநகரின்மன்னன்புக்கான். ()

மன்னும்வயிரோசனன்றன்மகன்மகளாம்வச்சிரசுவாலையென்னும் கன்னிதனையணிவீரக்கழற்கும்பகன்னன்கைப்பிடித்தபின்பு தன்னெதிரில்கந்திருவத்தலைவன்கைதூடன்ருன்றந்தவேறகண் மின்னிடையாள்சரமைதனைவிளங்குபுகழ்வீடணனருனவிதியினவேட்டான்.

இந்திரனுஞ்சசியும்போலிலங்கிழைமண்டோதரியுநதானுமெய்ந்து சிந்தைபுவந்தனுபவித்துச்செல்கின்றகாலத்துத்திருவனாள்பால் வந்துபிறந்திடுமைந்தன்மழைபிடித்தெனவாய்விட்டழுதலாலவ் வெந்திறன்மைந்தனைமேகநாதனெனப்பேரிட்டானிலங்கைமன்னன்

---

63. உதகஞ்செய்ய - தாரைவார்த்துக்கொடுக்க.

பிறையெயிற்றுப்பிலப்பேழ்வாய்ப்பெருவரைபோற்கருவுருவ ப்பிறழ்கட்டிண்டோட், டுறுகமுற்காற்றசக்கிரிவன்றேன்றலையிம் மூவுலகுஞ்சுடுவான்வேண்டி, உறுசுவைச்சோறான்முதலாயுள்ள வெனுஞ்சிறுகுளகையிட்டுமூட்டிச், சிறுநெருப்பைப்பெருநெருப்பா யாக்குவார்போல்வளர்த்தார்செவிலித்தாய்மார். (கூஎ)

அன்னவன்றன்பின்பிறந்தோரதிகாயன்றிறலக்ககுமாரன்வானோர் பொன்னகரிபொடிபடுத்தித்தனித்தனியேபூணிக்கும்போரில்வீரர் மன்னியசீர்வச்சிரச்சுவாலைதன்மணிவயிற்றில்வரைத்தோட்கும்ப கன்னனுக்குப்பிறந்தோர்கள்காலனையொக்குங்கும்பனிகும்பனென்போர். ()

பனிகாய்செங்கதிரொளியிற்பன்மணிப்பூண்பொலிந்திலங்கும் பாலரோங்கத், தனியேநற்றவஞ்செய்துசாதித்தும்பெற்றதுயிற ன்னைச்சாரக், குனிசாபத்தசமுகனைக்கும்பகன்னன்றான்குறுகிக் கூறுவானிங், கினிதாகவெனக்குறங்கவெழுமணிமண்டபஞ்சமைப் பியென்னச்சொன்னான். (கூகூ)

தென்னிலங்கைமன்னவனுந்தெய்வ தச்சனுக்குளவாறுரைப்பக்கே அன்னவனுமகலமோரோசனையுமதற்கிரட்டியகலம்பெற்ற [ட்ட பொன்னணிமண்டபமுப்பாற்புவனத்தினில்லதுசெய்தமைப்பக்கு கன்னனதுகண்டுவந்துநெடுங்காலங்கண்டுயிலாநின்றகாலை. [ம்ப

ஆ திருவிருத்தம் - உ௫௩.

## எ-வது, வரையெடுத்தபடலம்.

பூவயன்றருவரத்திறற்புயவலிச்செருக்கால்
ஆவதல்லதொன்றறிகிலாவரக்கர்கோனியக்கர்
தேவர்மாதவர்சிதறிடத்துரந்துநல்லளகைக்
காவெலாம்பொடிசெய்துவெங்களிறெனத்திரிந்தான். (க)

அன்னதன்மையனதிக்கிரமங்கள்கேட்டளகை
மன்னவனொருதூதனைவிடுப்பமற்றவன்போய்த்
தென்னிலங்கைநாயகன்றனைச்சென்றுகண்டுமையன்
சொன்னவாசகங்கேளெனத்தூதுவன்சொல்லும். (உ)

சொல்லும்போதறவிளிவனசூழவுமிருந்து
சொல்லுவோர்பெரிதாகவச்சொற்பயனிலாத

சொல்லும்போதறக்கடுகுமாய்ச்சொற்பயனினிய
சொல்லுவாரில்லைச்சொன்னசெய்வார்களுமில்லை. (௩)

மூத்துளோர்கள்சொன்முன்பினோர்பின்பணீதென்று
வார்த்தையுண்டதுமனத்தினிற்கொண்டியானுரைப்ப
வார்த்தையாகுமீதென்றுகொணடறம்வழுவாமல்
பார்த்துச்செய்வசெய்பழிபடுகாரியஞ்செய்யேல். (௪)

தேவரந்தணர்தங்களைச்சீறிடுந்தீயோர்
யாவராயினுமிம்மையிற்கெடுவர்மேன்மறுமைப்
பாவகாரியர்புகுந்திடும்பழியொடும்புகுவார்
ஆவர்செய்குவரவரொடும்பகைகொளாரறிவோர். (௫)

உம்பர்வானவராதியருனக்கிடைந்துலகில்
தம்பமின்றியேதளர்ந்திடுந்தன்மையுங்கேட்டேன்
வம்புசேர்பொழில்வந்ததுமடித்ததுங்கண்டேன்
தம்பியாகிலித்தன்மைசெய்யாதொழிதக்கோய். (௬)

இமையைத்தம்முகத்தீசனைநோக்கியானெழில்சேர்
சிமையத்துத்தவஞ்செய்கின்றவேலையிற்சிவனே
டுமையைக்கண்டிந்தவுத்தமியாவளோவெனவோர்
சமையத்தாங்கவள்சலித்தெனைத்தழலெழவிழிப்ப. (௭)

பார்த்தவென்னிடக்கண்ணதுபற்பமாய்வீழ
வேர்த்துமெய்தொலைந்தவ்விடத்திருக்கயான்வெருவிச்
சீர்த்தவத்திகழ்சிலம்பின்வேறோரிடஞ்சேர்ந்து
பேர்த்துமுன்புபோற்பெருந்தவம்புரிந்தனன்பேணி. (௮)

அரியதாய்விரதத்தினின்றுண்டிருநூறும்
உரியவாகியேயொருதினம்போற்செய்துமுடிக்க
விரிபெருஞ்சடைவிமலனுஞ்சிவன்வெளிப்பட்டுப்
பிரியனுமெனைப்பேணிநோக்கினனிவைபேசும். (௯)

நின்னையொப்பவர்தவத்தினினீயல்லதில்லை
உன்னையொப்பவர்யானலாலொருவருமில்லை
நின்னையுத்தமத்தோழனுய்வேண்டுவென்யானும்
என்னையொத்தநின்றோழனுய்க்கொள்ளுதியென்றான். (௧௦)

---

5. பாவகாரியர் - பாபங்களைச்செய்பவர்.

8. பற்பம் - பஸ்மம், நீறு.

மங்கைசீறிடவாய்ந்தநின்வாமநேத்திரமும்
பிங்கலந்திகழ்நிறத்ததாய்ப்பெறுதிநீயென்று
கங்கைசேர்சடைக்கண்ணுதலாணிவைபுரிந்தான்
இங்குகேளெனவின்னமுங்கேட்டியாணியம்ப. (கக)

வாசவன்முதலாகியவானவர்தாமும்
ஈசனன்னமாதவம்புரியிருடிகளெவரும்
கூசிநின்வலிக்கோடினார்கூடினாருனக்கு
நாசமெண்ணுவர்தசமுகநாடொறுமிருந்து. (கஉ)

அரக்கனன்னவைகேட்டலுமனலெழவுயிர்த்துக்
கரத்தினோடுகைபுடைத்துவெங்கனல்விழிகாலப்
பரத்திநோக்கித்தன்பாடிருந்தவர்முகநோக்கி
இரக்கமில்லவனிவர்களுக்கிவையிவையியம்பும். (க௩)

ஆசில்லாதரனைப்பவனளகையிலலவனும்
ஈசன்றோழனுமவையெலாமென்முனஞ்சார்ந்து
பேசுந்தூதனார்பெறுவெனவிவையெனவாளால்
வீசினனவனிருதுணியாகமண்வீழ. (க௪)

அன்னகோபத்தவரக்கர்கோனளகையிலவனை
முன்னஞ்சென்றுநான்முட்டியேமனச்சினமுடித்துப்
பின்னைநின்றதுசெய்வனென்பெரும்படையெழுக
என்னலுங்கடல்கிளர்ந்தெனவெழுந்ததுசேனை. (க௫)

கட்டியிட்டபொற்கனைகழற்காலினர்கரிய
வட்டமொத்தமாமேனியர்வயங்கியவீரப்
பட்டநெற்றியர்பணைத்ததிண்டோளினர்படர்மார்
பிட்டபொற்கவசத்தினரிராக்கதரெழுந்தார். (க௬)

தேர்களுற்றனசெம்முகக்கரியினைநெருக்கப்
போர்மதக்கரிபுரவியைநெருக்கிடப்புரவி
வீரரைக்கரிநெருக்கிடவீரர்கள்போகத்
தாரைபெற்றிலர்தங்களிற்றனித்தனிநெருக்கி. (கஎ)

பாழிசாலெயிற்றரக்கர்கோன்படையெழுதூளி
ஏழுலோகமுமெய்திமீண்டிவ்வுலகத்தில்

---

11. வாமநேத்திரம் - இடதுகண் - பிங்கலம் - பொன்னிறம்.
17. தாரை - வழி.

ஆழியானவையடங்கலுந்தூர்த்தசேருக்கிச்
சூழுமாதிரத்தும்பிகைத்தூம்புசெம்பியதே. (௧௮)

அன்னமாப்படையளகையைநெருக்கிடவரக்கர்
மன்னன்மாநிலத்தலைவன்மேற்கறுவுகொண்மனத்தன்
பொன்னின்வார்கழல்பொலிவுறக்காலிடைப்புனைந்து
மின்னுமாமணிப்பஃறலைக்கச்சொடும்விசித்து. (௧௯)

கூர்மையிட்டவேல்விழியினார்குவிமுலைக்குறியும்
ஆர்வம்விட்டபோரங்கவர்கண்களுநெருங்கும்
சீர்கொள்வட்டமார்பதனிடைக்கவசமுஞ்சேர்த்து
வீரபட்டங்கணுதறொறும்விளங்கிடவீக்கி. (௨0)

உடன்றுணித்தெழும்படையினுலகுகீழிருப்ப
விடந்துடித்திடுவெள்ளெயிற்றரவுமெய்ந்நடுங்கிப்
படந்துடித்திடப்படைத்தொழிலளகைநாயகனுக்
கிடந்துடித்திடவிராவணனேறினனிரதம். (௨௧)

மாயைவல்லனுமகோதரன்வயப்பிரகத்தன்
தீயராஞ்சுகசாரணர்திறற்புகைக்கண்ணன்
சூயமாமன்மாரீசனவ்வறுவர்தற்சூழப்
போயினனவனளகையாம்பொன்னகர்நோக்கி. (௨௨)

சென்றசேனையைச்செறிபொழிலளகையைச்செறுப்ப
நின்றுகாப்பவர்நீசனுந்தசமுகனம்மேல்
ஒன்றிவந்துநம்மணிநகர்ப்புறத்துவந்துற்றான்
என்றுகூறமாடிருந்தவர்க்கியக்கர்கோனியம்பும். (௨௩)

அறிவிலாதவற்கறிவனசொல்லுவாரவரால்
இறுதியெய்துவாரென்னுமதின்றுகைகண்டோம்
உறுதியாயினகாரியமுரைத்துவிட்டோமால்
மறுகிநேர்பொரவந்தனன்வாளெயிற்றரக்கன். (௨௪)

என்றுவாய்மடித்தெரிவிழித்திராக்கதர்கோமான்
வென்றிவீரமும்வரங்களும்படும்படிவிண்ணோர்
இன்றுகாண்பராலெனவெழுந்திரும்பரியிரதம்
ஒன்றுசேனைமுன்செல்கெனவுரைத்தனனுரவோன். (௨௫)

வேறு.

அரக்கரோடமரென்றளகாதிபன்
உரைத்தவாசகங்கேட்டலுமூழியில்

18. செம்பியது - அடைத்தது.

திரைப்பெருங்கடல்சீறியெழுந்தென
விரைத்துமண்டியெழுந்ததுசேனையே. (உசு)

மூரிமேகமுழங்கியவாமெனப்
பேரிபம்பைபெரும்படகந்துடி
தாரைகொம்பணிசங்குமுழங்கின
வீரராய்ந்தணிவீதிநெருங்கினர். (உஎ)

தாள்களோடவர்தாடமொறின
தோள்களோடுயர்தோள்கடுறும்பின
வாள்களோடவர்வாள்கண்மயங்கின
கோள்களோடுயர்கொடிகள்பிணங்கின. (உஅ)

ஆனைதேர்பரியாளளவற்றதன்
சேனைசூழ்தரச்செறிகுழற்றேன்மொழி
மானைநேர்விழிமங்கையர்வாழ்த்திடத்
தானசீலன்றனபதிதோன்றினன். (உகூ)

திரைப்பெருங்கடன்மேற்கடல்சென்றென
அரக்கர்சேனையொடும்மளகைப்படை
இரைப்பமண்டியெதிர்ப்பவிமைப்பிலோர்
வெருக்கொளும்படிபூசல்விளைந்ததே. (௩0)

சென்றுதாக்கினதேர்களும்தேர்களும்
கன்றுவேழமும்வேழமுங்காந்தின
ஒன்றுமாவொடுமாப்பொரவுற்றன
வென்றிவீரரும்வீரரும்வெம்பினர். (௩க)

கொற்றவீரர்கொடும்படையேவிட
அற்றகால்சிரமாய்நெரிந்தோங்கின
இற்றகைமெய்யிருதுணியாயின
உற்றதாழியுதிரத்தின்வெள்ளமே. (௩உ)

ஆயகாலையளகைப்பெரும்படை
வீயநூறியவெம்புனைக்கண்ணனும்
மாயம்வல்லமகோதரனும்முதல்
ஆயவீரரழலெழச்சீறினர். (௩௩)

ஏகவீரவரக்கரியக்கரைப்
போகநூறிப்புனல்பெருங்காற்றினல்

நாகமோமழையினும்புகநாடுபோர்
யோககண்டகனென்போனூரறினான். (௩௪)

ஆயவன்னிலைகண்டவனோடடல்
மாயையாவையும்வல்லமாரீசனும்
தீயவன்சென்றுதாக்கலுந்திண்டிறல்
சாயமோதினன்றன்கரத்தண்டினால். (௩௫)

மயங்கிவீழ்ந்துதெளிந்துமாரீசனும்
தயங்குபூண்வலிசாயவியக்கரைத்
தியங்கியோடத்துரந்தவன்சேனைமண்
முயங்கிவீழக்கதைகொண்டுமோதலும். (௩௬)

பற்றலார்கள்படுகளவம்மியில்
கொற்றமேவுதண்டென்னுங்குழவியால்
வெற்றிவேலிலங்கேசன்வெகுண்டெழுந்
துற்றசேனையொருகுழம்பாக்கினான். (௩௭)

தானையெல்லாந்தரைப்படுத்துத்தமர்
ஆனதீயமகோதரனோடடல்
ஏனையோர்புடைசூழவிராவணன்
வானைநேர்நிகர்வாயிலைமுட்டினான். (௩௮)

வாணிமிர்ந்தமழைதவழ்வாயிலோன்
மேணிமிர்ந்தெழுமெய்யினன்சூரிய
பானுவென்னும்பெரியவன்பாதக
நீநில்லென்றெதிர்வந்தமர்நேர்ந்தனன். (௩௯)

இலங்குதோரணகம்பமிருகையால்
நிலங்குலுங்கிடவாங்கிநிருதன்மேல்
விலங்கன்மேலிடிவீழ்ந்தெனவீழ்த்தனன்
கலங்கலானிலங்காபுரிக்காவலன். (௪௦)

அன்னதோரணமேகொண்டரக்கர்தம்
மன்னன்மன்னுபெருவலிவாயிலோன்
தன்னைமெய்தரியாவகைசாடினான்
என்னவீரனோவென்றிமையோர்சொல. (௪௧)

ஏணின்மிக்கவன்வீழவியக்கர்கோன்
காணவப்படைகைகழிந்தோடிடக்

தாணுவொத்தபுயத்தினன்றனைசூழ்
மாணுபத்திரன்வந்துவிலக்கினான். (௪௨)

விலங்கியாங்கவன்வெய்யவரக்கரைக்
கலங்கியோடக்களப்படக்கொன்றிட
வலங்கொள்வாளம்மகோதரனாதியோர்
சலங்கொள்சீயமெனவந்துதாக்கினார். (௪௩)

தாக்கிமேல்வருதானைசரிந்திட
நூக்கவாயிரவாயிர நாழில்கள்
ஆக்கியாக்கியரைத்திடவப்படை
காக்குநாயகன்கண்டெரிகான்றுளான். (௪௪)

நன்றுநன்றுநம்வீரமெனநகர்க்
கொன்றுமேல்வருகூற்றமன்னோர்களில்
கன்றுவெம்புகைக்கண்ணனைக்கண்ணுறாச்
சென்றுதாக்கினன்றேவர்திகைப்பவே. (௪௫)

தாக்குவெம்போரியக்கர்தலைவனும்
வீக்கும்பைங்கழல்வெம்புகைக்கண்ணனும்
நூக்கிநாட்டமெரியெழநோக்குவோர்
போக்கிலாதுபொருகின்றவெல்லையில். (௪௬)

மாணிரைத்தமணிவலயங்களாம்
பூணுடைப்புயத்தம்பன்புகைக்கண்ணன்
மாணுபத்திரன்றன்வரைமார்பிடை
ஏணுடைக்கதையான்முனிந்தெற்றினான். (௪௭)

அலகிலாற்றலியக்கனடித்திட
நிலைகலங்கலிலாதநிசாசரன்
தலைநெறிந்திடத்தண்டினடித்தலும்
மலைவிழுந்தெனவீழ்ந்தனன்மண்ணின்மேல். (௪௮)

ஆங்கவன்விழக்கண்டவரக்கர்கோன்
தாங்குதண்டினன்சென்றுதரைப்படப்
பூங்கழற்காலியக்கனும்போரெதிர்
நீங்கிலான்வந்தவனொடுநேர்ந்தனன். (௪௯)

அக்குரூரனுமாங்கவனுஞ்சினம்
மிக்கபோரிலிராவணன்மெய்யின்மேல்

ணைதக்கவெய்யவியக்கன்வெந்தண்டினால்
பக்கமோலிபறிந்திடமோதினான். (௫௦)

முடிபிளக்கத்தரிக்கிலனாய்முகில்
இடியெனக்கதறிக்கொடிராவணன்
கொடுமனத்தன்கொதித்தவன்மேல்விழ
அடுபுலிக்கிடையாடெனவோடினான். (௫௧)

ஈடுபட்டவியக்கரிரிந்துபோய்
நாடுவிட்டவர்சென்றந்தன்னிலைக்
கோடுவிட்டகுரங்கெனக்கூடலார்
காடுவிட்டருங்கன்முழைநண்ணினார். (௫௨)

அன்னசேனைகெடவளகாபுரி
மன்னன்வாளமர்மாறெதிர்ப்போரிலாத்
தென்னிலங்கைக்கிறைவன்முன்சென்றவற்
கின்னவாயவினியனசெப்பினான். (௫௩)

முன்னுனக்குமொழிந்தவுறுதிகள்
பின்னெனக்குப்பெரும்பகையானவா
கொன்னினைப்போர்மனத்தறங்கூடுமோ
என்னுனக்கினிச்சொல்லுவதேதமைகேள். (௫௪)

தந்தைதாயரைத்தம்முனைச்சாநெறி
அந்தணாளரைச்சீறுமறிவிலோர்
இந்தலோகத்திரும்பழியெய்திமேல்
அந்தலோகத்தருநரகெய்துவார். (௫௫)

என்னநீதியிராவணனுக்கவன்
சொன்னமாற்றஞ்சுவரெறிபந்தென
அன்னவனுண்ணுழையாததைத்திடத்
தன்னினேரிலான்றண்டினைவாங்கினான். (௫௬)

வேறு.

நீதியானதோதினானுஞ்சரானவர்க்கறம்
போதியாதெனத்தெளிந்துபோர்புரிந்துபொற்கணான்
ஏதியானசாதியாமிராவணன்றன்மெய்யின்மேல்
ஆதினானமோதினானழன்றுதண்டுகொண்டரோ. (௫௭)

---

57. பொற்கணான் - குபேரன.

துன்றுதோளிராசராசன்மோதமெய்துளங்கலால்
இன்றுகாணலாமிவன்றனுண்மையென்றிராவணன்
குன்றுசென்றதென்னவுட்கொதித்துமண்டிமேல்விழ
வென்றிவீரர்தங்களுக்குவெய்யபோர்விளைந்ததே. (ருஅ)

கோபமுந்துவாலிசுக்கிரீபருங்கொதித்தசுந்
தோபசுந்தரும்மெனச்சுமூன்றுசாரிகைத்துறைத்
தாபமின்றியேதசக்கிரீவனுந்தமையனும்
பாபதன்மமும்மெனப்பகைத்துளோர்கள்போர்செய. (ருகூ)

தேசநாசமானதென்றுசித்தருமியக்கரும்
கூசவாசவாதியோர்குலைந்திடச்செருச்செயும்
நீசன்மேலவ்வீசனண்பனீணொருப்பிணுயுதம்
வீசவாசில்பாசபாணிவாளியால்விலக்கினான். (சுO)

ஏயுமென்னமாயையொன்றியற்றியுண்மயக்கியத்
தீயவன்குபேரனைச்சிரத்தின்மீதடிக்கவத்
தூயவன்றளர்ந்துமெய்துளங்கியாவிசோர்தலும்
ஆயதன்மைகண்டுசேனையங்குநின்றகன்றதால். (சுக)

வண்டுசேர்பொழிற்குபேரமன்னன்வாழுமாநகர்
கண்டகண்டமாடெலாங்கவர்ந்துகொண்டுபண்டைநாள்
புண்டரீகவாசனன்கொடுத்தபுட்பகத்தையும்
கொண்டுவென்றிகொண்டரக்கர்கோனுவந்துபோயினான். (சுஉ)

வேறு.

வெற்றிகொளரக்கன்விடுபுட்பகமெழிற்கயிலைவெற்பையணுகா
இற்றவலியச்சினவெனக்கருதிநிற்றலிலிதற்குநடவாக்
குற்றம்வருகைக்குவழிதெற்றெனவுரைத்திரெனவுட்கொடியனாய்
அற்றதலைபெற்றிடுமரக்கனதுரைத்திடவமைச்சர்நினைவார். (சுங)

அந்தணிருந்தவமுயன்றதனதன்பெறவ்வந்தருளொடும்
தந்தபினவன்றனைநெடும்பகல்பிரிந்திலதுதங்குபிரிவால்
சிந்தையலம்வந்துசெயலின்றியிதுநின்றதுகொலென்றுதெளிய
மந்திரிகள்சிந்தைசெயவந்தணுகியிந்தவுரைநந்திபயிலும். (சுச)

சங்கமலையுந்திடுதடங்கடலனந்தசயனந்தனிலிருஞ்
செங்கமலையுந்திகழ்முகுந்தனுமயன்றனொடிருந்திரிபுரம்

62. மாடு - செல்வம்.

மங்கழல்செய்சங்கரனுமங்கையுமகிழ்ந்தினிதிருந்தவிடமித்
துங்கமலையென்றிரதமிங்குவருகின்றிலதுதுன்றுதிறலோய். (சுரு)

படிக்கழிவினைச்செய்திருபற்றலர்கண்முப்புரமெரிந்தபின்விழவோர்
முடிக்கணைதிரித்தவன்மலைக்குமிசைபுட்பகநடக்கவரிதென
கடுக்கழிவினைசசெயலகப்படுகைநிச்சயமகற்றிரதமேன
நிடித்தவனுரைத்திடவிரக்கமிலரக்கனிதுரைத்திதுசெய்தான். ()

உரக்குடையவெஞ்சரமெனுஞ்சொல்பலவுஞ்சொலியுயர்ந்தகுணனு
அரன்றனதுநந்திதன்முகந்தனையிகழ்ந்திடவவன்குறித்தனுப் [ம்
இரங்கலைகுரங்குமுகமென்றெனையிகழ்ந்தவுனிலங்கைநகரில
குரங்குகளபுகுந்துநனிகொன்றிடுகநின்குலனையென்றுரைசெய்தான்

சகட்டுருளையிற்றிரிபிறப்பிலிசலிப்பவெருவுற்றதவசிப்
பகட்டிதுவெனக்கருதிரக்கமிலரக்கனொர்பழிப்பிலவர்மேல்
முகட்டெனதுபுட்பகம்விலக்குகயிலைக்கிரிமுரிப்பனெனவோர்
துகட்டுகள்படக்கடிதெடுத்தனன்மிகைத்தவர்துணுக்கமுறவே. ()

சத்தவிருடிக்கணமகப்படவெழிற்றவமுனித்தலைவரும
சுத்தவிதயப்பிரமநிட்டருமிறப்பில்சுராகொந்தடையவும
பித்தருமதித்தவபதத்தருமெழிற்பிறமதத்தலைவரும்
சித்தருமியக்கரும்வெருக்கொளுமனத்தரடையச்சிதறினார். (௬௯)

ஆடல்புரிபூண்முலையரம்பையர்கள்சிந்தையலமந்தலறினார
பாடல்புரிதும்புருவுநாரதருமாதியாயந்தழவினார
கூடலைமுயன்றனர்விரும்பவதிகோபமொடுகூடடினையா
ஊடலைமறந்துமைமடந்தையரனைத்தனமுறத்தழுவினாள். (௭௦)

மறைத்தவர்மறுக்கமுமடக்கொடிநடுக்கமுமனத்திலுணராப்
பிறைச்சடைமுடிக்கடவுள்பொற்றிருவடிப்பெருவிரற்றலையினால்
நெருக்கெனவழுத்திடவுடற்பொறைபதைப்பநிருதாதிறைவனும
கறுத்தவுருவத்தனுமறக்கநமனத்தன்வெருவிக்கதறினான். (௭௧)

காயவரையாலிசைபரம்பவரமுகங்கிப்பநம்பதெனவே
சேயுயர்விசும்புநிலனுந்திசைகளுந்திசைசுகோராதிநாதம
வாயொருபதுங்குநதிபொங்கிடவயங்குவைநடுங்கவவையோர
ஆயிரமவிலங்கலுளடங்கினனமுடங்கியலமந்தலறினான். (௭௨)

வேறு.

வான்றிகழ்வெள்ளிவெற்பின்கீழுறவுநந்துகின்ற
ஊன்றிகழ்வலியனையமைச்சர்தாமுற்றநோக்கித்

---

67. குபிதன - கோபிஷ்டன.

தேன்றிகழி தழியான்றன் றிருச்செவிசார நின்கை
தான்றிகழ் வீணையாகப்பாடு திசாமமென்றார். (௭௩)

அன்னதேகருமமென்னுவரக்கனுமறிவுட்கொண்டு
தன்னது தலையிலொன்றைத் தடித்துதன்கையிற்சேர்தத
இன்னவின்னரம்பிற்றுத் தங்கிளை முதலிசைகளோழால்
பன்னருஞ்சாமகீதம்பரிவுடன்பாடலுற்றான். (௭௪)

அவ்வழியவனுமபாடவரன் மகிழ்ந்தழைத்துக்கொண்டு
முவ்வகையுலகுமாளமூன் றரைக்கோடியாண்டும்
எவ்வகைப்படையும்வெல்லுஞ்சந்திரவாளுமீந்தான்
பொய்வகைநிருதன்பெற்றுவிடைகொண்டுபோகலுற்றான். (௭௫)

வேறு.

பொருப்பரையன்மடப்பாவை யிடப்பாகன்பொருப்பின்கீழ்க்கிடந்துபோகா, திரக்கமுறக்கதறுதலா லிராவணன்றானெனப்பெயரு மியம்பிவாவென், றரக்கனுக்குமுக்கோடி யரைக்கோடிவாணுளுமளித்துப்போவென், றுரைப்பவரனடிவணங்கி யாங்கெழில்சேர் புட்பகத்தி னுவந்துபோனான். (௭௬)

வேறு.

அரக்கனுக்கிவ்வரமளித்தவாறெலாம்
துரக்கறவுணர்ந்தனன்றுளபமார்பனும்
நிறக்கருமேனியனிலையுறுவகை
அறுப்பனென்றெழுந்தனனமரர்கூப்பிடால். (௭௭)

தெண்டொடுகுடையதுசெங்கையேந்தினன்
குண்டிகைநிறைதரக்குளிரச்சாத்தினன்
தெண்டிரைக்கடலினுட்சென்றவாறெலாம
நின்றெனக்கருளெனநிருதன்கூறுவான். (௭௮)

வேறு.

பொன்னிறக்கண்ணன்றன் மேற்பொருந்திடும்போரும்வென்று
நன்னிறத்திங்கள் சூடுநாயகனிருக்கைபோந்தேன்
அன்னதுகண்டுதானேயகமலர்ந்தருளினாலே
பன்னரும்வாளொடாயுள்பழிப்பிலாளீந்தானென்ன. (௭௯)

வேறு.

மற்றவாளரக்கன்றனைமாயவன்முன்னம்
பெற்றமூன்றரைக்கோடியுமொழியநீபேணி

உற்றபேரரைக்கோடிநாளகேளெனவுவந்து
பெற்றவாகனனிடத்தவன்பின்னருஞ்சென்று. (அ௦)

முன்னமூன்றரைக்கோடியுமொழியநீ முதல்வ
இன்னமோரரைக்கோடிநாளீந்தருளென்ன
மன்னுமாசுணப்பாயலான்மாயமீதென்று
உன்னுமாமலைமகளுடனுமாபதிநகைத்தே. (அக)

அன்னவாறரைக்கோடியேயளித்தனமென்றும்
நின்னுமேமாமிராவணனெனநியமித்தும்
மின்னும்வார்சடைக்கண்ணுதல்விண்ணவன்விடுப்பப்
பொன்னின்மாமுடிப்புட்பகம்பொருந்தினன்போனன். (அஉ)

ஆ திருவிருத்தம் - ௩௩௫.

## அ-வது, திக்குவிசயப்படலம்.

கங்கைசேர்சடைக்கண்ணுதல்காதலி
தங்குபங்கன்றனதருள்பெற்றவத்
துங்கமால்வரைத்தோணிருதன்றிசை
எங்கும்போர்செய்தியவனமெய்தினன். (க)

வாக்கினன்மனத்தான்மழைவண்ணனைப்
போக்கிவேறறியாதபொற்பாவையை
ஆக்குவேணியுமானுரியாடையும்
வீக்குமாதவவேடத்திருடனை. (உ)

மைதவழ்ந்தகார்வண்ணனைக்கண்ணுறச்
செய்தவம்புரிசிந்தையினுடனைக்
கைதவம்மிலாக்கற்புடைக்கன்னியை
எய்தவந்தவிராவணனேக்கினன். (௩)

அன்னகன்னியைநோக்கியரக்கர்கோன்
உன்னைநோக்கியுலகுஞ்செயுந்தவம்
தன்னைநீசெயத்தக்கதன்றுன்பெயர்
என்னையார்மகணீயென்றியம்பலும். (ச)

கோதினீதிக்குசத்துவாசன்னெனும்
மாதவன்மறையோதிடமற்றவன்

ஓதுவேதத்தினுற்பவித்தேனையென்
தாதைதேவதவதியென்றுசாற்றினான். (௫)

பேசிவந்தவர்தங்களுக்கென்பிதா
மாசின்மால்வரனாயென்மகளுக்கு
வாசுதேவனெனவரித்தேனென
ஆசையற்றங்கனைவரும்போயினார். (௬)

சம்புவென்னுந்தயித்தியர்கோன்மனம்
வெம்பியெல்லியுறங்கிடும்வேளையில்
எம்பிதாவைவதைத்திடவெம்மனை
உம்பர்வாழ்த்தவுடனெரிமூழ்கினாள். (௭)

எந்தையெண்ணமுடிக்கவியற்றுமென்
சிந்தைமாதவன்றன்வழிச்செய்கையால்
இந்தமாதவம்பூண்டனன்யானென
அந்தநீசனடாதனகூறினான். (௮)

இலங்கைமன்னனிராவணனென்பெயர்
புலன்களைவென்றபுலத்தியன்பௌத்திரன்
கலங்கல்சிந்தையென்காதலியாய்த்தரா
தலங்களுக்குத்தலைவியுமாகென்றான். (௯)

குலத்தினான்மிகுங்கொற்றத்தினாற்பெரும்
பலத்தினாலோர்பழிப்பில்வடிவினால்
நலத்தினாலெனைநாரணனொக்குமோ
உலத்தினப்பயனென்கொலுடம்பைநீ. (௧௦)

வேறு.

ஓராதவரக்கனுரைத்தசொலச்
சீரார்மடவாள்செவியிற்கனல்காய்
நாராசநுழைந்தெனநண்ணுதலும்
வேராவிவளின்னவிளம்பினளால். (௧௧)

பையாடரவிற்றுயிலும்பரனைக்
கையாழியனைக்கருணாகரனை
மையார்மழைவண்ணனைமாமலர்மேல்
செய்யாளுறையுந்திருமார்பினனை. (௧௨)

---

11. நாராசம் - இரும்புக்கோல். அல்லது, கம்பி.

சேயோனையடைந்தவர்சிந்தையனைத்
தூயோனையெனுவிமையையென்றுணைமை
மாயோனைவரித்தனென்யானெனவும்
பேயேறினைபோலிவைபேசுதியோ. (௧௩)

நிலமன்னிநெடும்பழிமேனிரயம்
பலமன்னுவைபாரினினைந்திடிலும்
புலன்வென்றபுலத்தியமாமுனிவன்
குலமன்னவனுக்கிவையோகுணமே. (௧௪)

குயில்பற்றியசொல்லிவைகூறுதலும்
அயில்பற்றியமன்மதனைங்கணைதன்
உயிர்பற்றியரிநதிடவுள்ளழியும்
செயிர்பற்றியசிநதையனீதுசெயும். (௧௫)

மையார்குழலாடன்மலர்க்கையினைக்
கையாலவன்முட்டிடலுங்கனல்காய்
நெய்யாரழலாமெனநின்றெரியச்
செய்யார்வடிவாளிவைசெப்பினளால். (௧௬)

வேறு.

வாடாமலரோன்வரச்செருக்கான்மற்றெனைநீ
கூடாதனசொல்லிக்கூசாதுநீண்டினையால்
ஏடாவுனக்குமிலஙகைக்குமுன்கிளைக்கும்
கேடாகத்தோன்றுவெனென்றுள்கிளாசினத்தாள். (௧௭)

வானோர்மகிழ்நதுமலாமாமழைபொழிய
ஏனோர்களெல்லாமினிப்பிழைத்தோமென்றியம்பக்
கானாருநதவத்தோர்கண்டுவியப்பெய்தத
தேனார்மொழிமடவாளசெநதழலின்மூழ்கினாள். (௧௮)

வன்னியிடைமூழ்கிமாதவத்தான்மாச்சனகன்
தன்னுடையவேள்வித்தரணியிடைவந்துதிப்ப
அன்னவளைமுன்னுளமிழ்கிற்பிறநதாளைப்
பொன்னெளிசோபூணினுப்வில்லிறுத்துக்கைபிடித்தாய். ()

என்றுமுனியுமியம்பவதுகேட்டு
வென்றிசசிலைதரித்தவீரன்வியப்பெய்திக்
கன்றியசிந்தையரக்கன்கடைசசெய்த
தொன்றுமொழியாதுரைத்தியெனவுரைப்பான். (௨௦)

வேதவதிதான்சீறிவெந்தீயின்மூழ்கியபின்
போதமிலாவரக்கன்புட்பகத்தின்மீதேறி
ஏதமிலாவிந்திரனேயாதியிமையவரும்
மாதவருஞ்சேர்ந்தமருத்தன்மகமடைய. (௨௧)

வாசவனஞ்சிமயிலுருவந்தான்கொண்டான்
பாசகரத்தான்பறந்தானோரன்னமாய்க்
காசினமன்கலங்கிக்காக்கைவடிவாகக்
கூசிக்குபேரனுங்கோம்பிவடிவானான். (௨௨)

மற்றையவரெல்லாமாயாவுருவங்கொண்
டுற்றதிசைதிசையேயோடவுயர்நியமம்
பற்றியிருந்தபரமன்றனைநோக்கிக்
கொற்றம்புரிமனத்துக்கோளரக்கன்கூறுவான். (௨௩)

தோற்றேனெனக்கென்றுசொல்லுநீசொல்லாயேல்
ஆற்றினாலென்னோடமர்பொரவாவென்றுரைப்பச்
சீற்றமிகுமன்னனீயாரேயெனச்செப்பக்
கூற்றமனையோனகைத்தினையகூறினான். (௨௪)

மன்னன்குபேரனைமுன்வாளமரிற்போர்வென்று
பொன்னின்விமானமாம்புட்பகமுங்கைக்கொண்ட
என்னையறியாயோவென்னவிறையுநக்கு
முன்னவனைப்போர்வென்றவூர்க்கனோதானென்றான். (௨௫)

வேறு.

என்றுரைத்தெரியிற்பொங்கியெழுந்தமர்புரியுநீதிப்
புன்றொழில்கடிந்தவநதப்புரோகிதனவனைநோக்கித்
துன்றியதிறலோய்நீயுந்தொடங்கியமகமுற்றாது
குன்றியவினையதாகிற்கொல்லுநின்குலத்தையென்றான். (௨௬)

அன்னவனறையக்கேட்டவரசர்கோனமர்கைவிட்டு
வன்னிசார்ந்திருக்கும்வேநதன்மாதவமடையநூறி
என்னதுவெற்றியென்றார்த்திராவணனேகத்தேவர்
மன்னவன்பிழைத்தேதென்றோர்மயிலினைநோக்கிக்கூறும். (௨௭)

தீயவல்லரக்கன்சீறித்திகழநின்னுருவங்கொண்டு
போயுயிர்பெற்றேனின்றபுகழினாப்புவனந்தன்னில்

---

22. பாசகரத்தான - வருணன. கோம்பி - ஓணான்.

ஓய்விலாமாரிபெய்யினுவகையுமென்னைப்போல
ஆயிரங்கண்ணுமுண்டாகென்றனனமரர்கோமான். (௨௮)

வந்திலோர்காக்கைகண்டுமென்னுசிரியமன்கூறும்
உனக்கொருகொலைநோயின்றியுலகத்திலிறந்தோர்தம்மை
நினைத்துணையூட்டவன்னோர்மகிழ்நீணிலத்தில்வாழும்
அனைத்துயிர்களினுந்தீர்க்கவாயுவுண்டாகவென்றான். (௨௯)

பாலைநீரொழியவுண்ணும்பறவையைவருணன்கண்டுன்
கோலநீடுருவமெய்யைக்கொண்டுநான்பிழைத்துப்போந்தேன்
மேலைநான்முகத்தினுக்கூர்தியாய்விளங்கும்வெள்ளை
வாலிதாநிறமுமாகிவாழுதியாகவென்றான். (௩௦)

பொன்னிறச்செல்வன்கோம்பிபோவதைப்போற்றிக்கூறும்
என்னிறவதனைக்காத்தோய்க்கெதிருபகாரமுண்டோ
மின்னுறவிளங்கும்பூணாய்வேண்டுவேண்டுருவமாகி
உன்னிறமெல்லாஞ்செம்பொன்னொளிநிறமாகவென்றான். (௩௧)

இந்திரன்முதலாயுள்ளோரிவ்வகைவரங்களீந்து
வந்துமன்னவனோடந்தமகத்தினைமுடித்துப்போனார்
வெந்திறலரக்கன்பாரிலெதிர்ந்தவர்தம்மைவெல்லா
அந்தகன்புரத்தினேற்றியயோத்திமாநகரஞ்சார்ந்தான். (௩௨)

வேறு.

எம்மானுமிருக்கானுமொருக்காவுணரிமையோர்
தம்மானுமொருக்கானுநினைக்குந்தாமல்லா
இம்மாநகரனரண்ணியனென்போனெழின்மதில்சூழ்
அம்மாநகர்மன்னற்கிவையுரைத்தானடலரக்கன். (௩௩)

போரஞ்சினெனுனக்கென்னுதல்போர்செய்குதல்செய்கென்
றீரஞ்சினதெனவிஞ்சொளிமுடியோனிவைவிளம்ப
வீரஞ்சினமிகுமன்னவன்மேகங்குமுறிடமைச்
சீரஞ்சினமயிலானுயர்திருநாடனுரைக்கும். (௩௪)

திருவோங்கியவிம்மாநகராசாண்டவர்தீயோய்
ஒருவோங்களுங்கேளாதசொல்லுரைத்தாயெனையினிநாம்

---

31. என்னிறவு - என இறவு [இறத்தல்.]
32. வெல்லா - வென்று.
34. ஈரஞ்சினது - பத்து.

இருவோம்பொரவிருவோம்படையிடைவந்துதவாமல்
பொருவோஞ்செருவெனவேவலும்புறப்பட்டதுபடையே. (௩௫)

பாழிப்புயத்தரக்கன்பரிவொடுதம்பியுந்தானும்
ஆழிப்பெருந்தேராண்மிடையனரண்ணியன்படையும்
ஊழிக்கனலெனவொன்றிடவுறுசேனையையரக்கன்
தாழிப்பெருஞ்சோரிக்கடனூறுயிரஞ்சமைத்தான். (௩௬)

யானைப்பெருந்தேராண்மிடையளவற்றனபெரும்போர்த்
தானைக்கடல்பாழாகிடத்தரியாதவன்சலியா
மானத்தினரனரண்ணியன்வளைவாளெயிற்றினன்மேல்
சேனைப்பெருமாரிக்கணைசொரிந்தான்மனநெரிந்தான். (௩௭)

வீரச்சிலையனரண்ணியன்விடுவாளிகள்வெய்யோன்
மார்பத்திடையுறத்தைக்கவுமதியாதுவந்தடர்த்துப்
பாரப்பணைக்கரத்தாலவன்பதைப்பப்புடைத்தாவி
சோரத்துயருறுவான்றனைமுகநோக்கினன்சொல்லும். (௩௮)

பொடிபட்டதுநின்றிண்படைபொரவந்தமராற்று
தடிபட்டுவிழுந்தாயெனக்கமரஞ்சினையென்றும்
மிடிகெட்டரசாளார்தறவிமைத்தாயெனமிகையால்
இடிபட்டிடநகைசெய்தலுமனரண்ணியனியம்பும். (௩௯)

துன்னிட்டதலைத்துன்மதிதோற்றேமெனவறப்போர்
நன்னிட்டையிலாதாயெமைநகைசெய்தனைநாங்கள்
வெந்நிடடிலமுனக்குன்னொடுவெம்போர்செயவென்கால்
முன்னிட்டதுபின்னிட்டிலெனெனப்பின்னையுமொழிவான். (௪0)

காலத்தினைஞாலத்தவரெவரேகடப்பவர்தாம்
ஆலக்கொடுமனத்தோயவமதித்தாயெனையதனல்
கோலத்தசரதராமனென்குலநதோன்கொடுங்கணையால்
தாலக்குலைபோனின்றலைதரைவீழ்கெனச்சபித்தான். (௪௧)

இச்சாபமயோத்திப்பதிக்கிறைவன்சினத்தியம்ப
அச்சாபமனத்திற்கொளகில்லாதடலரக்கன்
கைச்சாபம்வளைத்துப்பலவிழியுங்கனல்பொங்க
நச்சார்கணைபலதூவிநடந்தான்பழிநடந்தான். (௪௨)

ஒன்னார்களிலங்காபுரியுடையானுடனொளிவாழ்
மின்னார்முடியனரண்ணியன்வெம்போரெழும்வேலைப்

---

41. தாலக்குலை - பனம்பழத்தின்குலை.

பொன்னூர்புரிபாழ்கொண்டிசைபொன்றாடிபல்புகலும்
முன்னாரதமுனிவந்திறையுடனேனுக்கினன்மொழிவான். (௪௩)

வேறு.

போரார்வெஞ்சிலை யரக்கபொருளல்லாநரியோடும்பொருமோ சீயம், தீராததீவினையாலடர்ப்புண்டுதிண்பசிநோய்மூப்பினொந்து, சோராதவிம்மானுடரைத தொடர்ந்திறுததாயெனக் கேட்டோந் துன்னார்போரில், பேராதநிலையுடையோய பிணமவெட்டிவாண்மு றித்துப் பெறும்போருண்டோ. (௪௪)

பெற்றதாய்ப்புரண்டலறப் பிள்ளையுயிர்தான்கொண்டும் பெரு குங்காதல, உற்றழுவப்பாலர்தமை யீன்றெடுத்துவளர்த்தாரை யுயி ரையுண்டும், குற்ற மானதும்பெருக்குங் கொடுநமன்றன்வலைப்பட் டுக் குலைந்துவீழும், மற்றோராதரமில்லா மானுடரைக்கொல்லல் வழக்கன்றென்றான். (௪௫)

என்றுமுனியிவைகூற விராவணன்கேட்டெம்பெருமா னியம் பிற்றன்றே, இன்றுசெயுமிதுவல்லால் யானறிவதொன்றுண்டோ வென்றுகூற, நன்றுபெரிதெனமகிழ்ந்து நாரதமாமுனிகூறுநல்லை யின்னே, சென்றுநமன்றன்னோடு செருசசெய்தியவன்றோற்கை திண்ணமென்றான். (௪௬)

அந்தமுனியிவையருள வவனுடையவடிவணங்கி யரக்கர்கோ மான், சிந்தையினுங்கடுநெய்வத் தேரதனைத்தென்றிசைமேல் விடுப்பத்தேரின், முந்துமுனிதனைக்கண்டு முறையாலேயருச்சித்து முனியேயிங்கு, வந்தபொருளுரையென்று நமன்கூறமாமுனிவன் வரைந்துகூறும். (௪௭)

மின்னஞ்சுமொளிமுடியாய் விளம்பக்கேள்வேதியனும்விதியை நோக்கி, முன்னஞ்செய்தவச்செருக்கான் முனிவினுனமூவுலகுஞ சுடுவான்கண்ணும், வன்னெஞ்சவிராவணன்வா ளமர்பொருவானின் றன்மேல் வரக்கண்டாற்றேம், என்னெஞசமுலையுந்த யான்வந்தே னிதுவிங்குப் புகுந்ததென்றான். (௪௮)

ஆதித்தன்றருமைந்தற் கந்தமுனியிந்தவுரையறையுங்காலைச், சாதிக்கும்பொருளெல்லாந் தவத்தினுற்சாதிக்கத் தகுமென்பார் போல், சோதிப்பன்மணிநெடுந்தேர்ச் சுடர்மவுலியிராவணன்றொல் லுலகையெலாம், வாதிக்குநமன்றன்னை வாதிப்பான்வளநகரி வந்து சார்ந்தான். (௪௯)

---

49. ஆதித்தனதருமைந்தன் - சூரியன்மகனான யமன்.

*சீர்க்குமிழினிலைகலக்கித் திகழ்குழையைச்செலநோக்கிச் செ
றுத்துக்கோட்டிப், பாரகும்பமிழிபாவையராம் படுகுழியில்விழா
தோர்க்கும் பற்றொன்றில்லா, நீர்க்குமிழியுடம்பென்று நிலையறங்
கள்செய்தோர்க்கு நெறியினின்றோர், யார்க்குமிழிவாஞ்சுவர்க்கத்
தவ்வவர்களினிதுவீற் றிருப்பக்கண்டான்.* (ருo)

*பூதானங்கோதானமுதலானபூசுரர்கடம்மைப்போற்றி
மாதானஞ்செய்தோரும்வறியோராயிவைகொடுக்கமாட்டாராயின்
யாதானுந்தமக்கட்போழ்தெய்தியதையிட்டுண்ணுமிவருமன்ன
தாதாவுமுதலானதயாவினோர்வீற்றிருந்ததன்மைகண்டான்.* (ருக)

*சடங்கொடுக்கும்வினைகடிந்த தாபதர்களினிதங்குத் தங்கக்
கட்டி, மடங்கொடுத்துமறையவர்க்கு மனைகொடுத்துவைகாசிமாதந்
தண்ணீர்க், குடங்கொடுத்துங்குளிர்காலங் குளிர்ந்தவர்க்குப்போர்
வையினைக் கொடுத்துந்தங்க, இடங்கொடுத்துமிங்கிவர்க ளெழின்
மணிமாமண்டபத்தி லிருக்கக்கண்டான்.* (ருஉ)

*உடுப்பதுவுமுண்பதுமில்லாதோர்க்குடைகூறையுதவியுண்ணக்,
கொடுத்தவர்நோய்தீர்த்தோருங் கொடியோராய்க்குணங்கள் பல
செய்துதம்மை, அடுத்தடுத்துவைதாலும் பொறுப்போருமந்தண
ரோ டாவுக்குற்ற, நடுக்கமதுதீர்த்தோரு நல்லுலகினுயகரா யிருப்
பக்கண்டான்.* (ருங)

*மன்றுபறித்துண்டோரும் வழக்கல்லாதுரைத்தோரு மனையா
டன்னை, யொன்றியுடன்வாழாதே யோராதேபரதார முவந்துள்
ளோரும், கொன்றுடலந்தினறோருங் கோட்சொல்லித்திரிவோருங்
கோவிச்செய்த, நன்றிதனைமறந்தோரு நரகத்தினிடைக்கிடந்து
நடுங்கக்கண்டான்.* (ருச)

*கற்றவரைக்காய்ந்தோருங் கைப்பிடித்தகாதலியைக் கனன்று
ளோரும், பெற்றவர்தாம்பசிகூரப் பெருவயிறுவளர்த்தோரும் பே
ணித்தம்மோ, டுற்றவருக்குற்றோரு மந்தணரையிகழ்ந்தோரு மம
ரிலாண்ட, கொற்றவனைவிட்டோடுங் கொடியோருங் கும்பியிடைக்
குளிப்பக்கண்டான்.* (ருரு)

*கோபத்தால்வினையெண்ணிக்குடிகெடுசூழ்ந்தோருங்குலத்தால்வந்த
தாபத்தாலிறந்தோரைத்தாமடர்ந்துவைதழிக்குந்தயாவிலோரும்*

---

50. குமிழினிலைகலக்கி - குமிழமலரையொத்த மூக்கைப்பொரத்தாக்கி.
55. கும்பி - ஒருநரகம்.

ஆபத்தாலபயமென்றேயடைந்தோரைவிட்டோருமாதியாய
பாபத்தாரும்பலரைப்பழிப்போரும் படுநரகிற்பதைப்பக்கண்டான்.

மாவிரிநீர்க்கடல்சூழ்ந்தமண்ணுலகின்மனிதராய்ப்பிறக்கப்பெற்றும்
நாவிலரியோகமோநாராயணாயநமவென்னமாட்டாப்
பாவியரும்பலதெய்வம்பழித்துரைக்கும்பாதகரும்பாரந்துதங்கள்
வாய்வழியேபுழுச்சொரியமாநரகக்கும்பியிடைகறுகக்கண்டான். ()

கூறுபடுதசைமூளை குருதியொடுகுடர்வழும்பு குழம்பியொன்
றாச், சேறுபடுகொடுநரகிற்றீவினையோர கிடந்துழைப்பத்தெரிய
நோக்கி, ஏறுமினென்றவ்வரக்கனைறவிட வின்றெல்லாமபிழைத்
தோமென்றென், றாறுதுயரின்றாகியருநரகங்காவலர் களுழன்றுவந்
தார். (௫௮)

வேறு.

வெஞ்சினமுருக்கொண்டன்னமேனியர்வெய்யகண்ணர்
மஞ்சிடியிடித்தசொல்லர்மலைமுழைதிறந்தவாயர்
நஞ்சினுங்கொடியநெஞ்சர்நமன்றருஞாலமெல்லாம்
அஞ்சுநமவலிக்கென்றஞ்சாரரக்கரோவெனவந்தார்த்தார். (௫௯)

என்றுரைத்தெரியிற்பொங்கியிராவணன்றன்னைச்சூழ்நது
கொன்றுயிர்குடித்துமென்றுகொதித்துமேன்மண்டிவீழ
வன்றிறலரக்கனுனமகோதரன்முதலாயுள்ளோர்
சென்றுதாக்கினர்களந்தச்செருக்கிளர்சேனையோடும். (௬௦)

தருக்குடைத்தருமன்சேனை தாக்கியவரக்கன்சேனை
வெருக்கொளநெருக்கிப்புக்குவெங்களத்தவியநூறி
அரக்கர்கோன்கரியமேனியணிதிகழ்முருக்குப்பூத்த
பொருப்பெனக்குருதிபொங்கப்பொருபடைதூவியார்த்தார். (௬௧)

விரிகடலிலங்கைவேந்தன்மேவியவூழிகாலத்
தெரியெனவெழுந்துபொங்கியிருபதுகரங்களாலும்
பொருபடைவழங்கித்தெய்வப்புட்பகங்கடாவிவெம்போர்த்
தருமன்றன்சேனையெல்லாந்தரைபடச்சாடுங்காலை. (௬௨)

செருவழிநதியமன்சேனைதிரண்டொருங்கெழுந்துசெல்லின்
உருவழியரக்கர்மேனியுள்ளுறப்படைகளூன்றி
ஒருவழியொருவர்போகாவகையுறுபடையையோட்டிப்
பொருவழியரக்கன்சீறிப்புட்பகநின்றும்பாய்ந்தான். (௬௩)

---

63. செல்லின் உரு - மேகத்தின் கரு நிறம்.

வரிசிலைகையில்வாங்கிவாளெயிற்றரக்கனீசன்
பொருபடைவிடுதலோடும்பொங்கெரிபரந்துகண்ணில்
தருமன்வெஞ்சேனைதாவத்தாவியதாலமென்னத்
திரிபுரமென்னவெந்துதீந்ததுகாலன்சேனை. (௬௪)

போர்படைபொடியாய்நூறிப்புனைகழலரக்கனார்ப்ப
ஆர்ப்பொலிசெவியினெய்தவனலுயிர்த்தழன்றுபொங்கித்
தார்ப்பொலிகுருதிவண்ணத்தாண்டுமாப்பூண்டுசெம்பொன்
தேர்ப்பொலிநதிலங்குமேனித்தென்புலத்திறைவன்சீறி. (௬௫)

நெற்றியிற்காலன்செல்லநீள்பெருங்காலபாசம்
மற்றைவெங்காலதண்டம்வநதிருமருங்குஞ்செல்ல
உற்றபேரூழிகாலத்துருத்திரமூர்த்தியொப்பச்
சுற்றியசேனையோடுநதோன்றினனுலகமுட்க. (௬௬)

நட்டமாமுலகமின்றேநாமினிப்பிழைப்பதெங்கே
எட்டனையறிவுமில்லாவிராவணவேள்வியின்று
பட்டதுபடுகவென்றுபயமுறப்பின்புடாராக்
கெட்டனரரக்கரெல்லாங்கெடாதிலங்கேசனின்றான். (௬௭)

நின்றவனிலைமைகண்டுநெய்சொரியழலிற்பொங்கித்
தென்றனன்றேன்முன்வெருவலனின்றபோதே
என்றுதென்றிசைக்குநாதனீட்டிவேல்குலிசமேவச்
சென்றவன்னிறத்திற்றைக்கத்தென்னிலங்கேசன்சீறி. (௬௮)

கார்முகம்வளையவாங்கிக்கார்முகமாரிபோலக்
கூர்முகவாளியாலேகுறித்தலைதுணித்துவீழ்த்து
நேர்முகத்தெதிரிலாதநிருதரைசிறத்தில்வன்னி
ஆர்முகக்கணைகளேநதியந்தகற்கலக்கண்செய்தான். (௬௯)

இருவருமிநதவண்ணமேழுநாளிடைவிடாதங்
கொருவரையொருவர்வெல்லத்தொடங்குவருபாயம்பார்ப்பர்
பொருவழியரக்கன்சீறிப்பொருந்துதேர்ப்பாகன்றன்மேல்
தருமன்மேறகாலன்றன்மேற்சரங்களாயிரந்தைப்பித்தான். (௭௦)

வேறு.

என்புலத்தியன்மேனியிருந்தவன்
வன்புலத்தியன்மாற்றியமாமுனி

69. காமுகம் - [1] வில [2]; மேகம். நிருதரை - நிருதர் ஐ (தலைவன) இராவணன.

71. எனபு உலத்து இயல்மேனி - வன்புலத்து (புலங்களின) இயல்மாற்றிய.

நன்புலத்தியனன்மகன்மைந்தன்மேல்
தென்புலத்தியமன்மிகச்சீறினான். (எக)

ஆலமென்னவனலென்னவந்தகன்
ஞாலமெல்லாநடுங்கக்கொதித்திடும்
வேலைவெங்கனலென்னவெகுண்டுவெங்
காலனன்னவற்கின்னகழறினான். (எஉ)

என்னையேயுதியென்னிவிராவணன்
தன்னைநானுயிருண்பன்றடையிலா
வன்னியன்னமதுகைடவர்முதல்
ஒன்னலாருயிருண்டதுணர்தியால். (எந)

காலனிவ்வகைகூறிடக்காணிவன்
காலமுண்டெனநமன்கண்ணெரி
காலமன்னுயிரெல்லாங்கலங்கிடக்
காலதண்டம்விடுவான்கருதினான். (எச)

ஆயகாலையனைத்துலகங்களும்
மாயுமின்றெனவானவரஞ்சிடத்
தூயநான்முகன்றோன்றியதடைநால்லுயிர்
நாயகன்றனைநண்ணியிவைசொன்னான். (எரு)

திண்டடம்புயதசெந்தன்னிலங்காதிபன்
பண்டுபெற்றவரத்தின்பலததிறல்
தண்டுநீவிடினுங்கவன்றன்னுயிர்
உண்டிடாதுவிடுதலொழிதியால். (எசு)

என்றுநான்முகனிவ்வாறியம்பலும்
தென்றிசாதிபன்றீயவரக்கன்மேல்
வென்றிமேவியதண்டம்விடாதவன்
நின்றகாலைநிருதர்குலாதிபன். (எஎ)

வேறு.

வெற்றியெனதென்றுரைத்து மிக்கெழுந்தவுவகையனாய்விறலி
ன்மிக்க, மற்றடந்தோண்மாரீசன்மகோதரனே முதல்வரொடுமணி
த்தேரேறிப், பற்றலரைநிலைகெடுப்பான் பாதாளத்திடைபுக்குப்ப
ண்பினோடும், பொற்றடமாளிகைவிளங்கும்போக புரியெனுநகரிசெ
ன்றுபுக்கான். (எஅ)

78. போகபுரி - நாகலோகம்.

அந்நகருக்கரசனுமுடன்மிகுதோள்வாசுகியோடளவளாவி
மன்னியநல்லுறவாகிமணிமதியாம்வளநகரிவந்துசாரத்
தன்னிகரில்லாதோர்கள்சாதித்தபெருவரமும்வலியுஞ்சார்ந்தோர்
நின்னிலெனப்புறப்பட்டுநிவாதகவசாதியர்கள்சென்றுநேர்ந்தார். ()

ஆங்கவர்களடர்ந்துவந்தார்த் தரக்கர்மேலளவிலாப் படையை
யேவப், பூங்கழற்காலரக்கனுமப்பொருபடையைப் பொருபடைகள்
விடுத்துமாற்றி, தாங்கரியபடைவிடுத்துமப்படையை யவர்தடுத்து
ந்தளர்வொன்றின்றி, ஓங்கியபோராற்றலர்களோராண்டு கைவிடாது
றுபோர்செய்தார். (அ௦)

புண்டரிகத்தயன்வந்துபொருமவரைப் போர்விலக்கிப்புகல்வா
னீங்கள், பண்டுடையவரத்திறைப்பகைத்துநீர் பல்லாண்டுபடைசெ
ய்தாலும், திண்டிறலிரொத்தீர்களொருவரையு மொருவரமாசெயி
க்கவொண்ணு, எண்டிசையுமுங்கள்வலியேறியதா லினியுறவேயினி
திங்கென்றான். (அக)

பூமருவுநான்முகத்தோன்புகன்றவுரையதுபோற்றியவனைப்போக்கி
தாமருவியெல்லாருந்தப்பாமற்றனித்தனியேசபதஞ்செய்யத்
தேமருவுதாரவுணர்சிறப்பொடுபூசனைசெய்யவரக்கர்கோமான்
ஏர்மருவுமநநகரிலீராறு திங்களினிதிருந்தகாலை. (அஉ)

அந்நகரிவிட்டரக்கரடல்வருணன் றனைவெல்வானவன்றான்மே
வும், கன்னகிரிதனைமுடிக்காலகேயரை யெல்லாங்கணத்திற்கொ
ன்று, தன்னுடையதங்கையாந்தடவரைத்தோட் சூர்ப்பணகைதன்
னைக்கொண்ட, மின்னனையசுடரிலைவேல்வித்துருசிங்கன்றனைவெங்
களத்துவீழ்த்தான். (அ௩)

புனலுறுவெண்மேகமெனப்பொலிந்திலங்கித்தோன்றுவதைப்
பொருந்தாருரை, நினைவதன்முன்னெரிசெய்தநெடுஞ்சரத்தோனி
ருக்கின்றநெடியவெற்புத், தனையுருவகிறத்திறலொக்குமெனத்த
குவதனைச்சார்யாவென்றிக், கனைகழற்காற்றசக்கிரிவன்கடலரசன்மா
ளிகையைக்கண்ணிற்கண்டான். (அ௪)

பைவிரிநாகத்தனைமேற்பான்றுயில் கொள்பரந்தபாற்கடலிற்
றந்த, தெய்வநெடுஞ்சுரபிதனைச்சென்னிநில முறவணங்கித்திறலி
ன்மிக்க, மைவரைபோன்மெய்யரக்கன்வந்துனக்குத் தோற்றேனெ
ன்றுரைத்தலன்றி, வெவ்வமர்செய்குதல்செய்யாதெங்கொளித்தா
ன்வருணனெனவிளம்பும்வேலை. (அரு)

ஊழித்தீயெனப்பொங்கிப்போங்கியசீர் வருணன்றன்னுயர்தோ
ண்மைந்தர், ஆழித்தேர்படைசூழவரக்கர்பெரும் படையோடமர்
செய்காலை, சூழிப்போர்மதகரியுநெடுபரியு மிரதமும்போதா
ணியநூறிப், பாழித்தோள்வாளரக்கனபாசகரத்தான் படையைப்
பாரிலவீழ்த்தான். (அசு)

சேனைபடத்தரியாதுதிறல்வருணன்றன்மைந்தர்சீறமபொங்கி
வானமதிற்புட்பகத்தின்மிசைநின்றவாளரக்கன்றன்மேல்வந்து
சோனைமுகிற்குலமாரிசொரிவனபோற்கணைமாரிதூவியார்ப்ப
ஆனவனைவிலக்குகையேபணியாகவடலரக்கனலக்கணுற்றான். ( )

மதிகொன்றைவளர்சடையோன் வரைபெடுத்தோன்வாருணிக
ளொடுமபோர்செய்ப, அதுகண்டுமகோதரன்போரழ லென்னவால
மெனவழன்றுவேகக், கதிகொண்டுவருணபலங்கைக்கொண்டு கள
த்தவியநூறக்கண்டு, குதிகொண்டுவாருதிநீர்குறைகடற்கோன்மை
ந்தர்மனங்கொதித்துளோர்கள். (அஅ)

மாயமிகவல்லவனுமகோதரன்றன்மருமத்தில்வன்னிபோலும்
சாயகங்களுறத்துரந்துதானையினைத்தரைப்படுத்துத்தசகிரிவத
தீயவன்றன்செறிவயிரத்திரள்புயத்துமார்பகத்துஞ்செந்நீரோதம்
பாயவடிக்கணையேவிப்பகிரண்டங்குலுங்கவுயிர்பதைக்கவார்த்தார்.

ஆலமென்னவழலென்னவழன்றரக்கர்கோன்சரங்களனைத்தினாலும்
சூலமயில்வெங்குலிசந்தோமரந்தண்டிலக்கைமுதற்படைகளீண்டிக்
காலனெனக்கதித்துரப்பிக்கடிகடர்ந்துமேல்வீழவருணன்றந்த
பாலரனைவருங்கெட்டுப்பயந்தோடும்பதியோடும்படியில்வீழ்ந்தார்.

வெவ்விடத்திற்கொடியோனும் விறலரக்கன்விளம்புவான் விழி
யினில்லா,தெவ்விடத்தான்வருணனெனவவனமைச்சரிரண்டுமுக
த்தோன்வைகும, அவ்விடத்தானவன்குமரரமருக்கின்றுற்றாய
ழிந்துபோநதார், இவ்விடத்தினினக்கொருவரெதிரில்லையிராவணநீ
யினிதேகென்றார். (கூக)

அந்தவுரைகேட்டுவந்தவடலரக்கன்பகிரண்டமதிரவார்த்து
வந்தவழிபுறப்பட்டுமதிலிலங்கைநகர்நோக்கிவழிக்கொள்வேலை
அந்தணர்தங்கன்னியருமசுரர்கடங்கன்னியருமளவிலாத
கந்தருவர்கன்னியருமுதலாயகன்னியரைக்கண்ணிற்கண்டான். ( )

86. பாசகரத்தான - வருணன.

88. வாருணிகள் - வருணனமைந்தா [தத்திதாந்தம்.]

ஆங்கவர்கள் பூனைவாயகப்பட்ட கிளியென்ன வளவிலாற்றல் [த்
ஓங்குபுலிவாய்ப்பட்ட வுழையென்னவுண்ணடுக்கமுற்றார்கொன்றை
தேங்கமழ்பூங்குழலியரைத் தெய்வத்தேர்மிசையேற்றிச்சேனைசூழ
தாங்கரியபோராற்றற்றசக்கிரிவன்றன்னகரிவந்துசார்ந்தான். [த்

கன்னியர்கடாய்மார்கள்கன்றிழந்தபசுப்போலக்கதறியெங்கள்
நன்னுதலார்தமையெல்லாநடுக்கங்கண்டிடுதலானறுமென்கூந்தல்
அன்னநடையார்பொருட்டாலடலிலங்கைபாழாகியரக்கர்கோமான்
தன்னுடையமுடியோடுந்தலையற்றுவிழுகவெனச்சபித்தாரன்றே.()

வேறு.

ஆயவன்றனணிநகரமவனடையவடல்கால
கேயரமர்பொருகளத்துக்கிளரரக்கர்பெருஞ்சேனை
சாயவமர்பொருகளத்துத்தன்கணவன்படக்கேட்ட
தீயகொடுஞ்சூர்ப்பணகைசெய்தனயாமுரைசெய்வாம். (௯௫)

சலமேவுதுயரினளாய்த்தான்விழுந்துபுரண்டலறித்
தலைமேலேகைவைத்துத்தன்கணவன்றான்கிடந்த
கொலைமேவுபோர்க்களத்தைக்குறுகியவன்மிசைக்கிடந்த
மலைமேலேவந்ததொருமலைவீழ்ந்ததெனவீழ்ந்தாள். (௯௬)

விழுந்தாளைநெடும்பொழுதுவெய்துயிர்ப்பொன்றில்லாளைக்
கழிந்தாடன்கணவனொடுமென்றிரங்கிக்காரிகையார்
செழுந்தாரைநீர்முகத்துத்தெளித்தெழுப்பச்செத்தவர்கள்
எழுந்தார்போலெழுந்தவடானிவைசொல்லிப்புலம்பினாள். (௯௭)

காதலனீயென்னைக்கைப்பிடித்தவன்றுமுதல்
பேதையேன்சொல்லியசொல்பிழைத்தறியாப்பேரவுண
நாதனேயென்னைநீநடுக்கங்காணுதூரில்
போதநீயெழுந்திராய்பொய்யுறக்கமுறங்காதே. (௯௮)

என்னிற்பின்சூர்ப்பணகையிருக்குமோமாவிராளோவென்
றுன்னிச்சோதிப்பானுளுயிரடக்கிக்கிடந்தாயோ
பின்னிற்கும்பழிபூண்டுபெருந்துயரப்பட்டுநான்
உன்னிற்பின்னிருக்கிலேனெழுந்திராயுத்தமனே. (௯௯)

முன்னமேதானென்னைமுறைமையாலேகொடுத்துப்
பின்னெனைநூலிழுப்பித்தவிராவணனுமென்றமையன்

---

96. சலம் - தணியாக்கோபம்.

100. நூலிழுப்பித்த - மங்கலநாதனை இழக்கும்படிசெய்த.

தன்னைமூவுலகாளயான்கண்டுதாரவுணர்
மன்னனையுடல்சுமந்துவாழ்வேனோவாழ்வேனோ. (௧௦௦)

கைம்முறுக்கிவாய்மடித்துநீகிடந்தகருத்தறியேன்
மைம்முகத்துக்கருமனத்துவாளரக்காகோமானே
மெய்ம்முறிக்கப்பெற்றிலேனெனநினைந்தோமேவாரை
மொய்ம்முறிக்குமாற்றலாய்காரணமென்மொழியாயோ. (௧௦௧)

என்றினையபலபன்னியெழிற்கணவன்றனைப்புல்லிக்
கன்றியநெஞ்சினளாகிக்கதறுகின்றசூர்ப்பணகை
தன்றுணைவிமாரவளைத்தாங்கிக்கொண்டகம்போகக்
குன்றனையதோளானைவிதிமுறைநிகழ்கொளுத்தினர். (௧௦௨)

ஆயதன்காதலனையழற்படுத்தாரெனக்கேட்டுக்
காயும்வெங்கனலென்னக்காந்துகின்றமனத்தாளாய்
வாயொருக்காலோயாதேதமழையிடித்ததெனக்கதறிச்
சேயிழையாரெல்லாருந்தேற்றவுந்தான்றேறாதே. (௧௦௩)

ஆக்குமவனையழிக்கையழகென்றென்றுணராதே
தாக்கியேகாதலனைத்தரைப்படுத்ததசமுகன்முன்
நாக்கினைநான்பிடுங்கியென்றனடலைநோயதுதீரப்
போக்குவனென்னுயிரென்றுசூர்ப்பணகைபுறப்பட்டாள். (௧௦௪)

மாத்தானைபுரிபோர்த்தவளர்சடையோன்வாழ்கயிலை
பேர்த்தானைப்பெருவலியாற்பெரும்புவனங்களைவென்று
போர்த்தானைபுடைசூழப்பொன்னகரிற்புகுந்திருந்த
மூத்தானையிளையாள்கண்டிவைசொல்லிமுறையிட்டாள். (௧௦௫)

சொல்லெடுத்துப்பழிதூற்றித்துன்பங்கொண்டெவ்வீடு
கல்லெடுத்துநல்லுற்றார்கரைந்தேங்கக்கடைக்கானீ
வில்லெடுக்கையுன்னுடையவீரத்துக்கழிவன்றோ
அல்லெடுக்குந்தலைமாய்த்தவண்ணாவோவண்ணாவோ. (௧௦௬)

முலைப்பாலைநஞ்சாகிமுனைமுகத்திலொருக்காலும்
கொலைப்பாலனல்லாததன்மைத்துனனைக்கொலைசூழ்ந்த
புலைப்பாவியுன்றமையன்பொல்லாதனென்றெல்லாரும்
அலைப்பாலையறவலைந்தேனண்ணாவோவண்ணாவோ. (௧௦௭)

காசுக்கும்பொன்னுக்குமாழிக்குங்கடுஞ்சொல்லின்
வாசிக்குங்காலுண்ணுமணவாளப்பிள்ளைகளைப்

பூசிக்கைபொருகளத்துக்கொன்றுபுரட்டிடுகையோ
ஆசைக்கும்புறஞ்செலுத்துமண்ணாவோவண்ணாவோ. (௧௦௮)

மிகையெல்லாஞ்செய்தாரேயாயிடினும்விளையாட்டாம்
வகையல்லாலொருக்காலுமைத்துனர்மார்தம்மோடு
பகையில்லையென்னுமந்தப்பழமொழியுங்கேட்டிலையோ
அகைவில்லான்வரையெடுத்தவண்ணாவோவண்ணாவோ. (௧௦௯)

வேறு.

இலங்கைவேந்தன்றன்முன்னையென்றுசொல்லிமுறையிட்டு
விலங்கல்வந்துவிழுவதுபோல்விரித்தகுழலுவெறுங்கழுத்தும்
கலங்குமனமுமுடையாளென்செய்வேனென்றுகையெடுத்துப்
புலம்பியவன்றனடிபூண்டுபொடியிற்கிடந்துபுரண்டழுதாள். (௧௧௦)

தங்கைவிழுந்துபுரண்டலறத்தாங்கியெடுத்துத்தசக்கிரிவன்
மங்கையுனக்கிவன்றுயரம்வந்ததென்காரணமென்னக்
கங்கைமுடியோன்வரையெடுத்தோய்காலகேயர்பொருளகத்துன்
அங்கைவாளாலென்கணவனாவியுண்டாயெனவழுதாள். (௧௧௧)

வேறு.

பெண்ணாகியுன்குலத்துப்பிறந்தாள்பேரிடும்பையுற
அண்ணா நீயரசாளவரக்கர்குலத்தறனாமோ
எண்ணாதென்காதலனையிகலமருளுயிருண்டாய்
விண்ணோரென்கூறுவாரெனவிம்மிவெய்துயிர்த்தாள். (௧௧௨)

வேறு.

இன்னபலவும்பன்னுமிவட்கிலங்கைவேந்தனீதுரைக்கும்
உன்னையுடையகணவனைநானென்றுமுணராதுயிருண்டேன்
என்னையமரின்மதிமயக்கியென்னாலேயின்றவனாவி
தன்னையுண்டவிதியாரைத்தடுக்கவல்லார்தாமுண்டோ. (௧௧௩)

என்றுதங்கைமனமுவப்பவெல்லாப்பூசைகளுமியற்றி
ஒன்றுகுணத்தினுந்தாயருடனேபிறந்தாள்வயிற்றுதித்த
வென்றிவீரர்கரனுமவன்விரிந்தபடைக்குத்தலைவனும்
துன்றுவிற்கைத்தூடணனுந்தோலாவலிமுச்சிரத்தோனும். (௧௧௪)

இந்தமூவர்தண்டகமாமெழில்சேர்வனத்துளிருப்பாரால்
முந்தியேநானதுவவர்க்குமொழிந்துவிட்டேனவரோடும்
சிந்தையுவந்தாண்டினிதிருத்தியென்னத்தேவர்செய்தவத்தால்
அந்தவரக்கியவ்வனத்திலவரோடுறையுமக்காலை. (௧௧௫)

நிருதர்கோமானிகும்பலையா நீடுவனத்தினுட்புக்கு
மருவியங்ஙன்மகஞ்செய்யுமகனைக்கண்டுமனமகிழ்ந்து
கருதிநீசெய்காரியமென்கழறென்றுரைப்பக்குலகுருவாய்ச்
சுருதிவேலைகரைகண்டதோலாவினைச்சுக்கிரன்சொல்லும். (௧௧௪)

அங்கிட்டோமங்கோமேதமிராசசூயமயமேதம்
பங்கப்படாதபஞ்சுவணம்வாசபேயம்பாசுபதம்
இங்கிப்பேராம்பெருவேள்வியேழுஞ்சமைத்தநின்மகற்குக்
கங்கைச்சடையோன்வெளிப்பட்டுக்காளையிவனைக்கண்டுவந்து. ( )

அழிவிலாதவடற்றேருஞ்சிலையுமாவநாழிகையும்
இழிவிலாதபெருந்தவத்தினின்பதுன்பங்களையறுத்தோர்
மொழியுஞ்சாபமெனத்தப்பாமுரட்பல்லவமுமுனைமுகத்தில்
ஒழிவிலாதபகையறுக்குமொளிப்பத்திரமுமுவந்தளித்து. (௧௧அ)

இலங்காபரணத்திளமுலையாரிடுக்கண்மாயத்தகப்பட்டுக்
கலங்காநெஞ்சத்தியோகியருங்கலங்குமாயைகடிதியற்றி
நிலங்கால்குலையநீடமரர்நின்றுநடுங்கநேர்வெல்லும்
பலங்களுனக்குண்டாகவென்றுபரமனளித்தானெனப்பகர்ந்தான்.

அந்தவெள்ளியிவைகூறவரக்கர்கோமானகமகிழ்ந்து
மைந்தன்றன்னைமுகநோக்கிவானோரானோர்க்கவிர்ப்பாகம்
உந்துகருமமினிச்செய்கையொழிதியென்றுவிலக்கித்தான்
தந்தகுமாரனொடுமந்தத்தசக்கிரிவன்றன்னகர்சார்ந்தான். (௧௨௦)

பாகுபோலமொழியாளைப்பற்றிக்கொணர்ந்தபாவையரைச்
சோகமேவுசிந்தையரைத்துணைக்கண்ணருவிசோர்வாரைச்
சேகுபோலுமனத்தரக்கன்றிரளவழைப்பத்தீவினையைப்
போகமுயன்றவீடணனப்பொல்லாச்சரிதற்கிவைபுகன்றான். ( )

மாசிலாதகுடிப்பிறப்புமானங்கீர்த்தியிவைமாய
ஆசைநோயானதுபெருகவனங்கசரத்தாலேவுண்டு
கூசலின்றிக்குலத்தவரைக்குலையச்செய்தார்குலத்தோடும்
நாசமெய்திப்பழியோடுநரகமுறுவரெனவுரைத்தான். (௧௨௨)

ஏகவீரவிதுகிடக்கவியம்பக்கேண்முன்பெய்தியதை
மேகநாதன்வேள்வியுளான்வீரனையும்பிதுயிற்
போகமேவியவன்கிடந்தான்புனலின்மூழ்கியாண்கிடந்தேன்
ஆகமதுவாமடலசுரனணிநீளிலங்கையாண்புகுந்து. (௧௨௩)

உற்றகரிதேர்பரிகாலாளுலைய நூறியுயர்மௌலிக்
கொற்றவாநஞ்சிற்றவையைக்கும்பிநசியாங்குணவதியைப்
பற்றிக்கொண்டுதன்னுடையபதியிற்புக்கானெனத்தம்பி
சொற்றவார்த்தைகேட்டழன்றுதுடிக்குநெஞ்சனிவைசொன்னான்.

பூனைச்செவியையெலிமோந்துபுலியைப்புல்வாய்தொடர்ந்ததெனத்
தானைக்கடலைக்கலக்கியெனதாயர்க்கிளையாடனைக்கொண்டேன்
மானக்குலத்தைவரப்பழித்தான்மதுவேகேட்டும்வாழ்ந்தோநம்
சேனைக்கடலைமதுபுரத்திற்செல்கவென்றான்சினமிக்கான். (கஉரு)

நம்பிபுகழ்வீடணன்றன்னைநகரங்காவல்பெறவிருத்தி
வெம்புபோருக்கொருப்படுகமேகநாதனெனவிளம்பி
எம்பியுறக்கர்தீர்த்தவனையிவணீர்கொணர்திரெனவியம்பப்
பம்பைபேரிதுடிமுரசம்பலவுமுழக்கவவனுணர்ந்தான். (கஉகூ)

வையமோராயிரத்தேற்றிவந்தசோறுமதுவெள்ளம்
பெய்தகுடங்களாயிரமும்பெருங்கைவேழப்பெருந்தசையும்
வெய்யகோபனிவையெல்லாம்விழுங்கப்பசிபோய்மிகுத்ததாம்
நெய்யைநெய்யைச்சொரிநதக்கானெருப்பையவிக்கவொண்ணுமோ.

பின்னுமோராயிரஞ்சகடம்பெய்தசோற்றுப்பெருங்குப்பை
தன்னையுண்ணச்சிறிதுபசிதணிந்துமகிழ்ந்துவாய்பூசி
மன்னனழைத்தகாரியத்தைக்கேட்டுமறுகுமனத்தினனாய்ப் [ன்.
பொன்னின்மணித்தேர்போர்க்கோலம்பொலியவேறிப்புறப்பட்டா

கும்பகன்னனுணர்ந்தெழுந்துகொடிவீதியுளானெனக்கேட்ட
கொம்புபோலுநுண்ணிடையார்கோதைசரியக்குழல்சரியச்
செம்பொன்மாடத்தரமியத்துச்சீரார்மணிப்பொற்கோபுரத்தின்
உம்பர்மடவார்தொக்கீண்டியொருவர்க்கொருவரிவையுரைத்தார். ()

கண்ணாலிவனையண்ணாந்துகணைக்கான்மேற்காண்பரிதென்பார்
விண்ணாடருக்கிங்கிவன்மேனிவிளங்கக்காணலாமென்பார்
பெண்ணாளிங்கொருத்திபெறும்பிள்ளையேயிங்கிவனென்பார்
எண்ணாமதுவந்தெதிர்ப்படுமேலிவன்கையாலென்படுமென்பார். ()

மண்கைதாழவருமிதுவோர்மலையென்பாராண்வடிவென்பார்
திண்கைபொன்றலெடுக்குமரன்சிலையையென்பார்சினமுகத்த
கண்கவென்பாரல்லவெழுங்கனலேயென்பார்கண்டமடப்
பெண்களானாரிவ்வண்ணம்பேசப்பெருவீதியைக்கடந்தான். (கநக)

127. வையம் - வண்டி.

கண்ணார்நுதலானருளியதிண்கவசமிட்டுக்கழல்கட்டித்
திண்ணாராவம்புறத்தார்த்துச்செம்பொற்றேரின்மிசையேறி
மண்ணோர்குலையத்தானவர்கண்மறுகியோடமனங்கலங்கி
விண்ணோர்வெருவச்சிலையேந்திமேகநாதன்புறப்பட்டான். (௧௩௨)

இலங்கைவேந்தனிலங்கியவாளிறுகவீக்கியெதிரிகளால்
கலங்கலில்லாத்திண்கவசங்கட்டிவீரக்கழலார்த்து
விலங்கன்மேன்மின்பரந்ததெனவீரபட்டநுதல்விசித்துத்
சலங்கொணெஞ்சன்வரைநெளியவேறினான்பொற்றடத்திண்டேர்.

தேருமாவுஞ்சினக்களிறுஞ்செறிந்துசெல்லவழிகாணார்
வீரரானார்பின்னின்றார்முன்னின்றாரைமிகநெருக்கிப்
பேரும்பேருமெனவுரைப்பப்பேரும்பேருமிடமில்லா
ஊருந்தேரும்வகுத்தவன்றானொன்றுமறியானெனவுரைத்தார். ()

உமையாள்பாகன்வரையெடுத்தவுயர்தோளரக்கன்படையெழுச்சி
சமையாதுலகெங்கணுநிறைபத்தரணியெழுந்ததடந்தூளி
அமையாதோங்கிக்கண்மறைப்பவகலவானத்திலமரர்கள்கண்
இமையாதொழியவெமையிமைத்தோனிடும்பைசெய்தானெமக்கென்றார். ()

மேகநாதன்முன்செல்லவெய்யதம்பிபின்செல்ல
நாகமனையபுயத்திலங்கைநாதன்மதுவின்புரநண்ணச்
சோகமேவுமனத்தினளாய்த்துணைக்கண்ணருவிசோரவிட
வேகமதுவின்றேவியவன்விளங்குங்கழற்காண்மிசைவீழ்ந்தாள். ()

தாளின்விழுந்ததாயார்தமைத்தாங்கியெடுத்துத்தசக்கிரிவன்
கேளிதென்சொல்லுன்மனத்துக்கேதமதனைவிடுதிவினைக்
கோளைவிதியையார்கடப்பாரென்றுகூறக்கொடியிடையாள்
மீளவவன்றனடிவீழ்ந்துவிம்மிவிம்மியிவைவிளம்பும். (௧௩௭)

மக்களிழந்தவிடும்பையினுமனையாளிழந்தவிடும்பையினும்
மிக்கவிடும்பையொவ்வாதவிதவையிடும்பையெனவிளம்பத்
தக்கததனாலென்கழுத்திற்றாலிநீதந்தருளென்று
தொக்கமணிப்பூண்மார்பனைத்தொழுதுபின்னுமிவைசொல்லும்.

விட்டுவிளங்குமணிமுடியாய்வேதஞ்சொன்னபிரமாதி
எட்டுமணத்திலொருமணமாமரக்கர்குலத்தினியல்பறிதி

---

136. மதுவினதேவி - இராவணன சிற்றனையாகிய கும்பீநசி.

139. எட்டுமணம் - பிரமம், பிராஜாபத்தியம், தைவம், ஆரிஷம், காந்தருவம், ஆசுரம், இராக்ஷஸம், பைசாசம். வேட்கை - மணத்தல்,

தீங்கவையகற்றிச்சிறந்தனசெய்துஞ்செப்புமிவ்விரண்டுநீர்கேட்ட
நீங்களொன்றுக்குங்கூசலீரென்னநின்மலகேட்டியென்றுரைப்பார்.

மன்னவனிராமன்மானபங்கத்தைமனத்திடைவைத்திலன்வா
னோர்க், கின்னல்செய்தொழுகுமிராவணன்கொடுபோந்திடைவிடா
தீராறுதிங்கள், தன்னெடுநகரிதனிற்சிறைவைத்ததையலைத்தாரமா
ய்க்கொண்டு, பின்னையும்வாழ்க்கைபேரிழுக்கென்றுபேசுவார்பெருநி
லத்துள்ளோர். (௩௪)

ஒத்தவரிவ்வாறுரைத்திடும்வெஞ்சொலுள்ளுறநிறத்தினிலொ
ளிவேல், தைத்ததுபோலவுளைந்துதன்சிந்தைதளர்ந்தபின்மானபங்
கத்தன், வித்தகராயதம்பியர்க்கூவிவேறிடத்திருந்தனன்கேட்ட,
உத்தமனெல்லாநதெரிவுறவுரைப்பானவர்தமக்கிவையிவைகூறும். ()

என்னுயிர்நீங்களென்வலிநீங்களென்னுறுதுணைவருநீங்கள
என்னெழினீங்களென்றவநீங்களென்பிராதாக்களும்நீங்கள்
என்னரசின்பநீங்களேயாளுமென்பழியும்பழிபுகழும்
அன்னதேயாகுமானபின்யானிங்கறைவனீரனைவருங்கேண்மின். ()

தீயவாளரக்கன்சிறையிடையிருந்துசெநநெறித்தீயிடைமூழ்
கி, ஏயமாதவர்க்குமிமையவரானோரியாவர்க்குமென்மனததுக்கும,
தூயளாயிருநதாளாயினுமுலகோர்சொல்லுறுபெரும்பழிதனைக்கே
ட, டோயுமென்னுள்ளமுண்மையாற்பயனென்னுலகுளோர்க்கொத்
திடாதொழியின். (௩௭)

ஓதநிர்வேலையுலகுளோரில்லதுளதெனினுள்ளதாமுள்ள [கை
தியாதொருபொருளையில்லையென்றுரைக்கி னில்லையாமிதுவுலகியற்
ஆதலாலவளையருந்தவத்தோர்களாச்சிரமத்தயல்விடுத்தும்
ஈதுநான்றுணிநதகாரியமினிவேறெண்ணுவதொருபொருளில்லை. ()

இவ்வகையிராமனியம்பிடக்கேட்டவின்னுயிர்த்தம்பிமாரொன்றும்
செய்வகையறியார்தீயகைகேசிசீதையுமிராமனும்வனம்போம்
அவவகையுற்றவன்றையிற்கலங்கியகத்தெழுந்துயரினராகி
எவ்வகையாலுமிதுவிலக்கரிதென்றிருநதனரிடிவிழுந்தென்ன. ()

கலக்குவனுலகமூன்றையுமென்றுகருதுமேற்கணத்திடைமுடி
க்கும், இலக்குவன்றன்னையிராகவனோக்கியிங்கியான்றுணிந்தகாரிய
த்தை, விலக்குவனென்னுஞ்சிந்தையைவிட்டுவெவ்வினைவேரொடும்
பறிய, மலக்குவன்றவத்துமுனிவர்வாழ்வனத்துமடந்தையைவிடு
திகேளினும். (௪௦)

கல்விசேர்முனிவர்தவவனமடங்கக்காட்டுவானிசைந்தனென வளும், சொல்லியவண்ணஞ்செய்குவனென்றேயுவந்திடுஞ்சுமந்திர ற்குணர்த்திச்,சில்லுளேப்புரவித்தேர்மிசையேற்றிச்சீதையைச்செ றிபுகழையன், நல்லுயிர்த்தோழனுயவான்மீகிநற்றவஞ்செறிவனத் துய்த்தி. (சக)

என்றடலிராமனியம்பிடக்கேட்டவிலக்குவனெழுந்துவெந்துய ரால்,தன்றுணையில்லாச்சுமந்திரற்குணர்த்தித்தடமணித்தேர்பணி க்கொண்டு, பொன்றிகழ்மணிப்பூண்சீதைமாளிகையின்புனேமணிவா யிலிற்புகுத, இன்றொருப்பாடிதேதெனவினவுமேவலோர்க்கிலக்கு வணியம்பும். (சஉ)

மன்னவன்பெரியோர்மலர்ப்பதந்தன்னவணங்கிடக்காட்டென வுரைத்தான், என்னலுமவர்போயுரைத்தலுமெழுந்தவுவகையாலி ன்னுயிர்தளிர்த்தே, மின்னொளியாரமுதலவாபரணம்விளங்குசீர்ந வமணியாடை, இன்னவைபிறவுந்தெரிந்துகொண்டிளேயோனியம்பி டவேறினளிரதம். (சங)

சலக்கடல்கிழியச்சென்றிடுங்கலம்போற்றடமணித்தேர்செல த்தையல், வலக்கணுந்துடித்துவயிறெறிவுற்றுமனமுந்தன்மேனியு நடுங்க, இலக்குவவெனக்குத்துர்க்குறியிதனுலென்விளேவென்றுநா னறியேன், விலக்கரிதாயவிதியினல்விளேக்கும்விளேவையார்மேதி னியறிவார். (சச)

தாமுழுதுயரந் தையலரறியார் சார்ந்தவித்துர்க்குறியதனல், தூமனமுடையவென்சுவாமிக்குந் துணேவிலென் கொழுந்தமாருக் கும், மாமியர்தமக்கும்வான்கிளேதனக்கும் வடநகரத்துள்வாழ் வோர்க்கும், தீமையொன்றின்றிநன்மையாய்விடுக தெய்வமேயெ ன்றுகைதொழுதாள். (சரு)

அன்னவக்குறிகளாயிழைகூற வகத்தெழுந்துயரனுயிளேயோ ன், சொன்னவிக்குறியானங்கிளேயானோர் துயரின்றிச்சுகத்தினிதி ருப்பார், என்னலுமெழுந்தவுவகையளாகி யிருந்துயரொழித்தவ ணிருப்பப், பொன்மணிநெடுந்தேர்தென்றிசைநோக்கிப் போயது தூயவர்ப்பொறுத்து. (சசா)

மாமதிமுகத்தின்மறுவறுகற்பின்மங்கையும்வருவனவெண்ணும் தூமதியமைச்சன்சுமந்திரனொனுந்துயருறுமனத்திளேயோனும்

45. வடநகரம் - மிதிலாபுரி.

கோமதியென்னுநதியினைக்குறுகிக்கொடுங்கதிர்மேல்கடல்குறுகத்
தாமதில்வைகிப்பிற்றைநாளுச்சி தடம்புனற்கங்கையைச்சார்ந்தார்.

கங்கையைச்சென்றுகாண்டலுமிளையோன் கண்கணீரரும்பிடக்காந்திப், பொங்கியதுயரம்புறப்படாவண்ணமடக்கிடவுண்ணின்றுபொருமவ், இங்குநீயிங்ஙனிடருறுவானே னிலக்குவவியம்புதியென்று, மங்கையீதுரைப்பமறுமொழிகொடாது வாய்விட்டுக்கதறிடுங்காலை. (௪௮)

தூயவிந்நதியைக்கண்டவரெல்லாந்தொழுதுவந்தாடுவர்தூயோய்
நீயிடருறுவதென்னுலகத்தினினையிடர்செய்பவரில்லை
நாயகன்றன்னைப்பிரிந்தறியாதேனுளிரண்டுண்டுநான்பிரிந்தேன்
ஆயவன்றன்னைநினைந்துறுதுயரென்றறைந்திடவாயிழையுரைப்பாள்.

நன்றிவித்தாகுநல்லொழுக்குடையநற்றவமுனிவரையெல்லாம்
சென்றடிபணிந்துநிவினையறுத்துத்திகழொளியாடையாபரணம்
என்றுணைத்தோழிமார்கட்குமவரையீன்றெடுத்தோர்கட்குமுதவ
இன்றொருநாளுமிருந்துநாமீடுமிலக்குவவிடருறலென்றாள். (௫௦)

இன்னவாசகங்களேந்திழையியம்பவிலக்குவனிடரையுள்ளடக்கி
நன்னதிதனைநாவாயினிற்கடத்திநடந்துபோய்த்தென்கரைநண்ணி
மன்னவனிராமன்றேவியைமுறையால்வலஞ்செய்துமலரடிவணங்கி
என்னுரைகேட்டியேழலகுடையாயெனவவளியம்பெனவியம்பும். ()

வேறு.

கடுந்துயர்மேற்கொண்டேறக்கண்ணினீர்வெள்ளநேசோர
ஒடுங்கியவலியனீரற்றுலர்நதிடுமுகத்தனஞ்சி
நடுங்கியமனத்துநீரிறுத்தழுதழுத்துமெல்லப்
பிடுங்கியமொழியன்மங்கைக்கிவையிவைபேசலுற்றான். (௫௨)

உத்தமகுணத்தோய்கேட்டியுலகமாதாவேகேட்டி
சுத்தனுஞ்சனகன்வேள்விதோன்றியதூயோய்கேட்டி
வித்தகனிராமனேவிவிட்டகாரியங்களெல்லாம்
தத்துவமானவண்ணஞ்சாற்றுவெனென்றுசாற்றும். (௫௩)

வாடியமுகத்தன்வெய்பமானவேன்மருமத்தான்ற
நீடியவுயிர்ப்பன்றான்முன்னினைத்தகாரியத்தின்மேலே
ஓடியமனக்காகுத்தனெல்லையினழைப்பவந்து
கூடியதம்பிமாரினெனைக்குறித்திணையகூறும். (௫௪)

50. மீடும் - மீள்தும்.
53. தத்துவமான - உண்மையான.

உலகத்தாருள்ளதென்றதுள்ளதாமொலிநீர்வேலை
உலகத்தாரில்லையென்றதில்லையாமுணருங்காலை
உலகத்தாருள்ளதென்றதில்லையென்றுரைக்குமாகின்
உலகத்துக்கவன்பேயாகுமுண்மையாற்பயனொன்றில்லை. (ருரு)

சீதையைக்கொடுபோய்வெய்யோன்சிறையிடைவைப்பமீட்டும்
காதலாலவளைக்கொண்டுகாகுத்தன்வாழும்வாழ்விற்
சாதலையழகிதென்றுசாற்றுவர்தரணியுள்ளோர்
ஆதலாலசுத்தையென்றேயறிந்துவைத்தவளைநீத்தோம். (ருசு)

என்றவனியம்பவெல்லோமெதிர்மொழிகொடுக்கவஞ்சி
நின்றவணடுங்கவந்தநெடுஞ்சகையென்னைநோக்கித்
துன்றியமணித்தேர்தன்னைச்சுமந்திரற்பண்ணச்சொல்லி
இன்றிவனோடுநீயவ்வேந்திழைதனைத்தேரேற்றி. (ருஎ)

நன்னெறிநகருநாடுங்கடந்துபோயடவிநண்ணித்
தன்னுயிர்தன்னைவிட்டுத்தடம்புகழ்கொண்டவையன்
இன்னுயிர்த்தோழனுயவெழில்கொள்வான்மீகிவைகும
பன்னசாலையின்பாற்பாவையைவிடுதியென்றான். (ருஅ)

என்றவனியம்பவண்ணலேவலைமறுக்கவஞ்சி
இன்றுனைக்கொண்டுபோநதேனென்றிவையிளையோன்சொல்லாம்
கன்றியகனலினூடுதோய்ந்தநாராசஞ்சீதை
தன்றுணைச்செவியிலேறத்தரணியிற்றளர்ந்துவீழ்ந்தாள். (ருகூ)

விழுந்தனள்புரளுமந்தவெந்துயர்பொறுக்கமாட்டா
தெழுந்தனடிரியவீழுமிருகையால்வயிற்றைமெற்றும்
அழுநதிடுதுயரவெள்ளத்தழிவுறுமருவிக்கண்ணாள்
கழிந்தனள்சீதையென்றுகலங்கினர்கடவுளோர்கள். (கூ0)

அன்னவளவத்தைகண்டாங்கிளையவனலறிவீழ்ந்தான்
பின்னையும்பாடுசாலப்பெருகவுண்டாதலாலே
இன்னுயிரரிதிற்பெற்றாங்கிருகணும்விழித்துமன்னர்
மன்னவனிராமன்றேவிவாய்விட்டுப்புலம்பலுற்றாள். (கூக)

---

56. அசுத்தை - தூய்மையிழந்தவள்.

58. அடவி - வனம். பன்னகசாலை - பன்னசாலை, இலைகளால்வேய்ந்த கூரைவீடு. 'பன்னம் - பர்ணம், இலை.'

59. நாராசம் - இரும்புக்கம்பி, அல்லது, சலாகை.

### வேறு.

அன்னேயோவையாவோவாருயிர்த்தோழிமீர்காள்
தன்னேரிலாதவென்றித்தாசரதியார்செய்த
இன்னுதவிச்செயலைக்கேட்டபோதென்படுதீர்
என்னேரிவ்வுலகத்தில்யாளுேவிங்கிவைபடுவேன். (சுஉ)

பையார்வெம்பணத்துலகிற்பழியாலேபழிமறைத்து
நெய்யாலேநெருப்பவிக்கநீணிலத்திற்கண்டறியேன்
கையார்வெஞ்சிலைதரித்தகாகுத்தனிடைக்கண்டேன்
உய்யாரென்மாமிமாரிவ்வுரைதஞ்செவியுறவே. (சுஙா)

கன்னெஞ்சராயென்னைக்காட்டில்விடச்சொன்னவரோ
வன்னெஞ்சராயதனுக்கிசைந்துவிடவந்தவரோ
நன்னஞ்சம்விழிக்கணிந்தநங்கைமார்நகைசெய்ய
இன்னஞ்சாகாதிருந்தயானேநெஞ்சார்வலியார். (சுச)

பண்பிறந்தசொன்மடவார்பழித்தென்னைநகைப்பர்களோ
எண்பிறந்தவன்னெஞ்சனிராகவனென்றியம்புவரோ
மண்பிறநதபின்பிறந்தமறிகடல்சூழ்வையகத்தும்
பெண்பிறந்தார்யான்பட்டபெருந்துயரமார்பட்டார். (சுரு)

கனிமனத்துக்காகுத்தன்கடலுலகிற்பழிக்கஞ்சித்
தனியொருத்தியான்கதறத்தனிக்காட்டில்விடுவித்தான்
பணியகற்றுமாதித்தன்பயங்தெடுத்துப்பழிப்பற்ற
மனுகுலத்திற்பிறந்தார்கட்கிவையோதான்மனுநெறியே. (சுசு)

கைகேசிமனந்திரியக்கற்பித்தகூனியைப்போல்
மையார்கண்மடவாரோமைந்தரோமண்ணுலகில்
ஐயாவென்காதலனையாரோவிக்காரியத்தைச்
செய்வாயென்றிப்பொழுதுசிந்தையுறக்கற்பித்தார். (சுஎ)

என்றினையபலபன்னியிருகண்ணீர்நதிபெருகக்
குன்றுகளுமரங்களுமக்கொடுமிருகங்களுங்குலைந்து
நின்றுருகவனதெய்வநெஞ்சழிந்துகண்பனிப்பக்
கன்றியநெஞ்சுடைச்சீதைகதறுகின்றவக்காலை. (சுஅ)

---

62. தாசரதி - தசரதபுதல்வனுகிய இராமன.

63. பணம் - ஆகுபெயர் பணத்தை படத்தையுடைய பாம்பு.

65. பண் பிறந்த - இசைதோன்றிய, அல்லது, பண்பு இறைந்த - முறை கெட்ட.

இளையவனுமொருவண்ணமிடர்க்கடலைக்கடந்தேறி
உளைவுறுசிந்தையினானுக்குத்தமிகேளெனவுரைக்கும்
விளைவுறுவல்வினைப்பயனைவிண்ணவற்கும்வெலற்கரிதால்
வளைபயில்சூழ்கடலுலகின்மானுடரார்விலக்குவார். (௬௯)

உலகுக்குநாயகனாயோராழிதனைநடத்தி
மலையொக்குமதகளிற்றின்மதிக்குடைக்கீழ்வாழ்ந்தநளன்
நிலைகெட்டுநேரிழையைநெடுங்கானத்திடைவிட்டு
மலையொத்தவினைப்பயனான்மடையனாய்வருந்தினனே. (௭௦)

தன்னேரிலாதவரிச்சந்திரன்றன்மைந்தனையும்
பின்னேரிலாதவிடைமெல்லியலையும்விட்டு
முன்னைசெய்விதியாலேமுடைப்பறையற்காளாகி
என்னைதானிடுகாடுகாத்துநிலையிதினிருந்தான். (௭௧)

இன்பத்திலிறுமாந்துதோனோக்கியின்றமத
துன்பத்திலழுந்துவார்தொல்லுலகிலறியாதார்
இன்பத்துன்பங்களேயெய்தியபோதிவையெல்லாம்
முன்பற்றுவிடாதவினைப்பயனென்பார்முழுதுணர்ந்தோர். (௭௨)

முன்செய்தநலவினையான்முகில்வண்ணன்றனைப்பெற்றுப்
பின்செய்ததீவினையாலவனைநீபிரிவுற்றாய்
என்செய்யாவிருவினைகளிவ்விடர்நீயுறுவண்ணம்
நின்செய்யுஞ்செயலெல்லாநெடுந்தவமேசெய்யென்றான். (௭௩)

மாதவர்களடிபேணிமற்றவர்கள்விதிமுறையே
ஓதியநல்வழிவழுவாதுபவசித்தங்குன்னுடைய
காதலனையெப்போழ்துங்கருத்திடைவைத்துயர்தவஞ்செய்
ஈதுனக்குக்கருமமெனவிளையோனுக்கவளுரைப்பாள். (௭௪)

நின்னுடையதமையனைநானிழல்போலப்பிரியாதேன்
அன்னவனுநானுஞ்சென்றடிபணிந்தவருந்தவர்கள்
உன்னுடையகாதலனின்றுனைப்பிரிந்தகாரணந்தான்
என்னுரைநீயென்றபொழுதியானவருக்கென்னுரைப்பேன். (௭௫)

பின்னுமவள்கூறுவாள்பேருலகமுழுதுடையான்
தன்னுடையபிழையல்லதாரணியோர்தப்பல்ல

---

70. மடையனாய் - சமையற்காரனாய்.
73. நின்செய்யும் - நின்னாற்செய்யத்தக்க.
74. உபவசித்து - உபவாசம் உணவுதவிர்ந்திருத்தல் முதலியவிரதங்களை அனுட்டித்து.

என்னுடையவினையாலேயிச்செயல்கள் விளைந்தவென்றாள்
உன்னுடைய தமையனுக்கின்றிளையானையுணர்த்துதியால். (எசு)

நிறைந்தகடலுலகுரைக்குநெடும்பழிக்குத் தானஞ்சித்
துறந்தனன்வெங்கனற்குளித்துத் தூயாளாயிருந்தேனைப்
பிறந்தபழியெனத் துறக்கப்பெருமாலினியெனக்குச்
சிறந்ததுதற்பிரிவென்றுசெப்பினேனெனவுரைத்தி. (எஎ)

இளையோனையிருதுவாயீரிரண்டுதிங்களுள
வளையாழியுலகதனைவாய்மூடவொண்ணாது
விளைவேதாய்முடியுமெனவறியேனென்மேனியினை
உளையாதகிநதையனுயுற்றதுநோக்கெனவுரைத்தாள். (எஅ)

என்றினையவவள்கூறவிருகண்கணீர்சொரிய
வன்றிறலோன்மனமயங்கிவாய்விட்டுக்கதறுதலோ
டின்றிந்தவுரைகேட்கவென்னகுறைசெப்தேனென்
றென்றியவெந்துயரிளையோனுறுதுயராட்கிவையுரைத்தான். ()

கன்றியசிந்தையினுயுன்கணவனுனைக்கைப்பிடித்த
அன்றுமுதலின்றளவுமுன்னுடையவடிபணிந்தே
நின்றபொழுதினுந்துயோய்நின்மேனிகண்டறியேன்
இன்றுதானுனைக்காணவல்லேனேனெனவுரைத்தான். (அ௦)

வருதுயரந்தனைநோக்கிமங்கைமலரடிபணிந்து
கருதிவினையறவுலகோர்சென்றுடுங்கங்கையெனும்
பெருநதியைக்கடந்தவளைப்பின்பார்த்துப்பின்பார்த்துப்
பொருமியவெந்துயரினனுப்போயினனகர்நோக்கி. (அக)

இன்னமிவர்போவாரோமீள்வாரோவெனநினைந்து
தன்னுடையகண்பறியாச்சானகிதான்பார்த்திருந்து
பொன்மணித்தேரோகாணேன்போய்மறைந்தானிளையோனும்
என்னையறக்கைவிட்டாரெனக்கதறத்தொடங்கினாள். (அஉ)

இலங்கையிலேநெடுங்காலமிருஞ்சிறையிலேயிருந்து
புலம்பியழுதியான்பட்டபுல்லனவும்போதாமல்
தலங்குலவுபழிபூட்டித்தனிக்கானில்விடுவித்து
விலங்கரியதுயர்விளைத்தவிதியேயோவிதியேயோ. (அ௩)

ஏதமுறுபழிபூட்டியிப்பிறப்பிலேனையொழிய
மாதரையென்மனத்தாலுந்தொடேனென்றுவரந்தந்த

காதலனைமனங்கலக்கிக்காட்டிலெனைவிடுவித்து
வேதனைநோய்செய்வித்தவிதியேயோவிதியேயோ. (அச)

கண்ணறக்காகுத்தனெனைக்காட்டில்விடக்கண்டிருந்து
மண்ணகத்தார்வன்கொடுமைவாய்திறவாமானமிலாப்
பண்ணறைச்சியென்றென்னைப்பழிதூற்றப்பண்ணுவித்தாய்
விண்ணவர்க்கும்வெலற்கரியவிதியேயோவிதியேயோ. (அரு)

தாளார்செந்தாமரைத்தாட்டாசரதியார்மனத்தைக்
கேளானுனுரையென்றுங்கேளாதவகைகலக்கிக்
கோளானதிடையருக்கொடுவினையேனுக்கொருநாள்
மீளாதவனந்தந்தவிதியேயோவிதியேயோ. (அசு)

தக்ககணவன்சிறத்தன்னைக்கைவிட்டகற்ற
புக்கதத்தார்கைவிடுவர்பிறந்தகத்தார்போற்றார்கள்
அக்கணமேபழியிடுவரன்னியர்களருவினையேன்
மிக்கொரிடங்காண்கிலேன்விதியேயோவிதியேயோ. (அஎ)

இன்னபலவும்பன்னியிடருறுவாளிடர்தீர
என்னுயிர்தான்போகாதோவெனக்கதறுமக்காலை
வன்னியினுந்தூயளும்வான்மீகிமைந்தர்கடாம்
நன்னுதலாளழுமோசைவழிவந்துநண்ணுற்றார். (அஅ)

அழுமவளைக்கண்டிரங்கியருந்தவனைக்கடிதணுகித்
தொழுதவர்கள்சொல்லுவார்சுராருலகுதனினின்றும்
வழுவியிவண்விழுந்தாளோமண்ணுலகிலுள்ளாளோ
எழுதரியமேனியாள்யாவளோவென்றறியோம். (அகூ)

ஒருவரில்லாக்காட்டிலேயுள்ளுறுசோகத்தாளோர்
தெரிவையோர்துணையின்றித்தெய்வமேதுணையாகி
இருகணினீர்நதிபெருகவிழிநதுவிழுந்தழுகின்றாட்
கருள்புரியவுனக்கடுக்குமருந்தவதேகாயெனவுரைத்தார். (கூ0)

வேறு.

அங்கவரோடும்போய்சசென்றழுகையாயோதுநெஞ்சில்
தங்கியசோகமாறச்சானகிதன்னைதேற்றி

---

85. கண்ணற - கண்ணோட்டமின்றி, தாட்சணியமின்றி. பண்ணறைச்சி - பண் - பண்பு 'நல்லொழுக்கம்' அறைச்சி 'அற்றவள' மூக்கறையன்-மூக்கறைச்சி, என்றாற்போல. 88. மைந்தர்கள் - சிஷ்யர்கள்.

88. மைந்தர் - சீடர்.

இங்குநீயிருந்துசோகித்தென்பயனிடரைவிட்டு
மங்கைநீகேட்டியென்றுமாதவனுரைப்பதானன். (௯௧)

அனகனுமிராமன்றேவியென்றுநீயமலையென்றும்
சனகன்மாமகணீயென்றுஞ்சமாதியிலுணர்ந்தேதன்றக்க
உனையவன்காட்டில்விட்டானல்லனென்னுமையேவிட்டான்
எனநினையாங்கள்வைகுமிடத்திலெம்மோடும்போதி. (௯௨)

எங்களாச்சிரமதனெதல்லையிவ்விடத்தெதல்லையில்லா
மங்கையர்தவவேடதனைத்தாங்கிமாதவஞ்செய்வோர்கள்
அங்கவருன்னைக்கண்டாலகமகிழ்ந்துடனேகொண்டு
தங்களாசசிரமததேபோய்ததாங்குவர்தளரலென்றான். (௯௩)

துங்கமாதவனிவ்வாறுசொல்லிடத்தூயளாகி
அங்கவனல்லதீர்க்குமடியிணைவணங்கிநிற்ப
மங்கையையுடனேகொண்டம்மாதவனோமதூபம்
தங்கியமுகட்டுப்பன்னசாலையைவந்துசார்ந்தான். (௯௪)

சீதையைக்கண்டமாதர்தெரித்திரராகியுள்ளோர்
மாதனம்பெற்றார்போலமகிழ்ந்தவள்வடிவைக்கண்டு
தீதறுமனத்தின்மிக்கதிருமகளிவளோவென்பார்
வேதனையுள்ளேயுண்டிமமெல்லியலாளுக்கென்பார். (௯௫)

தாங்கருசினத்தால்விண்ணோர்சபிப்பவீழ்ந்தாளோவென்பார்
ஆங்கவரிநதவண்ணமையுறுகின்றகாலை
ஈங்கிவள்பிறப்பும்பேருமிவள்கணவன்றன்பேரும்
நீங்கள்கேண்மின்களென்னநெடுந்தவமுனிவன்கூறும். (௯௬)

மனுகுலம்விளங்கத்தோன்றிமறிகடலணையாற்கட்டித்
தனுவினாலிலங்கைசெற்றதசரதராமன்றேவி
துனியறுசனகன்பெற்றதூயவள்சீதையென்பாள்
இனையவள்கணவனோன்றுறந்திடவிங்குவந்தாள். (௯௭)

வேறு.

மாதவத்தோனங்கிவ்வகையுரைப்பமங்கையரனைவருமகிழ்ந்து
சீதையைப்போற்றச்சுமந்திரனோடிளையவன்றிருநகர்புகுந்து
நாதனைப்பணிநதுசெய்ததையுரைப்பநாட்டுளோர்சொல்வழிகேட்டு
வேதனையுற்றவன்றினுமிக்கவேதனைப்பட்டனன்வீரன். (௯௮)

92. சமாதியில் - யோகத்தால்.

94. ஓமதூபம் - ஓமத்தீயினின் றெழும்புகை.

துதிபழியிரண்டுங் கேட்டதுசொல்லு முலகையுமதன்வழி யொழுகும், மதியையும்நோவ வடாதுமாசனகன் மகளையுநோவ வடாதால், அதிகுணவதியா யழலினுந்துய்ய வவளையுமுன்னையும் விதித்த, விதியினைநோவ வடுக்குமென்றிளையோன் விளம்பிடத்தெ ளிந்தனன்வீரன். (கூகூ)

ஆகூ திருவிருத்தம் - ௪௦௦.

---

## கரு-வது, இலவணன்வதைப்படலம்.

நிறைகடலவனிபாரநீக்கியநெடும்பொற்றிண்டோள்
இறையவனிராமனன்போடிளவலையெய்தநோக்கி
அறைகழற்றோராய்நாட்டிலன்புநாடோறுநாடி
முறைசெய்கையிராசதன்மமதனினுமுயறுமென்றான். (க)

சிறியமனத்தனாகிச்சிறந்தசெங்கோலைவிட்டுக்
கூறுவெம்பழியைநாடிக்குலைந்திடக்கொடுங்கோலோச்சி
ஆறிலொன்றிறைகொள்கின்றதல்லவையகற்றிடாதே
எறிறைகொளவோனாட்டிலிருப்பவர்மூடரென்றான். (உ)

தண்டிக்கப்படுவோர்தம்மைத்தண்டியாதொழித்துவிட்டுத்
தண்டிக்கப்படாதோர்தம்மைத்தண்டிக்குந்தரணிமன்னன்
எண்டிக்கும்பரந்துமூடுமிரும்பழியெய்தித்தீயோர்த்
தண்டிக்குநதருமனாலேதண்டிக்கப்படும்பினென்றான். (ங)

அடற்பெருங்களிறுதிண்டேரடுபரிகாலாடுன்று
கடற்படையுடையோன்மிக்ககருணையோன்காதலோடும்
இடர்க்கடல்வறியோரேறவிருநிதியீவோனாட்டில்
நடப்பறியாதுகெட்டநரபதியுளன்கொலென்றான். (ச)

கொற்றவனிருகன்கோடிகோடியாய்க்கொடுக்குங்காலை
நற்றவமறையோனுக்குநல்லதோர்பசுவைநல்க
மற்றதுதப்பிமன்னன்மாநிரைவந்துகூட
உற்றதையறியான்மற்றோருருபர்மறையோனுக்கீந்தான். (ரு)

முன்பதுதானம்பெற்றமுப்புரிநூலன்கேட்டுத்
தன்பசுத்தன்னைக்காணான்றரணியிலெங்குந்தேடிப்

---

2. எறிறை - அதிகவரி.
3. தருமன் - யமதருமன்.

பின்பதுதானம்பெற்றபெருந்தவன்மனையிற்கண்டு
தென்பசுவென்னவோடுமிருவரும்விவாதம்பண்ணி. (௬)

மன்னவன்கோயிறன்னின்மறையவர்விரைந்துவந்து
பன்னெடுங்காலநின்றுமுறையிடப்பார்த்துவேந்தன்
என்னகாரணநீர்வந்துமுறையிட்டதென்னக்கேளா
அன்னவன்றன்னைக்கோம்பியாகெனச்சபித்தாரன்றே. (௭)

தாங்கருந்துயரமிக்கார்கூபத்திற்றலைகீழாகத்
தூங்கியீருகங்கள்சென்றதுவாபரந்தன்னிற்றோன்றும்
சார்ங்கபாணியன்றன்செய்யதாமரைக்கண்ணாற்பார்க்க
நீங்கிடுஞ்சாபமென்றுநெடுந்தவமுனிவர்போனார். (௮)

போயிருவருமக்கோவைப்புரையறுதவத்தின்மிக்க
தூயமாமுனிவற்கீந்துதொன்றுகாரியத்திற்போனார்
ஆயமன்னவனுங்கோம்பியாகியாழ்கிணற்றில்வீழ்ந்தான்
தேயநாடோறுநாடத்திறன்மன்னன்கேடிதென்றான். (௯)

தன்னிகரிலாதவென்றிததசரதராமனாட்டில்
சொன்னவக்கதையையுன்னாதேரறுமாச்சரியமெய்தி
என்னவற்புதமோவென்றாங்கிளையவனியம்பத்தூயோன்
இன்னவற்புதமாயுள்ளதொருகதையியம்பக்கேணீ. (௧௦)

மன்னவனிமியென்பான்சீர்மனுகுலம்விளங்கத்தோன்றிப்
பன்னெடுங்காலமிந்தப்பாரினையாண்டுபாரைப்
பின்னவன்றுறந்துசென்றுபெருவனங்குறுகிக்கானம்
அன்னவல்வினைகள்பாறவருந்தவஞ்செய்யுநாளில். (௧௧)

சுத்துருகாலனாகித்தரணியைக்காத்தோன்றீர்க்க
சத்திரயாகஞ்செய்யச்சமைத்துமாதவருண்மிக்க
அத்திரிபிருகுதூயவங்கிராவசிட்டனென்னும்
இத்திறன்முனிவர்தம்மைவரித்திடவியம்புமன்றோ. (௧௨)

என்னைமன்னவனேவானோரிறைமகஞ்செய்யவெண்ணி
முன்னமேவரித்தானந்தவேள்வியைமுடித்துநின்பால்
பின்னையான்வருகின்றேனென்றம்முனிபோகப்பேணி
மன்னுகோதமனைக்கொண்டுமகத்தினைநடத்துங்காலை. (௧௩)

7. கோம்பி - பச்சோந்தி.
8. கூபம் - கிணறு.

வேறு.

மாறிலாவானோர்மன்னன்மகத்தினைமுடித்துஞானம்
தேறுகோதமனைக்கொண்டுசெய்கின்றவேள்விகண்டு
சிறியேவசிட்டனந்தத்திறத்தினைக்காண்பான்செல்ல
மாறிலாத்துயிலணுகிமாமுனிசீற்றமிக்காய். (கச)

என்னைமுன்வரித்துப்போனயான்வருவதற்குமுன்போர்
அன்னியன்றன்னைக்கொண்டாங்கருமகநடாத்துகின்ற
மன்னவன்காணநான்றான்வந்திடப்புறப்படாதோன்
தன்னுடல்விடுகவாவியெனமுனிசபித்தானன்றே, (கரு)

அன்னவன்சபிக்கக்கேட்டவரசர்கோனழலிற்பொங்கித்
தன்வரவறியேன்பாயல்சார்ந்துநித்திரைநான்பண்ண
என்னையந்நியாயத்தாலேயெரிவித்தசாபமன்னோன்
தன்னையுஞ்சார்கவென்றுசபித்தனன்றவத்தின்மிக்கான். (கசு)

இருவரும்விரோதராகியிபங்குநாள்வசிட்டனாவி
தெரிவரும்பெருமைமிக்கதிசைமுகன்றன்னைநண்ணி
ஒருவருந்தன்னையொவ்வாவுயர்தருமுனிசாபத்தின்
பிரிவருமுடலம்விட்டேன்பெறும்படியருளீயென்றான். (கஎ)

ஒத்தவர்தம்மையில்லாவுருப்பசிநிமித்தமாய
மித்திரவருணர்விட்டவீரியந்தன்னையெய்தி
குத்திரயோனியில்லாக்கும்பமாந்தெய்வயோனி
புத்திரனாகவந்துதோன்றுதிபோதியென்று. (கஅ)

வேறு.

மலரயன்விடுப்பமாமுனியாவிமறிகடலெய்திடவருணன்
நிலையிடைநின்றுமித்திரன்செலுத்தநீள்குழலரம்பையரோடு
சலவிளையாட்டிற்றாழ்ந்தநெஞ்சினளாமுருப்பசிதடநெடுங்கண்ணும்
வலையிடைப்பட்டுமயங்கியமனத்தன்வருணன்மற்றவட்கிவையுரைத்தான். ()

உன்னையான்வரித்தேனென்றவனுரைப்பவுருப்பசிகூறுவாளுய ர்ந்தோய், முன்னமேயென்னை மித்திரன்கண்டு வரித்தனன்முறை கெடவந்து, பின்னைநீ வரித்தல் பிழையெனவுரைப்பப் பெருகியகாம வெங்கனலால், தன்னுடலுருகிவீரியம்வீழத்தையனுக்கவனிவையு ரைத்தான். (உ௦)

மின்னிடைமடவாயென்னுடலுருகிவீழ்ந்தவீரியத்தினைக்கும்பம்
தன்னிடையிடுகின்றேனெனமகிழ்ந்துவருணனமேற்றாழ்ந்தசிந்தையளாய்

18. குத்திரம் ['க்ஷுத்ரம்' எனனும் வடமொழிச்சிதைவு.] தாழ்மை. இழிவு.

அன்னமென்னடையாண்மித்திரன்றன்னையனுகிடவாலமதென்ன
வன்னியாமென்னக்கனன்றசீற்றத்தான்மற்றவளுக்கிவையுரைத்தான். (உக)

முன்னமேகண்டு நின்னையான்வரிக்க முறைமையீதன்றென
வுணராய், அன்னியன்றனைக்கண் டன்புபட்டனைநீ யாதலாலறிவிலா
தாளே, பொன்னுலகிழிந்து பூவிடைநீபோய்ப் புதன்மகன்புரூரவா
வென்னும், மன்னவன்றனக்கு மனைவியாய்நெடுநாள் வைகுதியென்
றவன்சபித்தான். (உஉ)

அன்னவீரியத்தை யமரர்கள்வகுத்த குடத்திடைவருணனுங்
கிடவும், மின்னிடையாளைக் கண்டுமெய்புருகி மித்திரன்வீழ்த்தவீ
ரியத்தை, முன்னமேகும்பத் திடுகையான்முன்பு முழுதுணரகத்
தியன்பிறந்தான், பின்னைவாருணத்தை யிடுகையாற்பின்பு பிறந்த
னன்பெருந்தவவசிட்டன். (உங)

என்றுலங்கழுமுடையவனெறிந்த விராக்கதர் குலத்தைவேர
றுத்த, வென்றிகொள்வீரன் விளம்பியகதையைக் கேட்டலுமிகவி
யப்பெய்தி, அன்றுடல்பிரிந்தவந்நிமியாவியானதும் வேள்வியானது
வும், ஒன்றொளியாமலுரைத்தியென்றிளையோ னுரைத்திடவுததம
னுரைக்கும். (உச)

தீயசாபத்தாற்சேதனம்பிரிந்தநிமியுடல்சிறநதநல்லடியார்
ஆயவராலேயாடையாபரணமுதலகொண்டலங்கரிப்பித்துச்
சேயவாகியவையாயிரத்தாண்டுசேதியிற்குறைபடாவண்ணம்
தூயமாமுனிவரந்நிமிமுன்னாட்டொடங்கியவேள்வியைமுடித்தார்.

அந்தவேலையில்வந் தமரர்கள்கூடி யந்நிலையாவியையழைத்
துச், சிந்தையாலுவந்தோ முறுவரம்வேண்டிக் கொளெனத்தே
வர்கள்செப்ப, இந்தமாநிலத்தோர் கண்களில்யானின் றியங்கிட
விவ்வரமெனக்குத், தந்திடவேண்டு மெனவரந்தந்தோ மென்றுதா
முறைவிடஞ்சார்ந்தார். (உசு)

முனித்தலைவோர்களந்நிமியுடலை முரணுடையரணியாற்கடை
யச், சனித்தவன்றன்னைச் சனிக்கையினாலே சனகனென்றவர்பெ
யர்சாற்றி, இனித்தரணியைத் தாங்கென்றவர்கூற விவ்வுலகாண்ட
னனென்றே, தனிச்சிலைதரித்தோ னுரைசெய்துபின்னுந் தம்பி
யைக்குறித்திவைசாற்றும். (உஎ)

---

22. பட்டனை - உடையையாயினாய்.
23. வாருணத்தை - வருணனது வீரியத்தை.
25. சேதனம் - ஆன்மா. 26. இயங்கிட - சஞ்சரிக்க.

தெள்ளிய தவத்தாற் கல்வியா லுணர்வா லுண்மையா லுணர்ந்த வருயர்ந்தோர், எள்ளியகுற்ற மில்லவரெய்தும் வெகுளியாலிப்ப டிப்பட்டார், தெள்ளியவீரச் சிலையிஞய்புறத்துத் திறம்பகைவெல் லலாஞ்சினமாம், உள்ளுறுபகையை யறிந்தவருலகத் தொருவரும் வென்றவரில்லை. (உ அ)

மூங்கிலிற்பிறந்தமுழங்குதீமூங்கின் முதலறமுருக்குமாபோல [ம் தாங்கருஞ்சினத்தீ தன்னுளேபிறந்து தன்னுறுகிளையெலாந்தகிக்கு ஆங்கதன்வெம்மையறிந்தவர்கமையாலதனையுள்ளடக்கவுமடங்கா தோங்கியகோபத்தீயினையொக்குமுட்பகையுலகில்வேறுண்டோ. ()

வேறு.

மனத்தினால்வாக்கால்வாய்ந்தசெய்கையான்மாசிலாதோய்
சினத்தினான்மிக்கோர்பண்டுசெய்தவக்கதையையெல்லாம்
உனக்கியானுரைப்பென்யாவுமுணர்ந்துகேளென்றுவாசப்
புனத்துழாய்மாலைமார்பனிக்கதைபுகலலுற்றான். (ந௦)

மன்னவனகுடனென்பான்வாசவன்மகமுஞ்செய்தோன்
அன்னவன்புதல்வன்றாதையனையவன்றவத்தின்மிக்கோன்
பன்னெடுங்காலந்தன்னைப்பார்மன்னர்முறைசெவிப்ப
இந்நகர்க்கிறைவனாகியிருந்தவன்யயாதியென்போன். (நக)

பார்க்கவன்கண்ணுயுள்ளோன்பகையறக்களைந்துகாத்தோன்
பார்க்கவன்றவதனைதயென்றும்பண்ணுவான்விண்ணோர்தன்கை
பார்க்கவன்றநதயாகம்பண்ணுவோன்சன்மிட்டைக்குப்
பார்க்கவன்பயநததெய்வயானிக்குப்பதியாயுள்ளோன். (நஉ)

தன்மிட்டனுயவந்தயயாதிக்குததடமென்கொங்கைச்
சன்மிட்டைவயிற்றிற்பூருச்சனிததனன்றயித்தியர்க்குக்
கன்மிட்டனுகிக்காக்குங்கவிமகளவயிற்றிற்காசில்
பொன்விட்டுவிளங்கும்பூனுயதுவெனும்புதல்வன்வந்தான். (நந)

இருவரும்வளருங்காலையதுவெனும்பேரோன்வெள்ளம்
சொரிதருகண்ணினீரிற்றேன்றியகோபத்தீயின்
வருபெருந்துயரமாறுவல்விரைநதெயதியபந்தத்
தெரிவையர்திலகமானசேயிழைக்கிணையசெப்பும். (நச)

29. கமை - பொறுமை.
31. வாசவன மகம் - இந்திரபதவியைத் தருஞ்சதபரிவேள்வி.
32. பாரகவு அவன - கண்ணுயுள்ளோன - பார்ககவன தவதனை - பரசு ராமன் தவத்தையொத்த தவம். பாரக்கவனபயந்த - சுக்கிரனபெற்ற.
33. கவிமகள் - கவி - சுக்கிரன்.

தன்மமொன்றிலா தசிந்தைதத்தயித்தியர் தலைவனேனேன்
தன்மகடனைக்கொண்டாடியவண்மகன்றனையேபோற்றி
உன்மகனென்னுங்கோபத்தாலெனைபுரப்பாநிற்கும்
துன்மதிமன்னன்றாயோய்கேளெனப்பின்னுஞ்சொல்லும். (கரு)

போதமில்யயாதிக்குற்றுப்புகுந்தவப்பாவந்தீரத்
தூயதானீபுநானுமிருந்தருந்துயரந்துய்த்தோம்
ஆதலாலென்றுமென்றுமானத்தாற்கவரிமாக்கள்
சாதலைக்கண்டுதேருய்தளர்நதொருமயிருக்காக. (கசு)

ஆயவனினையகூறவாயிழையழன்றுபொங்கித்
தூயநற்பவளச்செவ்வாய்துடிதிடக்கண்ணீர்சோரச்
சேயினையுடனேகொண்டுசெறிபுகழ்த்தந்தைதன்பாற்
போயவனடியில்வீழ்ந்துபொருமிநின்றழுதுசொல்லும். (கஎ)

சிந்தைசன்மிட்டைமேலேசெல்கையான்மன்னனன்றுள்
மைந்தனைக்கண்டாற்கையால்வரவணைத்திறுகப்புல்லி
எந்தைகேளென்னைக்கண்டாலென்னவென்மகனைக்காயும்
இநதவெந்துயருக்காற்றேருமெரியிடைவீழ்துமென்றுள். (கஅ)

குழன்றபூங்கழலாணைஞ்சுகோபத்திற்கூறவெள்ளிக்
சுழன்றதுசிந்தைபோக்குமழிந்ததுசிவந்தகண்கள்
சுழன்றனபுருவநின்றுதுடித்தனதூயநல்லோர்க்
கெழுந்தனகோபமென்றுல்யாரிதுதடுக்கவல்லார். (கசு)

அவ்வழிவெள்ளிகோபித்தந்தமாற்றுட்டிக்கன்பாய்ச்
செய்வதையறியான்சிந்தைகலங்கவிததெய்வயானி
இவ்வகையிடரைச்செய்தயயாதிதனிளமைநீங்கி
நைவ்வளமொழியார்கண்டுநகைசெய்மூப்படைகவென்றுன். (சo)

தளர்ந்துதான்பிணங்கிவெள்ளிசாபத்தாற்சாபம்போல
வளைந்துமெய்திரைந்துகேசம்பஞ்சுபோல்வெளுத்துநெஞ்சம்
உளைந்திழைந்திருமிக்கண்ணீரொழுகநாக்குளறிப்பற்கள்
துளங்கிடுங்கட்டமூப்புத்தோன்றிற்றியயாதிக்கன்றே. (சக)

இந்தமூப்பால்யயாதியதுவினைநோக்கியென்பால்
வந்தவிம்மூப்பைக்கொண்டேவருந்திநோய்தீர்த்தியேலென்
சிந்தையினெண்ணமெல்லாந்தீர்த்துநல்லறங்கள்செய்து
மைந்தநீகாணமூப்பைமறித்துநான்கொள்வேனென்றுன். (சஉ)

40. நைவளம் - ஒருவகை இனியராகம். 41. சாபம்போல - விற்போல.

நைந்தடியற்றவாலநடுங்கிவீழ்கின்றதென்று
வந்தவீழூன்றிவீழாவகைநிலைவிளக்குமாபோல்
மைந்தர்கடமக்குநல்லவறிவினான்மகிழ்ந்துசேர்ந்து
தந்தையைத்தளராவண்ணந்தாங்குவர்தவத்தினென்றான். (சங.)

புத்திரனாவோனீதிபொருந்தித்தன்குலத்தினுள்ளோர்
அத்தனைவரையுந்தீயவருநரகுறுமற்காத்துச்
சுத்தமாங்கதியினுய்ப்பானென்றுசொல்வார்களையோய்
இத்தைநீயுணர்ந்தென்மூப்பாமிடும்பையைத்தீர்த்தியென்றான். ()

என்றவன்விளம்பக்கேட்டயதுவிதுவிளம்புமெந்தாய்
உன்றனக்கரியமைந்தன்றன்னைநீயுடன்கொண்டுண்ணும்
அன்றெனக்குரிமையில்லையாகுலத்துடனேயுண்ண
இன்றெனக்குரிமையுண்டேலிவ்விடர்நீக்கவென்றான். (சரு)

ஈதவனியம்பத்தன்சொன்மறுத்திடயயாதிபோய்நற்
போதவனாயமைந்தன்பூருவையழைத்துக்கண்டு
கோதறுகுணத்தோய்நீயிக்கொடியமூப்பதனைக்கொண்டென்
வாதையைமைந்ததீர்க்கவல்லையோவென்னச்சொன்னான். (சசு)

இன்னவையியம்பப்பூருவென்னிடர்தீர்த்தியென்று
மன்னவன்கூறப்பெற்றுவாழ்ந்தனனென்றேமண்ணில்
என்னையொப்பவராரென்னாயயாதிதன்மூப்பைகொள்ளத்
தன்னிளமையினைப்பெற்றதராபதியதுவைநோக்கி. (சஎ)

நீசுரரோடுமண்ணோரிகழநின்மைந்தனோடும்
ஆசுரபாவஞ்சார்வாயாகெனச்சபித்துச்செற்றாக்
கூசுரமுடையகோமான்கொடுவினையறுப்பான்கோலி
மாசுரமடைந்தான்மற்றமைந்தனைமகுடஞ்சூட்டி. (சஅ)

ஒன்றியகோபத்தோர்களிவ்வகைகெடுதலுண்மை
என்றுகார்வண்ணன்கூறவிளையவன்வியந்துசால
நன்றிதுவெனக்கொண்டாடிநாயிறுகடலின்மூழ்க
வென்றிகொள்வீரன்சந்திவிதிமுறைமுடித்தபின்பு. (சகூ)

அவ்விரவமளிநண்ணியாசையுமண்ணும்விண்ணும்
கவ்விரவியமைவண்ணக்காரிருள்கலங்கியோட
வெவ்விரவியுமவ்வேலைமிசைவரவேதமென்னப்
பொய்வ்விரவியசொல்லில்லாப்புரவலன்பள்ளிநீங்கி. (ரு0)

---

50. கவ்விரவிய - கவ் கடைக்குறை கவலை, துன்பம்.

சந்திகாரியங்களெல்லாஞ்சமைந்தபின்றழைப்பச்சார்ந்த
அந்தணர்க்கம்பொன்பூரியானிரையாதியாய
இந்திரைகொழுநனீந்தாண்டிருந்தபின்முனிவரெல்லாம்
வந்தனரென்னச்சொல்லவாயிலோய்கொணர்தியென்றான். (ருக)

பொருத்திகழ்வாயில்காப்போன்போயவண்விடுப்பப்புக்க
விருத்தராமுனிவர்தம்மைவிதிமுறையருச்சித்தேதும்
அருத்திமாதவத்துக்கிப்போழ்தழிவொன்றுமிலையேயென்று
திருத்திகழ்மார்பன்கூறசசிறைதவிலாதவர்கள்சொல்வார். (ருஉ)

மன்னவர்மன்னா முன்னாண்மதுவெனுந்தானவேந்தன்
தன்னெதிரிலாதவீரன்றருமமுநதபாமிக்கோன்
பிஞ்ஞகனருளாற்பெற்றபெருவலித்திரிசூலத்தன்
அன்னதுகையதாகவிளிவிலாவாயுப்பெற்றான். (ருங)

ஆயவன்றனக்குக்கும்பிநசிவயிற்றவதாரஞ்செய்
தீயவன்றேவராதிதிரிபுவனத்துள்ளோர்க்கும்
சாய்விலாவென்றிவீரன்றயாவொடுந்தருமத்தோடும்
ஏய்விலாவஞ்சநெஞ்சனிலவணனென்னும்பேரோன். (ருச)

அன்னவன்கொடுமைகண்டுமதுமுன்னரரன்பாற்பெற்ற
இந்நெடுஞ்சூலநின்கையிருக்கவேயிமையோரேனும்
உன்னொடும்பொருவான்மூளிலுலைவரென்றுரைதுப்போற்றித்
தன்னெதிரிலாததந்தைகொடுத்திடத்தன்கைக்கொண்டான். ()

அங்கதுகைக்கொண்டந்தவவனியையடங்கநூறித்
தங்குமாதவத்தோர்தம்மைத்தவஞ்செயாவண்ணங்காத்தோன்
இங்கெமக்கிடையூறுற்றுலிங்நகர்வருவதன்றிப்
பொங்கரவணையாய்வேறுபுகலிடமுண்டோவென்றார். (ருசு)

ஆங்கவருரைத்தசொற்கேட்டருந்தவமுனிவர்க்கெல்லாம்
தீங்குசெய்தீயோன்றன்னைத்தென்புலத்துய்ப்பென்றிண்ணம்
நீங்கள்போயஞ்சாதுங்கணிலைகளினின்மினென்று
தேங்கமழ்தாரோன்றீயோன்றனைக்கொலுந்திறஞ்சிந்தித்தான். ()

இன்னுயிர்த்தம்பிமாரையிருகணாலினிதுநோக்கி
மன்னுயிரடங்கக்கொன்றுமாதவர்க்கிடரைசெய்தோன்
தன்னுயிர்தன்னைவாங்கித்தருமவாயாரோவென்ன
என்னுரைகேட்டியென்னாவிலகருவனியைச்சொன்னான். (ருஅ)

---

52. அருத்திமாதவம் - அனபுள்ளதவச்செயல.
53. தானவேந்தன் - தானவவேந்தன். பிஞ்ஞகன் - சிவபெருமான்.

மூவகையுலகிலுள்ளமுனிவர்தானவர்களாதி
யாவருமவனுக்காகியென்றாடுமபொருவரேனும்
யவினையாகிலென்னையிலவணனென்னுமந்தப்
பாவகாரியையான்கொல்வெனென்றலும்பரதன்கூறும். (ருகூ)

துங்கமாமுடியாய்நாயேன்சொல்லுவதுண்டுகேட்டி
வெங்கடுகானத்தேபோய்மென்கனிசருகுமூலம்
அங்கவையமுதுசெய்தற்காய்ந்தனனாண்டீரேழும்
கங்குலும்பகலுமுன்னைக்கண்ணுறங்காதேகாத்து. (சாO)

வந்தெதிர்பொருதமாயவரக்கரையடியநூறி
அந்தகபுரத்திலேற்றியடலதிகாயனோடும்
இந்திரசித்தைக்கொன்றங்கிராவணற்கிடரைச்செய்து
நொந்தனனிளையோனந்தநோவைநீநோக்கல்வேண்டும். (சாக)

பலபலவுரைத்தென்வெய்யபாதகவரக்கன்பத்துத்
தலைகளுமிரட்டிதோளுஞ்சரந்தனாற்றடிந்தவீரச்
சிலைவலோவென்னையேவிற்றீவினைகளையேசெய்யும்
இலவணன்றன்னைநான்கொன்றிவ்விடர்தீர்ப்பேனென்றான். (சாஉ)

இன்னவைபரதன்கூறவிளையசத்துருக்கன்சொல்லும்
மன்னவர்மன்னனீபோய்வனம்புகுவார்த்தைகேட்டு
நின்னையிவ்வரசுசெய்யப்பணித்துநீமறுப்பநின்றன்
பொன்னடிநிலையைக்கொண்டுபோந்தனன்சிரத்துவைத்து. (சாங)

அரசிலாவயோத்தியெய்தினரசுநாஞ்செய்தோமென்றே.
நரர்பழியிடுவாரென்றுநந்திநற்கிராமநண்ணி
மரவுரியுடுத்துவார்ந்தசடையனாய்க்கண்ணீர்மாறாப்
பரதனையேவலாமோபார்புகழ்பைம்பொற்பூணாய். (சாச)

எஞ்சலில்கீர்த்திபூண்டவிளையவனியம்பும்பின்னும்
அஞ்சனவரைபோன்மேனியழகனையருளிலாத
வஞ்சன்மேலென்னையேவின்வானுலகவனையேற்றி
நெஞ்சிடர்முனிவர்நீங்கநிறுதருவென்றவத்தையென்றான். (சாரு)

வளைதனுக்கையின்வாங்கிவானவரெனினும்வெம்போர்
விளைகளத்தெதிர்ப்பாராயின்வெற்றிகொள்வீரப்பொற்றோள்

---

59. பாவகாரி - பாவஞ்செய்பவன்.
63. அடிநிலை - பாதுகை.

இளையசத்துருக்கனிவ்வாறியம்பிடவிராமன்கேட்டுக்
கிளரொளிப்பவளச்செவ்வாய்கிளர்ந்திவைகிளத்தலுற்றான். (௬௬)

முனைக்களத்தெதிர்ப்பினிந்தமூவுலகத்தினுள்ளோர்
உனக்கெதிர்நிற்குமாற்றலுடையரோவுயர்பொற்றோளாய்
சினத்திறலசுரன்றன்னைத்தென்புலத்தேற்றித்தூயோர்
மனத்திடர்தீர்த்தியென்றான்மனுகுலத்துற்றவள்ளல். (௬௭)

இன்னவையிராமன்கூறவிலவணன்றன்னைக்கொல்ல
என்னையேயேவப்பேற்றேறெனவெழுந்துவகையோடும்
மன்னவன்றன்னைமும்மைவலஞ்செய்துவணங்கிநிற்பத்
தன்னிருதோள்களாரத்தழுவினன்சகலநாதன். (௬௮)

அலகிலாமாவுந்தேருமடுகளிற்றினமுமாற்றல்
தொலைவிலாப்பெரும்பதாதித்தொகுதியுஞ்சூழவேவி
விலையிலாமணியுமுத்துமென்னுழைத்துகிலும்பூணும்
மலைகுலாவியதோளாற்குவழங்கினன்கருணைவள்ளல். (௬௯)

பரதனைப்பதினாலாண்டுபரமனைக்காவல்பூண்ட
விரதனைவிளங்குசோதிவெய்யவன்குலத்தோர்க்கென்றும்
வரதனும்வசிட்டன்றன்னைவணங்கிபவ்வஞ்சன்றன்னைச்
சரதநான்கொல்வேனென்றுசமைந்தசத்துருக்கன்போனான். (௭0)

வேறு.

எண்ணிலாக்கரிபரிதேரிடைநெருங்கும் படையிவற்றையெழு
கென்றேவித், தண்ணிலாவிடுமுறுவற்றை யலர்ப்பல்லாண்டிசைப்
பததனதுமேனி, வெண்ணிலாவொளிவீச வெள்ளிமலைபொன்மலை
மேல்விளங்கல்போல, மண்ணுலாவியபுகழான் மாமணித்தேரேறி
னான்வானோர்வாழ்த்த. (௭௧)

ஆனகதுந்துபிமுழங்கவணிமுரசமுகிலனையவமலைபொங்க [லை
வானகமுமண்ணகமும் வளர்பெருந்தூளியின்மறையமலர்ப்பூஞ்சோ
தேனகுபங்கயப்பழனத்திருநாடுகடந்துபோய்த்தேவதேவன்
கானதியிற்களித்தாடிக்கலைமுனிவான்மீகிதவக்கானங்கண்டான். ( )

அங்கமுனியடிவணங்கியவன்செய்தபூசனைகொண்டன்றுதங்கி
மங்கைசனகன்பயந்தமடப்பாவையவ்விரவில்வயிறுவாய்ப்பச்

---

72. அமலை - ஓசை. தேவதேவனகானதி - திரிவிக்கிரமனான நெடுமாலின் பாதத்தினினறுபோன்ற கங்காநதி.

73. வயிறுவாய்ப்ப - கருவுயிரப்ப, ஈன.

செங்கமலவிழிச்செவ்வாய்ச்சிறுவர்பிறந்தாரிருவரென்றுசெப்பப்
பங்கமிலாமுனியெழுந்து பரிவோடுபிள்ளைகளைப்பற்றிப்பார்த்தான்.

மைவண்ணத்தாமரைக்கண் மன்னனிராமன்றன்னைவந்துகண்டோர்க், கெவ்வண்ணமவனிருக்கு மிலக்கணங்களவைபலவுமிலங்கித்தோன்ற, அவ்வண்ணத்தவ்வுருவாயவதரித்த பிள்ளைகளையருளினோக்கிச், செய்வ்வண்ணமறியாதுசிநதைமகிழ்ந் தவதரித்தோர்க்கினையச்செய்தான். (எச)

சீதைதன்திருவயிற்றிற்றிருவவதாரஞ்செய்த சிறுவர்தம்மை, பூதபசாசுகண்முதலானவைவந்து பொருந்தாமற் புரைதீர்காட்சிக், கோதறுமந்திரங்கள்சொலிக் குசலவங்களாற்றுடைத்துக்குறிகொண்டார்கள், ஆதலாலம்மைந்தர் குசலவர்களென்றுபேராயினரே.

பிள்ளைகள்சானகிவயிற்றிற் பிறந்தார்களெனமுனிவர் பேசக்கேட்டாங், குள்ளமகிழ்சத்துருக்கனுன்னுவா னுயர்மாடத்தயோத்தியென்னும், ஒள்ளியமாநகரியிடையுற்பவிக்கப் பெறுதுவகையொலியொன்றின்றிப், புள்ளொலியேமிகுகாட்டிற் பிறந்தார்கள் பொன்னகரிற்பிறந்தாராயின். (எரு)

பொய்யாதவேதியர்க்குப்பூதானங்கோதானமுதலபண்ணிக்
கையாரநிதிவீசிக்காகுத்தன்காளையர்கள்பிறந்தாரென்று
மையார்பூம்பொழினகரிமகிழ்வெய்திமணிமுரசமறைந்துநின்று
நெய்யாடலாற்சனங்கனென்படுமோவின்றென்றுநினைந்துநைந்தான்

ஏதமிலாக்குணத்தினொனிவ்வண்ணஞ்சிந்திப்பவிருள்கைவாங்கிப், போதுவிடிந்தறியாமற்புறப்பட்டாங் குதயத்திற்பொலிந்துதோன்ற, மாதவரையடிபணிநது மன்னவனையடிவணங்கி மணிப்பொற்றேரின், மீதுவந்துமேற்றிசையைக் குறித்துவழிமேற்கொண்டு விரைந்துபோனான். (எஅ)

ஏறுபுகழ்சத்துருக்க னேழுநாளிடைதங்கி யமுனையென்னும், ஆறுகடந்தக்கரையி னருந்தவரையடிவணங்கி யவர்களெஞ்சம், ஊறியவன்பொடுசெய்த பூசனைகொண்டுண்மகிழ்ந்தங் குவந்துநல்லோர், கூறியமாகதையிரவுகொண்டாடி யவரோடுங்கூடத்தங்கி. ()

சந்தியவந்தனைசெய்து தபோதனரோடினிதிருந்த சமயத்தந்த, அந்தணரையடிவணங்கி யடலரக்கர்குலத்தினை வேரறுத்து

75. குறிகொண்டார்கள் - நாமம், பேர்பெற்றார்கள்.

வந்த, சுந்தரவில்லிக்கிளையான் சொல்லுவானிலவணன்கைச்சூலஞ் செய்யும், வெங்தொழிலுமவன்வலியும் விரித்துரைமினெனவவரும் விளம்பலுற்றார். (அ௦)

மனுகுலமாநுங்குலத்து வந்துதித்தோன்மாந்தாதா வென்னு மன்னன், குனிசிலையைக்கைவாங்கிக் குரைகடல்சூழ்நுவலயத்திற் கூர்வேன்மன்னர், இனியொருவர்பிழைத்தோர்க ளிலையென்னக் குலத்தோடுந் தொலைத்துப்பின்னை, தனியொரு சக்கரநடத்தித் தரணிமுழுதுங்காத்த தனித்தோள்வீரன். (அக)

செறிமணிமாமுடிமன்னர் திறைகொணர்ந்துசென்று புகப்பெ றுதுதூங்கும், குறுகரியபெருங்காவற் கோபுரவாயிலையுடையகுலவு செல்வன், தறுகணுடைவன்னெஞ்சன் றரியலர்பாற்போராற்றிற்ற ண்ணீர்தாகத், துறுபுலியும்புல்வாயு மொருதுறையினீருண்ண வுலக மாண்டான்.

இன்னபெருவலியுடையோ னிந்திரனைப்போர்வெல்வா னெழு ந்துசெல்ல, அன்னவன்றன்கருத்தறிந்த வமரர்கோனுரைசெய்வா னளவிலாற்றல், மன்னவமண்ணுலகத்துன்வழியொழுகாவலியோன் மேற்செல்லமாட்டாய், என்னையமர்வென்றுநீ யென்னுலகங்கோட லுனக் கியல்பேயென்றான். (அ௩)

தேவர்கோனிவைசெப்பத் திரைக்கடல்சூழவனிதனைத்திருத் தியாண்ட, மாவலித்தோண்மணிமவுலி மாந்தாதாவிவையுரைக்கு மண்ணின்மன்னர், யாவருமென்வழியொழுக வெனக்கெதிரா,யென் வழிவாராததீயோன், பூவலயத்தெவனவன்பேர் புகறியெனப்புரந் தரனும் புகறலுற்றான். (அச)

மண்ணுலகில்வலிமிக்க மதுவென்னுந்தானவர்கோன் பயந்த மைந்தன், நண்ணரியவரனுடைய மதுபுரியையாள்கின்றான் ஞால மொன்றிப், பண்ணரியபாதகத்தோன் பாருலகிற்பல்லுயிர்கள் பதைப்பக்கொன்றான், எண்ணுறுதிண்படையுடையோ னிலவண னென்பவனுலகி னெதிரிலாதோன். (அ௫)

சீரார்தேவருக்கரச னென்றினையசெப்பியசொல் செவிற்காய் ந்த, நாராசமெனநுழைய நன்னிறத்துமானவே னடுங்கத்தைத் துப், பாராளுமன்னன்மனம் பதைபதைப்பப்போக்கொழிந்து பாரி

84. புகறியென - என்றுரைக்க.
85. நண்ணரிய - பகைவரடைதற்கியலாத.

ன்மீண்டு, போராததழற்றறுகட் பெருங்கோபன்றாதுவனுக் கினைய பேசும். (அசு)

இன்னுயிருக்கிடர்செய்யு மிலவணனுக்கிவ்வண்ண முரைத்தி யென்ன, உன்னுயிர்நீவேண்டுதியே லுயர்தவத்தோர்க்கிடர்செய் யா தொழிகவென்று, மன்னுயிரைக்கோடலினித் தவிர்கென்று மதுபுரம்புக் கவனவண்ணம், சொன்னபொழுதவனைத்தன் சுடர் வாளினலெறிந்தான் றுன்றுதோளான். (அஎ)

தூதன்வரக்காணது தோன்றியவெங்கோபத்தாற் றுடித்த நெஞ்சன், மாதவருக்கிடர்செய்து மண்ணுலகினுயிரெல்லாம் வாரித் தின்னும், பாதகன்கைச்சுடர்வாளாற் பட்டானேவென்றுபல நினை ந்துபார்க்கும், நாதனடற்படைசூழ நன்மாடமதுபுரத்தை நண் ணுங்காலை. (அஅ)

ஆங்கவனுநம்மிடத்தி லஞ்சாதேவந்தடைந்தா னோவெ ன்று, தாங்கரியபகைசசூலத் தானையொடுதலைப்படலுந் தரைக்கு மன்னன், பூங்கணைமாமழைபொழியப் புன்முறுவல்செய்தவனும் பொருமையெய்தித், தேங்கமழ்தார்மன்னன்மிசைச் சிவனளித்த திருச்சூலந் திரித்துவிட்டான். (அக)

ஏழிற்பேருலகமெல்லாமிப்பொழுதே முடியுமெனவிமையோரஞ்ச
ஊழித்தீக்கிளர்நதெனவுலகமெலாமெரிபரப்பியோடச்சென்றங்
காழிததேர்மன்னவனையவன்சேனையொடுமுருக்கியளவிலாற்றற்
பாழித்தோளிலவணன்றன்பாணிமிசைப்பண்டுபோலிருந்ததன்றே

பொய்யிருக்குமனததவுணன் போர்வலியீதென்றுரைத்துப் புகல்வார்பின்னும், மெய்யிருக்குஞ்சொன்முனிவர் விரிசடையோ னிடைப்பெற்ற வெய்யசூலம், கையிருக்கின்வெலற்கரியான் கையி ராக்காலத்தை யறிந்துகாதில், நெய்யிருக்குஞ்சுடர்வேலாய் நிச்சய நின்கைப்படுவனீசனென்றார். (கூக)

என்றுதிருமறைமுனிவ ரிலவணன்றன்வலியெல்லா மியம்பக் கேட்டு, வன்றிறற்போர்ச்சத்துருக்கன் மதுபுரமாமாநகரம் வழிக் கொண்டந்தக், குன்றனையானுயிரலைப்பப் புறப்பட்டானெனச்சா

87. அவனை - அத்தூதனை.
88. நாதன் - தலைவனுகிய மாந்தாதா.
90. முருக்கி - கொன்று. பாணி - கை.
91. காதில் - பாணத்தாலடித்தால். 92. சாரர் - ஒற்றர்.

ரர் கூறக்கேட்டுச், சென்றனனந்நகரெய்திச் செழுமதில்வாயிலி னின்றான் சேனைசூழ. (கூ௨)

மன்னுயிர்க்குக்காலனாய் மண்ணுலகினுயிரெலாம் வளைந்து கொன்று, மின்னுயிர்க்கும்விரிசடைவெள் விடையுடையோனருளு சூல மென்கைத்தாக, என்னுயிர்க்கோரீறுமிலை யெனநினையுமிலவ ணன்ற னகரியெய்தித், தன்னுயிர்க்குக்காலனாய் நின்றவிறற்சத்து ருக்கன் றன்னைக்கண்டான். (கூ௩)

தன்னுடையநகர்வாயிற் றனுதரனாய்ப்போர்செய்யச் சமைந் துநிற்கும், மன்னுடையமகனின்ற வலிகண்டுவாய்மடித்து வஞ்சன் கூறும், என்னுடையகாவலழித் தஞ்சாதேயென்னகரில் வந்தாய் யாரை, உன்னுடையபேரேது நீவந்தகாரணமெற் குரைத்தியென் றான். (கூ௪)

தயரதன்றன்றனயன்யான் சத்துருக்கனெனும்பெயரா மிரா மன்றம்பி, புயலனையகருமனத்தோய் போர்வேண்டிவந்தனென் யான் போர்தராது, பெயர்வரிதிங்குனக்கென்னப் பெருகியவெங் கோபத்தாற் பெயராதோங்க, மயல்புரியுமனத்தவுணன் மற்றவனை க்குறித்தினைய மாற்றநுசொனனான். (கூ௫)

என்னுடையதமையனு மிராவணனையிருங்கிளையோ டேன்று கொன்ற, உன்னுடையதமையனு மிராகவனென்றிருந்தவனை யுணர் ந்திலாதேன், என்னுடையபழம்பகைவன் றம்பிநீயென்னிடைவந் தகப்பட்டாயின், றுன்னுடையவுயிர்கொள்வ னெனவுரைத்துப்பின் னுமீ துரைக்கலுற்றான். (கூ௬)

தெவ்வழிக்குஞ்சிலைதரித்த திறலுடையமாந்தாதா சேனை யோடென், கைவ்வழிவந்தகப்பட்டுக் கனலாகியொழிந்தமைநீ கழ றக்கேட்டும், உய்வ்வழியொன்றிலையின்றுன் னுயர்சேனையதனொடு மென் னுழைவநதுற்றாய், அவ்வழியிற்பிறந்தோருக் கறியாமல்வர வந்த வழகேதென்றான். (கூ௭)

திண்ணசுரனிவ்வண்ணஞ் செப்பியசொற்செவிநுழையச் சீற் றம்பொங்கக், கண்ணெரிகான்றிடவூழிக் கடலென்னக்கடலால

94. சமைந்து - ஒருப்பட்டு.

96. இலவணன் மாதாவான கும்பிநசி இராவணன் சிற்றன்னையாதலின் இராவணனைத் தமையன் என்றான்.

97. தெவ்வழிக்கும் - பகையைக்கெடுக்கின்ற.

காலமென்ன, மண்ணதிரமண்சுமந்த மாநாகந்தலையதிர வஞ்சனே ஞ்சத், தெண்ணதிரவிண்ணதிர விருஞ்சிலையைநாணெறிந்தா னிரா மன்றம்பி. (கூஅ)

இவ்வண்ணநாணெறிய வெய்துகடித்திருகையோ டொருகை யெற்றி, மைவ்வண்ணமனத்தவுணன்மலையனையமராமரமண் குலைய வாங்கி, உய்வண்ணமரிதிவற்கென் றும்பர்நடுங்கிடவுரவோ டுருத்து வீசக், கைவண்ணச்சிலையிளையோன் கணைகளான்மராமரத்தைக் கண்டங்கண்டான். (கூகூ)

உற்றபெருவெகுளித்தீயுடன்றெழுந்த வாளரக்கனோங்கலென் ன, மற்றொருமாமரம்பிடுங்கிமண்ணடுங்க விண்ணடுங்கவலியின்வீச க், கொற்றவன்வெஞ்சிலையினையோன்கொடுங்கணையான்மாமரத்தை க்கூறுசெய்து, செற்றமிகுமவனுரத்துச்செழுங்கணைகள் பலசொரி ந்தான்றேவர்வாழ்த்த. (க00)

குன்றனையவாளவுணன்குருதிநீருடல்சொரியக்கொதித்துமண் டி, ஒன்றின்மேலொன்றோங்கி யுயர்மரங்களோவ்வாதுசெல்லவீச, வன்றிறலோன்விற்கையில் வளைததபடியேநிற்கவயிரவாளி, துன் றுமழைபொழிந்தவுணன் றூரந்தமராமரமடங்கத்துணித்துவீழ்த் தான். (க0க)

அராவணைமேற்றுயினீங்கி யயோத்திமாநகரெய்தி யதனைக்கா த்த, இராகவன்றன்றிருச்சரத்தா லிரவிமாமகன்றேறற் கெய்தவே ழு, மராமரமொன்றொப்பதனை மந்தரமாமன்னதனை வஞ்சன்வாங்கி த், தராதலஞ்சேருயிர்நடுங்கச் சததுருக்கன்மிசையெறியத் தளர்ந் துவீழ்ந்தான். (க0உ)

இறந்தனனீங்கிவனென்று விலவணனென்பகையறுத்தே னென் றுநின்றான், சிறந்தவலிததன்சூலஞ் சென்றுவாங்கிடவேதுஞ் சிந தைசெய்யான், அறங்கைகொடுததெடுத்தளிப்ப வாதிநாயகன்றம் பியமளிநீங்கி,உறங்கியெழுநதானென்னவுணர்நதெழுநதானுயர்வா னத்தும்பர்வாழ்த்த. (க0௩)

சினச்சிங்கமெனவெழுநதங்கினித்தெய்வக்கணைதொடுப்பனெ னச்சிந்தித்துப், புனற்சந்தமலர்கந்தப் புகைதீபமுதலாய வுபசார

100. ஓங்கலென்ன - மலைபோல.
102. இரவிமாமகன் - சுக்கிரீவன்.
103. அறங்கைகொடுத்து - தருமதேவதைதாங்கி.

ங்கள், மனத்தாலேவகுத்திந்த வஞ்சனுயிர்கொண்டென்பால் வரு
தியென்று,வினைப்பாவிமேற்றெய்வ வெங்கணையைவின்னாணிற் றொ
டுத்துவிட்டான். (௧௦௪)

விட்டபடையாலமென்னவெவ்வூழித்தீயென்னவிரிந்துபொங்கி
அட்டதிசையும்பாருமருவரையுமம்பரமுமநந்தனோடும்
நட்டமுறுமன்றோநாமினிப்போகவிடங்காணோமென்றுநாகர்
கெட்டனர்களுண்ணடுங்கிக்கேடிலான்முகற்கிளையகிளத்தலுற்றார்.

ஊழிக்காற்றொடுங்கூடியூழித்தீப்பரந்ததுலகெங்குமென்ன
ஏழிற்பேருலகமெலாமீன்றவிறையிவைவிளம்புமெதிரிலாத
ஆழித்தேரிலவணன்றனாருயிர்கொள்வானாழியண்ணறம்பி [ன்.
பாழித்தோட்சத்துருக்கன்விடுதெய்வப்படையிதுநீர்பதறலென்றா

பெண்ணுருவிற்பாகன்பாற் பெறுசூலப்பெருவலியாற்பெருகும்பாவ
உண்ணிருமியாவவுணனுரமுருவியுயர்வரைகளுருவியோடி [ம்
மண்ணுருவிமண்ணின்கீழ்மாநாகருலகுருவிமறித்துமீண்டு [வவாளி
திண்ணியதோட்சத்துருக்கன் செங்கையில்வந்திருந்ததந்தத்தெய்

விண்ணவர்பூமழைபொழிய வேதியராசிகள்கூற வேலைசூழ்ந்த
மண்ணவர்கண்மகிழ்ந்தாட வள்ளலிராமன்றம்பி மதுகையென்னும்,
ஒண்ணகரியுள்புக்காங் கொளிபெறுமாமணிச்சோதியொன்றாயோங்
கும், திண்ணிலையபொன்மாட கூடகோபுரமெல்லாந் தெரியக்கண்
டான். (௧௦௮)

இலங்கைமாநகருக்குமிந்திரன்றனகருக்குமெழில்கொள்சோதி
அலங்கன்மாமுடிததனதனணிநகர்க்குமிந்நகர்போலழகுண்டாமோ
நலங்குலாவியவிந்நகரியினைநாம்புகழ்வதெங்ஙனென்று [ந்தான்.
தலங்குலாவியசீர்த்திச்சத்துருக்கனொளிமணிமண்டபத்தைச்சார

தையலர்பலாண்டிசைப்பச்சாமரைகள்பணிமாறத்தாளமோங்
கும், தெய்வமாவின்னிசைகள் செவிநுழையமாகதர்க டிரண்டுபோ
ற்ற, மெய்யெலாமாபரணம்விரிசோதியால்விளங்கவிண்ணோர்வாழ்
த்தப், பொய்யிலாவுள்ளத்தான் பொங்கணைமேல்வீற்றிருந்தான் பு
லவர்போற்ற. (௧௧௦)

ஆக திருவிருத்தம் - ௯௧௦.

---

105. அம்பரம் - கடல்.
108. மதுகை - இலவணன்பட்டினம்.

## கச-வது, சப்புவன்வதைப்படலம்.

அன்னதன்மையனுபாறிரண்டாண்டவ்வணிநகரரசுவீற்றிருந்து [ம்
தன்னெடும்படையையங்கு வைத்ததற்பின்றுணையுந்தலைவருந்தானு
மன்னவனிராமன்மலரடிபணிவான்வல்வினையெனும்விலங்கறுத்து
நன்னெறிகண்டகாட்சிவான்மீகிநலங்கொளாச்சிரமத்தைநண்ண. ()

வண்ணவொண்சிலைக் கையிளையவன்றன்னை வரன்முறைபூசித்
துநாங்கள், எண்ணியவெண்ணமுடித்தனையென்ன வெழின்முனியி
யம்பியவிரவில், புண்ணியகதைகளுரைத்தனகேட்டுப் புலர்ந்தபின்
பூம்பொழிலயோத்தி, நண்ணிநன்னகரியெதிர்கொளப்புகுந்து நாய
கன்றிருவடிபணிந்தான். (௨)

தன்றிருவடிதாழ்தம்பியையெடுத்துத் தடக்கையாலுயிருறத்
தழுவி, வென்றிகொள்வீரன்விளம்புவானுறங்கா வில்லிதன்றனுவ
லியாலே, அன்றிராவணற்கொன்றப்பரையறுத்தே னலைகடல்சூழு
லகுப்ய, இன்றிலவணற்கொன்றிப்பகையுன்று விறுத்தனெனினிப்
பகையிலையே. (௩)

இன்னனபலவுமிளையவன்வலியேயிராப்பகலினிதுகொண்டாடித்
தன்னருள்பொழியுந்தாமரைக்கண்ணுற்றம்பிசத்துருக்கனைநோக்கி
நின்னெடும்படையுமளவிலாநிதியுமங்குவைத்திங்குநீயிருத்தல்
நன்னெறியன்றினென்றலகெவைக்குநாயகனபோகென்னநவின்றான். [௪)

தேனகுதுளபத்தார் திகழண்ணல்செப்பியசென்னிமேற்சேர்
த்தி, மானபூடணனை வலஞ்செய்துபணிந்துமற்றைமுன்னோரையும்
வணங்கி, ஆனகமுரசமாதியமுழங்கவடற் பெருந்தானைதற்சூழ
வானவர்கோமான்மாநகரொக்குமதுமைமாநகரியுட்புக்கான். (௫)

இளையவனேகவிராமனயோத்தியிருந்தரசாள்கின்றவேல்வை, வி
ளைபெருமூப்புவெண்ணரைத்தலையோர்வேதியன்றுரத்திரோடும், வ
ளர்தருந்துயரான்மரித்ததன்மகனைமடியிலேவைத்துயிர்க்கெல்லாம்
களைகணுயுள்ளகாவலன்கோயில்வாயிலிற்கதறிடுங்காலை. (௬)

---

1. விலங்கு - பந்தம், கட்டு.
3. உறங்காவில்லி - இலக்ஷ்மணன்.
5: தேனகு - தேனவிளங்குகின்ற.
6. ஏல்வை - சமயத்தில்.

மைந்தனையிழந்துமனமறுக்குற்றுமயங்கியமறையவன்பாரி
இந்தியமுதலதன்னிலைகலங்கிபிறந்தனளிவனெனமடவாள் [ளிந்து
சிந்தைவெந்துயராளுந்துகைகுலைப்பச்சேயிழையொருவகைதெ
வெந்துயராற்றாதேயுடல்வெதும்பிவெய்துயிர்த்திவையிவைவிளம்பும். [எ]

வேறு.

மணியேயென்றன்மாசறுசோதிவடிவுக்கோர்
அணியேயென்றனாருயிரேயாரமிழ்தேயவன்
பணியேதிந்நாளேகவுனக்குபணிபாராப்
பிணியேதந்தாயீங்கிதுவோநான்பெறுபேறே. (அ)

முன்னைச்சன்மத்திட்டுடையேனுதலின்மோகத்
துன்னைப்பெற்றுப்போற்றிவளர்த்தின்றுனைவிட்டேன்
என்னைப்போலப்பாவிகளுண்டோவிணையில்லாப்
பொன்னைப்பெற்றுந்தப்பமுடிந்தேன்பொறியற்றேன். (கூ)

பதங்களிலார்க்கும்பன்மணியார்க்கும்படியில்லாச்
சதங்கையுமொண்பொற்றண்டையுமம்பொன்னரைஞாணும்
பதம்பலவாகுமைம்படையும்மெய்யழகெல்லாம்
பொதிந்தகழுத்துங்காறையுமம்பொற்புனைபூணும். (கO)

பட்டமுநெற்றிப்பன்மணிமுத்தின்படர்சோதிச்
சுட்டியுமம்பொற்றோடுமிலங்கென்றனையேயோ
எட்டனையுஞ்சார்பில்லவனுட்டினிடைவந்தாய்
கட்டியசுற்றிக்காப்பிடவாராய்களிறேயோ. (கக)

மண்ணறுசீருமானமுமங்கவசைபூண்டோன்
கண்ணறையன்காகுத்தனெனுதிக்கடன்ஞாலம்
புண்ணுறுதீயிற்புத்திரசோகந்தனைமாற்றிப்
பண்ணிறைநாய்தாய்செத்திலனென்றேபழிதூற்றும். (கஉ)

என்னைக்கைவிட்டேகியசீயோவெழின்மைந்தா
உன்னைக்கைவிட்டுன்னுடுவாராதுழல்வேனோ
தன்னைச்சொல்லிக்கூப்பிடவேதுந்தகவில்லா
மன்னர்க்கெல்லாமன்னவனேவுள்வலியாரார். (கங)

ஒன்றுந்துன்பக்கொள்கலமானேனுயிரெல்லாம்
கொன்றுண்பாவிக்கூற்றுவனென்னைக்கொடுபோகான்

7. மறுக்குற்று - சுழற்சியுற்று.
9. பொறியற்றேன் - அறிவில்லாதவளானேன்.

யன்றிண்சிந்தைமன்னவனுமென்வினைதேரான்
என்றென்றிவ்வாறேந்திழையாளுவிடருற்றாள். (கச)

வேறு.

வேதியனுந்தன்பாரிமேதியினில்வீழ்ந்துகிடந்தலறமந்த
மாதுயர்கண்டாற்றுதுமறுகியநெஞ்சினனாகிமாண்டமைந்தன்
மீதுவிழுந்துரைமறந்துவெய்துயிர்ப்பொன்றில்லாதுமிகவுமிக்குப்
போதொடுகூடத்தெளிந்துபொருமித்தன்வாய்விட்டுப்புலம்பலுற்றான். (கரு)

கன்னெஞ்சராயுள்ளோர்களையைத்தாமிழந்துகதறுகிற்பர்
மென்னெஞ்சராயுள்ளோர்வெந்துயரம்பொறுக்கலாவிடுவராவி
என்னெஞ்சிலெரிமூட்டியென்னையறக்கைவிட்டவுன்னைப்போல
வன்னெஞ்சனேயானுமைந்தனேயுனைத்தொடர்ந்துவருகின்றேனே

தனக்குநோய்வேண்டாதான் சந்ததிபெற்றிடாதொழிகதளர்வுமிக்கு, மனத்துநோய்தான் பெருகலடனுக்கின்றியாம்படுமிம்மறுக்கமில்லை, எனக்குநீ செயவிருந்தநீர்க்கடனைினினிறபினிருந்து பிள்ளாய், உனக்குநான்செயவேனுசெய்யேன்காணுனைத்தொடர்ந்துவருகின்றேனே. (கள)

கண்ணிலான்பெற்றிழந்தானெனவுன்னைப் பெற்றிழந்துகாந்திப்பொங்கும், புண்ணுளேநாராசம் புடைத்தனையபொறுக்கலாதாற்றேமாகி, மண்ணிலாப்பெரும்பாவத் தெங்களுக்கு மகனாகவென்னபாவம்,பண்ணிணுய்மகனேயென்பழிப்பற்றபேரழகாபகர்ந்திடாயே

தேசற்றதீவினையேன்றிருவுடையோர்பிள்ளைகளைப்பெற்றுவாழ
ஆசைப்பட்டாவிதளர்ந்தருந்தவங்களசெய்துநானனேகங்காலம்
ஏசறறேனேசறவுகெடவந்தாயென்றிருந்தேனெங்கேபோனாய்
மாசற்றமணியேயென்மறுவற்றவடிவுடையமைந்தரேறே. (கஅ)

தள்ளாடுமேனியனாய்த்தனயனைநானிழந்தாவிதளர்கின்றேனைக்
கொள்ளாதுகூற்றுமெனைக்கொடுபோகாதினியுனக்குத்தோழராகி
உள்ளார்களொடுதெருவில்விளையாடியுடம்பலசியுறங்கினாயோ
பிள்ளாய்நீயெழுந்திராயிதுவென்னபேருறக்கம்பேசிடாயே. (உ௦)

கொஞ்சியவுன்சொற்கேட்டுக் குடுமியுஞ்சுட்டியுமழகுங்குறித்துச்சால, நெஞ்சுகளித்தினிதிருந்த நெடுநதவததால்விதிமுறை

14. கொள்கலம் - இருப்பிடம்.
17. நீர்க்கடன் - சலதருப்பணம்.
19. ஏசற்றேன் - வருந்தினேன.
20. அலசி - இளைப்புற்று.

நின்னரையிற்கட்டும், முஞ்சியுநற்கோவணமுமுப்புரிநூலுந் தோ
ளும் விளங்கித்தோன்ற, வஞ்சனேன்மைந்தா நீ மறையோதிவரக்
காணப்பெற்றிலேனே. (உக)

தராதலத்திலிதற்குமுற்றந்தையர்க்குமுனந்தனயர்மரித்தாரில்லை
புராதனத்தாலல்லாதிப்புத்திரசோகத்தாலேபுலம்புமிந்தப் [டேன்
பிராமணிக்குப்பிழைப்பரிதுபெரும்பீடையால்யானும்பிழைக்கமாட்
இராமனுக்கேபழியாகவிறக்கின்றேமிருவருமேயென்னுங்காலை. ()

விழுகண்ணீர்மெய்நனைப்பவேதியன்றன்பாரியொடும்விம்மிவாய்விட்
டழுகின்றகாரணமுமருமகனையிழந்ததுவும்பொறுக்கலாற்றா
மொழிகின்றவாசகத்தின்கொடுமைகளுமருந்துயருமுழுதுங்கேட்டுக்
கழிகின்றநெஞ்சினனாய்க்கையறவுகொண்டிருந்தான்கருணைநாதன்.

மந்திரிகடமைக்கூவிமற்றவருந்தம்பியருந்தானும்வாயில்
வந்திருந்துபுலம்புகின்றமறையவர்க்குமறுமாற்றஞ்சொலமாட்டாது
நொந்திருந்தவேலைமறைநுண்பொருடேர்நாரதனைமுதலாவுள்ள
இந்திரியசித்தராமிருடிகணமிறைவன்முனமிமைப்பின்வந்தார். ()

வந்தவரைப்படி வணங்கி வரன்முறையாற்பூசித்தங் கிருந்தமன்
னன், சிந்தையில்வெந்துயராறிந்து செழுமறைநாரதமுனிவ னினைய
செப்பும், இந்தவுன்றனிராச்சியத்தி லிதற்குமுன்னிலாததொன்
றுண்டாய்த்தெய்வ, அந்தணன்புத்திரன்மாளவதுவந்த காரணத்
தை யறிவாயென்றான். (உரு)

மாசில்பெரும்புகழினாய் தருமத்தின்வகைநாட்டிவருணதன்மம்
ஆசிரியதன்மம்வருணாச்சிரமதன்மமெனவருமித்தன்மம்
காசில்குணத்தன்மமொடுகழறினோர்பலரிவைகள்கற்றோரின்று
பேசியவித்தன்மத்தின்முதல்வருணதன்மத்தைப்பேசக்கேட்டி. ()

புண்ணியசன்மத்தராம் பூசுரர்தன்மஞ்சுருதி புகன்றயாகம்,
பண்ணுதல்பண்ணுவித்தல் பழமறையோதலோதுவித்தல் பரந்த
நன்னூல், கண்ணியதானங்கோடல் கொடுத்தலெனக்கட்டுரைப்பர்
காவல்வேந்தர்க், கெண்ணியதானங்கொடுத்தல் யாகமதுபண்ணு
வித்தலென்னச்சொன்னார். (உஎ)

---

22. புராதனத்திலல்லாது - இப்பொழுது நூதனமாக.
23. கையறவு - துன்பம்.
24. இந்திரியசித்தர் - இந்திரியங்களை வென்றவர்கள்.
26. வருணதன்மம் - சாதிஒழுக்கம்.

கோத்திரத்திற்கொள்ளல்விற்றல் கோக்காத்தலுழல் வேட்டல் வசியர்தன்மம்;சூத்திரர்க்குத்தன்மமவர்சிச்சுருடையெனவுரைப்பரதுசெய்யாது, காத்திரத்தையறவுலர்த்தித் தலைகீழாய்க்கான் மேலாய்த்தனக்குவாய்ந்த, சாத்திரத்திற்சொல்லாததவஞ்செய்வானல்வருமித் தவறேயென்றான். (உஅ)

அக்கிரமஞ்செய்தாரைவிதிமுறையே தண்டியாவரசனாட்டில்
எக்கிரமங்களுங்கலங்கிமழைகுன்றுமிருநதவத்துக்கருகனல்லன்
உக்கிரமாந்தவஞ்செய்கைகாரணமாயிம்மரணமுண்டாய்த்தென்ன
இக்கிரமவானமனத்தில்வெந்துயரம்விட்டிளையோற்கினையசொனான.

நெஞ்சிடைவெந்துயராற்றாப் பாரியொடுமறையோனை நீபோய்த்தேற்றித, துஞ்சியமைநதனைத்தயிலத்தோணியினி விடுவித்தியென்னச்சொல்லிக், கஞ்சநபனக்கனிவாய்க்கார்வண்ணன்கதிரவன்றனொளியிற்காட்டி, விஞ்சொளியபுட்பகத்தின்மீதேறி மேற்றிசையின் விரைவிற்போனான். (௩௦)

குடதிசையும்வடதிசையும் குணதிசையுங்குறிக்கொண்டுநாடிப்பின்பு, நிடமிசையுங்காகுத்தன் றென்றிசைமேன் மாதவனைத் தேடிசசெல்வான், புடைபரந்தபுண்டரிகப் பூவணைமேற்பெடையொடு மன்னமங்கைவகும், தடமருங்குகான்மேலாய்த் தலைகீழாய்த் தவஞ்செய்வான்றனைக்கண்டான். (௩௧)

சிறைவாவறாங்குகின்ற சேதியெனத்தூங்குமவன் றனைச் சேர்ந்து, குறையாதபேரழகுக் கொண்டனிறக்கருணைநெடுங்கோமான்கூறும், மறையவனோமன்னவனோ வைசியனோசூத்திரனோ வாக்காற்பொய்ம்மை, அறைபாதிங்குனையுள்ளபடியெல்லாம் பகர்தியெனவவனும்பன்னும். (௩உ)

தும்பைமலர்த்தொடையலினாய் சூத்திரயோனியில்வந்துதோன்றியுள்ளேன், சம்புவனென்பவனென்பேர் தவஞ்செய்யுங்காரணமிசசரீரத்தோடும், உம்பருறைபொன்னுலக முறவென்றானுறைவாளையுருவியோச்சிக், கம்படியில்விழவெறிநதான்கருமுகிற்போற்றிருமேனிக்கமலநாபன். (௩௩)

---

28. சிச்சுருடை - ஊழியம்.
29. அருகனல்லன - அதிகாரியல்லாதவன்.
30. துஞ்சியமைந்தனை - இறந்த பார்ப்பனச் சிறுவனை.
31. குடதிசை - மேற்றிசை. குணதிசை - கிழக்குத்திசை.
32. வாவல் - வெளவால். 33. கம் - தலை, படியில்விழ.

விண்ணவர்பூமழைபொழிய வேதியராசிகள்கூறவேலைசூழ்ந்த, மண்ணதனினிகழ்வருணதன்மத்தை வரம்பழித்து நின்கைமாண்டேன், புண்ணியஞ்செய்தோரெண்ணும் பொன்னுலகும்புகலரிது புரைதீர்நின்னுள், கண்ணியதோர்வரம்வேண்டிக் கொள்ளென்னக் கார்மேனிக்கண்ணன்கூறும். (௩௪)

மறுகுபெருந்துயருடைய மறையவன்சேயத்தலத்தின் மாண்டோனுவி, பெறுவகைவேண்டுமெனெனப்பெருந்தவனுமவனுவி பெற்றனென்றான், செறிவலியிந்திரனுதி தேவர்களுஞ்சீதரனுந் தீயபாவம், குறுகரியமாதவருங்குறுமுனிவாழ் தவவனத்தைக்குறுகினரால். (௩௫)

மறைமிகநல்லறநதழைக்கவாளவுணர்குலமுழுதுமறைந்துநாசம்
உறவெழுஞாலம்பிழைக்கவொருகுடங்கையால்வேலையெழுமுண்ட
அறமுனிவனுச்சிரமமணுகினராலடலரக்கன்றலையீரைந்தும்
இறமுனியுஞ்சிலையோனுமிந்திரனேமுதலானவிமையோர்யாரும். (

வாசவனேமுதலானோர்மாதவத்தோர்விதிமுறையோர்மகிழ்ந்துசெய்த, பூசனைகொண்டாங்கவர்கள்பொன்னுலகிற்போயினபின் புரைதீருள்ளக், கோசலைநாடன்காணக்கொண்டாடிப்பூசித்துக்குசலவார்த்தை, பேசியினிதிருந்ததற்பின் பெருந்தவத்தோனிவையிவைபின்புபேசும். (௩௭)

வேறு.

கொற்றவில்லிதனதுகொடுத்தலின்
மற்றொருத்தர்மகிழ்ந்துகொடுத்திடப்
பெற்றதீதிபெறும்பலபாத்திரம்
உற்றபோதெனவோதினர்வேதியர். (௩௮)

வானவர்க்கன்றிமண்ணுலகத்தில்வாழ்
மானவர்க்கும்வகுக்கவொண்ணாதது
தானவப்பகையாகியசார்ங்கிநீ
ஆனதற்பினினக்கணியாவது. (௩௯)

நீடுமாநிலத்தில்லதுநீண்மறை
பாடுபங்கயத்தோனுலகுள்ளது

35. சீதரன் - திருமறுமார்பன். 36. இற - அற்றுவிழ.
37. புரைதீர் - குற்றமற்ற. குசலவார்த்தைசேமவசனம், வசனம். 38. பாத்திரம் - தக்கோர், தகுதியுடையோர்.

தேடருஞ்சுடர்ச்செம்மணிப்பூணிது
கோடியென்றுகொடுத்தனன்கோதிலான். (௪௦)

அந்தவாபரணங்கண்டவாழியான்
உந்துதீவினையோர்முன்புனக்கிது
தந்துளோன்றனைச்சாற்றெனத்தன்னிடை
வந்தகாரணமாமுனிகூறுவான். (௪க)

விரிந்ததானைவிறலரக்கன்றலை
பருந்துநாயும்பகுநதுணப்பண்டுபோர்
புரிநதுளாய்முன்புகுந்ததுகேட்டியான்
அருந்தவஞ்செயவாமிடநதேடுவென். (௪௨)

சிங்கமாதிதிரியக்கியோனிகள்
தங்கிடாததுசார்புள்ளகன்றது
துங்கமானுடர்தோற்றமிலாததோர்
கொங்குலாமலர்ச்சோலையைக்கூடினேன். (௪௩)

அன்னகானகத்தம்புயப்பூவணை
அன்னம்பேடையொடன்போடுறங்குவ
தன்னகங்கடமூவியதாழ்கடல்
அன்னபூந்தடவாவிகண்டேனரோ. (௪௪)

ஆயவாவிமருங்கிடையாருமில்
தூயவாச்சிரமங்கண்டுதுன்னிருள்
மேயவல்லதிற்றங்கிவிடிந்தபின்
காயமாகவொருசவங்கண்டனென். (௪௫)

அன்னகாலையரம்பையராடிட
மன்னுமாதவர்சூழ்தரமாகதர்
துன்னியேத்திடத்தும்புருநாரதர்
என்னபோவெனவெங்கணும்பாடிட. (௪௬)

இந்திராதியிமையவர்போற்றிட
வநதுதோன்றினன்மாமணித்தேரின்மேல்
அந்தரார்விமானத்தடந்தேரினன்
றிந்தமன்னனிழிநதிதுசெய்தனன். (௪௭)

சாரவந்தச்சவத்தினைத்தன்வாயி
ரூரவுண்டுபெயர்த்தணிபொய்கையில்

43. கொங்குலாம் - மணந்தங்கிய. 48. சவம் - பிணம்.

வாரிமொண்டுகுடித்துவாய்பூசிநற்
றேரிலேறிப்புகுதலுஞ்செனறியான். (சஅ)

தேவவிச்சவந்தின்றிடக்காரணம்
நீவிளம்புதிநின்பெயரேதுநீ
யாவனென்னவெழின்மணிப்பூணினேன்
பாவநாசவெனக்கிவைபன்னினன். (சகூ)

வேறு.

துங்கவரைத்தோள்வெற்பன்னசுவேதனென்போன்றொல்லுலகோ
தங்குபுவனமீன்றெடுத்தாய்போகம்வளர்தந்தோன்றனக்குரிய [ர்
மங்கைமாரின்மூத்தவடன்வயிற்றிலுதித்தேன்சுவேதையென
எங்குநிகழ்பேர்மின்னனையாளீன்றாள்சுவேதனென்பானை. (ருo)

எந்தவானமெய்தியபினீரைஞ்ஞூறாண்டெறிகடல்சூழ்
அந்தஞாலமினிதாணடிங்கெல்லாப்பகையுமறுத்தென்பின்
வந்தசுவேதற்கரசளித்துவருந்திமூவாயிரத்தாண்டு
சிந்தையொருங்கியருந்தவங்கள்செய்தகாலத்தினையடைந்தேன். ()

இந்தவனத்திநெடுங்காலம்யான்செய்தவத்தாலெய்தரிய
அந்தணளன்பேருலகமடைந்துமருநதாகமும்பசியும்
வந்துநலியமழைவண்ணமாயோன்றனதுதிருவுந்தி
தந்தமலரோன்றன்னுடையதாளில்வணங்கியிவைசொன்னேன். ()

பெறுதற்கரியவிவ்வுலகம்பெற்றும்பெருந்தாகமும்பசியும்
உறுதற்கென்காரணமினியானுண்பதேதென்றிடநெஞ்சில்
இறுகத்தனத்தாலிரப்போருக்கிட்டுணாதேயுன்வயிறும்
பறியைத்தூர்த்துவளர்த்ததனாற்பசிநோய்நின்னைப்பற்றியதால். ()

பன்னுமறையின்பொருடெரிந்துபடைத்தோன்பின்னுமிவைபகரும்
பின்னுந்தருவாரவ்வனத்துன்பிணத்தைநீயேபசிதீரத்
தின்னமாளாதுவளருஞ்சென்றுநின்னிற்குண்டமுனி
தன்னைக்கண்டாலின்பசியுநதாகமும்போமெனவுரைத்தான். (ருச)

அன்றுதொடங்கியின்றளவுஞ்சுமநதமாயவிப்பிணத்தைத்
தின்றுதிரிநதேனென்பசியைதீர்த்தியென்றானதுதீர
நன்றுபிழைத்தேனெனவுவந்திங்கல்லாபரணமெனக்கீந்து
வென்றிவீரன்விமானத்துவிண்ணோர்சூழவவன்போனான். (ருரு)

---

வாரி - நீர். 51. எறி - அலைவீசுகினற.

52. அந்தணளன - பிரமதேவன்.

53, பறி - பெருங்கூடை. 54. குண்டமுனி - அகஸ்தியர்.

இன்னதாமிவ்வாபரண்மென்பால்வந்தவழியென்று
பன்னுவேததமாமுனிவன்பகரப்பரமன்வியப்பெய்தி
மன்னுமிருகம்பறவைநரர்வழங்காதொழிதலிவ்வனத்தில்
என்னநிமித்தத்தாலிதுநீயியம்பென்றியம்பமுனியியம்பும். (ருசு)

தண்டனென்போன்மனுகுலத்தோன்றருமந்தயாவொன்றில்லாத
மிண்டனவன்றன்புரோகிதனும்வெள்ளிதவஞ்செய்வனநண்ணி
வண்டுபடும்பூம்பொழிலிடத்துவளர்சீரந்தமுனிமகளைக்
கண்டுகாமபரவசனாய்க்கலங்குநெஞ்சன்கருதுவான். (ருஎ)

செந்தாமரைமேற்றிருமகளோதேவருலகினிழிந்துபுவி
வந்ததெய்வமடமாதோமண்ணிற்பிறந்தமணிவிளக்கோ
அந்தாமரையின்முகத்தினளாரோவறிகிலேனென்று
சிந்தாகுலமாய்த்தேர்மன்னன்பின்னுமினையசிந்தித்தான். (ருஅ)

பஞ்சினடியோவணிகுறங்கோபழிப்பில்பணத்தேரல்குலோ
வஞ்சியிடையோவனமுலையோதாளோகழுத்தோமதிமுகமோ
நெஞ்சுகவர்ந்ததேனைத்தரளநிரைத்தபவளச்செவ்வாயோ
நஞ்சுகலந்தவேல்விழியோநறுமென்குழலோவறியேனே. (ருகூ)

என்றுகலங்கியவள்பால்வந்தெழுதவரியவெழிலுடையோய்
ஒன்றுதவத்தாலுனைப்பெற்றோன்பேரோடுன்பேருரையென்ன
வென்றிவேற்கணிவள்விளம்பும்வெள்ளிமகனென்மேதினியில்
நின்றபுகழோய்சரையென்னநிகழ்பேரென்பேர்நிலத்தென்றாள். ()

கல்விற்செறிதிண்புயவேந்தன்காமசரத்தாலேவுண்டு
புல்லுக்கவ்விமான்றோற்கப்பொருவேல்விழியைப்பொதுப்புகழிற்
சொல்லுக்கஞ்சிக்கிளியொளிக்குந்துடிநேரிடையைத்தொழுதிரந்து
புல்லச்சென்றுபுகுமவளைப்பூவைகண்டிங்கிவைபுகன்றாள். (சூக)

எந்தைசீறிலேழுலகுமிமைப்பிற்பொடியாமென்னுரைகொண்
டிந்தவிடத்துநில்லாதேயிப்போதேநீயேகென்ன
அந்தவவள்சொற்கொள்ளாதேயநங்கசரத்தாலறநொந்து
வந்துமடவாள்குழல்பற்றிவலிதிற்புணர்ந்தாங்கவன்போனான். (சூஉ)

அன்னதீயோனேகவவளலக்கணோடுமாச்சிரமந
தன்னின்மன்னிப்புகுந்தபடிதந்தைக்குரைக்கத்தாழ்குழலே

56. நிமித்தத்தால் - காரணத்தினல்.
57. மிண்டன - தடியன.
62. அறநொந்து - மிகவருந்தி,
63. அலக்கண் - துன்பம்.

உன்னையிடர்செய்தவனைநீயுரைத்தியென்னவொளிதிகழும்
பொன்னின்மணிகள்பொலிந்திலங்கும் பூணாள்புகுந்தபடிபுகன்றாள்.

அந்தவெள்ளியனலென்னவாலகாலவிடமென்னச்
சிந்தையெழுந்தபெருங்கோபந்தீராவிடும்பையென்மகட்குத்
தந்ததண்டன்வளநாடுந்தானுங்கிளையுந்திரமும்
வெந்துபொடியாய்வீழ்கவெனவெல்லாம்பொடியாய்வீழ்ந்தனவே.

அவன்றன்னாட்டிற்றண்டகமாமடவியாகியாரழலிற்
சிவந்தவெள்ளிசாபத்தானரர்புன்மிருகஞ்சேர்வின்றித்
தவஞ்செய்முனிவர்நெருங்குதலாற்சன்மத்தானமெனபேராய்
உவந்தகருணைபொழிவிழியாயுற்றதிதுமுன்பெனவுரைத்தான். ()

குண்டமுனியிவ்வகைகூறவெய்யோன்குடபாற்கடற்குளிப்ப
பண்டைமறைநூல்விதித்தவிதிப்படியேசந்தித்தொழின்முடித்து
வண்டுமுரலுந்துழாய்முடியான்வாய்த்ததவத்தோனொடுந்துயில்கொ
டெண்டிசாமண்டலமூடுமிருணீங்கியபின்னியைந்தெழுந்து. [ண்

சந்திதொழுதுதவத்தோன்றன்சரணவிணைகடாழ்ந்திறைஞ்சி
அந்தமுனியாசிகள்கூறவம்பொற்றேரின்மிசையேறிச்
சிந்தையுவந்துகொடிகட்டித்தெருவுதோறுமலங்கரித்து
வந்தநகரியெதிர்கொள்ளவள்ளலயோததிநகர்புகுந்தான். (கூஎ)

ஆ திருவிருத்தம் - கஎஎ.

---

## கரு-வது, அசுவமேதயாகப்படலம்.

மாத்திரைகடன்மண்ணோரைமனுமுதலாயதன்மம்
சாத்திரப்படிதப்பாமற்சரிப்பித்துசசகலத்துக்கும்
நேத்திரமாகிநின்றோனெடுநிலைவாயில்காக்கும்
வேத்திரக்கரத்தோன்றன்னைவிளித்திவைவிளம்பலுற்றான். (க)

எம்பியர்தம்மையின்னேகொணர்கெனவியம்பவந்த
அம்புயக்கண்ணனேவவாங்கவன்றலைமேற்சூட்டி
எம்பிரானிராமனும்மையழைததனனென்னவந்தத்
தம்பியர்தவிசினின்றுந்தாம்விரைந்தெழுந்துபோந்தார். (உ)

---

65. சிவந்த - கோபித்த. 66. குண்டமுனி - அகத்தியன்.
1. மாத்திரைக்கடல்-பெரிய அலைகளையுடைய சமுத்திரம். வேத்திரம்-பிரம்பு.

தாமரைப்பெருங்கானத்துத்தையலோடுறைந்தசெய்ய
தாமரைத்தடங்கணானைத்தண்ணுறுஞ்சுரும்புசார்ந்த
தாமரைக்காணுமாசைதள்ளுறத்தம்பிமார்கள்
தாமரைக்கணத்தின்வந்துதாழ்ந்தினிதிருந்தகாலை. (௩)

அன்னதம்பியரையண்ணலருட்கண்ணாற்குளிரநோக்கி
என்னுயிரனையவும்மாவிராசசூயந்தான்செய்ய
உன்னினனென்னலோடுமுறக்கநீத்திரேழாண்டு
தன்னைமுன்காத்தவென்றித்தடஞ்சிலைத்தம்பிகூறும். (௪)

சொற்பொருடெரியாமைந்தன்சொல்லியகுதலைச்சொற்கள்
பெற்றதாய்க்கினியவாகும்பெற்றிபோற்பெருஞ்சொனன்னூல்
கற்றறிவொன்றுமில்லேன்கழறிடுமிந்தப்புன்சொல்
கொற்றவாவின்சொல்லாகக்கொள்ளுதியென்றுகூறும். (௫)

பொன்னையேநோக்கிநிற்பர்பொதுவிலைமகளிர்மாரி
தன்னையேநோக்கிநிற்குந்தரணியிற்பைங்கூழ்தந்த
அன்னையேநோக்கிநிற்குமரும்பெறற்குழவியன்ன
நின்னையேநோக்கிநிற்குநீணிலத்துயிர்களெல்லாம். (௬)

அன்றியுமரசர்க்கெல்லாமாவிநீயவர்களோடு
கன்றியேபொருதுவென்றுகாவலர்தனங்கள்வாரி
இன்றுநீபிராயசூயஞ்செய்வதிலிறைவசால
நன்றயமேதஞ்செய்கையதனையானவிலக்கேட்டி. (௭)

சத்திபைம்புலன்கள்வென்றதபோதனனுந்ததீசி
அத்தியாங்குலிசத்தாலேயடல்விருத்திரனைக்கொல்லத்
தொத்தியபாவந்தன்னாற்றுளங்கியசுரேசன்பண்டு
சுத்தனானதுதான்பண்ணுந்துரகமகத்தாலென்றான். (௮)

கொற்றவன்பாலிசூலிகோமகன்கொம்பனாளாய்
மற்றவன்தேவிசொன்னவாக்கினான்மைந்தனாய
பொற்றொடியாயதிங்கள்புதனுக்குப்புரூரவாவைப்
பெற்றபின்சாபநீங்கப்பெற்றதிப்பரிமேதத்தால். (௯)

ஆதலாலயமேதத்தையழகிதென்றிருந்தேன்செய்கை
தீதிலாக்குணத்தோயென்றுசெப்பவுண்மகிழ்ந்துசெப்பும்

3, தாம் [தாவும்] மரை - மாலையினுடைய இராமபிரானை. தாம் அரைக் கணத்தில்.
7. நன்று - அயமேதம் 'அசுவமேதம்'
8. அத்தி - எலும்பு. துரகமேதத்தால் - அசுவமேதத்தால்.

ஆதியாயநந்தகோடிமுட்டையிட்டளவில்வேதம்
ஓதியவண்ணமான தன்னைத்தானுணர்கலாதான். (௧௦)

வளைபயில்கடல்சூழ்மண்ணின்மன்னரைச்செருவிலோட்டி
உளைவனசெய்யும்வேள்வியொழிந்தனமென்றுஞ்செப்பி
விளைபொருளுணரவல்லோய்விளம்பியவயமேதத்தின்
அளவறுபெருமைகேட்டமதனையேசெய்துமென்றான். (௧௧)

சந்திரனனையகொற்றத்தனிக்குடைநிழற்றப்பாராள்
இந்திரைகொழுநனெல்லாவிலக்கணமுடையமாவை
மந்திரவிதித்தோர்தம்மான்மந்திரிப்பித்தமாவைத்
தந்திரந்தாங்கவேவித்தரணியிற்போகவிட்டான். (௧௨)

சிந்தையாலயமேதத்தைச்செய்வதாநினைந்தேன்சீரார்
அந்தணரெனக்குத்தெய்வமாதலாலகத்தியாதி
நந்தலிறவத்தோரெல்லாநைமிசாரணியந்தன்னில்
வந்ததுமுடித்துப்போகவருகவென்றழைத்துவிட்டான். (௧௩)

நன்னெறிவேள்விகாணநைமிசாரணியந்தன்னில்
இன்னநாள்வருகவென்றாங்கிலங்கைமன்னவற்குமாவி
அன்னசுக்ரீவனுக்குமநுமற்குமடன்மன்னர்க்கும்
செந்நெறிக்குகற்குமண்ணறிருமுகஞ்செல்லவிட்டான். (௧௪)

வேறு.

வரமுனமுனிவரைவானரேசனை
அரணுடையனுமனையங்கதன்றனைத்
தருநிகர்சத்துருக்கினனைத்தாவெனச்
சுரமலியவ்விடைத்தூதர்போக்கினான். (௧௫)

துனிபரிநெடும்பரித்தூதர்கூறலும்
முனிவருமமரருமூரித்தானையும்
வனைகழலிளவலும்வானரேசனும்
அனுமனுமரக்கனுமயோத்திமேவினர். (௧௬)

வேறு.

பொருதிரைக்கடற்கணீரும்புண்ணியநதிகணீரும்
தருகநீரென்றுசெய்யதாமரைத்தடங்கணுதன்

---

11. வளைபயில் - சங்குதங்கிய.
12. தந்திரந்தாங்க - சேனைகாக்க.
13. நந்தலில் - கெடாத.
15. வரமுனிவரை - வரந்தருந்தவமுடைய முனிவர்களை. வரம் - சிரேட்டமுமாம்.

துரகமேதப்பேர்வேள்விதொடங்குநாளின்றேடேழு
சரதமாமென்றுநாடுநகரமுஞ்சாற்றச்சொன்னான். (௧௭)

மந்தரமலைமத்தாகவாசுகிகயிறதாகச்
சந்திரன்றாணதாகத்தடங்கடறாழியாகச்
சுந்தரத்தோள்களாலேசுதையெழக்கடைந்ததூயோன்
இந்திரன்பகைவற்கொன்றவிளவலுக்கிளையசொன்னான். (௧௮)

சீலமாதவரும்யாமுஞ்சிறந்தவோமஞ்செய்யாக
சாலையுமனுமானுக்குந்தபனன்மைந்தற்குந்தாழ்ந்த
மாலைதாழ்முடிமன்னர்க்குமவானரப்படைவேந்தற்கும்
கோலவீடணற்குமாடங்குறைவறச்சமைப்பியென்றான். (௧௯)

நன்றெனவவன்போந்தநைமிசாரணியநண்ணி
ஒன்றியபலவேர்பூட்டியுழுதொக்கநிலஞ்செய்வித்துத
தன்றுணையற்றவேள்விச்சாலையுஞ்சமைப்பித்தோங்கும்
குன்றுறழ்மாடகூடகோபுரஞ்சமைத்துப்பின்னும். (௨௦)

மணிமுடிமன்னர்க்கெல்லாமாடகூடங்கள்செய்வித்
தணியுடைச்சேனைக்கெலலாமகஞ்சமைப்பித்துவந்தோர்
தணிபெருஞ்சோற்றுச்சாலைசார்ந்தவர்விடாயுங்கூடப்
பணிநறுந்தண்ணீர்ப்பந்தர்முதலெலாஞ்சமையப்பண்ணி. (௨௧)

ஆவணவீதிதோறுமணிபெறுகதலிபூகம்
தூவணக்கொடியுநாட்டித்தோன்றுதோன்றிடங்களெல்லாம்
காவணம்பரப்பிவெள்ளைமணலிட்டுக்கலங்காவாற்றல்
ஏவணச்சிலையோன்வந்தங்கிராமனுக்கிளையசொன்னான். (௨௨)

அமைந்ததுவேள்விச்சாலையண்ணலேயுனக்குக்கோயில்
சமைந்ததுமன்னர்க்கெல்லாந்தாவளஞ்சமைந்ததென்ன
நமைநதமரிடத்துநண்ணார்நண்ணிடநாகநாளும
சுமந்தபூபாரந்தீர்த்ததூயவனீதுசெய்தான். (௨௩)

ஆயிரகோடிபொன்னுமத்தொகையமைந்தகோவும்
ஆயிரகோடிபாரமரிசியும்பயறுமெள்ளும்
ஆயிரகோடிபண்டிகறிகளுமிளகுநெய்யும
ஆயிரகோடிபொன்செய்பாவையுமடங்கக்கொண்டு (௨௪)

---

18. சுதை - அமுதம்.

20. துணையற்ற - ஒப்பற்ற.

23, தாவளம் - இரும்பிடம், தங்குமிடம் 'திசைச்சொல்.'

பரதனும்பதினுலாண்டுபகலிராவுறக்கநீத்த
விரதனுமுன்னர்ப்போகவிடைகொடுத்தருளிப்பின்னர்ச்
சுரதனமாயவேள்விதொடங்குநாளின்றேடேழு
சரதமென்றெழில்கொணடுநகரமுஞ்சாற்றச்சொன்னுன். (உரு)

வென்றிகொளிராமன்வேள்விதொடங்கியவிதித்தநன்னுள்
இன்றுடனேழுநாளென்றெறிபறையறையக்கேட்டுக்
குன்றுயர்செம்பொன்மாடங்குலவியநகருநாடும்
ஓன்றியவேலையென்னவொலியதுபெருகிற்றன்றே. (உசு)

வேறு.

குறையொன்றில்லாக்கோசலநாட்டிற்சனமெல்லாம்
இறைவன்வேள்விகாணவிசைந்தோரெங்கெங்கும்
நிறைபொற்கும்பமுடனெய்விளக்குநின்றேந்தி
உறைசீர்மாடத்தொண்ணகரஞ்சென்றுறுவாரும். (உஎ)

கேதுவிளங்குங்கேழ்கிளர்செம்பொற்குலைவாழை
சோதிவிளங்குந்தோரணமெங்குநடுவாரும்
வீதிகடோறும்வெண்மணலெங்கும்விடுவாரும்
வேதிகைமாடவாயில்விதானமிடுவாரும். (உஅ)

காலையுதித்தஞாயிறுபோலக்கனகத்தால்
கோலநிரைத்தமாளிகைதோறுங்குடம்வைத்து
மேலொளிமுத்தின்றுமமிரைத்துகிகுபைம்பூ
மாலைநிரைததேகாவணமிட்டேமகிழ்வாரும். (உகூ)

சாலைகடோறுங்கோவலர்நெய்பாறயிர்வெண்ணெய்
கோலநெடுங்காவிற்கொணர்வாருங்குறைவற்ற
வாலரிசித்திண்பண்டிகள்கொண்டுவருவாரும்
மூலபலங்காயங்குளமுற்கநதருவாரும். (௩௦)

வண்டாரைம்பான்மங்கையர்கண்ணுமனமுந்தாழ்
தண்டார்நாதன்சாலைகடோறுஞசபைவநதங்
குண்டாருண்டுமிக்கநல்சோறுமுயர்வெற்பின்
கண்டார்கண்டகண்டிடமெங்குஞ்சொரிவாரும். (௩௧)

---

25. சுரதனமாய - தேவர்களினசெல்வமான.

29. காவணம் - நடைபந்தல்.

30. குளம் - வெல்லம். முற்கம் - பயறு.

வந்தவரைச்சீர்மாநகருள்ளோர்மகிழ்வுற்றுத்
தந்தமனைக்கேகொண்டுபுகுந்தார்சனமெல்லாம்
சிந்தையுவப்பவின்னமிழ்தாயதினிதூட்டிச்
சந்தனமப்பித்தண்ணுறுமென்பூத்தருவாரும். (௩௨)

சூதனகொங்கைச்சோருமிடைச்செந்துவர்வாயொண்
பேதையர்நெஞ்செம்பின்செலவன்பிற்பிரிவாரை
வாதைசெயும்போர்மாரனுமஞ்சும்வடிவோர்மா
வீதிகடோறும்வீரர்விநோதம்பயில்வாரும். (௩௩)

கோழிப்போருங்கொண்டசினப்போர்த்தகர்முட்டும்
பூழிப்போருமஞசுதலின்றிப்பொருவோரும்
பாழித்திண்டோள்வீரர்பகற்கண்டிரவெல்லாம்
வீழிச்செவ்வாயார்கலவிப்போர்மிகுவாரும். (௩௪)

கொஞ்சுகிளிச்சொற்கோபவிதழ்த்தாழ்குழலார்தம்
கஞ்சமுலைக்கோலஞ்செய்வகண்டாடவர்தாழ
விஞ்சொலிநற்பூண்மேனிவிளங்கப்புனையாமென்
பஞ்சியடிக்குப்பல்லணியெல்லாமணிவாரும். (௩௫)

படர்ந்திருள்கேசப்பாரமதிற்பன்மலர்பெய்தும்
தடந்திகழ்கொங்கைசந்தமணிந்துந்தகவில்லோர்
வடந்திகழ்முத்தின்கோவையணிந்தும்வலியின்றி
நுடங்குமிடைக்குண்ணோவுகளேசெய்திடுவாரும். (௩௬)

ஆளியனார்தம்மாருயிர்கொள்வாரணிநாகக்
கோளறுமுத்தங்கோவைகுலைத்துத்தெரிவாரும்
காளையர்நெஞ்சங்கொள்ளமனத்திற்கருவிக்கண்
வாளிகளுள்ளேமையெனுநஞ்சமிடுவாரும். (௩௭)

மென்னுரைநுண்பட்டாடையின்மெள்ளவிரைசோநிக்
கன்னிரைபைம்பொற்காஞசியரைக்குப்புனைவாரும்
பொன்னுரைகல்விற்பொற்புரையென்னப்புனையாடி
இன்னுரைநல்லோர்தம்மெழில்கண்டுண்மகிழ்வாரும. (௩௮)

வள்ளலிராமன்வந்திலனோவந்தனனோவென்
றுள்ளிழையாரைவீதியிலோடவிடுவாரும்

---

33. சூதன - சொக்கட்டான காய்போனற.

34. பாழித்திண்டோள் - பரியதிண்ணியபுயங்களையுடைய.

38. கன்னிரை - அரதனமிழைத்த.

கள்ளவிழ்கோதைக்காரிகையாரிவ்வழிநண்ணப்
பள்ளிகொளாழிப்பைவிரிநாகப்பாணிப்பால். (௩௯)

வேறு.

அரக்கர்கள்குலத்தினையறுத்தவடல்வீரன்
நெருக்கினினடப்பரிதெமக்கெனநினைத்துச்
செருப்புரியெதிர்ப்படைபடச்சினவுவாளால்
முருக்கியகடற்படையைமுற்செலவுரைத்தான். (௪௰)

குன்றனையதேர்புரவிகும்பியொடுநாவல்
வென்றிபுனைவீரர்நெடுவீதிதொறும்விம்மிப்
பின்றுமெனமுன்பிலவர்போரவழிகாணார்
நின்றபடியேயவர்கணின்றனர்நெருக்கால். (௪௧)

ஒன்றியபெரும்படைகருங்கடலுடைந்த
தென்றுசொலலாகும்வகைவாயிருறுமேகித்
தூன்றியெழுதூளிபடலந்திசையைமூடித்
தென்றிசையின்மேலிணிதுசென்றதுபரந்து. (௪௨)

ஓய்வில்விசையோடுகடலோவிடுகலம்போல்
மேயமதிவெண்குடைநுரைச்சுழிகள்பாய
பாய்திரையுடைப்படர்படைக்கடலினுள்ளோ
போயினவிசும்புறுபொருங்கொடியபொற்றேர். (௪௩)

வெம்பியமனத்தனவிழிசதுணைமுகக்கார்
அம்புறநிறத்தனமுழக்கெனவசைக்கும்
கம்பமுறழ்கைக்கறையடிப்பிறைமருப்பின
கும்பிகளிருட்குவடெனக்கடிதுபோன. (௪௪)

கலன்கலனெனுங்கவின்விளங்குகனகத்தால்
பொலன்கொள்புனைபூண்கள்புரைதீர்ங்குரவனைவல்
விலங்குதவிலாதவரின்மேல்வருதநாதன்
புலன்செல்வழியாகவழிபோம்பரிகள்போன. (௪௫)

எடுத்ததழைசத்திரமிடைத்தவடையாளக்
கொடித்திகழ்தரக்கொலையயிற்கொலைஞர்சுற்றக்
கடற்படைசெருப்புரிகளத்தவியவொன்னார்
படைச்சிலைவளைத்தவர்படைத்தலைவர்போனார். (௪௬)

41. கும்பி - யானை.
46. தழை - பீலிக்குடை, சத்திரம் - வெள்ளைக்குடை.

இறந்தகருமங்கொடுவருங்கருமமெண்ணிச்
சிறந்தவரசன்கருமநாடியதுசெய்வோர்
அறந்தழுவுநெஞ்சினரசஞ்சலர்பிழைச்சொல்
மறந்துமொழியாதவர்கண்மந்திரிகள்போனார். (௪௭)

பூசுகமழ்சாந்தினர்புனைந்ததிகழ்பூணோர்
மாசறவிளங்குமணியாரமணிமார்பர்
தேசுடையவில்லிதிருவேள்வியதுகாணும்
ஆசையினராய்விரைவினுடவர்நடந்தார். (௪௮)

கஞ்சமலர்விஞ்சுகவினஞ்சியமுகத்தோர்
கொஞ்சுகிளிமென்சொலியர்கொங்கைகள்சுமந்தே
வஞ்சிபுரைநுண்ணிடைவருந்தவழிகாணா
மஞ்சர்கண்மனந்தொடரமங்கையர்கள்போனார். (௪௯)

தங்கள்விழியஞ்சியுழைதன்னினமொடோடப்
பைங்கிளிசொலஞ்சியினமோடவைபறப்ப
அங்கண்மயில்சாயலவையஞ்சியகலச்சீர்
பொங்குபுணர்பூண்முலையினார்கள்சிலர்போனார். (௫௦)

மதகளமுடுக்கைதமருங்குவரவானத்
துத்தமையுருப்பசியுமுட்குமுருவத்தோர்
சித்திரமணிச்சிவிகையோரரசரைந்த
மத்திரவிழிக்கொலைகள்செய்புமவர்போனார். (௫௧)

மண்ணின்மறுவற்றொளிர்மணிச்சிவிகைமீதே
நுண்ணிசையிலேமனநுழைநதிசையினுண்ணூல்
கண்ணினவர்தும்புருவுநாரதனுநாணப்
பண்ணிசைகலந்தவழிபாடுமவர்போனார். (௫௨)

குண்டிகையர்குந்துநடையோர்கள்குடையோர்கள்
தண்டினர்திரித்தகுடுமித்தலையர்சாரப்
பெண்டுகணடக்கைபிரமாதமெனவஞ்சிப்
புண்டரிகவள்ளலனபூசுரர்கள்போனார். (௫௩)

மூலமெனவாயவொருமூன்றுதொகையாலே
காலமொடுகோணிலையறிந்துகடிதாகிச்

---

47. இறந்தகருமம் - சென்றகாலச்செயல்.

49. மஞ்சர் - மைந்தரென்பதன்போலி ஆடவரென்றுபொருள்.

53. குந்துநடையோர் - பிராணிகள் படாவண்ணம் தாண்டிக்குதித்துச் செல்லும்செய்கையோர்.

சால்புடையசாயைசலசாதனமதாகக்
கோலியறிசோதிடவர்கூடியவர்போனார். (ருச)

இணைக்கருவிவித்தகரிசைத்தவழிநான்கும்
குணக்கிரியையெட்டுமறிகோதறுகுணத்தோர்
அணுத்தொகைகமலைச்செய்தசலத்தையணுவாக்கும்
கணக்கர்கண்மணிச்சிவிகையிற்கடிதுபோனார். (ருரு)

ஊனவுடல்கொண்டவர்களோடுவதுகண்டோர்
தேனனையவின்சொன்மடமங்கையர்சிரிப்ப
ஆனைபரிதேர்வரிலகப்படுதுமென்னுக்
கூனருமருங்குறளருங்கடிதுபோனார். (ருகூ)

மண்டலமதிர்ந்திடவழங்குவழியிற்கண்
நுண்டுகள்படச்சிகரிநூறுபடவெண்ணும்
எண்டிசைகளுங்கடகடென்னுமொலியெய்தப்
பண்டமவைபெய்தவுயர்பண்டிகள்பரந்த. (ருஎ)

கரிக்கொடுதிரட்டியவெனக்கரியமெய்யர்
பெருத்துயருதட்டையறவிட்டபெருவாயர்
சுருக்கமில்சரக்கைமலையிற்பெரிதுதூற்றுப்
பரித்தவளைசிக்கமொடுபப்பரவர்போனார். (ருஅ)

நன்றெனவிளங்கிடநடந்துசெலுமம்பொற்
குன்றின்மிசையேறுசிலகோலமயில்போலப்
பொன்றிகழ்மணிப்புரவிபூண்டபுனைதேர்மேல்
மன்றல்கமழ்வார்குழலினார்கள்சிலர்போனார். (ருகூ)

மேகநிறவண்ணல்பெருவேள்வியதுகாணும்
ஓகைதமையுந்தவணிபூணொளிபரக்க
வேகமொடுபோகுமுகின்மின்னினமெனக்கை
நாகவெரிந்மீதுசிலநாரியர்கள்போனார் (கூ0)

தாவிநிரையேவருதடந்திரைவிளங்கும்
தூவியிளவன்னவினமென்றுவமைசொல்லக்
கூவுகுயின்மென்சொலணிகோவைநிகர்வாயார்
வாவுபரிமீதுதிகழ்மாதர்சிலர்போனார். (கூக)

---

56. குறளர் - குள்ளர்.

58. சிக்கம் - உறி.

60. கைநாகவெரிந்மீது - துதிக்கையினையுடைய யானையின்மீது.

மூடுசிவிகைச்செலுமொருத்திமுகமுன்பே
வாடைகதுவித்திரையெடுப்பமழைமஞ்சின்
மாடுறவிளக்குமதியொத்தவெழின்மஞ்சு
கூடுமதியொத்ததுகுலைந்துதிரைவீழ. (சுஉ)

ஒன்றுகருமங்கிடையிலொன்றொழியவொன்றோ
வென்றிதிகழ்வில்லிபெருவேள்வியெழில்காணச்
சென்றகுமரர்க்குமணிதேமொழியினார்க்கும்
பின்றுறலிலாவகைவிளைந்ததுபெரும்போர். (சுங)

வென்றவர்களோடுவர்கள்வேறொருநிலத்தே
என்றுகொளலாமெழில்கொளேழையர்கணம்பால்
சென்றுபகைவென்றதிறலாடவர்களேவுண்
டொன்றுமறியாதுவழிநின்றனருளைந்தே. (சுச)

கஞ்சமலராளனையகாமினிகள்கண்ணால்
நெஞ்சுபறியுண்டுசிலவீரர்நெறிகாணார்
வஞ்சகமுமஞ்சமடமாதர்விழியென்னும்
வெஞ்சரமுநெஞ்சுறவுளைந்தனர்கள்வீரர். (சுரு)

தூமதிமுகத்தியர்களாடவர்துளங்கிப்
போமதிபலத்தொடுபடைத்தலைவர்காண
கோமதிநதிக்கரையினைக்குறுகவிப்பால்
மாமதிகொடொட்டரியமாயணிதுசெய்தான். (சுசு)

வேறு.

செந்நிறநளினச்சேவடியிரண்டுஞ்செறிகழல்செறிந்திடச்சேர்த்திப்,பொன்னிறவாடைபொலிவுறச்சேர்த்திப்புனைமணிக்கச்சரைபொருத்தி, மின்னிறவுடைவாளகச்சொடுவிசித்துவிளங்குசீருதரபந்தனத்துக், கன்னிறச்சோதிகதிரவன்சோதிகாட்டிடக்கவின்பெறக்கட்டி. (சுஎ)

அஞ்சனவரைபோலழகியமார்பத்தாரமும்பதக்கமுமணிந்து
மஞ்சணிவாகுவலயமதணிந்துமாமணிக்கடகமுஞ்சாத்திக்
கஞ்சநன்மலர்போற்கைவிரலாழிகடைச்செறிகவினுறச்சாத்தி [தி.
வஞ்சிபோலிடையார்மாலுறக்கோலக் கழுத்தினின்மணிவடஞ்சாத்

64. ஏழையா - பெண்கள்.
65. காமினிகள் - இச்சைக்கிசைந்தமாதர். உளைந்தனர் - வருந்தினார்கள்.
66. மாமதிகொடு - சிறந்த புத்தியினால்.
68. செறி - ஓர் ஆபரணவிசேடம்.

செந்துவர்வாயுந்தாமரைக்கண்ணும்புருவமுநெற்றியுந்திகழும்
சுந்தரவதனந்துலங்கிடவிலங்குஞ்சுடர்மணித்தோடுகள்சாத்தி
இந்திரநீலக்கற்றையைவிழுங்கியிரவிமண்டிலங்கருவரைமேல்
வந்துதோன்றியதுபோன்றிடத்திகழவளரொளிமணிமுடிசாத்தி.

திருமணிமார்பன்றன்றிருநெற்றிதிகழ்திருநாமமுஞ்சாத்தி
எரிமணிச்சோதியரியணைநின்றுமிழிந்திளையோர்கள்கைகொடுப்ப
வருமணியாரத்தவனியாண்மன்னனருள்வழிபுகுந்துபோவார்கள்
குருமணிமகுடகோடிகடேய்க்குங்கோபுரவாயிலைக்கடந்தான். (எ௦)

மத்தளமுடுக்கைபேரியொண்படகம்வளையொலிகொம்பொலிகாளம்
எத்திசைதோறுமுதொலிதாளத்தெழுமொலிதுடியொலியெங்கும்
வித்தகர்பாடும்பாட்டொலியாழின்விளையொலிசச்சரிதாளம்
ஒத்தொலியெல்லாமோரொலியாகியுவர்க்கடல்கிளர்ந்தெனவோங்க.

மங்கையர்வாழ்த்தமாகதரேத்தமறையவராசிகள்கூறப், பொ
ங்கியகடலிற்புடைபரந்திரைத்துப்பொன்னகர்சசனப்புடைசுற்றப்,
பங்கமில்வீரன்பங்கயக்கண்ணாற் பார்த்தபார்த்திடமெலாஞ்சனங்க
ள், செங்கரங்கூப்பத்தேவர்களுவப்பவேறினன்செழுமணித்திண்
டேர். (எ௨)

வேறு.

கம்புவைத்தரித்தகையிற்கார்முகந்தரித்தான்வந்தான்
அம்புயக்கண்ணன்வந்தானன்பருக்கன்பன்வந்தான்
தம்பியர்க்கினியான்வந்தான்றசரதராமன்வந்தான்
உம்பருக்கமிழ்தமுன்னாளுதவியவொருவன்வந்தான். (எ௩)

மனுகுலம்விளங்கத்தோன்றிவரிசிலையிளையோனோடும்
முனியொடுபோனான்வந்தான்முப்புரமெரித்தவில்லி
தனுவினையிறுத்துச்சீதைதனைக்கரம்பிடித்தான்வந்தான்
அனையவளுடனேமீண்டுமயோத்தியிலடைந்தான்வந்தான். (எச)

தாயுரைதலைமேற்கொண்டுதையலையுடனேகொண்டு
தீயவெங்கானஞ்சேர்ந்தசெருவலிவில்லிவந்தான்
தூயமாமுனிவன்முன்புதோன்றியதூயோன்வந்தான்
மாயமாரீசன்மாளவரிசிலைவளைத்தோன்வந்தான். (எரு)

---

72. பொன்னகர் - அழகிய அயோத்தி. 73. கம்பு - சங்கு.
74. முனியோடும் - விசுவாமித்திரனுடன்.
75. செருவலி - போர்வன்மை.

அனுமனையடிமைகொண்டாங்காயிரங்கதிரோன்மைந்தற்
கினியனாய்வாலிமாளவெரிசரந்துரந்தான்வந்தான்
நினைவதன்முன்னமாழிநீரெலாநெருப்பதாகக்
குனிசிலைவளைத்தான்வந்தான்கோசலைநாடன்வந்தான். (எசு)

குன்றினாலாழிகட்டிக்கொடுந்திறற்சேனையோடு
சென்றிராக்கதரையெல்லாஞ்செருக்களத்தவியநூறித்
தன்றிறலழிந்துநின்றதசமுகன்வலிமைகண்டங்
கின்றுபோய்நாளைவாவென்றியம்பியவிறைவன்வந்தான். (எஎ)

முன்னநாஞ்சொன்னநாளின்முடுகிநாஞ்செல்லோமாயின்
வன்னியின்பரதன்வீழுமென்றுதன்மனத்திலெண்ணி
அன்னவனெரிவிழாமலநுமனைமுன்னேயேவிப்
பொன்னகரடைந்தான்வந்தான்புவனமுன்றுடையான்வந்தான். ()

என்றுசின்னங்கடம்மிலிசைந்துடன்மாறியூதத்
தன்றுணையிலாதவென்றித்தசரதராமன்றேர்மேல்
பொன்றிகழ்மாடவீதிபுகுந்தனனென்னக்கேட்ட
வென்றிவேற்கண்ணினார்கடந்திறம்விளம்பலுற்றேன். (எகூ)

இந்திரசாலமொக்குமிடையினாரெய்தல்பெற்றோர்க்
கிந்திரபோகமொக்குமெழின்முலைத்தடந்தேரல்குல்
இந்திரகோபமொக்குமிதழினாரெதிர்ப்பட்டோருக்
கிந்திரசாபமொக்குமிருகுழையெறியுங்கண்ணார். (அ0)

இந்திரசாபமொக்கும்புருவத்தாரிருண்டுநெய்த்த
இந்திரநீலமொக்குங்குழலினாரெழுதவொண்ணா
இந்திரவடிவையொக்கும்வடிவினாரெதிரிலாற்றல்
இந்திரதிருவற்காணவெழுந்தபேருவகைமிக்கார். (அக)

சிலம்புகள்சிலம்பச்செம்பொற்சீறடிசிவப்பக்காஞ்சி
குலைந்திடமருங்குலைவக்குவிமுலையசையக்கூந்தல்
அலைந்திடவலம்புசோதியணிகளோடணிகடம்மின்
மலைந்திடவருந்தியோடிமங்கையர்மறுகின்மொய்த்தார். (அஉ)

---

80. இந்திரகோபம் - செந்நிறமுள்ள பட்டுப்பூச்சி. இந்திரசாபம் - வானவில்.

81. இந்திர - இந்திரை, திருமகள்.

82. சிலம்ப - முழங்க. காஞ்சி - ஒரிடையணி.

பேதையராதியாகப்பேரிளம்பெண்களீறா
மாதர்கண்மாடந்தோறும்வாயில்கடோறுமாட
வீதிகடோறும்வீதிவேதிகைதோறும்விம்மிச்
காதலானதுமிக்கோங்கக்கண்ணனைதெரியக்கண்டார். (௮௩)

வண்ணமாமுகிலோமையோமரகதவடிவோவள்ளல்
ஒண்ணிறமிவையொன்றாகவுருக்கியவுருவோவென்பார்
கண்ணிணைசெவ்வாய்பாதங்கைத்தலங்கமலமென்பார்
புண்ணியஞ்செய்தாரிந்தப்புறக்கொடைதொழுவாரென்பார். (௮௪)

கள்ளமாமனக்கைகேசிகண்களாலிவனைக்கண்டும்
முள்ளழற்கானத்தேதவமுயன்றனளென்றோவென்பார்
ஒள்ளழற்றாயகற்பாலுயர்ந்தகோசலையென்பாளிப்
பிள்ளையைப்பெறுதற்கென்னபெருந்தவஞ்செய்தாளென்பார். ()

சிறந்தசீர்முகமுங்கண்ணும்புருவமுஞ்செய்யவாயும்
நிறைந்தபூண்மார்புமெங்கணெஞ்சுவிட்டகலாதென்பார்
அறம்புரிமனத்தளாகியருந்தவஞ்செய்துபெண்ணாப்
பிறந்திலளிவளைப்பெற்றும்பெற்றிலள்சீதையென்பார். (௮௬)

பங்கயக்கண்ணாற்பற்றிப்பார்த்தனனம்மையென்பார்
அங்கவைபொதுநோக்காகுமவனியில்வந்துதோன்றும்
செங்கயற்கருங்கட்செவ்வாய்ச்சீதையைப்பார்த்தகண்ணால்
நங்களைப்பார்க்குமோதான்ஞாலநாயகனின்றென்பார். (௮௭)

கயனெடுங்கண்ணாரிவ்வாறுரைத்திடச்சிலவர்காதல்
மயலுறக்கண்ணன்றன்மேல்வைத்தகண்வாங்கமாட்டார்
துயருறுமனத்தராகிவளைகலைசோரத்தங்கள்
செயலறச்சேட்டையற்றுச்சித்திரமென்னலானார். (௮௮)

கொங்கணைகுழலோர்மங்கைகொண்டலைக்கண்டாள்காமன்
வெங்கணைநிறத்திற்பாயமென்மயில்போலவீழ்ந்தாள்
அங்கணைபுடையோர்தாங்கியரிதினிற்கொடுபோய்மாதர்
பொங்கணைக்கிடத்திசீதப்புனன்முகந்தெளித்துந்தேறாள். (௮௯)

---

83. பேதையர் - ஏழாட்டைப்பெண்டீர். பேரிளம்பெண் - முகிரிளமாது. இவள் - முப்பானிரண்டிற்கு மேற்பட்ட வயதினள்.

84. புறக்கொடை - வெளிக்காட்டுங் காட்சி.

87. பொதுநோக்கு - ஒருவரையுஞ்சுட்டாது பார்த்தல்.

89. கொண்டலை - இராமனை. நிறத்தில் - மார்பில்.

கனக்கருநிறத்தினுனென்கண்யவழி தனுல்வந்தென்
மனத்திடைப்புகுந்தான்வந்தவழியவன்போகிற்பின்னை
எனக்கவன்பிடிக்கொடானென்றிமைக்கதவடைத்தாளேழை
நினைத்ததுமுடித்தேனென்றுநெடுநிலைமாடம்புக்காள். (௯௦)

பேதையங்கொருத்தி தன்கைபெய்வளைகழலநின்றாள்
ஆதலாற்றெழுதேனென்கையணிவளைகொண்டானென்கண்
ஈதவன்கருணையான்சென்றிரந்திடத்தாரானேலென்
வாய்தலிலவனேவந்தால்வளைக்குநான்வளைப்பேனென்றாள். (௯௧)

புனமயிற்சாயற்பைம்பொற்பூண்முலையொருத்தியந்தச்
சனமுடைத்தெருவைவிட்டுத்தசரதராமனென்றன்
மனதிடைத்தனியேவந்துபுகுந்துநானுறங்கும்போழ்து
கனவிடைத்தோன்றுமேதான்கருத்தினைமுடிப்பேனென்றாள். ()

இவ்வண்ணமடவாரெல்லாமினவளைகலைகள்சோரச்
செய்வ்வண்ணமறியார்தங்கள்சிந்தைதமாலாகிநிற்ப
மைவ்வண்ணமுகிறேய்மாடவளநகர்வாயினீங்கி
உய்வ்வண்ணமுலகையெல்லாமுண்டுமிழொருவன்போனான். (௯௩)

ஆனைதேர்புரவிகாலாளடியிடவிடம்பெறாத
சேனைமாகடல்தற்சூழச்சிறந்தவர்மருங்குசெல்ல
வானமுமண்ணுமெல்லாம்வளர்துகள்கதுவமன்னர்
கோனகர்நாதன்சென்றுகோமதிநதியையுற்றான். (௯௪)

வேறு.

நாயகன்யாகசாலையினழகுநானிலமன்னவர்முதலோர்
ஆயவர்க்கெல்லாமமைந்ததோரிடமுமவரவர்க்கிட்டகாவணமும்
வாயிலுமறுகுமன்றமுங்கண்டுமகிழ்நதொளிதிகழுமால்வரையை
ஏயுமண்டபத்தினிளையவர்சூழவினிதிருந்தருளியகாலை. (௯௫)

வேறு.

காரைநெருங்குகொடையங்கர்வங்கர்கலிங்கர்காம்போசர்
வீரராயபாஞ்சாலர்விலாடரிலாடர்விறன்மிக்க
சூரர்சீனாமகதேசர்தோலாவென்றியாதவர்கள்
சேரசோழபாண்டியர்கள்சிந்துமன்னர்திரிகர்த்தர். (௯௬)

---

91. வளைப்பேன் - தடைசெய்வேன.

96. தோலா - கெடாத.

காதுவைவேற்காம்பீரர்கங்கர்கொங்கர்கருநாடர்
சேதிமன்னர்குருமன்னர்சிங்களேசர்வந்திகர்
சோதிமணிமாமுடிச்சனகர்துருக்கர்துளுவரெனவிவர்கள்
ஆதியாயமுடிமன்னரளவில்சேனையொடும்வந்தார். (கூஎ)

தன்னில்வலியோரிலாவனலனிலனரன்சீர்ச்சம்பாதி
என்னுமமைச்சர்புடைசூழவெதிரிலாதசேனையொடும்
மின்னுமணிமாமுடிசசோதிவெய்யோனுதயவெயில்விரிப்ப
மன்னனிராமன்பெருவேள்விகாணவலிவீடணன்வந்தான். (கூஅ)

சங்கன்குமுதன்சதவலிபோர்த்தாரன்சாம்பன்சரபன்போர்ப்
பங்கமிலாதவங்கதன்றன்சங்கன்பனசன்பாருலகில்
எங்கும்வலியேறியநீலனிடபன்கவயனெறிகடலைத்
தங்கவணைசெய்தவன்மயிந்தன்றுமிந்தன்றுசிரன்றன்மகுடன். ()

ஊழிநெருப்புங்காற்றும்போலுடன்றுபொருகேசரியாதி
பாழிமிக்கபடைத்தலைவர்பக்கஞ்சேவித்துடன்போத
ஏழுபத்தின்பெருவெள்ளமென்னுந்தகைவானரச்சேனை
சூழவென்றியனுமனுடன்சுக்கிரீவன்றோன்றினன். (க00)

ஆசையற்றதூயநெஞ்சத்தாங்கீராவத்திரிமாயைக்
காசையற்றஞானக்கட்காசிபன்கோசிகன்விதனப்
பாசமற்றசமதக்கினிபரத்துவாசன்கோதமன்பூ
நேசமற்றோர்மற்றோருநெடியதவத்துச்சாபாலி. (க0க)

காயங்குறியநெடுநதவத்தோன்கண்ணுவன்றௌமியன்கனலின்
தூயனுயபுலதியன்றன்சுவத்திதவத்தைத்துரந்தழிக்கும்
தீயபுலன்களைந்தடக்கித்தெளிந்தஞானப்பிருகுமுதல்
ஆயமாயப்பிறப்பறுத்தோரகண்டவேதங்கரைகண்டோர். (க0உ)

கையிற்றிகழும்பவித்திரர்கள்காதிற்றாங்குங்குண்டலத்தர்
மெய்யிற்றிகழ்ந்துதோன்றௌளியர்விளங்குமறையின்மரவுரியர்
பொய்யிற்புரளாநாவினர்நற்பொருளிற்செல்லுந்தியானத்தோர்
எய்விற்கரத்தோன்பெருவேள்விகாணவெழுந்தவுவகையினோர். ()

98. வெய்யோன் - சூரியன.
100. பாழி - வன்மை.
101. நெடிய - மிகுந்த,
102 காயங்குறியநெடுந்தவத்தோன் - சிறியவுடலினையு நெடிய தவத்தினையுமுடைய அகத்தியன்.
103. பொய்யில் - பொய்யினவழியாக.

சின்னூல்வழியாமறுசமயச்சிலுகில்வீழாதுலகுய்யத்
தொன்னூலன்னமாயுரைத்ததூயோர்க்காணவச்சுருதி
நன்னூலெல்லாமுருக்கொண்டுநடந்துசெல்லுமாபோல
முன்னூறிகழுந்திருமார்பர்முனிவர்வேள்விவனம்புகுந்தார். (க0ச)

தேடுதனம்பூணுடைமுதலடங்கக்கொண்டுசேனையொடும்
கூடியடங்கவருதலினலந்தக்குலமன்னவர்வாழும்
நாடுந்தூயநலமிக்கநைமிசாரணியமென்னும்
காடுநாடாயினதென்றாற்சனத்தையாரேகணக்கிடுவார். (க0ரு)

தொக்கமுனிவரானோரைத்தொழுதுதன்னைத்தொழுதோர்க்குத்
தக்கவுபசாரஞ்சொல்லித்தழுவித்தழுவிக்கொள்வோரை
மிக்கவுவகையொடுந்தழுவிவேந்தரொடுமாமுனிவரொடும்
ஒக்கவிருந்துவில்லியவற்குவகைசொல்லியுவந்திருப்ப. (க0சு)

படிமன்னியசீராமன்றாள்பணிந்துபரிதிகரந்ததென
முடிமன்னவர்க்குவிடைகொடுப்ப முன்னஞ்சமைத்தவிடத்தவர்கள்
விடும்வண்ணஞ்செய்தெல்லோர்க்கும்வேறுவேறுசமைப்பித்த
கடிமன்னியசீரிடந்தோறுங்களிக்கவிடுவித்தானிளையோன். (க0எ)

மூட்டுமுத்தீயந்தணர்கண்முதலாநீசர்கடையாக
ஈட்டுந்தனமார்பெருவேள்விக்கிளையோன்சமைவித்திடுமமுதம்
காட்டிமடிசிறம்முடையகாதன்மடவாரன்பினொடும்
ஊட்டவுண்ணுமாபோலவுண்டுகளித்தாருறுசனங்கள். (க0அ)

வாட்டமில்லாவரையொருமாமந்தரத்தைமத்தாக
நாட்டிவெய்யவாசுகியாமாநாகத்தைநாணாகப்
பூட்டியாழிகடைந்தமிழ்தம்புகழவானோரானோரை
ஊட்டினாற்கிவ்வுலகுள்ளோர்க்கடிசிலூட்டலொருபொருளோ. ()

வேறு.

பாலொடுதயிருநெய்யும்பலசுவைக்கறியுஞ்சோறும்
சாலைகடோறுமுண்டசனமெலாந்தருக்கிமிக்குக்
கோலநீள்வில்லிகோதில்குணங்களேயெடுத்துக்கூறி
வேலைசூழுலகிலிநதவேள்விபோற்காணேமென்றார். (ககo)

---

104. சினனூல் - சாருவாகாதியரின் சிறியநூல்கள். தொனனூல் - வேதம்.

106. வில்லி - இராமன.

108. அடிசில் - அன்னம்.

அரசருக்கமலன்பொன்னுமாடையும்பூணுநல்கி
இரவிசேய்தனக்குஞ்சேய்க்குமிலங்கைமன்னவற்குமன்று
பரிதிமேற்பாய்ந்தோனுக்கும்படைத்தலைவருக்கும்பைம்பொற்
குருமணிப்பொன்னும்பூணுமாடையுங்குகற்குமீந்தான். (கக௧)

வறியவர்வேண்டிற்றெல்லாம்வழங்குவன்வள்ளலென்றுந்
தெறிபறையறைதலோடுமிரவலராானோரெல்லாம்
பறையறையோசைகேட்டுப்பழமரந்தன்னில்வீழும்
பறவையின்மதுவீழ்ந்தேனிற்பலசனம்வந்துமொய்த்தார். (ககஉ)

பொன்னைவேண்டினர்க்குப்பொன்னும்பூமிவேண்டினர்க்குப்பூவும்
பன்மணிவேண்டினோர்க்குமணிகளும்பலவுமற்றும்
இன்னதுவேண்டுமென்றுங்கிரவலரானோரெல்லாம்
சொன்னசொன்னவற்றையாங்கேதூமணிவண்ணனீந்தான், (ககங)

வேறு.

ஆசையற்றதூமனத்தினனஞ்சினனாகி
நேசமற்றுயிர்மேனியனீரிடைமூழ்கிப்
பாசிபற்றியசிறத்தினன்பல்லுயிர்க்காகக்
கூசியெய்த்தடியிடாதறக்குந்திபநடையான். (ககச

அன்னமாமுனியண்ணலையடைந்தவனறிவான்
பொன்னும்பூமியும்பொருள்களுமெனக்கெனகொல்புகலாய்
உன்னைவேண்டுவதுண்டெனக்கொடுக்கலாகுவதோர்
மன்னர்மன்னனேமரவுரிவழங்கெனவுரைத்தான். (ககரு

கடுத்ததீவினைகடிந்தவன்கழறிடக்கேட்டுத்
தடுக்கவொண்கலாவுவகையன்றசரதராமன்
உடுக்கலாவனமரவுரியொடுசகடுருட்டி
எடுத்துவிட்டவற்கினிதுரைத்திராகவனிருப்ப. (கக௬

ஓதவேதமோருருவுகொண்டனவெனுமொருவன்
பூதமைந்தொடுபொருந்தியவுயிரெலாந்தம்மில்
பேதமின்றியேகண்டிடும்பெருந்தவமுனிவன்
கோதினீதியான்கொடுத்தனன்கொள்கலான்கூறும். (கக௭

நெய்க்கும்பூவைவீநிறத்தினோய்நீயெனைக்கொள்கென்
றுய்க்கும்பல்பெருந்தனத்தினுலொருபொருளில்லை

111. சேய்க்கும் - அங்கதனுக்கும். பரிதிமேற்பாய்ந்தோன் - அனும
112. பழமரம் - பழுத்தமரம்.
118. பூவைவீ - காயாமலர்.

வைக்கும்போதுருளாததுவலியதூக்கினதாக்
கைக்குநொய்யதோர்கமண்டலம்வேண்டுமென்றுரைத்தான். ()

பொருந்துமாமணிபொன்னினாற்றிகழ்வுறச்சமைத்துத்
திருந்துபேரெழிற்கமண்டலஞ்சீதரன்கொடுப்ப
அருந்தவன்பெரிதகமகிழ்ந்தவனொடுமினிதா
இருந்தவேலையினிருந்தவனொருவனீதியம்பும். (௧௧௯)

பன்னுசீர்த்தியாய்பாரியைத்தானதிபாலை
சொன்னவார்த்தையொன்றுண்டதுசொல்லுவன்கேட்டி
மன்னர்மன்னனைவள்ளலையிராமனைக்கண்டால்
பொன்னினம்மனைவேண்டுதியெனக்கெனப்புகன்றாள். (௧௨௦)

சோதிமாமணிதுன்றலிற்சுடர்விடுதொழில
வேதபாரகன்வியந்திடவாங்கவன்விரும்பும்
மாதராளிருகைதொழுமாறியாடிடவன்
றூதிநாயகனம்மனைவேண்டுவவளித்தான். (௧௨௧)

மருடனைப்பெற்றமாதராள்சிறியபொழுது
கருடனைக்கண்டபாம்புபோற்கலங்குவோனவடன்
அருடனைப்பெற்றபோதறவாழ்ந்துவீற்றிருப்போன்
குருடனைப்பவக்கொடியவள்படுகுழிவீழ்ந்தோன். (௧௨௨)

தீதென்றுள்ளனவெவற்றினுஞ்சிந்தைசெல்லாதோன்
சாதுவேதியன்றன்மனைபுகுந்துதான்கொண்ட
மாதராடனைவல்விரைந்தெய்தியான்மாதே
ஏதுவேண்டுவெனிராமனையெனவவளியம்பும். (௧௨௩)

நெஞ்சிற்றாயனுநிறைகுணத்திராமனைக்கண்டால்
அஞ்சிப்பல்லிளித்தடலையாயகலநில்லாதை
விஞ்சிப்பாழ்த்தநம்மிடிசொலிப்பலவும்வேண்டாதை
கஞ்சிக்குக்கலப்பயிறுவேண்டுதிகடிதென்றாள். (௧௨௪)

என்றுகூறலுமிராமனைவேதியனெய்தி
நின்றபோதவன்வறுமையேநிமலனுநினைந்து
குன்றுபோற்றனங்கோனிரைகொடுத்திடவிவையான்
ஒன்றும்வேண்டலேன்காரணங்கேளெனவுரைக்கும். (௧௨௫)

---

118. நொய்யது - கனமற்றது.
122. மருடனை - மருள்தனை. அதாவதஞ்ஞானமயக்கத்தினை.
124. நம்மிடி - நமது வறுமை.

மாரிகிட்டப்பெற்றும்பெறுவன்பயிரெனவென்
பாரிகஞ்சிக்குப்பயறுவேண்டினள்கலமொழிய
வீரர்வீரனேவேறொருபொருளைவேண்டுவெனேல்
சேரலாளவளென்னொடுஞ்சீறுமென்றுரைப்ப. (கஉசு)

அவாவில்வேதியனகத்தவள்கூறியவதனைச்
சுவாவியாமறையாதுசொல்லினனிவனென்று
தவாநெடுங்கொடைத்தசரதராமனுண்மகிழ்ந்து
சவாசனங்களுந்தானுமேமகிழ்ந்துகொண்டாடி. (கஉஎ)

காயும்வெவ்வினைக்கலைவலோன்மனையினுள்கஞ்சிக்
காயநெல்லுநூறுயிரக்கலம்பெறவருளித்
தூயநற்பயறத்தொகைகொடுத்திடச்சொல்லி
நாயகன்றிகழ்நற்றவற்களித்திடுங்காலை. (கஉஅ)

இஞ்சைபொய்ம்முதல்கடிந்ததோரிருபிறப்பாளன்
மஞ்சைவீசியநிறத்திறைப்பாகதிதனக்கு
நஞ்சமாகியபொருளிலோர்நசையிலையெனக்குப்
பஞ்சகவ்வியங்கொள்ளவோர்பசுவருளென்றான். (கஉகூ)

வேறு.

வேதநாயகனிவ்வாறுவேண்டினோர்வேண்டிற்றெல்லாம்
மாதனஞ்சுரபிபூமிமணிமுதல்வழங்காநின்று
போதுபோக்கிடுநாட்போயோராண்டையிற்புரவிமீட்டுக்
காதுவேற்காவலாளர்கட்டியநாளில்வந்தார். (கங௦)

பதியில்வாழ்பசுக்களோடுபழுவத்துப்பசுக்கள்வேத
விதிமுறையவையும்வாரிவிளங்குநீர்க்கங்கையாதி
நதிகளிற்றீர்த்தநீருநாற்பெருங்கடலினீரும்
கதுமெனக்கொண்டுவந்தார்கால்கடியோர்களெல்லாம். (கஙக)

லதமிலக்கணத்தவெழுமூன்றுசாணீளத்த
காதிரயூபமாறுங்காசிலபலாசமாறும்
வேதியர்விதியிற்சொன்னவில்லுவயூபமாறும்
தீதறுதேவதாரமிரண்டுதற்செல்லுவாறும். (கஙஉ)

127. அகத்தவள் - மனையாள். சவா - சபை. சுவாவி - சுபாவி (சாது.)
129. இஞ்சை - இச்சை.
130. சுரபி - பாற்பசு. புரவி - யாகக்குதிரை.
132. லக்கணத்த - இலக்கணத்தினையுடையன, காதிரம் - கருங்காலி,

யூக்மூவேழுமூன்றுமமைந்தனவாணிசூர்ப்பம்
சோகஞ்சோமியஞ்சுருக்குசுருவஞ்சூர்திகழுமான்றோல்
ஓகையாற்றகைவல்லோர்செய்கலமுதவாதியாக
யாகபத்திரங்கள்வந்தபணித்தநன்முகுர்த்தமெய்த. (கஙங)

வேறு.

இன்னிசையிராகவற்கியாகசாலையுள்
பன்னியாங்கினிமையிற்படருமுந்தபின்
மின்னியநுண்ணிடை மிதிலைவல்லியாம்
பொன்னியல்பாவையும்புனைந்துசேர்த்தினார். (கஙச)

மாதிரநான்கினுள்வழங்குவான்புகை
மீதெழுந்தண்டகோளகையின்வீங்குற
வேதியருமறைவேதநூலினில்
ஓதியதருவினால்யூபநாட்டினார். (கஙரு)

எழுகதிரவன்பரியென்னவெண்ணிரு
செழுபரிகொணர்ந்தபின்றேவர்யாவரும்
தொழுபரிசுலகெலாஞ்சுருங்கவோடிடக்
கொழுகனகத்தினாற்குளம்புகட்டினார். (கஙசா)

நீடியபதினாறுமுனிவர்நீள்கடல்
கோடியவுலகெலாங்குறையக்கூர்மறை
பாடியபதினாறுபவளப்பச்சைமா
ஓடியவடிதொறுமோமம்பண்ணினார். (கஙஎ)

நலங்கிளர்புவியெலாநடவிமீண்டபின்
உலங்கிளர்தோளினானுவப்பயூபத்தில்
வலங்கிளர்மரகதநிறத்ததான்மணி
இலங்குளைப்பரியெலாம்யாப்புறுத்தினார். (கஙஅ)

வரிந்தபைங்கழலினான்கிழமாதவர்
தெரிந்தமந்திரத்தினைச்செவியிற்செப்பிநின்
றரிந்தனரரிந்ததாலவனிசேப்புறச்
சொரிந்தனதிசையெலாநனைந்தசோரியே. (கஙகூ)

பருத்தடிதனையரிந்திட்டுப்பைம்புனக்
குருத்தழல்கொழுந்துவிட்டெரியக்கோதிலாக்

---

137. நீடிய - தவத்திலுயர்ந்த. கோடிய - வளைந்த. குறைய - இடம் போதாதென்றுரைக்க. 138. யூபத்தில் - யாகப்பசுவைக்கட்டுந்தறியில், 140. பருத்தடி - பரியஊன்.

கருத்துடைமறையவர்கனிந்தகாதலால்
அருத்தினராவுதியமரர்தம்மையே (கசo)

வேறு.

தேவர்கள்செல்லநீர்த்தவிராமன்முன்செய்தசெம்பொற்
பாவையைத்தனுவகத்துப்பாரியாச்சங்கற்பித்தும்
பூவையையனையதன்மைப்புரோகிதன்சடங்குகாட்டத்
தூவருந்தவர்களோடுநடொடங்கினன்வேள்வியென்ன. (கசக)

வேறு.

இசைபுனையிராகவனினையவேள்விகள்
நசையறவேட்குமந்நாளிறைண்டிறை
வசையறுமதுரவான்மீகிமன்னிய
குசலவர்வருகெனக்குறித்துக்கூறினன். (கசஉ)

சுந்தரத்திருநிறத்தூயவெண்ணகைச்
சிந்துரப்பவளவாய்சசிவந்தவாள்விழிக்
கொந்தணிகுழற்குசலவர்களகோதிலார்
வந்தனர்முனிவனைவணங்கிமன்னினர். (கசங)

இடாறுமுனிவரனிகலிராகவன்
அடல்புனைந்தேத்தியவளவிலாதபோர்
இடிமொழிக்காப்பியமதுரவின்னிசை
படாறுமரசவைபகர்திரபோயென்றான். (கசச)

சந்தணியிருபுயச்சனகர்கோமகள்
மைந்தரென்றறிவுறுவகைமறைநதுநீர்
அநதணிரிருந்துழியரசர்சேர்ந்துழிப்
பைந்துவர்வாயினீர்பகர்திரென்றனன். (கசரு)

வேறு.

உழையிளிவிளரிதாரங்குரல்கிளைதுத்தமென்னும்
பழையனவிசைகளேழும்பான்மையிற்றெரியப்பண்ணுள்
இழுமெனவிசைக்குங்கோல்களேழவைதிவவுநாட்டி
மழவிடையனையசீரார்மாடகயாழ்கைக்கொண்டார். (கசசு)

141. பூவை - பூஜ, பிரமதேவர்.

145. பைந்துவர் - பசியசெம்மை.

146. இழுமென - விட்டிசைக்காத அருவியோசையைப்யொப்ப. திவ்வு - வீணையின்கட்டு.

கனிதருபளச்செய்வாய்க்காமனுஞ்சாமன்றனும்
முனிவர்தம்வடிவங்கொண்டமுறைமையதாகுமென்னப்
பனிமலர்வேணிசாத்திப்பருவரையருவிபோல
இனியவெண்புரிநூன்மார்பிலிலங்கிடவலங்கரித்தார். (கசஎ)

முனிவனைவணங்கிநீங்கிமுழுமலர்ப்பன்னசாலைச்
சனகிமைவிடைகொண்டிப்பாற்றருமிசைவருடைபாயும்
பனிமலர்ச்சோலைநீங்கிப்பலவரியுழுவைக்காகக்
கனைகுரலுழைகண்டுஞ்சாக்கல்லதரத்தஞ்சேர்ந்தார். (கசஅ)

கானவரம்பைமாய்க்குங்கல்லதரழுவநீங்கி
வானவரம்பைமாதர்மணிபயில்குறங்குபோல
வானவரம்பைநீத்துமலரயனுலகுசேரும்
கானவரம்பைசூழுங்கடிமணற்கங்கைசேர்ந்தார். (கசகூ)

பூத்தமின்கமலமீதுபொரியெரிப்பெய்தபோலக்
காத்தருபூகப்பாளைகதுமெனவுதிருங்கங்கை
ஆர்த்தனரேறியாங்கணருமறைமுனிவர்சூழ
வேத்தவையிருந்தகோலவியலெரிவேள்விசென்றார். (கரு0)

வித்தகமுனிவன்பின்போமைந்தர்கள்முனிவேடத்துக்
கத்தகரிவர்களென்பார்காணுதுங்கடைக்காலென்பார்
கைத்தலந்தூயபாதங்கண்ணிணைகமலமென்பார்
இத்தலத்திவரைப்போலவெழிலுள்ளோரில்லையென்பார். (கருக)

கோடகங்கொண்டகேள்விக்கோல்களோரேழுங்கோத்த
மாடகயாழையின்றிவரிசிலையுளதேயாயின்
பாடகமலர்த்தாளன்னைபணிமொழிமறுதுபோகிக்
காடகமகிழ்ந்துமீண்டகண்ணனேபோல்வரென்றார். (கருஉ)

வேறு.

வெம்பரிவேள்வியிலிருந்தவேந்தரும்
உம்பருமுனிவருமுளமகிழ்ந்திட
இம்பரினிராகவனிசைகொளின்னிசை
தும்புருநாரதர்தொலையப்பாடினர். (கருங)

---

448. வருடை - வரையாடு.
149. கல்லதர் - மலைவழி.
152. கண்ணனே - இராமனே.
153. தொலைய - தோற்க.

மாடகயாழிடத்தேந்துமைந்தரால்
பாடியவின்னிசைப்பனுவறஞ்செவி
ஊடுறநிறைதலாலுருகுசிந்தையோ
டேடலர்தாரிறைற்கெடுத்துக்கூறினர். (கருச)

வேறு.

ஓதநீர்வண்ணன்வேள்விகாணியவுவந்துவந்த
மாதவர்மன்னராதிமாசபைமைந்தர்பாடும்
தீதறுதெய்வகானஞ்செவிமடுத்தினிதின்மாந்தி
ஈதுநாமிதற்குமுன்புகேட்டறியாதென்றார். (கருரு)

வேறு.

அனையவர்த்தருகெனவமலனேவலும்
புனைதுகிற்போர்வையர்புலிக்கண்பார்வையர்
இனைநரைமுடியினரிடிக்குறற்சொல்லினர்
துனைமலரடியினர்தொழுதுபோயினர். (கருசூ)

ஆயசீராகவனருளிப்பாடென
வாயில்காப்பாளருமகிழ்ந்துகூறலும்
ஏயெனுமாத்திரையிளையமைந்தரும்
போயவராசவைபுகுந்துமேவினர். (கருஎ)

குரன்முதலெழுவகைநரம்புகூட்டிய
விரல்கவர்ந்தடுத்துளவேதர்சீரியாழ்
கரமிசைவாங்கினர்கவின்கொள்காப்பிய
உரைபயிலின்னிசையுரைப்பதாயினர். (கருஅ)

வேறு.

நகவன்மாசிறகரிந்தவனுன்மறைக்கிழவன்
அகவன்மாயையென்றறநெறிநால்வருக்களித்தோன்
உகவன்மாய்த்தவருணர்வருமறையைவான்மீகி
பகவன்மாதவன்பணித்தனவண்ணமேபகர்வாம். (கருகூ)

---

155. சபை - சபையினர் ஆகுபெயர்.

156. துனை - விரைந்து.

157. அருளிப்பாடு - கட்டளை.

158. காப்பிய உரை - இராமாயணவசனம்.

159 நகவன்மாசிறகு - மலையின்வலியபெரிய இறகு. நால்வர் - ஸனகர் ஸனந்தன ஸனாதன ஸனத்குமாரரென்பர்.

ஞானநாயகனுன்மறைநாயகனளினத்
தேனநாயகன்றிருப்பதநதிபொதிசெனியன்
ஆனநாயகனம்பிகைக்கருடிருக்கதைக்கோர்
சேனைநாயகனடியிணைசிறந்தநற்றுணையே. (கசுo)

நாடுகோசலநாடுமானதிபுனற்சரயு
ஆடுதிண்கொடியயோத்திமாநகரதற்கிறைவன்
தேடுவண்புகழ்த்தசரதன்றேவியர்முதன்மை
சூடுகோசலைகைகசிசுமித்திரையென்பார். (கசுக)

மற்றுந்தேவியாறுபதினுயிரமடவார்
சொற்றமன்னவன்சுடர்புகழ்வேள்வியைத்தொடங்கிப்
பெற்றமைந்தர்பேர்பிறங்குவேலிராகவன்பரதன்
எற்றுநீள்புயத்திலக்குவன்சத்துருக்கனனே. (கசுஉ)

அன்னமன்னவனரியணைமீதுவீற்றிருந்தான்
இன்னமாநிலம்படைப்பெனென்றவனியல்வேள்விக்
குன்னன்மைந்தரிலிராமனைத்தருதியென்றுரைத்தான்
மன்னர்மன்னவன்மறுத்தனன்வசிட்டனீதுரைத்தான். (கசுங)

மறுத்தியன்றெனவுரைத்தலுமன்னர்கோன்முனியைப்
பொறுத்தியென்றவன்பொன்னடிசென்னியிற்புனையா
உறுத்திமைந்தரையளித்தலுமுவந்துமாமுனியும்
கறுத்தசெம்மலுந்தம்பியுங்காடுசென்றடைந்தார். (கசுச)

காமன்மாறுபட்டுலந்ததோர்காடுகண்டேகித்
தாமவார்குழற்றுடகைபடச்சரந்தூண்டி
ஏமமாகியபடைக்கலம்யாவையுமெய்தி
ஓமமாவலியுரைந்ததோருறையுள்சென்றுறைந்தார். (கசுரு)

வெவ்விலிச்சினவீரரைக்காக்கெனவிடுத்தே
அவ்விடத்துமாமுனிவனும்வேள்வியையமைக்க
எவ்விடத்தினுமரக்கர்வந்திடியெனவார்த்தார்
வவ்விடச்சரமாரியால்வானத்தைமறைத்தார். (கசுசு)

கண்டவீரனுமரக்கரைக்கடிந்துதாடகையாம்
சண்டவேகத்தடனையரிலொருவனைச்சரத்தால்

---

160. பதநதி - கங்கை. சேனைநாயகன் - விடுவசேனன்.
164. புனையா - புனைந்து.

துண்டமாக்கிமற்றொருவனைக்கடல்புகத்துரந்தான்
மண்டுவேள்விசெய்முனிவனுமதுகண்டுமகிழ்ந்தான். (க௬௭)

கண்டமாமறைமுனிவனுந்தம்பியுந்தானும்
கண்டல்சூழ்கரைக்கங்கையுங்கானமுங்கடந்து
பண்டைமாநிறமகலிகைபெறும்பணித்தருளி
விண்டொடும்மதின்மிதிலைமாநகரின்மேவினரால். (க௬௮)

சனகர்கோனைவந்தணுகலுந்தழல்புரிவேள்வி
முனிவவிங்கிவராரெனக்கருளெனமொழிந்தான்
வினையம்வேறிலைவிறல்புனைதசரதனென்பான்
தனையர்மற்றுநின்றனுவலிகாண்குறச்சமைந்தார். (க௬௯)

வேறு.

இந்திரவில்லெனயாருமியம்ப
வந்தநெடுஞ்சிலைவள்ளல்வளைத்தான்
அந்தரவானிலரம்பையரார்த்தார்
தந்தையுகந்திடச்சார்ந்திடுமென்றே. (க௭௦)

சனகனலந்திகழ்தசரதனுக்கோர்
துனியறுமோலையைத்தூதொடுமேவத்
தனையரொடுங்கிளர்தவமுனியோடும்
வினையம்வலான்மதின்மிதிலையடைந்தான். (க௭௧)

தெள்ளமிழ்தம்புரைசீதையயன்பால்
வள்ளலிராமன்மகிழ்ந்துமணந்தான்
முள்ளிலவெறியிதழ்மூவரையும்போர்
வெள்ளிலைவேலவர்மூவரும்வேட்டார். (க௭௨)

அந்நகர்தன்னையகன்றனரிப்பால்
மன்னுமழுப்படையான்சிலைவாங்கி
அன்னவனைத்தவமாரவிடுத்தே
பொன்னணிமாடவயோத்திபுகுந்தார். (க௭௩)

அரியணைமீதிலிருந்தரசாளும்
வரிகழன்மன்னன்வசிட்டனைநோக்கா
உரியதவம்புரிவேனென்மகற்கே
விரிகதிர்மோலிமிலைச்சுமினென்றான். (க௭௪)

---

169. சமைந்தார் - ஒருப்பட்டார்.

அன்னதுகூனியறிந்தனள்சொல்லக்
கன்னன்மொழிக்குயில்கைகசிகேட்டே
மன்னவநீமுனளித்தவரத்தால்
என்மகனுக்கரசீந்தருளென்றாள். (களரு)

வடிவுடைமன்னன்மயங்கினன்வீழ்ந்தும்
இடுகழல்வீரவிராகவனின்றே
நெடில்படுகானகநீபுகுகென்றே
கொடியவள்சீரைகொடுத்தனளன்றே. (களசு)

மலர்க்குழலாளொடும்வார்சிலைவன்கை
இலக்குவனோடுமிராகவனன்றே
அலக்கணுறாமலயோத்திகடந்தே
நலக்குறுகங்கைநறுங்கரைநண்ணி. (களஎ)

அங்கணிருங்குகனம்பிவிடப்போய்க்
கங்கைகடந்துறுங்குலினங்கோர்
சங்கையின்மாமுனிசாலையினண்ணிக்
கொங்கலர்சித்திரகூடமடைந்தான். (களஅ)

சித்திரகூடமடைந்திடுசெய்தி
அத்தனறிந்திவனுருயிர்விட்டான்
வித்தகமாமுனிமெய்ப்பரதற்கே
உய்த்தனனோலையுணர்ந்தனன்வந்தான். (களசு)

வேறு.

மன்னனுக்குமகனுக்குமுற்றவா
றன்னைகூறவறிந்துமனந்தளர்ந
தென்னபாவிசெய்தாயென்றிரங்கினான்
தன்னைமாமுனிதான்வந்துதேற்றினான். (கஅ0)

இன்னதந்தைதக்கீமக்கடன்செய்த
பின்னைமாமுடிசூடெனப்பேசிடப்
பன்னுமாலைப்பரதனிராகவன்
தன்னைநாளைத்தருவெனென்றோதியே. (கஅக)

---

176. நெடில் - மூங்கில். சீரை - மரவுரி, வற்கலை.
178. அம்பி - ஓடம்.
181. ஈமக்கடன் - தீயிடுதலாகியகாரியம்.

சடையும்வற்கலையுந்தரித்தாங்கிரு
புடையுந்தாயருமன்னரும்போதர
இடையகங்கைக்குகனொடுமேறிப்போய்க்
கொடிகொள்சித்திரகூடஞ்சென்றெய்தினான். (கஅஉ)

வையமாளுடையானைவணங்கிப்பின்
ஐயன்வானமடைந்ததுகூறிட
ஐயகோவென்றரற்றியிராகவன்
கையினாலக்கடன்கழித்தானரோ. (கஅந)

ஆதிமாமுடிசூடென்றடிதொழப்
போதியேழிரண்டாண்டுபொறுத்தியென்
றேதமின்றியிராகவன்கூறலும்
பாதுகங்கொடவனும்படர்ந்தனன். (கஅச)

விடங்கொள்வேற்கைவிராதனைவெட்டிப்போய்த்
தடங்கொள்வீடுசரபங்கனுக்களித்
தடங்கவாவமகத்தியன்றந்தபின்
இடங்கொள்பஞ்சவடியிற்சென்றெய்தினான். (கஅரு)

மங்கைசூர்ப்பணகைப்பெயர்மாதராள்
கொங்கைநாசிகுழையொடரிந்தபின்
அங்கையாற்றன்வயிறலைத்தாலெனக்
கங்குல்வாழ்க்கைக்கரனுக்குரைசெய்தாள். (கஅசு)

கரனுந்தூடணனுங்கலினப்பரித்
திரிசிராவுஞ்சினப்படையீட்டமும்
வரனிராமன்கைமாண்டதெல்லாங்கடி
துரைசெய்தாள்சென்றிராவணற்கோடியே. (கஅஎ)

சீதைமற்றவன்றேவியைக்கொண்டியான்
போதலுற்றுழிப்புக்கதிதென்றலும்
காதலுற்றவட்காண்குறுமாசையான்
மாதுலற்கொருமாற்றஞ்சென்றோதினான். (கஅஅ)

மறுத்துணர்த்திடமாமன்மாரீசனும்
வெறுத்துரைத்தனன்வெஞ்சொலிராவணன்

---

185. ஆவம் - அம்புகூடு.
186. குழை - காது.

பொறுத்திரீயெனப்பொன்னிளநவ்வியாய்
நிறுத்தசீதைதநிலையிற்சென்றெய்தினான். (க௮௯)

கண்டுசீதைகவர்ந்ததுதாவென
அண்டர்கோனுமதன்பின்னரேகியே
கொண்டமாயையறிந்துகொலைசெய்தான்
ஒண்டொடீஇயிளையோயென்றுலைநதே. (க௯௦)

அன்னமன்னவளவ்வுரைகேட்டலும்
தன்னநாயகன்றம்பியையேவினாள்
பன்னசாலையிற்பார்ப்பனவேடமாய்
இன்னல்செய்யவிராவ னெய்தினான். (க௯௧)

மானமீதுமடந்தை கொண்டனன்
போனபோதுபுகு டாயுவை
ஈனமாக்கிததா றியதேர்விடா
மீனவேலையில கையைமேவினான். (க௯௨)

மன்னிராகவ ம்பியைவந்தவா
றென்னையெ ன்பியன்றதுரைசெய்தான்
பன்னசாலை யிராவையைநாடிப்போய்
முன்னர்வீ ழ்ந்தசடாயுவைமுன்னினார். (க௯௩)

வேறு.

இறநதவெந்தவைக்கரசையீமவெரியேற்றி
முறஞ்செவியயோமுகியைமூக்கினையரிந்து
மறநதருவந்தனையும்வாணினிடைவைத்திட்
டறநசேழ்தருஞ்சவரியாசிரமமுற்றார். (க௯௪)

மிக்கசவரிக்கினியவீடருளிவிட்டுப்
பக்கமதுமிக்கமலர்ப்பம்பையயதுகண்ணுற்
றநிலமகன்றனுமனுமெனவுரைப்பச்
சுக்கிரீபனைத்துணையெனத்தொடர்வுகொண்டான். (க௯௫)

துந்துபிநரமெனத்திகழ்மராமரமதெய்தே
துந்துபிகளேபரமதைச்சுவடுறுத்தி
இந்திரன்மகற்கியமலோகமருளித்தன்
சுந்தமுடைவாளவன்மகன்பெறவளிததான். (க௯௬)

---

அண்டர்கோனும் - தேவர்தலைவனாகிய இராமனும்.
மானம் - விமானம. 196. களேபரம் - எலும்பு.

சுக்கிரிபனுக்குரியதொன்முடிகவித்தே
மிக்கதிறல்வானரர்கண்மேவவருவித்தே
கக்குமுகின்மிக்கமழைக்காலமதகன்றால்
இக்கண்வருவாயெனவிராகவன்விடுத்தான். (௧௯௭)

சுந்தரனுமத்துணைதுயர்க்கடலுளாழ்ந்தான்
இந்திரன்மகற்குரியதெய்தினனிருந்தான்
வந்திலனருக்கன்மகன்மாரிகழிவுற்றும்
தந்தையெனக்கடிதுதம்பியைவிடுத்தான். (௧௯௮)

மற்றவனழைத்தருளமாருதியுமேனைக்
கொற்றவனும்வந்தனரிராகவனடிகூடி
எற்றதுசெயக்கடவதென்று நின்றிருந்தார்
முற்றிழையைநாடவிடுமென்று அறமொழிந்தான். (௧௯௯)

அன்றனுமனங்கதனறிந்தருள்பெய்சாம்பன்
என்றவர்கடம்முடனிரண்டுகவிவெள்ளம்
சென்றனர்கடென்றிசையினிற்கடிதுசில்லோர்
பொன்றலில்பிலத்திடைபுகுந்தனர்அயர்ந்தார். (௨௦௦)

வேறு.

குன்றமுநதிகளுங்குழைந்தகானமுந்
தென்றிசையெங்கணுந்தேடிக்காண்கிலர்
இன்றுயிர்விடுவதேநன்றென்றியாவரும்
மன்றல்சேர்மகேந்திரவரையைமேவினர். (௨௦௧)

இறைவியாண்டிருந்தவாறெருவைவேந்தன்
முறைமையால்வந்தவாமொழியக்கேட்டபின்
அறைகழலனுமனுமாக்கிவாய்பிளந்
தெறிகடல்கடந்துபோயிலங்கையெய்தினன். (௨௦௨)

எரிவிழியிலங்கைமாதேவிதான்கெடக்
கரிநிறவரக்கர்தங்கனகமாளிகைத்
தெரிவையையெங்கணுநதேடிக்காண்கிலான்
அரிமலர்ச்சோலைகண்டாழிகாட்டினன். (௨௦௩)

மானவனறிந்தருண்மதுரமாமணி
சானகியளித்தனள்விடையுந்தந்தபின்

---

199. எற்றது - என்னையது முற்றிழை, சீதை.
203. இலங்கைமாதேவி - இலங்கணி.

யானிவண்வந்துவினைகதிதெனுப்
போனமாமாருதிபொழிலைவாட்டினுன்.	(உ௦௪)

காட்டொருவானரங்கடிகொள்சேனையை
வாட்டினதென்றுகாவலர்சென்றோதலும்
கேட்டனன்றசமுகன்கிளர்ந்தசேனையை
மூட்டினனதனைதிரனுமன்முன்னினுன்.	(உ௦௫)

வேறு.

தொக்கரக்கரைத்துரந்துதோரணத்திருந்துபோய்
அக்கனைத்தரைப்படுத்தரைத்திரத்தமிக்கெழுத்
தக்கசம்புமாலியைததரை[illegible]படுத்திவெற்றிசேர்
பக்கநின்றபஞ்சசே[illegible]ரரைப்படுத்தினுன்.	(உ௦௬)

மேகநாதன்வந்தெத[illegible]துவேதநான்முகன்றரும்
நாகபாசம்வீசிஞா[illegible]தனைக்கொணர்ந்துதம்
ஓகைவாளிராவண[illegible]ரத்தலும்[illegible]ந்தடுதா
ஏகவாலினங்கியி[illegible]ித்திய[illegible]ன்.	(உ௦௭)

வாலின்வைத்த[illegible]டமா[illegible]
சாலவநதுசீ[illegible]	[illegible]தபின்
காலினைகிவ[illegible]வகவிக்குலத்
வேலைசூழ[illegible]ரமன்விட்ட[illegible]ினுன்.	(உ௦௮)

மன்றலோ[illegible]தகோலமணியைநலங்மாருதி
நின்றுவா[illegible]கள்கூறநீடுவேலிராமனும்
என்றின[illegible]தவிப்பதாதியெழுகவென்றெழுந்தபின்
தென்றி[illegible]கருங்கடற்றிரைப்புறத்துமேவினுர்.	(உ௦௯)

வேறு.

[illegible]ரையிறுத்தனன்கவியின்சேனையோ
[illegible]ற்படையிராகவனரக்கனேவலால்
[illegible]ற்கமலத்தயன்மயனுந்தானுமாய்ப்
[illegible]டைத்தனனிலங்கையைப்பண்டுபோலவே.	(உ௧௦)

[illegible]மனுயர்மண்டபத்திருந்துவெய்யவன்
[illegible]தோலியல்குரங்கிவ்வூர்ச்சுட்டதாவென
மாலியவான்முதலரக்கர்வல்லென
ஓலுபர்கடலெனவுளையக்கூவினர்.	(உ௧௧)

---

209. மன்றலோதி - மணமபொருந்திய கூந்தலினையுடையாள். என்றி மைந்த - சூரியகுமாரனுன சுக்கிரீவ.

வேறு.

மைந்தனிந்திரசித்துமவுலியான்
தந்தைதன்னொடுகூறத்தடுத்தெதிர்
தந்தபோதவர்தங்கட்கயில்படு
வெந்தபுண்ணெனவீடணன்கூறுவான். (உகஉ)

வேறு.

இரணியனென்பவன்யாவர்தம்மினும்
முரணியனவனிவன்முனியமாய்ந்தனன்
அரணியனெஞ்சினனவன்றன்[illegible]யாம்
தரணியின்றுயைவிட்டருளறக்க[illegible]ல். (உகங)

என்றலுமிரா[illegible]வணனெரியுஞ்சிந்தைய
நின்றனையேன்[illegible]யடுவலீங்கெனத்
தன்றுணைநால்வருந[illegible]னும்வீடணன்
வென்றிகொளி[illegible]வன்[illegible]மேவினன். (உகச)

கடலுடையி[illegible] [illegible]க்காவல[illegible]
உடையநீள்வ[illegible] [illegible]றமும்
படையினதீட்ட [illegible]
அடையவாளிதீ[illegible] [illegible]யன[illegible] (உகரு)

வேண்டி[illegible]னொருவழி[illegible] [illegible]கூறினன்.
[illegible]ய்யவிலங்கைக்கன்றெய்தன்மையால்
தாண்டினன்சுடுசரம்வருணன்றோன்றிவந
தாண்டகையிராகவனடியின்வீழ்ந்தனன். (உகசு)

ஆனபோர்வேலையையடைத்தபின்புயர்
மானவர்தலைவனும்வானரேசனும்
கோனகரின்புறக்குன்றிறுத்தபின்
[illegible]னமிலிராவணனெற்றர்மேவினர். (உகஎ)

பற்றினர்சாரணசுகரைப்பன்முறை
சொற்றனர்கண்டவத்தூயமானவன்
விற்றொழில்வீடணற்கரசுவிட்டதும்
கொற்றவற்குரைக்கெனக்கூறிப்போக்கினன். (உ[illegible])

212. அயில்படு - வேல்பட்ட.
213. இவன் - இவ்வி[illegible], நரசிங்கன்.
214. அடுவல் - கொல்வேன். ஊற்றமும் - வன்மையும்.
217. மானவர்தலைவன் - இராமன.

வேறு.

சேதுபந்தமும்வீடணன்செய்தியும்
தூதுசென்றவர்சொல்லத்தசமுகன்
ஓதும்வெவ்வுரையோதினனப்பொழு
தேதமின்றியெழுந்ததிரவியே. (உகசு)

வேறு.

இலங்கைவேந்தனுமிராமனுமெழிபடைகாண்பான்
இலங்கைமாளிகைத்தலையினுமலையினுமேற
இலங்கையான்மணிமுடிபறித்திரவிசேயகன்றான்
இலங்கைவேந்தனுமிராமனுமிருக்கைசென்றடைந்தார். (உஉ0)

நாலுவாயிலுநரரும்வானரருமேநண்ணி
ஓலவேலையினுருத்தனரெனச்சிலருரைத்தார்
ஆலகாலவேலரக்கனும்படைவகுத்தமைந்தான்
வேலிராகவனங்கதற்றூதெனவிட்டான். (உஉக)

சீதையென்னுமத்திருவைவிட்டுன்சிரம்பெறுகென்
றோதிவிட்டனனிராமனென்றங்கதனுரைத்தான்
போதிபோதியென்றிராவணன்புகறலுமிராமன்
பாதபங்கயம்பணிந்தனனெழுந்ததுபதாதி. (உஉஉ)

அரக்கரைம்பதுவெள்ளமுமணிகமுமுடையக்
குரக்குவேந்தனுமனுமனுநீலனுங்குரைத்தார்
அரக்கனவ்வுரைகேட்டுவெந்தடர்த்தலுமனுமன்
குரக்குவேந்தர்மற்றவரவன்சரம்படக்குலைந்தார். (உஉங)

இளையவீரனுமிராவணனீரைந்துசிலையும்
உளையவெய்தனனுடம்பிடியவனுரத்துய்த்தே
வளையும்வாளெயிற்றிராவணன்வவ்வுவான்செல்ல
இளையவீரனைமாருதியெடுத்துக்கொண்டகன்றான். (உஉச)

ஆளியாயிரம்பூண்டதேரரக்கன்வந்தடர்த்தான்
காளைமாருதிதோளின்மேலிராமனுங்கடந்தான்
மூளுவார்சிலைபத்துடன்முடிபத்துமொழித்து
நாளைவாபோரவென்றனனகர்சென்றுபுக்கான். (உஉரு)

---

219. இரவி - சூரியன.
221. ஓலவேலை - ஆரவாரமுள்ளகடல்.
223. குரைத்தார் - ஆரவாரித்தனர்.
224. உடம்பிடி - வேல்.

மூலத்தானையைத் தருகெனத் தூதரை முடுக்கிக்
கோலப்பள்ளியிற் குறுகலுங் குரவன் வந்தணுகிச்
சாலச்சாம்பினை முன்னமே சாற்றினெனென்றான்
மாலைத் திண்புய மகோதரன் மறுத்திது சொன்னான். (உஉசு)

கும்பகன்னனையழைக்கெனத் தூதருங் கொணர்ந்தார்
எம்பி போரினையியற்றுதி மனிதரோடென்றான்
வெம்பு போர்க்களம் புகுந்தனன் வினவினனிராமன்
தம்பி நானிவற் றருகென்றான் றசமுகற் கிளையான். (உஉஎ)

வியந்து வீடணனழைத்தலும் வெய்யவன் மறுத்து
வயந்தனைப் பிசைந்தருக்கன் மாமகனைக் கொண்டகன்றான்
இயைந்த நாசி கொண்டிரவி சேயகன்றனனிராமன்
உயர்ந்த தோரம்பினாலவன் றலையுவரியிலிட்டான். (உஉஅ)

அப்புறத்தினின் மருத்தனைச் சனகர்கோனுக்கிக்
குப்புறத்தினன் மகோதரன் சீதையுங் குலைந்தாள்
எப்புறத்தினு மிராவணன் செவியெலாங் கேட்க
இப்புறத்தினின் றார்த்ததங் கிராவணன் சேனை. (உஉகூ)

வேறு.

கும்பகன்னன் குறைந்தமை கூறிடத்
தம்பியோவென் றரற்றித் தசமுகன்
அம்பொற்றேரதி காயனையேவினான்
எம்பிராற் கிளையோனெதிர் தாக்கினான். (உ௩௦)

வேறு.

எதிரெதிர் தாக்கின விரண்டு சேனையும்
கதுமென விராகவற் கிளைய காவலன்
அதிர்கழல் புனையதி காயன் றன்னையோர்
சதுமுகன் சரத்தினாற் றலையைத் தள்ளினான். (உ௩க)

வேறு.

குரக்கு வேந்தர்கள் குன்று கொண்டேவலும்
அரக்கன் மைந்தரனைவரு மாண்டனர்

---

226. குரவன் - பாட்டனான மாலியவான்.
228. வயந்தன் - வசந்தனென்னுமொரு வானரவீரன்.
229. மருத்தன் - ஒரு அரக்கன்.
230. குறைந்தமை - இறந்தமை.
231. அதிர் - முழங்குகின்ற.

பரக்கவன்கோலைப்பாடுகண்டார்சிலர்
இரக்கமெய்தியிராவணற்கோதினார். (உ௩உ)

அரக்கனவ்வுரைகேட்டலுமங்ஙனே
இரக்கமுற்றிந்திரசித்தையேவினான்
குரக்குவேலையைக்கொன்றனன்கொன்றபின்
தரைக்குநாயகன்றம்பியையெய்தினான். (உ௩௩)

வேறு.

ஏரமுங்கவிலக்குவன்மேனிமேல்
கூரமுங்கநெடுஞ்சரங்கூட்டினான்
தேரழிந்துதசமுகன்றிண்மகன்
போரழிந்துவிசும்பிடைப்போயினான். (உ௩௪)

வேறு.

இடந்தருமிராகவற்கிளவலைக்கவித்
தடம்புனையெழுபதுவெள்ளத்தானையை
அடங்கலுமரக்கன்மாமதலையல்லிடை
விடந்தருநாகபாசத்தின்வீக்கினான். (உ௩௫)

போயினனரக்கனும்புரண்டுவானரர்
கூயினரிராகவற்கனலன்கூறிட
மேயினவருநதினன்விகங்கராசனும்
பாயினனுரகனைப்படுத்திப்போயினான். (உ௩௬)

சென்றதூதுவர்சொலத்தெசமுகத்தவன்
தன்றகுபெரும்படைத்தலைவர்க்கூயினான்
நின்றிலர்கொன்றனர்நிசிதர்தங்களைக்
கொன்றனர்வானரத்தலைவர்குன்றினால். (உ௩௭)

வேறு.

உரையதுகேட்டுமைந்தற்குரைத்தலுமரக்கர்கோமான்
கரன்மகன்மகரக்கண்ணன்செல்கெனக்காற்றினம்பும்
வருணன்றனம்புகூட்டிமாயையாவிட்டான்மாயன்
பொருசரமொன்றாற்சென்னிபோக்கினான்மாயையோடும். (உ௩௮)

இற்றனரரக்கர்தானையிருபதுவெள்ளத்தோடும்
செற்றவாளரக்கன்கேட்டான்மைந்தனைச்சேறியென்றான்

---

236. விகங்கராசன் - பட்சியரசனான கருடன்,
239. செற்ற - சீற்றத்தினையுடைய,

மற்றவன்றேரிலேரிவானரப்படையைச்சீறி
எற்றுவனினியென்றெண்ணியிலக்குவன்றன்னேடேற்றான். ()

அறுபதுவெள்ளத்தானேயாயிரந்தேரினேடும்
வெறுவதுசெய்யக்கண்டுமயன்படைவிடுவேனென்றும்
உறுவலியரக்கன்வானத்தொளித்ததைதயோரான்றம்பி
எறிபடைபூசைசெய்வானெழுந்தனனிராமனிப்பால். (உ௪0)

வேறு.

உரைத்தனனிராவணியிராவணற்குற்றவாறெல்லாம்
வரைப்புயமகோதரன்வருகவென்றேவினன்வலத்தால்
குரைத்தெழும்வானரக்குழுவைவென்றிலக்குவன்சரத்தால்
பொருக்கெனவெழுந்தனனந்தரவிசும்பிடைப்போனன். (உ௪க)

முட்டினமகோதரன்முனிவருமமரர்களாகச்
சிட்டனீதென்னைகொலென்றுளந்திகைத்தனனின்றான்
விட்டனனயன்படையிராவணியிலக்குவன்மீதே
பட்டனன்பட்டவாறிராவணற்குவகையிற்பகர்ந்தான். (உ௪உ)

ஏய்ந்திழிவிராகவனிலக்குவன்பாடுகண்டேங்கிச்
சாய்ந்தனன்சாம்புவன்மாருதிதருதியாலென்னப்
பாய்ந்தனன்மருந்துகொண்டமரிடையயனதுபடையால்
ஓய்ந்தவர்யாவருமுயிர்த்தனர்தூதர்போயுரைத்தார். (உ௪௩)

வேறு.

யாவதிங்குநாஞ்செய்வதென்றியம்பலுமைந்தன்
ஆவதுண்டெனவரக்கனுமதுசெயென்றடைந்தான்
தேவிசீதையாச்சமைத்தபின்னனுமன்முன்சிதைத்துப்
போவனயோத்தியிலெனநிகும்பலைபுக்கான். (உ௪௪)

ஆயவாறெலாமனுமன்வந்திராகவற்கறைய
மாயையேயெனவீடணான்வலிக்கின்றதென்றான்
ஏயகாரியஞ்செய்திரென்றெழுந்தனனெம்மான்
போயொர்மாயையால்வீடணனிலங்கையிற்புக்கான். (உ௪௫)

ஆனமாயைகண்டறிநதுவந்தரக்கர்கோனுரைப்ப
வானரேசனுமிளவலும்வடதருநீழல்
சேனைசூழ்தரநிகும்பலைவேள்வியைச்சிதைத்தே
போனபோதெதிரிந்திரசித்தமர்புரிந்தான். (உ௪௬)

243. பாடுகண்டு - மரணத்தினைப்பார்த்து.

கறுத்திராவணிவிடுங்கணையெலாம்விடுகணையால்
இறுத்தொரம்பினாற்கையுடன்வில்விழவெய்தான்
குறித்தொர்சூலத்தாலிலக்குவனுயிர்கொளக்கொதித்தான்
அறுத்தொரம்பினாலவன்றலைகொண்டனனகன்றான். (உச

அடுத்துரைத்தனர்தூதுவரரக்கர்கோன்களம்புக்
கெடுத்திரங்கினன்மதலைதன்றலையிலாயாக்கை
படுத்தினன்றயிலத்திடைமூலமாப்படையும்
விடுத்துவந்தடிபணிந்தனராயிரவெள்ளம். (உச

மூலத்தானையையிராமன்மேன்முடுக்கித்தான்குரக்குக்
கூலத்தானைமேற்சென்றனனிராவணக்கொடியோன்
மூலத்தானைசென்றிராமனைமுடுக்கலுங்குரக்குக்
கூலத்தானைபோயிரிந்தனகுரைகடற்கப்பால். (உச

வேர்த்திருந்தவக்கவியெலாமங்கதன்மீட்பக்
காத்திநீயெனத்தம்பியைக்காவலாவிடுத்தே
ஆர்த்தவெம்படையாயிரவெள்ளமுமடியக்
கோத்தவம்பினாலேழரைநாழிகைகுறைத்தான். (உரு

அத்தனைச்சிலையிளவலோடரக்கர்கோனடர
வித்தினன்சரம்பலப்பலவிளவலும்விட்டான்
எத்தினன்னெடுமோகமாப்படைதொடுத்தெய்தான்
அத்தனைச்சரமாழியான்சரத்தினாலட்டான். (உரு

அறிந்துகூறினன்வீடணனுமெனவயில்வேல்
எறிந்தனன்னவன்மேனியிலிலக்குவனேற்றான்
பிறிந்துபோயினனிராவணன்மாருதிபெயர்த்தும்
செறிந்தமாமருந்தழைத்தலினுயிர்பெற்றான்சேயோன். (உருஉ

சென்றுகூடினனிராமனைத்தெசமுகத்தவனும்
வென்றிமூலமாத்தானைக்குவிருந்திடவமைந்தான்
பொன்றினாரவரென்பதுதூதுவர்புகலக்
கன்றினான்களம்புக்கனன்கவியெலாமவிய. (உரு

வேறு.

பூதலமளித்தோன்கூறப்புரந்தரன்கொடுத்ததிண்டேர்
மாதலிகொணரவேறிமகிழ்ந்தனனிராமனென்று

247. கறுத்து - கோபித்து. 251. வித்தினன் - [illegible]

காதினவரக்கர்சேனைகவிப்பெருஞ்சேனையான்ம
கோதரன்றன்னையாவிகுறைத்தனன்பகழியொன்றால். (உ௫௪)

அந்தரத்தரக்கன்போகவமலன்றேரனுகவிட்டான்
மந்திரமாயையெய்யஞானத்தால்வள்ளன்மாய்த்தான்
உந்தினசூலமொன்றையுகுத்தனனுங்காரத்தால்
கந்தரத்தலைகள்பத்துங்கரங்களுங்கணையாற்கொய்தான். (உ௫௫)

கிளைத்தனசிரமுந்தோளுங்கேடிலானெய்யவெய்ய
விளைத்ததோர்வரமுண்டென்னவிரிஞ்சன்மாப்படையைவிட்டான்
உளைத்தவன்றலத்துவீழ்ந்தானுடன்பிறப்பென்னுமன்பால்
இளைத்துவந்தடியில்வீழ்ந்தானிராவணற்கிளையகாளை. (உ௫௬)

மயன்மகள்வந்துமாய்ந்தாள்வருகெனநிருதர்க்கூவிப்
புயவலியிராமவேந்தைப்போற்றுதிரெனவிராமன்
இயமலியீமஞ்சேர்த்திஎன்றலுமரக்கன்சேர்த்தான்
செயமலியனுமன்றன்னைச்சீதைபாற்சேறியென்றான். (உ௫௭)

சென்றனனனுமனோடுவீடணன்சீதைதன்பால்
நின்றவணிகழ்ந்தவாறுநிரப்பிமஞ்சனநீராட்டி
ஒன்றியகலன்கள்பூட்டியுய்த்தனனிராமனோக்கி
நன்றுநீசெய்ததென்னநடுங்கினளெரிபுக்குய்ந்தாள். (உ௫௮)

ஏறிடவிமானந்தன்னில்யாவருமிறைவிதானும்
மாறினவசநதன்சேனைநின்றதுமலரவன்பால்
கூறினனனுமன்வாங்கிக்கொண்டபின்குரிசிறானும்
ஆறியபரத்துவாசனணிமலர்ச்சோலைபுக்கான். (உ௫௯)

வரதனுமனுமன்றன்னைவான்முறையேவலோடும்
பரதனையெரிபுகாமற்பண்ணினான்மீண்டபின்னர்
எரிமணிவிமானத்தேறியாவருமிளையகோவும்
அரிமலர்க்குழலினாளுமிராமனுமயோத்திசேர்ந்தார். (உ௬௦)

வேறு.

பொன்னியல்சீதைதன்புதல்வர்பாடிய
இன்னிசைமருவியவியல்கொள்காப்பியம்
தன்னிசையாதலாற்றரளவெண்குடை
மன்னவன்மைந்தரைமகிழ்ந்துகூறுவான். (உ௬௧)

---

256. விரிஞ்சன் - பிரமதேவன்.
257. மயனமகள் - மண்டோதரி.

வயம்புனையிராகவன்மைந்தர் தம்மையம்
புயந்திகழ்விழிமலர்புனைந்துநோக்கியிப்
பயன்கெழுகாப்பியப்பனுவலின்னிசை
இயம்பினரியாவர்நீர்யாவரென்றனன். (உகூஉ)

நம்பெரும்புகழினை நுனித்துக்கூறினான்
வம்புயர்கங்கைவான்மீகியம்முனி
தம்பமென்றவனுரைதலையிற்கொண்டுளோம்
எம்பெயர்குசலவரென்றுகூறினார். (உகூங)

நீடியதன்னுருநிகர்க்குமோரிரண்
டாடியபாவையனாருக்கங்ஙனே
பாடியபனுவலாற்பத்தின்மேலுமென்
கோடிசெம்பசும்பொனேகொடுமினென்றனன். (உகூச)

வேறு.

மன்னவர்வலிதின்வெளவாவளமனைக்கள்ளர்கொள்ளா
இன்னுயிர்க்கிறுதிசெய்யாவிழந்தபினிரங்கள்வேண்டா
துன்னியதுயிலையோட்டாதோகையர்காதல்கூட்டா
உன்னியபொருளதீட்டாமுடைமையினின்மைநன்றால். (உகூரு)

பூரியர்தமைவேந்தாக்கும்புவிபுரப்பிக்குந்துய்க்கும்
சீரியவுண்டிசேர்க்குந்தேவர்தம்முலகம்போக்கும்
காரியமனைத்துங்கூட்டுங்கருதலர்தம்மைவாட்டும்
கூரியதிதன்மேலில்லைகொழும்பொனீர்கொண்மினென்றார். (உகூகூ)

மூலமுஞ்சாகந்தானும்பலங்களுமுவந்துகொள்ளும்
மாலையமுனிவரோடவ்வனத்துறைவோமதானால்
காலைநீரருளுகின்றகாஞ்சனங்காஞ்சிரங்காய்
போலுமதெங்கட்கென்றுபுகன்றனர்புதல்வர்தாமே. (உகூஎ)

குருதிவேற்றானைவேந்தன்குசலவர்தம்மைநோக்கி
வருதிரோவெம்பாலின்னுமைந்தர்நீரென்றுகூறப்
பருதிவேற்றடைக்கைவேந்தேபாடுதுநாளும்வந்தென்
தரிமலர்த்தாரினானையகன்றுமாமைந்தர்போனார். (உகூஅ)

---

263. நுனித்து - சிறப்புற எடுத்து.

266. பூரியர் - கீழோர், கயவர்.

267. மூலம் - கிழங்கு. சாகம் - கீரையும். மாலைய - இயல்புடைய.

பன்னியபனுவலின்சொற்குசலவர்பாடுகின்ற
இன்னிசைகேட்டுநாளுமியல்புளியொருநாளந்தப்
பொன்னியற்சனகிபெற்றபுதல்வரென்றறிந்துவாங்கித்
தன்னிகர்புதல்வர்தம்மைத்தழுவினனெழுவுத்தோளான். (உ௬௯)

மருந்தெனத்திகழுமின்சொன்மைதிலிகற்புக்கந்த
அருந்ததிகற்புநாளுமறந்தலையறிவனேனும்
இருந்தழலதனின்மூழ்கியிலங்கையிலமரர்காணப்
புரிந்ததுபுரியுங்காணப்புரிவிப்பெனின்னுமென்று. (உ௭௦)

வேறு.

அன்னதன்மைகுசலவரையருளிநோக்கியருமறைகள்
பன்னுதவத்தின்வான்மீகிதன்பாற்போமினெனப்பகர்ந்து
மன்னர்முதலமாசனத்தைவிடுத்துப்போக்கிவளரொளியால்
பின்னுமுகில்போற்றிருமேனிவீரன்பின்னுமிவைசெய்தான். ()

வேறு.

வேதியர்வேந்தர்க்கெல்லாம்விடைகொடுத்தருளிநின்ற
காதலர்தம்மைப்புல்லிக்கதுமெனவெழுநதுகாதல்
மாதுமைதிலிதனோடுவரமுனிவருகவென்று
தூதரையேவிப்பைம்பொற்சுடர்மணிக்கோயில்புக்கான். (உ௭உ)

இருநிலமுழுதுங்காணவெரியிடைமூழ்கியின்னும்
வருகெனமடந்தைதன்னைமன்னவனருளிவிட்டான்
வெருவுறுதழலினுங்கண்வீழ்குறும்வண்ணங்காணு
தருளுடையாரினோடியருக்கனுமத்தஞ்சார்ந்தான். (உ௭௩)

வகைமிகுமன்னனெண்ணமறிநதபின்வல்லியெல்லாம்
முகைமுகமவிழ்ந்துகண்ணீர்சொரிந்தனமுளரியோடும்
தொகைமிகுமரமும்புள்ளுமொடுங்கினதொல்லைவேலைச்
செகதலமென்னுமங்கைதிகழ்முகஞ்சிவந்ததன்றே. (உ௭௪)

வேறு.

துண்ணெனும்படிதுன்னிமுன்றோன்றிடு
கண்ணிகந்தவர்கண்டனகாரிருள்
எண்ணிகந்ததிகாந்தமுமெங்கணும்
விண்ணுமண்ணும்விழுங்கினபோன்றதே. (உ௭௫)

தூபமென்குழற்றோகையர்தம்முடன்
தாபமேலிடத்தாமவர்மேற்செல்வான்

கோபமென்பதென்முன்னர்கொளுத்திய
தீபமென்னவெழுந்தது திங்களே. (உஎ௬)

வேறு.

கொங்கவிழ்குமுதமுங்கூடிவாடிய
மங்கையர்நயனமுங்குவிந்தவாரண
சங்கொடுவலம்புரிதமரவண்டுசூழ்
பங்கயம்பலவும்வாய்ப்படமலர்ந்ததே. (உஎஎ)

தகைமிகுமுலகினிற்சார்ந்துளோர்வயின்
மிகுகொடையவர்புகழ்விளங்குமாறுபோல்
வகைமிகுபெரும்புகழ்வானமீமிசை
அகன்மதியொளிகெடவருக்கன்றோன்றினான். (உஎஅ)

காலையகடன்பலகழித்துக்காவலன்
மாலைவந்தடியிணைவணங்கிமாதவர்
சாலமாநிதிபெறவளித்ததண்புனல்
வேலைவாயெதிர்வுறவிரைந்தமீன்களே. (உஎ௯)

நலந்திகழுலகொருநான்குமேவிய
வலந்திகழ்மன்பதைமருங்குஞ்சூழ்தரத்
துலங்கியநவமணிச்சுடர்கொளாடகம்
இலங்குசிங்காதனத்திராமனேறினான். (உஅ0)

வேறு.

அறைவேதங்கட்கறிவரியோனற்றைவைகல்கழிந்ததற்பின்
மறையோர்மன்னர்வைசியர்சூத்திரர்களாதிமண்ணுலகின்
உறைமாசனத்தையொளியாமலொக்கக்கூடக்கொண்டிருப்ப
நிறைஞானத்தவான்மீகிநீளநோக்கியிதுசெய்தான். (உஅ௧)

ஈனப்பழிக்குத்தானிறைஞ்சியிளையோன்றன்னைப்பிரிந்ததற்பின்
மானக்கூர்வேனிறத்தூன்றவைகற்றோறுந்தளர்வாளை
கானிற்றெய்வங்கண்டிரங்கக்கண்களாறாய்ச்சொரிவாளை
ஞானத்தவத்தோன்பின்கொண்டுநாதன்சவையினுட்புகுந்தான். ()

எண்ணுதிவளைத்துறந்தனனிவ்விறைவனென்பாரிறைவியைத்தம்
கண்ணாற்கண்டாரெல்லாருங்கண்கள்புதைப்பார்கையாரப்

279. மாலை - திருமாலினை.
280. மன்மதன - மக்கட்பரப்பு. ஆடகம் - ஒருவிதப்பொன.
282. மானம் - அபிமானம்.

பெண்ணுரிற்றுயருற்றுரில்லையென்றுபெரியோராம்
மண்ணேரிவ்வாறுரைசெய்யவந்துசீதையிதுசெய்தாள். (உஅங)

வேறு.

வடித்தபைங்குழலடிமறைப்பமாசுற
உடுத்தவெண்டுகிலினளொசிந்துபின்வரத்
தொடுத்தவெம்புற்றிடைத்தோன்றுமாமுனி
அடுத்தபேருலகுறையவையின்மேவினான். (உஅச)

விரிகதிரவனொளிவிளங்கவீசிய
எரிமணிப்பூணினுனிராகவன்னெதிர்
மருவுவன்மீகத்தின்வந்துதோன்றிய
அருமறைமுனிவனையடிவணங்கினான். (உஅரு)

வணங்கியம்முனியைமுன்வைத்துத்தானுமோர்
இணங்கியவாசனத்தினிதிருந்தபின்
உணங்கியமுகத்தினளொன்றுநோக்கிலள்
நுணங்கியபூமியைநோக்கிநின்றனள். (உஅகூ)

காதலிகற்புகாசினியின்மீதலால்
மீதலமிசையருந்ததியுமேத்துவ
தாதலையனகனையறிவல்யானெனக்
கோதிலாவருமறைமுனிவன்கூறினான். (உஅஎ)

அன்னதுவாய்மையொன்றுதிக்கங்கைபோல்
மன்னியகுலத்தொருமாசுகூறுவோர்
துன்னியநரகிடைத்துய்ப்பராலென
இன்னதுமீளவுமிசைத்திருந்தனன். (உஅஅ)

முனிவநீயருளியமொழியைவானவர்
அனைவருமியானுமுன்னறிவமாயினும்
கனைகடலுலகுளோர்காண்டல்வேண்டுமென்
றினையனவிராகவனெடுத்தியம்பினான். (உஅகூ)

நாட்டியவுலகொருநான்குமோர்வயின்
ஈட்டியசவைநடுவிசைத்தவம்மொழி
வாட்டடங்கயல்விழிமடந்தைமைதிலி
கேட்டனணிளைதொறுங்கிளருஞ்சிந்தையாள். (உகூ0)

---

284. தொடுத்தவெம்புற்றிடைத் தோன்றுமுனி - ஒன்றன்பின்ஒன்று நெருங்கிய புற்றினிடத்துத் தோன்றிய சிறந்தவான்மீகி முனிவன,

290. சவை - சபை,

ஒன்றியகேண்மையானுவந்தபோதினும்
கன்றியபோதினுங்கலந்தபோதினும்
நன்னெறிநிலைகெடாநலங்கொள்கற்பினை
இன்றொருபொருளினாலியம்பற்பாற்றதோ. (உகூக)

பூதலமிசையருந்ததியும்போற்றிய
தாதலையறிந்திருந்தவனிமீமிசைத்
தீதிலென்கட்டளைதிகழமேவிய
காதலன்றீதெனிற்கற்புண்டாகுமோ. (உகூஉ)

மறுத்தினியுரைப்பதென்வாயின்வைத்தநஞ்
சிறக்கிடினலதுயிர்க்கிறுதிசெய்யுமோ
அறக்கொடும்பழியுரைத்தருள்வராயினார்
பிறக்கெனாநெஞ்சினைப்பிளந்துகாட்டுகேன். (உகூங)

தேங்கமழ்குழலியைமுனிவன்சீறலென்
றாங்கவனுரைப்படியையந்தீர்கெனத்
தாங்கியகமண்டலத்தண்ணெனீரினை
வாங்கியாசமித்திவைவழங்கினாளரோ. (உகூச)

வேறு.

தன்கணவன்செய்கொடுமையினைத் தானுட்கொள்ளாச்சானகிதான்
என்கணவன்செய்தனவெல்லாமிதமாமெனக்கென்றேநினைந்த
பின்கணவன்றனுடல்கண்டுபெரிதாற்றாதுபோய்விழுந்து [ப்பாள்.
புன்கணவன்றன்பொறைதீர்த்தான்பொற்றாள்வணங்கிப்புவிக்குரை

வினைப்பாசத்தையறுத்தமுனிவேள்விகாத்துமிதிலைபுகுந்
தெனக்காவீசன்வில்லிறுத்தன்றெனைக்கைப்பிடித்தவெழிலாரும்
புனைக்காயாம்பூநிறத்தானையன்றிமற்றோர்புமானையான்
மனத்தால்வாக்கானினையேனேல்வழிதாவெனக்குமண்மகளே. ()

வேறு.

வருந்தியேபயந்தநீமற்றென்கற்புமவ்
வருந்ததிகற்புமொன்றானதென்றிடின்
பெருந்துதிமாநிலம்பிளத்தியென்றனள்
இருந்துதியமாருமேத்துங்கற்பினாள். (உகூஎ)

292. காதலனதீதெனில் - நாயகன் குற்றமானசெயலென்று கூறினால்.
294. ஆசமித்து - ஆசமனஞ்செய்து.

பலதலைமாசுணப்பள்ளிமேவிய
நிலைபெறுகற்பினாணிதிகொண்மேனியாள்
மலைமுலையாகத்தாண்மாரிக்கூந்தலாள்
அலைகடலாடையாளவனிதோன்றினாள். (உகூஅ)

சேணுலாவியதலமடந்தைசீதைதன்
பூணுலாவியபுயம்பொருந்தப்புல்லுறீஇ
வாணிலாவியகதிர்வழங்கல்செல்கலாக்
கீணிலைப்படலமுங்கிழியப்போயினார். (உகூகூ)

தீதலதென்வயிற்றிகழ்ந்ததிங்கனே
ஆதலிதென்கொலென்றையமெய்திடக்
காதலிபோனதோர்வழியுங்காண்கிலான்
பூதலமடந்தையைப்புலர்ந்துசீறினான். (௩00)

முனிவனாரங்கையின்முகந்துகொண்டவக்
கனைகடல்புடைத்திடக்கிடந்தகாசினி
பனிமதிவேணியான்பாவம்போக்கிய
புனிதனோரடிக்கிடம்போந்ததில்லையால். (௩0௧)

குயிற்றிடப்புனைந்தநன்மவுலிக்கோளராத்
துயிற்றிடைக்கிடந்ததுஞ்சூகரத்தினார்
எயிற்றிடைநாகத்துமெங்கணாயகன்
வயிற்றிடைக்கிடந்ததுமறந்ததென்கொலோ. (௩0உ)

கடறிரைத்துரப்பவுங்காண்கிலாமையன்
றடனெடுஞ்சிலைவளைத்தம்புநான்விடப்
படரெரிகொளுத்தியபௌவந்தன்னிலோர்
திடர்கொலோமறைத்ததுசீதைதன்னையே. (௩0௩)

பூதலந்தன்னையிப்புணரிசேறெழப்
பாதலத்தழுந்திடமிதிப்பென்பாவியென்
மாதவிதனைமிகவருத்தங்காண்குறும்
ஆதலினாலதற்கென்றுமாற்றலேன். (௩0௪)

இன்னனவுரைத்துரைத்திகலிராகவன்
துன்னியபுவியினைத்துணிப்பனென்றுழிப்

---

298. மாசுணப்பள்ளி - அனந்த சயனம்.
299. தலமடந்தை - பூமிதேவி.
301. புனிதன் - மோகினி யுருவங்கொண்ட திருமால்.
302. சூகரத்தினார் - சுவேதவராகப்பெருமாள்.

பொன்னிகர்சததளப்பூந்தண்கோயிலில்
மன்னியபிதாமகன்வந்துதோன்றியே. (௩௦௫)

வானகமாருதம்வன்னிநீரெனும்
போனகம்விரும்பியோராலின்பொற்றளிர்
மேனலத்துறுதுயின்மேவிமேலைநாள்
கானிலத்துலகொருமூன்றுங்கண்டுளாய். (௩௦௬)

ஒப்பருநிலைமையாயுனக்குநான்சில
செப்புவதுளததுசிறிதுகேண்மதி
எப்பொருளாய்மிகவிருண்டவானகத்
தப்புறமாயுளேயடங்குநின்னுரு. (௩௦௭)

மின்னுளேபிறந்தொளிர்மேகமாமென
நின்னுளேபிறந்தொளிர்நிலையில்யோனிகள்
உன்னுளேபிறந்திறந்தொளிப்பதல்லதிங்
கென்னுளேபிறப்பிறப்பென்னலாகுமோ. (௩௦௮)

முந்தைநாட்புலத்தியமுனிவன்மைந்தனார்
தந்திடுந்தசமுகன்றன்னைக்கொல்வதற்
கிந்தநாளமரர்வந்திரந்ததாலிவண்
வந்துமானுடவர்தம்வடிவிற்றோன்றினாய். (௩௦௯)

ஆதிநீயுலகெலாமளிததுக்காக்குறும்
போதுநின்னுந்தியிற்பூததாமரைத்
தாதியறமணியத்தனிப்பொகுட்டினின்
மீதுநின்றுலகெலாம்விரிந்ததலலவோ. (௩௧௦)

வேறு.

ஆதலாலுனக்கன்றுவந்தவிப்
பூதலத்திடைபுக்கமங்கைநின்
காதன்மங்கையாலவளைக்காண்பதுன்
தீதிலாநிலத்தென்றுசெப்பினான். (௩௧௧)

ஆதலாலுனக்கறிவுமன்னினால்
தீதனான்றன்னைச்செய்கொணாததற்

---

309. மைந்தனார் - விசிரவசுமுனிவன.

311. தீதிலாநிலத்து - பகைபிணி மூப்புமரணமாதிய குற்றமற்ற பரபபத மாகிய இடத்து.

கேதுவாலிவையியன்றதேயெனு
வேதநான்முகன் விரித்துக்கூறினான். (௩௧௨)

அங்கண்வானகத்தமலனுமெனப்
பங்கயாசனப்பரனுரைத்தலும்
துங்கவார்சிலைத்துணைநெடும்புயச்
செங்கண்வீரன்வெஞ்சினமொரீஇயினான். (௩௧௩)

கதலிசூழ்பொழிற்கங்கைநாடனும்
மிதிலைமெல்லியல்பயந்தமென்னகைக்
குதலைமென்மொழிக்குசலவப்பெயர்ப்
புதல்வரைத்தழீஇவ்வள்விபுக்கனன். (௩௧௪)

அப்புயத்திடத்தரிவைமையப்புனை
அம்புயத்தில்வைத்தாளுமன்பினான்
வெம்பரித்தொகைவேதவேள்வியோர்
ஐம்பதிற்றிரண்டவைமுடித்தனன். (௩௧௫)

சேடனுயிரஞ்சிரமசைந்திடக்
கோடுலாமதிக்குழவியன்னகோட்
டோடையானையினும்பரேறியே
ஆடன்மாவினனயோத்திமேவினான். (௩௧௬)

தன்குடைக்கிடைத்தலமொரேழையும்
பொன்பெய்மாரியான்பொதுவறப்புரந்
தன்பர்சூழவாளரசர்போற்றநீ
டின்பமேதுகர்ந்தினிதுவைகினான். (௩௧௭)

ஆ திருவிருத்தம் - ௩௨௯௪.

---

## ௧௬-வது, கந்திருவர்வதைப்படலம்.

இன்னதன்மையாலினியவையகம்
பன்னியாளுநாட்பலகழிந்தபின்
கன்னன்மென்மொழிக்கவிர்கொள்செய்யவாய்
அன்னகோசலைக்கந்தமுற்றதால். (௧)

---

315. வெம்பரித்தொகை வேதவேள்வி - வேகத்தினையுடைய குதிரையை வேதமந்திரத்தாற்கொன்று செய்யும்யாகம்.

316. ஆடன்மாவினன் - வெற்றித்திருவினையுடைய இராமன்.

317. தலம் - பூமி. ௧. கவிர் - முருக்கலர்.

பொன்னின்வையமும்புரவியிட்டமும்
மன்னுவேழமுமறவர்வெள்ளமும்
துன்னமன்னவர்தொழுபதாம்புயன்
அன்னடாளின்மேலழுதுவீழ்ந்தனன்.　　　　(உ)

வேறு.

கொன்னேர்வைவேற்கோசலமன்னன்குலமங்காய்
அன்னேயன்னேயத்தனுமுன்னேயகல்வுற்றான்
இன்னேநீயுமென்னையுநீத்தாயெனின்யானும்
பின்னேவந்தேன்வந்தேனென்றேபேதுற்றான்.　　　　(ங)

கொந்தார்கோலக்கோசலநாடன்குலமங்காய்
சந்தார்மார்பத்தசரதனின்பத்தகைவல்லி
அந்தோவந்தோவையனைநாடியடியேனும்
வந்தேன்வந்தேனென்றுதளர்ந்தேதமாழ்குற்றான்.　　　　(ச)

பொன்னேமுத்தேபூதலமேழும்புகழ்மேவும்
தன்னேரில்லாத்தசரதன்மார்பந்தனியாள்வாய்
அன்னேயன்னேயென்றிருசண்ணீரறவார
என்னேயென்னேயென்றிளையோருமிடருற்றார்.　　　　(ரு)

வேறு.

அழலிடைமிதிப்பபோலடிநிலத்துற
இழையணிமுலைத்தடத்தெற்றியெற்றியே
குழலெனவிழைந்துநைந்தேங்கிக்கோதிலா
மழலையஞ்சொல்லினார்மாழ்கிவாடினார்.　　　　(சு)

செழுந்தடங்காரகில்சிறந்தசந்துடன்
அழுந்திடவிடமகமடுக்கியாடவர்
முழங்குசங்கொலியெழுமுரசுபேரிகை
தழங்கிடச்சடங்குகள்சமைந்தபின்னரே.　　　　(எ)

கரத்தணிசிரத்தினர்கவிழ்ந்தகண்ணினர்
இரைத்தெழும்பலசனமிரங்கிப்பின்செல
அரத்தமென்கரத்தியரஞ்சொல்வஞ்சியர்
விரைக்கருங்குழலியர்விமானமேறினார்.　　　　(அ)

இடரினையுழந்துழந்தேங்கிக்கண்ணினீர்
அடலமர்மார்பகத்தருவிபோலுகக்

---

3. பேதுற்றான - வருந்தினான.

7. சந்துடன் - சந்தனக்கட்டைகளுடன.

கடனவைகழிந்தபின்காதலன்னையை
படரெரிமயானமேற்பள்ளிசேர்த்தினார். (௯)

சேதனர்புகறரத்திலமைவார்புனற்
கோதினன்பிண்டமுங்கொடுத்துசெங்கையால்
பூதனங்கோதனம்பொலன்செய்பல்கலன்
மாதனமறையவர்பெறவழங்கினான். (௧௦)

இன்னநாள்சிலகழிந்திருந்தகாலையில்
கன்னல்செய்மொழியள்கைகயன்மடந்தையும்
துன்னியகுழற்சுமித்திரையுமென்னுமிவ்
வன்னையரிருவருமந்தமெய்தினார். (௧௧)

மடங்கல்போன்மொய்ம்பினான்வரிசையின்வழா
தடங்கலும்விதிமுறையமைத்துமாரிபோல்
கடன்களுமறையவர்களிக்கநல்கியே
தடம்புனல்படிந்துநற்றானஞ்செய்தனன். (௧௨)

வேறு.

தானைமன்னர்தொழுகழற்காற்சத்துருக்கன்றனக்குமிகை
வானரர்க்குமன்னனுக்குமகனுக்கும்மம்மாருதிக்கும்
மீனமமருங்கடலிலங்கைவீடணற்கும்விடையருளி
ஏனைமன்னர்புடைசூழவிலங்குமொளியாசனத்திருந்தான். (௧௩)

வேறு.

மொய்காமர்விழியார்தமுலைமுகடுபொருதடந்தோட்
கொய்கேயவரிமுராரர்க்கொடைப்பரதன்றிருமாமன்
கைகேயன்குலக்குருவாங்கலைமறைதேர்காசிபனும்
பொய்கேதமில்லாதபுகழ்முனிவனவைபுகுந்தான். (௧௪)

பூரணமாயகம்புறமும்புளகிப்பப்புனைதுளப
நாரணன்றன்றிருநாமநவின்றெருகான்மறவாத
ஆரணமாமறையோனையடிவணங்கிநீவந்த
காரணமேதுரையென்றுகதிர்வடிவேலவனுரைத்தான். (௧௫)

போதுபுனைகமழ்தாராய்புகழ்புனைகாந்திருவர்களுன்
மாதுலனையமர்தொலைத்துவவ்வினரால்வளநாட்டை
ஏதியினாலவரையெறிந்தினிதாள்கையியல்பென்று
ஓதுமறைமுறைதெரிந்தவுயர்முனியுமுரைசெய்தான். (௧௬)

9. கடன் - சூரணோத்ஸவம்.

14. கேயம் - இசைப்பாட்டு. 16. ஏதியினால் - ஆயுதத்தால்.

தக்கனுடன்புட்கரனைத் தடமகுடம்புனைவித்துத்
திக்குநிகழ்காந் தவரைத்திறன்முருக்கிச்சிந்துநா
டொக்கவுடன்றடிப்படுத்தியொருதனிநீ வருகவெனு
மக்களுடன்பரதனையும்வரன்முறையேசெலவிடுத்தான். (கஎ)

வேறு.

குறைமதியனையவெண்கோட்டுக்கோலமா
நிறைமதிபுரைவன திலகநெற்றிய
சிறைமதுகரங்களுந்தேனினீட்டமும்
அறைதருமும்மதத் தருவிவாரணம். (கஅ)

நிழலொடுமலைவனநீள்கரத்தன
அழலுறுவிழியனவசலம்போல்வன
தழைசெவியுடையனசமரந்தீர்ப்பன
மழையெனவதிர்வனமதுகைவாரணம். (ககூ)

சூட்டியமணியனதுலங்குசெவ்வரக்
கூட்டியவுருளையவொளிகொள்பொன்னினல்
கோட்டியகொடிஞ்சியகுதிரைநான்குடன்
பூட்டியசெழுமணிப்பொலன்கொடேர்பல. (உ0)

நிறப்பலமணியெனுநிறங்களெண்ணில
உறப்பெரும்புவிபெறுதென்னவும்பரில்
பறப்பனபோல்வனபதுமத்தெண்ணன
பிறப்பனபெருங்கடல்பெரியதிக்கன. (உக)

நிலத்தடியிடம்பெறுதென்றுநீண்டவால்
தலத்திடைமிதிப்பபோற்றுவுங்கோளன
வலத்தினுமிடத்தினும்வாவுங்கொட்பன
குலத்தினுக்கிசைந்தனகுரகதங்களே. (உஉ)

ஒத்ததுபிறந்தனயூகத்தாயின
வெத்தகப்பிறந்தனவெள்ளைவாணிறம்
பத்ததுமுகத்தினும்பயந்தபான்மைய
வத்தியிற்கடியனவாசியிட்டமே. (உரு)

சூர்முகத்தனுமிழ்தோமரத்தினர்
கூர்முகப்பகழியர்கொதித்தநெஞ்சினர்

18. மதுகரங்களும் - வண்டுகூட்டங்களும்.
19. அசலம் - மலை. சமரம் - போர்.

கார்முகக்கரத்தினர்கழலர்கல்லெனத்
தார்முகத்தெழுவுதோட்டறுகண்வீரரே. (உச)

இனையனகரிபரியிரதம்வாளரி
அனையவரங்கரன்றிமுன்செலப்
பனிமதிவெண்குடைப்பரதன்றானுமோர்
இனமிகுகதிர்மணித்தேரிலேறினான். (உரு)

அந்தரமதிர்வுறவார்க்குமார்ப்பொலி
இந்திரன்றிசைமுதலெட்டுங்கிட்டிடத்
தந்திரத்தலைவருந்தழுவிச்சூழ்வர
மைந்தருமணியணிவையமேறினார். (உகூ)

அமிழ்த்தினுநுகர்தருமயோத்திமாநகர்
இமிழிசைவாயில்விட்டேகுமப்படை
கமழ்த்தருதுழாய்மதுக்கண்ணியானுகர்ந்
தமிழ்தருமுலகினையொத்தவாமரோ. (உஎ)

முரசொலிகிளையொலிமுழங்குவாழ்த்தொலி
புரசணியானையின்புனைந்ததேரொலி
அரசொலிநெடும்பரியமைந்ததேரொலி
பரசொலிசங்கொலிபரந்ததெங்குமே. (உஅ)

பாதனவெழும்படைப்பரப்பினாலிந்தத்
தரைதிரைசுவறினசாற்றவேண்டுமோ
சுரநதிசுவறினதூளியான்மறைந்
திரவிதனெழுபரியேகிற்றில்லையால். (உகூ)

பாகைவென்றடர்வனபடர்மருப்பின
மோகவெங்கரிசொரிமும்மதத்தினால்
ஓகைவெம்புனல்பரந்தோடைநீடிய
ஆகவெம்பாலையுமருதமானவால். (௩௦)

எரிதவழ்பாலையுமிருங்குறிஞ்சியும்
அரிதவழ்முல்லையுமயங்கொணெய்தலும்
ஒருதனிநிகழ்தபினுடையானையான்
மருதமாஞ்சிந்துநாடதனின்மன்னினான். (௩க)

26. வையமேறினார் - தேரேறினார்.

வேறு.

வந்துபாதன்றனதுமைந்தருடனேயும்
சிந்துவளநாட்டினிடைவிட்டசெயலெல்லாம்
புந்தியுருகச்செவிபுகப்படுகதத்தால்
கந்திருவர்கேட்டனர்கடுத்தவதனத்தார். (௩௨)

கரித்தெழுசினத்தினர்கரத்தொடுகரத்தைப்
பொருத்திவடவெற்பனபுயத்திடைபுடைத்தே
முரித்தபுருவத்தினர்முழங்குநயனத்தோ
டெரிப்பொறிதெறித்திடவிடித்துநகைசெய்தார். (௩௩)

பன்னியபுகழ்ப்பரதனைப்படமுருக்கி
மன்னியதன்மைந்தரையும்வாளுடைவரத்தால்
வெந்திடமுருக்கியிவர்தம்மைவரவிட்டோன்
தன்னுடன்மலைப்பமிதுவேசரதமென்றார். (௩௪)

செழுமின்மணியோடையதிசைக்கரிகளோடும்
'குழுமினகுலக்கிரிகள்குலைதரநலஞ்சேர்
கெழுமினநெடுந்திசைகள்கிழிபடவுரப்பா
எழுமினெனலுங்கடிதெழுந்ததுபதாதி. (௩௫)

வேறு.

முடுகியதானைநான்குமுகிலெனமுழங்கியார்க்கக்
கடுகியசேனைகாவற்காவலர்கவசம்வீக்கிச்
சுடுபடைதெரிந்துவானச்சுடர்மணித்தேரினேறிப்
பொடிகடலேழும்போர்ப்பப்பொன்னகர்ப்புறத்திற்போந்தார். ()

அதிர்ந்திடுந்தலங்கணுன்குமல்லிடைவில்லுக்காட்டும்
உதிர்ந்திடும்பகலேயும்பருடுவேலாமிரவிதன்றே
டெதிர்ந்திடுந்திசைகளெட்டுமெழும்புகைகாயகூடம்
முதிர்ந்திடக்கூகைபாடுமுதிபதுன்னிமித்தங்கண்டார். (௩௭)

அல்லொலிகடல்கணுன்கினுர்ப்பொலியன்னவீரர்
சொல்லொலிதுவன்றியார்க்குந்தூரியத்தொலிகைம்மாவின்
வல்லொலிகாகளத்தின்வயங்கொலிமதுகைவீரர்
வில்லொலிமயங்கவந்துவேந்தர்வெங்களத்தரானார். (௩௮)

---

33. வடவெற்பன - மேருவனைய.

34. மலைப்பம் - போர்புரிதும்.

தூக்கியமதத்தவாயதோல்கொடுதோல்கடாமும்
றூக்கியபுரவித்திண்டேர்றுவல்பரிதன்னினோடும்
வீக்கியகழற்கால்வீரற்வெஞ்சினச்சூரரோடும்
தாக்கினவிரண்டுசேனைசரமழைமயங்கிற்றன்றே. (௩௯)

வேலினைச்சிலவர்வாங்கிவிடுதலுஞ்சிலவர்வில்லால்
கோலினைவாங்கிக்கொன்றுகுறைப்பர்தங்குதிரைமீதே
தோலினைவிடுவர்விட்டதோலினைற்றுரகந்தன்னை
வாலினைப்பற்றியெற்றிமண்ணின்மேன்மலைதல்செய்வார். (சo)

இருவர்சென்றொருவர்தம்மேலிகல்செய்வரிகல்வாளோச்சி
ஒருவரோடொருவர்தாக்கியுருக்குவருதிரமாரி
சொரிவர்முன்றோளுமார்புந்துளைப்பர்போர்விளைப்பரோடி
வெருவரவிழித்துநோக்கிவெங்கணைமாரிபெய்வார். (சக)

பையெடுத்தனந்தனேத்தும்பங்கயத்தனையசெங்கண்
மையெடுத்தனையமேனிமானவன்வகுத்தசேனை
நெய்யெடுத்திலங்குபாணநெருங்கலின்ஞெகிழிபோலக்
கையெடுத்தநந்தகோடிக்கவந்தநின்றாடிற்றன்றே. (சஉ)

காந்தவர்சேனையெல்லாங்களநிடைமடியக்கண்டு
வேந்தருஞ்சிலைகோல்வாங்கிவிரைபரித்தேர்மேல்விட்டார்
நாந்தகவுழவன்பின்னோனவமணிக்கழற்கால்வீரன்
பாந்தளின்பாரந்தீர்ப்பான்பரதனுமதனைக்கண்டான். (சங)

வேறு.

தந்திரமுங்கரிபரியுந்தாமமணித்தேருமிக
அந்தரமுற்றிகழ்ந்தசெயலறிந்திருந்துமறிகிலீர்
உந்திருமற்றுயிரிருநதாலுமுதிருந்துமுண்ணலாம்
கந்திருவர்போமினெனக்கனைத்துருமினகைத்தனரால். (சச)

வேறு.

உன்னையுயர்தானையுடனேடைவொர்சரத்தால்
வெந்நிடமுருக்கவரிதல்லவதுவேண்டேம்

39. தோல்கொடு - யானைகளைக்கொண்டு.
39. அயங்கொள் - நீரையுடைய.
42. ஞெகிழிபோல - குறைகொள்ளியையொப்ப.
43. நாந்தகம் - ஒருவாட்படை விசேடம்.
44. தந்திரமும் - காலாட்படையும்.
45. வெந்நிட - முதுகிட.

என்னவுரைசெய்தனகொலென்றுலகில்வாகை
மன்னவநின்மைந்தருடன்மறிகைதிடமென்முர். (சரு)

வெங்கண்மதகரிநிரைகண்மிக்கவுளவேனும்
சிங்கவிளங்குருளையொடுசென்றுசெருச்செயுமோ
இங்கிவர்களிளையரெனவிகழலெனவுரையாத்
துங்கநெடுஞ்சிலைவளைத்துச்சுடுசரங்கடுரந்தான். (சசு)

வேறு.

கரியற்றனகொடியற்றனவாகனத்துறுகவனப்
பரியற்றனபணையற்றனபடையற்றனவிடையே
வரியற்றனசிலையற்றனமரமற்றனவயவார்
கிரியற்றனவெனவற்றனகிளர்பொற்கொடியணிதேர். (சஎ)

பொருதந்திரவிதமாயுளபுணரிப்படைவிரவார்
ஒருகந்திரவிதமாயுளவுயர்வெங்கணைவிடலால்
மிருகந்திரிகிரிபோலுயர்மிகுதேரதன்மிசையே
வருகந்திருவரும்வார்சிலைவளைத்தாசெருவிளைத்தார். ()

பாருடினகழுகாடினபடர்சோரியின்றிரைப்பே
ராருடினவலகைக்குலமடர்காகமுங்கழுகும்
மாருடினர்வேருடினர்மகிழ்ந்தாடினர்மறவோர்
நீருடினதிசையெங்கணுநிமிர்ந்தாடினகவந்தம். (சகூ)

வேறு.

உரமதுடையவுயர்தலைகள்புயமதறவுரியவலியதனுவளையவே, சரமதெதிரவவர் தலைகடவிடிபடு தொகுதியெனமுடிகடறியவாள், கரமொடிறவுலவைகழலவிகடதட கருணிகதறவெயிறுகமிகும், புரவிகழுணிய விரதவுருணெரிகொள பொடிசெய்திடுமிவனெய் சரமரோ. (ருo)

இருவரொருவழியி னிகழவிவர்முடுகி யிகல்செய்பவர்தமது மறம்விடார், ஒருவரொருவழியி னுராறுமுருமினென வுராறுகுரலினர்க ளுலகெலாம், பருவமழைமுகில்கள் பொழிவதெனநெடிய பரதன்விடுபகழி மழையினல், வருவன்வருவனவன் வருவன்வருவனென வெருவிமலைமுழையி னுழைவரால். (ருக)

மதுரகளபதள மகளிர்மகிணர்படர் மருவுமுடறழுவி யிடைவிடார், உதிரநதியிடையி னுழுகியுயிரொழிவ ருரகபணநெளிய வுடு

46. குருளையொடு - குட்டியொடு.

வும்வெங், கதிருமதியுமுக வதிருமதகடாட கரியுமிருக்கவன விரதி
மும், குதிரையணியினொடு துணியவொருவனொரு கொடியபகழி
விடு களமெலாம். (௫௨)

வேறு.

முரிதருஞ்சிலைமூன்றுகோடிகந்
திருவர்பட்டவச்செங்களத்தினில்
பரிகள்பட்டவும்பகழிபட்டவும்
கரிகள்பட்டவுங்கணக்கொன்றில்லையால். (௫௩)

ஓரிடங்களுமொழிவுறுதுவெம்
பேரிடங்கரின்பிணையல்காதிடைக்
காரிடங்கள்வெங்கழுகுமோரியும்
பாரிடங்களும்பருந்துமானவால். (௫௪)

அந்தரத்தின்மீதகன்றகாதவெம்
பந்தரிற்கொடைப்பரதனங்ஙனே
கந்தமிக்கபைங்கமலக்கையினால்
மைந்தர்தம்மையேவாகைசூட்டினான். (௫௫)

தாதுசேர்மலர்த்தாமவண்டுசூழ்
சீதமென்புனற்சிந்துநாட்டினில்
ஆதிவானவனளகைபோலவே
ஏதமில்புரமிரண்டுசெய்வித்தான். (௫௬)

வேறு.

திக்குநிகழ்புகழ்ப்பரதன்றீதிலவாநதினமென்ப
மிக்கமறைமுறைமையினால்வேதியரோடினிதாய்ந்து
புக்கமிகைப்புட்கரற்குப்புட்கரமாநகர்போர்வில்
தக்கனுக்குத்தக்கசிலைநகரிவர்க்குத்தான்கொடுத்தான். (௫௭)

மானவனத்திருமகர்க்குமதியனையவெண்குடைக்கீழ்ச்
சோணைமுகில்சுரந்தோங்குந்தோகுபுனலால்வயல்விளையும்
ஆனபுகழ்ச்சிந்துநாடடிப்படுத்தியெடுத்தங்ஙன்
ஏனைமன்னர்தொழுதிறைஞ்சவெதிரறவீற்றினிதிருந்தான். (௫௮)

விம்பமதிவெண்குடைக்கீழ்விரையளியினிசையகலா
வம்பலர்தார்மைந்தர்க்கும்வளநாடுவளம்படுத்திச்

---

52. களபம் - சந்தனம். 54. பாரிடம் - பூதம்.

கம்பமதகரிபரிதேர்காலாளுமிகவருளி
அம்பொனெடுமணிமுடியானயோத்திமாநகரடைந்தான். (௫௯)

பனிமதியேநிகர்வதனபங்கயத்துப்பனிமொழியார்
கனகமணிபுனைகாம்பிற்கவரிகொடுபணிமாறத்
தினகரன்போலொளிவீசுஞ்செழுமணியாசனத்தின்மிசை
இனிதிருந்தகனைகழற்காலிராகவனையடிபணிந்தான். (௬௦)

காரிருண்டதெனுநிறத்துக்காந்திருவர்கடற்சேனை
போருடைந்துபுறங்காட்டப்பொருதவரைத்தொலைத்ததுவும்
வாரிருந்தகனைகழற்கான்மைந்தருக்குவளநகரம்
ஓரிரண்டுவகுத்ததுவுமுரைத்தனனவ்விரைத்தாரான். (௬௧)

ஆ திருவிருத்தம் - கஉருரு.

---

## கஎ-வது, சந்திரகேது நகர்ப்படலம்.

அந்தவுரைகேட்டுமகிழ்ந்தடற்பரதன்முகநோக்கி
தந்திரமுங்கரிபரியுந்தரைப்படவென்றொருநகனையால்
இந்திரனையமர்தொலைததானிகன்மலைக்கும்பெருந்திறலான்
மைந்தருக்கும்வளநாடுவகுத்துரைத்தியெனவுரைத்தான். (௧)

காமலியக்கயலுகளுங்கழனிமிசைக்கதிர்விரிக்கும்
சரோருகமேற்சங்குதங்குசநதிரகாந்தப்பெயரால்
பராவரியவளநாடுபணித்தியெனப்புகழ்ப்பரதன்
இராகவனையடிவணங்கியெழுமுரசமறைவித்தான். (௨)

கந்தமிகுநறுநெரியற்கனைகழலங்கதனுக்கும்
சந்திரகேதுவுக்குமிகைச்சமரமிகுதனியாண்மை
இந்திரனையமர்தொலைத்தோனிகல்தொலைத்தோன்பிதாவாகும்
மைந்தரவரிவர்தமக்கேமணிமகுடம்புனைந்தாலும். (௩)

மறங்காலுங்கரிபரிதேரவயவீரரெனுநான்கு
கறங்காழிப்படையேவிக்கழல்புனையங்கதனைக்கொண்

---

61. விரைத்தாரான - மணமாலையான.

1. பெருந்திறலோன் - பேராற்றலினையுடைய இலக்குமணன்,

2. சரோருகமேல் - தாமரைமலர்மீது.

3. பிதாவாகும் - தந்தையாகவுள்ள.

டிறங்காதகிலையேந்தியீரேழாண்டிடைபிரியா
துறங்காதவில்லினையுமுடன்போகென்றுரைசெய்தான். (௪)

ஐங்கோலையாமாறனையவதிமதத்தவனுமிழும்
பைங்கண்ணவேழுறப்பும்படிதோயும்பான்மையன
வெங்கதவெண்டிசைக்கரியோடமர்விளைப்பதெனப்படுதந்
தங்குமணியோடையனதடக்கைமதகதக்கரிகள். (௫)

நிழல்செய்ததழைசெவியநிலந்தோயுநீள்கரத்த
சுழல்விழியகூற்றேபோயுந்தொகைப்பருந்தும்பின்செல்ல
அழல்விழியவதிமதத்தவயின்மருப்பினடல்வீரர்
சுழல்சுளிவபுகர்முகத்தகடகரிகள்பலகோடி. (௬)

இயல்வனத்திற்பிறந்தபேரிளங்கிளியினிறத்தனவும்
மயினிறத்தவளைநிறத்தமணிநிறத்தமைநிறத்த
பயினிறத்தகடலகத்தும்பலதேசத்தும்பிறந்த
குயினிறத்தகொய்யுளையகுரகதங்கள்பலகோடி. (௭)

கோகனகமுகையனையகொழுங்கனகக்கொடிஞ்சியன
பாகனகமகிழவயப்பரிபூணும்பான்மையன
நாகனகங்குழைபமிசைநடந்தோடுந்தடங்கால
மாகனகநெடுநதுவசமணிததிண்டேர்சதகோடி. (௮)

உருத்துநெடுங்கதிர்வேல்கொண்டிரங்கிழிப்பதல்லாது
மிருத்துவரினுங்கூடிவெங்காட்டிமீளாதார்
எதிர்த்துவருங்கழல்வீரரிரியநிலைக்கிரியெறியும்
மருத்துவினைநிகராகும்வயவீரர்கணக்கில்லார். (௯)

புனைமணியவியன்மார்பர்புரிவளைகண்மிகமுழங்க
இனைபரித்தானையுடனிகல்வடிவேலிலக்குவனும்
துனைபரித்திண்டேரேறிச்சுடர்மடங்கத்தடந்திசைமேல்
கனைகழற்கான்மைந்தருடன்காரகாபதியமைத்தான். (௧0)

வேறு.

மதமுகநதிடமபனுடைமறைமுனிநெறியே
திதியும்வாரமுந்தினமுமென்றின்னனதெரிந்து
கதிர்நெடும்புனற்காரகாபதியினையமைத்தான்
துதிமிகுந்தெழுவாகையின்றொடைபுனைதோளான். (௧௧)

9. மிருத்து - யமன். மருத்து பெருங்காற்று.
10. வியன்மார்பர் - அகன்றமார்பினர்.

நெடுந்தெருக்களுநியமமுநீளுறுமறுகும்
தடங்கொள்கூலமுஞ்சந்தியுஞ்சதுக்கமுமணியின்
இடுஞ்சுடர்த்தொடுமிஞ்சியுமஞ்சுவந்துறங்கும்
தொடுங்கிடங்குமேற்சூளிகைவாயிலின்றொகையும். (க௨)

கருதிநீடியகருமணிக்கூலங்களொருபால்
பரிகணீடியபருமணிப்பந்திகளொருபால்
விரிநெடுங்கொடித்தேரணிவீதிகளொருபால்
உருவின்மேகத்தினுயர்மணித்தோரணமொருபால். (க௩)

பனகர்வாழ்திருநகரமோபருமணியதனால்
தினகராதிபர்நகரமோசித்தர்கணகரோ
அனகவிந்திரனகரமோவளகையோயாதோ
கனகமாநகர்க்குவமையோகணிப்பதற்கரிதால். (க௪)

ககனமங்கையர்கழுத்தெனக்கமுகினநெருங்கும்
வகைநெடும்புனல்வளநகர்வருபவர்க்கெல்லாம்
நகலருஞ்செழுநவமணியொளிநனிமயங்கிப்
பகலுமேனையவிரவுமென்றொருபரிசிலதால். (க௫)

படைத்தமாமுனிபாரெலாமொருவழிப்படுத்தி
அடைத்ததொக்குமிவ்வணிநகரோவியத்தணிந்த
மடைக்கண்மங்கையர்முகமெனமதியின்மேன்மறுவைத்
துடைப்பபோன்றனதுகிலணிதேர்மணித்துவசம். (க௬)

மதுரமென்மொழிமடநதையர்வடம்பரிந்திட்ட
கதிர்கொணித்திலப்பன்மணியெங்கணுங்கலங்கி
உதிர்தலாலும்பரிழுக்கிவீழ்ந்தொழிகதிர்சிதறி
மதியுமீன்களுங்கிடந்தவாபோன்றுளமறுகே. (க௭)

அன்னமாநகராங்கவற்கருளியாங்கவற்குப்
பொன்னும்வையமும்புரவியுங்கரிகளும்புகர்வேல்
இன்னவீரற்கீதளித்துமீண்டிராகவற்றொழுவே
மன்னர்மன்னவயோத்திமாநகர்சென்றுபுக்கான். (க௮)

தடங்கண்மங்கையர்தமனியச்சாமரமியக்க
மடங்கலாசனத்திருந்தவாளிராமனைவணங்கிக்

---

12. இஞ்சியும் - மதிலும்.
14. பனகர் - நாகர்.

கிடங்குசூழ்நகரியற்றியகிளர்முடிமதலைக் [ன்.
குடன்கொள்சேனைநான்குடன்கொடுத்தனவெலாமுரைத்தா.

அன்னதம்பியோடினிதிருந்தகமகிழ்ந்தொருநாள்
பன்னுசெஞ்சிலையிராகவன்பணிக்குடைப்பரதன்
தன்னைச்சந்திரகேதுவைச்சந்திரகாந்தம்
என்னுநாட்டிடையிருத்திநீவருதியென்றுரைத்தான். (உ0)

ஆனைதேர்பரியடற்படைத்தலைவரென்றனைத்த
சேனைநான்குடனெடுமணித்தேர்தெரிந்தேறிச்
சோனைமாமுகிலாமெனத்தூரியந்துவைப்ப
ஆனமைந்தனோடேயொத்திமாநகரினையகன்றான். (உக)

பாழிவெண்கொடிப்பருமணிக்கொடிஞ்சியநெடுந்தேர்
ஆழியானெரித்ததுவரைக்குலமெலாமடையப்
பூழியாயினபுரவியின்விலாழியிற்புகர்வெம்
சூழியானைமும்மதத்தினிற்றுகளடங்கினதால். (உஉ)

கான்குலாவியகனவரைநெரிதரக்கழனி
மீன்குலாவியதரைநெடுந்துகளொழவிரைதேர்
வான்குலாநதிசுவறிடவழங்குவெம்படைகள்
நான்கினோதைபானரலைவாயொலியடங்கினதால். (உங)

பாலைமாநிலங்கடந்துதண்குறிஞ்சியிற்படர்ந்து
சாலமுல்லையுநெய்தலுங்கடந்துபோய்த்தமர
மாலைவண்டினமுரல்வனமருதமென்பணைசூழ்
ஏலவார்பொழிற்சந்திரகாந்தநாடிறுத்தான். (உச)

செம்பொற்கோபுரவாயிலிற்செழுமணிநீலத்
தம்பத்திற்குளிர்தாளவெண்சாளரமுகப்பின்
விம்பக்கோபுரவேயினமாளிகைவிதான
அம்பொற்சந்திரகாந்தையென்றணிநகர்சமைத்தான். (உரு)

வேறு.

சந்திரகேதுவைத்தானைநான்குடன்
இந்திரனென்னமாநகரிருத்தியே
பந்திவெம்பரியினிற்பரதன்மீண்டுவந்
தந்தமிலிராகவனடியிறைஞ்சினான். (உசு)

---

22. சூழியானை - முகபடாமணிந்தயானை. 23. நரலை - கடல்.

இயன்றவாறியம்பினனிருந்தகாலையில்
பயின்றவேன்மன்னற்குப்பரதன்றன்னுடன்
வயின்றெருழுவிடைகொடுத்தருளிமாமலை
குயின்றபொன்மணிமதிற்கோயிலெய்தினான். (உஎ)

கனைகடலுலகெலாங்கலைகடம்மொடு
துனைபரிவல்லியந்துன்றிநீருண
இனையநாலாண்டரசியற்றியெல்லுமிழ்
வனைகழலிராகவன்மகிழ்ந்திருந்துழி. (உஅ)

தென்றிசைக்கடவுளுந்தேவனேவலால்
அன்றுதன்னுருவொழித்தயோத்திமாநகர்
குன்றுநின்றனையதோர்கோயில்வாயிலில்
ஒன்றியமுனிவரனுருவங்கொண்டுளான். (உகூ)

தடங்கைவேத்திரத்தினர்தழைத்ததாடியர்
அடங்குறுதிடியெனவார்க்குஞ்சொல்லினர்
மடங்கலையனையவர்வரிந்தகச்சையர்
படம்புகுமிலேச்சரைப்பரிந்துகூறினான். (௩௦)

மறங்கிளர்கனல்விழிவாயில்காவலர்
இறங்கினர்தொழுதபினிலங்குநூலினான்
முறஞ்செவியானையாய்முனிவன்வந்துநின்
புறங்கடையாயெனப்புகறிபோயென்றான். (௩௧)

போயினர்காவலர்போற்றிமன்னவ
ஏயினன்றுறவினோர்வேதமாமுனி
கோயிலின்மணிமதிற்கொடிகொள்கோபுர
வாயினின்றனனெனவணங்கிக்கூறினார். (௩௨)

கடாசலக்களிற்றணிக்காவல்வேந்தனும்
விடாவருண்முனிவர்மேல்வைத்துமேதினி
அடாநெறியவுணரையறுப்பதாதலால்
தடாதிரிங்கவன்றனைத்தருதிராலென்றான். (௩௩)

பாருடைமன்னனைப்படர்ந்துபையென
ஏருடைமறலிவந்தெய்திற்றாதலால்

27. மாமலைகுயின்ற - சிறந்தமலையாலியற்றிய.
28. கலைகள்தம்மொடு - மான்களுடனே.
33. தடாது - தடுக்காமல்.

நீருடையுலகினினிகழ்ந்துளோர்க்கெலாம்
சேருமென்றறிந்துமாதவங்கள்செய்ம்மினே. (௩௪)

வள்ளலைப்பின்னருமறலிமாதவர்
கொள்ளுருக்கொண்டுயிர்கோடன்மேவலால்
ஒள்ளியவுலகினிலுருவுகண்டபின்
எள்ளலைபிறரைநீரெனவியப்பது. (௩௫)

ஓரில்வேறுவமையொன்றில்லையுன்னையே
ஆருநீருலகிற்கண்டறிவதில்லையால்
பாரையேருறத்தருப்பதுமத்தோன்றலைப்
பேரைநீயுரையெனவிராமன்பேசினான். (௩௬)

தூயவாளிராமனைத்துனைந்துநோக்கிய
மாயவானுருவுடைமறலியாமுனி
சேயவார்மதுமலர்த்திசைமுகத்தினான்
ஏயவாசெய்வனென்றெடுத்துக்கூறினான். (௩௭)

உரைப்பதொன்றுள்ளதாலொருங்கியாமினி
இருப்பதுகாரணம்யாவராயினும்
தெரிப்புறவருவரேலவரைத்தீரவே
விருப்புறுதகற்றியேவிடுதல்வேண்டுமால். (௩௮)

இனையமாமுனிதனக்கிசைந்திலக்குவன்
தனைமுகநோக்கியதாரிராகவன்
எனையவராயினுமெய்துறுவகை
கனைமணிவாயிலைக்காத்தியாலென்றான். (௩௯)

இளவலைக்காவலிலேவியேடலர்
தளைவருமதுமலர்த்தாரிராகவன்
உளமகிழ்ந்தருளிநீயுரைத்தியாலெனக்
கொளமறைமுனிவனைக்குறித்துநோக்கினான். (௪௦)

மந்திரமுதுமொழிமறைவலாளனும்
கொந்தலர்தாரவர்க்குறித்துநோக்கிநின்
வுந்தமூறலகினுக்களப்பதாயினுள்
வெந்திறற்கூற்றுவன்விளம்பன்மேயினான். (௪௧)

37. மறலியாமுனி - யமனாகிய முனிவன்.

வேறு.

அந்தத்திசைநான்முகனுயடைவே
பந்தப்பழநான்மறைபாடிடுவோன்
உந்திக்கமலத்திடையுற்பவனுய்
வந்திப்புவியேழும்வகுத்தனனுல். (சஉ)

அன்னனுரைசெய்ததமைந்ததுகேள்
என்னனுமெதிர்ந்திமையோர்களகந்
தன்னனும்வெலற்கரியான்சடையோன்
மன்னகமெடுத்தசெதார்மாவலியான். (சஙு)

வில்லார்கதிர்வெண்மதிமீதுசெலா
எல்லார்கதிர்சூழுமிலங்கையர்கோன்
மல்லார்புயமாவலிவானவரின்
அல்லார்தொலேயாதசெதாராயுளிருன். (சச)

தாமந்திகழ்செஞ்சடையோனிடையே
வாமஞ்சுடர்வாளதுபெற்றவனுல்
ஏமந்திகழ்கின்றவிராவணனும்
நாமநதிசைநாலுநடந்துடையான். (சரு)

அன்னனுயிர்கொள்வதமைநதயில்வேல்
மன்னகதிரோன்வருமாமரபிற்
பன்னகணேயோடுபயோததியும்
பின்னகவிகந்துபிறந்தனேயால். (சகா)

அவ்வாறுமுடித்தனேயாதலினின்
மெய்வானுலகெய்துதல்வேண்டுமெனு
இவ்வாறுரைசெய்தனனிங்கிதுவே
செய்வாயெனநின்றுரைசெய்தலுமே. (சஎ)

வேறு.

இலங்குமணிப்பசுந்தண்டாரிராகவன்றனெழுபரித்தேர்
வலங்கிளர்செங்கனகமணிமாளிகையின்மதில்வாயில்
அலங்கியசெங்கனல்வேள்வியத்திரிதன்றிருப்புதல்வன்
துலங்கியநூற்றுருவாசனெனுமுனிவன்றேன்றினனுல். (சஅ)

---

43. சடையோன - சிவன. மன்னாகம் - இருக்குமலே.

ஏற்றரியசிலைத்தடக்கையிலக்குவவேலிராகவன்பால்
ஊற்றமுளதொருமாற்றமுரைப்பதுளதாதலினால்
போற்றரியவரமுனிவன்புறங்கடையினென்று
சாற்றுகைநின்கடனென்னச்சதுமறையோனுரைசெய்தான். ()

வேணிரைத்ததெனவிளங்கும்வெண்பூவால்வியன்சுரும்பில்
தேனிரைக்கும்பொழிற்கங்கைத்திருநாடன்றிருத்தம்பி
பாணிரைத்தவெண்புரிநூற்பழமறையோய்குறையாமல்
யானுரைத்தபடிமுடிப்பெனியம்புதியென்றிறைஞ்சினனால். (௫௦)

வேறு.

முனிவனெஞ்சின்முனிந்துநின்முன்னவற்
கினையவென்வரவென்றியம்பாயெனின்
துனைவவுங்கடந்தொல்குலமாள்வதோர்
அனையசாபமளிப்பெனென்றோதினான். (௫௧)

வண்ணமாமறைமன்னவன்கூறலும்
துண்ணெனெஞ்சினனாகித்துனியுடன்
எண்ணியின்னதிராமற்குமாகுமென்
றண்ணல்வேலவனஞ்சிநடுங்கினான். (௫௨)

புன்னுனைப்பனிநீரும்பொழிமழை
மின்னுமம்மழைமேவியமொக்குளும்
அன்னவின்னநிலையிலவாக்கைகள்
என்னவெண்ணியிளவலுமேகினான். (௫௩)

வேறு.

பொறைமலியத்திரிபுதல்வன்போதமா
மறைமுனிவந்துநின்வாயிலோனெனக்
குறைமலிகூற்றுவன்மாற்றங்கொள்ளுறும்
இறைவனையடிதொழுதிளவல்கூறினான். (௫௪)

கருமைக்கோட்டுக்கனலுமிழ்கண்ணுடை
எருமைப்போத்தையினிதுவந்தேறிய
அருமைக்கூற்றையகற்றிவருதுமென்
றொருமைக்கூற்றினுரைத்தனன்போக்கினான். (௫௫)

---

52. துனியுடன - துக்கத்துடன.
53. மொக்குள் - நீர்க்குமிழி.
55. வருதுமென்று - வருவோமென.

துன்னிச்சொன்ன துணையுடன்வந்தபின்
மன்னுமாமறையத்திரிமாமகன்
தன்னதாளையிறைஞ்சிச்சதுமறை
என்னைவந்ததையென்னிலென்றோதினன். (௫௬)

முந்தையோர்முறையேமுடிசூட்டிய
அந்தநாடொட்டோராயிரமாண்டிற்கு
வந்தநாளுவயினயின்றேகுற
இந்தநாளந்தநாளென்றியம்பினன். (௫௭)

வேறு.

நாலிருதிக்குநடக்குநலத்தால்
வாலுவர்நூலணிமார்பினர்மன்னர்
சாலுமனத்தொடுசாயையனுரை
ஏலவழைத்திடுமென்றுரைசெய்தான். (௫௮)

மாடமதிக்கதிர்மாளிகைவாயில்
நீடலமன்னவனெஞ்சின்விரைந்தே
ஆண்டதயங்கவலங்குலைவுற்றே
ஓடியழைத்தனர்தூதருவந்தே. (௫௯)

தொடையணிமன்னவன்றூதரையேவக்
கடல்புரைநேசர்கணத்திடையேகா
அடைவுறவோடியவண்டரவல்லே
மடைதொடுவாரவண்வந்துபுகுந்தார். (௬0)

மாமுனியெம்வயின்வந்ததையன்றே
காமுறுமும்மதுகைத்தொழில்காண்பான்
ஆமிவன்வந்ததமைத்திடுமின்னே
பூமலிவெய்தியபோனகமென்றான். (௬௧)

வேறு.

பொன்னும்வெள்ளியுமல்லதுபோக்கியே
மன்னுமாசுதுடைத்துமணிக்குடம்
தன்னினற்புனல்கொண்டுபொறசாடிகள்
துன்னவெங்கணுந்தூசிட்டுமூடினர். (௬௨)

வந்துமன்னிமடைப்பளிதன்னிடை
வெந்தவெண்பலிநீக்கிவிரைமலி

58. வாலுவர் - சமையற்காரர். 60. மடைதொடுவார் - சோறுசமைப்பார்
63. வெண்பலி - சாம்பல், இந்தனம - விறகு.

சந்தனத்தொடு தண்ணகிற்கூட்டுநீ இ
இந்தனத்திலெரியிடைமாட்டினார். (௬௩)

பொடித்தபோக்கிப்புழுகுசம்பாமணி
படித்தநூற்றுப்பத்தாயிரப்பத்திபொற்
றுடுப்பிற்கொண்டுதுழாவிப்பதத்துற
வடித்துக்கூட்டிவகையிலிறக்கினார். (௬௪)

வேறு.

கவப்புறுகொடுங்குரற்கனகச்சாலிநெல்
உவப்புறுசெம்பொனூமுரலிடைக்கொளீஇ
நிவப்புறுமுலக்கையானெடிதுவல்லவர்
அவைப்புறுமரிசியாலடிசிலாக்கினார். (௬௫)

வேறு.

கைவகைப்படுகின்றகாமாட்சியர்
மெய்வகைப்படுநெய்யிடைவெந்தன
குய்வகைப்படுகின்றகொழுங்கறி
ஐவகைப்படவறுசுவையாக்கினார். (௬௬)

அறுசுவைக்கறியாக்கியதற்பினே
செறியுந்தாளிதஞ்செய்துவைத்தானையும்
முறுகக்காய்ச்சிமுதிர்வுறுமுக்கனி
குறுகுபால்கன்னவானவுங்கூட்டினார். (௬௭)

வேறு.

அன்னவைசமைத்தவரமைந்தகாட்டலும்
மன்னியமுதுமொழிமறைவலாளனைப்
பன்னியபோனகம்பற்றென்றோதினன்
இன்னிசையரியெழுந்திரைக்குந்தாரினான். (௬௮)

நிலமிசையாசனமிட்டுநீர்கொடு
தலமிசைதெளித்தொருதமயனியப்பெருங்
கலமிசைமாமுனிகைழீஇயபின்
பலமுறைபோனகம்படைத்துமேவினார். (௬௯)

மெய்யுறுமந்திரவிதியினுளினான்
மையுறுபுனலினால்வலம்வளைத்தபின்
கையுறுபுனலதுகுடித்துக்காதலால்
ஐவகைமந்திரத்தமுதருந்தினான். (௭௦)

65. அவைப்புறு - குத்தப்பட்ட
70. ஐவகைமந்திரத்து - பஞ்சப்பிராணமந்திரத்தினால்.

பலாக்கனிமாங்கனிபாலினோடுதேன்
நிலாப்பயில்கிரிநிகர்நிறைவெண்சோறளி
உலாப்பயில்கொழுங்கனலோமமாமுனி
விலாப்புடைமுசிப்பறவீங்கமாந்தினன். (எக)

அங்கைநீரயின்றபினாரணத்தினன்
துங்கமாமணிமுடித்தூயமன்னவர்
செங்கையாலாடகச்சிரகத்தேந்திய
கங்கைநீர்கொண்டுசெங்கைகழீஇனன். (எஉ)

தாலுவிலறுசுவைதழைப்பச்சர்க்கரை
பாலிடையடிசிலின்பயின்றபான்மையின்
நாலிருதிசையினுநண்ணலாதென
வாலுவத்தலைவரைமதித்துக்கூறினன். (எஙு)

மன்னவரிவரவர்மரபுங்கேண்மையும்
இன்னதென்றிராகவனெடுத்துக்கூறலும்
அன்னதுகேட்டலுமகமகிழ்ந்தொரீஇ
முன்னியதிசையிடைமுனியும்போயினன். (எச)

வனைந்தபூண்மறலிதன்வார்த்தையெண்ணியும்
துனைந்ததன்பின்னவன்பிரிவுசூழ்ந்ததை
நினைந்துதனிருகணீர்நிலநனைந்திட
இனைந்தினைந்திராகவனிடரின்மூழ்கினன். (எரு)

கருங்கயற்கேகயன்மகட்குக்காவலன்
வரங்கொடுத்தின்னுயிர்மறலிக்கீந்தபின்
இரங்கனீயென்வயினென்றிலக்குவன்
அலங்கல்வேலிராகவனடிவணங்கினன். (எசு)

வேறு.

உன்னைவாய்மொழிகாத்தலாலுலகத்திலுளதூங்
கன்னைவாய்வரங்கொடுத்தனனுதவலாலிரங்கல்
என்னைநீமறலிக்கருளெனவிசைவரங்கள்
தன்னையேயருட்ருதியால்விடையெனத்தளர்ந்தான். (எஎ)

வேறு.

அன்னதுகேட்டபினருவியாமெனத்
தன்னிருதடங்கணீர்தாழ்ந்துமார்புற

72. ஆடகச்சிரகம் - பொற்செம்பு.
73. தாலு - நாக்கு.

மன்னியநிழலெனமார்புநீங்குறப்
பின்னவன்பிரிவினுக்கஞ்சிப்பேதுற்றான். (எ௮)

வளநகர்மாந்தரைவசிட்டன்றன்னுடன்
தளமலர்த்தாரினீர்தருதிராலென
அளியினமெழுந்தெழுந்தார்க்குமாமதுத்
துளவணிமார்பினன்றாதுபோக்கினான். (எ௯)

போனபின்றாதுவர்புகன்றவாய்மொழி
ஆனதுகேட்டபின்னரசன்கண்ணுறீஇ
மானகர்மாந்தரும்வசிட்டன்றன்னுடன்
ஏனையுவிருவருமிருந்தவேலையில். (௮0)

வேறு.

இருந்தபேரவையைநோக்கியிவர்சடைமுனிவன்றன்னை
வரந்தருகென்றவாறுமத்திரிமைந்தனைவத்
தரந்தருமன்னதம்பிதன்னுழைவந்தவாறும்
அரம்புனைந்திலங்குவைவேலடல்புனையிராமன்சொன்னான். (௮௧)

மத்தகயானையானைவசிட்டனுநோக்கியுந்தை
தத்துருபுரவித்திண்டேர்த்தசரதன்றன்பால்வந்த
அத்திரிபுதல்வன்றன்னைவரன் முறையடிவணங்கி
எத்தனபுதல்வரில்லேனென்னைகொல்செய்வதென்றான். (௮௨)

உறுபரிவேள்விவேட்பினுரனுடைமைந்தர்நால்வர்ப்
பெறுகுவையொருவன்றன்னதாருயிர்பிறியுங்காலை
மறுவறுமூவர்தாமுமடிகுவர்மன்னவென்ற
தறிகுவன்யானுமென்றேயருமறையாளன்சொன்னான். (௮௩)

ஆதலால்விதியைவெல்வதரிதுநீயருணப்பைம்பூண்
ஏதிவாள்கடகச்செங்கையிலக்குவற்கிரங்கவேண்டா
தாதவிழலங்கற்பைந்தார்த்தமனியத்தானபைம்பூண்
மாதிவெம்புரவித்திண்டேர்மன்னவென்றின்னசொன்னான். (௮௪)

நங்குலக்குரவனானான்மறைமுனிவன்சொன்ன
திங்குநீகேட்டியன்றேயினிவிடைதருதியென்று
மங்கைதனுருவமாகவார்சிலைமீதுசென்ற
பங்கையவருணராகப்பதயுகமீதுவீழ்ந்தான். (௮௫)

---

84. மாதி - மண்டலமிட்டோடுதல்.
85. மங்கை - அகலிகை. வார்சிலை - நீண்டுகிடந்தகல்.

தன்மத்தின்கன்றதாய தம்பி தன்பிரிவெனேகம்
மன்மத்தையீர்தலாலேமலர்க்கணீரருவிசோரக்
கன்மத்தின்விளைவையெண்ணிக்கட்டுரையொன்றுங்கூறான்
உன்மத்தனாயிருந்தானுணர்வுடனுயிர்ப்புமில்லான். (௮௬)

செதுமொழிவினைஞர்செய்தசித்திரப்பாவைபோல
எதிர்மொழியொன்றுங்கூறாதிராகவனிருத்தலோடும்
கதுமெனவெழுந்துமுன்னோன்கழலிணைதொழுதுவாழ்த்தி
அதுவிடையென்றுநில்லாதண்ணகரகன்றுபோவான். (௮௭)

தேன்பிரியாதகானிற்சிலைகொடுகாத்தபின்னோன்
ஊன்பிரிகின்றகாலத்துயிரினையொத்தான்முன்னோன்
கான்பிரிகல்லாவோதிக்கைகயன்மடந்தைகூறத்
தான்பிரிகின்றநாளிற்றந்தைதன்றகையனானான். (௮௮)

நம்புநான்மறையோர்க்கெல்லாநல்கியேநடந்தான்கண்டார்
உம்பரார்சொன்னவார்த்தையொழியுமோவுலகத்தென்பார்
கம்பியாநின்றதுள்ளங்கழிந்ததோகாலமென்பார்
தம்பியாரின்றியாவிதரிக்குமோதமையனென்பார். (௮௯)

வலத்தியன்மன்னர்க்கெல்லாம்வரங்கொடுத்தாவிநீத்தல்
குலத்தியல்பன்றேவென்பார்கொள்ளுமோகூற்றமென்பார்
அலக்கணுற்றிடாதுவாழ்வோடையுமோவயோத்தியென்பார்
இலக்குவனாவிநீங்கினிருக்குமோயாமுமென்பார். (௯௦)

இன்னநன்னகரத்துள்ளோரினைந்தினைந்தேங்கிமாழ்க
நன்னகர்வாயினீங்கிநவமணிகொழித்துமுத்தம்
பொன்னொடுவரன்றியெங்கும்புனல்பரந்துலகம்போற்றும்
தன்னிகர்நதியொன்றில்லாச்சரயுப்பேராறுசார்ந்தான். (௯௧)

வேறு.

ஆசின்மணிமதில்சூழயோத்திநகருறைகின்ற
மாசனங்கடயருழக்கமடந்தையர்செங்கனன்மூழ்கப்
பாசநடுவினினில்லாப்பரதன்விழிப்புனன்மூழ்கத்
தாசரதியிடர்மூழ்கச்சரயுநதிமூழ்கினனால். (௯௨.)

சூகரத்தினெடுங்கோட்டாற்றுளைப்புண்டதுயர்நீக்கிச்
சீகரத்தவுலகாண்ட திறல்வெய்யோன்றிருத்தம்பி

86. உயிர்ப்பு - சுவாசம்.
93. சூதரம் - பன்றி, இங்கு, ஆதிவராகமூர்த்தி.

மோகரித்தமுதுபிணிநோய்முதலாயபெரும்பிறவிச்
சாகரத்தின்கரையேறத்தடங்கரையினேறினனால். (௯௩)

அறுபகையைவிளைக்கின்றவைம்புலனுமகத்தடக்கி
உறுவனவொன்பதுவாயுவுயர்வாயுவுள்ளடக்கி
மறுவறுசங்கினந்தவழும்வாலுகத்தடங்கரைமேல்
எறிகதிர்வேலிலக்குவனுமியோகத்தங்கிருந்தனனால். (௯௪)

போதிலங்குமாயிரஞ்செம்புண்டரிகம்பூத்ததொரு
சாதிலிங்கச்செழுங்கனிபோற்றமனியப்பூணிமையவர்கோன்
மூதிலங்கைதீமூளமுனிந்தோன்றன்பின்னோன்முன்
மீதிலங்குசெழுங்கனகவிமானத்தின்மேல்வந்தான். (௯௫)

தன்னையமர்தொலைத்ததாரரக்கன்றன்மகனைப்
பின்னையமர்வென்றபெரியோனைப்பேசரிய
மன்னியமெய்யாக்கையுடனேமகிழ்ந்தேத்திப்
பொன்னியதேர்மானமிசைக்கொண்டுபோயினனால். (௯௬)

மீனேறுதவேலைபுடைசூழ்வியனுலகில்
ஏனோர்புலம்பவிகல்வேலிலக்குவனும்
ஊனோடுவற்றுறுநிலையாவுடம்பெய்தி
வானோர்புடைசூழவைகுண்டம்போய்ப்புக்கான். (௯௭)

அப்பாலியன்றததுநிற்கவிங்ஙனே
இப்பாலியன்றதியம்புவனெந்நாளும்
தப்பாததம்பிதனைநினைந்துசாய்துயர்க்கு
வைப்பாகியுள்ளமெலிந்தான்மறவேலான். (௯௮)

பார்த்தானிளையோனைக்காணான்பதைத்துள்ளம்
வேர்த்தான்றிருமேனியெல்லாமெலிவுற்றான்
காத்தாய்நெடுங்காலங்கைவிட்டாயோவென்று
பூத்தாமரைக்கண்புனலாய்ப்புலம்பினான். (௯௯)

விம்பக்கவிகைவிறன்மேகநாதனையோர்
அம்பிற்றடிந்தாயருவினையேனாருயிரே
வம்புற்றதாரான்மகனேமதியிலியேன்
தம்பித்துணையேதரியேன்றரியேனே. (௧௦௦)

ஆற்றுவனோவேந்தேதவவயம்புகுந்தானைக்
கூற்றுவனேவந்துகுறுகாவகைகாத்து

பார்ற்றவனேர்விட்டவடிவேல்வரைமார்பில்
ஏற்றவனையெம்பியிலக்குவனையென்னுயிரே. (க0க)

என்செய்வேனென்றென்றிவையிவையேநின்றரற்றிப்
பொன்செய்மணிமார்பன்பொருப்பின்மழையென்ன
மின்செய்யருவிவிழவேயழுதனால்
தன்செய்யதாளிணையேதந்தருளுந்தன்மையான். (க0உ)

வண்ணவரையழுதமாநாகமுமழுத
விண்ணுந்திசையும்வியன்ஞாலமுமழுத
எண்ணிநினைவுற்றினைந்தினைந்திங்ஙனே
அண்ணலழுதானழாதெதான்றங்கிலையால். (க0ரு)

இன்னுயிர்போனாலிருக்குமோபொய்யாக்கை
பின்னவன்போநதநெறியானும்போகுவனால்
துன்னுமணிமுடிசூடுவாய்நீயென்னப்
பன்னுமதுகைப்பரதனையேநோக்கினான். (க0ச)

நோக்கப்பரதனெறிலிற்கரஞ்சிரத்தின்
மேக்கிற்குவிக்கவிரைத்தார்முடிவேநதன்
காக்கப்புவனமுனக்கேகடனென்று
ஏக்குற்றடியினிறந்தானெனவிழுநதான். (க0ரு)

வேறு.

நாதனென்னைநளிர்முடிசூடென
ஏதமுள்ளறக்கூறியதெம்முடைத்
தாதைதன்னைத்தடக்கைகயன்பெற்ற
கோதைகொண்டவரத்திற்கொடியதால். (க0சு)

அண்ணனீபுரந்தாள்கின்றவையகம்
எண்ணியென்வயினீநததுதெய்வதம்
நண்ணிநாகஞ்சுமக்குமிந்நானில
மண்ணினாகஞ்சுமக்கெனின்மாண்டதால். (க0எ)

இம்மிசெந்நெலினுக்கிணையாகுமேல்
அம்மிமற்றையருவரையொக்குமேல்
மிம்மினிச்சுடர்வெங்கதிரொக்குமேல்
உம்மிலொத்துலகாளுதலுண்மையால். (க0அ)

105. நொறிலில் - விரைந்து. 107. மாண்டது - சிறப்பாயுள்ளது.

ஆதிநின்னுடையாண்டொழின்மேயினர்
நீதிவையநிகழ்த்திடவல்லரால்
கோதில்வண்மைக்குசலவர்தம்மைநீ
சோதிமாமுடிசூட்டென்றியம்பினன். (க0கூ)

இன்னகூறியிளவலிறைஞ்சலும்
மன்னர்கோனுமனகிழ்ந்தவ்வயின்
கொன்னவின்றகொலைவேற்குசலவர்க்
கன்னநாளிலணிந்தனன்காப்புநாண். (ககO)

புரைசெய்மாமதப்போதகமீமிசை
அரைசரீண்டினரந்தணர்சூழ்ந்தனர்
முரைசதிர்ந்தனசங்குமுழங்கின
விரைசெய்பூங்குழலார்விளக்கேந்தினார். (ககக)

அண்ணல்யானையினாடகப்பொற்குடம்
கண்ணினூற்றெட்டிற்கங்கையினீர்கொண்டே
மண்ணினாசைதவிர்ந்தவன்மைந்தரைப்
பண்ணினானபிடேகம்பரிந்தரோ. (ககஉ)

நாடிமாமறைகூறியநாளினில்
ஆடகத்தவரியணைமீதரி
ஓடையானையரொண்கரஞ்சென்னிமேல்
சூடமைந்தரைமாமுடிசூட்டினான். (ககங)

வேறு.

பாசிலையேய்ந்தபரூஉக்குலைவாழைகள்
காசறுமாதர்கவாவெனநீடிய
கோசலநாட்டிற்குசலவதியென்றோர்
மாசறுநீண்மதின்மாநகர்செய்தான். (ககச)

ஒத்தனநால்வகையுள்ளதானையும்
அத்தகுசெல்வமொடமைவமைவாகக்
கொத்தலர்தார்புனைகுசலனையமாநகர்
வைத்தனன்மாமுடிமன்னவர்கோமான். (ககரு)

உத்தரகோசலவொளிர்திருநாட்டில்
சித்திரமாயசிரப்பதியென்றோர்

108. இம்மி - மத்தங்காய்ப் புல்லரிசி. மிம்மினி - மின்மினிப்பூச்சி.

பத்திதரும்பருமாமணியாலுயர்
மத்தகமாநகர்மாளிகைசெய்தான். (கககூ)

தன்னுடைநால்வகையாகியதானை
மன்னியசெல்வமுமாண்புறநல்கிப்
பொன்னினியன்றுளபுரிசையிலங்கும்
அந்நகர்தன்னிலவனையும்வைத்தான். (ககள)

வேறு.

இத்தினமிறந்தபினிலக்குவன்சென்ற
அத்திறமியானுஞ்சென்றடைவனுமெனக்
சத்துக்கனற்குநீர்சாற்றுமென்றுதேன்
துய்த்தடைதாரினன்றூதுபோக்கினன். (ககஅ)

மதுகைமாநகரிடைப்புகுந்துமன்னவன்
அதிர்கழல்வணங்கிநின்றயோத்திமாநகர்ப்
புகுவதுநிகழ்ந்ததும்புகுந்தவார்த்தையும்
கதுமெனவுரைத்தனர்காலின்காட்சியார். (கககூ)

ஓட்டர்வந்துரைத்தனருரைத்தவாறெலாம்
கேட்டனன்செவிசுடக்கிழிந்தநெஞ்சமும்
நாட்டமும்புனலுகநடுங்கிமெய்யெலாம்
தோட்டடங்களுமிகமெலிந்துசோர்நதவே. (கஉ0)

தன்னிகர்பிறிதிலாத்தாரிராகவன்
பொன்னடிதொழுதுயப்போவனினி
இந்நகராண்டினிதிருத்திர்நீரென
மன்னவன்மைந்தரைமகுடஞ்சூட்டினன். (கஉக)

மதிதொடுமாளிகைமதுபுரந்தனில்
விதிசெயுஞ்சிராப்பளியென்றுமிக்குள
புதுநகரியற்றித்தம்புதல்வர்தம்மையைப்
பதிவயினிருத்தினன்பைம்பொற்றாரினன். (கஉஉ)

பாடகச்சீறடிபவளச்செய்யவாய்ச்
சூடகமடந்தையரினைந்துசோர்வுற
மாடமாமாளிகைமதுகையிற்பட
ஆடகமதிலணியயோத்திமேவினன். (கஉங)

120. ஓட்டர் - தூதர்.

மன்னனையிணையடி வணங்கிமைந்தர்க்குப்
பொன்முடிகவித்ததும்புரவியானைதேர்
இன்னவைகொடுத்ததுமிலங்குமாமதில்
அந்நகரளித்ததுமமையக்கூறினான். (௧௨௪)

அன்னதுகேட்டபினருவிக்கண்ணினான்
தன்னிகர்பிறரிலாத்தாரிராகவன்
முன்னைநாட்பெயர்ந்துமொய்ம்பிளவல்போகிய
நன்னெறிசெல்லுமாநாடுங்காலையே. (௧௨௫)

சந்திரனிகரெனத்தரளவெண்குடை
அந்தரமீமிசையழகெறித்திடக்
கந்தடுகரடவெங்கவளயானைமேல்
வந்தனன்வீடணனென்னும்வாய்மையான். (௧௨௬)

பயங்கெழுமிராவணன்பத்துமாமுடி
தயங்கியமணிபறித்தெழுந்ததன்மையான்
இயங்கியவெழுபரிதேரிலெண்டிசை
வயங்கியகதிரவன்மகன்வந்தெய்தினான். (௧௨௭)

கருத்துவந்தெழுகதிர்க்கடவுடன்னையோர்
பருத்தசெங்கனியெனப்பாய்ந்தபான்மையான்
உருத்துவந்துலகெலாமொருங்குகாதுமா
மருத்துவின்மைந்தனும்வந்துமேவினான். (௧௨௮)

ஆற்றியவுலகெலாமடியிரண்டினால்
மாற்றியவமலனைவலங்கொண்டிங்கென
காற்றியல்வெம்மையாற்கனகவெற்பறை
சாற்றியவெண்கினற்றலைவன்சார்ந்தனன். (௧௨௯)

வரைபலவலிமிகவாங்கிவானவர்
சிரமிசைக்கொண்டனர்செல்லச்செல்லவோர்
கரமிசைக்கொண்டவர்கவித்துமோதிடு
நரலையையணைசெய்தநளன்வந்தெய்தினான். (௧௩0)

கோல்பிடித்தெய்துசெங்குருதியாறென
வேல்பிடித்தெறிதருமரக்கர்வெள்ளத்தை

130. நரலை - கடல்.
131. கோல் - அம்பு.

வால்பிடித்தெற்றிடவந்தமாமதத்
தோல்பிடித்தெற்றியதுமிந்தன்றோன்றினன். (கஙௗ)

மருப்பினுலிருகரியுடனுமற்றுள
பொருப்பெலாம்பொருந்திடப்புணரிவற்றிட
உருப்பினுலுலகெலாமுலேயவோங்கிய
நெருப்பின்மாமகனிகனீலன்மேவினன். (கஙஉ)

குரங்கொடுபொரவெளிதென்றுகொண்டுதஞ்
சரங்கொடுபொரவருமரக்கர்தானேயைக்
கரங்கொடுமலேகொடுகதிர்வெண்பற்கொடு
மரங்கொடுசாடியமயிந்தன்றோன்றினன். (கஙங)

நீலனுங்குமுதனுநிசாசரர்க்கெலாங்
காலனென்றமரெலாங்கடக்குமாற்றலால்
தாலமெண்ணியபடைத்தலேவர்யாவரு
மூலமாகியமுழுமுதலேமுற்றினர். (கஙச)

தப்பறத்தயரதராமனுகவ
வைப்புறுபுவியில்வானரங்களாமெனச்
செப்பியதேவர்களியாருஞ்சேரவே
வொப்புறவந்துவந்தொருங்குகூடினர். (கஙரு)

ஏனேயசனங்களுமெய்திற்றுதலாற்
போனவன்றன்பினேபோவதேயெமு
வானமர்மலரடிவணங்கினர்க்கெலாந்
தேனமர்தெரியலான்றெரியக்கூறினன். (கஙசா)

மின்பயில்தடக்கைவேல்வீடணன்றனேப்
பொன்பயினகர்வயிற்போதிபூதல
மன்பதையளவுநீவாழ்தியாலென
அன்புடனுணேயானகலநீக்கினன். (கஙஎ)

அன்னதுகேட்டபினருக்கன்மாமகன்
தன்னேயும்விடுப்பது தகுமென்றஞ்சியே
துன்னியங்கதனேமாமகுடஞ்சூட்டிவைத்
தின்னணம்வந்தனனென்றிறைஞ்சினன். (கஙஅ)

134. தாலம் - இவவுலகம்.
135. ஆகவவைப்பு - போர்க்களம்.

ஏந்துவேலிராமனோடிரவிதன்சுதன்
சேர்ந்துழிச்சோர்வதுதெளிந்துசெப்பினான்
ஆர்ந்தவராயினோரகிலமூன்றினும்
வாய்ந்தவர்செய்நன்றிமறக்கற்பாலரோ. (௧௩௯)

மருத்துவின்மைந்தனைமகிழ்ந்துநோக்கிமுன்
புரைத்ததுமுணர்த்தியாலுலகில்வாழ்வதுன்
கருத்துமுண்டாதலாற்கனகத்தோளினாய்
இருத்திநம்பாணையென்றிராமன்போயினான். (௧௪0)

கனைகதிர்மைந்தனுங்கரடிவேந்தனும்
குணிவுறுகுமுதனுங்கோலமயிந்தனும்
துனைதருதுமிந்தனுஞ்சூரநீலனும்
எனையவரியாவருமேனைவேந்தரும். (௧௪௧)

வீரனதாணையால்விலங்கிநிற்கவார்
தோரணமாநகர்தொக்கமாக்களும்
காரிகையாருமக்கடவுண்மாமறை
ஆரணநான்குடையந்தணாளரும். (௧௪௨)

பின்னியகாதலிற்பிரிகலாற்றலர்
மன்னியதாள்வயின்வதிந்தவேட்கையால்
தொன்னகர்பாழ்படத்துனைந்துசூழ்தர
அன்னவர்வாயில்விட்டகன்றுபோயினார். (௧௪௩)

உற்றதன்காதலாலுலகந்தன்னொடன்
பற்றவர்பிறந்தநாளயோத்திமாநகர்
முற்றுறுதமிழ்முனிமுகப்பமுன்னைநாள்
வற்றியசுரிமணல்வாரிபோன்றதே. (௧௪௪)

தடமலிசரயுத்தண்டுறையிற்றாழ்புனல்
அடியுறச்செல்வழியலரினான்முகன்
மிடன்மிகுகணக்கிலாவிம்பவூர்திகள்
உடனணிவானகத்துச்சிதோன்றினான். (௧௪௫)

மெய்யனேதுய்யனேவிளங்குவிண்ணுளோர்க்
கையனேயமலனேயருணவாழிவாழ்

---

145. விம்பவூர்தி - ஒளிபொருந்திய வாகனங்கள்.

கையனேநின்பெருங்கடவுட்காயமோ
டெய்தனீவேண்டுமென்றிறைஞ்சிக்கூறினான். (௧௪௬)

துன்னியவானவர்துயரநீக்குவான்
மன்னியவுலகினிற்பிறந்தமாயையைத்
தன்னிகரிலாதவச்சரயுநீத்துத்தன்
பின்னவர்தம்முடன்பெயர்த்துமேயினான். (௧௪௭)

ஏதமில்சரயுமாநதியிகந்துபின்
காதுவேற்றயரதன்காவல்கொண்டிடும்
ஆதிவானவர்பயிலரியநான்மறை
ஓதுநாலுருவுமோருருவமாயதே. (௧௪௮)

தழுவியசெழுமணிச்சரயுப்பூந்துறை
முழுமையும்பணிப்பவர்முழுகிமொய்த்தபின்
விழுமியவானரவீரர்யாவரும்
பழையதங்கடவுடன்படிவமெய்தினார். (௧௪௯)

வணங்கியமலரயன்றன்னைநோக்கிமால்
அணங்கியகொடிமதிலயோத்திமாநகர்க்
கணங்கொடுவதிபவரியார்க்குங்காதலால்
இணங்கியபதியமைந்திடுதியென்றனன். (௧௫௦)

வேறு.

நிறங்கிளர்கரியமேனிநேமியானருளக்கேட்டுக்
கறங்கிசைமுரலுஞ்செய்யகமலமாமலரின்மேயான்
அறங்கிளர்கருணைவெள்ளத்தயோத்தியாள்பவருக்கெல்லாம்
பிறங்குசந்தானமென்னும்பெரும்பதியமைவித்தானால். (௧௫௧)

அமலனாங்கமைத்தபின்னரயோத்திமாநகரத்துள்ளார்
திமிரநீர்ச்சரயுவென்னுந்திருநதியதனின்மூழ்கி
இமையவர்படிவமெய்தியெண்ணிலாதியங்குஞ்செய்ய
தமனியவிமானமேறித்தடங்கொள்சந்தானஞ்சேர்ந்தார். (௧௫௨)

ஆழியான்மகிழ்ந்துபூவினயன்மறைகொண்டுவாழ்த்தச்
சூழியானையின்மீதேறியிந்திரன்றுதிசெய்தேத்தப்
பூழிவாழ்மேனியானும்புகழ்ந்திடக்கணங்கள்போற்ற
வாழிவானவர்கள்கூறமருவிவைகுந்தஞ்சேர்ந்தான். (௧௫௩)

கலைமறைமுனிவர்வாழ்த்தக்காரிகையார்தங்கற்பு
நிலைபெறமன்னர்செங்கோனீணிலந்தன்னில்வாழ்க
அலைகடலிலங்கைமூதூரரக்கர்வேரறுத்தவைவேற்
சிலைதொடுவில்லிகாதைச்செந்தமிழ்வாழ்கவன்றே. (கருச)

இனையநற்காதைமுற்றுமெழுதினோர்வியந்தோர்கற்றோர்
அனையதுதன்னைச்சொல்வோர்க்கரும்பொருள்கொடுத்துக்கேட்போ
நனைகடற்புவியின்மீதேகாவலர்க்கரசாய்வாழ்ந்து [ர்
வினைதனையறுத்துமேலாம்விண்ணவன்பதத்தைச்சேர்வார். (கருரு)

உத்தரகாண்டம்-க க்கு படலம்-கஎ-க்கு ஆ திருவிருத்தம் - கருகo.

ஆழ்வார்திருவடிகளே சரணம்.

உத்தரகாண்டம்

முற்றிற்று.

---